ஸ்ரீராமஜயம்.

# ஸ்ரீ மஹாபாகவதம்.



நெல்லைநகர் அநாயாசதா[illegible] மதுரகவி

ஸ்ரீ வரதராஜ ஐயங்கார் அருளியது.

முதற் புத்தகம்.

இஃது

திரிசிரபுரம் மகாவித்வான்

கோவிந்தப்பிள்ளை அவர்களாலும்

பரங்கிப்பேட்டை

இலட்சுமணபிள்ளை அவர்களாலும்

பார்வையிட்ட பிரதிகளின்படி

---

காளப்பட்டி வித்துவான்

ல. வே. திருமலைகொண்டநாயக்கர் அவர்கள்குமாரர்

தி. வி. சிங்கிரி நாயக்கர் அவர்களால்

பரிசோதித்து

---

பி. நா. சிதம்பர முதலியா ரவர்களது

சென்னை குயப்பேட்டை

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1913.

இதன் விலை ரூபா - 2.

908-3

# அட்டவணை.



விஷ்ணுமயம்.

# பாகவதலட்சணம்.

பாகவதம் ஏழுதிறத்தனவென்று புராணங்களிற் கூறப்பட்டிருக்கின்றன. அவை இதிஹாசம், புராணம், சம்மிதை, உபசம்மிதை, விஷ்ணுரகசியம், விஷ்ணுயாமளம், கௌதமசம்மிதைஎன்னும் ஏழினின்றும் போந்தனவாம்.

அவற்றுள் முதல் இதிஹாசபாகவதம் 18000. சுலோகங்களாக வியாசமகரிஷியாற் செய்யப்பட்டது. அதில் சுருதி கீதை முதலிய 12-கீதைகளும், எம்பெருமான் திருவவதாரங்களில்விஸ்தாரமாக நான்குதிருவவதாரங்களின் சரிதங்களும் அடங்கியுள்ளன. இப்பாகவதம் சூர்ணிகைகளாலும், விருத்தங்களாலும், பத்தியங்களாலும், வாக்கியங்களாலும், தண்டகங்களாலும், நிறைந்த 200. அத்தியாயங்களாகப் பிரிந்த-12. ஸ்கந்தங்களை யுடையது. ஒவ்வொரு அத்தியாயத்தின் ஆரம்பத்திலும், மத்தியிலும் பெரும்பாலும் அத்தியாயமுடிவிலும் பகவத்ஸ்துதிகளுண்டு நான்கு அரிபக்தர்கள் கதை இதில் விரிவாகச்சொல்லப்பட்டிருக்கின்றது. இதற்கு வக்தா சுகமுனீந்திரர்-சுரோதா - பரிக்ஷித்துராஜன் "புலவர் திலகராகிய ஆரியப்புலவரால்-4970. திருவிருத்தங்களாகத் தமிழில் மொழிபெயர்த்தருளப் பெற்றது இப்பாகவதமேயாம்".

2. புராணபாகவதம்-36000. சுலோகமுடையது. இதுவும் வியாசபகவானுற் செய்யப்பட்டதே. இதற்கு மகாபாகவதமென்றுபெயர் இதில் 25-கீதைகளடக்கம்-எம்பெருமான் திருவவதாரங்களில் ஆறுதிருவவதாரங்களின் சரித்திரங்கள் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு அத்தியாயத்திலும் பகவத்ஸ்துதி உண்டு பெரும்பாலும் அநுஷ்டிப்பு சுலோகங்களாலும் பிறவற்றாலமைந்த அறுநூறு அத்தியாயங்களையுடையது. ஸ்கந்தம் என்னும் பகுப்பு இதில் இல்லை. தசாவதாரங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. இதற்கு வக்தா நாரதபகவான் சுரோதா உருக்குமணிபிராட்டியார். "இதுவே அட்டாதசமகாபுராணங்களுள்

ஒன்ருகிய பாகவதம்: இதனைச் சுமார் 350-வருஷங்களுக்குமுன் நெல்லிநகர் அருளாளதாசரென்னும் மதுரகவி வரதராஜஐயங்கார் 9000-பாடல்களாகத் தமிழில் மொழிபெயர்த்தருளினர்".

3. சம்மிதாபாகவதம் பத்தியங்களாலும், அநுஷ்டிப்பு சுலோகங்களாலும் நிறைந்த 50000-கிரந்தமுடையது. இது ஞானபூரிதமாயுள்ள 30-கீதைகளையும், 20-திருவவதாரங்களின் சரித்திரங்களையும், விசேஷமாய் 22-திருவவதாரங்களின் கதைகளையுமுடையதாய், வைராக்கியரசமேநிறைந்த-1100-அத்தியாயங்களாய்விரிந்த-18-காண்டங்களாகப் பகுக்கப்பட்டது. ஒவ்வொரு அத்தியாயத்தின் ஆரம்பத்திலும் திவ்யமான பகவத் ஸ்துதிகளுண்டு இதற்குவக்தா-வைசம்பாயனமுனிவர் சுரோதா-ஜனமேஜயன்.

4. உபசம்மிதா பாகவதம். பலவகை விருத்தங்களாகிய 70000-சுலோகங்கள் நிறைந்த 2000-அத்தியாயங்களடங்கிய நூறுபரிச்சேதங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதில் 32-கீதைகளும், 100-பாகவதர்கள் சரித்திரமும், மகாத்மாவாகிய ஸ்ரீமந்நாராயணனுடைய 32-திருவவதாரங்களின் சரித்திரங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. பஞ்சபாதகங்களையும் நாசஞ்செய்யத்தக்க எம்பெருமான் ஸ்தோத்திரங்களும் அனந்தமுண்டு. இதற்குவக்தா. அகஸ்தியமகரிஷி. சுரோதா. சுதர்சனர்.

5. விஷ்ணுரகசியபாகவதம். தண்டகங்கள் இடையிடையே கலந்த இலட்சம் சுலோகமுடையது இதுஆயிரம் அங்கங்களாய், பகவத்ஸ்துதியே நிறைந்த 10000-அத்தியாயங்களாய் விரிந்தது. இதில் 50-கீதைகளும் 25-திருவவதாரங்களின் சரித்திரங்களும் உண்டு. விஷ்ணு சித்தாந்தசோபிதமான நூறுபாகவதர்களின்சரித்திரங்களும் அடங்கியிருக்கின்றன. இதற்குப் பரிசுத்தமாகிய, விஷ்ணுபாகவதமென்று பெயர். இதற்கு வக்தா ஹாரீதமுனி. சுரோதா. காசிபரிஷி.

6. விஷ்ணுயாமளபாகவதம். 80000-சுலோகங்களையுடையது. இதில் பிரமகீதை, அயகீதை, ஹரிகீதை, சங்கரகீதை என்னும் பெயருள்ள 4-கீதைகளும், விஸ்தாரமாய் தசாவதாரங்களின் கதைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன, தருக்கசாத்திரமும், விசித்திரவித்தைகள் செய்யத்தக்கசாத்திரமும் மந்திரசாத்திரமும் வாக்கியரூபமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. இது-8-ஸ்தான

ங்களாகப் பிரிக்கப்பட்ட-800-அத்தியாயங்களையுடையது. இதற்குவக்தா. பராசரமகரிஷி. சுரோதா. மைத்திரேயர்.

7. கௌதமசம்மிதபாகவதம். 10000-சுலோகங்களடங்கிய நூறுஅத்தியாயங்களையுடையது. இதில் மோட்சமளிக்கத்தக்க கிருஷ்ணசரித்திரமாத்திரம் சொல்லபபட்டிருக்கின்றது. இதற்குவக்தா கௌதமரிஷி சுரோதா கௌசிகரிஷி.

## ப ய ன்.

| | | |
|---|---|---|
| முதல் | பாக்வதம் | ஞானத்தையளிக்கும். |
| 2—வது | ,, | பாவத்தைநீக்கும். |
| 3—வது | ,, | பத்தியைக்கொடுக்கும். |
| 4—வது | ,, | ரோகத்தைப்போக்கும். |
| 5—வது | ,, | இச்சித்தபொருள்களைத்தரும். |
| 6—வது | ,, | பத்தியைக்கொடுக்கும். |
| 7—வது | ,, | மோக்ஷத்தையளிக்கும். |

இவ்விதமாக 400000-சுலோகமுள்ள கௌதமசம்மிதையில் கிரந்தலட்சணகண்டத்தில் பாகவதலட்சணம் என்னும் பெயருள்ள முதலத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது.

முதலிரண்டு பாகவதமேயன்றி மற்றவை தமிழில் மொழிபெயர்க்கப்பட்டதாகத் தோற்றவில்லை.

பாகவதலக்ஷணம்

முற்றிற்று.

---

இஃது
அஷ்டாவதானம்
பூவை-கலியாணசுந்தர முதலியாரவர்கள்
இயற்றிய

# சிறப்புப்பாயிரம்.

நிலைமண்டில வாசிரியப்பா.

படிமின் புலவீர் படிமின் புலவீர்
படியினை யளந்த பரனைப் படிமின்
விச்சை மறைகள் விளங்கச் செய்வான்
மச்ச மான மாலை யறைமின்
வார்பயோ ததியின் மந்தரந் தாங்குபு
கூர்ம னானோன் குறைகழ விசைமின்
அராக வக்க னவனியைச் சுருட்ட
வராக மான வலவனை யுரைமின்
அடங்கா விரணிய னறிய வேண்டி
மடங்க லான மாயற் சொலுமின்
மாவலி புவியின் மாபலி பொருட்டு
வாமன னான வள்ளற் பகர்மின்
பரசா வரசர் பகையை நீப்பான்
பரசு ராமனும் பண்ணவற் பணிமின்
இராவண னுயுளி னீற்றைக் காணுபு
இராம னான வேந்தலைப் பயின்மின்
அலமா யுதங்கொ ளாண்டகை யென்னும்
பலரா மப்பெயர்ப் பகவனை மொழிமின்
கண்ணகன் புவியிற் காளிங் கனிலே
கண்ணன் செய்த காதையை விரிமின்
ஒற்கமார் கலியுக மோங்க வுள்ளிக்
கற்கியா கியநற் கடவுட் புகன்மின்
பஃறொடை லைச்செய் பதும நாபன்
சிஃறொழின் மாந்தர் சிறக்க வேண்டுபு
நாதன் பராச னன்முனை யாக
வேதவி யாசனாய் வியன்புவி மரீஇ
விரித்த பதினெண் வியன்புரா ணத்து
அரிபர மாக வலைந்த நான்கில்
பாக வதத்தின் பண்பை யோர்ந்து
ஆகங் குறுகிய வகத்தியற் பணிந்து
தன்னிக ரின்றித் தனக்குத் தானே
சொன்னயம் பொருணயந் தூக்கு நயமும்

அமிழ் தமிழ் தென்ன வமரரும் போற்றுந்
தமிழிற் பெயர்த்துத் தந்தன னீங்கு
அல்லிமென் முல்லை யலருங் கவைசார்
நெல்லி நகரி னிலவும் பூசுரன்
பொருளாள ராகும் புலவர் கெழுமி
அருளாள தாசரென் றறையப் பெற்றோன்
சதுர னெறிவிற் சம்ப ராரி
மதுர கவியா மாண்பு மிக்கோன்
சரதந் தன்னை விரதங் கொண்ட
வரத ராஜ வரோதயன் காண்டி
இத்தகைப் பனுவ லெவரு முணர்வான்
இத்தரை தன்னி லெழுதாக் கிளவியாம்
அச்சிற் பதித்தே யளித்தன னீங்கு
மெச்சிப் புகழும் வியன்வே ளாளன்
புவியி லறிஞர் புகழ்தா ளாளன்
கவியிற் பெரிய கம்பரா மாயணம்
அண்டருங் காணு வருணெறி மருவிய
தொண்டரின் சரிதஞ் சொற்ற புராணம்
தேவுக் கரசைத் தெளிந்த நந்திரு
நாவுக் கரசு நயந்ததே வாரம்
கல்விக் களஞ்சியக் காஞ்சிப் புராணம்
செல்வ விரிஞ்சைச் சீர்த்திப் புராணம்
நல்காப் பியமென நாவலர் சொல்லும்
தொல்காப் பியத்திற் சொல்லதி காரம்
உழுலூர் வீர ராகவ னோதிய
கழுகா சலத்தைக் கணித்த புராணம்
முதலிய யாவு முதன்முதற் பதித்து
இதத்தை விளைத்த வெழின்மிகு சற்குணன்
சாந்த ஞானஞ் சத்தியங் கருணை
ஏய்ந்த வள்ள லீகை மிக்கோன்
வளர்செங் குவளை வயங்கு தொடையான்
அளகைக் கோவு மவாம்பெரு நிதியான்
எண்ணலற் கரிய விடியே றனையான்
நண்ணினர்க் கன்பு நயந்து செய்வான்
எனதிரு கண்ணு யிலங்கு மன்பன்
தனதுயிர் நானெனத் தங்கி வாழ்வோன்
நந்தார் பண்ணை நனிபுங் கத்தூர்க்
கந்த சாமிக் காவலோனே.

பாயிரம்-முற்றிற்று.






விஷ்ணுமயம்.

# ஸ்ரீமகா பாகவதம்.

## கடவுள் வாழ்த்து.

பொன்னிறமாமெனப்புவனம்படைத்துக்காத்துப்
புயனிறமாய்த்தழனிறமாய்த்துடைத்துப்போந்து
மூன்றிறமாய்த்திளைத்துயர்ந்துமுழங்குநார
முடுகிடவேநீண்டவடவிலைமேன்முந்தித்
தொன்னிறமாமண்டாண்டமெண்ணில்கோடி
துலங்கிடவேவயிற்றமைத்துத்தூயதாய
தன்னிறமாங்குழவியெனப்பொலிந்துதோன்றுந்
தலைவனிருதாளிணையெந்தலைமேல்வைப்பாம். 1

வேறு.

வாறுசுகன்பாவகனீர்நிலமற்றுமாகி
யூனுருடலாயுயிராயுயிர்தோறுமேவுங்
கோனாகிமூவர்செயலாயக்குணங்கள்யாவுந்
தானாகிநின்றதலைவன்றிருத்தாடுதிப்பாம். 2

வேறு.

கரமதனுற்கடல்கடைந்துமமுதளித்தங்கனகனா
முரவுகிரால்வகிர்ந்தளைந்துமுலகிடந்துண்டுமிழ்ந்தளந்துஞ்
சரமதனுற்றசமுகனொருபதுகமறத்தடிந்தும்
பரமபதத்தொளிகொளரிபதுமமலரடிபணிவாம். 3

வேறு.

சுசரதவசரபங்கற்கருள்செய்துசுரர்கோனீந்த
வசரதமிசையினேறியிராவணன்மாளவேமிக்
கசரதவாளியேவிக்கமலனோடிமையோர்போற்றத்
தசரதனடியில்வீழ்ந்தசெம்மறாள்சென்னிவைப்பாம். 4

யாதவர்குலத்துட்டோன்றியிமையவர்க்கிடர்கள்செய்யும்
பாதகர்மடியவேபார்பாரமதொருவப்பார்த்தன்
றூதனையந்தூர்வேண்டிச்சூதனாய்த்தேருமூருஞ்
சீதரனைவாசுதேவனைவணக்கஞ்செய்வாம். 5

வேறு.

நீயனாரெழுபிறப்பினுஞ்செய்ததீவினைகண்
மாயநாரணவெனட்டெழுத்தினைவழியொழுகச்
சேயவாயரங்கேசனார்மகிழ்திருப்பணிசெய்
யாயனார்திருத்தாளிணைபோற்றுவமறிவால். 6

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

## 1 - வது, திருவரங்கப் படலம்.

வேறு.

சீராருமிந்திரைமண்மகள்சேர்ந்தபோற்ற
வோராயிரவாய்ப்பணிமீதுறைவானையுள்கி
நீராயுழனைந்திருபாலுஞ்சிறைந்துநேர்ந்த
காரார்பொழில்சூழ்திருக்காவிரிவாழிவாழி. 1

வேறு.

தரங்கவேலையடைத்துந்தனுவினாற்
றுரங்கதேர்கரிதன்னிலங்காதிபன்
சிரங்கள்வீழவடுந்தெய்வவாளியா
ரரங்கவீசரடியிணைவாழியே. 2

வேறு.

சூதாம்பரனார்செயலென்றுசனன்சொல்லவு
மீதாம்பரிசென்றணர்மாவலியீந்தவப்பப்
பாதாம்புயம்பாருயர்வானிற்பரந்தவந்நாட்
பீதாம்பரமல்கியபேரொளிவாழிவாழி. 3

வேறு.

நந்தன்மைந்தனெனக்கறைநாடிமீக்
குந்தியண்டருறித்தயிர்கொள்ளைகொள்
ளெந்தையெண்கணிரணியசெற்பன்வா
மூந்தியின்கிளரொண்மலர்வாழியே. 4

எதிரிலங்கைமன்றேள்சிரம்யாவையுங்
கதிர்கொள்வெங்கணையாற்களைந்தேபினர்
விதுரனல்விருந்தாகியவித்தக
ஒதரபந்தனத்தொண்சுடர்வாழியே.

பார்புனற்கனல்கால்வெளியாய்ப்பரந்
தோர்குசற்செவிதாருஞ்சுடருளார்

சேர்பலிந்தசெந்தாமரையாளமர்
மார்பிலுற்றகவுத்துவம்வாழியே. 6

பேயினாருயிர்பெற்றிபம்வீழ்த்தெழில்
வேயினேழிசையூதிவிளங்குவா
னாயன்மாலரங்கத்துறைவான்செய்ய
வாயும்வாழிமுறுவலும்வாழியே. 7

முண்டகத்திறைவன்முனிவோரண்டர்
தெண்டிரைக்கடலெலஞ்சயிலந்திக
ழண்டரண்டமுந்தன்னகடாரவே
யுண்டகண்டத்தொருமுதல்வாழியே. 8

மண்ணையுண்டுபின்மத்தடியுண்டுசேர்
வெண்ணையுண்டுவெதிரிசையூதுவோ
னுண்ணயந்துபரந்தொளியேதிகழ்
கண்ணிணைக்கருணாநிதிவாழியே. 9

வேறு.

தருமுகக்கரனுடன்றூடணன்றிரிசிரா
வருமுகிற்குலமெனப்பொருதவோர்மடியவே
யெரிமுகக்கணைவிடுத்தருளுமெம்மீசனார்
திருமுகத்தொளிர்நகைச்செவ்வியும்வாழியே. 10

வேறு.

வாலிமாளமராமரம்வீழவேழ்
வேலைநீரழன்மேவவிராவணன்
சாலன்வாயுறவாழிகடாவுவா
னீலமேனிநிறைநகவின்வாழியே. 11

சகடுதைத்தப்பொடிபடச்சாடிவெம்
பகடுடைக்கஞ்சன்மார்பினிற்பாய்ந்துவான்
முகடுமுட்டியபாதமுராரிதன்
மகுடமுற்றமணிகளும்வாழியே 12

உகிரினாலன்றிரணியன்வல்லுரம்
வகிரநீள்வயிரூர்குடன்மார்பினிற்
சிகரமேற்புரள்பாம்பெனச்சேர்த்துவான்
றிகிரிவாழியச்செங்கையும்வாழியே. 13

அங்கராசனடற்றுரியோதனன்
சங்கையோடச்சகுனிமருகியா
மங்கைகேள்வன்மடியவன்றூதிய
சங்கம்வாழிதடக்கையும்வாழியே. 14

கரங்களால்வெண்கயிலையன்றேந்தினோன்
சிரங்கள்வீழச்சிவனருளாற்பெறும்

லரக்கன்மாய்த்தவன்மார்பிளந்தோடநின்
சரங்களைவிடுஞ்சார்ங்கமும்வாழியே. 15

ஆழிமாவிரதஞ்சிலைதானிற
வாளிதூவிராவணவஞ்சக
னாளைவாவென்றருள்செய்தகாரணன்
வாளும்வாழிமலர்க்கையும்வாழியே. 16

கண்டகக்கும்பகன்னன்கைகால்சிரந்
துண்டகண்டங்களாகத்துணித்தபி
னண்டர்முண்டவன்றானிரைமேய்த்தவன்
றண்டும்வாழிதடக்கையும்வாழியே. 17

வேறு.

தெந்திறலவுணன்சேயைவெகுண்டெழுந்தடர்த்ததூணின்
வந்தெழுகனகன்மார்பைப்பிளந்தவன்மடங்கன்மூர்த்தி
சிந்தையிற்கதங்களோவித்திருவருள்புரியச்சேர்ந்த
நந்தொளிர்கரச்சிரங்கநாயகிமலர்த்தாள்வாழி. 18

வேறு.

முரணிழந்துபொற்சணான்முடியவேனமாகுவான்
சரணடைந்துகவினுறச்சதுமறைக்குளியல்வதாம்
பொருணயந்தசரிதைமால்புகலவேமகிழ்ந்தரு
டரணிமங்கைமரைமலர்த்தாள்கள்வாழிவாழியே. 19

வேறு.

பாண்டுமைந்தர்களுய்யவேபடவரவுயர்த்தோன்
மாண்டுவீழ்ந்திடமகபதிசுதனுக்குமணித்தேர்
தூண்டுசாரதியாகியசோதிதன்றேவி
நீண்டகன்றகண்ணிணையார்மலர்ப்பதம்வாழி. 20

வேறு.

போதனோடமரராகிப்புனலணிசடையனாகி
வேதமாயகண்டமாகிவிண்ணுமாய்முனிவரேத்து
மாதியாமரங்கராசரணைத்தருடேவியான
கோதையாய்க்கோதைசூடிக்கொடுத்தவள்வாழிவாழி. 21

இரணியன்சிறுவன்றன்னையெரியினிட்டப்பினுய்த்து
முரணியகரிமுன்னிட்டுமுகடுறுஞ்சிகரமேற்றித்
தரணியிற்றள்ளும்போதுந்தானினைந்தோதுநாமப்
பிரணவவடிவமானபேரெழில்விமானம்வாழி. 22

மாயையில்வந்தமானைவடித்தகோற்கிலக்களாக்கிப்
பேயுயிருண்டகண்ணன்பின்னவனாகமுந்தித்
தூயதென்னரங்கராசர்துயில்கொளவணையாத்தோன்றி
லாயிரஞ்சுடிகையோங்கியமர்திருவனந்தன்வாழி. 23

வேறு.

திருடிவெண்ணையயின்றசெயிருரு
முருசெடாடெங்கமுரனைமுனிந்தவன்
புருடவுத்தமன்பொற்பதமேந்துகைக்
கருடராசன்கழலிணைவாழியே. 24

வேறு.

வானோர்பதிமாமலரோனகர்மற்றுமற்றப்
போனாரழியாப்பதமீதுபொலிந்துதோன்றிக்
கானாநடந்தருள்கண்ணனைக்காட்டியாட்கொள்
சேனாபதிவாழியச்சேனையும்வாழிவாழி. 25

வேறு.

வஞ்சகரிலங்கைமேவிமைதவிசரணம்வாழ்த்தி
யஞ்சியவரக்கரோடவக்கனையரைத்திட்டவ்வூர்
துஞ்சவல்லெரிமடுத்துச்சுடர்மணிகொண்டுமீண்ட
வஞ்சனைசிறுவனானவரிகுலவீரன்வாழி. 26

வேறு.

தயிருவெண்ணைகளவினுண்டுதாயுமாகிவந்தபே
யுயிருமுண்டெவ்வுலகுமுண்டகண்டராரணத்துளார்
வயிரமாரமணிதண்மின்னுமண்டபத்தில்வாயில்சார்
செயிரிலங்குவிசையர்வாழிசீரரங்கம்வாழியே. 27

வேறு.

மீனமாயவுணனுடல்வதைத்தயன்முன் விமானமேற்றோன்றியம்ம
னுவின், சூனுவின்றவத்தாலயோத்தியினெய்திச் சுடர்முடியிராமனீந்தி
டவே, யீனமிலிலங்கைவீடணன்கொடுசென்றிந்துபுட்கரணியினிறுத்த,
மாநதியிரண்டாய்வளையரங்கத்தின் வயங்கியவரங்கனார்வாழி. 28

வேறு.

சூதுமாபாதகங்கடேயசெய்நன்றிகுன்று
மேதமாதவர்கடம்மையிகழபசாரமெல்லா
மூதையாற்பாறுபூழையீதெனவகற்றியோங்குஞ்
சேதுமாதவனுமெங்கோன்றிருவடிவாழிவாழி. 29

இல்லாணின்றியம்புசொல்லாலிடர்க்கடலழுந்துதாதை
சொல்லாணியாகநாடுதுடர்ந்தடர்கானினேகிப்
பல்லாணிமுத்தாங்கஞ்சப்பாவைபாலேகவேண்டிப்
புல்லாணிநகரின்மேவும்பொருசிலையிராமன்வாழி. 30

வேறு.

கருவனந்திரண்டமேகமென்னமேனிகவினுறப்
பொருவிகந்தகிரிதண்டுபுசர்கொள்வாளிலங்கவே
மருவனந்துவன்றசெந்நென்மதில்பிறங்கவரவின்மேற்
திருவனந்தபுரநகர்க்குள்மேவுதேவன்வாழியே. 31

வேறு.

அல்லுறவிரவிதன்னையாழியான்மறைத்துப்பார்த்தன்
வெல்லவேமீளவாங்கிவெயிலினைக்காட்டியப்பாற்
சொல்லுதிசிந்துநாடாண்மன்னனையென்றுகூறி
வல்லமாநகரின்மேவுமாதவன்றிருத்தாள்வாழி. 32

வேறு.

சுற்றலக்கோடிடியிடித்துச்சாபம்வாங்குந் துன்மதிக்கஞ்சன்விடுத்த தம்பிதன்னைச், செற்றதிற்கோட்டைக்கொண்டேயெதிருஞ்சாணூரனை வதைத்துச்சிறந்தொளிருமுமையாள்பாகத், துற்றவற்கோட்டைக்கரத் தினொருவனூறியும்பர்பிரானோதிமவாகனத்தோனேத்த, விற்றுவக்கோ டெனுநகரின்விந்தைமார்பின்விளங்கிடவேயமர்விமலன்றிருத்தாள்வாழி.

வேறு.

இறங்கடுவினைகடுபேவின்பமெய்ஞ்ஞானமெல்லா
முறங்குடியடியராவிருற்றநீர்தொழுமினென்றே
நறுங்கொடிமலரோனுனாநவிலநாரதனாரேத்தக்
குறுங்குடிமேவிநின்றகோவிந்தநம்பிவாழி. 34

வேறு.

நலங்கொளுஞ்சடகோபனார்நவின்றவாரணச்சொல்
விலங்குமெய்த்திருவாய்மொழியினிதுவந்துரைப்போர்
குலங்கள்சூழ்குருகூர்தனிற்கொழுமுகில்போலப்.
பொலிந்துநின்றவெம்பிரான்பதப்போதுகள்வாழி. 35

வேறு.

புகர்முகங்கொள்புகலிபம்வெந்துயரமெய்திப் பொய்கையினிற்கர மெடுத்தன்றோலமென்றே, பகருமுனரடைந்தடருங்கராவைச்செற்றப் பாஞ்சசன்னியத்துடனேநேமியேந்திச், சுசரைநிகர்மறையவர்கண்மகிழ் வினோடுசூழ்ந்திடவேதென்றிருப்பேர்நகரினோரா, மகரநெடுங்குழைக்கா துவயங்கவைகுமாதவனார்திருத்தாள்கள்வாழிவாழி. 36

வேறு.

ஆடகமதில்சூழ்ந்திலங்கரிமேயவிண்ணகரமரரிவாழி
வேடனையருள்வெள்ளக்குளத்தமரும்வித்தகன்றாளிணைவாழி
நீடுசித்திரத்தேர்வலவனாரிலங்குசிகரிலாத்திருப்பதிவாழி
சேடனிற்றுயில்கள்ளப்பிரான்வைகுஞ்சீர்மலிவைகுந்தம்வாழி. 37

கன்னலார்வயல்சூழ்வரகுணமங்கைநகருறைகாகுத்தன்வாழி
மின்னவில்குளந்தையிலங்கியமாயக்கூத்தர்தம்மிணையடிவாழி
பொன்னகரெனவேபுகழ்மலைநாட்டிற்பொலிநந்தபுரத்தண்ணல்வாழி
யன்னமென்னடையாரமருவண்பரிசாரத்திருநகரிவாழி. 38

வேறு.

வெரீயுறச்சாதகரெய்தக்கலர்களானோர்மெலிந்துடலினாவிவிடவரத் திச்சுற்றத், தீமமுறவேயந்தத்தனுவைச்சேர்க்கச்சான்றவரையிகழ்ந்தவ

ரென்றனலாருங்கண், ணரியமொடுசெம்புருக்கிநாவினுய்க்கு நரகமெல்
லாமழித்திடுநன்ஞானச்சோதி, சிரீவரமங்கலநகரிற்றிருவினோடுஞ் சிறந்தி
ருந்தமருந்தேவர்திருத்தாள்வாழி. 39

வேறு.

துருவநற்பதவியைத் துலங்கவேவரந்
தருவனந்திகழ்வுறுஞ்சார்ங்கபாணியாய்க்
கருவெனமுகிலெனக்கமலைதன்னொடுந்
திருவண்வண்டூருறைசெல்வன்வாழியே. 40

சிலைவலியிடரினைத்தீர்த்துப்பத்தர்கட்
கலைவிலின்பந்தரும்பதமளிக்கப்பொற்
கலைவிலினிளவெயிற்கவினைக்காட்டவாழ்
தொலைவிலிமங்கலச்சோதிவாழியே. 41

வேறு.

செருக்காளியுகந்துநோக்கத்திரண்டெழுமலைகைக்கூட்ட
முருக்காளவரைபோலாடவும்பன்மாவிரதஞ்சீய
நெருக்காழியரக்கர்மாளநிருதர்கோன்றலைகணீக்கித்
திருக்கோளூரிலங்கமேவுந்திருவினாயகன்றாள்வாழி. 42

வேறு.

கருமாறவுயர்ந்தநற்கதியைக்காட்டுசெற்
குருமாறனுரைமறைத்தமிழுவந்தகோ
வுருமாறியடைந்துசெல்லுமழையைச்செற்றவன்
திருவாறன்விளைநகர்ச்செல்வன்வாழியே. 43

வேறு.

கரிச்சங்கமிவுளியினம்யாளிசீயங் கடல்புடைசூழிலங்கைநகர்நிருத
ரெல்லா, மரிச்செங்குமலைகளெனக்குரம்பைவீழ வாளியினாற்கொய்துத
சமுகனை வீட்டி, வரிச்சங்கங்கதைநேமிகுனியுஞ்சார்ங்கம்வாளிலங்கமாகு
மரன்மருங்குசூழத், திருச்செங்குன்றூரதனிற்றிருச்சிற்றாற்றுச் சிற்றா
யன்திருவடித்தாமரைகள்வாழி. 44

வேறு.

எருக்கடுத்திண்டைசேரும்வேணியனிடரைநீக்கித்
திருக்கடித்தாரினோடுஞ்சிறந்தொளிமார்பினோங்க
விருக்கடித்தானமாகவிரும்பிடுமறையோரேத்தத்
திருக்கடித்தானமேவுஞ்சீதரன்கழல்கள்வாழி. 45

வேறு.

அட்டநாட்டத்தயனஞ்சிடத்தன்பெயரண்டரண்ட
முட்டநாட்டிப்பரனில்லையென்றேயெழுமீதின்மோதுந்
துட்டநாட்டுத்திலமிற்றெனவீந்திடத்தூளியாக்குங்
குட்டநாட்டுப்புலியூருறையோனரிதாள்கள்வாழி. 46

வேறு.

பளிங்கொளிர்வராகமாகிப்படியினையெயிற்றாலேந்திக்
களங்கமுன்மலியும்வெய்யகனகன்றன்கனிட்டன்றன்னை
வளங்கிளராழியேவிவதைத்துமண்மடந்தைபோற்றப்
புளிங்குடிநகரின்மேவும்புராதனமுராரிவாழி. 47

பார்க்கரன்சோமனெய்திப்படிந்தபோலாழிகோடு
சீர்க்கரமிசையிலேந்தச்சினத்தெதிர்மாலியோடு
மூர்க்கராமரக்கர்தம்மைமுசிக்கியேகடிதிற்செற்ற
கார்க்கரையப்பன்றுய்யகழலிணைவாழிவாழி. 48

வேறு.

பருமூழைகனினிரதப்பானிறையமுகந்ததனைப்பருகியேதான்
வருமூழிற்பலம்வாய்த்தவன்னையெனுமசோதைமுனநடித்துவானி
னிரைமோழத்பபடிவமதாயெழுந்தெயிற்றுற்புடவிதனையெளிதினேந்தித்
திருமூழிக்களத்துறையுஞ்செல்வனார்திருத்தாள்கள்வாழிவாழி. 49

வேறு.

மூவாமுதலாயுயர்மூர்த்திகண்மூவராகி
மாவாய்பிளந்தேமதமாகரிகோடுவாங்கிக்
கோவாகியவஞ்சகக்கஞ்சனைநொய்திற்கொன்ற
நாவாயுறைநாரணநம்பிதன்றாள்கள்வாழி. 50

நாட்டாட்டணிப்போதுறைநான்முகன்போற்றிசெய்யக்
காட்டானையைக்காத்தடர்நக்கரத்தைக்கடிந்து
கோட்டாற்கடனீரமிழ்பாரினைக்கோத்தெடுத்தே
வாட்டாற்றுறைமாதவன்றன்பதம்வாழிவாழி. 51

வேறு.

கொடிகள்கோபுரங்களோங்குவில்லிபுத்தூரிற்கோதை
கடிகமழ்கழுநீர்முல்லைசருமுகைகலந்துகாட்டித்
தொடையினைக்குழன்மேற்சூடிக்கொடுத்திடமகிழ்ந்தசோதி
வடபெருங்கோயின்மேவுமன்னனார்தாள்கள்வாழி. 52

வேறு.

உருத்தங்காவெனவில்வாய்விரிக்கும்பூதகணத்தினுடனுமைகொழு
நன்சுதர்களோடுஞ், செருத்தங்காதோடிடவேவிசிகந்தாவிச்சினத்தெதி
ரும்வாணனார்புயங்களெல்லா, மரத்தங்கான்றிடத்துணியவாழியேவியனு
ருத்தனுடாங்கனையைவதுவைசெய்யத், திருத்தண்காற்றிருப்பதியினு
ருநாட்டங்கிசின்றருளுந்தேவர்பிரான்றிருத்தாள்வாழி. 53

வேறு.

ஏடலர்தார்தென்னவர்கோனேற்றிடவேபல்லாண்டு
பாடியுயர்கிழியறுத்தபட்டர்பிரான்கண்களிப்ப
வாடகவம்பரமிலங்கவாழிவளையேந்தியமா
கூடலழகியபெருமான்கோகனகத்தாள்வாழி. 54

வேறு.

ஒருமோகூன்றெழுத்தையாலிவ்வல்வினைவள்ளல்வந்து
பொருமோர்கூர்வாளியாலேயிராவணன்பொன்றவென்றி
தருமோகோவென்றமின்னின்சிறைதவிர்த்தவடன்னோடுந்
திருமோகூரிலங்கின்றசெழுஞ்சிலையிராமன்வாழி. 55

வேறு.

பாலிருங்கடலிற்பாந்தளோவியேபங்கயத்தின்
மேலிருங்கண்ணாண்மார்பின்விளங்கிடவமரர்போற்றத்
தோலிருங்கயத்தினோலமென்னமூன்றோன்றியிம்பர்
மாலிருஞ்சோலைமேவிவயங்கியவழகர்வாழி. 56

உருக்காட்டிவிசையன்றேறவோதியகீதைகாட்டிச்
செருக்காட்டிப்பெருகுங்கங்கைசிறுவன்முன்றிகிரிகாட்டிக்
கருக்கோட்டைக்குமரனாகக்கழலினான்மிதித்துக்காட்டி
திருக்கோட்டியூரினின்றதெய்வங்கள்பெருமாள்வாழி. 57

வேறு.

நள்ளிவயல்சூழ்நந்தைநம்பெருமான்றாள்வாழி
தெள்ளியர்கள்செயுமன்பிற்றேவதேவன்வாழி
கள்ளவிழ்சோலைக்கரம்பனூரமர்கண்ணன்வாழி
புள்ளம்பூதங்குடியிற்போரேறுவாழியரோ. 58

வேறு.

அண்டர்கடிக்குமாதனூரராவணையோன்வாழி
தொண்டர்களேத்துஞ்சேறைதுலங்கியவிராமன்வாழி
முண்டகவாவிசூழ்நாண்மதியமுராரிவாழி
கண்டியூர்நீலகண்டன்கடுவினைகளைந்தான்வாழி. 59

வெறியுறுபூங்காச்சூழவேதநான்குடனேமெய்யா
ரறனுறுமாவிதன்னினமரருளாளன்வாழி
நறுநெய்பானுகருநந்திபுரவிண்ணநகரோன்வாழி
மறைநிறைகூடலூரிலிலங்கியமாயோன்வாழி. 60

வேறு.

பாந்தளேயணையாய்ப்பள்ளிகொள்பார்த்தன்பள்ளியினிலங்கரிவாழி
மாந்தளிர்நிகர்மெய்மாதர்களுறைமண்டங்குடிமாதவன்வாழி
நாந்தகமிலங்கவவிர்கொண்மெய்யத்தினகரமர்நாரணன்வாழி
சேந்தொளிரனஞ்சூழ்செம்பொன்செய்கோயிற்சீதரன்றாளிணைவாழி. 61

தேன்மலர்ப்பொழிலாருந்திருத்தெற்றியம்பலச்செங்கண்மால்வாழி
மீனெனவியங்குநயனமங்கையர்சேர்விண்ணகரத்தரிவாழி
யானிரைமலியுங்கவித்தலத்தமருமச்சுதன்றாளிணைவாழி
வானவர்புகழ்வைகுந்தவிண்ணகரினமர்புருடோத்தமன்வாழி. 62

காகமோர்நயனங்கழன் றிடத்திரணங்கடாவியேசரணுயிர்களேந்து
சாகரத்தரிகள்பிறங்கலானெறியைத்தரவிலங்காபுரியடைந்து
மேகநாதன்னதிகாயன் விச்சிரவாமதலையோடனுசரைவீட்டி
நாகையாம்பதியினழகனுய்வயங்குநாரணன்றிருவடிவாழி. 63

வேறு.

கண்டகன்காகன்போசன்காசிபன்சேதிராசன்
மண்டனின்மடியமோதிமலருளோன்வலாரிவாணே
ரெண்டவருடனேபோற்றவிராசமாநகரின்மேவுஞ்
செண்டலங்காரமன்னன் றிருவடிவாழிவாழி. 64

தும்பிக்கையுடையோனன்னை துணுக்கிடச்சுரர்களெல்லாங்
கம்பிக்கக்கயிலைதன்னைக்கரத்தினுலெடுத்தோனுக்கை
யம்புக்கன் றிலக்கமாக்கியழகியநறையூர்மேவு
நம்பிக்கைநாச்சியார்தந்நாயகன்றாள்கள்வாழி. 65

மறைக்கடிமலரோன்போற்றவாளியானிருதரோடுஞ்
செருக்கணிகரத்தனை தசக்கிரிவனையுஞ்செற்றே
யெரிக்கண்ணன்வியப்பவண்டமேலவீரடியாற்கொண்டு
திருக்கண்ணமங்கைமேவிநின் றருடிருமால்வாழி. 66

அருக்கனற்குமரனெய்தவரவினுலுவமையில்லாத்
திருக்கிளர்பதவியாள்வோன் றனையனன்றிறவாவண்ணம்
பொருக்கெனவவன்றேர்த்தட்டைப்புடவியினழுத்திவண்மைத்
திருக்கணங்குடியின்மேவுந்திருவிஞயகன்றாள்வாழி. 67

முரட்கணைதொடுத்துவிட்டன் றிராவணன்முடிகள்பத்து
மரைக்கணமுறுதன்முன்னமறுத்தவனுவிகொண்டே
யெருக்கணிசடையினுன் றனிரவொழித்தெயில்கள்சூழுந்
திருக்கணபுரத்துமேவுஞ்சீதரன்றாள்கள்வாழி. 68

வேறு.

கச்சணிநகில்வீறியவுமைகொழுனனடஞ்செயக்கமலனேடிமையோர்
நிச்சலுமுராரிதனைத்தொழும்பதியைமுன்புயோனிறுவியநிருப
னச்சுதராயன்வணங்கிடவரவினழகியதில்லையம்பதிக்கே
மைச்சுடர்வரைபோல்வயங்குகோவிந்தராயன்மாமலரடிவாழி. 69

வேறு.

தருவெழுந்தபோலொளிருந்தடக்கைமீதிற் றமனியவச்சிரக்கடையந்தயங்கக்காட்ட, வரவெழுந்துபணுமகுடங்கவிக்கப்பாலி னலையுறும்வேலையிற்றுயில்கொளய்யன்மெய்யன், வெருவெழுந்துசெருக்களத்தின்மாவிமாளமாலியவான்பாறிடவேவிசிகந்தூவித், திருவழுந்தூராமருவியப்பனை தேவகிதன்றிருக்குமரன்றாள்கள்வாழி. 70

மாகேழலாயளவில்வையமேந்தி மகன்சொற்கேளாதமுனிந்தெழுவின்மோது, மாகூழிலாடகனையரியாய்ச்செற்றே யாலிநகர்த்திருமங்கை

யாழ்வாரேத்த, நாகாழவாவியினிற் றுலங்கமேய்ந்து நளினமலர்தொறுமா ரவினங்களல்குஞ், சீகாழிவிண்ணகரிலிலேகர்போற்றச் சிறந்தமருந்தா டாளர்திருத்தாள்வாழி. 71

வேறு.

ஒள்ளியபுதல்வன் றன்னையுரப்பியேயொளித்தன்றூணெங்
கள்ளனைவெளிசெய்யென்னக்கனகனங்கறைந்த தூணிற்
றெள்ளியசிங்கமாகியுகிரினிலவனைச்செற்றே
வெள்ளியங்குடியின்மேவுவிண்ணவன் றிருத்தாள்வாழி. 72

மண்ணகல்வானமுண்டவாயன்மாமலரின்மேவும்
பெண்ணகமாகவைகும்பிறங்கியமார்பனீள்கற்
பண்ணகமொழியாளாகியெழுந்திடமிதித்தபாதன்
விண்ணகருறையுமப்பன்விழுமியபதங்கள்வாழி. 73

கடந்தருகயமன் றுய்யக்கராவினைச்செற்றுப்பூமண்
மடந்தையர்மருங்குசூழமாழைசேர்வனசப்பொய்கைத்
தடந்தனிலிலங்கச்சற்பத்தவிசின்மேற்சயனங்கொண்டே
குடந்தையின்வயங்குமாராவமுதெனுங்கோமான்வாழி. 74

தீபநேர்சனகிதன்னைமணஞ்செய்யச்சிவனார்தையிற்
சாபமன் றிறுத்துமங்குற்றூரையைத்தடுத்துத்துய்ய
கோபராவுய்யக்கோவர்த்தனகிரிதன்னையேந்திப்
பாபநாசத்தின்மேவும்பரமனார்திருத்தாள்வாழி. 75

வேறு.

விடம்பரவுங்காளியன் றனுச்சிமீதின் விண்ணவர்கள்வியப்புறவேநடித்துக்காட்டிக், கடம்பெருகுகரியினுயிர்களைந்துவஞ்சக் கஞ்சனுடனவன் கனிட்டர்தமையுஞ்செற்று, நடம்புரியுநக்கபிரானிருநாலான நர்ட்டனிருடிக்கணங்கள்வலாரிபோற்றத், தடம்பருகுகருமுகில்வாய்த்தஞ்சையாளிசார்ந்திடுநற்பதியினமர்தலைவன்வாழி. 76

வேறு.

பொருப்பேநிகராகியவெண்டிசைப்பூட்கையீரு
மருப்பேயிறநேர்பொருதானுயிர்வானினேற
நெருப்பார்கணையெய்துயர்நேமியுங்கொண்டுதூங்கித்
திருப்பேருறைநாரணன்சேவடிவாழிவாழி. 77

வேறு.

மங்குலைபணவநீண்டமேணியொளிர்சிகரமோங்கச்
சங்குகண்முழங்கப்பேரிதழங்கிடச்சின்னமார்ப்பச்
செங்கயலுகளும்வாவிசிறந்தவெள்வளைமேற்சேரும்
பங்கயச்செல்விமார்பிற்றிகழ்பரந்தாமன்வாழி. 78

வேறு.

ஏராருலகயனோடளித்தவையுண்டுமிழ்ந்திடந்தே
ஓராயிரமுடிதோள்விழியுயர்தாள்களுமுளனும்

பேராயிரமுடையானெனப்பெருந்தேவர்கடுதிப்ப
நாராயணபுரமேவியநாதன்கழல்வாழி. 79

## வேறு.

வெம்பியசேதிராசனுருக்குமன்வென்னிட்டோட
அம்புவிட்டமரின்வென்றுண்டருள்செறிவிதற்பனல்குங்
கொம்பினைமணந்துதேவர்குழாந்துதிசெய்யகின்ற
பம்பையிற்பாண்டரங்கவிட்டலன்பாதம்வாழி. 80

நத்தூரும்வயல்கொள்பூகநாடிரந்தவைபெருமற்
பத்தூரிற்பாதிவேண்டக்கொடாதவன்படியிலோங்க
வொத்தூரும்பிளந்துவீழவீமனுக்குறுதிகாட்டி
வித்தூரிற்பள்ளிகொள்ளும்விமலனார்திருத்தாள்வாழி. 81

ஏதமார்மாழைக்கண்ணனென்புகளொடியக்கோட்டாற்
காதியார்கலியின்வீழுங்காசினிதனையிடந்து
பூதலமானுக்கன்பாற்புராணமுமருளிமுட்டத்
தாதியாம்வராகமூர்த்தியடியிணைவாழிவாழி. 82

தருக்கோடன்றவுணவீயுமூவடிதானமேற்றே
யிருக்கோதுமறையோர்போற்றவுலகமீரடியாற்கொண்டு
மருக்கோடுகமழுநாகம்வழைசெழுவகுளம்பூத்த
திருக்கோவலூரின்மேவிநின்றருடிருமால்வாழி. 83

சந்திரன்றபனன்பக்கமிரண்டினுஞ்சார்ந்தமான
நந்துசெந்திகிரியேந்திநற்கரநயனம்பாதம்
சுந்தரத்தோள்கண்மார்பம்வதனம்வாய்துலங்கநேரி
விந்தளப்பதியின்மேவுமிந்திரைகொழுனன்வாழி. 84

நச்சிமெய்க்கமலன்வேதநவின்றுசெய்வேள்விநாப்பண்
மைச்சுடர்க்கிரிபோன்மேனிவயங்கிடமவுலிமின்ன
வச்சுதப்பெயரினுனென்றமரர்கள்போற்றிநின்ற
கச்சியத்திகிரிநாதன்கழலிணைவாழிவாழி. 85

## வேறு.

திங்கடங்குசடையன்மேவுகச்சிவீதிதிகழநற்
பங்கயத்தினயன்வலாரிமுனிவர்தேவர்பணியவே
கங்கைகொண்டமண்டபத்தினிற்சிறந்தகலுழன்மேன்
மங்குலாமெனக்குலாவுவரதராசர்வாழியே. 86

## வேறு

வருந்தாரளகப்பதிக்கைத்தலவோமொற்றிக்
குருந்தேறிநின்றுச்சியர்கூறைகள்கொள்ளைகொண்டே
விருந்தாவனத்தெய்வதிகிரிவாய்மாயன்மேவு
பெருந்தேவியெனுந்திருப்பீதகத்தாள்கள்வாழி. 87

வேறு.

நேயமார்மழிசையாழ்வார்நிகரிலாக்கணிகண்ணன்றன்
காயுமவ்வளவன்சொல்லாற்கச்சிவிட்டேகுகின்றன்
மாயவாயானுஞ்செல்வேனீயும்வாவென்னச்சேடப்
பாயலைச்சுருட்டியன்றுசென்றருள்பரமன்வாழி. 88

வேறு.

துச்சமிலாச்சங்கத்தொண்டர்க்கின்புறவேசோளரியாயெழுவிற்றேன்றி
யச்சமிலாத்துங்கத்தண்டர்க்கந்தகனுமாடகனுருமேகிறிப்
பிச்சையிலாதுங்கைத்தண்டைச்செங்கழலாற்பீடுறவேநலனுயோங்கும்
கச்சிகிலாத்திங்கட்டுண்டத்தெம்பெருமானூர்பூம்பொற்கழல்கள்வாழி. 89

வேறு.

வெறிசெறிபொழில்சூழிந்திரபுரத்தின்வித்தகன்வாழிவெஃகாவி
னுறையரிவாழியுவமையில்பரமேச்சுரவிண்ணகரத்துள்ளோன்வாழி
மறையவர்திரள்சேர்பாடகப்பதியின்வயங்கியமாதவன்வாழி
பொறியுறுதிருத்தண்காக்கவினுறவேபொலிதருகருமுகில்வாழி. 90

நீரகத்துறையுநிமலனூர்வாழிநிகரிலாவேட்கைமால்வாழி
காரகத்தமர்வோன்வாழிகார்வானத்தச்சுதன்வாழியொண்கள்வ
னூரகத்திலங்குமுத்தமன்வாழியுவமையில்கடிநகர்வயங்கு
மாரியன்வாழிசிறந்திடுமெட்டபுயத்தமரமலனூர்வாழி. 91

மருமலர்பொழில்சூழுங்கடன்மல்லைநகருறைமாயவன்வாழி
சுரர்தொழுதிலங்குதிருப்பிருதியினிற்சோதிதன்றாளிணைவாழி
திரையுறுநதிகளிலங்கிடப்பொழில்கள்சிறந்திடக்குயிலினங்கூவ
வரியுறுமணக்கத்தரிவைசேர்வைகுந்தத்தினிலமரரிவாழி. 92

வேறு.

நிகரறநின்றவூரினித்திலத்தெங்கைவாழி
சிகரஞ்செல்லுறுவேளுக்கையினிலமர்தேவன்வாழி
புகரிபக்கோடுவோங்கிப்பொருதநீர்மலையோன்வாழி
சுகர்நிகரந்தணாளர்சூழிடவெஃகைவாழி. 93

வேறு.

மாதவரினஞ்சேர்காவளம்பாடிவயங்கியமாதவன்வாழி
போதின்மாதுடனேதொண்டனூரிலங்கும்புதுவைமின்னாயகன்வாழி
கோதிலாமேலைக்கோட்டியூரமருங்கோவிந்தன்கழலிணைவாழி
சூதமார்வேலூர்புரிதனிற்சென்னராயனுஞ்சோதிதாள்வாழி. 94

வேறு.

நெருப்புக்கணினுலுலகெங்கணுநீறுசெய்வான்
பொருப்பைக்கரத்தாலெடுத்தெண்டிசைப்போதகத்தின்
மருப்புற்றிடவேபொருதானுயிர்வவ்விவண்மைத்
திருப்புட்குழிவாழுமிராகவதேவன்வாழி. 95

வே று.

கொக்காரத்தொடுமேவக்கிஞ்சுகங்கள்கொஞ்சிடவேகுயில்கள்கூவ
விக்காரமுகுத்திடவேயிலங்குகடிகாசலத்தேழ்முனிவரேத்தத்
தக்கானாய்த்தமனியன்றனுரம்வகிர்ந்துமற்றவன்றன்றனையற்கென்று
மக்காரக்கனியாகியமர்ந்தருளுங்கோளரிதன்னடிகள்வாழி. 96

வே று.

வெவ்விடமதுகையிடவரோடளப்பிலமர்செய்தங்கவருயிர்வீட்டி
யவ்வியமகன்மாமுனிவனாச்சிரமத்தமர்ந்துசெய்தாசினீர்பருகி
மைவணமுகின்மேல்வனசமாமலர்கண்மலிந்தபோன்மெய்யெலாமயங்க
வெவ்வுளினரவின்மிசைத்துயில்வீரராகவனிருபதம்வாழி. 97

வே று.

பொருவில்லிக்காகமைந்தன்றனைத்தந்தபுண்டரீகத்
தொருவல்லிக்காகமீய்ந்தோயோலமென்றழைத்தொல்லை
வெருவல்லிக்கரவாலன்றுவெந்திறற்றிகிரிவிட்டே
திருவல்லிக்கேணிமேவுதேவநாயகன்றாள்வாழி. 98

கல்லைக்காற்பொடியானாரியாக்கியேகவின்கொண்டோங்கு
நெல்லிக்கோடுயரப்பூகநிறைந்திடும்வயல்கள்சூழ
வல்லைக்காய்மணிகொண்மாடத்திருப்பதியணுகிவாழுந்
தில்லைக்கோவிந்தராசன்றிருவடிவாழிவாழி. 99

தீங்கடர்பிறப்புத்தீரத்திரள்பசிமூப்புநோய்க
ணீங்கிடஞானமெல்லாநிறைந்துமாமுத்திநேரப்
பூங்கொடிதிகழுமார்பிற்கவுத்துவம்பொற்கொண்டோங்கி
வேங்கடமிலங்கநின்றவித்தகன்சழல்கள்வாழி. 100

வே று.

சலமேலெங்குந்தாவியவாலி
னிலைமேலெய்தியெழிலஞ்சனமா
மலைமேனின்றான்மார்பின்வயங்கு
மலைமேன்மங்கையடியிணைவாழி. 101

வே று.

பவவெள்ளத்தழுந்தாதையபரனெங்குமுளன்பாரென்னுந்
தவமுளசிறுவன்சொல்லையிகழ்ந்தறைதறியினண்டம்
புவிபிளந்திடவேதோன்றிப்பொன்னவனாகம்போழ்ந்த
வவுபழநாரசிங்கனடியிணைவாழிவாழி. 102

வே று.

மங்காத்திருமைந்தனைவைதடருமவுணன்
வெங்காத்திரமோடறைதூணினுண்மீளியாகி
அங்காத்துகிராலவனாக்கைபிளந்தளைந்து
சிங்காத்திருமாநகர்மேவியசீயம்வாழி. 103

வேறு.

சுசநாதகிதமோதுஞ்சுரர்முனிதுதிப்பவெள்ளி
நகநாதனிடரைமாற்றினன் முக்குகர்கோமான்
ககநாதன் முதலோர்போற்றக்கடகமன்னிறைஞ்சிவிழுஞ்
செகநாதமேவுமெங்கோன் திருவடிவாழிவாழி. 105

வேறு.

பழியளவிலபவமெண்ணிலசெய்தே பலவிதமாகியகொடுமைசெய்தி
றையக், குழியிடைமறகிமெய்குலைபவர்தங்கள் குலம்விருவானொருவன்
குறுகியபோ, தழிவிலதாகியகதியினையாரு மோறுடனென்பதுதவழு
றையடைய, வழியருளும்பிரயாகையில்வாழும் மாதவனிருமலரடிவாழி

வேறு.

வெங்கைமாமூலமென்னக்கராவினைவிழவேவீட்டிச்
சங்கைமாவிசையற்காகச்சமரின்வாய்மலரினூதி
யங்கைமானீசனேற்குமறுவினையகலநீக்கும்
கங்கைமாநதிசூழ்கண்டக்கடிநகரரிதாள்வாழி. 106

எதிரிலாக்கனகன்றன்னையிருகையாற்பிளவுசெய்தே
சதிரிலிலங்கைவேந்தன்றலைகளைத்தடிந்துகுந்தி
சுதரெலாமுய்யத்தீயசுயோதனன்மடியச்செய்த
வதரிநாரணனுமெங்கோன்மலர்ப்பதம்வாழிவாழி. 107

உயிர்தொறுமுளனுய்வேதத்துச்சியினிறைந்துதய்ய
கயமழைத்திடமுன்னெய்திக்கராவினைவதைத்துவேத
னயமுறசடிலனுகண்டலனுடனமரர்போற்ற
நயமிசாரணியத்தெய்துநாரணன்கழல்கள்வாழி. 108

உக்கிரக்கனகன்றன்னையுகிரினுற்பிளவுசெய்தே
நக்கரைக்கிரியினோடேயெடுத்தநாலைந்துகையான்
கொக்கரித்தெறிந்தசூலமுதிர்த்தவனுவிகொண்ட
சக்கரத்தெழில்கொள்சாளக்கிராமநாதன்றாள்வாழி. 109

முட்கரக்கரன்றன்னோடுமவன்கிளைமுடியவாண்மை
உட்கரச்சிரங்களெண்ணிலுறவுலர்பாதவத்தின்
சுட்கம்வெந்திறப்பாய்வன்னியெனச்சுடுசரங்களேவிப்
புட்கரப்பதியின்மேவும்பொறியுறமார்பன்வாழி. 110

வேறு.

சுரரரிவையர்போற்பொதுவர்தம்மாதர்தலக்குமாய்ப்பாடியன்வாழி
திருவுடன்றுவரைப்பதியினில்வயங்குதேவகிகுமரன்றாள்வாழி
வரசர்கடுதிப்பவயோத்தியினிலங்குமருள்செறியிராகவன்வாழி
பருதிபோலவிர்கொண்மணியுறமரவின்பாற்கடற்றுயிலரிவாழி. 111

வேறு.

பொய்கையுயர்பூதத்தார்பேயார்மிக்க புகன்மழிசைமாமறையோன்
சேரர்கோமான், வையகமெண்புதுவையர்கோன்மாறன்றொண்ட ரடிப்

பொடிபாணாழ்வார்சீர்மங்கைவேந்தன், றுய்யமறைப்பொருளுறவேயிவரீ ரைவர் தோத்திரஞ்செய்நூற்றெட்டுத்திருமுற்றத்தின், செய்யமலர்மங் கையிலமங்கைசூழச் சிறந்தமருந்தேவர்திருவடிகள்வாழி. 112

வேறு.

இரணியன்சிறுவன்சுரர்முனிசமரக்கினியசேயெழில்கொள்புண்டரீக ரருமறைபகர்ந்தோனுயருமம்பரீடனருள்செறிசுகன்சவுனகன்றன் வரநதிபுதல்வன்றூப்பியனுருக்குமாங்கதன்றனஞ்செயன்வசிட்டன் பரவைசூழிலங்கைவீடணன்முதலாம்பரமபாகவதரும்வாழி. 113

வேறு.

வைகுபோதின்மாரியாலும்வாடியேசில்கோவலூ
ருய்கவேதியன்கொடுத்தவிடைகழிக்குளுற்றிரா
வைகிஞானநல்விளக்கின்மாயன்மேனிகண்டுளார்
பொய்கைபூதர்பேயரானபுநிதர்வாழிவாழியே. 114

வேறு.

மொழிசெய்பல்சமையங்களுமூழ்கியே
வழிசெய்யாதெனமாற்றிநல்வீடருள்
சுழிசெய்சானவிபாதனைச்சூழ்ந்துவாழ்
மழிசைமாமறையோனென்றும்வாழியே. 115

வேறு.

சிலைசேர்கரனுருயிர்கொன்றவிக்கொண்டறேவி
வலிசேர்கரராவணன்றேர்மிசைபோகும்வாய்மை
யொலிசேருமுனெங்கடவோடுதியென்றுசென்ற
குலசேகரனாகியகொற்றவன்வாழிவாழி. 116

வேறு.

அதுவிதென்றயராதபல்லாண்டுரைத்
துதவியேமுகுந்தற்கொளிர்கோதையார்
வதுவையாகநன்மாதுலனாகிவாழ்
புதுவையந்தணர்பொற்பதம்வாழியே. 117

வேறு.

ஆறங்கமுநால்வேதமுமறையும்பொருளெல்லாம்
நூறுமிருநூறுமெழுநூறும்பெறநுவல்வோன்
வீறுந்திரைநதிசூழ்ந்திடுகுருகாநகர்மேவு
மாறன்சடகோபன்றிருவடித்தாமரைவாழி. 118

வேறு.

அண்டரடிப்பொடியெனவேயரைத்துழங்குங்கும்பகன்னனுதியாகுந் துண்டரிடிப்படமுழக்கிச்சூழ்ந்தவரைக் கணைகளினுற்றுணித்தசோதி, கொண்டலடிப்பொடியின்மலர்க்குழலியைக்கல் லுருவகற்றுங்குணங்கள் கூறுந், தொண்டரடிப்பொடிமண்டங்குடிமறையோன் றளிணைகலெங் கிவாழி. 119

வேறு.

பூணாரம்பொன்னினுடையார்பொலி
சேணாருந்திருமேனிகண்டகண்
காணாமற்றவையென் றுங்கைதொழும்
பாணாழ்வார்திருப்பாதம்வாழியே. 120

வேறு.

சதுரர்சதுமறைதமிழினுதவிய
வெதிரின்மகிழ்மலரணியுமிவரென
முதிருமொழியொருபதினொருவர்செயு
மதுரகவியடிமலர்கள்வாழியே. 121

வேறு.

செங்கண்மாலுடன்செந்திருவைத்தகைத்
தெங்குமானவனெட்டெழுத்தோதியே
சங்கைபோகத்திருமொழிசாற்றினோன்
மங்கைவேந்தன் கலிகன்றிவாழியே. 122

வேறு.

அராமீதமர்வாய்கரியுந்திடவாழியினைக்
கராமீதறவேவிடுவாய்கருணாகரரா
மராமாவெனநான்மறைமல்கிடவேதுதிசெய்
யிராமானுசமாமுனிதாளிணையென் றும்வாழி. 123

வேறு.

நாரணனளினமிலங்கியதிருச்சேனாபதிசெந்தமிழிசைய
வாரணமறைந்தோனருள்செறிநாதமுனிபுய்யக்கொண்டவந்தணன்றன்
சீரணிமணக்காலநம்பிதொல்புகழ்சேராளவந்தார்திகழ்சுரும்பார்
தாரண்பெரியநம்பிநல்லிராமானுசனிவர்தாளிணைவாழி. 124

வேறு.

கோரத்தாலேபழுக்கொண்டகண்டன்சபைமே
னாரத்தானேயிறையென்றசொன்னனவே
யேரத்தானேதுரோணம்முளதென்றெழுதுங்
கூரத்தாழ்வான்பதக்கோகனம்வாழி. 125

வேறு.

திருவரங்கநகரின்வந்தபோதுகண்கடெரிகிலாக்
கிருமிகண்டன்மீளவோடவேகிளர்ந்நான்மறைப்
பொருள்கலந்தமணலரங்கர்புவியடங்கவிசிறினன்
பெரியநம்பிபிள்ளைபாதமலர்கள்வாழிபெரிதரோ. 126

வேறு.

கொம்பிளந்தொடிந்தேயெட்டுக்கரிகுலைந்திடவென்றோன்சே
யம்பிளையவனைத்தாக்கமருந்துதவனிலராசர்
தம்பிளைக்கயன்வாழ்வீய்வோன்றளினையேத்திவாழு
நம்பிளையிருபொற்பாதநளினங்கள்வாழிவாழி. 127

வேறு.

உணவாகியமைவம்புலநோய்களுமோடவெங்கும்
பணமாயிரப்பகூறலைப்பாந்தளிற்பள்ளிகொள்ளு
மிணையேயின் முராரிபொற்றாளிணையேத்திவாழு
மணவாளனென்னுந்தவமாமுனிவாழிவாழி. 128

வேறு.

மாதவரெண்சடகோபன்றமிழாற்செய்த மறையொழியாவண்ணமதி
ற்குடந்தைமாலுக், கோதியவாராவமுதாம்பத்தைக்கேட்டே யுயர்குருகூ
ருறங்காதவெகினத்தின்கண், டிதொருவச்செந்திருவாய்மாறன்கூறத்திக
ழ்திருவாய்மொழியையுலகுய்யத்தந்த,நாதமுனியியலிசையினுமம்வல்லோ
னளினமலரிணையடிகள்வாழிவாழி. 129

வேறு.

ஒரங்கலாதநாவுடையானுருவிலாதோனெங்கோலின்
வீரங்கலாமலிடைந்துடையவெற்றியுறமுக்கோலுடையா
னரங்கலாரங்கமிழ்திருவையகலாவரங்கரடிபிரியாச்
சீரங்கநாராயணமுனிதன்சிறந்தநளினப்பதம்வாழி. 130

வேறு.

கராசலமுறவேபிணித்திழுப்பக்கராசலமவணிஞேலமிடச்
சராசனம்வாளம்வளையாழிதண்டேந்தரித்துவந்துதவித்
துராசையொருவுமுனிவர்தொழத்துலங்குமரங்கர்பதமேத்தும்
பராசரபட்டரிருபாதப்பதுமமலர்கள்வாழியரோ. 131

வேறு.

நீதவியாசில்பொன்னித்திரையுலாமருங்கிஞேங்கு
மாதவியாரம்பூகம்வயங்கியவரங்கமேவுஞ்
சோதியைவியாளமீதிற்றுலங்கியைச்சுருதியோதும்
வேதவியாசபட்டர்விளங்கியபதங்கள்வாழி. 132

வேறு.

நந்தாடவெங்குங்கயறுள்ளிடநாரம்பொங்க
வந்தாமொமதிப்பொய்கையின்மாமறைவாய்த்
தந்தாடியதேத்துமரங்கனைச்சார்ந்துபோற்றுங்
கந்தாடையண்ணான்கமலப்பதம்வாழிவாழி. 133

வேறு.

உதிட்டிரன்றனக்கொன்னலன்வஞ்சமிக்
கதுட்டன்மாளக்கவான்றட்டிக்காட்டிய
மதிட்டுவாரகைமன்னடிபோற்றிய
வதிட்டையாயன்மலரடிவாழியே. 134

வேறு.

பெருமலையப்பினிற்பிறழுவேகடை
சருமலையொப்பனுர்கழல்கள்பேணுவார்

மருமலேயப்புநீள்வதிட்டையாயஞர்
திருமலர்ப்பாததாளிணைகள்சேருவாம். 135

வே று.

எயினன்ராமாவெனவெழில்ருளவைகுந்தத்
துயர்வுறவயங்கியதண்மையாமென்ருன்
மயர்வறவெட்டெழுத்தோதுமாந்தர்க
ளியல்புறுபெருமையையியம்பற்பாலதோ. 136

வே று.

நீதிசேர்செல்வம்வாய்க்குநிவந்தமெய்த்தருமநீஞு
மேதமின்ஞானமெய்துமிந்திரையினிதுநோக்குஞ்
சேதிபராசஞேடச்செருவென்றுவிகற்பனல்குங்
கோதையைமணந்தமாயோன்சிலேவலிகூறுவோர்க்கே. 137

உன்னியகருமம்வாய்க்குமுயர்மறைநெறியுண்டாகி
மன்னவராகிவாழ்வார்மறுவிலாமக்கட்பேரும்
பொன்னெடுங்குன்றமானப்பொருதவேறேழடர்த்துப்
பின்னேயைமணந்தமாயோன்பெருநலம்பேசுவோர்க்கே. 138

வே று.

திருவினுடன்வசுந்தரையுநீளேயென்னுஞ்செழுங்கொடியுந்தேவியரா
ய்ச்சிறந்துதோன்றப், பருமணிமேற்புரள்பணமாயிரங்கள்கோடி பருதி
யொளியெழுமரவப்பாயன்மீதே, கருமுகின்மேற்றிகழ்கமலக்காபூத்த
கவினுறவால்வளேநேமிகதைவாள்சார்ங்க, மருவவகல்பயோததின்வயின
தேயன் வலம்வரவாழரியடியெம்மனத்துள்வைப்பாம். 139

வே று.

இதரதேவதையைநினேக்கிலாமதியையீந்துநீயானகிவிலங்கு
சுதைதருமொழியார்கலவியிற்படிந்துதூர்த்தனுத்திரிகுவதொழித்துப்
பதமரிச்சித்துச்சரிதையைமறவாமனமளித்தென்பவந்தீர்த்தி
சதுமுகனேடெவ்வுலகுமுந்தியினிற்றந்ததிற்ருேன்றியதலேவா. 140

வே று.

கன்றெடுத்துவிழவெறிந்துஞ்சகடுதைத்துங்கரமதனுற்
குன்றெடுத்துமழைதடுத்துங்கலேயெடுத்துங்குருந்தமர்ந்து
மென்றினவிர்மறைந்திடவேதிகிரிதனேயெடுத்தடைத்து
நின்றுகுழலூதியருணெடியவன்றன்பதநினேப்பாம். 141

வே று.

அன்னேதன்னுதரத்தடைந்துசோடசமாம்வருடமாரழகனுய்த்தரங்
கந், துன்னுபாற்கடலிற்சோதிபாலேகச்சுதனெனுமவாவினுல்வியாசன்,
பின்னுறநடந்துவிளித்திடவநத்திற் பிறங்குபாதவங்களென்னெனவேந்,
தொன்னலனுறவேசெனனபாசத்தைத் துனித்தகன்முனிவனேத்தொ
ழுவாம். 142

வேறு.

வானநாரியர்க்கினத்தினராகிவாவிநீர்மருவவொண்வியாச
னினமில்வசிட்டன்பராசரன்வரத்தூசிடையினிற்புனைந்திலச்சித்தே
வேனிலான்விசிகம்விலக்கலாதவர்நீர்விளங்கியசுகன்றனக்கியாமுங்
கானுறுமரமுஞ்சமமெனவுரைப்பக்கடிதகன்முனிவனைத்தொழுவாம்.

வேறு.

இருக்குமுதன்மலரயனோடேழுலகமளித்தவிரை
மருக்கொள்குழற்றேவகிதன்மதலையெனவந்தவனித்
திருக்குளதெலாமடியச்சிசுபாலன்றிகைத்தோட
வுருக்குமணித்திருவைம்மணந்துவந்தருள்வான்சரிதைதனை. 144

புகலரியவிறலபிமன்புதல்வனுக்கன்றருள்புரிந்து
சுகன்மொழியும்வடகலையையான்றமிழாற்றொடுத்ததுநிண்
மகரநதிபதியலையவரும்விசையைநிகரெனமண்
ணுகுசிறுகூவற்புனலுலாவியமண்டூகமொத்த. 145

வேறு.

சுகனவன்பிதாவவன்றந்தைதூய்மையாற்
பகர்கதையரியினம்பருப்பதங்களாற்
சகரநீரடைப்பமெய்தனின்மணற்கொடே
புகுமணிலியல்பெனப்புகலுவேனரோ. 146

வேறு.

திசைசெவிபெடநெடியசிகரமுடியினமொடிய
விசைகொடெதிர்வருகெருடனிகரெனவேவிரிநிலன்வாய்
மசகமிருசிறகசையவருசெயலையொத்தனவா
லிசைகொள்சுகனருண்மொழியையான்றமிழாவியம்பியதே. 147

சம்பரனைவதைத்துயருந்தசரதராமன்சரிதை
கம்பன்மொழிசெந்தமிழின்கவித்திறத்தின்காட்சிகண்டு
மம்புயங்களலர்ந்தெழுநீரிலஞ்சிதனிலாம்பலுந்த
தும்பியபோலேவாசுதேவகதைசொல்லினனால். 148

வேறு.

இரைக்கடலிப்பிராற்றமெள்கிலாததனிற்றேரன்றுஞ்
சரியில்வெண்டரளநற்றிச்சார்குவார்போலஞானந்
தெரிகிலேன்மொழிந்தபுன்சொற்சிறுமையைப்பெருமையாய்க்கொண்
டரிநலப்புகழையுள்கிமகிழுவாரறிஞர்மாதோ. 149

வேறு.

பராசரன்புதல்வன்முதலினோருரைத்தபதினெட்டுப்புராணமாமதனு
ணிராசையையுறத்தும்புராணமோராறுநிகரில்சாத்திகமெனவுரைப்ப
விராசதபுராணத்தியல்பிருமூன்றென்றியம்புவரிதுவுமேயன்றித்
துராசையையளிக்குந்தாமதபுராணஞ்சொல்லுவர்மூவிரண்டெனவே.

காருடம்பதுமம்வராகம்பாகவதங்கலினுறுவிண்டுவின்புராணம்
நாரசிங்கத்தினுடனிவையாறுநலனுறுசாத்திகபுராண
மேருறுமாற்கண்டேயம்பௌடிகம்வாமனமியற்பிரமகைவர்த்தஞ்
சீருறுபிரமாண்டத்துடன்பிரமஞ்சிறந்தவிவ்வாறும்ராசதமே. 151

அந்தமார்மச்சங்கூருமஞ்சைவமாக்கினியங்காந்தத்துடனிலிங்க
மிந்தநூற்புராணமாறுந்தாமதமாமிராசதந்தாமதமிரண்டும்
வந்தெழுஞ்சனனமறுத்துயர்பதத்தைக்கொடாதுசாத்திகமகாபுராணஞ்
சுந்தரவரியின்பதத்தினையளிக்குமாதலாற்சுகன்மொழியுரைத்தேன்.152

வேறு.

எதுகுலத்துவருமுறையோன்சரிதையைநற்சுகனிசையா
லுதவுசொலைத்தமிழினூலுரைத்தவன்வண்டிருவரங்கம்
பதியமர்வேத்திரக்கரத்தோன்பழமறையோன்வரதனெல்லிக்
கதிபதியாயுயர்ந்திடுபேரருளாளநாதனரோ. 153

வேறு.

ஆயுமறையோரெண்ணவருஞ்சகார்த்த மாயிரத்துநானூற்றேடறு
பத்தஞ்சாந், தூயசுபகிருதுதனின்மூதன்மாதத்திற் றலங்குகுருவாரத்
துத்திராடநாளி, னேயமுடனெல்லிநகர்வரதராச னிகரிலரங்கத்திலர
வணையினோங்கு, நாயகன்முன்னறிஞர்மகிழ்ந்திடவேவாசு தேவகதையா
ங்கேற்றிநலனுற்றனே. 154

குந்திசுதர்தேவியுடன்கொடுங்கானின்மாதவனைச்
சிந்தைசெய்துமுயர்கதியைச்சேர்ந்ததுவுமகபதிசேய்
மைந்தன்மகன்றனக்குவியாசன்குமரன்மால்சரிதை
யந்தமுடனமுதெனவேயருளியதுமறையலுற்றேன். 155

திருவரங்கப்படலம் - முற்றிற்று.

ஆ இவ்வளவும்பாயிரம்.

ஆ திருவிருத்தம் - 161.

---

## 2 - வது, நைமிசாரணியப்படலம்.

---

வேறு.

பூமிசைவனிதைகொழுநனுமுராரிபுவியிடத்தருந்தவரிலையத்
தீமைசெயசுரர்மடிந்திடவிடுப்பத்தெசசதகோடிசூரியர்போ
னேமிவந்தவரைவதைத்தவண்விழவேநிகரிலாநைமிசாரணிய
நாமமுற்றிடவேயிலங்குமாச்சிரமத்தனேகமாமுனிவர்நண்ணினரால். 1

சவுனகன்முதலாமருந்தவரெல்லாஞ்சத்திரயாகத்தைமுயன்று
சிவனயனெமொலிவர்மகிழ்ந்திடவேதெசசதவருடமுங்கிறைய

வவிசொரிந்தழலின்மறைச்சொலைகிரப்புமவர்முனேசூதன்வந்தணுகக்
கவினுறுதவிசினிருத்தியாச்சரியத்துடனிவைகழறினரன்றே. 2

அயனிகர்வியாசனருளியபுராணமனைத்துக்கும்பாத்திரமான
வியல்புறுமறிஞர்மகிழ்ந்திடச்செவிக்கினியநல்லமுதெனவிசையாற்
செயலுறுசரிதைப்பொருளினையெவருந்தெளிவுறப்பகருமாபுருட
சயமுறுஞானம்வழங்கிடுங்காதையருளெனச்சவுனகன்மொழிவான். 3

கனமுறுதடத்தின்செயலெனச்சனனமரணமுங்காட்டிமிக்குரம்பை
தனினமர்சீவனரகினுஞ்சுவர்க்கமதனிலுமமர்ந்துபின்புவியின்
சினமுறுவிலங்குபறவைகள்கிருமிநரருமாய்ச்செனித்திடாதுயர்ந்த [ன்
வனகன்வாழ்பதத்தினமைத்திடுஞ்சரிதையருளெனச்சவுனகனறைந்தா.

சிவனெனவிளங்குஞ்சவுனகமுனிவன்சிறந்திடவுரைத்தசொற்கேளாத்
தவர்களெண்சூதனறைகுவானிகரில்சத்தியவதிதருதனையன்
கவினுறவருள்பாகவதம்வாளபிமன்காதலன்போசனாகிப் [றான்
பவமிலாச்சுகன்றான்மொழிந்திடக்கேட்டபுராணத்தைப்பறைகுவனென்

சூதனீதறையச்சவுனகனறைவன்தூயனாகியசுகமுனிவன்
பூதலத்தமரின்மடிந்தவாளபிமன்புதல்வன்பாலேதுகாரணத்தான்
மாதவருறவேகிகரில்பாகவதமகாபுராணத்தினைமொழிந்தான்
றீதகல்வியாசன்பயிற்றியவுரையென்றோதிடவவனிவைசெப்பும். 6

தரங்கநற்சரசுவதிநதிக்கரையிற்சம்மியப்பிராசவாச்சிராமத்
தரங்கடையயம்போலவனியிற்செனங்களருவினையகலவேவியாசன்
புரங்களைபுரிதன்மகிழ்ந்திடாலுபெயரதாய்மறையினைப்புகன்று
கருங்கடலுடனேழுதகிசூழுலகிற்கவினுறுபாரதம்பகர்ந்தான். 7

மறைபறைவியாதனிருக்குவேதத்தைதமறவிலாப்பயனிலங்கறைய
நெறியுறுவைசம்பாயனமுனிவனிகரிலாவெசுருவைநிகழ்த்த
வறிவுறுசெயன்சாமத்தினைமொழியவதருவவாரணஞ்சுமந்து
பறையவேரோமகருடணனிகரில்பாரதம்பகர்ந்திடப்பணித்தான். 8

பயிலமாமுனிவன்பழுதிலாவைசம்பாயனர்செயமுனிபாரிற்
செயலுறச்சுமந்துமறைகளுன்கினையுந்தெளிவுறவந்தணர்க்கறைந்தார்
கயலுறுகடல்சூழ்காசினியமர்ந்தோர்கவினுறுபாரதப்பொருளை
யறியவேரோமகருடனச்சூதனறைந்தனனுலகெலாந்தழைப்ப. 9

சத்தியவதிசேய்சதுமறையைத்தானறைந்துபாரதத்தினைமொழிந்தும்
புத்தியின்மலமாகாமையான்மலினம்பொருந்தவேமெய்யெலாமெலிந்து
சித்தம்வேறாகியுழலும்வேலையின்வாய்சிறந்திடுமோதவமுனிவ
னத்துறுநதிவாய்பராசரன்குமரனண்ணுமாச்சிராமத்தையடைந்தான்.

வீணையுங்குடையுஞ்சிரகமுந்தண்டும்விளங்கிடநாரதபகவான்
வாணனுபிரந்தோடணித்தவன்புகழைத்துதித்தவன்வருதலும்வியாசன்

பாணியாற்றொழுதுசிரசினாலிறைஞ்சிப்பரிவுடனாசனத்திருத்தி
வேணியார்விமலனிகர்தவன்முனரினிருந்திடச்சுரர்முனிவிளம்பும். 11

வேதநான்கினையுநூலெலாந்தழைப்பவிரித்தனைபாரதவிசையைச்
சூதன்யாவருக்குமறைந்திடப்பணித்தாயாகினுந்தூயயோகியர்தந்
நாதனாமுராரிசரிதையைப்பரிவானவின்றிடாப்பாவம்வந்துறவே
யோதியுமுணர்ந்துமனதினின்மலமாகாமனீயுழந்தனையென்றான். 12

இவையெலாமொழிந்தயாழ்முனியடியினிறைஞ்சியேபராசரன்குமர
னவையறுமறைநான்கினையுநானவின்றநலனுறுபாரதம்பகர்ந்தும்
மறுவுறுமனதுகலங்கமெய்ஞ்ஞானம்வளருதலிலாமலேகுறைவா
யறிவறலானிவ்வினையினையகலவருளுநீயருளுதியென்றான். 13

நிகரிலாமுனிவனிவைநிகழ்த்திடலுநெறியுறுநாரதனனங்கள்
பகிரதியயத்தைப்பருகவேகரடம்பழுதுறவச்சலம்பருகா
திகழ்வுறுகிருமியினைத்தகட்டத்தினிழுக்குநீரருந்துவபோன்று
ககபதிதுவசன்புகழைமெய்யறிஞர்கழறநீயிதரநூல்பகர்ந்தாய். 14

கன்மகாண்டத்தைநிறைத்தவரெனினுங்கவினுறுதிருமகள்பதியா
நின்மலன்புகழைநினைக்கிலாதவர்களிரயத்தினுறுவர்வேதத்தி
னன்மையையுணராதறநெறிதிறம்புநவையுறுமனத்தினரெனினு
மன்மதன்றந்தையடியடைந்தவர்கண்மருளறவுயர்பதத்தமர்வார். 15

காசினியதனிற்றவஞ்செய்வார்யோகங்கழறிடிலியமநீணியம
மாசனம்பிராணாயாமநற்பிரத்திகாரதாரணமருட்டியான [ன்
மேசகல்சமாதியிவையெட்டுமுணர்ந்தோரெனினுமுராரியொண்புகழி
வாசனையிலாதோர்சொற்கமெய்திடினுஞ்சென்னமாம்வாரியின்வீழ்வார்.

ஆவலையகற்றியவனியற்றீர்த்தயாத்திரைமருவுவோர்பெரியோர் [டே
சேவைசெய்திடுவோரவர்களான்முராரிசரிதையைத்தினந்தொறுங்கேட்
பாவமாமளப்பில்பரவையைக்கடப்பார்பதுமநாபன்னவரிதயத்
தோவுதலிலாமலிலங்குவனவரையுவப்பொடுந்தன்பதத்துய்த்தே. 17

படியினில்வயங்கும்பாதவங்கடையப்பாவகன்றாலங்குமாறெனமா
லடிநினைந்தவர்பிற்குணமிரண்டகற்றியறனுறமுற்குணத்தாள்வர்
சடமகற்றியசாத்திககுணத்திறைவன்சங்குசக்கரந்தரித்தவனே
வடிவுடைமலரான்மகுணனுங்கவர்கள்வைகுந்தம்பெறவருள்செய்வான்.

மறைமகம்யோகங்கிரியைமெய்ஞ்ஞானமறுவிலாத்தத்துவதன்ம
நெறியுறுகதிஷமிவையெலாமுராரிபெயருறநிறுத்தினாலனா
மறனறவிதரதெய்வத்தையடையினிவையெலாமுதனமமாயளக்க
ருறுமுயர்கலங்காலடைந்திடவுடைந்தேயழிவபோற்பருவரலுறுவார். 19

ஆதலின்முனிவனவனியிற்சோகமோகவெம்பவங்களையாற்றுஞ்
சீதரநெடுமொலமிர்தநாமங்கடிறமெனவுணருதியான்றான்

ரு திபுத்திரனைப்பரமபாகவதவெதிகளாற்றத்துவமறிந்தேன்
மாதவனடியானெனமகிழ்வுற்றேன் மற்றவைகேளெனமொழிவான். 20

சுரர்முனியெனுநான்பூருவசெனனந்தலங்குகெந்தருவனாய்த்தோன்றி
யுருபெருங்கண்ணனெனும்பெயராகியுருவினாலதிகனுமாகி
யருவையரிடத்தினதிகமோகனுமாயமர்ந்திடுமெனைத்தெசப்பிரம
ரருமறையவர்சேர்மகத்தினிற்கானமிசைக்கநீவருகெனவறைந்தார். 21

நீதினையகற்றியுயர்தெசப்பிரமர்மொழியினாற்றேவியருடனு
மேதமுற்றிடநானவர்செயுமகத்தினிடையிற்பாடவத்தொடுமெய்த
மாதர்களுடனேதூர்த்தனாயிவணின்வந்தனையாதலினிழிவாந்
தாதிபுத்திரனாய்ச்சனித்திடுகென்வெந்தழலுறச்சபித்தனரன்றே. 22

சாபமுற்றிடயான்றயங்குகெந்தருவனாகியசெனனத்தையொருவிப் [ய்க்
பாபமுற்றிடாண்டுறையுமோர்மறையோன்படைத்திடுந்தாதிபுத்திரனா
கோபமுற்றிடுநற்குணமுடையவனாய்ப்பிறந்தைந்துபருவங்கூடிடமா
னாபியிற்றிகழ்வோன்றனைமிகரெதிகனால்வர்வந்தவ்விடத்துற்றார். 23

ஏதமிலெதிகள்வருதலுமறையோனெதிரெழுந்தவர்களையிறைஞ்சி
யாதரவுடன்றன்மனைதனிற்கொணர்ந்தேயருக்கியமளித்தபின்பரிவாற்
றாதிபுத்திரனுமெனையவர்க்கேவல்செயும்படிசாற்றியேவிடுப்ப
மாதவமுறயானவர்களேவினசொன்மருமலாண்டுழியஞ்செய்தேன். 24

தாதிபுத்திரனாய்த்திரியுமென்றவத்தாற்சாதுமாதத்திடையெய்து
மேதமிலெதிகள்வரமனைமெழுகியேவியதொழிலெலலாங்கேட்ப
நீதியார்தவத்தோர்நதியினிற்படிந்துநியமமுற்றியபிணர்ச்சமைத்த
வோதனமருந்திமிகுந்திடுமிலையினுச்சிட்டமளிக்கயானுகந்தேன். 25

மாதவமுறயானெதிகளுச்சிட்டம்வழங்கிடவருந்தவென்மனத்தி,னே
தமற்றயருமறிவுவந்துறமாதவன்கதையவரியம்பிடும்போ, தாதரவுடனு
மகிழ்ந்தியானேற்பவதுவெலாம்விரித்தெனக்கறையக், கோதின்மெய்ஞ்
ஞானம்படர்ந்திடயானேர்கொள்கொம்பாயுணர்ந்தனனன்றே. 26

வேதமாரெதிகண்மறையவன்மனையினீரிருதிங்கண்மேவியபின்
போதலுமவரைத்தொடர்ந்துதானேகப்பொறையுடையவரெனைமகிழ்ந்து
தாதிபுத்திரனென்றிகழ்ந்திடாதெனக்குத்தத்துவஞானத்தைமொழிய
வாதரவுடனங்கவர்களையிறைஞ்சியகத்தினிற்றிரும்பிவந்தனனால். 27

தூயயோகியர்களறைந்தசத்துவத்தாற்றலங்கியவிருத்தியுண்டாயுந்
தாயினையொருவமனதிலாததனாற்றவஞ்செயுங்கருத்தினையறியே
னேயமோடவளோடுறையுநாளவளைநெறியுறுமறையவனேக்கிப் [ன்.
பாய்புனிற்றுக்கண்மாவநத்திடைபோய்ப் பால்கறந்தெடுத்துவாவென்று
மறையவன்மொழியால்வநத்தினுவினங்கள்கறந்திடவல்லையிற்செல்லு
நெறியிடையரவுகடித்திடவவளுமிறந்திடநேமியோனருளா

லறிவுவந்தணுகவனேமடிந்தமைதானலனெனநினைந்தவரொருவிக்
கறையடியுழுவையிருளிகோளரிகள்கரடிசேர்கானிடையடைந்தேன். 29

மரிதர்களணுகாவரையுழும்வநத்தின்வல்லேயினெய்தியான்றிரியத்
தினகரன்வெயிலாற்பசியுறவவணோர்கயத்தினிற்செலத்தினைப்பருகித்
தனியரசருகினிருந்தரிதியானந்தளர்விலாமற்கருதிடவென்
மனதுநின்மலமாயுறப்பரஞ்சோதிவந்துமுன்னின்றவண்மறைந்தான். 30

இருவிழிகளிப்பத்திருமகள்கொழுநனென்முனிற்றோன்றியேமறையத்
தரைவரத்திசைகளொருங்குறத்திரிந்துதயாளுவாமுராரியைக்காணப்
பருவரலுறயான்பருவமோரைந்தாஞ்சிறுவனுதலிற்பரிந்திரங்கி
யரியுயர்விசும்பினடைந்தசரீரியாகியேயிவையறைந்தனனால். 31

தாதிபுத்திரனுயெழுந்தவிச்சென்னந்தன்னினீயொப்பிலாதயரு
மாதியாமெனைத்தானடைவதற்கரிதேயாதலாலிவ்வுடலகற்றி
யோதுதற்கரியவழிவிலாச்சரீரமுற்றெனையடைதிசின்னுளிற்
பீதியுற்றிரங்கேலெனவருள்செய்யப்பிரான்றனைச்செவித்தவணிருந்தே

வருடமோர்சதுரயுகஞ்சகசிரமாய்வரமலரயற்கிரவாகக்
கருடவாகனன்றன்னருளினிவிழிவாமுடலினைக்கழித்துத்திவ்வியமாம்
புருடனுய்ப்பிரமன்றுயில்கொளமனையிற்புகுதும்போதவன்வயிற்றூற்றே
யிருடருபொழுதாருகமறுங்காறுமிலங்கியாண்டிருந்தனனன்றே.

சதுமுகனிரவிற்சகசிரசதுரயுகமொருப்படத்தரைவானத்
ததிகமாயெழுந்தவவாந்தரவெள்ளமகன்றிடவவன்றுயிறறப்ப
வுதையமாகியபோதவன்மடிதன்னினுதித்தநாரதனெனும்பெயராய்க்
கதிதருமுராரிக்கடியனுயினனுலறிதிமாமுனியெனக்கழறும். 34

தாதிபுத்திரனுமிழவினிற்பிறந்துஞ்சங்கொடுசக்கரந்தரித்த
வாதிதன்சரிதையருந்தவரறையவழியுடன்கேட்டமாபலத்தான்
மாதவர்துதிப்பவயன்வயிற்றொன்றிவயங்கினேன்மாலடியவனு
யாதலின்வியாசமுனிவநாரணற்சரிதையையறையெனப்பறைவான். 35

நற்றிலாதிருக்கத்துடர்ந்துதீவினைதானலியுமாறெனப்பலவுயிர்க்கு, முற்றநல்வினையால்விபவமுற்றுழ்ந்தநிலனுறமுடுகுநீரெனவே, பற்றுமாலார்க்குமுயலவேண்டுவேதிப் பரமநற்சரிதையைப்பரிவாற், சுற்றுணர்ந்துரைப்பதுலகிற்றுல்லபமா மவையினைக்கழறுகென்றிசைப்பான். 36

அரிபெயர்நிறையவயங்குபாகவதமச்சுதனயன்றனக்கறைய
விரைமலருறுவோன்யான்செய்மாதவத்தால்விளம்பினனதனைவிரித்
யிருவினையகலச்சனனநோய்நிரையவிருளறவிருதயத்திலங்கித்
திருவினையகன்வந்துறப்பரனடியார்களிப்பநீசெப்பெனவறைவான். 37

வேதநான்கினையும்விரித்ததன்பொருளைவிழுமிதாயுணர்ந்துதேசவனே
யாதிமற்றவனையலாததெய்வங்களினறையவிருக்கிய...

றாதிபுத்திரனாய்ப்பரமபாகவதவெதிகளாற்றத்துவமறிந்தேன்
மாதவனடியானெனமகிழ்வுற்றேன்மற்றவைகேளெனமொழிவான். 20

சுரர்முனியெனுநான்பூருவசெனனந்துலங்குகெந்தருவனாய்த்தோன்றி
யுருபெருங்கண்ணனெனும்பெயராகியுருவினாலதிகனுமாகி
யருவையரிடத்தினதிகமோகனுமாயமர்ந்திடுமெனைத்தெசப்பிரம
ரருமறையவர்சேர்மகத்தினிற்கானமிசைக்கநீவருகெனவறைந்தார். 21

தீதினையகற்றியுயர்தெசப்பிரமர்மொழியினாற்றேவியருடனு
மேதமுற்றிடநானவர்செயுமகத்தினிடையிற்பாடவத்தொடுமெய்த
மாதர்களுடன்றூர்த்தனாயிவணின்வந்தனையாதலினிழிவாந்
றாதிபுத்திரனாய்ச்சனித்திடுகென்வெந்தழலுறச்சபித்தனரன்றே. 22

சாபமுற்றிடயான்றயங்குகெந்தருவனாகியசெனனத்தையொருவிப் [ய்க்
பாபமுற்றிடவாண்டுறையுமோர்மறையோன்படைத்திடுந்தாதிபுத்திரனா
கோபமுற்றிடுநற்குணமுடையவனாய்ப்பிறந்தைந்துபருவங்கூடிடமா
னாபியிற்றிகழ்வோன்றனைமிகவெதிகனால்வர்வந்தவ்விடத்துற்றார். 23

ஏதமிலெதிகள்வருதலுமறையோனெதிரெழுந்தவர்களையிறைஞ்சி
யாதரவுடன்றன்மனைதனிற்கொணர்ந்தேயருக்கியமளித்தபின்பரிவாற்
றாதிபுத்திரனாமெனையவர்க்கேவல்செயும்படிசாற்றியேவிடுப்ப
மாதவமுறயானவர்களேவினசொன்மறாமலாண்டூழியஞ்செய்தேன். 24

தாதிபுத்திரனாய்த்திரியுமென்றவத்தாற்சாதுமாதத்திடையெய்து
மேதமிலெதிகள்வரமனைமெழுகியேவியதொழிலெல்லாங்கேட்ப
நீதியார்தவத்தோர்க்கினிற்படிந்துநியமமுற்றியபின்னர்ச்சமைத்த
வோதனமருந்திமிகுந்திடுமிலையினுச்சிட்டமளிக்கயானுகர்ந்தேன். 25

மாதவமுறயானெதிகளுச்சிட்டம்வழங்கிடவருந்தவென்மனத்தி,னே
தமற்றுயருமறிவுவந்துறமாதவன்கதையவரியம்பிடும்போ, தாதரவுடனு
மகிழ்ந்தியானேற்பவதுவெலாம்விரித்தெனக்கறையக், கோதின்மெய்ஞ்
ஞானம்படர்ந்திடயானேர்கொள்கொம்பாயுணர்ந்தனனன்றே. 26

வேதமாரெதிகண்மறையவன்மனையினீரிருதிங்கண்மேவியபின்
போதலுமவரைத்தொடர்ந்துதானேகப்பொறையுடையவரெனைமகிழ்ந்து
தாதிபுத்திரனென்றிகழ்ந்திடாதெனக்குத்தத்துவஞானத்தைமொழிய
வாதரவுடனாங்கவர்களையிறைஞ்சியகத்தினிற்றிரும்பிவந்தனனால். 27

தூயயோகியர்களறைந்ததத்துவத்தாற்றலங்கியவிருத்தியுண்டாயுந்
தாயினையொருவமனதிலாததனாற்றவஞ்செயுங்கருத்தினையறியே
னேயமோடவளோடுறையுநாளவளைநெறியுறுமறையவனேக்கிப் [ன்.
பாய்புனிற்றாக்கண்மாவனத்திடைபோய்ப் பால்கறந்தெடுத்துவாவென்றா
மறையவன்மொழியால்வநத்தினாவினங்கள்கறந்திடவல்லையிற்செல்லு
நெறியிடையரவுகடித்திடவவளுமிறந்திடநேமியோனருளா

லறிவுவந்தனாகவனைமடிந்தமைதானலனெனநினைந்தவனொருவிக்
கறையடியுழுவையிருளிகோளரிகள்கரடிசேர்கானிடையடைந்தேன். 29

மநிதர்களணுகாவரையுறும்வநத்தின்வல்லையினெய்தியான்றிரியத்
தினகரன்வெயிலாற்பசியுறவவனோர்கயத்தினிற்செலத்தினைப்பருகித்
தனியரசருகினிருந்தரிதியானந்தளர்விலாமற்கருதிடவென்
மனதுநின்மலமாயுறப்பரஞ்சோதிவந்துமுன்னின்றவண்மறைந்தான். 30

இருவிழிகளிப்பத்திருமகள்கொழுநனென்முனிற்றோன்றியேமறையத்
தரைவரத்திசைகளொருங்குறத்திரிந்துதயாளுவாமுராரியைக்காணாப்
பருவரலுறயான்பருவமோரைந்தாஞ்சிறுவனாதலிற்பரிந்திரங்கி
யரியுயர்விசும்பினடைந்தசரீரியாகியேயிவையறைந்தனனால். 31

தாதிபுத்திரனாயெழுந்தவிச்செனனந்தன்னினீயொப்பிலாதுயரு
மாதியாமெனைத்தானடைவதற்கரிதேயாதலாலிவ்வுடலகற்றி
யோதுதற்கரியவழிவிலாச்சரீரமுற்றெனையடைதிநின்னுளிற்
பீதியுற்றிரங்கேலெனவருள்செய்யப்பிரான்றனைச்செவித்தவனிருந்தே

வருடமோர்சதுரயுகஞ்சகிராமாய்வரமலரயற்கிரவாகக்
கருடவாகனன்றன்னருளினிலிழிவாமுடலினைக்கழித்துத்திவ்வியமாம்
புருடனாய்ப்பிரமன்றுயில்கொளமனையிற்புகுதும்போதவன்வயிற்றுற்றே
யிருடருபொழுதாருகமறுங்காறுமிலங்கியாண்டிருந்தனனன்றே.

சதுமுகனிரவிற்சகசிரசதுரயுகமொருப்படத்தரைவானத்
ததிகமாயெழுந்தவவாந்தரவெள்ளமகன்றிடவவன்றுயிறுறப்ப
வுதையமாகியபோதவன்மடிதன்னினுதித்தநாரதனெனும்பெயராய்க்
கதிதருமுராரிக்கடியனாயினனாலறிதிமாமுனியெனக்கழறும். 34

தாதிபுத்திரனாமிழவினிற்பிறந்துஞ்சங்கொடுசக்கரந்தரித்த
வாதிதன்சரிதையருந்தவரறையவழியுடன்கேட்டமாபலத்தான்
மாதவர்துதிப்பவயன்வயிற்றொன்றிவயங்கினேன்மாலடியவனா
யாதலின்வியாசமுனிவநாரணநற்சரிதையையறையெனப்பறைவான். 35

நற்றிலாதிருக்கத்துடர்ந்ததீவினைதானலியுமாறெனப்பலவுயிர்க்கு, முற்றநல்வினையால்விபவமுற்றோழ்ந்தநிலனுறமுடுகுநீரெனவே, பற்றுமாலார்க்குமுயலவேண்டுவெதிப் பரமநற்சரிதையைப்பரிவாற், ஈற்றுணர்ந்துரைப்பதுலகிற்றுல்லபமா மவையினைக்கழறுகென்றிசைப்பான். 36

அரிபெயர்நிறையவயங்குபாகவதமச்சுதனயன்றனக்கறைய
விரைமலருறுவோன்யான்செய்மாதவத்தால்விளம்பினனதுசனைவிரித்
யிருவினையகலச்சனனநோய்நிரையவிருளறவிருதயத்திலங்கித் [தே
திருவினாயகன்வந்துறப்பரனடியார்களிப்புறச்செப்பெனவறைவான். 37

வேதநான்கினையும்விரித்ததன்பொருளைவிழுமிதாயுணர்ந்துதேசவனே
யாதிமற்றவனையலாததெய்வங்களிறையெனநோக்கிய

ஞேதினேனெனவேமொழிந்தனியிதர நூல்களையுரைக்கிலையுயர்ந்த [ஞல்
யாதவக்குலக்கோன்சரிதையையியம்பென் றியாழ்முனிவிசும்பினேகின

இவையெலாமொழிந்தேயாழ்முனிவிசும்பினேகலும்வியாசமாமுனிவ
னவையறப்புலனைவிளக்கியேகாந்தசித்தனாய்நாரணன்பெயரிற்
சுவையுறவுயர்ந்ததுவாதசாக்கரத்தைத்துலங்கிடத்தன்மனத்தமைப்பப்
பவமகற்றிடவேபரமன்முன்றோன்றிப்பாகவதந்தனைப்பகர்ந்தான். 39

சீரிலாவியாசன்பதினெண்ணாயிரமாய்நிறைந்திடுசுலோகபாகவதஞ்
சுகமுனிக்குரைப்பவவனருள்சுரந்துதூயவாளபிமன்மைந்தனுக்குப்
பகிரதிக்கரைமேலெழுதினமதனிற்பயோததியமிர்தெனப்பகர்ந்தான்
சகலசாஸ்திரவேதத்தமர்பொருளைச்சவுனககேளெனமொழிவான். 40

ஆவுயர்துவசன்மடிந்திடத்தருமனறனுறத்திரிதராட்டிரனு
கிருபன்மாமகுடங்கவித்திடத்தானுமடிணவரசியற்றியேசிகரி
லருமறைமுனிவர்மகிழ்ந்திடச்செங்கோலவிருநவமர்ந்திடுநாளிற்
றரையினினுயர்ந்தசதாகதிதனையன்சார்ந்தனனுடனிவைபகர்வான். 41

இடரெமக்குறவஞ்சகம்பலவியற்றியிணையிலாத்துரோபதிதுகிலைக்
கடைகயிறெனவன்றுரிந்தெமைவனத்திற்கடியனுய்த்ததுரத்துநின்மதலை
படிபடுத்திடுமென்புயமிதுவெனுஞ்சொற்பகர்ந்தவனறிவுறுகுருட
முடிகவித்திவணினிருத்தியோவெனவேமொழிந்திடவவனுளந்தனனால்

தினமுநற்பவனன்றிருமகன்றனித்தவிடமறிந்திவையினைச்செப்ப [சி
மனமெலிந்துளையுந்திரிதராட்டிரன்முன்மறனிலாத்தருமன்வந்திறைஞ்
யினியனபலவுமியம்பவுமிடருற்றிருந்திடுமூத்ததாதையினைத் [ன்
தனையரைநினைந்தோவருந்தினையெனமன்சாற்றிடவவனிவைமொழிவா

விறலுடைப்பவனன்மதலைவந்துளையவிளம்பியவெள்கலையறையா
னறனருள்சுதனையவனியிலமர்செய்தாருயிரிழந்திடுமென்றன்
சிறுவர்கட்கிவணின்பரிவுடனுதகக்கிரியையான்செய்திடத்தனங்க
ணிறைவுறக்கொடுக்கினலனெனநவிலகிரிலானிவனென்றகன்றான். 44

அனுசர்கட்கிவையையறனருள்குமரனறைந்திடக்கேட்டிடும்வீமன்
சினமுறவிறந்தோர்தமக்கவர்பெறுஞ்சேய்திலமயமளிக்குவதன்றித்
தனையர்கடமக்குப்பிதாநடத்துவதுதருமமன்றெனக்குரித்தாகுந் [ருமன்
கனகமோடெவையுங்கொடேனெனப்பகுந்து கொடுத்தனனகவினுறுத

அறனுருதருமன்பரிசனன்புதல்வன்றனக்கவன்சொம்மெலாமளித்து
நெறிநிறைந்திடுநால்வருக்குநகனகங்கலன்களுநிறைத்திடமகிழ்ந்து
திரிதராட்டிரன்றன்சிறுவருக்கன்பாற்றிலமயமளித்தபின்பிண்டம்
நிறைவறவுதவிமறையவர்க்கொருங்குநிதியெலாமீய்ந்தனனன்றே. 46

சிறுவர்கட்குதககிரிசைமந்திரத்தாற்செய்திடுந்திரிதராட்டிரன்பாற்
கறையிடற்றரன்போற்சனன்றுகான்மதலைகமிவந்துருமெனவதிர்த்து.

மறமிலாதருமன்றனத்தையிவ்வினையால்வவ்வியேவறுமையைக்கொடுத்தி
புறவுபோற்பகைதீர்குருடவுன்வயிறுவளர்த்திவணுறுதியோவென்றான்.

தினமுமுன்மொழியைப்பவனனற்குமரன்செப்பிடவுளந்திமெந்த
மனன்முனர்த்தருமன்வந்துநல்லுரையைவழங்கவுமவுனனுபிருக்க
நினைவுவேறாகியிடருறவறன்சேய்நிகரிலாவுனக்கியான்செய்தி [ன்
வினையெதுவென்லாச்சமிரணன்புதல்வன்விளம்பியவீதெலாம்விரித்தா

அறனறவியற்றஞ்சுயோதனன்றனையான்பயந்திடுமெதிகபாவத்தால்
விறலுறும்பவனன்சுதனிகழ்ச்சியினைவிளம்பிடத்தருமயான்வந்தி
னுறுவனென்றறைந்தங்குதிட்டிரன்றடுத்துப்பலபலவுரைக்கினுமிராது
நெறியுறும்விதுரன்றுயர்கொள்காந்தாரியிவரொடுநகரைநீங்கினனால். 49

கந்தமார்கடத்தினயனமில்லவன்றன்கடிதினினவரொடுமேக
மைந்தர்கடடுத்தங்கிரங்கவுமறுத்துமதியினின்ஞானம்வந்தெழுநற்
குந்திதன்கொழுநன்றமையனைவணங்கிக்கூடவேசென்றிடநிகரி
லந்தணர்திலகமாயசஞ்சயனுமணுகினனவனொடுமன்பால். 50

தருமனுண்டிரங்கித்தந்தைதன்மூத்தோன்சார்ந்திடுவநத்திடைநிகரி
லிரணியமிலங்கவுயருமண்டபங்கணெழிலுறுமாளிகைபலவும்
விரைவினிலமைக்கவதனிடையவருமேவியாண்டனேகநாளிருப்ப
வரசர்களுடனேயறன்சுதன்றினமுமவ்விடத்தடைந்துமீடினத்தின். 51

தவமுயல்பவர்களிரணியமிலங்குஞ்சரியின்மாளிகையினிற்சார்த
னவையுறுமெனவங்குதிட்டிரன்வருமுன்னல்வருஞ்சஞ்சயனுடனும்
பவமறவெவருமணுகுதற்கரியபழுவத்தினடைந்தமர்தினத்தி
லுவமையில்விதுரனிவர்களையொருவிப்பலமிருகங்களோடுறைந்தான்.

விரைவினிற்றருமனிவரமர்வனத்தின்மேவியாண்டிவர்களைக்காணுன்
பருவறலுறவேபலவியோசனைகளந்தந்தப்பழுவத்தினெய்தி
யரியமாதவஞ்செய்யரசனேடனைவரடியினினிறைஞ்சியபின்னர்
சரியிலாவிதுரனிரலைமானினத்தோடுறைந்திடக்கண்டவண்சார்ந்தான்.

இரலையினினத்தோடமர்ந்திடுவிதுரன்றமையன்றனருள்சுதனிறை
ஞ்சி, யுரைபலமொழியவதற்கவனெவையும் விளம்பிடாதோடலுந்தரும
ன், றறையினிற்காலாற்றுடர்ந்திடவவனோர்தழைந்தபாதவத்தினிற்கோ
ட்டை, யிருகையாற்பிடித்தாண்யெரும்யோகத்தாலிமைப்பினிற்சிவனைக்
கழித்தான். 54

உயரும்யோகத்தாலொழித்திடும்விதுரனுவிபேரொளியதாயெழுந்து
தயவுடைத்தருமன்றனுவிடைப்புகுதவிறந்தவன்றனைத்தழல்வளர்த்தி
யியல்புறமுனிவர்க்கிவையுரைத்திடநீரிருவருமியமன்றனுருவாஞ்[ன்றே
செயலினன்மடிந்தோன்சிவனின்னிடத்திற் சேர்ந்ததென்றுரைத்தனர

தவர்களீதுரைப்பவவர்களையிறைஞ்சிச்சமன்சுதன்மூத்ததாதையினை
யவனியினயனம்புனனிறைந்திடவேவணங்கலுமவன்விடைகொடுப்ப

வுவமையினகரிபடைந்துசெங்கோலையோச்சிமாமறையவர்மகிழப்
பவமறவறங்களுயர்ந்திடவியலும்படியினையாளுநாடன்னின். 56

கரியுறுவனத்திற்கண்ணிலாவரசன்காய்கனிகந்தமுமருந்திச்
சரியிலாமதியிற்றயங்குமக்கினியகோத்திரஞ்சந்ததநடத்து
மூரனிலாமையினாலாற்றுமசமாரோபணம்பணவுயர்ந்திடுந்தழலை
விரவினவ்வநத்தினிகரில்காந்தாரிவிடுப்பவவ்வழல்பரந்தெழுந்த. 57

எரிபரந்தகன்றவனத்திடைப்புலர்ந்தவிந்தனப்புல்லிடையெழுந்து
விரைவினிலவரைவளைந்திடவரசன்விளம்புவனுரனுறுமவர்க
டரையினிவ்வழலின்மடிவதுபவமென்றறைந்திடச்சஞ்சயன்கடுகி
வரையினெய்திடநற்குந்திகாந்தாரியுடன்மன்னன்றழலிடைமடிந்தான்.

வனமுறுமெரியாலவர்மடிந்திடலுமாதவரவணிடையெய்தி
யனலிடையிறந்தோரத்தியையெடுத்தேயத்தினபுரத்தினிற்றருமன்
முனரடைந்ததனைவைத்திவையெவையுமொழிந்திடவனுசரோடரற்றிக்
கனலிடைமடிந்தவவரெலும்பதனைக்கங்கையினயமுறவிடுத்தான். 59

தீயினாலுயிர்போங்குந்திகாந்தாரிதிரிதராட்டிரனிவர்தமக்குத்
தூயனாந்தருமன்சுரார்ந்தியதனிற்றேய்ந்தயக்கிரிசைமந்திரத்தா
னேயம்வீறிடத்தானடத்தியந்தத்திப்பதியிடைநிவர்ந்திடுதிநத்தி
லாயிரநயனன்சுதனெனும்விசையனளக்கர்சூழ்துவரையிற்சென்றான்.

துவரையினடைந்தவிசையனப்பதியைச்சூழ்ந்துசாகரமழித்திடலு
மவனியினரசர்மடிந்திடத்திருமாலழிவில்வைகுந்தத்தினெய்தத்
தவர்மகிழ்ந்திடமாமதுரையினிலங்கவச்சிரன்றனைமுடிகவித்துப்
பவமுறுதருமனடியினினிறைஞ்சிப்பருவரலுடனிவைபகர்வான். 61

தரையினினெதுவின்குலத்துளார்முனிவர் சாபத்தின்மடிந்திடப் பரம, னிரதமீதிலங்கியெழில்கொள்வைகுந்தத்தெய்தினனென்றுபற்கு ணன்று, னுரைசெயத்தருமன்படியின்வீழ்ந்தரற்றிலோகநாயகன்றனைப் பிரிந்திவ், வரசினைநற்றியமர்கிலேன்றவத்தினைடைவனென்றமைந்திடும் வேலை. 62

விலையுறக்கொடுத்துக்கொளுமனையதனின் விழுமியநிதியினைக்கண் டே, யிலங்கியமறையோன்றனக்குமுன்விற்றேன் றனையிதுகொள்கென வவன்றான், றலமுறுதலமுமுனக்குறுமெனவே தருமன்முன்னிருவரு மெய்தி, நலனறுமிலையைநவின்றிடவரசனுளை வாதீர்ப்பனென்றறைந் தான். 63

அரசனீதுரைப்பவிருவருமகன்றங் கற்றைநாளொருவிடவுயருந், த ருமன்முன்னனுகி மனைகொளுமவனித் தனமெனக்கெனத்தலம் விற் றேன், னிருநிதிபவனிற்கண்டெடுத்தமையா லெனக்கென வியம்பிடக்கே ட்டு, நிருபர்கோன்மிகவுநகைத்துமாதவரை நோக்கியேநிசழ்த்தலுற்றன னால், 64

னென்னவித்தனத்தைச்சுரைபடுமோடுநிகரெனவிழ்ந்தவரின்றென்
முன்னரினிதனைவிரும்பியேவழக்குமொழிந்தனர்முறைமையைநடத்தி
யின்னலைக்கடிந்தான்யானுமிந்நிதியைக்கவர்ந்திடவிச்சையாயினனுந் [ன்.
துன்னுதீவினையையறுத்திடுந்தவத்தீ ரிவைதெரிந்திடச்சொலுமென்று

நலனுறுமரசனிவைநவின்றிடலுமற்றவரவன்றனைநோக்கிப்
புலனுறுநிருபதுவாபரயுகந்தான்போயறன்மெய்நெறியழிக்குங்
கலியடருகமின்றுசையினாலேகருத்தினாற்றன்மதியெவர்க்கு
நிலையுறவமருமெனமனநடுங்கியனுசரோடிவைநிகழ்த்தினனால். 66

உலகநாயகனுமெமக்கிடர்களைந்தவுத்தமன்வைகுந்தத்துற்றான்
கலியுகம்புகுந்ததினிநிலனாளுங்கருத்திலேன்கேடிலாத்தருமான்
மலரடியடையவனத்திடைப்போவனெனவவர்யாமும்வந்திடுவேம்
புலனுறுமரசவெனப்புகன்றிடலும்புரவலன்மகிழ்ந்தனனம்மா. 67

தரையையாண்டிடவாண்மையர்பரிச்சித்துசிரசின்மேற்சுடிகையைச்சாற்றி
யிருநிதியாவுமிருபிறப்பாளர்க்கீய்ந்துதன்னனுசர்களுடனும்
விரைவினிற்செல்லுநெறியினில்லாமலிராதுதான்மேவிடும்படியே
யருமறைநெறியான்மகாபதவிரதஞ்சங்கற்பஞ்செய்தகன்றனரால். 68

அனுசர்களுடனுமகாபதவிரதஞ்சங்கற்பமடைந்திடுந்தருமன்
றனியகன்றுயருமிளைஞர்கள்சூழத்துரோபதியுடன்வனத்தேக
வினையறுமறலிதானுமோர்சுவானாய்விளங்கியவாலினைக்குழைத்தே
தனைநிகரிலாதநிருபர்களுடனேதரையிடத்தேகியதம்மா. 69

தரையினிலளப்பில்வரைகளுநதியுந்தடாகமும்வாவியுங்காவுங்
கரியரியிரலையுழைமரைகரடியுழுவைசாகாமிருகங்கள்
கிரியினங்கவரிவிடமுமிழரவுங்கிளர்ந்தெழும்பழுவங்களொருங்கு [தார்.
விரைவினினிகழ்ந்த முனிவர்சாபத்தான் மெலிகுவாரிடரெலாந்தவிர்த்

அரியினைமனத்தின்வழுத்தியங்கெங்குமவனியினிராமனில்லாமல்
விரைவினினநேகந்தினமொருவிடவேமேவிடவிதிவழியதனா
லுரனறநிலத்திற்றுரோபதிமடிந்தாளதற்பினரொளிகொள்சாதேவன்
றரையினினிறந்தானதற்பினர்நகுலனுயிர்விடத்தனஞ்செயன்மரித்த 89

தூயபாஞ்சாலிசுசிகொள்சாதேவன்றலங்கியநகுலன்மாவிசையன்
சீயமாம்புழைக்கைசித்திரகாயஞ்சேர்வனதிறந்ததற்பினரின்
வாயுசேய்நிலத்தின்மடிந்திடத்தருமன்மனத்திடர்மலிந்திடக்கரநீண்
னேயமோடெடுத்துவெரிநிடைச்சுமந்துநெறியிடையிரங்கினனால். 90

ஆவிபோமனுசன்றனைச்சுமந்தேகுமறன்சுதனுங்கசநின்கென்
விவ்வுடலினிற்பயனென்செத்தபாதவங்கிளைத்திடுமோவிதுதான்
முணர்ந்தநீயிடரைக்களைந்துமூவுலகமும்படைத்த, வுகையாண்மன்ன
ரடைதியிச்சவத்தைத்தெரிசியெனவிடுத்தவன்சென்றனன்மாதோ. 91

அனுசர்நால்வருங்கற்புடையபாரியும்வீழ்ந் திறந்திடவறனருள்குமரன், றனியனாய்ச்செலமாநகரினுந்தடங்கித் தாணியிற்சென்றிடுஞ்சுணங்கன், பினரின்வால்குழைத்துத் தொடர்ந்திடவுலப்பில் பிறங்கல்சேர்வனமெலாமிகழ்ந்து, வினையறு திருக்கேதாரமாந்தலத்தின் மேயினன்றருமரூபவனே. 74

காவலன்றிருக்கேதாரமாந்தலத்தைக்கடந்திடுமுரனிலாதயரத், தேவர்மாமுனிவர்திரண்டுவானதியின்செலத்துநீராடியோண்டருவின், பூவின்மாமாரிபொழிந்தவணிலங்கு விமானமேற்போதுதியெனவே, யாவலினெனைவிட்டகல்கிலாச்சுணங்கன்றனைமுனரேற்றுமென்றறைந்தான்.

மனனிவைமொழியநகைத்துவானவர்களறைகுவார்தருமமெய்மலியத்
தினகரனெனப்பாருலகினின்வயங்கிச்சீதரன்பத்தனுசையினால்
வினையறவிவணியடைந்திடவடையும்விமானத்திற்சுடலையிற்புரண்டு
துனியுறுசுணங்கனாகுமோவெனவத்தூயனுரிருபர்கோன்பகர்வான்.

அத்திமாநகரமுதலதாயெனைவிட்டொருவிலாதனுசர்களிறந்துஞ்
சுத்தமார்மனமோடுணைவையுந்துறந்துதுடருமிச்சுணங்கனேமுத
சித்திரமுறமிவ்விமானமீதியானுஞ்செலேனெனநகைத்துயரிமையோர்
மெய்த்தவர்மகிழச்சுவானுருவொருவிவிளங்கியமறலியீதறைவான். 77

நீதியும்பொறையுந்தருமமுமறிவுநிறைந்திடுமிவன்றனைநிகராய்ப்
பூதலந்தனின்வான்மிசையினினெவருமிலரெனவந்தகன்புகழ
மாதவர்துதிப்பவிமானமேற்றருமன்வயங்கியமறலிதன்பதத்திற்
போதலுஞ்சொற்கத்தியல்பையுநோக்கிநரகுளார்புலம்பவுங்கேட்டான்.

சரியிலாச்சுவர்க்கத்தனுசர்களுடனுஞ்சுயோதனன்றங்கிடநோக்கி
நிருபரெண்வீமன்விசையன்மாநகுலனிகரில்சாதேவனோடிவர்க [சர்
ணரகின்வீழ்ந்தரற்றுமொலியினைக்கேட்டுநலனுறுநெறிகொளென்னனு
நிரையம்வீழ்ந்திடவுநெறியிலாப்பகைஞருயரவுநீதியோவென்றான். 79

தருமமேமுயல்வார்நரகிடைவிழவுஞ்சற்குணமிலாதவர்சுவற்க, மருவவுமியற்றமறனிலாவிவணின்வைகிலேனெனமனன்றிரும்பித், தரையிடையுறவேனெனத்தவர்நகைத்துத்தருமநீயமர்க்களத்தன்று,குருவதைவயுரைத்திடுஞ்சடத்தின்கொடுமையினடைந்ததென்றறைவார். 80

வவன்
மெய்தி, தையுறவேகுரகதத்தாமாவதமெனக்கூறியசெடமா
தான். னிற்கொடுமையுறுதலானிரரிலுத்தமராகுமுன்னனுசர்
ழ்நதரற்றுமொலிகள்கேட்பதுவுநெறியிலானுயர்சுவற்கத்தின்
அரசனி. னிற்காண்பதுமாயமனவினிநோக்குதியென்றார். 81
ருமன்முன்னு
ரோ, னிருநிதிப ரிவைமொழிந்திடலுமறனிலானன்பினர்நோக்க
ட்டு, நிருபர்கோன் னத்தினின்வீமனிந்திரன்சிறுவன்மாநகுலன்
னல். ங்கிடக்கவரிசாமரைத்தெய்வநாரியர்க
சத்திடவுயருமெழிலினைக்கண்டுளமகிழ்ந்தான்.

தருமனங்கிளையவனுசர்கள்சுவர்க்கஞ்சார்ந்திடக்கண்டபினெறியி
லரவுயர்துவசனிளைஞர்கள்சகுனியடைந்திமொழிந்திங்கோர
நரகினினழுந்துங்கொடுமைகண்டிடுமுன்னயனிலாதவனுநற்குந்தி
திருமகன்வதனநோக்கலான்கிருமிசெறிந்தசியிடைமுழுகினனால். 83

நிரையம்வீழ்ந்தழுந்துமறனிலாதவனை நெறியுளான்றயாவுடனோக்கிப்
பருதிகாணிருள்போனிலத்திடையியற்றம்பவமெலாமறவுயர்சுவர்க்கத்
துரககேதனமன்னிளைஞர்களுடனுன்னியர்ந்திடவுண்மகிழ்ந்தருளுந்
தருமனல்லனுசர்துரோபதியுடனுஞ்சத்தியலோகத்தைச்சார்ந்தார். 84

சத்தியவிரதனிளைஞர்களரிவைதன்னுடன்சத்தியலோகத்
துத்தமமுனிவரெதிர்கொளவடைந்தேயுயர்ந்தகாருணியவைகுண்டத்
தத்தனுமுராரியடியினின்வணங்கியளப்பரும்பரமவானந்தச்
சித்தியுற்றிடவேதிசைமுகனுவப்பச்சிறந்தினிதிருந்தனனன்றே. 85

அறனுறுதருமனனுசர்களுடனுமழகியதுரோபதிவரவே
பிறிதிணையிலாதமுகுந்தனைத்துதித்தப்பிறங்கியமகாபதவிரத
நெறியின்மாவிந்தமடைந்ததற்பினரினிகரிலாவபிமனற்சிறவன்
முறைமையாலுலகமனைத்தையும்புரந்தான்முடிகதிரெனச்சிரமிலங்க.86

உத்தரன்மகளைவதுவைசெய்தயருமுத்தரையருளியகுமரன்
சித்தசனெனவேவயங்கியசெனமேசெயன்முதனால்வரைப்பயந்து
சுத்தமாதவர்கடுதித்திடத்துரகமேதயாகத்தினைநடத்தி [தான்
யெத்திசைத்தலத்துமிலங்குமன்னவரைச்செயித்துலகெங்கணுந்திரிந்

அரசரைத்திறைகொண்டுலகெலாந்திரிந்தவழகியவுத்தரைகுமரன்
றருமதேவதைநற்பசுவடிவாயோர்தாளினின்றிடவருகலிய
னிருபர்வேடத்தைத்தரித்தொருகாலாலதுதனையுதைத்துநின்றழிநின்
றரிதிருப்பதத்தாற்சனித்திடுநலத்தாலவையினையறிந்தனனம்மா. 88

தலமிசையொருநாளினினிறும்பெற்றந்தருமதேவதையெனுஞ்செயனு
நிலமிசையதனையுதைத்துநின்றவன்றனெறியிலாக்கலியனென்பதுவு
நலனுறுமரசனறிந்துவெஞ்சினத்தானவையறவவன்றன்மேல்விசிகஞ்
சிலையினிற்றொடுப்பவெருவுவோன்றனைநீயஞ்சலையேகுதியென்றான். 89

வெருவியகலியனரசனானமருமிடமெதுவிளம்புகென்றறைய
நிருபர்கோன்யான்காத்திடுமியற்புவியைநீங்கிநீசுரைபருகிடுவோர்
தரையினின்வலையர்சூதினைப்பொருவார்தையலார்தமனியமென்றீண்
டுரைசெயுமைந்தனிடத்தினினமர்தியெனவவனவணினுற்றனனால். 90

தருமதேவதையைத்தவமுயர்சவுசஞ்சத்தியந்தயையிவைநான்கென்
றுரைசெயுந்தாளாலியான்புரந்திடுமிவ்வுலகினினமரெனவிதுதான்
மருவநீண்மரகதன்மடிந்திடச்செங்கோல்வளர்ந்திடவுலகையாண்மன்ன
னிருகயாத்திரையைவிரும்பிவெம்புரவிமேவியேதிரிந்தனன்மாதோ. 91

வன முறப்புரவி வெரிகிடைவயங்கிவருமவன் மத்தியாநத்திற்
றினகரன் கிரண முதிர்வுறவணிற்சிறந்தவாங்கிரமாமுனியைப்
புனல்பருகிட நீ தருகியென் றிறைஞ்சிப்புகலவுமவுனமாயிருப்ப [தான்
வெனையிகழ்ந்தனனென் றவன் கழுத்திடையினிறந்திமெரவினைப்பிணித்

மாதவன்கழுத்தின் மரித்திடும்பணியைப்பிணித்துமன்னவனகரடையத்
திதிலாமுனிவன் குமாரனுண்டெய்திச்சினந்திறந்திமெரவினையென்
றுதைகந்தரத்தினிணைத்தவனேழுதினந்தனிற்றெக்ககன் கடித்துப்
பூதலமிசையின்மடிகுவனெனவேசபித்தனன் பொறையெலாமகல. 93

மனரெனுமபிமன் மதலைதானேழு தினந்தனின்மடிந்திடும்வண்ண,
மன லுமிழ்ந்திடுதெக்ககன்கடித்திடவேயறைந்திடுஞ்சிறுவனே முனிந்தம்,
முனியிவன்சபித்த வினையினையரசன் முன்னரின்மொழிகுதிரெனத்தா
ன், றனைகர்த்திமொதவர்களையேவ வவர்கள்போய்த்தராபதிக்குரைத்
தார். 94

சரியிலாங்கிரன்கழுத்திடைமரித்த சற்பத்தைப்பிணித்தனையென்
றுண், டெரியுறசினத்தோடவனருள்சிறுவ னேழுநாளதனினியிறக்க,
விரைவினிலுயர்தெக்ககன் கடித்திடவே விளம்பினனென்றவர்மொழிய,
வரசர்கோனகைத்து மனையினைத்துறந்து சுரர்நதிக்கரையின் மீதமர்ந்
தான். 95

அடிசினீர்கனிகா யெவைகளுநுகர்வில் விரதந்தையடைந்திடு மர
சன், படியொடுககன மளந்தருள்பரமன் பதத்தினிலடையவிச் செனன,
விடரினைக்கெடுக்க நலனெதுவெனத்தா னெனுமுனரென் கணனென
வும், விடையவனெனவு மிலங்கிடுமுனிவர் விரைவின்மன்னவன் முன
ரடைந்தார். 96

அத்திரிவசிட்டன்சியவனன்கபிலனங்கிராபராசரனவன் றன்
புத்திரன் பிருகுகவுசிகன்பரசுராமனாரதன் புலத்தியன்வீ
றத்தியைநுகர்வோன்வருதவவசிட்டனரியகண்ணுவன்பரத்துவாசன்
சித்தசன் றனைவென் றிடுமெயித்திரையன் கவுதமன்றேவலமுனிவன். 97

சவுமியன்மோதாதிதியுசத்தியன்போதாயனன்சாத்துவான்கவர்க்க
னுவமையற்றிலங்கிந்திரப்பிரமதன் சிருறவயங்கியபிரபலத
னவமகற்றியநல்லாழிசேனன்காமனையிடர்சதானந்தனுடனென்
சிவனயனெனவுந்திகழுமாதவர்கள்சேரவுத்தரைசுதன்பணிந்தான். 98

அருமறைமுனிவர்வரவிறைஞ்சிபமன்னரசந்ததவர்களையிருத்திச்
சரியிலங்கிட முனிவருடனையன்சபித்திடத்தக்ககன்கடிக்க
வருமுனரரிதன்பததில்யானடையுங்வகையினையருளுவீரென்று
திருபர்கோனுரைப்பவவன்றனைநோக்கிநெடுந்தவர்நிகழ்த்தலுற்றனரால்.

அரசநீசரியின் முராரிதன்பதத்தை யடைந்திடவேண்டின் மாதவத்
தை, விரைவினின்றறையினியற்றுதியெனுஞ் சொல்விளம்பினர்சிலரும்

யோகத்தை, மருவுதனலனென் றுரைத்தனர்சிலர்கண் மறையவர்மகிழ்
ந்திடமணியா, விரணியமவனிமுதலமாத்தான மிசைந்திடென்றறைந்த
னர் சிலர்கள். 100

நிகரிலாமுனிவர்பலபலவுரைப்பநிருபர்கோன்றிகைத்திடும்வேலை
சகசிரகிரணத்தினகரனவிர்போற்றயங்கியேசோடசவருடம்
புகுமிளங்குமரர்வெல்குமெய்கவினுற்பொலிந்திடவரியடிமறவாச்
சுகனலமுனிவர்மதலையர்பரிவாற்சூழ்ந்திடவரசன்முன்னடைந்தான்.

சுகமுனியவணினடையமாதவர்களெழுந்திடத்தூயரொரீஇயரசன்
மிகமகிழ்ந்தவன்றனடியினிறைஞ்சியருக்கியங்கொடுத்தவண் விளங்கு
நிகரிலாதனத்தினிருத்தியபினரினியிவணடைந்திடயான்றன்
சகலபாவமுமற்றுயர்ந்தனனெனுஞ்சொற்சாற்றியீதறையலுற்றனனால்.

அரியருளதனாலெனக்கதிபுக்குதவடைந்தனையாதலிலறிஞ
கருணையார்முனிவன்மதலைசாபத்தாற்கடியதெக்ககன்வருமுன்னின்
றிருமகள்கொழுனனடியிணையடையுநலன்றனைச்செப்புதியெனத்தா
னுரைசெயுமவனைப்பரிவினானோக்கியுத்தமச்சுகனிவையுரைப்பான். 103

எரிவளர்ந்திடவும்பருப்பதத்திருந்துமிம்பரினயத்திடைப்படிந்துஞ்
சருகினைப்பொசித்தும்பவனமேயுணவாய்த்தயங்கிடச்செய்திடுந்தவமும்
மருமறைமொழியாலியற்றிடுமகமுமருளினுவ்தவுதானமுமால் [வான்
சரணிடையுறுத்தா தவன்றனரையியற்றுஞ் சரிதைகேட்டிடுதியென்றறை

கயவனரியரிக்கநயவரைக்காக்கக்காசினியிதனின்மச்சியமா
யியல்புறுகமடம்வராகங்கோளரிவாமனம்பரசிலங்குபாணியுமாய்த்
தயரதன்குமரனலாயுதனசோதைதனயனுமாகிமேவுயுங்கு
மயமதாய்ச்சனகசனந்தரசனாதசனக்குமாரப் பெயராகி 105

அன்றியுநரநாராயணர்கபிலனிடபனாரதனயக்கிரீபன்
வென்றிசெய்தத்தாத்திரேயன்மோகினிமின்வேள்வியின்பிதுவியாசனு
நன்றிசெய்தன்மந்திரியுயர்பவுத்தனிவர்களாய்நலநிலனோங்கு [மாய்
மன்றல்சேர்துளபத்தரிவருசரிதைமகிழ்வுடன்கேளெனப்பகர்வான். 106

துட்டராமசுரர்தமைச்செகுத்திடவேசுரர்மகிழ்ந்தியாந்தரும்வரத்தைக்
கட்டுரையெனவென்னுடலுறசீவன்கழிவதென்றெனக்கன்னவிரண்டி
விட்டிடுமெனலுமுபையநாழிகையில்விமலனைத்துதித்துவீடுற்றான் [ன்
கட்டுவாங்கனுனக்கேழுநாளுளதாற்கதியரிதோவெனவறைவான். 107

சரியிலாமுனிவரறைந்திடுபுராணம்பதினெட்டிலிரசததாமதங்கள்
மருவிடுபுராணந்துவாதசமவைதாமருளொழித்திடாதுசாத்திகமா
யுரைசெயுமிருமூன்றாகியபுராணத்திலங்கியேயுயர்ந்தபாகவத
மரசயாணியம்பக்கேட்டுநீயரியின்பதத்தினையடையெனவறைவான். 108

விதுரனுக்குயர்ந்தமறைநெறியறிவுவிளங்கிடமலர்மிசையெழுந்த
சதுமுகனிகராகியமயித்திரேயன்சாற்றியவரிசரிதையினைக்

சதமறத்திலங்குநிருபநீசெட்டியெனக்களிப்புடன்மனன்முனவன்
பதமிசையிறைஞ்சியிருகைசேசரத்திற்குவியவேபகர்ந்தனனன்றே. 109

மதிகொள்வேணியனைநிகர்மயித்திரேயன்மதியிலாச்சுயோதனனகர்வாழ்
விதுரனுக்கரியின்சரிதையைவிளங்கவிளம்பியவாறெலாம்விரித்தே
சதமறையுதவுமுனியுவந்தளித்ததனையனீசாற்றுதியெனலுஞ்
சுதையினுமினியவிரதமன்செவியின்மடுத்திடச்சுகமுனியறைவான். 110

தருமனுக்குரியநாடிரந்திடவேசதுமுகனுடனுலகளித்தோ
னரவுயர்துவசன்பதியடைந்திடவேயறனுறுவிதுரனங்கணுகி
யிருபதமிசையிற்பணிந்தெழுந்தாடியிருசணீர்புரளத்தன்னில்லிற்
சுருதிநாயகனைக்கொணர்ந்தனமளிப்பச்சோதிநெஞ்சுவந்தருந்தினனால்.

நீதியிலரவத்துவசநீதுணர்ந்துநெறியுறவிதுரனைநீயென்
னேதனமருந்தியுலப்பிலாச்செல்வமுறவயங்கியதெலாமுணரா [தாய்
தேதமுற்றிடவென்பனைஞர்தூதுவனையிறையெனவிறைஞ்சியேபுகழ்ந்
தாதிபுத்திரனுதியவிழிகுலதவென்றுகணசிவந்துசாற்றினனால். 112

அந்தகன்சிறுவனந்தமில்குறாமொழியினையறைந்திடவிதுரன்
சிந்தைநொந்துயர்ந்தனுவினைமுறித்துதநீர்த்தயாத்திரையினைவிரும்பி
யந்தரநதிகோதாவிரிவேணியளப்பிலாவயத்தினிற்படிந்தே
சிந்துவையுறவேதிரையெறிசரசுவதியினைச்சேர்ந்தனனன்றே. 113

நாரமார்சரசுவதிநதியணுகும் வேலையின்ஞான்நற்றீர்த்தம், நேரவுத்த
வன்றூன்வரக்களிப்புடனே நிலத்திடைப்பணிந்துகைகூட்டிப், பூரியவர
வத்துவசன்றன்மதியாற்றமரொடும் போர்க்களத்தவிந்தான், சீரின்மற்
றவனை யளித்தவென்முன்னோன் றுயரெங்ஙன்றீர்வனென் றுரைப்
பான். 114

அந்தணக்குருமந்தாகினிபுதல்வனுடனியானறைந்திடுமொழியை
நிந்தைசெய்துயர்ந்ததுரோபதிதுகிலையுரிவித்துநீசனுமெழுந்த
மைந்தனைத்தடாதங்கவனுமெகிழ்ந்தமதியிலென்முன்னவன்றுயரச்
சிந்தவினமிழ்ந்தியழுங்கினனெனவேயுரைத்தவன்செப்பலுற்றனனால்.

விதிநெறியெவர்க்குமிலக்குதலரிதாமெனத்துயரொருவியேவிளங்கு, மதியெனத்திகழுமதியுடையறிஞவாரிசூழ்துவரையின்வயங்கு, மெதுகுலத்தெழுந்தவிறைவனுமூராரியினையில, விதர்ப்பர்கோன்பயந்த, சுதைதருமொழிபாளுடனும்வீற்றிருந்துதுலங்கினனோவெனச்சொல்வான்.

நிகரிலாவரியைப்பயந்ததேவகிமின்னெறியினுலுயர்வசுதேவன்
றிகழ்மனமதனனனிருத்தன்சாம்பன்சிறந்தவக்குரூரன்சாத்தகிம
னகமெனவிலங்குமாலாயுதவிறைவனலமுறுமுக்கிரசேனன்
சுகமுறவவனிற்றுலங்கினரோவென்றுரைத்திடவுசதவன்சொல்வான்.

உததியிற்றுயிலுமுத்தமன்வசுதேவன்சுதனெனமேவோங்கி
மதமுறுமசுரர்நிருதர்வேராறுத்துமதியிலாச்சுயோதனன்றனோ

டதிரதர்குழுவுமடிந்திடவைவர்தமக்குறனெல்லவுமழித்தே
யெதுகுலம்படியினிறந்திடமுனிவர்சபிக்கவேயியற்றினனம்மா. 118

தவர்களங்கறைந்தசாபவெவ்வினையாற்றமரொடுமெதுகுலத்தரசர்
துவரையையொருவிநதியிடையணுகித்துன்மதியுறமதுப்பருகி
நவையுறவெவருழ்விரோதமாய்மடிந்தார்நாரணனலாயுதனுடனே
சிவனயன்றுதிக்கவுயர்வரவுயரும்பதத்திற்சேர்ந்தனனெனவறைவான்.

எதுகுலத்தரசர்மடியுமுன்முராரியெனையழைத்தேழுநாளதனி
னுததிநீர்வளைந்ததுவரையையழிக்குநீரருய்யவேயுயர்ந்து
வதரியாச்சிரமத்தடைகுதியெனவேயிதவுபதேசமும்வழங்கிச் [கவே
சதுமுகனுணராப்பதத்தினெய்தினனென்றுரைத்தனன்றரைக்கணீரு

உத்தவனிவையையுரைத்திடக்கேட்டேயொடுங்கியமெய்யனுவுலர்ந்த
பத்தனும்விதுரனயனநீர்பெருகப்பகருவான்பரமனீயிணையி [ய்ச்
லத்திமாநகரத்தடைந்தபோதெனதுமனையிடையமர்ந்தியான்மருட்போ
சுத்தனுய்த்துலங்கவிருந்தனமருந்துஞ்சோதியேநமவெனச்சொல்வான்.

நெடியவமுகுந்தபராபரமாயநின்மலவுன்றனைப்பிரிந்தே
யடியனின்சரணையடையுமாறெங்ஙனறிகிலேனெனவரற்றிடுவோன்
சுடருறுகதிர்போற்றுலங்குமெய்ஞ்ஞானத்துய்யவுத்தவன்றனைப்பணிந்
யிடரறவரியின்பதத்தியானமதாயிதவுபதேசஞ்செய்யென்றான். [தே

விதுரனிம்மொழியையறைந்திடக்கேட்டு விளம்புவானுத்தவனசோ
தை, சுதன்மயித்திரேயன்றனையழைத்தெனக்குத்துய்யநல்விருந்தனம
ளித்தோ, னதியெலாம்படிந்துன்முனரின்வந்தடைவனலனுறநீயவன்ற
னக்கே,யிதவுபதேசமுதவெனப்பணித்தானென்றுமாவதரியையுற்றான்

வதரியாச்சிரமத்துத்தவனடையமருளெலாமகற்றியவிதுர
னெதுகுலத்திறையையுளத்திடையமைத்தேயிணையில்பாகீரதியென்னு
நதியிடைமறையோதியமயித்திரேயநற்றவன்றாளினில்வணங்கச்
சதுமுகனிகர்மாமுனியுளமகிழ்ந்தேயிவையிவைசாற்றலுற்றனனால். 124

நிலமகள்பொறாதவசுரராக்கதர்கணீசராமரசர்கள்பலருங்
குலனொடுமடியவதைத்தெதுகுலத்தைமுனிவராற்குறைத்திடுங்கோமா
னிலகியபரமபதத்தினேகுதன்முன்னென்றனைநோக்கியேயுனக்கு
நலனுறவுபதேசஞ்செயவிதித்தானென்றிவணவின்றனன்மாதோ. 125

அரிதிருவுளத்துக்குவப்பதாயுயர்ந்தவடியனும்பரமபாகவத
சரியிலையுனக்குச்சகலலோகத்துமெனமுனிசாற்றிடவிதுரா
னிருநிலமிசையினிறைஞ்சியேதுதிப்பவிருத்தியென்றவன்றனக்கினிய
பரமநற்சரிதையுரைத்தனனெனவேசுகமுனிபகரலுற்றனனால். 126

அரிதிருவவதாரத்தினினியல்புஞ்சிருட்டியுமண்டத்தின்செயலுஞ்
சுரர்நரர்பசுதிரியக்குத்தாபரசங்கத்தினிற்றுலங்குவதெலவும்

நிரையமுஞ்சுவர்க்கநிலைமையுமுத்திநெறியையுநிகழ்த்தினனதனை
விரிவுறத்தெரியமொழிகுவனெனவேசுகமுனிவிளம்பலுற்றனனால். 127

அரிசிறுவனுக்குப்பகரவேயயனுரசமுனிக்கறையமற்றவன்ற
னுரைசெயவியாசன்விரித்தபாகவதவொள்ளியஞானமெய்ப்பொருளைத்
தருமயித்திரேயன்விதுரனுக்களியாற்சாற்றியசரிதையைமொழிவ
னிருபனீமகிழ்வோடுணர்ந்தநற்கதியின்வயங்கெனநிகழ்த்தினன்மாதோ.

சுகமுனியிவையையுரைத்திடக்கேட்டுத்துயரறுமனன்மிகமகிழ்ந்து
நிகரில்பாகவதப்பொருளினலடியேன்கதியுறநிகழ்த்துதியெனவே
சகலமாதவருந்துதித்திடமுனிவன்சாற்றியசரிதையையளியாற்
சிகியுறுமகஞ்செய்சவுனககேட்டியென்றருதன்னுரைசெய்வான். 129

வேறு.

குண்டினமாபுரியின்வருகோதைதனக்கரிசரிதை
யண்டர்முனியறைந்ததுவுமவள்முதலாமரிவையரை
வண்டுவரைமாமுகுந்தன்மணந்துகலர்தமைவதைத்தே
யெண்டவர்தம்பரமபதத்தெய்தியதுமியம்பலுற்றும். 130

நைமிசாரணியப்படலம் முற்றிற்று.

௲ திருவிருத்தம் - 291.

## 3 - வது, ஆற்றுப் படலம்.

வாமனன்மதுசூதனன்னனுருத்தன்மாதவனச்சுதன்
பூமனன்னமிலங்குமார்பினன்மாயன்மால்புருடோத்தமன்
காமனையனையானனன்னுயர்காசிதன்னின்விளம்பிடு
நாமனாரணனேமிநாயகனுதனென்பவரடியனுன். 1

நீதியானவிதியமமெய்துவிதர்ப்பனுகியநிருபர்கோ
னேதலார்களையமரின்வென்றுயர்சிலையனெவ்வுலகங்களு
மோதவீசியபுகழையுற்றவனரசியற்றியவுண்மையாற்
பூதலங்களினெழிலியெண்டிசைபொழியுமாறதுபுகலுவாம். 2

வேறு.

அண்டர்கோனயிராபதமேனியின்
மண்டியேமகராலயமேவிநீர்
மொண்டுமீண்டுமுகுந்தனிறமெனக்
கொண்டல்வானிற்குலாவியகொள்கையே. 3

செய்யவாயரிசென்றன்றரக்கர்மேல்
எய்யும்வாளிகளெண்டிசைபோர்த்தபோல்
வையம்யாவுநிறைந்திடமாமழை
பெய்தவோங்கும்பிறங்கல்கள்மீதரோ. 4

பல்லியங்கள்கறங்கப்பரந்தவேல்
வில்லிடக்கையின்வீசியரக்கர்க
ளெல்லையில்கணையெய்தனரென்பபோற்
செல்லெழுந்துபொழிந்தனதிக்கெலாம். 5

செலஞ்செலம்பரஞ்சேர்ந்துபனித்திடச்
செலஞ்சிலம்பிச்செகதலத்தாறதாய்ச்
சலஞ்சலந்திகழ்சாகரமீதுறச்
சலஞ்சலம்மெனவேதமரித்ததே. 6

வரையினூற்றுமரங்கள்முறித்தெறி
திரையுறப்பொன்செழுமணிவாரிநற்
கரையடர்த்துக்கலித்துக்கடுகியே
தரைமடுத்தசழ்ந்தோடுவதண்புனல். 7

ஞானமேவுங்குறிஞ்சியைநண்ணிநற்
கோலமுல்லையைக்கொள்ளைகொண்டேகியே
சீலமாமருதந்தனிற்சேர்ந்துநீள்
வேலையாரமடுத்ததுவெள்ளமே. 8

உம்பரஞ்சனவும்பனிறைந்தெனப்
பம்பிநாரதரும்பயம்பெயயவே
யிம்பர்மாநதியெண்ணிலவீர்ம்புன
லம்புராசியதிர்தரச்செல்லுமால். 9

குலங்கெடுத்தரசன்வெஃகிக்கொள்பொருள்
பொலன்கலன்கனகம்பொறியோடுமெய்
கலங்கியோடிடத்தானுங்கழிவபோல்
விலங்கலுள்ளகொண்டேகியவெள்ளமே. 10

வாளைதேளிவரால்கயல்பாய்ந்திட
நாளிகேரங்கதலிநற்பூகத
மூளுமாசினத்தோல்கள்முடங்குளை
யாளியும்வலித்தேகினவாரியின். 11

தத்துநீருறுசேல்கயருவிவெண்
ணத்திரோடலரும்மலருந்நல
னித்திலமெறிந்தேநிலமாதணி
யுத்தரியமும்போற்பொலிந்தோடுநீர். 12

காவினும்வயறன்னினுங்கானினுந்
தாவியும்மதிற்றங்கிலதண்புனல்
பாவமெண்ணில்பரத்தையர்தம்மனம்
போவபோலப்புரண்டுபரந்தவால். 13

நிலைகொணிருறநேரிடைமாதர்தங்
கலைகள்வாரிநற்காவினின்மீதிடு
மலைகொண்மாநதியாயர்தம்பாடியிற்
பொலிகொண்மாயன்செயலெனப்போகுமால். 14

இயல்பினாரமொடோண்மலரேந்துறுஞ்
செயலினித்திலஞ்சிந்துறச்செந்நதி
யுயிரையொத்துளகேளவனுழையுறு
மயல்கொண்மாதெனவாரியிற்சேருமால். 15

சரமுமெண்ணிலசராசனமும்விழ
வருளில்வேடரரிவையர்தம்முடன்
வரையினெய்தியரற்றவளைத்தெழு
நிருபரென்னவுமோடினநீத்தமே. 16

வெண்ணெய்பாறயிர்நெய்யுறவீழவே
பண்ணையாவொடுகன்றுகள்பாறிட
மண்ணினோடிவரும்புனன்மாயனுங்
கண்ணனென்னவுமுல்லையிற்காட்டின. 17

நிறையும்பொன்மணிபோன்மலிநித்தில
மறுவில்செந்நெலுங்கன்னலும்வாரியே
துறைதொறுந்நதித்தோயம்பரந்தவண்
டிறையிடுமென்னர்போற்கடல்சேர்ந்தன. 18

மதிசெய்மாந்தர்தற்சேர்ந்தவறியர்கட்
கதிசெயத்தொடுமுள்ளதளிப்பம்பாற்
கதிசெய்கன்னல்கமுகுகளோங்கிட
நதிசெய்தோறுமுதவினநாரமே. 19

மதர்ப்பநீண்டகண்மங்கையர்கற்பினி
னுதிப்பமாரிமெய்நீதியொடோங்கியே
கதிப்பநல்லறன்வேதங்களித்தெழும்
விதர்ப்பராசன்றனுடுவிளம்புவாம். 20

ஆற்றுப்படலம் - முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - 311.

---

## 4 - வது, நாட்டுப் படலம்.

---

மீனுயர்கமடமேனமுடங்குளைகுறள்வில்வேந்தர்க்
கானியேபரசுபாணியயன்மகன்சுதனுமாதி
யூனமில்சங்கின்வண்ணனுருப்பிணிகொழுநனாகி
யீனமில்பரியாமெந்தையிணையடியிறைஞ்சுவோம்யாம். 1

வேறு.

அந்தமிலுருவக்கூடைகள்குத்திப்பதைபுக்குப்பிடியெனவாற்றும்
வெங்கசொலகற்றிச்செவிகளுக்கினியவிருப்பமாய்மெய்மயிர்பொடிப்பச்
சிந்தையுமுயிருமுருகவேயன்பாற்றினங்குருகூரெனவிசையாற்
சந்தையிட்டனபோற்புகலுமங்நகரிசார்ந்துமாறனைத்தொழுந்தொண்டர்.

வேறு.

சுகனெனுமுனிவன்சொல்லவபிமனற்சுதன்றான்கேட்கு
நிகரின்முற்சரிதைதன்னையெறும்புநெய்ப்பல்வநீந்தப்
புகுவதோர்செயலீதென்னவன்பினாற்புன்சொனாட்டிப்
பகருவன்பழிப்பிலாதவிதர்ப்பர்கோனாட்டைப்பண்பால். 3

பொன்னவிர்மணியுமுத்தும்புரண்டிடும்வயல்களெல்லாங்
கன்னல்வண்கதலிபூகங்கிளர்ந்தெழக்களிக்கும்வண்ணஞ்
சென்னெலின்கதிர்வாய்கொண்டுதிரண்டெழச்சேல்கள்வாவி
துன்னியவள்ளைமீதுகழாயர்போனடிக்குந்துள்ளி. 4

களிமலர்மதுக்கள்சிந்திக்கமழ்பினஞ்செழுந்தேன்சிந்தத்
துளிகொள்மாங்கனிநீர்சிந்தத்துலங்குபூகத்தின்மீதே
தெளியுநீர்வாளைதாவச்சிதரினபாளையாழ்போல்
வளனுறஞிமிரும்பாடமயூரமுன்னடிக்குமாதோ. 5

காரணிகமுகுகன்னல்கதலிவாரீசமாம்பல்
சீரணியிளநீரோங்குந்தாழைசெங்கழுநீர்முல்லை
நீரணிகலந்துசூழநிறைந்தெங்கும்வயங்குமாட்சித்
தாரணிமாதின்பொற்பார்வடிவெங்குந்தழைத்தபோன்ற. 6

வேறு.

சுருதியாறுகானவின்றிடச்சூதமின்களிநீர்
விரிதடாகத்தம்போருகத்தோமத்தீவிளைப்பப்
தெரிதுய்மாதவிவழைசெழுமலர்களைச்சூட்ட
மருதமாணிலம்வதுவைசெய்மகளிர்போன்மகிழ்ந்த. 7

காலைமாமலர்த்தேனுறக்கன்றினைநினைந்து
நீலமேதிகள்முலையினிற்பொழிந்திடநிரம்பும்
பாலொடாமொம்பழம்விழுசாருடன்கழையி
னாலைபாயுநீரோடியேயளக்கரின்மடுத்த. 8

மாரவேண்மடலேந்துறுவனிதையர்நதியி
னீருளிற்குடைந்தோடநீள்சலதியினிறைந்தே
யாரவாரஞ்செய்யெழிலிகள்முகந்துபாரதையுந்
தாரைநாறுவதளவுடன்சந்தனம்பனிநீர். 9

குளிர்கொளுங்கொண்டல்முழவினுமிசையெழந்துமுறங்
கிளிகள்பண்பலமிழற்றிடக்கின்னரரெனவூங்

களிகள்பாடனன்மயூரங்களாடவகண்டே
யொளிகொணிதிலமுதவினவலம்புரியுமிழ்ந்தே. 10

சொன்னநாடனில்மகிழ்நன்வந்திலனெனச்சோர்ந்தே
யென்னகாரணமெனப்பருவரலுடனெழுந்தாண்
டொன்றுதோறுங்கோவிணையினீருகுத்தமாதொத்த
கன்னல்கண்டொறுமுதிணையுதிர்த்தெழுங்காட்சி. 11

வேதர்நெய்யொடுவேள்வியையெங்கணும்விளைப்ப
மாதர்தம்பதிச்சொல்வழுவாக்கற்பைவளர்ப்ப
நீதிமெய்த்தவமருளறநிறைந்தெங்குங்கிளைப்ப
பூதலந்தனிற்றிங்கண்மும்மாரியும்பொழிந்த. 12

வஞ்சகங்கொலைகளவுமாயங்களுமாய
விஞ்சியெங்கணுந்திருமகளுறநெறிவிளங்கச்
செஞ்சொலந்தணர்மறைசெழுநூலினைத்தெரிக்க
வஞ்சுகங்களுங்குஞ்சுடன்கொஞ்சுமாரணங்கள். 13

வேறு.

ஆனிறைந்தனவந்தணர்வேதமுந்
தானிறைந்தனதாமரைமேலமர்
மானிரைந்திடமாழைநிறைந்தன
கானிறைந்தகளிமலரீட்டமே. 14

உழுபகட்டையுரப்பிகிரப்புசா
லெழுவகட்செவியின்மணிசித்திலங்
கொழுவுறப்படைகொண்டுழுமள்ளர்கள்
செழுமிடக்கிளர்ந்தோங்கின சாலியே. 15

வேறு.

இடையொடிப்பபோற்கதித்தெழுநகிலிடையுறவே
நடையெனப்பெடையெனவருகடைசியர்நாளு
மிடையடர்த்தெழுங்களைகளைந்தின்கதிர்ப்பழன
மடையடைப்பர்கள்பணிலமின்முத்தெலாம்வாரி. 16

வயலினிற்களையானவாரிசநன்மலரு
மியல்பினுலலர்பானலுங்களைந்தனரெங்கு
மயிலினமமெனுங்கடைசியர்வளைகளுமொலிப்பக்
கயல்கடுவள்ளிடவராலினங்கமடமேற்பாய்ந்த. 17

வேறு.

சொன்மலையுழவர்கள்கொய்தநெற்கதி
ரின்மலைசேர்பகட்டினமிதிப்பவே
நென்மலைக்குப்பைகணிறைந்தமாட்சிகள்
பொன்மலைநிரைகளாய்ப்பொலிந்தபோலுமால். 18

மண்டகில்விளை நிலமுற்கமாடமு
மெண்டவர்விழைவு றமெவையுங்கோதியுங்
கொண்டலின திர்வுறக்குழாங்களாய்வரும்
பண்டிகள்பரந்தனபகரலாவதோ. 19

வே று.

மடந்தைமாருடன்விழைவு றமகிழ்நர்சோபன மு
மிடைந்தவாண்மகப்பெறமகிழ்வளமையும்விளங்க
வடைந்தநான்மறைப்பொருளருள்தேவராலயமும்
படந்துவிஞ்சியவிதர்ப்பர்கோன்புரந்திடும்படியே. 20

நலன்மிகுத்தமென்மருங்கியர்நடையினேடிமங்கள்
குலைவதன்றியேயுலகினெவ்வுயிர்களுங்குலையாச்
சிலையெனத்திகழ்நுதலியர்திரண்டெழுமுலைமே
லலையுநித்திலமன்றிவேறியாவையுமலையா. 21

சேயகண்ணியர்கருங்குழற்செய்கைகாண்மயூரஞ்
சாய்வதன்றிமெய்த்தவநெறியோரருள்சாயா
வேய்கொடோளியர்தலைவனைப்பிரியவில்வேளே
காய்வதன்றியவ்வுலகினைவறுமைநோய்காயா. 22

செய்யவாய்ச்சியர்முலைபொறுத்தேயுநுண்ணிடையே
பொய்யென்றேறுவதல்லதெப்பொருள்களும்பொய்யா
துய்யவிண்மிசைத்துலங்கியசசிமறுவன்றி
வையகந்தனில்யாவர்க்குமறுவிலைமாதோ. 23

பொழியுமும்மதத்தெறும்பியுமடங்கலும்பொருந்து
மழல்விழிக்கொள்காகோதரங்கருப்பையோடமரு
முழையினங்கள்சார்த்தூலமோடொன்றியங்குவக்கு
மிழையுமஞ்சுகங்கங்கமோடின்றிதமர்ந்திடுமே. 24

வே று.

சொங்காவலிலாதனசோரரிலால்
வெங்கோபமிலாதனமேலருளால்
மங்காநெறிநீடியவீடுமகன்
செங்கோன்முறையாலுயர்தேசமரோ. 25

மறமில்லைமனந்தனின்ஞானமுற
வறனில்லையதன்மமிலாதுயரு
முறவில்லையுறும்பகையின்மையினற்
குறைவில்வளநாடியல்கூறரிதே. 26

வே று.

நீதிமுற்றநற்றிருவுநீங்கிலாள்
வேதமுற்றவுற்றறனுமேவுமா

லேதமற் றமெய்த்தவமுமீறில
நீதுமற்றகற் றணருங்தேசினல். 27

வாசம்வீசுகோகனகமாதரா
ளேசிலாததோர்மகளென்றெய்தவே
வீசுசீர்த்தியான்விதர்ப்பராசனு
டேசங்கூறினும்புரியுஞ்செப்புவாம். 28

நாட்டுப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 339.

## 5 - வது, நகரப் படலம்.

கலைவாரிமின்னிடைமாதர்கள்கனமாமுலையணைவான்
சிலைவாள்கதைவளையாழியுமுடையான்றிருவுடையா
னுலகேழுடனயனுர்வருமொளிர்நாபியுமுடையா
னலைவேலையினிடையேதுயிலமர்வான்புகழறைவாம். 1

இமவானெனவடமேருவினியல்பாமெனவெழில்வா
னமையாதெனகிவர்கோபுரமழகேயுறகிறையு
முமையான்பதிபதிமாமலருறைவோனுறைநகரம்
அமராபதிஅளகாபுரியெனவேயவர்பதியே. 2

வேறு.

நீதிமெய்த்தழைத்தருணிறைந்தபூசுரர்
வேதமெங்கணுமெழமுனிவர்விண்ணவர்
போதநற்றிருமகள்பொலிந்துதோன்றிய
கோதிலெண்டவர்கள்சேர்குண்டினபுரம். 3

அண்டர்களறைவரென்றறையவேண்டுமோ
தெண்டிரைப்பயோததிதுறந்துசெய்யவ
ளெண்டிசைவயங்கவந்தெய்தினளென்றூற்
குண்டினபுரநலன்கூறலாவதோ. 4

வேறு.

வான்கடந்துயர்வைகுந்தத்தொளிர்கொள்மண்டபமோ
தேன்குடைந்தெழவலர்ந்தசெந்தாமரைமலரோ
மீன்கிடந்தவிண்ணடுவெழவீசுபாற்கடலோ
மான்கடந்தகண்டிருவைகும்விதர்ப்பமாநகரம். 5

உததியிற்றெறிதினகரரொளியெனப்பரந்து
சதுரமாகிக்கொண்மூவினந்தவழுறவான்போய்ப்
பதிசொல்பேணுமின்கற்பெனப்பகையெலாமடர்த்து
மதில்பிறங்கியமாழையால்வளநகர்வளைந்தே. 6

திமிரமுற்றவுமகற்றியதினகரரொளிபோற்
றமனியத்தகடிலங்கியொண்மணிகளுந்தயங்க
விமையவர்க்குமோரதிசயமிதுவெனவெழுந்து
சமனிலாமதில்சிறந்தனவுயர்ந்தவான்றடவி. 7

திகழுகின்றவம்போருகங்குவலையஞ்சிறந்து
புகழுடைக்கனபுவியினையம்பரம்பொருவி
மகிழ்வருக்கைமாதவிவழைமாழைகள்மருங்கா
ரகழ்நிறைந்தனவகன்றெழுமளக்கரைநிகர்த்தே. 8

வேலும்வாள்களுமிடைந்தெதிர்தாக்குவவேயச்
சேலும்வாளையுங்கயல்களுந்திரண்டெதிருகள
வால்வளைக்குலமெதிர்த்தெழவராலினங்குதிப்பக்
கோலமாகியமதில்வளைந்தகழிநீர்குலாவ. 9

வேறு.

படியெலாஞ்சந்திரகாந்தம்பாரு று
மடியெலாம்பளிங்குறுமகழிப்பித்திகை
யிடமெலாந்தமனியத்தகடிலங்கவே
கடலெலாநிறைந்தபோலலைகள்காட்டின. 10

வேறு.

பாபமுற்றவுமறுத்திடும்விதர்ப்பர்கோன்பதியா
மாபுரத்தினிற்பிறங்கியமணிகளுந்தயங்கக்
கோபரத்தன்வானளந்தருள்கோலமேசிவணக்
கோபுரத்துறுங்கவினையாங்கூறுதற்கெளிதோ. 11

தேய்விலாதநற்றபனன்றேர்திசைதொறுந்திரிந்த
வோய்விலாமலேசென்றுசென்றேகிடவுயர்ந்த
மாய்விலாததாபதருறும்விழாநகர்வழங்கச்
சாய்விலாதுவான்முகடுறத்தயங்குகோபுரமே. 12

இரணியத்தகடிழைத்தநன்மணிகளோடிலங்க
வருணமுற்றுயர்மாடமாளிகைதொறமதியின்
கிரணமொத்தநித்திலங்களுங்கிளர்ந்தபொற்கிரியின்
றிரள்களொத்துவானணவிடச்சிறந்தகோபுரங்கள். 13

வேறு.

கயிலையங்கிரிதனிற்கதிரவன்னிள
வெயில்பரந்தென்னவேவெள்ளிமாடமீ
துயர்வுறத்தமனியத்தகடுவேய்ந்தொளி
யியல்புறக்குயிற்றியவெண்ணிலாதன. 14

விடவரவுமிழ்மணிவிளங்கமாழையின்
சுடரொளிதயங்கநித்திலந்துலங்கவே

கொடிககனத்துறுங்கோபுரங்கள்சோ
கடவுளராலயங்கணக்கிலாதன. 15

மெல்லடிவிளங்குநூபுரமிழற்றவே
யெல்லுறுசசியிணையிகழுமானன
வல்லியர்நடித்திடவளைத்துமாமணி
வில்லுறுமரங்குழைவிளங்கிக்காட்டின. 16

உருப்பசியெனவடிவொளிருமாதரார்
பொருப்பிணைநகில்கலன்பொலியவீதியின்
விருப்பமுற்றுகந்தவர்வீசுநாரமார்
கருப்புரமாலினிற்கலந்துநாறுமால். 17

நல்லியற்கவிஞர்சொற்போன்றநன்னக
ரெல்லையில்விழாவொலியிசைத்ததெங்கணு
மெல்லியரிசைக்கும்யாழ்வீணைவிஞ்சிய
பல்லியங்கறங்கினபரவையஞ்சவே. 18

தேரணிநிறைந்தனதேவரூரென
வாரணநிறைந்தனமங்குலீட்டம்போற்
றாரணியனிலம்போனிறைந்ததாவுமாத்
தோரணநிறைந்தனதருவின்றோற்றம்போல். 19

வேறு.

வாயில்மும்முரசதிரவால்வலம்புரிமுழங்கத்
தூயநன்மணிச்சுடர்முடிமன்னவர்துலங்க
வாயிரச்சதத்திரட்டிதூண்மரகதத்தமைந்த
கோயிலம்பொனின்மணியிழைத்தேகொடிகுலாவ. 20

கரிகடுன்னினதுன்னினர்கதிரயிலாளர்
பரிகடுன்னினதுன்னினபணைநெடுந்தேர்கள்
கிரிகடுன்னினவெனக்கிளர்ந்தெழுந்தகோபுரங்க
ளரிகடுன்னினதுன்னுமங்கையரளகங்கள். 21

சாதுரங்கமுந்தழைத்தனமறுகெலாந்தயங்க
வேதிகைப்பசும்பொன்னின்மண்டபங்களும்விளங்கக்
கோதையயோதியின்மதுகரங்குலாவுகோதையர்கள்
கீதவீணையாழ்பயிற்றினர்கின்னரரெனவே. 22

வேறு.

சிலையியற்றினர்தேர்நிறையுந்தினர்
கொலையியற்றியகுஞ்சரமூர்ந்தனர்
நலனியற்றியமாவுநடத்தினர்
பலவியற்றினர்பல்படையாயுதம். 23

வேதமோதினர்வேள்விசெய்வேதியர்
கீதமோதினர்கிஞ்சுகவாயினு

ரேதமோதியெங்குந்தவமெய்திட
நீதியோதினர்நீணகராரரோ. 24

வேறு.

இதற்கரிமதமிழியருவியாறெனப்
புகப்பரிமிதிப்பத்தேரோடவேபொடி
யுகத்துகளாகிவிண்ணுறுத்தமாடமேற்
றுகிற்கொடிபரவிவான்றுடைப்பபோன்றவே. 25

முழங்கினமறையவர்மொழியும்வேதமு
முழங்கினவனிதையர்குழலின்மொய்யளி
முழங்கினவீணையாழ்விளரிமுந்தியே
முழங்கினபேரியுமுகிலினார்ப்பென. 26

பொரவலமதக்கரிபொலிபவேறிய
மருவலர்கெடவுடைவாளும்வாங்குவார்
திருவலர்விதர்ப்பர்கோனகரஞ்சேர்ந்துறை
இரவலர்புரவலராகவீகுவார். 27

ஈதலேவிரும்பினரியன்றசான்றவ
ரோதலேவிரும்பினரொளிகொள்வேதியர்
காதலேவிரும்புநர்களிகொள்காமுகர்
போதிலேவிரும்பிமாதுறையும்பொன்னகர். 28

அருக்கியநடையினரமிர்தமென்சொலார்
முருக்கிதழ்வாயினர்முருகுகூந்தலார்
தருக்களிற்றெருக்களிற்றரளம்வீசினு
ருருக்குமணித்திருவுறையுமூர்தனில். 29

கொய்தனர்கடிமலர்கொடியகண்களா
லெய்தனரிளைஞர்மாலெழநன்மால்வரை
நொய்தெனப்பணைமுலைக்கிடைநுடங்குவார்
கைதனில்வயிரகங்கணமிலங்கவே. 30

குளிர்த்தெழுங்குங்குமக்கொங்கைமங்கைய
ரளித்தனரமுதவாயமுதந்துய்த்துமெய்
துளித்தனர்புளகம்வேள்சுரதநூல்களாற்
களித்தனர்பொருநர்மேனாநங்கண்டென. 31

எரிகதிர்வேலினான்றுணைவிக்கிச்சென்மம்
பிரிகிலனென்றலும்பெருகுகண்ணினீர்
வரவருபிறவியினகல்வனென்றுமா
துருகியேதெருமராலுற்றுச்சோர்ந்தனள். 32

அந்தமார்கருமுகிலமையுமஞ்ஞைபோற்
கந்தமார்மலர்குழல்கவின்கொள்மாடமீச்

சிந்துவாரத்தகிற்செடிசேறிந்திட
வந்தெழுதுமத்தோர்மாதுநின்றனள். 33

பாடகநூபுரம்பாதசாலமுங்
கூடியார்ப்பரித்திடநடந்துகொண்கனை
நாடியேகண்டணைத்துவந்தநன்னுத
லாடினளுகிர்க்குறிபிறிதினூற்றதால். 34

நாகணைத்துயிலுவோனரியோகோ
னேகநீயெரறிந்துணர்தியென்னலு
நாகணிமுன்கையாணைவெங்கிக்கொண்கனைப்
பேகணித்திரங்கியேபெய்துற்றுளரோ. 35

வேறு.

அயில்விழியிலவச்செவ்வாயனநடைகழையின்மென்றோள்
குயில்மொழிகலசக்கொங்கைகொடியிடைகொண்டகொம்பு
மயிலெனமகுணனோடேமணம்புணர்ந்துயருமாட்சி
கயிலையோன்விழியாற்காய்ந்தகாமனோடிரதியொத்தார். 36

வேறு.

அடலேந்துறுமன்மதனைங்கணையா
லுடலேந்துயிரோய்வுறவேயொளிசேர்
மிடலேந்துறுதோளிணைவீரர்கள்கை
மடலேந்துவர்மங்கையர்வந்தணைய. 37

வாங்காநயனத்தொடுகூடல்வனைந்
தேங்காவிறைவன்வருமின்றெனவே
நீங்காமயல்கொண்டுநிறைந்தனராற்
பூங்காவினிறைந்தொளிர்பொற்கொடியார். 38

அலையும்மலைகொந்தளமீதளியுங்
கலையுங்கலையுங்கதிர்பூண்முலையா
மலையும்மலையும்மகுணன்னுரமே
லுலையும்மயறீருமினூற்றனைய. 39

வேறு.

கூர்கொதித்தவயிற்கொண்கன்கூடிலர்
வார்கொதித்தவனமுலையார்மலர்த்
தார்கொதித்தெழத்தாங்குடையுந்தட
நீர்கொதித்தகிழ்த்துலதியாவதோ. 40

மாதொருத்திதன்னாயகன்வாறெலா
மீதெனத்துணைவிக்கிதமாகவே
ஓதியுத்தமனைக்கொடுவாவெனாத்
தூதுவிட்டிங்ஙன்மாழ்கித்துவண்டனள். 41

நற்றியற்றுணேவிக்குத்தன்ஞயகன்
குற்றமுற்றவுங்கூறிக்கொதித்தபின்
மற்றவன்வரனும்மலர்க்கைகளா
லுற்றணேத்தனளோரிமைப்பின்மூனே. 42

பாகுநேர்மொழிப்பாவைதன்ஞயக
னேகலாதுமுன்னேடியெழுந்தவன்
போகவேற்கண்புனல்கொளவிம்மியத்
தோகைதூதுவிட்டொல்கினள்சோர்ந்தரோ. 43

தெளிகொள்வேற்பொருனன்வயிற்செல்கெனக்
கிளியையேவினள்கேகயம்போனபி
னளியையேவிநல்லன்னத்தைச்சேறியென்
ருெளிகொணீள்கண்ணிதானுமங்கோடினுள். 44

இறைவனேக்கொணர்கென்றுமின்னேவப்போய்
வெறிகொளுங்கொம்புமீண்டனள்மார்வமேற்
சிறியவள்ளுகிர்ச்செய்கையுஞ்செய்யவுாய்க்
குறியுங்கண்டுகைகொட்டிநகைத்தனள். 45

என்னுடைக்கொழுனனெய்திலானெனும்
புண்ணுடைத்துனியோங்கிப்பொருமுறு
நுண்ணுடைச்சியவணெய்தநோக்கலாக்
கண்ணளொல்கிக்கபாடமடைத்தனள். 46

ஏடலர்த்தொடைவாடவிருகணீ
ராடையுந்நனேந்தோடவழுதிழை
கூடல்கூடிடக்கண்டனள்கொண்கன்றே
ரோடும்வந்துமுன்னிற்கவுவந்துமான். 47

கோணிலாமொழிக்கொண்கன்கரத்தினுற்
பூணுலாநகிற்பொற்றுகினீக்கலும்
வாணிலாமுறுவற்கனிவாயினு
ஞணியேமறைத்தாணயனங்கையால். 48

ஏடுசேர்தொடையான்புயத்தெய்குறி
நாடினளவைகாண்கிலதாய்நகைத்
தூடினளவன்றன்பதமுற்றுறக்
கூடினுள்பின்னுங்குங்குமக்கொங்கையாள். 49

அல்லுநன்பகலுந்தன்னகிலணேந்
தில்லின்வாழ்கொழுனனிதமாமுரை
சொல்வனென்றலுஞ்சோர்ந்தனள்சோர்தரச்
செல்வனென்றசொற்செப்புவனுமென. 50

கொலைகொள்வேற்கொழுனன் குறுகாமன
நிலையைநோக்குந்தன்னேர்கின் றமாரவேள்
சிலையைநோக்கும்வெந்தீவினைத்திங்களாம்
வலையைநோக்கும்வருநெறிநோக்குமான். 51

தந்தநல்லதரக்குறிதன்னொடும்
வந்தனனெனவேமகுணன்றனை
நொந்தசிந்தையனோக்கித்தன்மென்முலைச்
சந்தழித்தொல்கிச்சேக்கையுட்சாய்ந்தனள். 52

பாங்கிமார்களும்பாங்கிலர்கிள்ளையே
யீங்கெனுயகன்பாலெய்தியேதொடை
வாங்கிவாரலையென்னின்மற்றென்னுயிர்
நீங்குமீதுணர்நீயென் றுரைத்தனள். 53

ஈண்டெனுயகன்பாலெய்தியென்மயல்
காண்டிநீகழறென் றுதன்கைகளால்
வெண்மொளிமெம்பைக்கடல்விஞ்சிடப்
பூண்டுதன்கிளியோடும்புலம்பினுள். 54

இந்துவானுறவெங்கயலாய்க்கதிர்
வந்துதோன்றிடவிங்வன்வந்தாயெனு
நொந்துதானணிநுண்டுளையாரமுஞ்
சிந்தினுணயனஞ்சிவப்பேறவே. 55

தன்னைநாயகன் றன்வயிற்சேரெனு
மின்னனுடன்மனத்தைவிடுக்குவா
ணின்னலாதிலைநீயுமறுத்தியோ
வென்னுமாலுறவேக்கமுற்றேங்கினுள். 56

வாவொர்மகுணன்வந்திலானெனத்
தேடுவோரவன்வந்திடிற்சேர்ந்துதா
னூவொர்மதனன்கணையுள்ளுறக்
கூவொர்மடவார்குயில்போலவே. 57

திங்களுனுந்திருமுகச்செவ்வியார்
தங்கனுயகர்சார்விடநண்ணியே
பொங்குமார்பமுறக்கலன்பொற்பெழ
வங்கையாரமகிழ்ந்தணைத்தாரரோ. 58

வேறு.

கதித்தபூணகிலிதத்தவாரமணிகண்கள்வேலிணைகொள்மங்கைமார்
மிதித்தமாநடமதிர்த்தபாதமெழுமிளிர்பொன்மாமுழவமோசையா
லுதித்தபானுவையெதிர்த்தசோலையுறமேதியோடையுளுழக்கலுங்
குதித்தவாளைகள்மிதித்தபூசமிசைகொண்டபாளையணிகுலையவே. 59

அந்தரங்கொளிடைமந்தரங்கொண்முலைநந்துகந்தரமடர்க்கும்வேற்
கந்தர்தந்தைகணின்வெந்துசந்தமறுகாமனுய்யுமொளிர்கண்ணின
ரிந்துநன்வதனமுந்தியுந்தியெழுநீரினேகுசுழியிவைகொடே
வந்துமுந்தியுறுகந்துகங்களொடறைந்தெழுந்தனர்கள்மங்கைமார். 60

நஞ்சமாமெனவயங்குகண்ணியர்கணண்ணும்வீதிதொறுநலனுறப்
பஞ்சபாணமதனஞ்சுகுஞ்சியொளிர்மஞ்சர்பாய்பரியினேறவே
மஞ்சுமேவியுயர்வானிலங்கிவர்மாடமாளிகைகள்கோபுர
மிஞ்சிசூழுநகர்விஞ்சுமல்குநலனிந்திராதியருமெண்ணுவார். 61

புன்னைதாழைவழைபாடலங்கதலிபூகமாழையுயர்பொழிலின்வாய்
மின்னுமாமணிகளென்னுதூணணிகள்விஞ்சுமண்டபம்விளங்கவே
கன்னலானமொழியன்னநாணுநடைகங்குனேரளகமங்கைமார்
கின்னராதியர்களனையாணருறுவீணையின்னொலிகிளர்த்தினர். 62

வேறு.

அரசரோமோமணம்புணரரிவையர்மகிழ
முரசுபேரிகைமுழவொடுதிமிலையின்முழக்குங்
கரைசெய்யாததோர்களிப்புடைக்கனகமாநகரி
னுரைசெய்வேதியர்மகம்புரியோசையேமலிந்த. 63

அருந்தவத்துளோருயரமுதாசனர்பலரும்
பொருந்தநாடோறும்பொலிவுடன்மகிழுவர்பூமா
னிருந்துவாழ்பதிமறையவரெண்ணிலர்வேதந்
திருந்தவோதுமாநகர்நலன்செப்புதற்கெளிதோ. 64

வேறு.

எல்கிளரிஞ்சியினுஞ்சிலேருற
வில்கிளர்திருநகர்வேதமெய்யறன்
பல்கிடச்செல்வங்கள்பரந்ததன்றியே
நல்குரவிலையிறைநெறிநடத்தலால். 65

வேறு.

வேதவித்தினினீதியேமுளைத்தறன்மேவி
மாதிரத்தெழும்பணைகளாய்த்தழைத்துமெய்வளார்கொண்
டாதரித்தருளரும்பிடப்பெருந்தவமலர்ந்து
போதமுத்திசேர்ஞானமாங்கனிதரும்புரமே. 66

மின்னுமாமணித்தமனியக்கோபுரம்விளங்கி
மன்னுமாநகர்தனக்குமவ்வவனிக்குமன்ன
னென்னுநாயகன்செயலையுமிந்திரையென்னும்
பொன்னினுளவதரித்திடும்பெருமையும்புகல்வாம். 67

நகரப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - 406.

---

# 6-வது, நாச்சியார் திருவவதாரப் படலம்.

கண்ணன்வாழியளைவெண்ணெயுண்ணுநிறைகள்வன்வாழிகருணாகரத்
தண்ணல்வாழியரிவாழிசீதரமுராரிவாழியலைவேலைவாய்
நண்ணுநாகணையன்வாழிமாலிருடிகேசன்வாழிகளிர்மைமுகில்
வண்ணன்வாழியுயர்மாயன்வாழிநிலமாதுநன்கொழுநன்வாழியே. 1

அண்டருந்துதிசெய்குண்டினபுரியினருளினோமெரசமருவோன்
மண்டலங்கண்மலிநீதிமெய்தருமமறையினாலெழில்கொள்வாயினான்
கண்டகக்குலமடிந்துவீழவொளிர்கதிரின்வாளுறைகழற்றுவோன்
விண்டலத்தபனகிரணநன்குலவிதர்ப்பராசனெனும்விறலினான். 2

பளிங்குதற்றுமலிபொற்சுவர்க்கருகுகால்கணீலமணிபற்றவே
விளங்குநற்பவளமிக்கபோதிகைவிரித்தெழுந்த்வயிடூரியக்
களங்கமில்லொளிகொளுத்திரத்துவயிரக்கதிர்ப்பலகைதைத்துமேல்
வளங்கொண்மாமணியிலங்குதூணணிகளெண்ணின்மண்டபமருங்கரோ.

நீலமாமணிகள்வேலையார்தரளநீளமாமரகதங்களுங்
கோலமானவயிடூரியங்கள்வயிரங்களுகமணிகுழுமவே
ஞாலமீதினிவர்மாழையாலவிர்கொள்சீயமேவுநலவாசன
மாலைவாகைபுனையானையாளியெனவேறினான்மகுடமன்னவன். 4

வெள்ளியங்குடைவிளங்கவாபரணமேனிமேலவிர்பரந்தெழத்
தெள்ளிதாயுயரவீசுசாமரைபயோததிக்குணிவர்திரையெனத்
துள்ளவீசுபுகழ்மகுடவர்த்தனர்கள்சூழவாழிமலிசுடரென
வள்ளன்மாமுடிவிதர்ப்பராசனெனுமன்னர்கோன்மகிழுநாளினில். 5

துருக்கர்கேரளர்கெளுவர்பப்பரர்கள்சோனகப்பெயர்கள்சூழநீ
ளிருக்கையோதுமறையோர்கடாபதர்களியல்பினாசிகளியம்பிட
வுருக்குமன்றனொடுகுமரரைவரையுமுதவியேயொளிகொள்புகழினான்
செருக்கவானமர்தருக்கொண்மர்வினுயர்தேவிமேவுதிறமறைகுவாம். 6

வேடமாரனெண்விதர்ப்பராசனொருநாளின்மேவியமர்கோயிலிற்
கோடிமாமணியிழைத்ததூணணிகள்கொண்டமண்டபமருங்குறப்
பீடமேதிகழ்வெய்திநன்மகவுபெற்றயானொருமகட்பெறக்
கூடிலாதவிதியென்கொலென்றுறநினைந்துகொற்றவன்வருந்தவே. 7

பாவம்வீயவறனெய்தனல்லரசுசெய்துபாரினுயர்கொற்றவன்
றேவிவந்தடிபணிந்துநாயகநினைந்ததெண்ணியுறுசிந்தையாற்
காவிவாளிகயல்வேல்களென்னவொளிர்கண்கண்முத்துதிரவாடியே
யாவினொந்துமகள்பெற்றிலேனெனவுரைப்பவன்னவனுமறைகுவான். 8

நக்குலத்தினிலுதித்தவிந்துமதிதன்னிலுந்நலனிவர்ந்தவெண்
டிங்களஞ்சுவதனத்தியானதமயந்திநாணுமுயர்செய்யமா

மங்கைதன்னைநிகாநங்கையைப்பெறமணத்ததண்டுளவமாயனாஞ்
சங்குயர்த்தகரனெய்தநற்றியதவம்புரிந்திடுதல்சதுரெனா. 9

மந்திரத்தவரையரசுநீதிவழுவாதுகாவுமெனவாரியின்
மந்தரத்தரவினைப்பிணித்தமிர்தம்வந்தெழக்கடையுமாறிரு
மந்திரத்துமுதலெட்டெழுத்தையுமனத்துள்வைத்துமறமாயவே
மந்திரத்தையுமெரித்துநன்மனைவிதன்னொடும்பழுவம்வைகினான். 10

புலன்கள்வேலியெனநிற்கநெஞ்சென்வயறன்னின்ஞானமழைபொழிய
நலங்கொண்மெய்யெனுமலத்தினாலுழுதுநாலிரண்டுதிருவக்கரத் [வே
துலங்குவித்தினைவிரைத்தெழுந்தகளையானவஞ்சகமறத்துறந்
திலங்குமாதவமெனும்பெரும்பயிர்பலன்களீவகையியற்றினான். 11

சலங்களைந்துமையடர்த்துவஞ்சமதகற்றிமுற்றியமெய்தழுவவே
நலங்கொளும்பிரணவத்தினோடுமிருநாலெழுத்தைநிறைநாவுடன் [க்
பொலன்கொடாபதர்களூழிசெய்தவமோர்கன்னறன்னிடைபொருந்திட
கலங்கலாதொருபிறங்கல்போலுயர்கணக்கருந்தவமியற்றினான். 12

முனிவரோடயன்வலாரியூழியுமுடிக்கொணாதரியமொய்தவங்
கனியதாகவிவர்குண்டினாபுரியினரசியற்றியமர்காவலன்
பனியைநூறுகதிராமெனப்பவமறத்தனீடிருபதங்களி
னினியனாகிடவனந்தன்மீதுதுயில்கொள்ளுமாதவனெழுந்தனன். 13

மங்குன்மல்கியுயர்வனசமாமலர்மலிந்துவண்பருதிசசியொடுந்
தங்கமேருவினெழுந்ததென்னவுயர்மௌலியெண்டிசைதயங்கிடச்
சங்குநேமியொடுதண்டுவாள்களொளிர்சார்ங்கமோங்கவலர்தாமரை
மங்கைமார்பினினிலங்கவேவயினதேயன்மீமிசையின்வந்தனன். 14

வாசவன்கமலன்வானுளோர்முனிவர்வாசமாமலர்கண்மலியவான்
வீசவன்பினுயரந்தரத்தினின்விளங்குதுந்துமிமுழங்கிடக்
காசினிக்குளுயர்குண்டினாபுரியினரசனன்பொடுகளிப்புற
வாசையெங்குமவிர்பாலவாழியமரச்சுதன்னமலனாகினான். 15

ஆடினான்மகிழ்வினோடிறைஞ்சினனெழுந்துதுள்ளியியலாரணம்
பாடினானிருகணீர்புரண்டிடமெய்புளகமாகியுயர்படியின்மே
லோடினான்வலமதாகமீளவொருநொடியின்முன்னமலனிருசரண்
சூடினான்முடியினளவில்போதமொடுசுருதிநாவனிவைசொல்லினான். 16

வேறு.

ஆரணமாயாரணத்தின்பொருளதாகி யைம்பொறியாயைம்பொறிலனமருஞ்சோதி, பூரணமாய்வாரணத்தினரந்தைதீர்த்தும் புவனமெலாம்படைத்துதரம்பொலியவைக்கும், பாரணனாய்ப்பாரணங்கின்பதியாய்த்தோன் றும்பல்லுயிர்கடொறுமேவிப்பரந்துநின்ற, காரணமாநாரணனே போற்றியென்றான் களிப்பென்னுங்கடலினைத்தான்கரைகாணாதான்.

மூவருமாய்மூவருக்குமிறைவனுய முழுமுதலாய்முப்பத்துமுன் றூ கோடி, தேவருமாய்முனிவருமாய்மறைகளாகித் திசையெட்டேழ்கடல்வ ரைபார்தீவாணுகிச், சிவனுமாய்ச்சிவனுள்ளியங்குஞ்சோதித் திருவுருவா ய்ப்பலவுருவாய்த்திகழுகின்ற, மாவமருமணிமார்பநின்னைக்கண்டு மகிழ் வுறவேயென்செய்தேன்மதியிலாதேன். 18

பாதகமின்மனத்தினராய்நின துநாமம் பலகோடியூழிதொறும்பரிந் துபோற்றித், தீதகலுமருந்தவங்கள்செய்துநாணித் திரியுமவர்க்கணுகா தாய்சீரொன்றில்லாப், பேதமையேன்கண்களிக்கவிமைப்பின்முன்னே பெருந்தேவியொடும்பிரியாதெய்தப்பெற்ற, தேதிதெனவறிகிலேனைநிந் தேனன்பர்க்கெளியவனுநீயெனுஞ்சொலிறைவவென்முன். 19

ஊணிறைந்தவுயிர்கடொறுமுளனுய்ப்பாரையோரடியாலளந்துகொ ண்டேயுயரமாகுஞ், சேணிறைந்தவொருபதத்தாய்பிரகலாதன் செப்பிய சொல்லிகழ்கனகன்கரத்தாற்றீண்டுந், தூணிறைந்தவரியுருவாய்த்திருவி னொடுந் துலங்குஙவமணிகோடிவயங்குந்தூய, பூணிறைந்தகவின்மார்பா போற்றியென்று புகன்றனன்கண்ணீர்படியிற்புரளவேதான். 20

இன்பமுறுமுணர்வினுடனெரியில்வெண்ணெ யிடவுருகுமாப்போ ல்விதையந்தன்னே, டென்புருகிவிழுந்தெழுந்துதுள்ளியாடி யிருநயன ம்புனல்புரளவியந்துபாடு, மன்பனைத்தண்ணளிசுரந்துநோக்கித்தூய வ றிஞவுனக்காயவரம்யாவதென்றே, முன்பகரவரியிறையைக்கேட்டவேந் தன் முடியின்மிசைமுகிழ்கரத்தின்மொழிகின்முனே. 21

பரமபதஞ்சரபங்கற்கருளிப்பார்வான் பயமுறவேபரிநெடுந்தேர்கட விவென்றக், கிரமபதத்திருந்ததெசக்கிரீவன்சேயின் கிளர்முடிகள்பொ டிபடமெய்கிழியமோதிச், சரமபதத்தளித்தம்பொன்வெற்புக்கப்பாற்சயி லமொடுமெருந்துகொணாானுமற்கூங்கார், பிரமபதமளித்திடுவோயடியேனி ங்ஙன் பேதமையாற்பிதற்றுவரம்பெறநீவாய். 22

மைந்தர்களைந்துளரெனக்கோர்மகடோன்முத வருத்தமறவாரீசம லர்மேற்றோன்றுஞ், செந்திருவோடொப்பவளாய்க்குணத்தாற்கற்பாற் செகதலம்வானிகரிலளாயளித்துச்சீரார், புந்திநனியாற்றல்கவின்படிவந் தேசின்பொலிவுமலிமகுணனவட்காகும்பொற்பா, மிந்தவரந்தருளு கென்னமாயோனிலகியநன்முறுவலெழவியம்புவானே. 23

அரசனைக்ககமகிழுங்குணத்தாலான்ற வறிவுடையவொருமகளைய ளித்தேமிக்க, வரிசைமலிகுமாணுக்கேமனைவியாவா ளென்றுதிருமாலரு ளமதிவலானுங், கரைசெய்வதற்கரியபெருங்களிப்பினுற்றன்காதலியோ டிருகழலிற்கடிதுவீழ்ந்து, துரிசறநான்மறைகள்கொடுதுதித்தானின்று தூயவனுங்குண்டினமாநகரிற்றோன்றல். 24

அருடழுவவிதர்ப்பனுமெனவிக்காங்கே யருளிவிடையயனொடும் வானோர்போற்றக், கருடன்மிசையுயர்விசும்பினேங்குங்கண்ணன் கமல

முறுநாயகியைக்களிப்பானோக்கி, யிருடவிரவசுந்தரைதன் சுமதிரயது குலத்தில்யாம்வருவோமியல்பான்மிக்க, பொருடெரியும்விதர்ப்பனருள் புதல்வியாகப் போகெனமின்மெலிதல்கண்டுபுகலுமாயோன். 25

சுந்தரிநீமிதுலைநகர்ப்படியிற்றோன்றித் துலங்கியநர்ட்டனுமுரித்துத்தூயதாங்ன், செந்தளிர்க்கைபிடித்ததற்பின்வனத்திற்சேர்ந்தே தெசக்கிரிவனகரதனிற்சென்றுமீள, வந்தனவில்விழுந்தெழுந்துமறையான்மிக்க வான்மீகியுயர்வனத்தில்விடுத்தோமென்றே, சிந்தைநொந்தாயெனத்திருமான்முறுவல்செய்தேசெய்யவட்குத்தெளிவுறத்தான்செப்புவானே.

சீதையெனும்வடிவுகொண்டுமுன்னுனென்னைச் சேராமற்பிரிந்தமநத்தியக்கந்திரப், போதுகநீபதினாருயிரத்துநூற்றெண் பொற்பினுறும்வனிதையராய்ப்புவிமேற்றோன்றுங், காதலுறுமவளவனுக்கவனுயின்பக் கலவிநலக்களிப்பளிப்பன்கலங்கேல்யானும், யாதவரிற்பிறத்தபின்னர்மின்னேநீயு மெழில்விதர்ப்பன்மகளாகென்றிசைவுகொண்டான். 27

மாதினுக்கிவ்வகைதெரியமகிழக்கூறி மனந்தெருட்டிவிதர்ப்பன்மகளாகும்வண்ணம், போதுகநின்முதலொளியென்றருளிக்காயாம் பூநிறத்தோனுவணமிசைப்பொலியத்தோன்றி, மோதியலைமுழங்குபயோததியினோடன் முடிகள்கவித்துடலினைநீளணையாய்முந்துஞ், சீதமலர்ச்சேக்கையின்மேலுயர்ந்தான்பூவிற்றிருவினொடுங்கவினுறவேதேவதேவன். 28

வண்டுளபத்தரியும்வரமருளியேக மலர்க்குழலாளொடுவிதர்ப்பன்மகிழ்ந்துமாயோன், புண்டரிகமலர்நிறையப்பூத்தநீலப் புயலைநிகர்திருவுருவின்பொலன்களெல்லாங், கண்டுளமுமுருகிடத்தானெண்ணமுற்றிக் காதலிதன்னொடுமேவிக்களிப்பான்மிக்க, குண்டினமாநகரதனிற்கொடிகள்கோடி குலவுமணிக்கோயில்புக்கான்கொற்றவேந்தன். 29

மன்னர்பிரான்மனைவியுடன்மகிழுநாளின் வருவருடநாலாகிவாய்க்கும்போழ்தின், முன்னமெதுகுலத்தரியாமுதல்வன்றோன்றமுளரிமலர்க்கவினுறுதேன்மொழியினுளும், பொன்னவிர்கொளரியநலக்காழகத்துட்பொதிந்துகதிரொளியிமைக்குமணிதான்போன்று, மன்னினளால்விதர்ப்பனில்லாள்வயிற்றினுள்ளேமாதமொருபத்துமுறவளர்ந்துதோன்றி

வேறு.

நீசராகுமவர்மாளமாநிலமடந்தைதன் சுமநீக்கவே
கேசவன்கமலநாபன்மாலிருடிகேசன்யாதவர்கிளைக்குள்வாழ்
வாசுதேவனெனவந்தபின்னர்நிவர்வாளரம்பொருதகண்ணிணைப்
பாசிழைக்கவின்வயங்குமிந்திரைபடிக்குளெய்தவருபண்பினுள். 31

சனகராசனெனுநிருபன்வேள்வியுறுதரணிகீறுகொளுநதியினின்
கனகராசிவரைவலமதாகிவருகதிரவன்னுதையமிதுவெனத்
தினகராதிபர்கள்குலமதாயெழில்கொடேசரதன்றனதுசிறுவனு
மனகராஜனுயிரனையதேவியெனவவதரித்தருளுமன்பினுள். 32

துதிப்பமாதவர்கள்சோதிவானவர்கடயேமாமலர்சடுவமெய்
மதிப்பவேதமருணீதிசேர்தருமம்வளரநாணளினமலரின்மான்
விதர்ப்பராசன்மனையாள்வயிற்றினுள்விளங்கியுத்திரநிறைந்திடப்
புதுப்பனுகமணிபோலமின்னுதையமாயினுள்புவிபொருந்தவே. 33

முழங்குபேரிதுடிதிமிலைபம்பைமுழவங்கள்சச்சரிமலாரியும்
விழுங்கவேலையொலியைக்கிளர்ந்து முரசங்கள்கொடியினெமெ்விஞ்சிடப்
புழுங்கரவுமிழுமினமணித்திரள்கள்பொன்னின்மாரிதரளங்களும்
வழங்கினர்கடிருவீதிதோறும்வறியோர்கண்மீளவிரவாமலே. 34

கசிந்துபோதொழுகுதேனினன்மொழியர் காமர்வேலிணைகொள்கண்ணி
விசிந்ததேர்புகரிபந்துரங்கமுறுவீதிவீதிகள்விளங்கிட [ஞர்
வசந்தமாடபனிநீரினேடுறுநெய்பாலும்வாரியினுண்மண்டியாண்
டிசைந்தமீனணிகளெண்ணிலாதவைகள்பருகியாலுமுடலிலகவே. 35

வீதிதோறுமலிகனகருப்பைநிரைவிஞ்சுகன்னலொடுகதலியுஞ்
சோதிபோலெழுவதீபமாலைமணிமாலைதுன்னியெழமாதரார்
கீதயாழினெடுகின்னரத்தொலிகிளர்த்தினர்கிளிகளென்னவே
மாதபோதனர்துதிக்குமாநகரின்மாமலர்த்திருவினுள்வர. 36

வேதமோதினர்களந்தணாளர்கள்விளங்குவானவர்கள்வளர்மொழி
யோதியேமலர்சொரிந்துவந்தனர்களுலகமெண்ணியவிதர்ப்பர்கோ
னீதியாகநிநாரமாடிகிதிவேதியர்க்கருளிநெறியுடன்
சோதியேறுமணிதுன்னுமீழமவிர்தூயகோயிலிடையெய்தினுன். 37

மத்துமந்தரமதாகிவாசுகிபிணிக்கவன்கயிறதாகவே
மெத்துவிண்ணவர்கள்கூடவெவ்வசுரர்மேவமாயன்வலன்விசையினுற்
கத்தும்வீரைமறுகக்கடைந்தமுதகாணவுண்மகிழும்வாசவ
னெத்தனன்னுயர்விதர்ப்பனன்சழகுவடிவுகண்டுளமகிழ்ந்தரோ. 38

விண்கிளைத்தெழுமரம்பைமேனகையொடுருவசிப்பெயர்கள்விழுமிய
மண்கிளைத்தெழில்வயங்கமாதரொடுகூடிவீதிதொறுமகிழ்வுறக்
கண்களித்தெழவுரோமராசிமெய்பொடிப்பவேயினியகாவலன்
பெண்களிற்றிலதமானமின்வடிவுகண்டுவெந்துசிலபேசுவான். 39

வேறு.

சிந்தாகுலமறவாரியிற்சிறந்தேயெழுமமிர்தோ
சந்தார்பொழிலனமோபசுங்கிளியோதனிமயிலோ
கொந்தார்துளவணியுந்திருமான்மார்பினிற்குலவு
நந்தாமணிவிளக்கோவொளிர்நலனுர்கவுத்துவமோ. 40

பொன்னேதருமலரோபுதுமணியோபுயன்மிளிரு
மின்னேதெளிதேனேவொளிவீசுந்துகிற்கொடியோ
வென்னவுளமகிழ்வோடெழுமிறையோன்மகளெனவே
தன்னுகமுமின்னுகமுமொன்றும்படிதழுவ. 41

கூராட்டியவேலோட்டியவிழியாள்கொழுங்கவினைப்
பாராட்டினரவர்வீசியபவனக்கொடியெனவே
சீராட்டினர்மலிசந்தனச்செழுமாமலர்வாச
நீராட்டினர்நீரார்கடலமிர்தாமிறையொழியார். 42

மின்னூர்வுறுசாமீகரவணிபூணுமெய்யிலகத்
தன்னேருறுதபனன்சுடரெனத்தண்டைகடயங்கப்
பொன்னூபுரமெழிற்கிண்கிணிமலர்த்தாளினிற்பொலிய
முன்னூரணனருளால்வருமுளரித்திருவளர்ந்தாள். 43

அல்லார்குழல்வில்லார்நுதலனமாநடைமொழிதேன்
வல்லார்முலையில்லாவிடைகயலாம்விழிமடவா
ரெல்லார்களுமகிழ்வோடமிர்தெனுமாவிசையெழநற்
சொல்லார்துதியறைவர்ரிதமுறுசோபனமெழவே. 44

வேறு.

பாதகங்கள்பரிந்தெழப்பங்கய
மாதகங்கடொறும்வைகிவாழ்ந்திடப்
போதகஞ்செறிபொற்கொடிக்குத்தகச்
சாதகம்பண்ணினூர்தவத்தோர்களே. 45

சங்கமுத்தநகைப்பெருந்தையலார்
சங்கமிக்குத்தழைத்தெழுந்தேத்தநற்
சங்கமத்தந்தரித்தவன்றேவிவாய்ச்
சங்கம்வைத்தமிர்தூட்டினர்தாயரே. 46

நீதிசேர்விதர்ப்பன்பெறுநேரிலாச்
சீதையானசெந்தாமரையாடனை
யோதுநாமமுருக்குமணியென
வேதாாவர்விதித்துவிளம்பினூர். 47

சுட்டுநெற்றிதுலங்கியமாதினை
மட்டவிழ்க்குமலர்க்குழன்மங்கைமா
ரிட்டிழைத்தமணிகளிலங்கிடுந்
தொட்டிலுய்த்தனர்சோபனம்பாடியே. 48

இட்டமேவியிலங்கியவல்லியை
வட்டமாமதிபோன்முகமங்கையர்
சிட்டர்போற்றச்செழும்பொன்னின்சங்கிலித்
தொட்டிலாட்டித்தொனியெழப்பாடுவார். 49

மங்கையோமணியோமதனைத்தரு
செங்கயற்கணியோதிருவோதிரை
பொங்குபாற்கடற்பொற்கொடியோபொன்னே
வெங்களாரமிர்தோவெனவேத்தினூர். 50

திங்கடங்கியவானனச்செல்வியோ
சங்குசெங்கைதரித்தவன்றேவியோ
வங்கமூர்ந்தியவர்குதிமங்கையோ
பங்கயக்குயிலோவெனப்பாடினர். 52

வேறு.

வானேறிந்திரன்வந்துமாமணி
தானேசங்கொடுபோயறந்தனன்
றேனேதெள்ளமுதேசெழுந்திரு
மானேநீரழுமாறிதென்கொலோ. 52

தாலேலோவினைதானிலாதவ
டாலேலோசுதைதங்குபொற்குயி
ராலேலோகமலாசனத்தவ
டாலேலோதிருவென்றுசாற்றினர். 53

தாதாவானவிதர்ப்பர்கோன்றரு
மாதேபோதின்முன்வந்தமாட்சிகொ
லேதாலேகைசெய்தவாறிவை
யோதீர்மாதவவுத்தமப்பெண்ணே. 54

ஒளிசேர்வேன்மதியூடிருந்தது
கொளவேநீள்களிகூரவுங்கிளர்
வளையூடாடவிலார்மலர்த்திரு
விளையாடீரெனவேவிளம்புவார். 55

வேறு.

மங்காதறன்மல்கிடவந்தருளு
நங்காய்களினத்துறைநாயகியே
சிங்காரவுருக்குமணித்திருவே
செங்கீரையதாகெசெம்மையுற. 56

எப்பாரிலுமெவ்வுலகங்களிலு
மொப்பாகவுரைக்கவொணுவொளிவே
அப்பார்கமலாசனமீதமர்வாய்
சப்பாணிகைகொட்டெச்சந்தமுற. 57

பவந்தானறநான்மறைபல்கிடவே
சிவந்தாயெழுமேனிசிவந்துகவி
னிவந்தாரவடங்கணிறைந்தமினே
தவழ்ந்தேவிளையாடுதிதாரணிமேல். 58

தாள்வீசியெழுந்துயர்வான்றடவ
நீளீசர்தமார்பினிவந்தமரும்
வாளேசுறவேமிளிர்மான்விழியாய்
தோள்வீசிநடந்திடுசுந்தரியே. 59

ஒளிரும்மணிநூபுரமோலமிட
மிளிருங்கவினாரமெய்மேனிநைய
வளரும்பிறைபோலவயங்குமினே
தளருந்நடைநீடதாரணிமேல். 60

மூச்சூலிகபாலமொழித்தமுத
னச்சாரரவிற்றுயினாரணனார்
மெச்சார்தவமாகியமெய்த்தவமே
யச்சோகுயிலேயமிர்தேயனமே. 61

அறம்பல்கிவளர்ந்தெழவாவின்மிகுந்
திறம்பல்கிடவேகிளர்சீதரனார்
நிறம்பல்கியபோலலைநீள்குழலாய்
புறம்புல்குதிபொன்னுருமின்னியெழ. 62

மைப்பாய்ச்சியகண்டன்மகன்கரவே
லொப்பாய்ச்சொல்லாம்விழியொண்டிருவே
துப்பாச்செறிமேனிதுலங்கியெழ
வப்பூச்சிகண்டாகெவாரமிர்தே. 63

தேனின்கனிவாயமுதத்திருவே
நானங்கமழோதிநறுங்கொடியே
மீனெங்கும்விளங்கிடவெண்மைபெறும்
வானம்புலிவாவெனவோதியால். 64

திக்காக்கியசீர்த்தியினான்றிறல்கண்
மிக்காக்கமிகுத்தவிதர்ப்பனரு
ளிக்காக்குமொழித்திருவின்பமுற
வக்காக்கைபொனாலமர்கோல்கொவா. 65

வம்பீன்மதுமாமலர்மானெனவே
கம்பீன்மணிமாலைகவின்பெறநீ
ளம்பீர்விழியாளளகத்திடையின்
றும்பீமலரூதுதுலங்கிடவே. 66

கொம்பார்குயிலாகியகோமளமே
யம்பாரமிர்தாயவருங்கலமே
வம்பார்குழலீநனிவாழெனவே
யம்பார்விழிமாதரறைந்தனரால். 67

ஈண்டுந்துனியற்றறனெய்திடவே
நீண்டன்றுலகங்கொளுநேமியர்தாள்
பூண்டொன்றுமருந்தவர்போற்றிசெய
வாண்டொன்றுநிறைந்தனளாரமிர்தே. 68

வேதங்கடழங்கிவிரிந்தெழவே
கீதங்கள்பரந்துகிளர்ந்திடவங்
கோதுங்குயில்போன்மொழியொண்டொடியா
மாதுந்தமமாநதியாடினளால். 69

சின்னம்பலவூதியிடத்திசைசேர்
மன்னன்கிளையோமெகிழ்ந்திடலான்
மின்னும்பணிமெய்யினணிந்திலக
வன்னம்பொனிஞடையணிந்தனளால். 70

நீருடியபொன்னிறைகேதகையின்
சோருடியதும்பிதுலங்கிடவே
யாருடிமெயாரமுறுங்களபச்
சேருடினன்செம்மணிமார்பிலக. 71

துன்பம்மறநன்னெறிதுன்னியுற
வின்பம்முறுமங்கையரெண்ணிலர்க
ளன்பின்குடைசாமரைகொண்டடைய
மின்பொன்சிவிகைக்குளின்மேவினளால். 72

கொடிமீதெழுதேர்கரிகோடகமும்
படிமீதுபரந்துமிடைந்திடவா
னிடிபோலவிரட்டுறுபேரியெழ
வடிவாள்கொமென்னவர்மன்னினரால். 73

காளங்கள்வலம்புரிகண்டையுடன்
மேளங்கள்கறங்கிடவேலையெனத்
தாளங்கடழங்கினதாரைசின்னம்
நீளங்கொளுநெள்ளனிறைந்தனவால். 74

திக்கார்புவியோர்கள்செருக்குறவே
மைக்கோலவிலோசனமாதுநலாள்
புக்காண்மணிதுன்னியபொன்மனையி
னக்காரநெய்பாலமிர்துண்டனளால். 75

வேறு.

தெருவினன்மணிசிந்தியுங்கண்புதைத்
துருவமென்னவொளித்துங்களித்துமே
மருவியும்மலர்வீசியும்வண்மைசேர்
பருவமைந்துபுகுந்தனள்பண்மொழி. 76

முச்சில்வாரியுகுத்தவெண்முத்தினை
நச்சினாவெனேரெடுத்தேநகைத்
திச்சையாற்றிருமேனியும்மாசெழ
வுச்சிமேலுறவீசினளுத்தமி. 77

மலியும்வான்மணப்பாவையைவாழ்த்தித்தன்
மூலையுமீந்தனண்மூத்தமளித்தன
ளலையுமீரமணிந்திடமாட்டிமெய்
குலையவாண்டழுதோடினள்கோதையே. 78

சிற்றிலின்மணிசெக்கதிராமெனத்
துற்றுநற்பனிநீர்கலத்திற்சொரிந்
துற்றசித்திலத்தொண்சிறுசோற்றினைப்
பொற்றிருத்தன்கைப்பொற்பிள்ளைக்கூட்டினுள். 79

தொழுங்கரத்திற்சிலதியர்சூழ்ந்திட
வொழுங்குநீதியுருக்குமணித்திரு
மூழக்குமின்னிசைபாடிமுதிர்மணிக்
கழங்குமாடிக்களித்துவந்தாளரோ. 80

வேறு.

பேதைப்பருவம்மிவைபின்னிடநால்
வேதத்தின்மிளிர்ந்தெழுவித்தகியார்
கோதற்றுயரும்பெதும்பைக்கொடியென்
றோதத்திருவர்மொளியாயினளே. 81

அம்மானையும்வென்றடர்கஞ்சனை னு
மம்மானையுமூறியவச்சுதனு
மம்மானையுறந்தவமாரமிர்த
மம்மானையுமாடினள்பாடியரோ. 82

சந்தாருமெயிற்றரளங்களெழ
மந்தாரமலர்க்குழல்வண்டெழவே
செந்தாமரைமேலுறுசெய்யமினாள்
பந்தாடியுவந்தனள்பார்மிசையே. 83

ஆசில்குழையாடவலங்கலுடன்
மாசில்லளியாடமலர்க்குழலா
ளேசின்மணியாடமெய்யேருறவே
யூசல்லினிதாடினளொண்டொடியாள். 84

போராடளியேடவிழ்பூங்குழன்மேற்
சீராடவிளங்கியசெங்கழுநீர்த்
தாராடமணங்கமழ்சந்தனமார்
நீராடலுவந்தனணேரிழையே. 85

அலையெய்துமகோததியாரமிர்திற்
பொலிவெய்தியெழுந்துயர்பொற்கொடியா
னிலமெய்திநிறைந்தமணங்கமழு
மலர்கொய்தனள்வண்டொலிமிண்டிடவே. 86

வளையாடநல்வாவியிலாடினனீர்
கிளியாடியசோலைகளர்ந்தெளியா
யளியாடியமாலையலங்கெழுமான்
விளையாடினள்பல்பலவித்தகமே. 87

வேதங்கள்விளங்கிடமெய்யுயர
வேதங்களிடைந்தறனெய்திடநற்
கீதங்கள்கிளர்ந்தெழுமாநகரின்
மாதங்குநிறைந்துவளர்ந்தனளால். 88

மானேயெனமாமடவன்னமெனத்
தேனேயெனவேதிருவாமெனவே
மீனேர்விழிமங்கையுமாயினண்மின்
றூனேகிகராகியதாமரையாள். 89

வேறு.

கீதவேழிசைபயிற்றினள்கின்னரரெனவே
யோதினள்பலபுராணமுநாமகளொதுங்கத்
தாதுசேர்தொடைச்சனகராசன்பெருமகளாஞ்
சீதையாயிவண்விதர்ப்பர்கோன்மகளெனுந்தேனே. 90

மின்னுமாரமுங்கொழுமணியினங்களும்விளங்கப்
பொன்னினுலமைந்தெழுந்தபூங்கொம்பெனப்பொலிவாள்
கன்னிமாமலர்த்திருமகள்கயனிகர்கண்ணி
யன்னமன்னடைக்குயின்மொழிக்கவினுறுமணங்கே. 91

கற்பகங்கெழுமலருடன்கவினுறக்காட்டி
நிற்பவொத்திமையங்களினிலங்கிடநிறைந்த
கற்புடைத்திருவிதர்ப்பர்கோன்புதல்வியாங்கன்னி
யற்புதத்தணங்கனையவளழகுகூறரிதே. 92

உத்தமத்திருவடிவினிற்கவினுறுமொளியை
வித்தகக்கமலேசற்கும்விளம்பிடவரிதாற்
பித்தர்புத்தியில்பேதையாய்ப்பிதற்றுமாறெனயா
னுரைத்துரைக்கலுற்றேனன்பினூகர்சொல்லெனவே. 93

வேறு.

பிண்டியின்றளிரினையடர்த்துப்பேரித
முண்டகமலரினைமுனிந்துமீமிசை
யண்டர்தங்கற்பகதளிருமாமெனத்
தண்டைபொன்னெகிழிசேர்தாளிலங்கவே. 94

சித்திரத்தலர்ந்தசெங்கமலநல்லித
ழொத்தமெல்விரல்களிற்கவின்கொண்டோங்கிட
வித்துருமத்தின்மேல்விளங்குமிந்துவை
வைத்தெனவுகிரினமாட்சிகாட்டவே. 95

பரியகமிலங்கியபைம்பொன்மேலொளி
தெரிமணிப்பரிபுரஞ்சிறந்துமுண்டகத்
தரியினமூரல்வபோலரற்றவந்தமே
விரிவுறுபுறவடியிணைவிளங்கவே. 96

தெள்ளியகமடமேற்றராசுசேர்வரா
னள்ளிமேலரம்பையூநணுகுமாட்சிபோ
லொள்ளியபுறவடிபரடொண்கானுனி
யெள்ளலில்சானுமேலிலங்குமூருவே. 97

கொடியெனத்துடியெனக்கொண்டன்மின்னிவ
ரிடையினிற்றமனியமிலங்குகோசிகஞ்
சுடருறுகலிங்கமீமணிகள்சூழொளி
படருநன்மேகலைகவின்பரப்பவே. 98

சந்தமாமலர்வெறிதழைப்பவீசியே
வந்தமந்தாகினிச்சுழியின்மாண்பென
நந்திகூதாளிமென்மலரினற்றளை
யுந்தியவுந்தியிலொளியிலங்கவே. 99

அராகிறங்கருமையாயமர்சுரும்பின்கீழ்ச்
சிரோமணிவனமிகச்சேர்ந்துநான்றெனச்
சரோருகவிணைமுகைதாங்குந்தண்டென
வுரோமமாமொழுங்குநற்கவின்கொண்டோங்கவே. 100

நீதிலசித்திரப்படிவந்தீட்டிடு
மேதமில்பலகைமாவிலங்குமாலிலை
மேதகுதமனியத்தட்டமென்னினுஞ்
சோதிசெய்துத்தமோசொல்லற்பாலதே. 101

வேறு.

கோங்கரும்பியமுகையிணைக்கரியின்வெண்கோட்டை
யோங்குபங்கயமுகிழிணையமிர்தமுள்ளொளிர
வீங்குபொற்கலசத்திணைப்பொன்னின்மேருவிணைப்
பாங்கழிக்கவங்குரித்தெழும்பணைமுலையிலக. 102

வேறு.

வலம்புரியமர்ந்தெனமருதவேலியிற்
சலம்புகக்கவின்கொள்பூகந்திதானென
வலம்பியநவமணியிழைததவாடகக்
கலன்களின்வெயில்செய்கந்தரமிலங்கவே. 103

காம்புநேராமெனக்கவின்கொடோளிணை
ஏம்பலாலவிர்கொள்கேயூரமேருறக்
கூம்பலாதலர்ந்தகோகனகமாமென
வாம்பல்வாயரிவைகையழகுமல்கவே. 104

நேருலாவஞ்சுகநிரையின் மூக்கென்கோ
வேருலாங்கவிர்தருமிதழுமாமென்கோ
சீருலாவியவெழில்சேர்ந்தசெங்கையின்
கூருலாவுகிர்க்கவின் கூறலாவதோ. 105

இந்திரகோபமோகவிர்களேந்தியே
தந்தநன் மலர்கொலோபவளந்தான்கொலோ
சுந்தரவிலவிதழ்துலங்குசெங்கிடை
யந்தரமழித்தோளிரதரச்செவ்வியே. 106

முல்லையினரும்பினமூளைத்தமாட்சிபோல்
வில்லுறநிரைத்தவெண்டரளமாமெனப்
பல்லினைப்பதித்தெழும்பவளவாயினிற்
சொல்லமிர்தெனநிலாவனையதூநகை. 107

மாசிலாநறுங்குமிழ்வைத்ததாமென
வேசில்சாமீகரத்தெள்ளின்பூவென
நாசியேருறமுகநால்கொண்டோங்கியே
பேசலாந்தரத்ததோபிரமற்காயினும். 108

அயிலிரண்டாமெனவலகம்பாமெனக்
கயலிரண்டாமெனக்கடல்களாமெனச்
செயலிரண்டெனவகன்றொளிசிறந்திடு
நயனநீலோற்பலநவிலலாவதோ. 109

மருவிநற்பயோததிதுயிலுமாலெனச்
கருமையும்வெண்மையுங்காணவேகளித்
தருளளித்திணையில்காதடர்ந்துநீண்டெழும்
பெருமையுற்றஞ்சனம்பிறழுங்கண்சளே. 110

சிலமிலிலங்கையாடியவன்றன்மேல்
மாலிருகரந்தனில்வளையவாங்குவி
னீலமுற்றிரண்டதாய்நிவர்ந்தநீர்மைபோல்
வேலிலங்கியகண்மேற்புருரமின்னவே. 111

வேறு.

மயிர்வினைக்கருவிவல்லோவன்பெனவயங்கிக்காட்டிச்
செயிரறவளர்ந்தகாதிற்செழுமணியினங்கள்சூழ்ந்து
வயிரமுமிளிரவாரிவலம்புரிமணிவயங்கிச்
செயலுறமவியுமாலைழக்குழைகளுஞ்சிறந்ததம்மா. 112

வேறு.

வட்டவெண்மதியினைவதிர்ந்தபாதியை
யிட்டசொலியைக்கிடுமெளிகத்தெண்டினை

யொட்டிவைத்தனவெனவொளிருமாடகச்
சுட்டிநன்மணிகளுந்துலங்கிக்காட்டவே. 113

வேறு.

மங்குலைமுனிந்துமஞ்ஞைத்தோகையையிகழ்ந்துமல்குங்
கங்குலிற்பிளப்பதென்னக்காளமார்கவரியென்னப்
பொங்கலிமுரலநாவிபொருந்திடவெறிகள்வீசச்
சிங்கலிலறலாரைம்பால்செப்புதற்கெளியதன்றே. 114

சிங்கலிலளகந்தன்னாற்செல்வெண்மையாகிப்பாதித்
திங்களைநெற்றியினாற்றேயச்சிறந்திவிழியினாலே
கங்கபத்திரமாவத்திற்புகக்கதித்திலங்கியோங்குங்
கொங்கையார்க்குவடுகோடுகொள்ளவேமறைந்ததன்றே. 115

குழையினால்வள்ளைவாவிகோமளத்தோள்களாலே
கழையினம்வெடிப்பக்காந்தள்கரத்தினாற்காட்டினேக
விழைகளுடாவினுள்ளையிடையினானுழையவாம்பற்
குழையெலாமதரந்தன்னாற்பகலிடைக்கூம்பிற்றன்றே. 116

சுந்தரநுதலால்வானிற்றுலங்குவிற்காணுதேகக்
கந்தரமதனாற்சங்கங்கடலிடைவெளுத்தேசாயத்
தந்தநல்லவிரான்முத்துத்துளைபடத்தாழ்வொன்றில்லா
வுந்தியினயத்தோடொன்றுஞ்சுழியழிந்தோடிற்றன்றே. 117

வேறு.

மேகமுதியாதொளிருமின்விடமிடைந்த
நாகமுமிழாதமணிநந்துமுமிழாத
வோகையுறுமாரம்வரையூடுபிறவாத
வாகுபெறுநல்வயிரமாமலரின்மாதோ. 118

நாகம்வழையாமலகமாதவிநரந்தை
பூகம்வகுளங்கதலிபொற்புடையசூத
மாகமுறுசண்பகம்வருக்கைவளர்தாழை
மேகமுறுமாரமுயர்பாடலம்விளங்க. 119

தூவியினமோடுபெடைசூழமயிலாடக்
கூவுகுயிருவுகிளிகூடவளிபாட
வாவுகவியூகநிரைமாங்கனிகள்வாரி
மேவுபொழிலூமெணிமண்டபம்விளங்க. 120

வாசமலர்குங்குமமணங்கமழுமேனி
யேசின்மணியாரம்வயிரங்களுமிலங்க
மூசுவரிகீதமுருகார்குழலின்மொய்ப்பத்
தேசுநிரைமங்கையிருசேவடிபெயர்த்தாள். 121

பஞ்சுதிகழ்மென்கமலமானபதமீதின்
விஞ்சுகதிரஞ்சுமணிநூபுரமிழற்றக்

கொஞ்சுசுகமன்னமயில்கூசவெறிவீச
வஞ்சியுறுகொம்புநடைகற்றதெனவந்தாள். 122

ஏமமணிநற்கவிகையேந்தினர்களித்தே
சாமரைகள்வீசினர்கடாமமணியோதி
வாமமலிமங்கையர்பல்லாண்டிசைவழங்கித்
தேமலர்கள்சிந்தினர்கள்சேவடியிலங்க. 123

மின்னுமணிமண்டபம்விளங்குசுடர்வீசப்
பொன்னவிர்கொள்கொம்புமலர்மல்கியதுபோலுங்
கன்னிமெய்யிலங்கியகலன்களுறமேவு
மன்னமெனவெய்தியரியாசனமமர்ந்தாள். 124

சிந்தைமகிழ்ந்தனர்கண்மாதவர்திரண்டே
வந்துமலர்தூவிமொழியாசிகள்வழங்கிச்
சுந்தரவிதர்ப்பனருடோகைகளினத்தே
னிந்திரைமகிழ்ந்திடவிருந்தனர்சிறந்தே. 125

தும்புருநன்னாரதரியம்புசொலின்விஞ்சக்
கிம்புருடர்நாணவிசைகீதமொழிகேளா
வும்பர்கணிறைந்துமலர்தூவவொளியேசங்கு
மம்புயமடந்தைமகிழ்வெய்தியமர்வேலை. 126

நாச்சியார் திருவவதாரப் படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - 532.

---

## 7 - வது, கஜேந்திரன் மோட்சப் படலம்.

மாவிடவராவினணைவைகிமறையோது
நாவுடையநன்குறளதாயவுணனல்கு
மூவடியின்மூவுலகுமுற்றவுமளந்த
சேவடியிரண்டுகினைமின்வினைகடர. 1

பாருதையமானகரிதேர்நிரைகள்பாய்மா
மாரதர்கண்மாளவிசையற்கிரதமாவூர்
சாரதியுமானவரிதாள்பணிதவத்தோ
னாரதனெனும்பெயரினான்மறைகொணவான். 2

மாதவன்முராரியரிமண்ணிடையிழிந்தே
யாதவர்குலத்தினிடையெய்தவெழில்வேலை
மீதமிர்தமெல்லியல்விதர்ப்பன்மகளென்றீண்
டோதகிலன்வந்தனனௌனுருகுநெஞ்சன். 3

தண்டுகுடைபொற்சிரகம்வீணையொளிரத்தான்
கொண்டெயர்கரத்தன்விடையேறியருள்கோவு
மண்டர்களுமெண்ணவருநீதியறிவாளன்
மண்டபமிலங்கவமர்மாதுமுனர்வந்தான். 4

புண்டரிகனும்புகழும்வீணைமுனிபோதக்
கண்டனள்விதர்ப்பன்மகளாருகமலத்தேன்
விண்டலம்விளங்குமணியாபரணமின்ன
வெண்டவன்மலர்ப்பதமிறைஞ்சியெதிர்கொண்டாள். 5

திருக்கறுநல்வீணைமுனிசிந்தைமகிழ்வெய்த
வருக்கியமளித்தனளருந்தவனுமாசி
யிருக்கினமொழிந்தருகினிட்டதவிசெய்த
வுருக்குமணிநாயகியுவந்தினிதிருந்தாள். 6

அருந்தவநிறைந்தலைகொளாழியமிர்தின்முன்
னிருந்தவள்விதர்ப்பன்மகளென்னவொளியெய்தும்
பெருந்தவகிலத்தின்மிசைபெற்றனமெனச்சீர்
திருந்துமறையோன்மகிழவேதிருவியம்பும். 7

ஏதமறநீயிவணினெய்தியதியான்செய்
மாதவவினைக்கிலளவில்லைவருகாலம்
பூதமிகழ்காலமுணரும்புநிதவென்றே
யோதியவுருக்குமணிபின்னுமுரைசெய்வான். 8

மூவரெனவேயுலகமூன்றையுமளிக்குந்
தேவனவனெங்குறைவனென்பதுசிறப்பப்
பாவமகனன்முனிவநீபகர்தியென்று
பூவினமர்மாதருளவேபுகலுநூலோன். 9

பூதலமும்வானுமெரிகால்புனலுமாகி
வேதமும்விளங்குமுருவாய்வெளிசெய்யாத
வாதிமுதலின்செயலறிந்தபடிசொல்வேன்
மாதினிதுணர்ந்தருடியென்றுரைவழங்கும். 10

ஞாலமுயர்வானமமர்சிவனனியுற்ற
கோலமறவேகவயமாகவிவர்கோமா
னீலமுகில்போனிகரிலாதசிசுவாகி
யாலிலையின்மீதினமர்வோனவன்முகுந்தன். 11

எண்டவர்களிந்திரவியெண்டிசையர்வானத்
தண்டரயனேஇவரையேழ்கடலமர்ந்த
வண்டமெனிலாதவுதரத்திடையடக்கிக்
கொண்டலெனவாலிலையின்மீதினமர்கோமான். 12

நாபியினிலேழ்பொழிலுநான்முகனுநண்ணத்
தீபமெனநான்மறைகள்செய்துசிவன்மீதிற்
சாபமறவைம்புலனடக்கியதவத்தோர்
பாபமறவீமெருள்சோதிபரமேட்டி. 13

ஆன்றவுலகங்களையுமுண்டிலையமர்ந்து
கான்றகழாலளவுகொண்டிடர்கடிந்தே
மூன்றுசுடராயறிஞர்முத்திபடர்தற்காண்
டேன்றியகொள்கொம்பெனவுயர்ந்ததிருமூர்த்தி. 14

அண்டமுதலாகியதினப்புறமுமாகிப்
புண்டரிகராயரர்புரந்தரருமாகி
யெண்டிசையுமெவ்வுயிருமெண்வரையுமாகித்
தெண்டிரைகொள்வேலைகளுமாய்திருமார்பன். 15

நீலமுகின்மீதின்மலரம்புயங்நிறைந்த
கோலமெழவாழிவளைவாள்கதைவில்கொண்டு
காலனெனவேவருகராவினலைகைமா
மூலமெனவந்ததுணரென்றமுனிசொல்வான். 16

வேறு.

இரணியந்தாரகீடயமென்றிவ்வணந்
தரிதிரிசிமையந்தாரகையைத்தாவவே
திரையுறுசீகரஞ்சேணிரைக்கும்பாற்
பரவைசூழ்பருப்பதம்பகரலாவதோ. 17

இயல்புறத்துயிலரியெழுந்துமூவணச்
செயலுறமூர்த்திகடெரியநின்றபோற்
பயமுறவலைவெழும்பரவைசூழவா
னுயரவோங்கியதிரிகூடவொண்வரை. 18

அடியெலாமரகதவவிர்களூன்றுற
நடுவெலாந்தமனியப்பத்திநண்ணிடத்
தடமெலாம்பாண்டிலிஞரஞ்சாரமா
முடியெலாமரவுமிழ்மணிகண்மொய்த்ததால். 19

வருதிரைநதிகளுமலர்களோடையும்
விரிவுறமுடிவினத்ததிகம்விஞ்சமீ
யருவிகளிழிவனவரிமெய்யெங்கணுந்
தரளமாவடம்புரடன்மைபோன்றதே. 20

இரலையாவிகமெண்குசவரம்யாளிக
ளரிகிரிகரிமரையருணம்வாரணம்
வரைநிகர்காரமைவருடையெண்ணில
பரவியவுயர்பருப்பதத்தின்மீதரோ. 21

கற்பகநிரையெனக்கவின்கொண்டோங்கலி
அற்புதத்துணைமலரனந்தமல்கிட
பொற்புறும்பொழிலெழில்புயலினோங்கிட
நிற்பனகோகிலநிறைந்துகூவவே. 22

சித்தர்சாரணர்கள்கெந்தருவர்சீருறு
வித்தியாதரரியாழ்விளங்குகின்னரர்
சித்தசன்மயல்கொளுந்தேவமாதரார்
நித்தலும்வரைமுழைநிறைந்துபாடுவார். 23

ஓதிமமொதுங்கநல்லொளிகொணூபுரப்
பாதமதிசையுறவளைகள்பம்பவன்
காதிணைவிழியுறக்கந்துகங்கொடே
மோதிமொதரார்குழாங்களோர்முறை. 24

இரணியவம்பரமிலங்கமாமணி
வருணமேகலையிடைவயங்கிக்காட்டவெண்
டரளமாவடமொடுதாமமாடவே
யரிவையரூசலாடுவர்களோரிடம். 25

கைதனில்வயிரகங்கணமிலங்கவே
மெய்தனிற்கருப்புரவெறிகள்வீசநற்
பொய்கையின்மருங்கினார்பொழிலினுண்மலர்
கொய்திடுங்கோதையர்குழாங்களோரிடம். 26

ஓவியமுயிர்பெறவொளிருஞ்செய்கையிற்
காவியுங்கமலமுங்கரத்தினாலெறிந்
தேவிலாமணிவெயிற்றிகழவெண்ணிலா
வாவிநீராடுமங்கையர்களோரிடம். 27

தரளமார்வடங்களுந்தனத்தின்மல்கவே
சுரிகுழல்வெறிகளாலளிகடுண்ணவே
கரமிசையாழுறக்கற்புற்பரதவ
முருகிடவோதுவார்குழாங்களோரிடம். 28

பாடகம்பரிபுரம்பதத்திலங்கவொண்
சூடகங்கரமிசைதுலங்கவெய்திநீ
ளாடகமண்டபத்தமர்ந்துகொண்கனைக்
கூடியேகளிப்பவர்குழாங்களோரிடம். 29

இனையதோர்பொற்புறவெண்ணில்கந்தரத்
தனமெனுநடையுடையணங்கனார்கடாந்
தினமுமற்புதமுறச்சேர்ந்துகொண்கரோ
டினிதுறும்வரைநனியியம்பலாகுமோ. 30

அரிவைமார்மகுணனோடணிந்தாமத்தி
னூரமிசைக்கலவியினூலாவுமாசுகம்
வரவருமணஞ்செறிவருணனல்வள
ரிருமகத்தென்பதோர்பொழிலிலங்கவே. 31

தினமலர்காய்கனிசெறிமந்தாரநற்
சொனமலர்ப்பாரிசாதநலருச்சுனம்
பனசமாம்பிராதவம்வழைபல்லாதக
மினியசெம்மீரமீந்தாலங்கிஞ்சுகம். 32

வேறு.

மதுகக்கச்சூரம்பாடலங்கணலம்வகுளஞ்சம்பகம்பிரியாழங்
கதுமைசேர்தமாலம்பிசுமந்தமாரக்கதலியாசினிவடங்கதம்பஞ்
சுதையுறுகனிசேர்கபித்தமிங்குதம்வேதசங்குந்தங்குபிசகஞ்சூதம்
விதுவின்மண்டலஞ்சேர்சாலநீள்சிரீடம்வில்வமாமலகமாதவியே. 33

கோவிதாரம்வானோக்கியபிலக்கங்குரவகாரந்தைநற்றூலக்
தேவதாரந்தாழைத்திரளதவும்பாட்ளிசெறிந்திடுபூக
மேவுதாரகைக்குமுயரவேவளர்க்துவிளங்குபுன்னைகமாகனத்திற்
றூவுதாரத்துட்டமனியநிகர்த்தமலர்தழைத்தவுத்தியாவனமே. 34

கோகிலங்கபோதமஞ்சுகம்பூவைகுரண்டம்பாராவதங்கங்கங்
கேகையமுதலாய்க்கிளர்ந்திடும்பறவைகெழுமிடவலிமுகவினங்க
ளாகமாமலரைப்பறித்தெறிந்தெழுந்துநற்கதலிப்பழமருந்திப்
பூகமேற்றூவித்தாழையினிளநீர்பருகியாண்டோடிடும்பொழில்வாய். 35

நிகரில்வானதியினீரெனத்தெளிந்துநிறைந்திடும்வாருதியெனத்தா
னகலநீளந்தாழாழம்யோசனை நூறு கியுவோடையினறுகால்
புகவலர்களினந்தமனியவனசம்பொலிவுறுமுற்பலங்குமுத
மிகழ்வில்கல்லாரநிறைந்துயவானினுடுவெனவிலங்கியதன்றே. 36

வேறு.

சாதியுமவ்வலுந்தளவும்பிச்சியுஞ்
சீதம்விஞ்சிடுகரவீரமுந்திகழ்ந்
தேதமில்வலம்புரியிலங்குசெவ்வந்திப்
போதினோடோடையெம்மருங்கும்பொற்புற. 37

விரைமரைமலரனம்வீற்றிருந்திடப்
பொருசலவாரணங்கரண்டநேமிப்புள்
ளிருமருங்குறவளியிசைகள்பாடவே
பருவரால்கழாயர்போற்றுள்ளிப்பாய்ந்தவால். 38

சேலனைவரால்கயல்வாளைதேளியுங்
கோலமார்வள்ளையின்கொடியிற்றூவிட
வால்வளைநெருக்கச்சின்மச்சம்பாறவே
மேலெழுகச்சபம்விளங்கிக்காட்டிய. 39

வனசமாமலரின்வாஞனெக்குமாம்பிரக்
கனியுமிழினியநீர்கலந்துபாயவாண்
டனநுகர்ந்தாடநல்லளிகள்பாணியோ
டினிதுடன்பொதுளவோரிலஞ்சியுள்ளதால். 40

வேறு.

உருவுடையகெந்தருவ னூகுவென்போ னோடையிற்றன் மனைவிய ர்களுடனூநண்ணிக், கரைமருங்கின் மருங்கின்மிசை வயங்குமின்றகலைய றவந் நீரினிடைக் கலந்தமூழ்கி, விரைபுரையு மலர்பறித்தங் கெறிந்தே கூடி விழுந்தெழுந்து விநோதங்கள் பலவுஞ்செய்து, வரைவில்களிப் பெ ய்திடவா னரம்பைநாண மங்கையர்க ளுடன்மேவி மகிழும்போதின். 41

தேவலனூமுனிவனந்தச் சலத்தின்மூழ்கித் திகழ்ந்திடலுங்கெந்தரு வ னூகுவென்போன், பாவமறநீரினுள்ளே முழுகிக்காமம் பற்றறுத்தத வத்தோன்றன் பாதம்பற்றச், சேவினூறு மரன்போலச் சீறிநீதான் செ ருக்குறவென் றுள்பற்றுந் தீமைதன்னல், வாவுசினக்கராவெனவே மூ ன்றுகூட வரையிடத்தி னோடைவாய் விழுவாயென்றான். 42

சரியின்முனிசாபமிட வூகுவென்போன் றாழ்ந்திறைஞ்சி யென்பி ழையைத் தணியென்றோத, வருளுறநற்றேவலன்று னவனைநோக்கி யா ழ்ந்திமெவ்வோடையினிற் கராநீயாய்நீர், பருகவருகரிதாளைப் பற்றவெ ட்டாப் பரமனெய்தித்திகிரியினூ லுன்றனுக்கை, யிருபிளவாக்கியபோ திப் புன்மையோவிக் கெந்தருவவுருவாகி யேகெனறுனல். 43

வேறு.

ஆசகன்முனிவனிவ்வாறறைந்திடவூகுவென்போன்
மாசுறமிடங்கராகிவனப்புறும்பயோததிக்கு
ளோசையார்திரைகள்சூழ்திரிகூடவரையினோடை
வாசமாம்வனசமல்கும்பயதினுள்வயங்கிற்றன்றே. 44

வாரியைக்கிழியவோமெகரம்போலோடையின்க
ணூரமெம்மருங்கும்பாயகளினம்வேர்பறியச்சேல்கள்
பாரியவரால்கள்வாளைபயமுறக்கமடம்பம்ப
நேரிலாக்கராவுமாழ்ந்துகிமிர்ந்தெங்குந்திரியுநாளின். 45

சந்திரன்குலத்துட்டோன்றுந்தராபதிதென்னமன்ன
னிந்திரன்தன்னையொப்பானிந்திரதநூய்மனென்பான்
சுந்தரவடிவினூலுசுருதிநூல்வழியையோம்பி
யந்தமார்செங்கோலோச்சியுலகெலாமாண்டானென்றே. 46

ஒன்னலரவியவெட்டுத்திசையுமோர்செங்கோலோச்சி
யிந்நிலத்தறன்மெய்நீதியியல்பெலாம்வளரவாண்ட
மன்னவன்மூன்னாட்செய்தநல்வினைவருதலாலே
பன்னகப்பாயன்மேவும்பரமன்றன்பத்தனானான். 47

தந்தைதாய்தனையர்தாரஞ்சகோதரர்செல்வமெல்லா
மந்தரத்தனுவையொத்துமயத்திடைக்குமிழிபோன்றுஞ்
சிந்திடுமிளமைநில்லாதேய்ந்திடுமோயக்காலன்
வந்திடுமென்பதுனனிமன்னன்மாலடியனானான். 48

அளவிலாப்பிறவியென்னுமளக்கரைக்கடக்கவிட்டாண்
டுளமகிழ்ந்திருக்கமீளாப்பதவியையுதவுமையன்
துளவணிபரமனல்லாற்சோதிவேறில்லையென்று
தளர்வில்வேதாந்தமோதுந்தத்துவத்தறிந்தானன்றே. 49

சாத்திகபுராணந்தன்னிற்சதுமறைநெறியின்மூன்று
நேத்திரனிடரைநீக்கநேமியைத்தரித்தேயார்க்கு
மூத்தவனிவனேமீளாமுத்தியைப்பத்தர்க்கீயுந்
தீர்த்தனுமிவனேயென்னச்சிந்தைசெய்திருந்தமன்னன். 50

ஆளுமவ்வுலகம்விட்டானளப்பிலாவிபவம்விட்டான்
கேளிரைவிட்டான்றாரந்தனையர்கிட்டாமல்விட்டான்
மூளுமிந்திரியந்தன்னைமுடுக்கித்தன்கீழாளாக்கி
நீளைநாயகனைநெஞ்சினிறைத்தவனகரைநீங்க. 51

விலாவெலழுசரத்தால்வாலியிராவணனறவீழ்த்தோனைச்
சொலாலுறவேத்திநாளுஞ்சூழ்ந்திடுஞானமெய்தப்
பலாசமாம்பிரந்தமாலம்பாண்டில்சூழ்பழுவந்தன்னிற்
குலாசலமென்னுமோங்கல்குறுகினான்மன்னன்மாதோ. 52

வேறு.

உடலமாவிரதமிவுளியிந்திரியமூரனுறுமனம்பிடிபாச
மடலில்சாத்திகநல்லஞ்சுருவாணியடர்ந்திடும்பிராணனுண்டிருசு
விடலுறுமறனோருருளையகன்றிவினையுறுமதன்மமோருருளை
கடுகியேசெல்லுநெறிசுவையொளியூறோசைநாற்றங்கடான்கடுக்கும். 53

இனையதோரிரதவலனெனப்புந்தியிந்துறுமாளுறுசீவன்
றனுநலமளிக்கும்பிரணவஞானசரம்பரன்பதமதற்கிலக்கு
வினையுறுநிரயத்தழுந்திடாததன்மவுருளையவெட்டியேநீக்கி
நனிதருமத்தினுருளையையறிஞர்நடத்திமாலிலக்கைநாடுவரால். 54

பிரணவத்தனுவின்விடுத்திடுஞானம்விசிகம்பேராயிரன்பதத்தின்
மருவவவ்விடத்திற்சீவனுமணுப்போல்வயங்கிடப்புகுதுமாறறிந்தாண்
டரசனச்சமறமாசிலாஞானமச்சுதன்பதத்திலங்குறத்த
னிருகணீர்புரளமவுனனாயிதையமுருகிடவிருந்திடுநாளின். 55

பரவையைநகருங்குறுமுனிவரனும்பாண்டியன்மவுனனாயிருப்ப
வெரிசினத்துடனற்றவனெனைப்பணியர்திருந்திமெதரினானிருப
கரியுருத்தரித்துத்திரிகுதியெனவேகழறியேகிடலுமவ்வரசன்
பெருவரைநிகராம்புகரிபமாகிப்பெயர்ந்தனனவ்விடமொருவி. 56

வடவரைநிகர்த்துப்பெயர்ந்திடும்பகடுவெட்டிசைமுடுகியேபாலின்
கடலிடைநடுவிற்கனமார்திரிகூடப்பருப்பதத்தினைக்கலந்து
கடமெலாநிறையும்பிடிகளுஞ்சேர்ந்துதந்தியினீட்டங்கள்சூழக்
கடகளிற்றரசாயடவிகடோறுங்காமுறுத்திரிந்தநாடன்னின். 57

கதிரவன்சுடராலடிபொடியுறவேகடுகிநீர்பருகிடநினைந்து
மதமுறுமரிகள்பிடிகளெண்ணிலாதகுருளைகளிருமருங்குறநீ
ளுததியுமஞ்சப்பிளிறிடுமொலிகளுருமெனவடவரையென்னப்
பதநிலம்புதையப்பாதவமுறியப்பருப்பதந்துகள்படவந்தே. 58

கடிதடவிகடக்கரியிபஞ்சூழக்கனகமால்வரையெனவரவே
சடசடவெனவாண்டொலியுறப்பிறங்கறுகளுறச்சாலம்வேர்பறிய
வடவியினரியாவிகங்கரிமரைகளருணமெண்குழுவைகண்மயிட
முடல்கரைந்திடவேதிசைதொறுங்கொட்புற்றோடிநீள்கந்தரங்கரந்த. 59

ஆடகவரைபோலுயர்ந்திடுகரிசென்றயமன்னபொழிலிடைநாப்ப
ணோடையின்விழுந்தந்நாரமுள்ளழுந்த முழுகியாண்டொளிபெறவெழுந்
நீடியகரத்தாலமையுநீர்பருகிநிரைமணன்மெய்யெலாமிறைத்துக் [து
கூடிவந்துயரும்பிடிகளுக்கன்பாற்றுதிக்கையாலயங்கொடுத்ததுவே. 60

பிடிகளுங்குருளையினங்களும்பருகப்பெருங்கரத்தமையுநீர்கொடுத்தாண்
டுடலெலாநிறைபவயமும்வாலுகமுமுயர்ந்தெழுந்தேயிறைத்திடவே [மா
புடைவருமிபத்தின்குழுவெலாமிறைத்த புனறன்மெய்யருவிபோல்விழ
வடவரையெனவவ்வோடையையுழக்கிமதமுறக்களிக்கும்வேலையின்வாய்.

வேறு.

ஆலமெனக்கடல்வடவனலாமெனவுயிர்வவ்வுங்
காலனெனக்கொடிதானகராவுங்கடிதெய்தி
நாலுகையாலிபமெய்யினிறைத்திடுநல்வேழக்
காலினைவாய்கொடுகெவ்வியிசித்தனவிசையோடே. 62

கடுவிடமாமெனவெய்துகராவடுசினமோடே
வடவரைநிகர்கரிபின்வருதாளினைவவலோடுங்
கடமுறுமிபமிருகண்கள்சிவந்துக்கிரமோய
விடிபடவதிர்குரல்பிளிறியிசித்ததுகரையேற. 63

கரியுரனோடுமிசித்திடவுங்கதமுறுநெஞ்சோ
டொருசிறிதசைவிலதாகியிடங்கருத்தேதா
னெரிநயனத்தொடுபற்றியிசித்திடவிபமெல்லாம்
வெருவியரற்றினபிடிகளொடேகரைதனின்மேவி. 64

மதவிபநிரையொடுகுருளைகள்பிடிகளும்வலிமிக்க
கதமுறவொளிர்கரிகாறலைகரமுறவிவைபற்றி
வுததிநிகர்த்திடுமோடையைவிட்டுயர்கரையேறக்
கதுமெனவிசைகொடிசித்தனமுராணுறுலைகையாலே. 65

மத்தகசத்தினமெண்ணிலபிடியொடுவெந்தேகை
யொத்துவலித்திடவுஞ்சிறிதசைவிலஃவுரன்மெய்யின்
மெத்துசராவதுகண்டுலவித்திடவிசையாற்றங்
கத்திகளெங்கணும்வெருவியிருந்தனவலறித்தாம். 66

கூடியிசித்திடுமிபகிலேவலிகள்குறைந்தோட
வாடகவரையிவர்கரியுமிசித்திடவயமாரு
மோடையினக்கிரமொத்துவலித்திடவிசையாலே
வீடியகச்சபமக்கியம்வால்வளைமிதியுற்றே. 67

வேறு.

அம்புயமலரிலேவேரொடுமெற்றனவாம்பறணிந்தனவால்
வம்பவிழ்மாலையின்வனசமரிந்தகுவலயமயங்கினவால்
கம்புசிதைந்தனகுமுதமிறந்தகலாரமமிழ்ந்தனவா
லும்பலுநக்கிரமும்முறவோடைகுழம்பியவள்ளலுற. 68

பாய்பகடிங்஗னவலிக்கவிட்ங்கர்பயத்துளழுந்திடவே
ஆயிரவருடமிவ்வண்ணமுறைந்திடவயமுறுநக்கிரமெய்ப்
பாயுரம்விஞ்சிப்பருவரையிவர்கரிபாதமுமெய்முரணு
மோய்வுறநயனமிருண்டுசெய்வகையிலதாகியுளைந்ததரோ. 69

மெய்யொடுகால்கரமோய்ந்திடவேவிழிசுழலமெலிந்துகரி
யுய்வகைகாண்கிலதாகியுளைந்தருவாயுருவாயொளியாய்ப்
பொய்யறுமெய்யனுமாய்ப்புவிகாலெறிபுனல்வெளியாயனலாய்
வெய்யவர்வேரறவீட்டியவாதியையுன்னிவிளம்புமரோ. 70

வேறு.

ஊருருகருமம்பேர்குணபாவமிவைகளிஞென்றுமில்லவனு
யாருமோர்ந்துணர்ந்தொன்றறிவதற்கரிதாமவனுமாயிருந்துமிவ்வண்டஞ்
சீருறப்படைத்தங்களித்தழிப்பவனுய்ச்சிறந்தும்பரேசனுயுயர்ந்த
காரணப்பூதப்பகவனுய்ச்சகலகாட்சியாமுதல்வகாவென்ற. 71

முத்தியினுருவாய்க்களைகணுய்ஞானக்கண்ணுமாயெவர்க்குமூத்தவனுய்ப்
பத்தவச்சலனுய்மாயனுய்ஞானப்பானுவாய்ச்சார்ந்தனுயநந்த
சத்தியவேதபுராணரூபனுமாய்ச்சாற்றுகைக்ககப்படாதவனுய்ச்
சித்தியாயெங்குமுளனுமாயுயருந்தேவனேகாத்தருளென்ற. 72

நீதியாய்நிட்காரணனுமாய்நிருவிசேடனுயோகிகட்கெட்டாச்
சோதியாய்மூலப்பிரகிருதியுமாய்த்துலங்குகைவல்லியத்திறையா
யேதமிறருமார்த்தத்துடன்காமமுத்தியுமீய்ந்திடுமெவனு
யாதரவிலாதார்க்ககப்படாவாதிமூலமேகாத்தருளென்ற. 73

நயனநீர்புரளநளினமாண்டேந்துநாலுகைசிரத்தின்மீதோங்க
வுயர்வறவுயருமொருவனீகாவென்றும்பருனுரைத்தசொற்கேட்டுச்
சயிலவில்விறையுந்திசைமுகன்றானுமிக்குணந்தமக்கிலாமையினு
லயருமாகரிமுன்னனுகிலரண்டத்தப்புறத்தமர்ந்தவனறிந்தான். 74

நியமாவினையான்மைமையாய்ச்சிறுவரிலாமையாற்றினந்தினமெலிந்து
துயநல்வினையாற்றவத்தினுற்பயந்தசுதனமுதலைழத்திடக்கேட்ட
தாயெனவிபங்காவென்றசொற்கேட்டுத்தளர்ந்திடும்வைகுண்டநாத
னேயெனுமூன்றுனிருந்தவாதனத்தினிழிந்துபுட்சிறைப்புயத்தானன்.

பீதியுற்றிடப்பார்ப்பதறியேயோடும்பேடைபோலேகுமாயனைக்கண்
டேதநிங்கெனவேவெருவுதேவியர்க்கொன்றியம்பலானெதிரெய்துஞ்
சாதன்வந்திறைஞ்சநோக்கலான்ககத்தினுயகன்புயத்தினனுகி [சேனை
வாதமுமயரவவன்றனைக்காலினிடுக்கியேகடுகிவந்தனனுல். 76

சுந்தரக்கலுழன்புயத்தவனுகித்துளங்கியகரியழைத்திடுசொற்
பிந்தவவ்வோடைமருங்கினின்முந்திப்பிரானிலத்தமர்ந்துதன்கரத்தாற்
றந்தியைப்பற்றியிழுத்தவண்வலிசெய்கராவின்வாய்தறித்திடநேமி [ன்.
யுந்திகல்லிபத்தைவெருவலையெனவாண்டுச்சியினங்கைவைத்தணைத்தா

கரியினையணைத்துக்கராவினைவதைத்தகருணையங்கடலினைப்போற்றி
யரனயன்குபேரன்மருதசாரணர்களருந்தவர்வலாரிகந்திருவ
ரிரவிகேசரர்களியக்கர்கின்னரர்களிலங்கியவரம்பையருடனே
சுரர்மலர்சொரிந்துதுதித்தனர்பேரிதுந்துமிசினம்பனைமுழங்க. 78

இந்திரன்கமலன்முதலினோர்முறையாலேத்தியாண்டிறைஞ்சிடும்போழ்
செந்திருமகுணன்விடுத்திடவயங்குதிகிரியாற்போழ்ந்திடுகராவின் [திற்
வெந்துயரறவானெதிரினாகுவனும்விளங்குகெந்தருவனுயெழுந்து
சுந்தரவரியையிறைஞ்சியாழிசையின்சுருதியாற்பாடியேகினனுல். 79

திகிரிசென்றறுப்பக்கராவுருவொருவத்தேவலன்சாபமுமொருவி
நிகரில்கெந்தருவனுகியேவயங்கிநெடியவனேகெனப்போனன்
பகடெனவிடங்கர்பற்றிடமெலிந்தபாண்டியன்பரன்கரந்தீண்டப்
புகல்வதற்கரியசதுர்ப்புயம்பீதாம்பரமுடிபொற்புறநின்றான். 80

அரசனுய்க்கரியாயமர்ந்திடுஞ்சனனமகலநல்லரியுருவாகிச்
சரியிலாச்சாலோக்கியமுடன்சாரூப்பியமுறச்சங்குசக்கரங்கை
தெரியநற்சாமீப்பியம்பெறும்பத்தனுகியேசிறந்தவண்வயங்கி
மருவமர்துளவணியிணையிலாவடியின்வணங்கியுன்மகிழ்ந்தனனன்றே. 81

இடரறக்கராக்கெந்தருவனுயேகவிபம்வளையாழியையேந்தும்
வடிவுடைச்சாரூப்பியத்தினையடையவகுத்திவன்காத்திடுமாய
நெடியவமுகுந்தநேமியமுராரிநின்மலவச்சுதவனந்த
படியளந்தருளும்பரமவென்றேத்திப்பணிந்தனர்பங்கயன்முதலோர். 82

அரனயன்புருகூதன்சுரர்துதிப்பவவர்களையேகுமினென்று
கருடவாகனனுய்வயங்கிவேங்கடமார்கரியுருவொழிந்திடநார்கை [கு
யுருவனுயிலங்கும்பிருத்தியனுடனே யொளிகொள்வைகுண்டத்தினேங்
மிரவிவர்கோடியவிர்பொலிந்தெழுந்தவெழின்மணிமண்டபத்தமர்ந்தான்.

சருகுகால்புனலைப்பொசித்துயர்வரையிற்றழலிடையளப்பிலாயுகங்க
ளரியநற்றவங்கள்புரிந்தயோகிகட்குமகப்படாதுயர்ந்திடுஞ்சோதி
கரிகரமெடுத்துக்களைகணுமாதிமூலமேகாவெனமொழிந்த
வுரையினினுதவுநலச்செயலுணர்தியென்றநாரதமுனியோதும். 84

வேறு.

பிரமனிமையோர்கண்முனிவோரொடுபினகக்
கரமுடையவரனுமமர்முட்டைகழியப்போய்ப்
பொருமியெழுநீர்விரசைபொங்கவவிர்தங்கும்
பரமபதமீதினுறையும்பதுமநாபன். 85

அண்டமெணிலாதனவளித்தவைகள்யாவு
முண்டெனவுறைந்துயரமீதினவிர்கொள்வை
குண்டமெழில்கொண்டகுருமாமணிகுலாவு
மண்டபமிசைத்திகழுமாதவன்முகுந்தன். 86

ஆணிடுபெண்ணலியுமாகியடன்வானோர்
பேணுமுருவாகியருவாகிவர்பெம்மான்
காணுமுருவாயவனிமீதிடர்களைந்த
தாணுவெனநின்றசெயனீயுணர்திதக்கோய். 87

என்றிவுரைகூறியநல்யாழ்முனியைநோக்கி
நன்றிகொள்விதர்ப்பனருணங்கைமகிழ்வெய்தி
யன்றிபமுயக்கடிதின்வந்தவரிமண்மே
னின்றிடர்கடிந்தசெயனீயுரைசெயென்றான். 88

கெசேந்திரன் மோட்சப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 620.

## 8 - வது, வராகப் படலம்.

பிறருடைநாரிபொருடனைக்கவர்ந்துபிழையுறவதிவினையியற்றி
யறனறமுயன்றகயவரையிணங்கியறிஞரையெள்கிமூர்க்கருமாய்
மறலிதன்னுலகினரகிடையழுந்திமறுகுறுகிருமியாய்ப்பிறவா
திறையுயரரியேயவன்பெயருரைமினிணையிலாக்கதியையாமுறவே. 1

அனநடைமடவார்கலவியினமுந்தியவனியினலகிலாநினைவாய்த்
தனநிலன்விரும்பிக்கொலைகளவுயர்த்தித்தருமமெய்சாத்திகமகற்றித்
தினகரன்புதல்வனகரிடைநிரயச்சிறையிடைப்படுத்திடவியற்றென்
மனனெனுங்கொடியாயிணையிலாவரியைவழுத்துநாம்வைகுந்தமுறவே. 2

பாரிடைவயங்கும்விதர்ப்பர்கோன்பயந்த பங்கயத்திருமகளுடனே,
நேரிலாவிறையோன்பலவுருத்தரித்துநிலமிசைக்கயவரைவதைத்த, சிரி

னையருளென் றுரைத்திடக்கேட்டுச்சிறந்திடுமுனியரிகிரியாய்த், தாரணி
யெடுத்தாண்டவுணனைச்செற்றதகைமைகேண்மாதெனமொழிவான். 3

உருவமாயருவாயொளியுமாய்வெளியாயுயரறிவாம்விராட்புருடன்
சரிவிலாவகங்காருழ்ந்தபாதாளந்தருணமாவருணமோபுறங்கா
லுரகமாரிரசாதலம்பரடொளிசேர்மகாதலமொப்பில்சானுனிதான்
விரிவுறவிர்கொடராதலஞ்சானுவிளங்கியசுதலமாயோங்கும். 4

நிகரின்முன்னுடைநல்விதலமொப்பிலாம னிறைந்திடுமெடித்துடையதல
சகனநற்பூமியந்தரமிலஞ்சிதானவர்பகைஞரூர்மார்பம் [ஞ்
புகல்வதற்கரிதாய்நிவர்மகாலோகம்பொலனுறுசிரதரங்கவினார்
முகமொளிர்செனமன்னுதபவுலகமுடியுயர்சத்தியவுலகம். 5

சிரமுயர்வேதங்குஞ்சிசீமூதஞ்சிகமுகனாசியச்சுவணி
புருவமெய்யயனாரிருவிழிசுவர்க்கம்பொலனுறுசோத்திரமாசை
யிரதநற்றாலுநகைமிகுமாயையெயிறுயரரியமாதெய்வஞ்
சரியிலுள்வாய்நீர்சந்திரனுடுப்பலிந்திராதியர்புயந்தானே. 6

கடைவிழிநோக்கஞ்சிருட்டிமேலிதழாமிலச்சைகீழ்ப்பாலிகையுலோபம்
நெடியதாம்வெரிநேயதன்மமார்மூலக்கணிகரிலாத்தருமமுமாகுங்
கடலகலுதரநகங்கரிபரியுட்டிரமயனமெட்டிரங்கவினார்
விடணமாண்டெதிரின்மித்திரவருணர்விலங்கலோங்கத்தியாமன்றே. 7

இனநரம்பெண்ணினதிகளாமுரோமமிலங்கியபாதவத்திரளா
மனமுருத்திரன்கான்மூச்சிராப்பகலும்வாமதெக்கணபக்கமாகு
நினைவுகந்தருவர்வித்தியாதரர்சாரணர்தெய்வமடந்தையர்நிறையப்
புனைதுகிலிரண்டாஞ்சந்தியாகாலமெனவரிபுருடனாயோங்கும். 8

நிகரிலொண்பரனாயுலகெலாமடங்கநிறைந்திடுவிராட்புருடன்றன்
முகமொளிர்புயமூரடியினினான்குகுலத்தினர்முந்தியாண்டெழுந்தார்
புகல்வதற்கரிதாயமைந்தவிவ்வண்டம்போன்றுளவுலப்பிலாவண்டம்
முகினிறத்திறைதன்னுடலினுருரோமமுனைதொறும்வயங்கிடுமென்றே.9

தூயயோகியர்தந்நினைவினுமெட்டாச்சோதிதன்கடைவிழியருளான்
மாயையாயுயரும்பிரகிருதியினில்வாழ்மகத்தத்துவந்தோன்றத்
தேய்விலாவஃதினெழுமகங்காரஞ்சிறந்தசாத்திகமிராசதமோ
டோய்விறுமதமென்றுரைத்திடுமூன்றுகுணமதினுயர்ந்திடுமென்றே. 10

ஆயதாமதத்திலுதித்தவாகாயமஃதிடைச்செனித்தவாயுவினிற்
றேயுவந்தெழவாண்டஃதிடைப்பிறந்தசெலமதிற்றோன்றியதவனி
தூயவிவ்வைந்துபூதமுமோசையூறொளிசுவையெழுநாற்றந்
தேய்விலிவ்வைந்துபொறிகளுங்கூடத்தெசமதாய்த்தோன்றியதன்றே.

இனிமையாயெழுந்தவிராசதகுணத்திலிலங்குமெய்வாய்விழிசெவிமூக்
கெனுமிவையைந்துஞானவிந்திரியமெதிரிலாவசனங்கைபாதங்

துனியுறமபானக்குய்யமோடைந்துங்கருமவிந்திரியமாய்த்தோன்றி
மனமுடனேகாதெசமெனவுலகினுரைத்திடமன்னியதன்றே. 12

கருமவிந்திரியஞானவிந்திரியந்தெசமதாய்க்கலந்திடவதற்குச்
சரியில்சாத்திகத்திற்செனித்திடுமதிதேவதைகளின்சதாகெதிமெய்க்கு
வருணன்வாய்க்கிரவிவிழிக்குயர்தெய்வவயித்தியர்நாசிக்குத்திசைக
ளிரையொலிகேட்குஞ்செவிக்கிவையைந்துக் குறுமதிதேவதையிவையே.

அனலவன்வசனமமரர்கோன்பாணிக்கருள்செயுமுபேந்திரன்பாத
மினிமையின்மருத்தங்கபாநத்துக்கயனமெட்டிரமிவையைந்தாந்தெய்வங்
கனமுறுபஞ்சபூதமைம்பொறிகள்கருமவிந்திரியமோரைந்தும்
வினையறுஞானேந்திரியமோரைந்துமிவையுடனிருபதாய்விளங்கும். 14

பூதமும்புலனும்பொறிகளுங்கருமேந்திரியமும்பொதிந்திருபத்தா
யேதுவாயுயர்பிரகிர்தியாங்காரமெழுமகத்தத்துவமநத்தோ
டீதுநாலுடனேசீவனுங்கூடவிருபத்தஞ்சாகுதத்துவத்தி
னீதிகொண்டுலகோடண்டமும்படைத்துநீவிநீவுயன்பரமேட்டி. 15

அயனொழிகாலமடையுநாட்பகருமவனியின்வாசனைவாங்கப்
பயமதாய்ப்பூமியிறந்திடநாரவிரதத்தைப்பாவகன்பருக
வயமிறந்தனலோடிறவனலொளியையாசுகனுங்கவக்கனன்மான்
டியல்பறவறையுஞ்சமீரணனுடனுண்டேகமாய்க்கலந்தெழுந்ததுவே. 16

வாயுவின்பரிசமதனையாகாயம்வாங்கவாண்டாசுகனிறந்து
தூயவாசினியுட்சலந்திடக்ககனத்தொலியையாங்காரமும்பருகத்
தீமையிலஃதைமகத்துவம்வாங்கச்சிறந்திடுமஃதினைமாயை
நோயெனமுடிக்கிநுகரவெவ்வுயிருறுமழைந்துசோதியினிடத்துறுமால். 17

மாயையுமுயிருமறப்புனல்பரவவடமதாயெழுந்ததனிலைமேன்
மீயுயர்ந்தெழுந்தவனந்தவண்டந்தன்வயிற்றிடைவிளங்கியாண்டமரத்
தூயதோர்குழவியாகியேபெரும்பாட்காலங்கடலங்கிடத்தோன்றித
தீவினையொருவவயனொடெவ்வுலகும்படைத்திடச்சிந்தைசெய்தனனால்.

அரவணைமிசையிற்பயோததிதிகழவமரரிதன்னிதலையிலே
விரைசெறிகமலத்திடையினெவ்வுலகும்விளங்கிடவயன்றனையுதவத்
திருமகள்கணவன்சிறுவனும்பிரமன்செயலுறநாலுதிக்கினையு
மிருவிழியதனுனோக்கவானனநாலாகவாண்டிலங்கினனன்றே. 19

பிரமனுற்றிசையுநோக்கவானனநாலாகவேபிரமையுற்றவனுய்
வெருவியாரிடத்திற்செனித்தனன்யானென்றுள்கவும்வெளிப்படாதாகி
மரைமலர்ப்பொகுட்டின்றுளைவழித்தெய்வவருடமாயிரமறவிழிந்தே
யரியினையவணிற்காண்கிலான்றிரும்பியம்புயத்துச்சியையடைந்தான். 20

அயனலர்நளிநத் துச்சியினமர்ந்தே யயமெங்கும்வளைவுறவெருவிச்,
செயும்வகையறியான்றிகைக்குமவ்வழிநற்சீதரனரூபியாயெழுந்தேயியல்

புடனுலகைப்படைத்திடத்தவத்தையியற்றெனவெட்டெழுத்தினைத்தா
ன், மயர்வறக்கருத்து ளிருத்தியேயுலப்பில் வருடமோவிடத்தவஞ்செய்
தான். 21

வருடமெண்ணிலபிற்படத்தவஞ்செய்துவருந்தியேமுராரியைக்காணும்
பிரமனெஞ்சுளைந்துதுவாதெசாக்கரமட்டாக்கரம்பிறங்கிடவேத
னிருதயகமலப்பொகுட்டினிலுப்பணிலஙியதிருவுறவமரும் [ன்.
கருடவாகனனையுரோமமெய்பொடிப்பக்கண்ணெலாங்களிப்புறக்கண்டா

மணிமுடிதிகழவதனம்வான்மதியின்வயங்கிடமகரகுண்டலங்கள்
புணரியினிலங்குங்கதிரவனிரண்டாய்ப்பொலிந்தெனத்தயங்கிடநயன
விணைதுலங்கிடவேகவுத்துவமொளிரவிந்திரையுரத்துறக்கிரீவத்
தணிகலப்பிரபையழகுறவரியம்பரமிளங்கதிரவிர்பரப்ப. 23

இலம்பகமளிகத்தழகுறப்புயங்கவிலங்கவேதரளமார்பிலக
வலம்புரிதிகிரிகரங்களிற்றியங்கவயங்குமுந்நூலுரத்துறவே
யலம்பியமணிசாண்மருங்கெழில்காட்டவரவிந்தமுந்தியினலரச்
சிலம்புறுபதங்களொளிரவேதிகழுந்திருவினாயகன்றனைக்கண்டான். 24

இருதையகமலத்தலர்மிசையிலங்குமிந்திரைகொழுனனை ஞானந்
தருநயனங்களருவிநீர்பொழியத்தடக்கைசேகரத்துறநோக்கி
யரியரியரியேயச்சுதவனந்தகோவிந்தவற்புதமுகுந்த
பரமகேசவமாதவவருளாளபதுமநாபாவெனப்பகர்வான். 25

வனசமாகியவுன்பதப்பரிமளத்தைமறுவிலாமறைகளினுலே
யினிமையிற்றுபயசெவிகளுமுணரவிணையிலாப்பத்திபாசத்தா
லுனையிருதயத்திற்பிணிக்கும்வள்ளியர்தம்முளமகன்றிடநெறியறியாய்
சினவினைசோகமோகபீதிகளுஞ்சிதறிடவவர்வயங்குவரால். 26

அந்தகாலத்திலரிபெயருரைப்பாரனந்தசென்மத்தடர்பவக்க
ளிந்துவினவிராற்றிமிரமஃகினபோலிறக்கபாடந்திறந்திலங்குஞ்
சுந்தரப்பரமபதத்தினுன்றுவர்கலங்குமுன்சுதனெனும்யானு
நந்திலெக்காலம்வரவுனையடைவேனிவையுணரார்நரர்கெடுவார். 27

வரமருண்முதல்வாவெனைப்படைத்தருளுமாலவநமவெனத்துதிக்கும்
பிரமனையளியாற்றிருவுளமகிழ்ந்துபிறிதிணையிலாதவாய்மலர்ந்து
திருமகள்கொழுனனவன்றனைநோக்கிச்சிருட்டியைவிரும்பினையஃது
வருமெனமறவாதவமியற்றெனவேயளித்தனன்வடிவினைமறைத்தான்

திசையினைநோக்கச்சதுமுகனுகிச்சிறந்தவன்சிருட்டியைவிரும்பித்
தசசதமுடிகண்புயமடிபெயராந்தலைவனையுளித்தவஞ்செய்ய
நிசியுறமோகமுடன்மகாமோகம்நிறைந்திடுமந்தாமிசிரம்
விசையுறவெழுதாமிசிரமிந்நான்குர்பிறந்திடவெருவினனன்றே. 29

கருத்திடையுனவுமரியதாய்ச்செனித்தந்தகாரமாய்நாலுமுன்கழிய [ரி
வருத்தமோடரியையொருமையுள்ளமைத்துத் தவஞ்செயுமலரயன்முன

னருத்தியாய்ச்சனகசனந்தசனாதசனக்குமாரன்னவதரித்துத்
திருத்துமாதவராய்ப்பரமனைப்பரிவாற்சிந்தைசெய்தொருவினரன்றே.

தனையராஞ்செனகாதியர்தவத்தினராய்த்தனையொருவிடப்பலகால [து
மனதினெட்டெழுத்தைநிறுத்தியேதவத்தின் வருந்தவுஞ்சிருட்டிவாரா
சினமுறவஃதினரன்பிறந்துலகந்திடுக்குறவுரோதனஞ்செய்யும்
வினையினாற்பிரமனுருத்திரனெனவேபெயரினை விளம்பினனன்றே. 31

நுதலினிற்செனித்தவுருத்திரன்றனக்குநூலெல்லாமறைந்திடும்பிரமன்
விதமுறுமனுமன்னியுநலவரநாதன்மகான் விளங்கியசிவன்வெங்
கதமுறுமிரதத்துவசனேருரேதாபவனெதிரில்வெங்காலன்
மதியுறுசடைசேர்வாமதேவன்சீர்விரதனென்றேபெயர்வகுத்தான். 32

அரன்றனக்குயர்ந்தபதினொருபெயரையளித்தவனவற்கிருப்பிடமா
யிருதயமுடனிந்திரியநற்பிராணனிருவிசும்பனிலனக்கினிநீர்
தரையுயர்தபனன்சந்திரன்றவத்தோடிவைபதினொருபதிதந்தே [ன்.
விரைவினிற்சிருட்டியியற்றெனப்பரிவால் விளம்பிடச்சிவனிவைசெய்வா

அரர்பதினொருபேராகித்தம்பதியினமர்ந்துதங்கோரமாவுருவோ
டெரியுறுநயனத்துடன்கரத்தயிலையேந்தியேயனேகருத்திரராய் [கென்
விரைவினிற்படைக்கமரைமலரயன்றான் வெருவியிச்சிருட்டியையொழி
றுரைதவஞ்செய்யக்கருத்தனாயினனீயோகியாகெனப்பகர்ந்தனனால்.

பருத்தபங்கயத்தோன்புதல்வனாய்ப்பிறந்தோர்பவமறத்தவர்களாயேகச்
சிரித்தயன்வருத்தமுடன்றவம்பலநாள்செய்திடவவனெழினுதலி
னுருத்திரன்செனிக்கவவன்றனக்கேகாதெசவிடமுதவிநீதவஞ்செய்
கருத்தனாகுதியென்றறைந்திடுங்கமலன் கடுந்தவஞ்செய்திடும்போழ்தின்.

அரியருளயன்றன்மநத்தினின்மரிசியத்திரிநயனத்திற்றெருக்கிற்
பிருகுநாபியினிற்புலகனற்றெக்கன்பெருவிரலிடைவதனத்திற்
சரியிலங்கிராநற்கிருதுகைமிசையிற்சாயையிற்கருத்தமன்மடியிற்
சுரர்முனிசெவியிற்புலத்தியனுகிரில்வசிட்டனுந்துலங்கியங்கெழுந்தான்.

நேரிலாவயன்றன்வாக்கினிற்பரமாகிறைந்திடப்பாதவமிருகஞ்
சிறுருபதங்கநதியிவைபடைத்துத்தேவர்கள்பிதுர்க்கள்கந்திருவர்
சாரணரியக்கர்சித்தர்கின்னரர்கடயித்தியர்கிருதர்கள்பசாசம்
பாரியபிரேதபூதமுமிலேகர்பாவையர்பலரையும்படைத்தான். 37

அனவெரினூறுவோன்விதித்தனன்மகத்தோடளப்பிலாங்காரமைம்பூத
மினியவிந்திரியமதற்கதிதெய்வமிடர்தருமோகதாபங்க
ணனியுறுதிரியக்குகணாருடனேநலமதாஞ்சிருட்டியைநல்கிப்
பினருமிவ்வகையிற்பலவிதமாகப்படைத்தனன்பெருந்தவப்பயத்தால்.

நிலமிசையுறுதாபரமதின்மலர்காய்கிறைவனபூவிலாதுயர்ந்து
பலமலிவனவோடதிகொடிதோலாற்பலமுறவெழுதினவியலுந்

தலமதிற்படர்பூண்டிவையுடனாறவிதமுறச்சதுரினாற்படைத்து
நலனுறநளினமிசையினிலுயர்ந்தநான்முகன்பின்னருமளிப்பான். 39

இருகுரமுறவேதிரிவகோவினங்கள்வெறிகிரியிரலைவெள்ளயங்கள்
மரைபுலியுழைமேதிகளிவையெட்டும்வகுத்தொருகுரமுறத்திரிவ
பரிகரஞ்சாதிக்குரகதமெட்டுப்பதமுளவருணமொட்டகங்கள்
சரியிலாக்கவரிகுரங்கமோடாறுவிதங்களுமளித்தனன்சதுரால். 40

தரையினிற்பஞ்சநகமுடன்றிரிவசல்லிகஞ்சஞ்சரிகமட
மரிசுவாவிகலன்முசலிகையுழுவையரிசெந்நாய்வெருகுநீர்மகரம்
விரிசிறைமயூரமெருவைவல்லூறுவிளங்குசோலடிகங்கங்கரடம்
பரவுவண்டானங்குருகுநேமிப்புள்படைத்தனன்கூகையொடனேகம். 41

வித்தியாதரரோடனேகரைப்படைத்துவிபுலையின்மநிதரைநீவிச்
சுத்தநால்வேதமாயுணூறனுநூறலங்குகெந்தருவநூல்புராண
மெத்திதியாசமுதலிவையுதவிவிளங்கியசுவாயம்பூமனுவா
முத்தமன்றன்னையவன்றனைப்புணரவுயர்சதரூபையையளித்தான். 42

தூயனுஞ்சுவாயம்பூமனுப்புயத்தைத்தோய்ந்துசுந்தரச்சதரூபை
சீயமேநிகராய்ச்சிறந்திடும்பிரியவரதனுத்தரன்பரதன்சீ
ராயவிவ்விருவருடன்பிரசூதியறனாருக்கூதைமின்னாணத்
தேயுதண்ணிடையார்தேவகூதைத்தேனிவர்களைப்பயந்தனடிகழ. 43

உருசியாமுனிக்காங்கூதையாந்திருவையுதவிநற்கருத்தமன்றனக்குச்
சரியிலாத்தேவகூதையையளித்துத்தவமுறுதெக்கனுந்தவற்குத்
தெரிவையாகியபிரசூதியைக்கொடுத்துச்சிறந்திடும்புதல்வர்களுடனே
யொருதனிக்குடைக்கீழுலகெலாமாண்டானுயர்ந்திடுசுவாயம்புமனுவே.

தேவகூதைத்தேன்கருத்தமன்புயத்தைச்சேர்ந்துதான்பயந்தநாரியர்க
ளோவியம்பழித்தகலையனசூயையுவமையில்விறபுக்குச்சிரத்தை
காவிநாணயனக்கெதிமினைள்கிரிகைகியாதிநல்லருந்ததிகற்பாள்
பூவினிற்றிருவைநிகர்த்திடுஞ்சாந்தியிவர்நவப்பெயர்பொருந்தினரால். 45

அயனருண்மரிசிகலைகுயமுறவேயத்திரிதனக்கனசூயை
மயலுறச்சிரத்தையெனுமினங்கிராவை மணந்திடப்புலத்தியன்புயத்தை
செயலுறம்விறபுக்குவுமணஞ்சேரச்சிறந்திடுபுலகன்றோள்கெதியா [ச்
மயில்விரும்பிடவேகிருதுவினுரத்தைமடந்தையாங்கிரிகைசார்ந்திடவே.

பிருகுவைக்கியாதிமணந்திடவசிட்டன்பெருமைசேரருந்ததியென்னுந்
தெருவையைப்புணரவதறுவச்சாந்தியெனுமினாளிருகுயஞ்சேர
வரியறுள்பிரமனளித்திடவயங்குங்கருத்தமனனலினாகுதியைப் [ரை.
பரிவுடன்விடுத்தான்டிவர்நவப்பெயர்க்குக்கொடுத்தனன்பயந்தபாவைய

சுத்தனுமரிசிபயந்திடத்துலங்குஞ்சுதனெழிற்காசிபமுனிசேர்
புத்திபூரணிமாவிருவர்களிவரிற்பூரணிமாவுவந்தருளச்

சித்தசனிகர்க்கும் விரசனும்விச்சுவதையெனச்சிறந்தவான நியா
முத்தமவடிவாகியமினுஞ்சனித்தாருயர்ந்திமெருந்தவர்மகிழ. 48

சுந்தரமலியத்திரிசுதர்தெத்தாத்திரையனுமுனிதுருவாசன்
சந்திரனுடன் மூவருந்தயங்கிடவான் சரியிலாவங்கிராத்தரவே
வந்திசுரராசானுஞ்சத்தியனும்வனிதையரனுமதியிராதை
பிந்துநேர்வதனக்குருசினிவாலியிவர்களுல்வருமிலங்கினரால். 49

அருமறைநிறையும்புலத்தியன்புதல்வர்சத்தியன்விச்சிரவாவோ
டிருவரும்வயங்கப்புலகனற்சேயரிலங்கியசன்மசேடன்வான்
சுரர்துதிவரியான் சிட்டுருப்பெயரோடிவர்கண்மூவருந்துலங்கிடவே
கிருதுவின்றனயர்வாலகில்லியராய்க்கிளர்ந்தனரறுபதாயிரம்பேர். 50

சுரர்துதிவசிட்டன்சுதர்களாயெழுந்தோர்சுரேசிநற்சித்திரகேது
விரசன்மித்திரனுற்பனன்வசுகிருத்தியருணுமான் விளங்கியசத்தி
தருமமார்தருவாந்தருணியதனயர்ததீசியச்சுவச்சிராத்திரத
விரதனேடிவர்மூவருமிலங்கினரால்விபுதர்களலர்மழைபொழிய. 51

சரியிலாப்பிருகுதனயர்தாதாவிதாவிவரிருவரிற்றாதா
வருண்மிருகண்டுமுனியவன்மூனயாயமருமாறகண்டயன்விதாதாப்
பரிவுடனுதவுசுதனலப்பிராணனவன்றருவோன்பவமகற்றுங்
கருமமார்கவிமற்றவனெழிற்செம்மல்கவினுறுசுக்கிரன்மாதோ. 52

தக்கனற்பிரசூதியையணைத்தளித்தசதத்துடனுறுமங்கையரி
னக்கனுக்கிணையில்சதியினைக்கொடுத்துச்சுதையினைப்பிதவுக்குநல்கி
யக்கினிதனக்கங்கழகியசுவாகாவெனும்பெயரரிவையையீந்தே [தான்
மிக்கதிரையோதெசத்துமாதினரைத் தருமன்றேள்சேர்ந்திடவிதித்

தருமதேவதைதன்மனைவியர்திரையோ தெசத்தினர்பெயரினைச்சாற்றி
றெரிவையாஞ்சிரத்தைமயித்திரிதயாநற்சாந்திதுட்டித்திகழ்புட்டி [ன்
யரிவையாங்கிரியையுன்னதிபுத்தியழகியதிதிக்கைநன்மேதா
விரைசெறிகுழலாளிரியெதிரிலாதுவிளங்கியமூர்த்தியுமாமே. 54

சரியிலாத்தருமன்மனைவியர்பதின்மூவரும்பெயரடைவிலீன்றனயர்
விரிவுறுசுபம்பிரசாதநல்லபையஞ்சுகம்பிரியம்மிளிர்காந்தி
யிருளகல்யோகமெதிர்ந்திடுந்தவந்தன்மம்நன்மையிணையிலாதுயர்ந்து
மிருதிவானெழுக்கந்துலங்கியநரநாராயணராமெனவிளம்பும். 55

தழலிறைமனைவியாகியசுவாகாவெனுந்தத்தைதந்திடுந்தனயர்
விழுமியசுசிபாவகன்பவமானனெனப்பெயர்விளம்பிமூவ
ரழலுமிழிவர்தாமளித்திடுபுதல்வரைந்தடனொன்பதுமாற
வெழுதொகையினர்களிவரெலாங்கூடியேழுதேயுவாயமர்ந்தார். 56

நக்கனுல்வேள்விசிதைந்தயத்தலையாய்நலனெலாமொருவிடமெவிவாங்
தெக்கனவ்வுடலைச்சழித்துநற்பிரியவாதன்றன்மார்பினிற்செனித்தே

மக்களோயுதவவ்வாசுரமுனியால்வநத்திடைத்தவஞ்செயமுனிவு
மிக்குநாரதனுக்கிருப்பிடமிலாமற்றிரிகென விளம்பியேசபித்தார். 57

சரியினாரதனைமுனிவினாற்சபித்ததக்கனார்பயந்தநாரியர்க
ளிரவினன்றனக்காண்டிருபதோடேழுவனிதையர்தங்களையீந்து
தருமதேவதைக்குப்பதின்மரைநீவித்தாற்கிகன்றனக்கொருநாலு
தெரிவையர்தமையங்குதவியங்கிராவுக்கிருவரைக்கொடுத்தனன்சிறப்ப.

ஆசகல்கிராகாச்சுவன்றனக்குபையவரிவையர்தங்களைநல்கி
தேசுறவுயர்ந்தபூகனுக்கிரண்டுதெரிவையர்தங்களைக்கொடுத்தே
காசிபன்றனக்குத்தெசத்துடன்றிரையக்கவினுறுமகளிரையீய்ந்தான்
மாசகன்றிடவீண்டிவர்களுக்களித்தான்மடந்தையரறுபதுபெயரை. 59

கதமகற்றிடுங்காசிபன்றனைமருவுங்காரிகைமார்களிற்கவினு
ரதிதிசன்சுதர்கள்விவச்சுவானானவலரியோனரியமர்புருடர்
பதவியாசவிதாவருணமித்திரனற்பகன்றுவட்டாவெழிற்றுதா
மதியுறுவிதாதாவலாரிவாமனனோடிவர்துவாதெசத்தவர்மாதோ. 60

அலரியோனானவிவச்சுவான்புயந்தோய்ந்தழகியசங்கிக்கைபயந்தா
ணலனுறுசிராத்ததேவெனுமனுவைநடுவனையச்சுவனியரை
யிலகியசாயையிரவியைப்புணர்ந்தேயெழிலுறுமைந்தரையீன்று
பொலனுறவளர்சாவருணிமின்றபதிப்பொற்கொடிதன்னையுமளித்தாள்.

சரியில்காசிபன்றேள்சார்திதிபயந்தாடயித்தியர்மருத்துகடம்மை
யரிவையாந்தனுத்தானவர்களையளித்தாளருட்டைகெந்தருவரையீன்று
டெரிவையாமுனிமின்றெய்வநாரியரையுதவினள்சிறந்திடுசுரசை
விரைசெறிதொடைசேர்சவுரசர்தமைவான்விளங்கிடநல்கினளன்றே.62

சுரபிமின்பயந்தாள்சுரபிமேதியினைச்சுரிகுழற்காட்டைமெல்லியடு
னொருகுரமிருகமுதவினள்குரோதவசையுரகங்களையீன்று
டரளநேர்தசனத்தாம்பிரையகட்டிற்சனித்தனவெருவைகங்கங்க
ளிருள்செறியளகச்சாமைநல்கினளாலிகலனாயெண்ணிலாமிருகம். 63

இளையெனுமடவாள்பாதவமுதலாயெண்ணிலாமரங்களையளித்தா
ளளிசெறியளகத்திதிமினாள்பயந்தாளயத்துறுசெந்துவர்க்கத்தை
வளர்பிறைச்சடையோனிகர்த்தகாசிபன்றன்மனைவியரிவையெலாநல்க
வளனுறுதுவட்டாவுதவினன்வயங்குவிச்சுவரூபனைமகிழ்ந்தே. 64

நலனுறுமதியார்தார்க்கிசன்புயஞ்சேர்நாரியர்நால்வரிற்பதங்கி
யிலகியபறவையனைத்தையுமீன்றாளிமையமின்சலபநல்கினளால்
கலனணிகிரீவக்கத்துருச்சேடன்முதலியகட்செவிபயந்தா
ளிலவிதழதரச்சுபருணையருணன்கருடன்மின்னிடியெலாமளித்தாள்.65

அதிதிதன்சுதனும்வலாரியைவதைக்கவறனுறுகாசிபன்றன்னைத்
திதிவரம்வேண்டியவனுரைநியமஞ்செய்திடக்கருப்பமுண்டாகுஞ்

சுதைமொழியசுசியாகியேதுயிலச்சுரர்பதியவன்வயிற்றெய்திக்
கதமுறவுதரக்கருவைவச்சிரத்தாலேழெழுகூறறக்களைந்தான். 66

இலகியகுலிசத்தேழெழுகூருய்க்கருவிழத்துணித்தவிந்திரன்ரு
னலர்மலரிறைத்துத்திதியடியிறைஞ்சியவண்முனிவகற்றிடமகிழ்ந்தே
நிலமிசைவிழுந்தகருத்தசைநாற்பத்தொன்பதுவிபுதராய்நிறைந்த
வலனுறவெழவேயவரொரமரபதியிடைவயங்கினனன்றே. 67

அந்தரமிசிரமுதலியபடைத்தவடிவினையயனெழித்திடவே
யிந்துவினவிர்போலிலங்கெயிற்றினராமிராக்கதரஃதினைப்பற்ற
முந்துமவ்வினையேயுலகினையடக்கமூடியகங்குலாய்நிறைய
நிந்தனையுறவேநிசிசரரெனும்பேர்நிருதரைச்சூழ்ந்தனவன்றே. 68

சுரர்தமைப்படைத்தவடிவயனொளிக்கத்துலங்கினரஃதினைப்பற்றித்
தருநிறைநகரினமரரந்நலனேசார்ந்தனர்பகலதாயிலங்கி
யுரனுறுமசுரர்திரள்களையளித்தவுருவினைமலர்முனியொளிக்கப்
பரவுதானவர்களஃதினைப்பற்றப்பகருமவ்வினையந்தியான. 69

கந்தருவரைத்தான்படைத்திடுமுருவைக்கமலமார்தவனொளித்திடவே
யந்தநல்லொளியையவர்கள்பற்றிடவேயதினுறுநலனெலாம்விசும்பி
லிந்துவினவிராநிலவெனப்பரந்தவிருநிலச்சிருட்டியாச்சிலையென்
றந்தணன்முனியவவைவிடமாகியரவினம்பலவினுமடைந்த. 70

வனசமாமலரோன்பதமொழிகாலம்வகுத்துரைக்கிற்பரமாணுத்
தனையிருமடியாய்ச்செய்யினீரணுவாமீரணுமூன்றுசார்ந்ததுதான்
மனைதனிலிரவியவிருறவவணின்வயங்கியசாலகவாசற்
றனிலுறுதிரசரேணுவாமதின்மும்மடிதுடியென்றுசாற்றுவரால். 71

துடிசதங்கூடியுறினதுவேதஞ்சொலுமந்தவேதமூன்றற்ற
படிமிசைலவமென்றறைகுவரிலவந்திரையமுட்படிந்திடினிமிடங்
கடிதுசென்னிமிடமூன்றறத்திரளிற்கணமதாமதினைந்துகாட்டை
யடையுமக்காட்டைபதினைந்துசேரினறைவராலகுவெனவம்மா. 72

பகருமவ்விலகுபதினைந்துகூடிற்பறைகுவர்கடிகையொன்றெனவே
செகமதிற்கடிகையுபயமேமுகுர்த்தங்கனலேழரையுறச்சேர்ந்தாற்
புகலுவர்யாமமெனவெட்டியாமம்பொருந்திடிற்றினமென்றேயாகுங்
ககனமேலிரவிகழிதினம்பதினஞ்சுறப்பக்கமெனக்கழறுவரால். 73

படியிசையுபயபக்கஞ்சேர்ந்திடவேபகருவர்திங்களொன்றென்றே
யடையுமோர்திங்கள்பிதுக்களுக்கேகதிவசமம்மாதமோரிரண்டு
மிடையவோரிருதுவிருதுதாமூன்றுவிளம்பிடினயனமாம்விசும்பிற்
சுடருறுமிரவிவடவரைவலமாய்ச்சுற்றுமீரயனமோர்வருடம். 74

வருடமோர்நூறுநிறைந்திடிற்புருடாயிசுத்திங்கவோதசம்வரின்வா
னருடருமிமேலவர்க்கொருதினமுந்நூற்றறுபத்தஞ்சாகியவருட

மிருடவிர்சுரர்க்கோர்வற்சரமாகுமிமையவராண்டுசொல்லிரா
றமையுமாயிரந்தானடைந்திடிற்சதுரியுகமெனவறைகுவரன்றே. 75

சகசிரச்சதுரியுகம்பிரமனுக்குச்சார்ந்திடினோர்பகலாகும்
புகலுமத்திவாவிற்சதுர்த்தெசர்மனுக்கள்புறத்தியாமாயிரத்திரண்டு
தொகையுறச்சதுரியுகமயன்றனக்குச்சொல்லிலங்கோர்தினமாமப்
பகலிராவிரவுவரவாந்திரமாம்பிரளையம்படர்செயல்பகர்வாம். 76

சேடனனனத்துக்கிரவுதாசனன்றூன்சினமுறமுருத்திரனுடனே, மூடிமூவுலகு மெரித்திடமகலோ கத்தினையொருவிமாமுனிவர், மோடு டைத்துருவ னுடன்செனலோகத் தனைவருமுடுகியேயடையக், கோடு டைக்கரியின் றுதிக்கைபோற்றூரை குழாமுறப்பொழிந்திடுங்கொண் டல். 77

அயனிரவுறவேயவாந்திரக்கணங்கள்பொழிந்திடவகன்றவேழ்கடலிற்
பயமெலாமேகப்பிரளையமாகப்பரமனற்சேடனின்மீதே
புயலெனவுருவம்பொலிதரநிலமான்பூமகடிருவடிவருட
வயினதேயன்றனிருசிறையிலங்கவலம்வரக்கண்வளருவனல். 78

இருசகசிரந்தானிறைந்திடுசதுரியுசங்கழிந்திடவிலங்கயனுக் [டோர்
கொருதினமதுமுப் பதுநிறைந்திடவோர் திங்களத்திங்கள்பன்னிரண்
வருடமற்றதுதான்சதமுறக்கமலமலரயன்கற்பமாண்டொழியுங்
கருடவாகனனுக்குலப்பிலாப்பிரமர்கழியுநாள்கணத்துக்கும்பற்று. 79

கமலரெண்ணிலர்களமர்ந்திடும்பதத்தைக்கழிந்திடுகாலத்தைக்கடக்கும்
விமலன்மெய்யுரோமத்தனந்தவண்டங்கள்விளங்கியசாலகவாச
லமர்பரமாணுநிகர்த்தனபரவுமயன்முதலோர்செயலறிவா [யார்.
னுமையவள்கொழுனனிடரினைத்தவிர்த்தோ னவன்செயலொருவருமறி

பிரமகற்பத்தினிறைந்தவற்சரந்தானைம்பதுபிரிந்திடப்பினரின்
வருமுதற்றினத்திலியாமமொன்றதன்மேன்மலிந்தநாற்கன்னலங்கற்ற
மரைமலருறுவோன்பகலிடைவயங்குமனுக்களீரேழுடன்முனிவர்
சுரரவர்பதிக்குத்துலங்கியநாதன்சோதிதன்பெயரெலாஞ்சொல்வாம்.81

அரியருள்குமரன்றிவாவினிறுதியாயினோன்சுவாயம்புமனுவே
சுரர்பதியானோன்றுலங்குமெஞ்ஞன்றூனவன்சுதர்தூயராம்விபுத
ரிருடிகளெனவான்வயங்கியேயமர்வோரிணையிலாமரிசியோடெழுவ
ரரியுருத்தரித்தோனமரர்நாயகனுமழகியவெஞ்ஞனென்றறைவர். 82

உபையமாமனுவாயுயர்ந்தவன்சுவாரோசிபனுரோசன்வெனவானிற்
கபடமில்பெயரோன்கலனணிவலாரிகவினுறுதடிதனோடனேகர்
சபையுறவிபுதரிருடிகளுறச்சத்தம்பனோடெழுவர்விண்டயங்க
விபுவெனவமர்ந்தோன்விடமரையரித்துவிளங்கியவிமலனுமுராரி. 83

திரையமாமனுவாய்வயங்கிரோன்புகளெண்டிசையெலாமுற்றவுத்தமமன்
சரியிலாவிபுதர்தனக்குநாயகனுஞ்சத்தியசித்தெனவலாரி

சுரரென்விசும்பிற்றலங்கினோர்வேதச்சுருதர்பத்திரிகள்சத்தியரா
மிருடிகளெழுவர்வசிட்டர்புத்திரராயிலங்கரிசத்தியசேனன். 84

நாலதாமனுத்தான்மதனெனும்பெயரோனவையிலாத்திரிசிகன்வலாரி
சிலராயுயர்சத்தியர்களோடனேகர்சிறந்ததேவாதிகளானோர்
கோலமார்சோதித்தாமனொடெழுவர்கூறின்வாழ்முனிவராயமர்ந்தா
ராலமாகியவெங்கயவரையரிக்கவரியரியாயவதரித்தான். 85

பஞ்சமமனுவாயிலங்கினானிணையிலிரேவதன்பயந்தவர்விபுதர்
விஞ்சுமிந்திரனும்விபுவெனும்பெயரான்விளங்கினானுலகெலாமகிழ
வஞ்சகமிலாதவிரணியரோமர்முதலினோர்முனிவராய்வயங்க
நஞ்செனுமவுணர்தமையரித்திடவேநாரணன்வைகுண்டனானான். 86

ஆறதாமனுவாவயங்கினானுடனமரர்தமபதிக்குநாயகனும்
வீறினான்றன்மெய்நெறியெலாந்திவசகன்விளங்கிடமந்திரத்துய்மன்
மாறிலாப்பெயர்தாம்விபுதராயினர்கண்மறுவிலாவரிட்டுவான்முதலோர்
தேறியதவமார்முனிவராயமர்ந்தார்சீதரன்சீதனாய்ச்சிறந்தான். 87

ஏழதாமனுவாய்ச்சிறந்தனன்வைவச்சுதனெனுமிணையிலாவவன்றன்
பாழிசேர்புயனிந்திரன்புரந்தரனும்பவமிலாவிபுலகர்களானோ
ராழியொன்றுடைத்தேரிரவியோடனேகராறனுறுகாசிபன்முதலோ
ரேழுமாமுனிவரதிதிதன்செயலாலிலங்கியவாமனன்முராரி. 88

அட்டகமனுசாவருணியாமரசனறனுறுமகாபெலிப்பெயரோன்
சிட்டனும்வலாரியுயர்ந்திடுஞ்சுபதாதிரளினோர்தேவர்களாவோர்
கட்டவைம்புலனைக்கடந்தகாவலர்தான்கவினுறுமிருடியாமெழுவர்
துட்டரையரிக்கமுராரியாயெழுவோன்றலங்கியசாருவபூமன். 89

நவமதாமனுநற்றெக்கசாவருணிநலனுறுசுரிகனிந்திரனும்
பவமிலாதிலங்கும்பார்முதலானோர்பலனுறுவிபுதராயமர்வா
ருவமையில்சுதிமான்முதலினோர்விசும்பிலுயர்ந்திடுமேழுமாமுனிவர்
கவினுறுமிடபன்கயவரைவதைக்குங்காலனாய்விளங்கிடுமுராரி. 90

தெசமதாமனுநற்பிரமசாவருணிசிறந்திடுமிந்திரன்சம்பு
வசையிலாதிலங்குசுகாசனரனேகர்வானவராய்வயங்கிடுவா
ரசைவிலாத்தவமார்விட்டுமான்முதலோரந்தரத்திருடிகளெழுவர்
சுசியிலாவசுரர்தமைவதைத்தருள்செய்சோதியாம்விச்சுவசேனன். 91

தன்மசாவருணியெனுமனேகாதெசமதாமனுவெனச்சார்வன்
வன்மையின்மனுவைத்திரதனுமரசன்வானவர்நாயகனாகும்
புன்மையில்விபங்கர்முதலினோர்விசும்பிற்பொலிந்தபுத்தேளிர்களருணர்
நன்மையாமுனிவரெழுவராந்தன்மைகேதுநாரணனுருவாமே. 92

துவாதெசமனுவாந்துலங்குபுத்திரசாவருணிதான்றோன்றுவன்விசும்பிற்
றவாவலியுறவேவயங்கரித்தாமாத்தானவர்பகைஞர்நாயகனா

மவாவுறுவரிதாமுதலினோரமரரருட்டிபோமூர்த்திகளெழுவ
ருவாவுறுமதிபோற்றயையுறுமுனிவருலகளந்தவனுயர்சுதாமா. 93

திரையமுந்தெசமுங்கூடியதொகையிற்றிகழ்மனுத்தேவசாவருணி
சரியிலாவலாரிதிவாப்பதிசுதமாமுதலினோர்தானவர்பகைஞ
ரிருடிகளெழுவரிலங்குநன்மோகரிறையதாயுயர்ந்திடுமுராரி
விரைசெறிகமலன்முதலினோர்வழுத்தவிளங்கியோகேச்சுரனுமே. 94

ஏழிரண்டாயமனுநலிந்திரசாவருணியரமிந்திரன்சுசியே, பாழிசேர்
புயத்துப்பவித்திரர்முதலோர்பழுதிலாவிலேகர்களாவோர், சூழும்வல்வி
னையைத்துணிக்குமக்கினிபோன் முதலினோர்துலங்குமேழ்முனிவ, ரா
ழியிற்றுயில்வோனுருவமாயவிர்கபானுவேயவதரித்தருள்வான். 95

சதுமுகன்றிவாவிற்சதுர்த்தெசமனுக்கடானவர்பகைஞர்நாயகனுய்ச்
சுசைதநுகரமரர்துலங்குமேழ்முனிவர்தூயமாலுருவமாயெழுவோர்
விதமுறுபெயராமனைவர்கடமையும்விளம்பினஞ்சுவாயம்புமனுவின்
பதமுறுகாலத்திரணியன்மாழைநயனனோடெழுஞ்செயல்பகவர்வாம். 96

தெக்கனுர்பயந்ததிதியெனுங்கொடியைச்சிறந்திடுகாசிபற்கீய
விக்கிரதச்சொல்லேந்திழைவிரகமெய்தவக்காசிபமுனியைத்
துர்க்குணமிகுத்தசுதர்களைப்பெறுவான்சந்தியகாலத்திற்சேரய
வக்கணங்கருப்பமாகியாயிரத்தாண்டகட்டிடையமர்ந்திடுங்காலை. 97

திதிமினுதரத்தாயிரத்தாண்டுசேர்ந்திடுங்கருப்பத்தின்விகார
விதமுறுங்கோரவெம்மையின்செயலால்விடமெனப்பரந்திடவிபுத
ரதிதிதன்சுதனோடலைந்துமெய்குலைந்தேயளக்கர்வீழ்மரக்கலநிகர்த்துச்
சதுமுகனுலகமடைந்தவன்பதத்திற்றாழ்ந்திவைசாற்றலுற்றனரால். 98

காசிபன்புயத்தைக்கலந்திடுந்திதியினுதரத்திற்கருப்பவெம்மையினு
லாசையும்விசும்புந்திமிர்ப்பிழம்படரவலரிதேர்நெறியறவயர
வாசவன்முதலெண்டிசையுறுமவருமயர்வுறப்பதியிழந்துலக [வான்.
நாசமுற்றிடுகாலடைந்ததென்றடைந்தோ மெனவயனகைத்திவைவில்

அரியருள்யான்றன்சிருட்டியைவிரும்பியவனெழுச்செட்டேளமமைத்து
மரைமலரதனிற்றவஞ்செயவன்றென்மநத்திடைச்சனித்திடுமவர்கள்
கருமகாண்டத்தினமைகிலராகிக்கசிவெரினமருவோனகருஞ்
சரியிலென்பதமுகிரையமென்றிகழ்ந்தார்சனற்குமாரன்றொடுநால்வர்.

அயனெனுமியான்றனளித்தவெவ்வுலகுமன்றவாயகங்கனல்காய்வான்
செயலுறுமனந்தகோடியண்டங்கடிகழ்பிரகிருதியுங்கடந்தே
மயர்வறவயங்கும்விரசையுமிகழ்ந்துமறவிலாவமானவனிலங்க [ல்.
வுயர்வறவுயர்ந்தேயொளிகொள்வைகுண்டத்துற்றனர்யோகத்தினுயர்வா

ஆதியந்தரந்தானமைகிலதாகியவிருறுமனந்தகோபுரங்கள்
பீதகத்துடனேநவமணிதிகழப்பிறங்குமாளிகைகண்மண்டபங்கள்

வேதிகையலரிகாந்தமிந்துவினல்விளங்கியகாந்தம்வெண்படிக
மேதமிரூரமிலங்குமாவரணமாவணமெல்லவுங்கண்டார். 102

ஐந்தருவனந்தம்வீறூம்வருக்கையாசினியாம்பிரநரந்தை
கந்தமார்வழைபுன்னுகமாதவிபாடலங்கமுகரம்பையாமலகஞ்
சந்தசண்பகநற்குரோதமச்சுவத்தஞ்சம்புசெம்பீரநற்றுழை [டார்.
குந்தம்வேதசமொண்கபித்தமாழையினற் கோலமார்பொழிலெலாங்கண்

ஆடகப்பொழில்களனந்தமங்கமரவயமலேவீசிடவகன்ற
வோடைகளொளிரக்குவலேயங்கமலமுற்பலமூலப்பிலவலரப்
பேடொடோதிமங்கள்கவினுறவிருப்பப்பிரமசங்கீதங்கள்பாடக்
கோடரமருங்கிற்குதிகொளும்வாளேகுறுகக்கொக்கேறுவகண்டார். 104

அரிதிருப்பெயரைமனத்திடையிருத்தியருச்சனேசெய்திமெவர்கள்
வரிநெடுங்கயனமனேவியருடனும்மணியொளிர்விமானமீதடைந்தே [ன்
தரையைவிட்டெர்ந்து முகட்டினேயொருவிச் சார்குவாரனந்தவண்டத்தி
புரைவழியிலங்கிவிரசைநீர்படிந்துபொலனுறுமவர்களேக்கண்டார். 105

அனந்தவண்டத்தின்புரைவழியெழுந்தேயமானவன்றழுவிடமவுலி
புனேந்துநாற்புயமுந்துலங்கிடத்திகிரி வளையொடும்பொருந்துசெங்கைய
சினந்தனியொருவித்திருவினுயகனேத்தேவியருடன்றுதித்தாடி [ராய்ச்
வனந்திகழ்விமானமிசைதொறும்வருவார் பலரையுமகிழ்வுடன்கண்டார்.

காசுறுகனகப்பொழின்மலர்வெறிகள்கமழவாவியினலேத்திவலே
வீசுநல்வசந்தமுலாவிடவியலும்விமானமீதிலங்குபாகவத
ராசையையஃதினமைக்கிலரரிவைகலவியைநினேக்கிலர்நிரைய
நாசனுமுராரிநாமகீதத்தைநவிலுவார்பலரையுங்கண்டார். 107

அருவையர்மகுணர்கலவியைநினேயாரவிருறுபுருடர்தம்மனேவி
தருவிரகத்தினமிழ்ந்திலரிணேயிறத்துவமூர்த்தியாயுயர்ந்த
பரமனேமனத்திற்பதித்தெழுந்தாடிப்பாடியேநயனநீர்புரளச்
சரீரரோமங்கள்புளகமாய்க்களிக்குந்தபோதனர்சார்தலுங்கண்டார். 108

கோகிலங்கபோதங்குக்கிலொண்பூவைகுரண்டநீர்க்கரண்டமோதிமநற்
கேகயங்கருஞ்சங்கின்ளேநேமிப்புள்கிளர்ந்தபூங்காவினேயடைந்தே
கூகுகூவெனநற்குரலிடைகுமிறமிழற்றிடக்குதிக்கநீர்முழுக
வாகுறநடக்கநடித்திடக்கொஞ்சவருகவினெல்லவுங்கண்டார். 109

விரைசெறிகமலத்தரியரிசங்கீதத்தினேவிளங்கிடப்பாட
விருசிறகடக்கிச்செவிமயிர்சிலிர்த்தேயிருகணுலமைவுறநோக்கி
வருக்கமெலவுமுரையினேமறந்துவரையுமோவியத்தினேநிகர்த்தே
கரைமருங்கொளிர்பூங்காவிடையிருந்தகவினேயுங்கண்டுளங்களித்தார்.

தளவுசெவ்வந்திசண்பகந்திகிரிசாதிமவ்வற்கரவீரங்
கிளர்வழைநாகம்வகுளம்பாடலநீள்கிஞ்சுகமேலகான்மருங்கும்

வளனுறமலரமாதவன்பதத்தினணிந்திடுமெனமனுரதனூற்
றளவவொண்கொழுந்துகனகநற்கதிரிற் றலங்கிடுங்கவினையுங்கண்டார்.

சரியில்பாதவங்கள்வெறியுறய்யானந்தய்ங்குநீர்மலர்கொடியெழுபூ
விரைசெறிதுளபம்வாவிமச்சியங்கள்விளங்கிடக்ககமுதலாக
வரிதிருவுளத்துக்குவப்பவைகுண்டமளப்பிலாவழகுறவயங்கும்
பரமபாகவதரிறையுருத்தரித்தேயியற்றியபலவிதங்கண்டார். 112

உவமையினளினந்தராசவிராவமொள்ளியகள்ளிவண்கதலி
கவினுறுதுடிநீர்ச்சுழிவடவிலைமாவரைகழைகம்புநற்குமுதம்
நவையகல்சிலைமீனுளிகம்பிறைகந்தரமிவையெல்லவுநண்ணிப்
பவளவொண்கொம்பிற்பதிந்தபோற்கமலைபலதிருவாயெழக்கண்டார்.

சோதிசெய்படிகநீலமண்டபத்திற் றுலங்குநற்சாயையைநோக்கிப்
போதுறுமனமிப்பூவையர்முராரிபொற்பினுக்கொப்பவரிவர்க்குத்
தாதியாய்த்திரிவனென் றுபொற்குடத்திற்றண்பனிநீரினைநிறைத்து
வீதியினிறைத்துவிமலன்முற்றத்தின் விடுத்திடுங்கவினெலாங்கண்டார்.

இயல்புறு திருவோடிலங்குவைகுண்டத் தெழிலெலாங்கண்டுளங்களித்து
செயலுருவரணமாறையுங்கடந்துசிறந்திடுதாமரைமலர்சேர்
புயலெனுமுராரிசரண்படிந்திடவேபொருக்கெனப்புகுந்திடுதவரைச்
செயனுடன்விசையன்கதையினாற்றடுத்துச்சீறியேயேகன்மினென்றார்.

திருத்தமாதவராயுலப்பிலாவுகங்கள்கழிந்திடச்சிறந்திடுஞ்செயலால்
விருத்தராமெனவுமியவனமுறவேவிளங்கலாற்பருவமோரைந்து
பொருத்தியசிறவரெனவுமாயவனைவணங்கிடப்புகுந்திடுமெவரைப்
பருத்தவொண்கெதையாற்றடுத்திடநகைத்துப்பரமபாகவதரீதறைவார்.

நாவினீரறமெய்யலைந்தவாவினங்கணதிப்புனலுறநெறியறிந்தே
யாவலிற்பருகவரச்சினத்தெதிர்ந்தாண்டடர்புலிநிகர்த்துநீரிணையி
றேவனைத்தொழவேபுகுமெமைத்தடுத்ததீமையீர்மோகமும்மயக்கு
மேவிடும்பகையுமிலையரிக்கென்பதுணர்ந்துநீர்வெகுண்டதென்னென்று.

அரிபதத்துறவீர்திகிரிசங்கேந்துமங்கையீர்தேவரிற்றிகழ்வீர்
சரியில்சாத்திகத்தையகற்றிவெம்பவமார் தாமதக்குணத்தினைத்தரித்தே
யிருபிருகுடியுநுதலினிற்குனியவெரியுறவிலோசனராகி [ர்.
யுரையுருமெனவேயதிர்த்திவனுரப்பித்தடுத்ததீதன்மமென் றுரைப்பா

திருவினையகனையுளங்களிப்புறவேவணங்கிடச்சென்றிடுமெமைநீ
ருருமெனுமுரையாற்கதைகொடுதடுத்தபவமறக்குரோதலோபியராம்
நரருலகத்திற்சனித்திடுமெனவேநடுங்கிமெய்குலைந்துநாக்குழற [பன்.
விருகையாற்றெழுதுகழலிடையிறைஞ்சிச்செயனுடன்விசையனீதிசைப்

புனிதமாதவர்நீர்யாமறியாமற்பிழைத்ததாற்புத்தியைப்பொறுத்தே
கனமணிவ்வறுமைகழிந்திடப்பொழியுமியல்பெனக்கருணைசெய்தருளித்

துனியுறகிலத்தின் முராரிசத்துருவாய்த்தோன் றினுமவன்பெயர்மறவா
வினிமையார்தவத்தையருளுதியெமக்கென் றிறைஞ்சினரேத்தினரன்றே

செயனுடன் விசையனிவைமொழிந் திறைஞ்சித் திடுக்கிமெனத் தினராகத்
தயையுறச்சனகசனந்தசனு சனக்குமாரத்தவரிரங்கிக்
கயவரென் றிவரையிகழ்ந்துவெஞ்சாபங்கழறின முனிவகற்று த
செயலினுலெனவேதிகைத்திடுமௌவிற்சீதரனிவையெலாமுணர்ந்தான்.

தவர்களைச்செயனும்விசையனுந்தடுத்ததகைமையையறிந்திணையிலாத
நவமணியிலங்குவயங்குமண்டபத்தினலனுறுசேடவாதனத்தி
னுவமையின்மலர்மாதுடனும்வீற்றிருந்தவுத்தமன்கதுமெனவிழிந்தே
பவமறப்பெருகும்பகீரதிவளர்ந்தபதங்கொடுநடந்துவந்தனனால். 122

இரவியர்கோடியவிருமின்மினிபோலிகழ்வுறமணிமுடிதிகழக்
கரியமைமுகிலின்கவின்றனையடர்த்தகாதினிற்குண்டலமலையப்
பொருதொழிலதனிற்றனுசுபோல்வளையும்புருவங்கடிகழ்ந்திடவளையீன்
றரளவெண்மையினைத்தகர்த்திடுமுறுவலிளநிலாப்பிரபையைத்தரவே.

அலர்கொள்பங்கயமாழ்பங்கமுற்றலையவகன்றொளிர்நயனங்கடிகழக்
கலைநிறைமதியின்பாதியுங்களங்கமுறச்சவினுதலிலங்கிடவே
சலமுறுவளையும்வளையுறத்தரளவடம்புனைகந்தரந்தயங்கப்
பொலனுறுகிரிவெங்கரியுறத்துலங்குபுயங்கள்கேயூரங்கள்வயங்க. 124

கடலிடையுதையக்கதிர்முதிருறவேகவுத்துவமார்பினிற்றயங்கத்
தடவரைகடைந்தகரத்தினுர்சர்ப்பபணந்தொறுந்தாட்பொறியுறவே
துடியடிபடவேதுலங்கியமருங்கிற்சூழ்ந்தபீதாம்பரம்வயங்கக்
கடகரியினங்கணுலுகாலாகக்கவினுறும்பதநடந்திடவே. 125

திருமுகநுதலிற்சிறந்தகஸ்தூரித்திலதநல்லழகினைவிரிப்ப
மரகதமலையிற்றவழ்நிலாவெனவேமார்பினித்திலவடமலைய
விருமையார்கடையங்கரத்துறவுடைநாணெழிலுறுமருங்கிடையிலங்கப்
பரிபுரமரற்றத்துளபநற்கொழுந்துபதமிசையெழுந்தெழுந்தாட. 126

பரிபுரஞ்சிலம்பச்சதங்கைகண்மிழற்றப்பைம்பொனின் கலிங்கமேற்காஞ்
சிரவினனவிரையடர்த்திடவிணையிலிருதனமிசையினிற்கலன்க [சி
டரளமாலைகளோடிலங்கிடக்கரத்திற்சரிவளைசறங்கமஞ்சிகைக
ளிருகுழையதனின்வயங்கிடவளகத்தளியெழக்கமலமானெய்த. 127

இந்துவந்தெழுந்தென்னவெண்கவிகையிலங்கநித்திலவடமலையச்
சந்திரசாந்தந்தயங்கிடவதனீர்த்திவலைகளெங்கணுஞ்சாரத்
துந்துமிமுழங்கமுழவினமதிரத்துலங்கியசின்னங்கள்பரமன்
வந்தனனெனவேகறங்கிடமலரின்மாரிபாகவதர்கள்பொழிய. 128

மரகதமலையிற்செழுமியபவளக்கொம்பெனத்திருவலத்துறவே
யிருகையினுழிவளையினேடிலங்கவெழிலுறுகலுழன்மார்புயத்தி

ஞருகரமமைத்துஙளினவெண்மலரையுயர்வலக்கரத்தினாற்சுழற்றிச்
சுருதிபாகவதர்மொழிந்திடப்பரமன்றவர்முனந்தோன்றினான்றலங்க.

கோடிகந்தர்ப்பர்கவினிலங்கிடவேகுளிர்கொண்மூவெனவடிவிலங்கச்
சேடனும்பதத்திற்சிறந்தபாதுகமாய்வயங்கிடத்திகழுநாயகனை
யேடவிழ்மலர்மினிருகணானோக்கியிவனெழிற்கமைகிலனிவன்றன்
சேடியாய்த்திரிவனெனவெள்கிவரவேதிசையெலாமவிருறவந்தான். 130

சரியிலாச்சனகசனந்தரசனாதசனக்குமாரத்தவர்பரமன்
றிருவுடனிலங்கிநடந்துவந்தெய்தச்சிரமிசைக்கரங்களைக்கூப்பி
யிருசரணிறைஞ்சித்துளவிணைண்மலரின்மகரந்தமெங்குமெய்நனைப்ப
வரியரியரியேயச்சுதானந்தகோவிந்தவென்றவர்நடித்தார். 131

அண்டகோடிகளுன்றுதரத்தின்மெய்யினழகியவுரோமத்தினுனியின்
மிண்டிடவமைத்தேயதினமரனந்தசீலனின்மேவிவிமலா
முண்டகன்முராரிமுனிவர்கட்கெட்டாமூவுலகளந்தநின்பாத
புண்டரீகத்தினிறைஞ்சியாந்துலங்கவெளியையபோற்பொந்தனையென்று

கருமகாண்டத்தைவிரும்பிவான்சுவர்க்கங்கலந்து மண்செனித்தவனிறந்
திரையமேபதியாய்மீளுசீவன்கணித்தியமுத்தனாமுன்ற [து
னிருசரணிறைஞ்சியருச்சனைசெய்யாதியமகோரத்திடையுழல்வார்க்
கரியனாய்ப்பரமபதந்தனில்வயங்குமச்சுதநமவெனத்துதித்தார். 133

அலர்கொள்பங்கயத்தினமுந்தியவளியினவாவுறுமனதனைப்பற்றி
யிலகியவசுணமிசையினிற்களிக்குமியல்பெனவிருசெவியுனது
வலனுறுசரிதையோர்ப்புறின்வங்கந்தவறறநோக்குமீகாம
னிலையெனநயனநின்னுருக்காணினிலத்திடைப்பிறப்புநன்றென்றார். ()

சண்பகமலரின்வெறியருவருக்குமளியெனச்சாற்றிடும்பறையால்
வெம்பியேபாறுமசுணப்புள்ளெனவும்விளங்குவேலழுந்துறமுகிழ்க்கு
மம்புறுநயனமென்னவுமிதரதெய்வத்தைமனஞ்செவிநோக்கா
னம்பிடாதுனதுபதத்திடையமைக்கினலகிலன்சனனமென்றழைவார்.

சுத்தசாத்திகநற்பரமனேநமவேசோதியேமாதவநமவே
முத்தனேநமகேசவநமநாராயணநமமுராரியேநமவே
சித்தசன்பிதாவேநமவுலகளந்தசீதரவாமனநமவே
அத்தனேநமவென்றிறைஞ்சியாரணங்கள்பாடியெயாடினரம்மா. 136

இருகணீர்புரளரோமமெய்ப்பொடிப்பவிறைஞ்சியேநடித்திடுதவரை
யரியருளதனாலமைவுறநோக்கியனந்தவண்டத்துமற்புதமாம்
பரமபாகவதர்நீரிவணெய்தப்பவித்திரமாயவைகுண்டப்
புரியுடன்யானுமெனவிவையருளிமகிழ்வுடன்பின்னரும்புகல்வான். 137

புனிதமாதவரென்றிகழ்ந்திடாதெள்கிப் பொறையறுசெயனுடன்வி
சையன், சினமுறத்தடுத்தபிழையினைப்பொறுத்துக் கமையுடன்றிகழுவீ

ரெனலு, மினியராயரிவையயிறைஞ்சியேகியபின்னெழிலுறமுகுந்தனைப்
பணிந்து, கனமுறுகதைகொண்டெழுந்தகாவலர்மெய் நடுங்கிடக்கழறிடு
மாயோன். 138

நிலமிசைதனிலீலாவிநோதத்தை நிறைத்திடவேண்டியான்றனே,
சலமொடுதவரைத்தடுத்திட வுமைக்கொண் டிழைத்தவருமைச்சபித்திட
வுங், கலகமிங்கியற்றிமுடித்தனன்றறையிற் கலர்களாய்முப்பிறப்பெடுத்
தே,வலனுறவெனதுகரத்தினான்மடிந்துவருகுதிரென்றுபோயினனால்.

தவர்களைத்தடுத்தபவமுறச்செயனும்விசையனுமற்றவர்சபிக்க
வவனியிற்சனிக்கத்திதியுதரத்தினடைந்தனரவரையச்சுதன்ற [ன்
னவையறவதைப்பன்வெருவன் மினெனவேநான்முகனவிலவெண்கரியி
சுவனுறிந்திரனோடெண்டிசையமர்வோர்சுரரொடுதம்பதியடைந்தார். ()

அரியெனமுனிந்ததவத்தவர்சாபமறந்திடச்செயனுடன்விசையன்
சரியில்காசிபன்றன்றனையராயவன்றோள்சார்ந்திடுந்திதியுதரத்தின்
கருவதாயிரத்தாண்டமாந்துலகுலையக்கறைவருடம்பொருந்திடப்பா
ரெரியவானிடியுங்குறைக்கொள்ளிபலவும் விழுத்திடவிருவரும்பிறந்தார்.

இசலனுசியினிநெரிக்கொளியுமிழவிரவியைச்சூழ்பரிவேட
மிகவடர்தூமகேதுவுமெழப்பார்வீறியவாசுகனறையக்
ககனமோடுலகங்கலங்கிடக்கமலனடுங்கிடவலாரியுட்குழையப்
புகல்வதற்கரியவிரணியனுடனும்பொற்கணன்சனித்தனனன்றே. 142

இரணியநயனனெண்ணில்பல்வருடமிருநிலத்திற்றவஞ்செய்ய, வி
ரைசெறிகமலத்தயனவன்முனரின்விளங்கியெவ்வரங்களுமருளிப், பெரி
யதோர்கதையும்பிறங்கியதெய்வச்செயந்திமாலையுங்கொடுத்ததற்பின், சு
ரர்துனுக்கிடநான்முகன்மறைந்திடவப்பொற்கணன் றோள்புடைத்தார்
த்தான். 143

பாகமேற்சிலம்பினொளியெழவியப்பாம்பறவைகண்மறுகவெண்கரிகள்
பீதிகொண்டிடையப்பெருங்கதையெடுத்துப்பிறங்கமுதாசனர்பாற [தே
மோதிநல்வருணனுலகினை யடைந்தாண்டவன் குழாங்களைமுனிந்தடித்
யோதையாருவாரிகிழியவங்கதனுளுலாவிமூழ்கித்திரிநாளின். 144

தயையுடைச்சுவாயம்பூமனுமலரார்தவனடியிறைஞ்சிநின் றுரைப்பா
னயமுலகொருங்குங்கொட்புறமறைந்தவவனியானமர்ந்தரசாளுஞ் [லார்
செயலிலாதுணைநான்சேர்ந்தனனெனவத்திசைமுன் சிந்தைசெய்தெழி
புயல்வடிவுடையபுநிதனைப்பூமியருளெனப்போற்றிசெய்தனனால். 145

சிந்தைசெய்திருந்ததிசைமுகன்வதனஞ்சிறந்திடுநாசியாம்புழையிற்
சுந்தரப்பரமவரியொரங்குட்டவுருவுடைவராகமாய்த்தோன்றி
யந்தரத்திமைப்பின்முனரெழுந்தண்டமுகட்டினையளாவினனகன்ற
மந்தரவரையின்வளர்ந்தநற்காலின்மணிதிகழ்சிலம்பொலியதிர்ப்ப. 146

இந்துவின்வகிரையிவர்த்தெயிறிலங்கவிலங்குநித்திலவடமலையக்
கந்தரமயிர்கள்சிலிர்த்திடச்செவியைநெரித்துவாலெடுத்துவன்காலான்
மந்தரவரையையிடறிவானுயர்ந்தவடவரைச்சிமிலிதாளாக
வுந்தியெவ்வுலகுமுலையவாண்டரெப்பியுரனுடனுததிபுக்கனனால். 147

இரணியக்குவடாண்டிடிபடக்காலாலிடறிவானிமையவர்வெருவ
வருணனுங்கலங்கவுததியைக்கிழித்தங்குலப்பிலாவழுவத்தின்வைகிக்
கருமையிற்றவழக்கலையினிற்றெறிசேதகமெனக்காசினிகோட்டின்
மருவவாண்டிருணியாகியபரமனெழுந்துதான்வருகின்றவெல்லை. 148

வருணனும்வெருவவுததியின்மூழ்கிவரையெனத்திரிந்த பொற்கண
ன்பாற், சுரர்முனியடைந்தங்கறைகுவானுனக்குத்தோற்றவாகண்டலன்
முதலோர், வெருவுறக்கரந்தாரினிச்சமர்முயலும்விறலுடை யாரிலைஹரி
யாய்த், தரையினையெயிற்றூர்கொடுவெரும்பரனோடமர்செய்து தாக்குதி
யென்றான். 149

முனிவனீதறைந்தாண்டேகலுமவுணன்முக்கணான்வெருவிடவார்த்துக்
கனகமால்வரையின்கதையினைச்சுழற்றிக்காசினிகொணர்ந்திடுவராக
வனகனோடெதிர்த்தன்றயனெமக்கருளுமவனியைவிடுவிடென்றறைந்து
சினமுறவடவைத்தீயெழவிழிகள்சிவப்புறவுருத்தனனன்றே. 150

தரையினையுததிதரித்திடப்பரன்றன்சத்தியைநிறுவியாண்டமைத்துச்
சுரரயன்வலாரிதுறந்தவர்பிறியரம்பையர்சூழ்ந்துவந்தேத்தி
யரிகிரியுருவாயவனியையிடந்தாயடரசுரேசனைவதையென் [னே
றுரைசெய்துமலர்கள்சொரிந்திடவரையி னுருத்தனன்பொற்கணனுட

எதிர்வருவராகமுராரியைநோக்கியிரணியவிலோசனனறைவா
னுததியினழுவத்தந்துபூமியினையுன்னெயிற்றேந்தியின்றென்முன் [தம்
விதிவழிச்செயலாலகப்படுமுனைநான் வினோதமாய்வதைத்துவிண்ணவர்
பதிமுதல்விபுதர்திரளினைமடித்துப்பலமகவலியுண்பனென்றான். 152

வேறு.

அந்தகனஞ்சவுலகநடுங்கவசுரேசன்
வந்தொருகதையைமந்தரவரைபோலுறவீசத்
தந்தியினிடரைத்தவிரரியதனைத்தாளாலே
யுந்தலும்வானத்துயரவொடிந்தேதுகளான. 153

கதைதுகளுறவேகதமுறுநெஞ்சன்கனல்கண்ணன்
மதிதவழ்சடையோன்மலரயன்முதலோர்மிகவஞ்சக்
கதுமெனவுயரும்வரையிவர்தண்டங்கைக்கொண்டான்
டதிதிதன்மைந்தர்வெருவவடித்தான்சிரமீதின். 154

இரணியநயனன்கதைகொடுமோதவிருகோம்பாற்
றரணியிடந்தான்றண்டுசுழற்றித்தடைசெய்ய
முரணுறுமசுரன்கதைகொடுகிரிதன்னுதன்மோத
விருணியுருக்கொண்டவன்மெய்யடித்தானிடியொத்தே. 155

கவிடமெனவான் டிருவருமெய்திக்கதைகொண்டே
யிடம்வலம்வருவரெண்ணிலசாரியுலகெங்கு
முடியடிதோளின்மோதுவர்சிறுநகைசெய்வ
ரிடிவெடிபடவார்த்திவெர்கள்கதைமெய்யிமிழத்தான். 156

இரணியநயனனிவனுயரிருணியிவனென்றே
வருணனோடியமன்வாசவன் முதலோருணராதங்
கருணையமில்லாவசுரனுமோழலானேனும்
விரணமெய்யுறவான் சுழலுவர்கதையின்னடிமேவ. 157

அரிசின முறவேகதைகொடடிப்பவவுணன்றன்
வரையினினிடிவீழ்மாறெனவுக்காண்டயர்வுற்றுச்
சொரிகறைநிறையத்தேறியெழுந்தேசுடர்போலத்
தெரிவுறதண்டங்கைகொடடித்தான்சினம்விஞ்ச. 158

ஆடகநயனன்மோதியதண்டாலரிகையி
னீடியகதைகீள்வீழமுனிந்தேநெமொறன்
பீடுடைவாலாலக்கதைபற்றிப்பிலனேடுஞ்
சாடினனவுணன்றண்டுமுறிந்தேபொடியாக. 159

கதைபொடியுறவேகதமிகுமவுணன்வரிவில்லின்
குதைசெவியுறநற்குரைகடல்சுவறக்கொடுவாளி
விதியுடனமரர்வெருவிடமழைபோல்விடலோடுந்
திதிசுதர்காலன்றண்டுசுழற்றிச்சிதைவித்தான். 160

கோலமுகத்தான்கதைகொடுசுற்றக்கொடிதாய
வாலமெனச்சூழாசுகமெல்லாமறலோடும்
வேலயில்குந்தமெழுமழுநேரின்மிளிர்வாண்முட்
கோலொளிர்பிண்டிபாலமெறிந்தான்கொடியோனே. 161

கொடியவன்விட்டபலபடையெல்லாங்கதைகொண்டு
நெடியவன்மோதத்துகளுறலோடுநெறியில்லான்
விடையவனயனுகண்டலனமரர்மிகவஞ்சச்
சுடர்விடுமூனைகொள்சூலமெறிந்தான்கதம்விஞ்சு. 162

அண்டருமஞ்சவவுணன் விடுக்கவருசூலங்
கண்டைகறங்கக்கனல்புடைசுற்றக்கடுவெல்லா
மண்டிடவேதாளக்குழுமுந்தமலரோனே
டெண்டிசையுள்ளோர்வெருவிடவந்தவிடியுட்க. 163

இருளொருதிசையைச்சுற்றவதற்குளெரிமண்ட
மருளுறமலகையொருதிசைசுற்றவடவைத்தீ
யுருமினமூளையவொருதிசைசுற்றவிடமுற்று
மாவொருதிசையைச்சுற்றிடவந்தயிலம்மா. 164

அரனயன்முனிவரதிதிபெறுஞ்சேய்முதலெண்மர்
சுரர்களும்வெருவச்சூழ்கனன்மலியவருசூலந்
தரையுறபொடியாய்விழவொளிராழிதனைவிட்டங்
கிருணியினுருவாமெம்பரனூர்த்தான்றவரேத்த. 165

சூலமறக்கண்டரனயன்முதலோர்துதிசெய்தார்
காலனெனக்கண்டீயுறுமவுணன்கடிதெய்திக்
கோலமெய்குலையக்கொடியகரத்தாலிவன்மோதிச்
சூலுறசொண்மூவிடையினொளித்தான்சுசியொப்பான். 166

எதிரமர்செய்யாதேகியொளித்தவசுரேசன்
கதுமெனமாயப்படையைவிடுப்பக்கரிகோமா
வுததியெனச்சூழவுணர்களார்ப்பயுகம்வீயுந்
திதியினிலறைகால்வடவனலுற்றதிசையெங்கும். 167

இருளுறவெங்குந்தூளிபொழிந்தவெரிகொள்ளி
சொரியவிரத்தஞ்சீய்தசையத்திச்சுரையோடும்
பெருகிடமண்டிப்பேய்கணடிப்பவிருநாவால்
வரையிறவாங்கிமாசுணமெங்கும்பரவிற்றால். 168

கிரிவருடங்கள்கிளரமரத்தின்மழைபெய்ய
வருமினமெங்கும்பரவிவிழப்பல்படையுற்றுச்
சொரியமுடுக்கிச்சூலமெடுத்தேகலையின்றி
நிருதிகளார்ப்படாகினியெங்குநின்றாட. 169

முக்கணர்நூறுசிரசினர்நாவான்முகிலெல்லா
நக்குவரீரைஞ்ஞூறுகையுடையர்நாட்டந்தீக்
கக்குவர்வரையைக்காலிடையெற்றிக்கடலூட்டி
முக்குவர்வாயாலார்ப்பர்களண்டத்தொலிமுட்ட. 170

எற்றுமினெற்றிப்பல்படையாவுமெறிமின்கள்
சுற்றுமினிருணிவெருவிடவாளிசொரிமின்கள்
பற்றுமினுடலைத்தின்னுமின்கறைப்பருகிக்கா
லிற்றிடவரைமின்வரையினிடத்தென்றெதிர்செல்வார். 171

திக்குலகெங்குந்தீயுடன்வாயுவரைகொள்ளி
மிக்கிடவிரதக்கரிபரியிடையவிடம்வாயாற்
கக்கிடுதீயர்நிருதர்களெங்கும்பரவக்கண்
டக்கணம்வானோர்திசைதொறுமோடியயர்வுற்றார். 172

சுரரொடுமுனிவர்பாறிடவதிதிசுதனோடு
மரனயனோட்டம்பொத்தினர்கிரியாயமர்செய்வான்
சரிபிலதிகிரியத்தனைமாயப்படையெல்லா
மிரவியினவிராவிமமறுசெயலிற்கடிதிற்ற. 173

ஆடகநயனன்செலவிடுமோயமறமுன்ன
மோடியவிபுதர்முனிவர்கள்பலருமகிழ்வோடுங்
கூடினராகிமலர்கள்பொழிந்தாருமைகொண்க
னேடவிழ்மலரோனிமையவர்நாதன் றுதிசெய்தார். 174

தான்விடுமோய்ப்படையறலோடுந்தழல்கண் ணன்
வானமதஞ்சவாள்கொடெதிர்ந்துமலைவானை
யேனவுருக்கொண்டெதிர்பொருபாணுழியையேவத்
தானவர்பெருமான் றலைபொடியாயபடிமீதின். 175

சூரியர்கோடிதுன்னியபோலவெழுமாழி
வீரியவசுரன்கந்துணிசெய்யவிழலோடு
மேருறுமரனுகண்டலனளினனிமையோர்கள்
சீருறுமுனிவர்திரளொடுமோடித்துதிசெய்தார். 176

வேறு.

அந்தரதுந்துமியதிர்ந்ததெங்கணு
நந்தொலிபரந்தனநவின் றசின்னங்கள்
சிந்தினர்மலர்மழைதேவர்பிஞ்ஞக
னிந்திரனுடனயனியம்புவானரோ. 177

அந்தகன்வெருக்கொளாடகக்கட்டிபனை
யெந்தைநீயிருணியாயெழுந்துசெற்றங்கள்
வெந்துயரொழித்தனைவேள்விநாயகர்
தந்தனைபுனலினுழ்தரணியென் றனன். 178

வாசமுமலரும்போன்மண்விண்ணேழ்கட
லாசையெண்வரையரன்யானுமாகியென்
னூசியின்வராகமாய்நண்ணிப்பொற்கண
னீசனைச்செற்றெமதிடரைநீக்கினுய். 179

அந்தமுநடுவுமாயாதியாய்த்தவர்
சிந்தனைக்ககப்படாத்தேவவெம்முனர்
வந்தனையெளியர்போன்மறைக்குமெட்டிலா
வெந்தைநின்மாயையையாவர்காண்குவார். 180

படைத்திடயானெனப்பண்ணியாவையுந்
துடைத்திடவரனெனத்துலங்கவைத்தென்ற
னிடத்தினிலிருணியாயிவனைச்செற்றலாற்
கடைத்தொழின்முதற்றெழில்யாங்கள்கற்றிலோம். 181

உயிர்தொறுமுளனுமாயுலப்பிலண்டங்க
டயிரமைசெய்யெனச்சார்ந்துநின் றநீ
யியல்புடன்கொணர்ந்திடுமவனியென் றுமிவ்
வயமிசையொளிபெறவருளுவாயென்றான். 182

அயனிவையறைந்திடக்கேழலாகிய
புயல்புனன்மீதினிப்பூமிகீழ்விழா
தியல்புடனிருக்கவாண்டருளவென்சனன்
றயரொழிந்தாடவேசுரர்கள்போற்றினர். 183

பூமனோடமரர்கள்போற்றும்வேலையிற்
சாமளரூபியாய்த்தமனியத்துகில்
வாமமேகலையுடன்வயங்கப்பார்மகள்
வீமனுஞ்சுரிகுழல்விளங்கவந்தனள். 184

அடிமிசைநூபுரமாரறப்போற்றசீர்த்
துடியிடைமேகலைதுலங்கிநித்தில
வடநகிலிலகப்பொன்வளைக்கைமாண்புற
விடமகல்விழியிணைமிளிரவந்தனள். 185

சுதைதருமொழியினவேர்செவ்வாயள்வின்
னுதவிபொற்குமிழெனநுவலுநாசியள்
புதிதலர்கமலம்போற்பொலியுமானனி
மதியினிற்பிளவெனவயங்குநெற்றியாள். 186

நாகெனுங்கழுத்தினாளீக்நேரென
வேகடத்தோடுகள்விளங்குகாதினள்
கேகயமனங்குயில்கிள்ளைநாணவே
சூகரத்தடிமிசைதொழுதுநின்றனள். 187

வந்தடிதொழுதெழுமாதைக்கோலமாஞ்
சுந்தரவாமவூருவிற்றுலங்கநற்
சந்துடன்றுமமுந்தனத்தின்மீதணிந்
திந்திரைநாணவாண்டிலங்கவைத்தனன். 188

அவனிமின்வராகமாமாதிபூருவிற்
கவினுறத்தோன்றலுங்கமலன்றேவர்மன்
சிவனொடுமுனிவர்கடிரண்டுவாழ்த்தியே
பவமறப்பொழிந்தனர்தருவின்பன்மலர். 189

துந்துமிபடலிகைதுடிகள்காகளஞ்
சிந்துவினொலிகெடமுழக்கச்சேரவொண்
கந்தநற்றூபமுங்கவின்கொடீபமு
மந்தரத்தரம்பையரெடுத்தங்காடவே. 190

கோலமனிடத்துடையிருத்துங்கோமள
ஞாலமின்னினையணைத்துவந்துநான்மறை
வேலையிற்றிரண்டிடுமிரதமீண்டிய
சீலமாவராகமாபுராணஞ்செப்பினன். 191

பாவமற்றுயர்மகாபுராணந்தான்பகர்ந்
தோவியத்தெழிலினைப்படைத்தவுத்தமத்
தேவியைமகிழ்வொடுசேரத்தன்பதத்
தேவிடையவனயன்போற்றச்சேர்ந்தனன். 192

கோலமாயவனியைக்கொணர்ந்துபொற்கணன்
காலன்வாயுறவரன்கமலனேத்தமா
ஞாலமான்மகிழ்கதைநவின்றநாதனுர்
சீலமீதெனமுனிதிருவுக்கோதினன். 193

வராகப் படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 813.

---

## 9 - வது, கபிலப் படலம்.

வாமமவிர்சித்திரைவைகாசியானிகலையாற்றி வெண்ணைக்காடியாவ ணிக்குணின்றுகஞ்சத், திமையன்மண்விழப்புரட்டாசியற்பசிசு பாலன்சி ரந்துணியவேவாழியையிடுற்றவன், சோமகுலவந்தகன்சேய்முனர்நடுங் காத்திகைத்தாசேிடைமாளாதருளுந்துளபமார்கழியான், பூமன்வனிதை க்காய்மாசில்சாபங்குனியப்போரினிற்றெசமுகனைச் செற்றானைப்போற் றிசெய்வாம். 1

வேறு.

அரிபெருங்கிரியாகியேயாடகநயனன்
சிரமறுத்திடுசெரிதையைச்செங்கமலத்தின்
மருவுநற்றிருக்கேட்டுளமகிழ்ந்துமால்பினரின்
றரையிலுற்றியதெதுவெனநாரதன்சாற்றும். 2

விரியுநான்மறையயனுமொழுதலியவிமலன்
கருடவாகனனுய்க்கருத்தமன்முனரெய்தி
வரமளித்தவன்சுதனெனக்கபிலனுய்வயங்குஞ்
சரிதையுத்தமிகேளெனத்தவனிவையறைவான். 3

திருத்தமுற்றிடச்சிருட்டிசெய்மலரயன்சேயாங்
கருத்தமப்பிரசாபதிகருடவாகனனு
மொருத்தனுக்குரித்தாய்வெட்டெழுத்தைத்தனுளத்தி
னிருத்தியோகமாண்டியற்றினனெண்ணருங்காலம். 4

இருதையத்தினிலெட்டெழுத்தமுந்துறவிருத்தி
விரதசீலனுய்விலோசனநாசியினுநியின்
மருவவைம்பொறிமறித்துத்தன்னடியினங்குட்டந்
தரையினுற்றிடத்தழலினுப்பண்டவஞ்செய்தான். 5

கருத்தினுள்கவுமரியதாங்கடுந்தவஞ்செய்யப்
பிருத்தியன்கருத்தமன்றன்மேற்பிரிதியுற்றவனாய்
கிருத்தம்வானவர்செயக்கையினேமியுங்கோடுந்
தரித்துவந்தனன்கலுழன்மேற்றிருவுளந்தயங்க. 6

அலரிகாணவேயலரரவிந்தமாமலர்கண்
மலியுமைப்புயன்மிசையிளங்கதிரவிர்வயங்கும்
பொலனுறத்திகழ்கிரீடநற்சேகரம்பொருந்தக்
கலநிறைந்திடக்கண்கைவாயுந்திகாலிலக. 7

மகரகுண்டலமலைந்திடவளையிருதனுபோற்
புகல்வதற்கரிதாகியபுருவங்கடயங்க
நிகரிலாக்கவுத்துவமணியவிர்நிறைந்திடப்பொற்
றுகின்மருங்கினிலமருடைநாணொடுந்துலங்க. 8

இரவினன்னவிர்பரந்திடுங்கருங்கடலெனவெண்
டரளமாலைகள்கழுத்தினுமுரத்தினுந்தயங்க
விரைசெய்தார்துளபத்தொடுவிளங்குகஸ்தூரி
திருமுகத்தினுக்கழகுறநுதலிடைத்திகழ. 9

தேவதுந்துமிமுழங்கிடச்சிறந்தகற்பகப்பூத்
தூவிவானவர்நடித்திடமுனிவர்கடுதிப்பப்
பூவுளோனொடும்புகரிபவிறைபுகழ்ந்தேத்த
நாவினன்மறைநவின்றிடநாரணன்வந்தான். 10

வாடுறுமலர்மங்கைதன்னாயகன்வரவு
நாடினான்வருமானந்தநயனநீர்சொரியப்
பாடினான்மறையிசையினிற்கருத்தமன்பணிந்தே
சூடினான்பகிரதியமர்பதத்தணிதுளபம். 11

இரவிகாணலரரவிந்தமலரெனவிணையி
லரியைநோக்கியகருத்தமனானனம்வயங்கச்
சரிரரோமமும்பொடிப்பநாக்குழறிடத்தடக்கை
சிரமுறக்குவித்தாடியேசெப்பலுற்றனனால். 12

அண்டமெண்ணிலவகுத்தவைகாத்தளித்ததனு
ளுண்டெனத்திரிந்துரோமத்தினுதியதிலுலப்பின்
முண்டகக்கடவுளருறைமுட்டைகளமர
வெண்டவத்தினர்துதித்திடவிலங்கிவீற்றிருப்பாய். 13

சீவகோடிகளனைத்தினுமுறைந்தவைசெலுத்தும்
பாவபுண்ணியம்பற்றிலாய்பங்கயன்முதலாந்
தேவர்தேடவுந்தெரிகிலாய்பத்தருக்கெளியாய்
பூவினின்னமர்திருவுரம்பொருந்தியபுநிதா. 14

மாதவாநமமலர்மகண்மணாளனேநமவே
ஆதியேநமவவனிமின்னாயகநமவே
சோதியேநம்சுந்தரப்பகீரதிதோயும்
பாதனேநமபரமனேநமவெனப்பணிந்தான். 15

உளமுமென்பினோடுருகிடுங்கருத்தமன்றன்னைத்
துளவணிந்திடுசோதிதன்னிருகணானோக்கி
யளிமலிந்திடமகிழ்ச்சியாலானந்தமுறவே
வளமுறும்மிளமுறுவல்வாய்மலர்ந்திவையறைவான். 16

சுத்தனாமெனைக்கருத்திடைத்துலங்கிடவமைத்த
பத்தனாகியகருத்தமபவமெலாமறத்தே
மெய்த்தவஞ்செயும்வித்தகாவுனக்கியான்விளங்கும்
புத்திரன்னெனவருவனென்றிவையிவைபுகல்வான். 17

சுத்தனாகியசுவாயம்புமனுவருடோஷை
தத்தைநாணுறச்சாற்றிடுந்தேவகூதையைத்தான்
வித்தகம்முறவேட்டவடன்னொடும்விளங்குஞ்
சித்தசன்னெனக்கலவியிற்சிறந்தினிதிருப்பாய். 18

தேவகூதையாந்தேவியைநீபுணர்ந்திடவே
தூவியோதிமகிர்நவவனிதையர்துலங்கப்
பாவமில்லவள்பயந்தபின்பவவிருளகற்றும்
தீபமாகியசிறுவனாய்ச்சனிப்பனென்றகன்றான். 19

மாயனேகியபின்னரின்மலர்மகணிகராந்
தூயளாகியமகளுடன்சுவாயம்பூமனுமன்
காயும்வெவ்வினைகடிந்தருள்கருத்தமன்றன்னை
வீயொடேயயந்தனிலருச்சித்திவைவிளம்பும். 20

மாதவஞ்செயுங்கருத்தமயான்பெறும்கடான்
கோதில்கோகனகத்திருநிகர்த்திடுங்கொம்பு
பூதலந்தனில்விசும்பினிலிணையிலள்பொறைசா
னீதிவாய்மையளிவளெனச்சுட்டிநின்றறைவான். 21

உருவினாலுருவிலிமடலெடுத்துறுவிரகம்
பெருகவேமயங்கிடவயங்கிடுநலன்பெற்ற
தெரிவையாகியதேவகூதைத்திருத்தன்னைத்
தருகுவனுனக்கென்றுகைத்தாரைநீரளித்தான். 22

கதமிலாதுயர்சுவாயம்பூமனுமன்கன்னிகையைச்
ஓதுமறைப்பொருளுணர்ந்திடுகருத்தமன்றனக்கே
வுதவினேனெனவுதகங்கைவிடுத்தலுமுவந்து
சுதைநிகர்த்திடுந்தோகையைநெறியின்வேட்டனனால். 23

இந்துவேணியைநிகர்த்திடுங்கருத்தமனில்லாள்
விந்துமாசரசிற்படிந்தெழுவவண்விதிக்க
வந்தமின்னுடனத்தயத்தனேகமங்கையர்கள்
வந்துதோன்றலுமனைவிக்கூழியஞ்செயவகுத்தான். 24

கருத்தமப்பிரசாபதிகாகமுமணியு
மருத்தியாகவேபொருத்தியவிமானமங்கெழத்தான்
திருத்தமாகவேவகுத்ததிற்றேவகூதையினை
யிருத்திமற்றவளோடுமெண்டிசையெலாந்திரிந்தான். 25

கற்பகத்தருநிழலினுங்கவினுறுகுபேரன்
பொற்புறுந்திருநகரமாம்பொழிலினுங்கனக
வெற்பினுற்றுயர்ந்தனவனத்தினுமேவி
யற்புதத்தணங்கின்குயமுரத்துறவணைத்தான். 26

மாரனோடவன்மனைவியும்வெள்கிடமறுவி
ணாரிதன்னொடுங்கருத்தமனலங்கிளர்கலவி
வாரிமூழ்கிடமற்றவள்வயிற்றிடைச்சனித்தா
ராருநேரிலாவரிவையரைந்துடனால்வர். 27

பாவைமார்கவப்பெயர்களைப்பயந்தழகாருந்
தேவகூதையாந்தெரிவைசாடரத்தினிற்சிறந்த
மூவராகியமுழுமுதன்முனிவர்கள்வலாரி
பூவின்மீதமர்புனிதனும்போற்றிடவமர்ந்தான். 28

உவமையற்றுயர்தேவகூதைத்திருவுதரத்
தவிர்நிறைந்திடுமெச்சுதனமர்ந்திடுநாளி
னவையகற்றியகருத்தமனாரியைநோக்கித்
தவமியற்றிடுவேன்றளரேலெனச்சாற்றும். 29

மனைவிபுத்திரர்மித்திரர்வாழ்விவையெல்லாங்
கனவினுற்றிடுபொருளெனக்கடிதினிற்கெடுமோ
தினகரன்புருடாயுவுநிறைந்திடத்திரிவ
னனகனேயலாற்சீவனுக்காந்துணையிலையால். 30

ஆதலாலினிதாயபோலடர்மனைவாழ்க்கை
கோதில்கோதையேகூறிடினநித்தியமாகு
மாதவன்றிருநாமமேமறுவிலாநெறியைத்
தீதகற்றியவவன்பதத்துறச்செலக்காட்டும். 31

காமமாகியவளக்கரைக்கடக்கிலாதமிழின்
றீமையாகியசனனத்தைச்சேர்த்திடுமதனால்
வாமமேகலைமடந்தைநீவருந்தலையென்று
பூமனன்சுதன்றவஞ்செயப்போவனென்றுரைத்தான். 32

கொழுனனிவ்வுரைகூறியேயகல்வனென்றறைய
வழுதகண்ணினளயர்ந்தவனடியின்வீழ்ந்தெழுந்தே
தொழுதகையினடுணவநீயொருவிடிற்றன்ப
மெழுமனத்தியாமெனக்கியார்களைகணென்றிசைத்தாள். 33

மனைவியிவ்வுரையியம்பியேவருந்திடக்கடிய
வினையைவென்றிடுங்கருத்தமன்விளம்புவான்மாலுன்
றனையனாகவேசனிக்கவுன்சாடரத்தமைந்தான்
வனிதையேயுனக்கவன்கதிவழங்குவனென்றான். 34

சரியின்மாதவன்றனையனாச்சனிப்பனென்றியம்பி
யரிவைதன்னிருநயனநீரங்கையான்மாற்றிக்
கரியுறுங்கருங்கானிடைக்கருத்தமனேகப்
பிரமனெய்தியேதடுத்திவைபேசலுற்றனனால். 35

திருவினாதனுன்றேவிதன்னுதரத்தினமர்ந்தான்
சரியின்மாதவவுனக்கவன்கதியினைத்தருவ
னரிவைவெந்துயராறவேயவன்சனித்ததற்பின்
மருவுவாய்வனத்தென்றகன்றனன்மலருறைவான். 36

பிரமனவ்வுரைபேசியேயகன்றிடத்தவஞ்செய்
கருமநீங்கியகருத்தமனிலகுகன்னியரை
மரிசியேமுதலானவப்பெயர்கையின்வழங்கிச்
சுரர்துதித்திடத்துலங்கினன்மனைவிதன்னுடனே. 37

சுரர்கண்மாமலர்பொழிந்திடத்துந்துமிமுழங்கக்
கரியையூருவோனரன்கமலன்புகழ்ந்தேத்தத்
தெரிவையாகியதேவகூதைத்திருவுதரத்
தரியுருபமாங்கபிலன்வந்தவதரித்தனனால். 38

பாவகாரியர்பற்றறக்கபிலனைப்பயந்த
தேவகூதையுஞ்சிறந்திடுகருத்தமன்றானு
மாவலிற்பெறுஞ்சிறுவனையரியெனவறிந்தே
பூவின்மாரிகள்பொழிந்தடிபணிந்துபோற்றினரால். 39

மைந்தனாகியகபிலனைக்கருத்தமன்வணங்கி
யிந்தமாநிலத்திருவைப்போலியற்றிடுங்காமப்
புந்திமுற்றியபுன்மைபோயுன்பதம்புகவே
யெந்தமாதவமியற்றுவனியம்பெனவிசைத்தான். 40

தந்தையாகியகருத்தமன்சாற்றிடக்கபில
னெந்தமாதவமியற்றினுமென்பெயரறியா
மைந்தர்மண்ணிடைப்பிறவியின்மறுகுவரதனாற்
சிந்தையின்னெனைமறக்கலாத்தவஞ்செயென்றுரைத்தான். 41

சிறுவனாகியகபிலனாமிறையிவைசெப்ப
வறிஞனாகியகருத்தமனடவியினடைந்தைம்
பொறியைவென்றுநற்புந்தியிற்றுவாதெசாக்கரத்தா
னிறைவுறத்தவஞ்செய்தரிநிவர்பதத்துற்றான். 42

மகுணனைப்பிரிந்தழுங்கியசுவாயம்பூமகடா
னிகரிலாததன்சிறுவனைவணங்கியேநெறியார்
புகரிபத்திடர்போக்கியபுனிதனேயென்ற
னகமடர்க்கும்வெவ்வினையறவருளெனவறைவான். 43

என்பதத்துறுமடியவர்கயவரையிகழ்வர்
துன்பமுற்றியமனைவியர்சுகத்தினைத்துறப்பர்
வன்பகற்றியநயவரோடிணங்குவர்வலாரி
யின்பமுற்றியபோகமுமென்றுநச்சிலரால். 44

சிரசினாலெனையிறைஞ்சியாராதனஞ்செய்வ
ரரிசரித்திரமாயவென்காதையையறிந்தே
யுரைசெய்தப்பொருளுணர்ந்துளமகிழ்வரென்னடியார்
திரளின்மற்றவர்பாதநீர்சென்னியிற்றரிப்பார். 45

சுத்தனாகியபத்தருக்குறுகுருதுணைவ
னத்தனன்னைமித்திரன்சுதன்சகோதரனாகி
யித்தலந்தனிற்பவக்கடல்கடக்கவிட்டிலங்கு
முத்தமப்பெயருறையுமென்பதத்தினுய்த்திடுவன். 46

விரைவினுற்றமுற்றிகெட்டந்தாழ்தரைமேவு
மருவுநீரினைவிலக்கியேயுயர்நிலமதனிற்
பரவுநந்தனவநத்தினிற்பாய்ந்திடவியற்றும்
விரகர்போலவும்விட்டெனையுறுவரென்னடியார். 47

ஆதனந்தனினிருந்தடர்வாயுவையடக்கிச்
சூதுசெய்யுமிந்திரியங்கடோற்றிடலொடுக்கி
நீதிமல்கநாசியினுதிநயனத்தைநிறுவிக்
காதலாலெனையிருதையகமலத்திற்காண்பர். 48

இருதையந்தனிற்கமலமாமலர்மிசையிலங்கு
முருவனாகியவெனைத்தியானஞ்செயுமுபாயஞ்
சரியில்வாலனாய்ச்சவுந்தரியத்துடனின்றே
யரவினிற்றுயின்றிருந்தபோற்காண்குவதறிவே. 49

கொடிதுரொட்டிசெந்தாமரையலர்மலர்குவிசம்
படருநற்குறியழகுறவிலங்கியபாதஞ்
சுடர்மலிந்திடுசோமரிற்றுலங்கியநகங்கள்
வடிவுடைத்திருவயங்கியதரமுறுசானு. 50

உவணன்றோள்களுக்கழகெலாமளித்திடுமுருவங்
கவின்மலிந்திடுகெனகந்கலிங்கமார்மருங்கு
கவையகற்றியபிரமனுற்பவித்திடுநாபி
யுவமையற்றுயர்திருவினுளுவக்குமில்லுறமே. 51

கவின்கவுத்துவமணியினுக்களித்திடுகண்ட
முவமையற்றுயர்மந்தரவரையுறக்கடையத்
தவர்மகிழ்ந்திடத்துலங்கியகடையமார்தடக்கை
யவிர்கொடுத்திடுகரங்களினமருமைம்படைகள். 52

அளிசிறந்திடுங்குஞ்சிநல்லளிசெறிநயனம்
வளைவின்மானவேல்வயங்கியபுருவங்கள்வெள்ளை
யிளவிளங்கதிரிரண்டுகொண்டெனவிருகுழைக
டளவலர்ந்தசெந்தாமரைநிகர்த்திடுவதனம். 53

இவையெலாமுறவிளங்கியவுருவமாரிறையை
மருவுவோருளமுருகுவர்மகிழுவராழுவர்
சிரமிசைக்கரஞ்சேர்ப்பர்மெய்யுரோமங்கள்பொடிப்ப
விருகணனந்தநீர்விழவெங்கணுநடிப்பர். 54

பேயர்போலவேதம்மெய்ப்பேணலர்நகுவர்
தூயபத்தரைக்கண்டிடினிருகையாற்றொழுவ
ராயவன்புறமடியர்களென்பதமதனிற்
றேயம்விஞ்சியவிரசையைக்கடந்துசூழுவரால். 55

தாமதன்பரதிரவியம்பிறர்தையல்புணர்ச்சி
தீமையெல்லவுமலிந்திடச்செய்குவனுலப்பில்
காமமுற்றுவனிராசதன்சாத்திகன்கமல
மாமனுகுமெனுமந்தன்மநத்திஸடயமைப்பன். 56

அலரியாலுலர்காட்டத்தினதிகமாங்கிளையோ
டிலையுறும்மரமதனினுமுயரியதெண்ணில்
பிலனையுற்றிடுபிராணவாயுத்தருக்கிருமிச்
சலமுளாழ்மனக்கீடமற்றதிற்சற்றுப்பெரிய. 57

அறிவுண்டாமனக்கிருமியினதிகமாம்பரிச
முறவுணர்ந்திடுமெரவட்டையதனினுமுயரு
நிறையுநற்சுவைவலசலசரமதினிவரு
நறுமலர்ப்பரிமளத்தினைநுகர்வநல்லளியே. 58

அளியைவிஞ்சிடுமோசைகண்ணுலுணரவங்
தெளியவாயிருபக்கமுந்தசனங்கள்செறியும்
வெளிறில்கட்செவிக்குயர்ந்திடுமெதற்குவீறிடுமொற்
கிளருநாலுகாலுளகரிகேசரிபலவும். 59

அடிசதுர்த்தியாம்விலங்கினுக்கதிகமானிடர்கள்
படியின் விஞ்சியமனிதரினுயர்ந்தவர்பவங்கள்
கடியும்வேதியரவரினுமிவர்ந்தவர்கருத்தி
னெடியமாமறைநான்கையுமிகழ்த்துமந்தணரே. 60

மறையையோதுவார்தம்மினும்வயங்குவார்வேத
மறையுமப்பொருளுணர்ந்தவரவரினும்பெரியோர்
நெறியினப்பொருட்சந்தயமறவிகழ்த்திடுவோர்
மறவினித்தியநியமமுற்றவரினுமுயர்ந்தோர். 61

நித்தியாமனுட்டானங்கணிறைந்தவர்தமினும்
வாதைபோகவேகாமம்வையாநியமத்தோ
ரேதமற்றிடுமவரினுமியமங்களெல்லா
மாதியாமெனக்கேசமர்ப்பித்தவரதிகர். 62

நித்தியாமனுட்டானங்கணிகழ்த்துமப்பலன்கள்
வேதவேள்வியினுறுபொருள்விழுமியதான
மீதுதான்முதலானவையென்னிடத்தளிக்குஞ்
சாதுவிற்பெரியோரிலைசகலலோகத்தும். 63

சகலதேவதைதமக்கியானறலைவன்சத்தியமே
நிகரில்சாகரங்கரைகடவாததுமிவருங்
ககனமேகங்கள்சொரிவதுங்கடல்வடவைத்தீ
வெகுவிலாததுமென்னுடைவினைதவாக்கினையே. 64

கலர்கடம்முயிர்கடுஞ்சமன்கவர்வனென்றெண்ணா
நிலனிலெண்ணிலாவருடங்களிருப்பர்போனினைந்தே
வலனிற்றுருந்தருங்கலன்களுமாழையுமெல்லா
நலனின்மன்னராற்றிருடராணுசமாய்மெலிவார். 65

ஈனனுயினும்யாக்கையையிழக்கச்சம்மதியான்
கானலாறெனக்கருதியேயுழலுவார்போல
மானநோக்கலான்வரைவிலாமகளிர்தோளணைந்தே
யானியேதரும்பவமுறவாசையைத்தவிரான். 66

பரதனங்களைக்கவர்ந்ததுபாவமென்றெண்ணா
னிரதம்போலவெந்துரிதமேநிறைக்குமில்வாழ்க்கை
மருவமற்றதினுற்றிசையெங்கணும்வருந்தி
நரைமலிந்திடுமூப்புநோய்நணுகவேமெலிவன். 67

திரையுந்தோலலைத்திடவளைவில்லெனத்திகழ்வ
னுருவமாறியேயுடல்குனிந்திடநயனங்க
டெரிகிலாதுபற்பலகழன்றிடத்தெரிவையர்க
ளுருவருப்புறவகன்றிடச்சிறுவர்குற்சிப்பர். 68

சிறவரோடிலாளிகழினுஞ்சினேகமற்றவர்மே
னிறையவைத்தவருதாசனக்கூழ்நிறைத்திடினு
மறவுறுஞ்சுவாத்தின்பபோலருந்தியெவருந்தி
நெறியறத்தவழ்ந்தப்பொழுதுயிர்விடநினைப்பன். 69

மனைவிபுத்திரர்மித்திரர்வாய்திறந்தரற்ற
நினைவுமற்றவர்க்குரைநிகழ்த்தவுமரிதாய
வினைகள்சுற்றிடக்கோரசாதகருறவெருவி
மனநடுக்குறப்பிரசமாமலம்விடமரிப்பன். 70

இருநிலத்திடைமரித்தவன்சூக்குமயாக்கை
விரவியாதனுசரீரத்தின்மேவிடவமைத்துப்
பரவுசாதகர்திருடரைப்பற்றுமாறெனவே
கரமிரண்டுறப்பாசத்தாற்கட்டியேகுவரால். 71

நெறியின்ஞாளிகணிறைந்துமெய்யெங்கணுங்கவ்வ
வறையுங்காலுடன்காட்டுத்தீயாண்டுவெந்தடர்க்க
நிறையும்வெம்பசிநலிந்திடநீர்நிழனிலாது
மறுகுசாதகர்கசையடிவெரினுறமயங்கும். 72

தரையியற்றியபவமெலாநினைந்துளந்தளர்வ
னெரிபரப்பியவயமுறுமிலக்கயோசனையும்
பரவுசாதகரடியினுற்பயந்தழுதரற்றித்
தருமன்முன்னரினுறுநாழிகைதனிற்சார்வன். 73

நடுவன்வெங்கதமுறநவின்றிடுமொழிப்படியே
கொடியசாதகர்கொள்ளியாற்குரம்பைவெந்தரற்றச்
சுடுவர்கால்கரந்துண்டமாய்நறுக்குவரவன்றன்
குடர்பிடுங்கிடக்குரைத்தடர்ஞாளியைவிடுப்பர். 74

அகிகடித்திடவிரிச்சிகம்புச்சமிட்டறைய
வகிர்படுத்தவன்றசையினைவாளினலரிந்து
மிகவரற்றுவான்வாயினிற்றிணித்துவெங்கதமார்
புகரிபக்குரமிதித்திடப்புடைத்திழுத்தெறிவர். 75

வரையினுச்சியினேற்றியேமண்ணினூக்குவர்க
ளிரையுநீரினுளமிழ்த்துவர்வசியினேற்றிடுவ
ரரிவர்மெய்யினைச்செக்கினிட்டாட்டியேயரைப்ப
ரெரிபரந்திடுமெழுவினைத்தழுவிடவடிப்பர். 76

அதிகபாவங்களியற்றினோனவனியினந்த
மிதமுறும்பசுநிர்ப்பந்தமேவியேபினருங்
கதமுறுங்கடுஞ்சாதகர்கரத்திழுப்புண்டே
யதன்மமேதுணையாகவெந்நிரையத்தினாழ்வர். 77

நிவுரவம்முதலாகியநிரயமேழ்மூன்றும்
பவமுறுந்துணையாகவேபடிந்ததுதலைத்து
நவையுறும்மவன்செய்தகன்மங்கணண்ணிடவே
யவனியிற்பலயோனியின்வந்தவதரிக்கும். 78

புருடர்வாயினிற்சீவனீரனந்தனிற்புகுந்தே
யரிவையோனியின்மகிழ்ச்சியாலவன்புணர்ந்திடவே
பாவுசுக்கிலஞ்சோணிதத்துற்றிடப்பாய்ந்தே
யொருதினத்திலொன்றாகியேயுதரத்தினூறுமால். 79

ஐந்துநாளையிலயத்துறுகுமிழிபோலாகிச்
சந்தமாகியதசையதாய்த்தசதினத்துருண்டே
யந்தமாகியோர்திங்களிற்சிரங்கைகாலாகி
யுந்திமெய்செறியுரோமமுத்திங்களிலூறுமால். 80

அத்திதோறசையரிவையாண்குறியுறவமரும்
மூதநிந்த்துடன்மூப்பதுமாறுநாடன்னின்
சததாதுக்கள்சதுர்த்தியாந்திங்களிற்சாரும்
பத்தினைந்துபோந்திங்களினூறும்பசிதாகம். 81

அன்னைதானுகரன்னசாரம்மவள்குடரின்
மன்னுநாபியின்கொடிநெறிசிசுவயிற்றிழிந்து
துன்னுமாப்பையினுறுமாதத்தினிற்சூழுங்
கன்மசென்மமேழ்திங்களிற்கருத்துறவறியும். 82

அலரியான்வருமட்டமாதந்தனிலுதர
மலமுடன்பிரசரத்தினுண்மாழ்கியேகிருமி
பலவும்வாய்கொடுகடித்திடப்பதைத்துமூர்ச்சிக்குந்
தலையினைக்கவிழ்ந்தேவெரின்கூறுறச்சாரும். 83

சரியிலன்னைவாய்தனினருந்திடவயிற்றுரு
மருவியுப்பினிற்சாரங்கள்வளைத்திடக்கரித்துத்
தெருமரல்லுறுங்கழிந்திடுஞ்செனனத்தினினைவும்
வரமெலிந்திடுமுடலெலாநடுங்கவேமயங்கும். 84

மாதமொன்பதின்வருந்தியேயனேகசன்மத்தின்
மீதுறும்பலமனைத்தையுந்தெரிந்துடன்மெலிந்து
சூதிவாயுவந்தறைந்திடத்துளங்கியேநெளியு
மாதிநாரணாமென்னவங்கைகூப்பிமொல். 85

இருநிலந்தனிலெண்ணருஞ்சனனத்தினிழைத்த
வருபவங்கடான்மாய்ந்திடமாதவன்றன்னைப்
பிரமைசேருமுன்பேணியாராதனைசெய்து
நிரையவேலையைநீந்துவரியானெனநினைக்கும். 86

ஐயிரண்டுதிங்களுநிறைந்தன்னை தன்னுதரப்
பையிழிந்திடச்சூதியாம்பவனன்வந்தெழுந்தே
மெய்யொடானனங்கீழதாய்வீழ்ந்திடநாக்கக்
கைகுவித்தரிகருத்துறச்சனிக்கும்வேலையின்வாய். 87

அன்னையோனியினனந்தோன்றுவேலையின்வாய்
மன்னுமாயையரகியசடவாயுவந்தறையத்
தன்னுஞானமும்பறிபடச்சோதியைமறந்தே
யின்னிலந்தனிலடுத்தடுத்திறங்கியேசனிக்கும். 88

விட்டையுற்றிடுகிருமிபோல்விபுலையினெளிந்தே
யிட்டமேயறியாதுதாய்வளர்த்திடவிரங்கித்
தட்டசெந்துமெய்கடிக்கவுந்துடைக்கவுமறியான்
கட்டமோடுதர்க்கந்தமாம்படுக்கையிற்கிடப்பன். 89

தரையினன்னைகைதனினமர்ந்திருந்துறத்தவழ
மருவியேநடைபயின்றபின்மழலைச்சொற்கூறிப்
பருவமைந்துறப்படியினிநெய்துதற்கரிய
பொருளைநற்றியேபோலனுருமுருவனுய்வளர்வன். 90

கதமுமாசையுநிந்தையுங்கயவர்களறைசொ
லிதமதாகவாங்காரமோடிவையெலாம்வளரப்
பதகனுகவேயியற்றிடும்பவமெலாமகற்றிச்
சதுமுகன்றனைத்தருமெனைச்சார்வதுகருமம். 91

அயனுந்தான்றரவெழுந்திடுமெரிவைதன்மீதின்
மயலெழுந்தனன்மற்றவன்சிருட்டியினமருங்
கயவரெங்ஙனம்விடுகுவர்கடியதீவினையின்
செயலதன்மரைச்சேருதன்மடந்தையர்கலவி. 92

ஆதலாலனைபுத்திரற்கேதுவாயமர்ந்த
மாதரார்களைவிரும்பியுமாத்திரமாகப்
பூதலந்தனிற்புன்மையர்சங்கமதகற்றிச்
சோதியாமெனைத்துணையெனப்பற்றுவதறிவே. 93

தரையினிற்செயுந்தருமபாவங்களினாலே
விரகினெய்யுநாடாவுழன்மெல்லியவிழைபோ
லிரவிகாதலனகரினுமிவ்வுலகத்துந்
திரிவரெண்ணிலயோனிகடன்னிடைச்செனித்தே. 94

கிரகநீதியாங்கிரமஞ்செய்தறம்பொருள்காமம்
விரகின்முற்றுறத்தேவதைபிதர்க்களைவிரும்பி
நிகரிலாவெனைநினைக்கிலானவாந்திரவயந்தான்
புகவழிந்திடுமிந்துவினுலகத்திற்போவன். 95

சரியிலாநலசாத்திகர்சங்கமுமேவி
விரியுநான்மறைமெய்ப்பொருளுணர்ந்துளம்விளக்கிப்
பரமனுமெனையருச்சிப்பர்பருதிமண்டலத்தை
யுருவியேயயனுலகமாந்தென்பதத்துறுவர். 96

ஆதலாலெனைப்பயந்திடுமென்னையானவளே
தீதையாவையுமொருவிமெய்ஞ்ஞானமூட்டெளியச்
சோதியாமெனைத்துலங்குமுன்னிதையத்தினிறுவி
மாதவஞ்செய்துவருதியென்பதத்தெனவறைந்தான். 97

மைந்தனாகியகபிலமாயவனருள்செய்யச்
சிந்தைஞானமெய்ப்பொருடிகழ்தேவகூதைத்தேன்
கந்தமாமலர்க்கழலிடையருச்சித்துவணங்கி
விந்தைநாயகவினையறுத்தனையெனவிளம்பும். 98

பீலொவிய்பிரமகற்பப்பிரளையத்தின்
சேடசாயியாய்த்திருவொடுமெனந்தவண்டங்கள்
வாடுருமலருந்திசேர்வயிற்றிடையமைத்துச்
சூடுருக்கனகக்கலன்றுலங்கிடவமர்வாய். 99

தூயநான்முகன்முதலினோர்தமைத்தருசோதி
நாயநீயெனக்கறிஞனும்புதல்வனுமெழுந்த
மாயமென்கொலென்றறிகிலேன்மறையினைமயக்கு
நாயகாவெனத்துதித்தவன்பின்னருநவில்வாள். 100

சுனகனுக்கெரித்திடுமெருட்டர்க்குணனெனினு
மனகனின்பெயரறைந்திடினவனுலகெவைக்கும்
புனிதன்மற்றவன்கிரிகையேபொறையுறுதவமு
மனவினெய்சொரிவேள்வியுந்தருமமுமர்மால். 101

எந்தைநீயெனக்கின்புறுமதலைநீயயன்றன்
றந்தைநீமகத்தலைவனீதாமரைவயங்கும்
விந்தைநாயகவித்தகவிபுலையின்கொழுந
சுந்தராவெனத்துதித்தடிதொழுதிறைஞ்சினளால். 102

மாயனாகியகபிலமாயவனருட்படியே
தூயதாஞ்சரசுவதிமாநதியினிற்றுலங்கப்
பாயயத்தினிற்படிந்தியோகத்தினையியற்றிக்
காயநீங்கியேயரியமர்பதத்தினிற்கலந்தாள். 193

சுத்தையாகியதேவகூதைத்திருத்துயர்கூ
ரத்திமுன்வருபரமன்றன்பதத்திடையடைய
மெய்த்தவத்தினாற்கழித்திடுங்குரம்பைவீழ்தலமே
சித்தமாநதியாகிப்பெயருறச்சிறந்த. 104

கந்தமார்குழற்றேவகூதைக்குமெய்ாழறுஞ்
சுந்தரஞ்செறிசருத்தமன்றனக்குமொண்சுதனுய்த்
தந்தைதாய்கதிபெறவருட்கபிலன்றன்சரிதை
விந்தைநீயுணரென்றியாழ்முனிவிளம்பினனால். 105

கபிலப்படலம் முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் - 919.

## 10 - வது, நாரசிங்கப் படலம்.

விரதநோன்பெண்ணில்செய்துவிளங்கியவேள்விமுற்றிச்
சரியின்மாதவமிபற்றித்தானங்கள்பலசெய்தாலு
மிருமையார்சுவர்க்கத்தெய்திப்பின்னருமிம்பர்வீழ்வ
ரரிபெயருரையுந்தொண்டரழிவிலாப்பதம்பெற்றுய்ய. 1

வேறு.

ஒள்ளியரெனமெய்யுறவுபோற்றிரிந்தள் வினையினற்றலைவனைக்கெடுக்குந, தெள்ளியகுணமில்செறுநரைப்போன்று நினைந்தமைவரைவிலாதருந்து, வெள்ளயமெனநல்லறிஞரையறியா ததன்மமேவிளைத்துவெந்நரகிற், றன்னுமென்மனனே யிணையிலாமுகுந்தன் றுளிணைவழுத்தியாமுய்ய. 2

வேறு.

சரியிலண்டேவகூதைசதுமுகன்றனையனோடு
மருவவேசிறவனுகிவயங்கியகபிலன்காதை
விரிபுகழ்விதர்ப்பன்பெற்றமெல்லியல்கேட்டுப்பின்னுங்
கரியமாலியற்றுஞ்செய்கைகழறெனமுனிவன்கூறும். 3

ஆயிரமுடிகண்டோள்கால்பெயரதாமாதியன்பாந்
தூயசின்மதலைக்காகியவுணர்கோன்கூறந்ததூணிற்
சீயமாயெழுந்துதோன்றியுகிறினலறனிநீயோ
ஞேயவேபோழ்ந்தகாதையொப்பிலாய்கேளென்றோதும். 4

இரணியாயெழுந்தசோதியிரணியாக்கனைத்தான்கொல்ல
முரணுறுமசுரனுனவிரணியன்முனிவினோடு
மருணயமிலாதகாலகேயருக்கரன்கிரிட்டன்
கருணையில்காழிநாபனிவரொடுகழறலுற்றான். 5

கிரியுருவாய்வந்திங்கெம்பியைக்கிளர்ந்துசெற்ற
யரியினையானேகொல்வனமரரைவதைத்துநீங்கள்
விரிவுறவேதமெல்லாமழியவேள்வியைச்சிதைத்துத்
தரையினின்முனிவரெல்லாந்தவஞ்செயாதியற்றுமென்றான். 6

இரணியன்மொழியைக்கேட்டான்டிலகரன்கிரிட்டனேமிக்
கருணையினிசும்பன் சும்பன் சம்பரன்காலகேயர்
விரைவினிற்கரிதேர்குந்தமிருகவாகனத்திலேறிச்
சுரருலகத்திலெய்தித்தேவரைத்துரத்தினரால். 7

மாதவர்தவங்களெல்லாமறித்தவர்வைகுங்கானிற்
பாதவமெல்லாநூறிப்படியினின்மறையோர்செய்யு
மேதமற்றிலங்குவேள்வியெண்ணிலவழித்துநீதி
மோதித்துன்மரங்கள்வாழுமுயற்சிசெய்தார்களன்றே. 8

இரணியன்றமர்களாலாண்டிமையவர்முனிவரெல்லாம்
விரைவினிற்கரந்துபாறவேள்விகளழியப்பொன்னின்
வரையெனவிருந்தான்றேயமற்றவன்றேவியாவாள்
கருவயிற்றிடையிற்றோன்றக்களித்தவனிருக்குநாளின். 9

எம்பியைக்கிரியாய்க்கொன்றவிருடிகேசனைக்கொல்ல
வம்பவிழ்மலரோன்றன்னால்வரங்கள்பெற்றிடுவனென்று
சம்பரன்முதலினோரைத்தன்பதிக்காகவைத்தே
உம்பர்கள்வெருவதீயோன்றவஞ்செயவொருப்பட்டானால். 10

வாயுவேயுணவதாகமநதுடன்பதினொன்றாகிப்
பாயுமிந்திரியமெல்லாமடக்கிவெம்பழுவந்தன்னிற்
றேயுவினுப்பணுகித்திசைமுகன்றன்னையுள்கி
நேயமாயனேகங்காலநிறைந்திடத்தவஞ்செய்தானால். 11

தாலமேலனேகங்காலந்தவஞ்செயுமிரணியன்றன்
றோலுடன்றசைகளெல்லாமழிந்துசெஞ்சோரியற்று
ஞாலமேலத்தியெய்தவதனிலுயிர்சீவனேங்கக்
கோலமாரயனைத்தானுட்கொண்டுமாதவஞ்செய்தானால். 12

திதிசுதன்குரம்பையோவியத்துயிர்சீவனெய்தச்
சதுமுகன்றன்னையுன்னித்தவஞ்செயுநாளிற்றேவர்
பதியிரணியன்றான்வைகும்பழுவத்தினெய்திச்செய்த
வதன்மமார்பாவத்தாலேயிவனுடலழிந்ததென்றார். 13

துன்னியபவத்தினாலேதுலங்குமெய்யழிந்தவீழ்ந்திங்
கொன்னலன்மடிந்தானென்றங்கும்பர்கோன்களிப்புக்கொண்டு
பொன்னின்வண்ணத்தான்வைகும்புரியிடைவிரைவினெய்த
மின்னெயிற்றவுணரெல்லாமிடைந்துவந்தெதிர்த்தாரன்றே. 14

சம்பரணமுசியேதிசகுனிசாந்தாபனுக்க
னும்பர்கணடுக்குங்காலகேயர்களுடன்வந்தார்த்துக்
கம்பினமுழக்கிக்கும்பிகந்துகமிருகமெல்லாம்
பம்பவைவேல்வாள்விட்டுப்பகழிகள்பொழிந்தாரன்றே. 15

உவணன்றோள்களுக்கழகெலாமளித்திடுமுருவங்
கவின்மலிந்திடுகெனகநற்கலிங்கமார்மருங்கு
நவையகற்றியபிரமனுற்பவித்திடுநாபி
யுவமையற்றுயர்திருவினுளுவக்குமில்லுறமே. 51

கவின்கவுத்துவமணியினுக்களித்திடுகண்ட
முவமையற்றுயர்மந்தரவரையுறக்கடையத்
தவர்மகிழ்ந்திடத்துலங்கியகடையமார்தடக்கை
யவிர்கொடுத்திடுகரங்களினமருமைம்படைகள். 52

அளிசிறந்திடுங்குஞ்சிநல்லளிசெறிநயனம்
வளைவின்மானவேல்வயங்கியபுருவங்கள்வெள்ளை
யிளவிளங்கதிரிரண்டுகொண்டெனவிருகுழைக
டளவலர்ந்தசெந்தாமரைநிகர்த்திடுவதனம். 53

இவையெலாமுறவிளங்கியவுருவமாரிறையை
மருவுவோருளமுருகுவர்மகிழுவரழுவர்
சிரமிசைக்கரஞ்சேர்ப்பர்மெய்யுரோமங்கள்பொடிப்ப
விருகணானந்தநீர்விழவெங்கணுநடிப்பர். 54

பேயர்போலவேதம்மெய்ப்பேணலர்நகுவர்
தூயபத்தரைக்கண்டிடினிருகையாற்றொழுவ
ராயவன்புறுமடியர்களென்பதமதனிற்
றோயம்விஞ்சியவிரசையைக்கடந்துகுழுவரால். 55

தாமதன்பரதிரவியம்பிறர்தையல்புணர்ச்சி
தீமையெல்லவுமலிந்திடச்செய்குவனுலப்பில்
காமமுற்றவனிராசதன்சாத்திகன்கமல
மாமனாகுமெனுமந்தன்மனத்திடையமைப்பன். 56

அலரியாலுலர்காட்டத்தினதிகமாங்கிளையோ
டிலையுறும்மரமதனினுமுயரியதெண்ணில்
பிலனையுற்றிடுபிராணவாயுத்தருக்கிருமிச்
சலமுளாழ்மனக்கீடமற்றதிற்சற்றுப்பெரிய. 57

அறிவுண்டாமனக்கிருமியினதிகமாம்பரிச
முறவுணர்ந்திடுமரவட்டையதனினுமுயரு
நிறையுநற்சுவைவலசலசரமதினிவரு
நறுமலர்ப்பரிமளத்தினைநுகர்வநல்லளியே. 58

அளியைவிஞ்சிடுமோசைகண்ணாலுணரரவந்
தெளியவாயிருபக்கமுந்தசனங்கள்செறியும்
வெளிறில்கட்செவிக்குயர்ந்திடுமெதற்குவீறிடுமொற்
றினருநாலுகாலுளகரிகேசரிபலவும். 59

அவுணர்கண்முனிவினொடுமாயுதம்பலவும்விட்டுச்
சிவனெனமுனிந்துதாக்கத்தேவர்கடிரண்டுகூடிக்
கவனமாக்கரிகளெண்ணில்கசமிருகங்கள்மீதி
னிவர்சிலைவாளிதூவிநிறைந்தெங்குமெதிர்ந்தங்கார்த்தார். 16

எரிசினத்துடனுந்தீயவவுணர்களெழுவும்வாளுஞ்
சரிபில்வெம்படையும்விட்டுச்சாயகஞ்சொரிதலோடுஞ்
சுரர்கண்மெய்துளைக்கப்பீதிதொடர்ந்திடவோடலோடுஞ்
சரியினைவலாரியுந்திக்கடுங்கணைசொரிந்தானன்றே. 17

இந்திரன்முனிவால்வெய்யகணைசொரிந்தெய்தலோடு
மந்தகன்றுவட்டாக்காமனலரிவெவ்விடையையூர்வோன்
சந்திரன்முதலாயுள்ளோர்தழலெழவிழித்துத்தாக்கிக்
கந்தரம்பொழிவபோலக்கடுஞ்சரஞ்சொரிந்தேயார்த்தார். 18

சுரர்பதிதமர்களோடுஞ்சுடுகணைசொரிந்தங்கார்ப்பக்
கரிபரியிரதம்வெய்யககமிருகங்களெல்லாம்
விரைவினின்மடிந்துவீழவினையுறுமசுரர்க்கா
லூரனராயறலுமோடித்திசைதொறுமொளித்தாரன்றே. 19

உரனெலாமழிந்துதீயவசுரர்களோடலோடுஞ்
சுரரெழுந்தார்ப்பத்தெய்வதுந்துமிமுழங்கநேரி
லிரணியன்மனைவிதன்னையிந்திரன்பற்றியேகச்
சுரர்முனிதடுத்திந்நாரிதனைவிட்டேகென்றுசொன்னான். 20

சுரர்முனியுரைப்பக்கேட்டுத்தம்பிவென்னுறவோன்சொல்வா
னெரிசிறிதென்றனூறிருந்திடிற்காட்டமெய்த
விரைவினின்றுலகமெல்லாம்வீக்குவபோலிந்நாரி
தரிகருச்சிறுவனாகிற்கருமமன்றென்றுசாற்றும். 21

இவள்வயிற்றனையனாகுங்குமரனையிமைப்பிற்செற்று
நவையறவிடுத்துமிந்நாரியையென்றகூற
உவமையின்முனிவனேரிலும்பர்தம்மிறையைநோக்கிப்
பவமறுபுதல்வனைப்பயக்குமிவ்வனிதையென்றான். 22

இரணியன்மனைவியானவிவள்வயிற்றுதிக்குஞ்செம்மல்
கருணையங்கடலாய்த்தூயகருடவாகனனுஞ்சோதி
தருணமார்பதங்கள்போற்றும்பரமபாகவதனானு
மரணமக்காகியேநம்மிடராறத்தருள்வனென்றான். 23

நாரதனிவைகள்கூறநல்லிலாவிரணியன்றன்
பாரியைவிடுத்துத்தேவர்பதியும்வான்பதியிற்சேரச்
சேருமுனிவனந்தவனிதைதன்செவியினேரி
ஞாரணவீறிலாதபரனென்றகவிலலுற்றான். 24

மலரயனுடனுமண்டமெண்ணிலவருத்துக்காத்தங்
கிளையெனத்துடைத்துநின்றேயாவர்க்குங்காண்கிலானா
யலகிலாவிளையாட்டாடியன்பருக்கெளியனாகி
யிலகியாண்டவர்முன்னிற்குமிறையரியறிதியென்றான். 25

இறையரியென்றகூறுமியாழ்முனிநீதானல்குஞ்
சிறுவனிப்பரமன்றன்னைமறக்கிலானென்றுசெப்பி
நறுமலர்க்குழலியுன்றன்கணவனுஞ்சிறிதுநாளி
னுறுவனென்றுரைத்தங்கேகநாரிதன்பதியிலுற்றாள். 26

சுரர்முனிவிடுவித்தேகத்திதிசுதன்மனைவிதாய்தாம்
புரிதனில்வைகுநாளிற்புவியினினுடனீன்றன
விரணியனத்திதன்னிற்சீவனுற்றெண்கணோனைப்
பரிவுடனினைந்துநையப்பங்கயத்தவத்தோன்வந்தான். 27

அன்னவென்னுறவோனெய்தியத்தியிற்சீவன்வைகத்
தன்னையுங்குனிப்பல்லாண்டுதவஞ்செயுமவனைநோக்கி
யுன்னுடலெழில்சேர்நதோப்பிலோங்கல்போல்வளர்த்தியென்று
சொன்னநான்முகன்றன்முன்னரிரணியன்றலங்கிநின்றான். 28

தசையுறுதோலுங்கூடித்தமனியவரையினோங்கி
யசுரர்கோனெழுந்துதூயவன்றனைவணங்கியேத்த
வசையிலாவயனீகேட்டவரமெலாந்தருவனென்றே
யுசனனல்லாசானனவுபரவுணனுக்குச்சொன்னான். 29

மரைமலர்த்தவத்தோனிவ்வாறுரைத்திடத்திதிதன்மைந்தன்
சுரரிறையியக்கர்தேவர்நிருதர்களசுரர்தூய
வரியரன்றிக்கிலுள்ளோரயனெனுநீபூலோக
நரகிலுநாரியாலுஞ்சாவிலாவரநல்கென்றான். 30

பின்னருங்கூறுவானீள்பிருதிவியப்புவாயு
வன்னியாகாயந்தன்னின்மடிகிலாதிரவியோடுந்
துன்னவக்கிரகத்தாலுந்தூயவாதவர்கணெஞ்சி
லுன்னியசாபத்தாலுமுயிர்விடாதருடியென்றான். 31

சிகரிலாநேமிசூலங்குலிசம்வேனீண்டபாண
மிகல்புரிவாளினோடுமெண்வருமாயுதத்தாற்
பகலிடையிரவினுள்ளிற்புறத்தினிற்பணியின்மற்றுங்
ககமிருகத்தினாலுங்கடிகிலாவரநல்கென்றான். 32

இரணியனிவைகளெல்லாமியம்பிடமுறவெய்தித்
தருணமார்கமலத்தோனுந்தந்தனனென்றுபின்னு
முரணுறுபடைகளெல்லாமருளித்தன்னுலகின்முந்த
வருணயமிலாததீயோன்றமருடனடைந்தானன்றே. 33

சம்பரன்முதலினோர்கள்சலதிபோன்மிடைந்துசூழ
வம்பரத்திரதமீதினமர்ந்துபொன்னுலகத்தெய்தி
யும்பரோடதிதிஸைமந்தன்சசியொடுமொளித்துப்பாறக்
கம்பினைமுழக்கிவெய்யசங்கினைசொரிந்தார்த்தானன்றே. 34

இந்திரனனலோன்காலனிருதிநீரிறைவன்வாயு
முந்தியகுபேரனீசன்முறிந்திடவடர்ந்தேயெட்டுத்
தந்திகள்பீதியோடெரிந்திடக்கரத்தாற்சாடி
இந்திரைகொழுனன்வைகும்பயோததியெய்திச்சொல்வான். 35

எம்பியைக்கொன்றகள்வாவெதிர்த்தியென்றுறவேயார்த்துச்
செம்பொன்மால்வரையுநாணத்திரண்டதோர்கதைகைக்கொண்டு
வெம்பியேபயோததிக்கண்மிடைந்தெங்குங்கலக்கித்தேட
வம்பரனனந்தனேடுமவன்முன்றோன்றானன். 36

மந்தரவரையுநாணுங்கதையினன்மறுவிலாப்பாற்
சிந்துவைக்கலக்கியெங்குந்திருவினாயகனைக்காணா
னிந்தனையுறச்சானேமிநேர்கிலாதொளித்தானென்று
புந்தியின்மகிழ்ச்சியோற்றன்றோளிடைப்புடைத்தேயார்த்தான். 37

செருவினையெதிர்ந்திடாமற்சிறந்தநீதயிலைமேவு
மாவொடுமொளிந்தகள்வாவனையானண்டமுற்றும்
விரைவினிற்றேடிச்சொல்வன்குருதியால்விடைநேரம்பிக்
குரியதாங்கிரியையெல்லாமுஞ்செய்வனென்றங்கார்த்தான். 38

அரியினைக்காண்பானாகியமரர்கள்பதியெண்டிக்குஞ்
சரியில்பொற்கிரியோடெண்ணில்பிறங்கல்கடனினுந்தேடி
விரைவினிலரன்றன்வைகும்விலங்கலைநேடிவாசப்
புரைமலருறைவோன்வைகும்புரியினையடைந்தானன்றே. 39

விரைபுரைமலரோன்வைகும்பதியிடைமேவிக்காணான்
சரியில்காருண்யவைகுந்தத்திலுங்காண்கிலானா
லிரணியனண்டமுற்றுந்திரிந்தரியிலையென்று
சுரரொடுமுலகமுட்கத்தோள்புடைத்தார்த்தானன்றே. 40

அரிதனக்கஞ்சிவானண்டத்திலாதகன்றானென்று
விரைவினிற்பதியின்மேவிவிடநிகரவுணர்சூழ
விரவியாயுலகமெங்குமிலங்கிநற்சோமனாகிச்
சரியிலாவிமானமீதிற்றயங்கியேதிரிந்தானன்றே. 41

அரவதாயவனிதன்னைப்பரித்துமப்பாரையாண்டு
சுரரிறையாகித்தேவர்துதிக்கவப்பதியின்வைகிக்
கரியதாய்க்கரியையேந்துங்கடலரசாகிவானா
பெரியதாய்வாயுவாகியமனுமாகுவானால். 42

கொண்டலாய்ப்பொழியுமோங்குங்குபேரனுயிலங்குநேரி
லெண்டவரியற்றும்வேள்வியவியெலாமினிதினுண்ணு
மூண்டகன்பதியினெய்திமூவுலகுக்கும்விஞ்சு
மண்டர்நாயகன்றானென்றங்கவன் றுதித்திடவேவைகும். 43

பாரினோடுலகமெல்லாம்படைத்தளித்தழிப்போனாகி
மேருவினுச்சிதன்னின் வீற்றிருந்துயர்காலாலே
வாரிழையுழக்குமண்டமுங்கடுறநிற்கும்வண்மை
யாரவேயிருக்கிற்சேடனயர்ந்துடனடுங்குமம்மா. 44

பிரணவத்துடனேயட்டாக்கரமெனும்பெருமையோங்கு
மரிபெயருடனுநக்கனஞ்செழுத்தினையுமாற்றி
யிரணியநமவென்றேத்தியிருடிகண்மறையோர்யாரும்
பொருணலமுறும்வேதங்கள்புகன்றிடுவார்கண்மாதோ. 45

வாயுவைநுகர்ந்தேயோங்கும்வரையிடத்தழல்கள்சூழப்
பாயவேயோகஞ்செய்யும்பழுதிலாமுனிவரேனுந்
தூயவெட்டெழுத்தும்பஞ்சாக்கரத்தையுந்துறந்துஜோதி
யாயவனிவன்றானென்றுண்டிரணியநமவென்பாரால். 46

மூவுலகுக்குந்தானேமுதல்வனாயவுணர்க்கெல்லாங்
காவலனாகிவாழுங்கடியனாமிரணியன்றன்
றேவிதன்வயிற்றிலோங்குகருப்பம்பல்காலஞ்சென்றே
யோவியத்தெழுதவொண்ணாவுருவுடைமகனைத்தந்தாள். 47

அறன்மறைநீதியோங்கவமரரோடெவர்க்குமேலா
மிறையவன்றனக்குநல்லசகுனங்களெழுந்துதோன்ற
மறமுறுமசுரர்க்கெல்லாம்வாமக்கண்டுடிப்பவேதான்
பொறையுறுமவனிபோற்றப்புதல்வனுமுதையமானான். 48

குமரன்வந்துதித்தானென்றுண்டிரணியன்றனக்குக்கூற
வமரர்கடுதிப்பகீரினாடித்தன்கோயிலெய்திச்
சமர்செயுந்தடக்கைதன்னாற்றனையனையெடுத்துப்புல்லிக்
கமையிலானொப்பிலாதகலனெலாமணிந்தானன்றே. 49

சரிவளைதிமிலைபேரிமத்தளியிடக்கைதக்கை
முரசுகாகளங்கள்சின்னமுருமினுமுடுகியார்ப்பத்
தெரிவையர்வீதிதோறுஞ்சிறந்தசோபனங்கள்பாட
விரைகமழிளநீர்நெய்பால்வீசினார்புரியினெங்கும். 50

இரணியன்றனக்குத்தூயகுமரன்வந்துதித்தானென்று
தரணியிலவுணர்வீரர்கிருதருந்தாமுமாட
வருணலமிலாதார்மாளவரியன்பனடைந்தானென்று
கருணையால்விபுதரெல்லாங்களித்தெங்குநடித்தாரம்மா. 51

மூவுலகுக்குஞானமுதிர்ந்திடக்களைகணில்லாத்
தேவர்கண்மலினமெல்லாந்தீரநான்மறைகளோது
நாவலர்மகிழநாராயணவெனுநாமமோங்கப்
பாவமற்றிடத்தானேந்துபருவமாய்வளர்ந்தான்பாலன். 52

பெருமையாற்பிரகலாதனுகியபேருமாகிப்
பரமபாகவதனுவான்பருவமைந்தாகித்தோன்றக்
கருமைசேர்மநத்தனுனவிரணியன்களித்துநோக்கி
யருமறைசிறுவனேதுங்காலம்வந்தடைந்ததென்றான். 53

எண்டவர்க்கதிபனுகியயங்கியவுசனன்மைந்தர்
சண்டனேயெருமற்கன்றமையழைத்தென்றன்செம்மன்
மூண்டகன்மகிழவேதமொழியவோதுவியுமென்றே
கண்டகனுரைப்பக்கேட்டுக்களித்தவர்தலைமேற்கொண்டார். 54

வேறு.

இறைவனுகியாண்டிலங்கியவிரணியன்பயந்த
சிறுவனேயெர்சண்டனுமற்கனுஞ்சென்று
மறையையோதிமிடத்தினின்மன்னியேயமர்ந்து
நிறையும்வேதத்தைநிகழ்த்திடமுயற்சிசெய்தனரால். 55

தூயதாகியமுகுர்த்தத்திற்சுருதியையறைய
நேயமோயெரிரணியநமவெனநிகழ்த்தென்
ருயுமாமறையசுரராசான்மைந்தரறையத்
தீயகோலெனச்சிறுவன்றன்செவியிடைமடுத்த. 56

அந்தணுதிபரிரணியநமவனவறைதி
மைந்தனேயெனுஞ்சொல்விடமாமெனமடுப்பச்
சிந்தைவெந்திருகரத்தினுற்செவியைப்பொத்தினனு
லந்தியாற்குவிநளினம்போலானன்கருக. 57

அரிதிருப்பெயராகியஅட்டவக்கரத்தைப்
பிரணவம்முதலாகவன்புளமுறப்பேசிக்
கரதலங்குவித்திருகணீர்கலுழவொண்சிறுவன்
சரிரரோமங்கள்புளகிப்பத்தான்மகிழ்ந்திருந்தான். 58

சிறுவனெட்டெழுத்திணையுறச்செப்பிடலோடு
மறுவில்ண்டனுமசற்கனுமுயிரறமலைந்தீண்
டிறுதிகாலம்வந்தடுத்ததாமின்றெமக்கென்னு
வறிஞனுகியபுதல்வனேடினைதயறைந்தரால். 59

மைந்தநீயுரைமாயவனண்டம்விட்டேக
விந்திரன்சமலாசனனிமையவர்பிறரும்
வந்துநித்தலும்வருந்தியிங்கேவல்செய்திவெ
ருந்தையேயண்டங்காக்கின்றவொருவனுயுயர்ந்தான். 60

ஆதலாலிறையரியலனுந்தையாமவன்பே
ரோதுவாயெனச்சண்டனுமற்கனுமுரைப்ப
நீதிமல்கிடவளர்ந்திடுஞ்சிறுவனேமியன்றன்
பாதமேசரணென்பதுசுருதியாற்பகர்வான். 61

இரவியேகிடவெழுந்தமின்மினியையென்றுவுக்குச்
சரியெனுமொழியறிவிலர்போற்சதுர்வேத
முரைசெயாதியைவிடுத்துத்தண்டுலமிகழ்ந்துமியைப்
பருகுவாரெனவிரணியநமவெனப்பகர்வீர். 62

சுதையிகழ்ந்துவர்சுரையினைப்பருகுவார்போன்றும்
பதியையோவியேபரரையிச்சித்தவள்போன்று
மதிகவீடருளரிபெயரறிந்துயாதழிதன்
மதியினுலிரணியநமவெனுமுரைவகுப்பீர். 63

பழுவமெய்தியும்பருப்பதமெய்தியும்வெய்ய
தழல்வளைந்திடத்தவஞ்செயும்போகியரெனினு
மழிவிலாதயரரிபெயர்நினைக்கிலராயிற்
கொழுவுகோலுருக்கொடியெனச்சுவர்க்கமுற்றிழிவார். 64

மறவிலாதுயர்மாதவன்பெயரையானோத
விறுதிகாலமின்றமக்குவந்ததுவெனவிளம்பு
மறிவிலீரஃதறுமமக்கரிபரனென்னு
முறுதியெண்ணிலாதிரணியநமவெனுமுரையால். 65

அன்னைதன்வயிற்றமருநாளரிபரனெனயான்
முன்னநான்மறைப்பொருளுணர்ந்தேன்மருண்மூடுகி
மன்னுஞானமின்மதியிலீரென்னையிவ்விடத்தி
லென்னவோதுவிப்பீருமைக்கேட்பதேதென்றான். 66

பெருகுநீரெனப்பிரபைசெய்கானலைவிரும்பு
மிருகமாமெனவறிவிலீரும்முடன்மேவ
வருகனல்லன்யானெனவுரைத்தவர்களையிகழ்ந்து
முருகுமல்கியதுளவணிமுகுந்தனைத்துதித்தான். 67

அரிதிருப்பெயரரைகுவான்றன்னருகிருந்தே
மருவியோதிடுமதலைடீர்தங்களைநோக்கி
யிருளகற்றிடுங்குருவெனவிருந்திவணும்மை
நரகினுய்த்திடுவாருரைநம்பன்மினென்றான். 68

நிரையமெய்திடநேரிடுங்குருவினைநோக்கி
மருளொழிந்துயர்பத்தியின்வைகியான்சொல்லு
முரையைநம்புதிருமக்கியான்சுரர்முனிமொழியும்
சரியின்மாமறைப்பொருள்பகர்வேனெனச்சாற்றும். 69

தந்தையாகியவிரணியன் றவஞ்செயுநாளி
னிந்திரன் றனையீன்றவளைக்கொண்டேக
முந்துநாரதமுனிவன் றனையிவிவித்
தந்தமாதவன்பகர்ந்தனன்கேண்மினென் றறைவான். 70

அண்டரண்டங்களெண்ணிலதன் னிடையமர
முண்டகம்மெனுமுந்தியிலயனுமூவுலகு
மண்டியேயெழுந்திடவளித்த தூதனைவாயா
லுண்டுமிழ்ந்திடந்தளந்தவனொப்பிலாவொருவன். 71

ஏகமாகியபிரணவத்துள்ளிருப்பவனுஞ்
சாகரம்மெனத்தழைத்திடும்வேதசாத்திரத்தி
லோகையாருபநிடத்தினிலுயர்ந்தொளிர்பவனு
நாகமேல்மர்ந்தேயருணூரணமூர்த்தி. 72

உவரியாகியபிறப்பினையொழித்திடுபவனும்
பவர்கள்மாண்டிடப்பலவுருவாயெழுபவனுந்
தவர்களுக்குயர்தன்பதமளித்திடுபவனு
மூவணமீதமர்வோனுயர்வைகுண்டத்தொருவன். 73

ஆதியேயரியவனலாலிஃறயிலையெனவாண்
டிதெலாமுனிவன்னையீன்றிடுமெனைக்கிதமா
யோதினனவளுதரத்திற்கருவினுள்ளிருந்தே
யாதரத்தொடுமோர்ந்தனன்யானெனவறைவான். 74

மருணிறைந்திடுமுசனன்றன்மைந்தர்வாய்மையினு
விரணியநமவென்றிடும்பவங்கழித்திடநற்
கருணையங்கடலாகியபரனையுங்கருத்தி
னரணதாகிநீரடைந்துய்மினென்றிவையறைந்தான். 75

அறிஞனிம்மொழிபகர்ந்திடவருவினையகலுஞ்
சிறுவர்சற்குருவிவனெனவிரணியன்செம்ம
லறையுமாயவனட்டவக்கரத்தினைக்கருத்தி
னிறையவோதித்தாம்நகரிலாக்கதிபெறப்போனூர். 76

சிறுவர்சுக்கிரன்புதல்வர்சொலிகழ்ந்துசீதரனு
மிறையைநெஞ்சமைத்தேகலுமிரணியன்மதலை
நெறியிலாச்சண்டமற்கரிநீரரிபெயரை
யரையுமிவ்வினையறவெனவவரஞ்சியகன்றூர். 77

அரியெனும்பெயரசுரர்கோன் சுதனறைந்திடலும்
வெருவுநெஞ்சினர்மெய்குலைந்தோடியேவிரைவின்
வரையெனத்திகழ்மடங்கலாசனத்தின்வீற்றிருந்த
விரணியன்றனைவணங்கிநின்றிவையுரைத்தனரால். 78

மறையையோதவுன்மைந்தனுக்கிரான்சொலும்பொருளை
யறைகில்லானவனதியாம்பொருளிளைமொழிந்தே
யிறைவவெம்மருங்கிருந்துவேதத்திளையியம்புஞ்
சிறுவர்நீங்கவெவ்வுரையினைச்செப்பினனென்றார். 79

உசனன்மைந்தர்களுரைத்திடுமொழியினைக்கேட்ட
வசுரர்கோனென்றன்சிறுவனீருரைத்தசொல்லகற்றி
விசனநீருறப்புன்மையாய்விளம்பிடும்பெயரை
யிசைகொணுவினீரியம்பிடுவீரெனவிசைத்தான். 80

சீலமில்லவனுரைத்திடுமென்றவன்செப்பக்
கோலவந்தணர்குலைந்திருசெவிகளைப்பொத்தி
யாலமன்னசொல்யாமுனக்கறைந்திடிற்கடிதின்
றூலுவெந்திடுகிரையத்திற்சார்குவமென்றார். 81

உசனன்மைந்தர்களுரைக்கிலருளமெங்கிடலு
மசுரர்மன்னவனருகுநின்றார்களைநோக்கி
வசையிலாதவென்மதலையைக்கொணருதிரெனலுங்
கசநிகர்த்தவர்மறையையோதிடங்கடிதுற்றார். 82

அந்தணாளர்கள்சிறுவர்கள்கூடியாரணத்தின்
சந்தையோதிடஞ்சார்ந்தவர்பிரகலாதனைத்தா
ஞுந்தையுன்றனைக்கொணர்திரென்றுரைத்தனனெனலுந்
தந்தைபாதத்திற்சற்குணன்சேர்ந்தடிதாழ்ந்தான். 83

வந்துகைதொழுமதலையையிரணியன்மார்பிற்
சந்துடன்கலனழுந்துரத்தழுவிமாடிருத்தி
யந்தணாளர்கண்முனியநீயறைந்திடும்பெயரை
மைந்தனேயெனக்குரையெனமொழிந்தனன்மகிழ்வான். 84

தாதையிவ்வுரைபகர்ந்திடத்தனையன்கைகூப்பி
வேதமோதுதன்முன்னரின்விளம்பிடும்பெயரை
யோதினேனெனவுணர்கோனுவப்பொடுமதனை
யீதெனவெனக்கியம்புதிதெரியநீயென்றான். 85

கண்டகன்னிவைகழறிடக்கடிகினிற்சிறுவ
னண்டமுற்றவுமமர்ந்தவனுயிரம்பெயரி
னெண்டவத்தினரளியுடனியம்புமெட்டெழுத்தை
மூண்டகன்றதிசெய்திடமொழிந்தனனன்றே. 86

கரங்குவித்திருகண்ணினீர்படிமிசையுறநற்
சிரங்கைகால்விழிபெயர்களாயிரமுடைச்செல்வன்
குரங்கலோசனியாகியதிருமகள்கொழுந
னுரங்கொணமீதுணருதிநீயெனவுரைத்தான். 87

வேதமீனமிர்தாவதும்வேள்வியின்பொருளும்
போதன்முக்கணன்புகல்வதும்யோகிகள்பொருந்த
வோதுநாமமுமும்பரினிம்பரினுயிர்செய்
யேதம்வேரறவெழுவதுமிணையிலெட்டெழுத்தே. 88

சனனமாகியசலதியைநீந்திடநாவா
யெனவெழுந்தகலிம்பரினும்பரினெவரும்
வினைகடிந்துநற்பதத்தினைமேவவேயருளு
மனகனுமமிவ்வெட்டெழுத்தேயெனவறைந்தான். 89

உட்டெளிந்துவஞ்சகமறவொப்பிலாமதலை
யெட்டெழுத்தினையறைந்திடவிரணியன்முனிந்தே
அட்டதிக்குறுங்கரியுடனமரர்கள்வெருவத்
தட்டமீவல்லதாமமேற்றழலுறநகைத்தான். 90

விழியுகாந்தத்தினழலினையுலகெலாம்விரிப்ப
வழலுநெஞ்சினனழகியபுதல்வனைநோக்கிப்
பழபவொன்னலன்பெயரினைப்படியினின்வானி
னிழிவையெய்திடவழிபவர்யாருனக்குரைத்தார். 91

அரனயன்முதலிருடிகளமரரிப்பெயரை
யுமரசெயாரவரஞ்சுவரொளித்துனக்கின்று
வெருவலாதிந்தமொழியினைவிளம்பினராரென்
றெரியுநெஞ்சினன்பின்னருமிவைபகர்ந்தனனால். 92

வரையினெண்வடகிரிசிகராமெனவயக்கித்
திரியுமெம்பியைச்சினத்துடனிமைப்பின்முன்னுயரு
மிருணியாய்வதைசெய்தவன்பெயரியம்பிடவோ
பரிவினுலுனைப்பயந்தனன்யானெனப்பகர்வான். 93

இரைபயோததிகலக்கிநானிமைபவருலகின்
வரையின்வாரியின்மலரயனுலகினுந்தேட
வெருவிநேர்பொருமிறலிலாதண்டம்விட்டேகு
முரனிலான்பெயருறுதியென்றுருனக்குரைத்தார். 94

மாதவந்தனுலகெலாம்வகுத்தளித்தழிக்கு
மாதியாகியேமகத்தவியடங்கலுநுகர்வேன்
சோதியென்றநீசொல்லரிபெயரினையொழிந்தென்
பாதமர்ச்சனைசெய்குவார்பங்கயன்முதலோர். 95

புண்டரீகனும்புராரியும்புரந்தரன்றானு
மெண்டவத்தரோடருச்சித்துச்செவிப்பரென்பெயரை
விண்டலத்துளோர்புவியுளோர்விளம்புவதரிதோ
வண்டகோளகைக்கப்புறத்தனைவருமறைவார். 96

வேள்வியின்னவிவிலக்கியங்கவன்றனெட்டெழுத்து
மேழிரண்டெனும்பொழிலினினிலையெனவடர்ந்தே
னேழைநீசொலுமிறையவனெவ்வலிகொண்டு
வாழுவானெனமற்றவன்பெயரினையறைந்தாய். 97

உலகநாயகனுகியேயொளிருமென்பெயரை
மலரயன்முதன்முனிவர்களிகழ்ந்திடின்மடிவர்
நலனிலாதவிவ்வுரையினைநவின்றநீபிழைத்தாய்
சலமிலாதியான்பொறுத்திடத்தனையனுகையினுல். 98

மழலைநீங்கலாமதலைநீயாதலினிந்தப்
பிழைபொறுத்தனனினியொன்றும்பேசிலைமறையோர்
விழைவினுலறைமறையினைவிளம்புபோதுதியென்
றிழையினுலொளிரிரணியனியம்பினனன்றே. 99

தந்தையிம்மொழிபுகன்றிடச்சரியிலாப்புதல்வ
னந்தகாந்தகனஞ்சுமவ்வவுணனையிறைஞ்சிக்
கந்தநாண்மலர்க்கடவுளுங்காண்கிலாதுயரும்
விந்தைநாயகன்செயலினைக்கேளெனவிளம்பும். 100

கரந்தைசூடியுங்காலனும்வெருவுமுன்றனக்கு
வரந்தருந்தவன்ருனுமாய்வானுயரண்டம்
பரந்துமேவியவுயிர்தொறுநிறைந்தொளிர்பரமன்
கரந்தனன்னுனக்கென்றனையவன்செயல்காணுய். 101

வேதநான்கினும்விளங்கியசாங்கியந்தனினும்
போதநீறணிபுராரிமாதவர்கருத்தினினு
மூதையேயுணவாகுவோருணர்வினுமெட்டா
வாதியோவுனக்கஞ்சியேகரந்தனனையா. 102

வாயினூல்கொடேயுலூதையோர்வட்டமாய்வரைந்தாண்
டாயதெல்லவுமருந்திடுந்தன்மைபோலுயரு
மாயனெண்ணிலவண்டமோரிமைப்பினின்வகுத்துக்
காயுமாலதுதன்னுளேகரந்திடவம்மா. 103

அண்டநீங்கிமால்கரந்தனனென்றிவணறைந்தாய்
முண்டகக்கணனிமைப்பினின்முடிவிலாதண்ட
முண்டெனக்கடிதியற்றித்தன்னுரோமத்தினுனியின்
மண்டவேயவைதன்வயின்வாழ்பவன்காண்டி. 104

அரிநுகர்ந்திடாதுயர்மகத்தவியெலாமடங்கப்
பருகினேனெனப்பகர்ந்தனையுன்னுடலுயிரின்
மருவிநிற்பவன்மாதவனென்றறிகில்லாய்
விரைவித்தாமலேவிளையுமென்றுணருணர்விலியே. 105

வேதமோதுவார்போலவேவிரோதமாம்பொருளை
யோதிநாரணனுலகெலாநிறைந்திடுமொளியைப்
பேதையாயினோரறிகிலார்மருளுறப்பிதற்றி
யேதமாநரகெய்துவரெந்தைநீயுணர்தி. 106

மறையுனுச்சியிற்சித்தெனுந்தத்துவமருளா
தறியும்யோகிகளரியினையறிந்துவீடுறுவர்
பிறிதொன்றாகவாண்டறிவறப்பொய்மையைப்பிதற்றி
யுறவர்வெந்நிரயந்தனுளெந்தைநீயுணர்தி. 107

மாயன்மாயையின்மலரயன்முதலினோர்மயங்கி
நாயகன்னெனத்தம்மைத்தான்மெய்மையாய்நாட்டி
யோய்வுகாலம்வந்துழபொழுதவன்றனையுள்கி
ஆயிரம்பெயரறைந்துய்வரறிதிநீயெந்தாய். 108

சாங்கியத்தினும்யோகமார்பொருளினுந்தானே
யோங்குமாயனையுணர்குவரவரறிந்துய்வர்
பாங்கிலாப்பொருள்பற்றியக்குய்குவார்போன்று
தாங்கிலாதெழுசனனமாஞ்சலதியிற்றாழ்வார். 109

முக்குணங்களுமூவுலகமுமெனமுளைத்துச்
சற்குணங்களாய்த்தழைப்பவர்தமக்குவீடருளுந்
துற்குணங்களாமவர்களைப்பகைஞராய்த்தணிக்குஞ்
சிற்குணத்தரிசெயலினையார்கொலோதெரிப்பார். 110

வேறு.

அரியினைநினைந்திடாதருளுந்தானங்கள்
விரைவினிற்செய்பலவேள்விமாதவந்
தரையினிற்பெருகிடுஞ்சலமில்வித்தென
விரைவினினிட்பலமாகிவீடுமால். 111

மனதினிலரியினைவைத்துநன்குடன்
றினையளவாகினுஞ்செய்ததானங்க
ளனலுறுவேள்விகளனந்தமாகியே
தினம்வளர்செய்கையைவேதஞ்செப்புமால். 112

இந்திரியங்களினியங்கிவேதமார்
மந்திரங்களின்மிகவயங்கிக்காட்டியே
நந்தலுமநந்தலுநல்குந்தியர்க்கும்
வந்திடரகற்றுவானவனென்மாதவன். 113

பாலுறுதுப்பெனப்பரந்தெவ்வண்டமுஞ்
சீலமார்ஞானங்கள்தெரிந்துளோர்க்கெலாங்
கோலமாரெளியனாய்த்தோன்றிக்கோதறு
மாலமேனிகர்த்தவர்க்கரியனாகுவான். 114

அராவணைத்துயின்றிடுமமலனாகிவெங்
கராவினைவதைத்துயர்கரியைக்காத்தருள்
பராபரவஸ்துவின்பாதங்கண்டுய்ய
நிராசையுற்றவர்க்கலானினைக்கற்பாலதோ. 115

சகமிசைச்சிவதாபரசங்கத்தினுக்
ககமதாய்ப்புறமதாயவையினல்லனா
யுகமெணில்காலங்களிமைப்பினையக்கஞ்
சுகியுறுவாரியிற்றுயில்கொளும்பரன். 116

கரந்தவன்போலவேகாணும்வான்புவி
பரந்துளன்போலவேபற்றிற்றோன்றிலா
வரந்தருமுதல்வன்றன்மாயவாரியிற்
பொருந்தினரலதியார்பொழிலைநீந்தினர். 117

மாதவவரத்தினல்வலனுற்றேயண்ட
நாதனாயினனெனநவின்றுளாயுளர்
பாதவம்வடவையாற்பரந்தெரிந்தபோ
லாதியையெள்கினோரழிவர்காண்டியால். 118

மயர்வறவுயர்ந்திடுமோதவன்றனை
யியல்பலவென்குநீயென்றுமாய்கிலா
உயிர்நலச்செல்வம்விட்டுலர்தியென்றியான்
செயலுறுமரிபெயர்செப்பினேனென்றான். 119

வேறு.

சிறுவனெதிர்நின்றிவைகள்செப்பிடமுனிந்தே
யிறுதியுகமெய்தவருமீசனெனவாயா
லுறுபுகைபெழக்கணுமிலங்கியுலகெல்லா
மறுகவிடியஞ்சிடநெருப்பெழநகைத்தான். 120

திக்கயமிரிந்தொளிகொள்தேவர்திரளஞ்ச
நக்கனுடனேயயனடுங்கவுலகெல்லா
முட்கிடவநந்தன்மெய்யுலைந்துடலிரத்தங்
கக்கவசுரன்பிரகலாதனைமுனிந்தே. 121

என்வயினுதித்தவிவனெம்பியைவதைத்த
வொன்னலனையேத்தினனிவன்றனையுரத்தாற்
கொன்மினெனவெய்யவர்கள்கூடிமெய்கயிற்றாற்
பின்னினர்கள்வெல்கதைபிறங்கயிலெறிந்தார். 122

எய்தனர்கள்வாளிமழையெங்கணுநெருக்கிக்
கொய்திடுமினென்றவர்கள்கூர்மழுவெடுத்தார்
வைதனர்களெண்ணில்படைமாவடவைபோலப்
பெய்தனர்கள்பூமனொடுபிஞ்ஞகனுமஞ்ச. 123

எறிந்தபடையெய்தகணையெற்றகதையாவு
முறிந்தனவலாதுகுமரன்மெயினின்மொய்த்தே
யறந்தருமனத்தரியைநெஞ்சிடையமைக்கச்
சொறிந்ததிறனுஞ்செய்கிலதீயர்திரமென்னி. 124

மன்னனருகெய்தியெதிரின்மறவரெல்லா
மின்னிலகுமாரன்மெயினெய்தலருமொத்தே
துன்னுபடையாவையுமுறிந்தசெய்திசொல்ல
வன்னியிடையுய்த்துவதைசெய்மினென்றுரைத்தான். 125

நிகரில்கனகன்னிவைநிகழ்த்திடலும்வீரர்
ககனமுகடுற்றிடவெழுங்கனல்வளர்த்தே
யிகழ்விலகுமாரனையெடுத்ததின்விடுப்ப
மிகவுமெய்குலைந்தலறினர்விபுதரெல்லாம். 126

தீயர்விடுதீயினிலமிழ்ந்துசிறுவன்றன்
மாயவனைநெஞ்சினிடைவைக்கக்குளிர்சீத
மாயுடலிலங்கவதுகண்டுமறவோர்க
ளேயெனுமுன்மன்னனிடையெய்தியிவைசொன்னார். 127

அன்னவருரைக்கவனலாகுமசுரேசன்
வன்னிதனைவன்சிறையின்வையுமெனவோதி
மின்னெயிலெயிற்றினவன்மேனிகவ்விமாய்க்கப்
பன்னகம்விடுத்திடுமினென்றுரைபகர்ந்தான். 128

வேறு.

மனந்தழலுறவந்திரணியனுரைப்பமறவர்கடுன்னியேகூவ
வனந்தன்வாசுகிகார்க்கோடகன்குளிகனடர்மகாபதுமன்வெற்பதுமன்
கனந்தருசங்கபாலன்றெக்கன்றனிவரெண்மர்கடிதினினெய்திச்
சனந்தனைநிகர்க்குமதலையைக்கடித்தார்தம்விடவெயிற்றினர்கவ்வி. 129

ககபதிநடுக்கங்கன்மிசைப்பிறைகளுழைந்தெனக்கடித்திடவிடங்க
ளுகவதுசுவையாயெயிறுகளெல்லாமொடிந்துக்குவிழுந்திடவரியை
நிகரிலாக்குமரனினைந்தெழிலிலகநின்றிடக்கண்டிடுமசுரர்
புகல்வதற்கரியவலனுடைமனனுக்கிவையெலாம்புகன்றனரன்றே. 130

அரவினங்கூடிக்கடித்திடவிடங்களமிர்தமாயெயிறுகளொடிந்து [தென்
தரையினில்விழுந்ததகைமையைக்கேட்டுத்தயையிலா விரணியன்முனிந்
கரியினந்தனைநீர்விடுத்திடுங்கொம்பாலவனுயிர்களைந்திடுமெனலும்
வரையெனவுருமறவர்கள்மிடைந்துமாதிரத்தோல்களையழைத்தார்.

வஞ்சனையவுணரழைத்திடநடுங்கிமாதிரந்தாங்கிடும்கரிக
ளஞ்சனங்குமுதம்வாமனமயிராபதநிகராம்புண்டரீகம்
விஞ்சியகிரிநேர்புட்பதந்தம்மெய்விளங்கியசுப்பிரதீப
மஞ்சவேயடருஞ்சார்வபூமமிவையெட்டும்வரையெனவந்த. 132

மும்மதநதியாய்மூடுகிடவரைபோன் முந்தியதந்திகள்முனரின்
செம்மலைக்கயிற்றார்பிடித்திடுந்தீயர்திரண்டுபோரிடையினின்வைப்ப
மெய்ம்மைசால்குமரன்கரிகளைநோக்கிவிடங்கரால்மெலியுறுங்குலத்தின்
கைமலையழைப்பக்கடிதின்வந்துதவுங்கடவுளென்மனத்தினனென்றான்.

நிகரிலாக்குமரனிவைநிகழ்த்திடலுநெடுவரைபோலவங்கெதிர்த்த
புகரிபவினங்கள்வெருவிமாதவஞ்செய்புதல்வனைவணங்கியேகிடலும்
நகமெனவிளங்குமவுணர்களிவையையிரணியன்றன்னொடுநவில [ன்.
மிகமுனிந்தெனக்குவென்னிடுமெரியை விரும்பிபங்கனைக்கொலுமென்றா

சிந்தையிற்கனன்றங்கிரணியனுரைப்பத்திலலுடையசுரர்கள்சென்றே
யந்தகனெனவெண்கரிகளைவதைக்கவடர்தலுமவைமிகவஞ்சி
மைந்தனையணுகித்தடித்தனநிகர்த்துவயங்கிடுமருப்பினாற்குத்தி
முந்தியவலரிவெயிலினாலுலர்ந்தகிடையெனக்கோடெலாமுறிந்த. 135

திசையுறுகரிகளுரனொடுகுத்தித்திரண்டிடுகோடுகள்முறிந்த
வசுரனுக்கவர்களுரைப்பநெஞ்சழன்றேயளப்பிலாதுயர்ந்தகோபுரத்தின்
மிசையினிலவனையுயர்த்திநீர்கீழின்விழுத்திடுமடியவென்றறையச்
சுசியுறுநயனர்மதலையையெடுத்துத்துய்யமாசிகரத்தினுற்றார். 136

யோசனையெழுநூறுயர்ந்திடுசிகரத்துச்சியின்கவணிடைவிளம்பி
யாசகல்புதல்வன்றனையெறிந்திடலுமவனிமாதனந்தமாங்கரங்கள்
மாசறுகடையம்வயங்கிடவேந்திவைத்திடவிழுமியமதலை [ன்.
யீசனெட்டெழுத்தையியம்பியாண்டன்போ டிதையமுமுருகிடவிருந்தா

வேறு.

தரைமினெண்ணில்கரங்கடயங்கத்தான்
பரவிமைந்தனையேந்திடப்பார்த்தவர்
விரைவினெய்திவிளம்பவிரணியன்
சுரர்நடுங்கிடவேயிவைசொல்லினான். 138

வரையின்மைந்தனைவார்கொடுவீக்கிநீ
ரிரையும்வாரியினுய்த்திடுவீரென
வரனுஞ்சிந்தைமயங்கவவுணர்கோ
னுரைசெயக்கடிதுற்றனர்தீயவர். 139

சுந்தரச்செம்மறோள்களைப்பாசத்தால்
மந்தரம்நிகரும்வரையிற்பிணித்
திந்திராதியரேங்கிநடுங்கவாழ்
சிந்துவின்னிடையுய்த்தனர்தீயவர். 140

வரையின்மீதுறமைந்தனவ்வாரிநீர்
சுரருலோகத்திற்றுன்னவிழுந்தவன்
பரனைநெஞ்சிற்பதிக்கமிதந்திடுஞ்
சரியிலோங்கலின்மீதிற்றயங்கினன். 141

வேலையோழுடன்மேவியவெள்ளத்தி
ஞலினீளிலைமேலிலமர்ந்திடும்
பாலனென்னப்பரந்தபரவையிற்
சீலமுற்றசிறுவன்வயங்கினன். 142

வாரிமீதின்வரையின்வயங்கிய
சீருறுஞ்செம்மல்சிந்தையினேழ்பொழிற்
பாரணுமுகுந்தாபரமாவரி
நாரணுவெனவுன்னிநவிலுவான். 143

கந்தர்தாதையுயர்கமலாசன
னிந்திராதிகளெண்ணிலிருடிகள்
சிந்தைவேதத்திற்செய்யவுந்தோன்றலா
வெந்தைநின்செயல்யானெங்ஙனெண்ணுவேன். 144

விடமுநீசுதைநீயெங்கும்விஞ்சிய
சுடருநீயிருணீபகைநீதுணை
வடிவம்நீவெளிநீமறைநீவரு
மிடருநீயதொழித்திடுமீசனீ. 145

தந்தைதாயெனத்தந்தவர்நீயவர்
முந்துவெம்பகையாகமுடிக்கிய
வெந்தைநீமறையெண்ணவுமெட்டலாச்
சுந்தராவுனையானெங்ஙன்சொல்லுவேன். 146

வெறிகொண்மாமலர்வேதன்முதலினோ
றிறைவனுமெனவெண்ணமயக்கியே
யுறுகலாதங்கொளித்துருவாகுவாய்
சிறியநானுன்செயலெங்ஙன்செப்புவேன். 147

படியும்வானும்பரந்துநிறைந்தநின்
வடிவையேதறிந்தேத்துவன்மாயநின்
னடியர்தங்களடியரடியினிற்
பொடியதாகுந்தவமிலிப்புன்மையேன். 148

அழல்கள்சூழவளப்பிலுகந்தனி
யுழலுமாதவருன்னவுமெட்டலா
வெழிலிவண்ணவிடர்கெடவாவென்றே
மழலைநீங்கிலாவாய்கொடங்கேத்தினன். 149

வேலையின்மிதக்கும்வரைமீதினின்
சீலமார்சிறுவன்வயங்கக்கண்டே
யாலமன்னவரோடியவுணர்கோன்
பாலடைந்திச்செயலைப்பகர்ந்தனர். 150

கேட்டவேந்தன்கிளர்ந்திடுவெந்தழல்
நாட்டமெய்தநகைத்தநஞ்சேனையி
னீட்டத்தாலிமைப்பின்னவனின்னுயிர்
வீட்டுவிப்பனென்முன்விடுமென்றனன். 151

மறலியஞ்சவசுரர்மன் கூறலு
முறைமைசெய்கிலாமூர்க்கர்களெய்திநற்
சிறுவனைப்பற்றிச்சென்றுதயித்திய
ரிறையவன்முன்னரெய்தியிருத்தினர். 152

சிறுவனைக்கண்டுசீறியிரணியன்
முறைமையில்சம்பரன்முதலோர்களை
வெமுழ்வலிக்கரத்தாற்படையேவிநோய்
நிறையமாயத்திற்கொல்லுமினீரென்றான். 153

தீயனவ்வுரைசெம்பத்தயித்தியர்
காயும்வெங்கதைநீள்கணையெண்ணில
வேயுறும்வரைவீசிநிறைந்திடு
மாயையெங்கும்வகுத்தடர்த்தாரரோ. 154

ஆலமென்னவசுரர்செய்மாயையாற்
காலநீணிருதித்திரன்காளிகள்
சூலியஞ்சிடத்தோன்றியுகாந்தத்தீ
காலவும்பர்கலங்கியிருந்தனர். 155

அரவினங்கள்கறுத்தவலகைகள்
வரைகள்வாயுவடவைக்கடுவிடஞ்
சுரர்களஞ்சவிவற்றொடுந்தோன்றவான்
பரவினர்பங்கயத்தன்றிகைக்கவே. 156

மந்தரம்மெனமாக்கதையெண்ணில
வுந்திரத்தில்வியாத்திரமோட்டியே
மூந்துமாயங்களெண்ணிலமொய்த்திட
வந்தகனஞ்சவார்த்தடர்த்தாரரோ. 157

சினந்தழீஇயசுரேசர்செய்மாயையி
னினந்தழீஇயும்பரேங்கவடர்க்கலு
மனந்தசாயியையன்புடன்செம்மறன்
மனந்தழீஇக்கொளவெல்லவுமாய்ந்ததே. 158

கடியர்விட்டகடும்படைமாயையும்
நொடியின்முன்னரினிற்றுநூறுங்கவக்
கொடியனனவிரணியன்கூறொணு
விடமருந்துவித்தான்சுதன்வீடவே. 159

கடியனிட்டகவிடம்யாவையுஞ்
சுடர்கொள்மாதவனைத்துதிசெய்துய
ரடியனுக்கமுதாகிவயங்கவக்
கொடியனெஞ்சுகொதித்தெழுந்தானரோ. 160

கோபம்விஞ்சசுரன்மகனைக்கொல்ல
வாபிசாரமிழைக்கவடர்த்திடும்
பாபமென்னக்கிருத்திபகட்டிறை
மாபயங்கொளவந்துருத்தாளரோ. 161

இறுதிகாலத்தெழுந்திடுமீசனும்
நிறைபயங்கொளநேத்திரத்தீயினால்
மறுகவாரிவடவனல்வெந்துகக்
கறையுயிர்க்குலங்கக்கவெழுந்தனள். 162

அழலுநெஞ்சினளானனமூன்றினள்
சுழலுநாட்டமுமூன்றெட்டுத்தோளினாள்
மழலநீங்கிலாமைந்தனைச்செற்றிட
வெழிலிவானினெறிந்திடவெய்தினாள். 163

கடியகாலையுயிர்ப்புத்தரக்கண்டு
வடைவைதேயவளர்ந்திடமாரியைக்
கடையுமத்தின்கயிற்றையணிந்தண்டம்
வெடிபடக்கொக்கரித்தெழுந்தாள்விண்ணின். 164

சூலம்வேன்மழுத்தோமரம்பாசமுட்
கோலெழுங்கணையங்குறடட்டிவாள்
காலனஞ்சுங்கரங்கடொறும்விரித்
தாலமென்னவதிர்த்தடந்தாளரோ. 165

கதிர்சுழன்றிடவெண்டிசைக்கட்செவி
யுதிரங்காலவெண்டோல்களுமோடவே
பிதிரமாலையப்பிறங்கலுவின
முதிரவார்த்தனள்வாய்புகையுற்றிட. 166

அடியிற்பார்பிளந்தேயயமல்கவே
முடியினண்டமுகடுநெரிந்திட
நெடியகைகளினால்வரைநீறுற
விடிகள்சொல்லினுடைந்திடவெய்தினான். 167

அண்டகோளங்கிழிந்திடவார்த்தயில்
கொண்டுவாசவன்கூற்றஞ்சவெய்துவாள்
வண்டுழாயனைமைந்தன்றுதித்திட
வெண்டவத்தர்வியப்பவெரிந்தனள். 168

விருத்திராசுரன்மெய்யினைமானவே
யுருத்தருத்திரனஞ்சவங்குற்றிடுங்
கிருத்திநீறுறக்கண்டசுரன்கெடுங்
கருத்தினன்விடம்போற்கனன்றனரோ. 169

வீயும்வண்ணம்விடுத்திடும்யாவையும்
மாயஞ்செய்தவயங்கியமைந்தனைத்
தீயுறப்பிடித்தேய்த்தென்கரத்தினி
லேயெனுமுனிற்கொல்வனென்றெழுதினன். 170

சுரர்நடுங்கத்துலங்கியவம்பலிற்
கரியிரிந்திடநற்கமலத்தய
னரனுமஞ்சவடர்ந்திங்கிரணியன்
வரநகைத்துமதலையறைகுவான். 171

இன்னவில்லெனைக்கொல்லவென்றெந்தையே
யுன்னினையெனிலுன்னியிர்தன்னினு
மன்னியண்டம்வருவித்தமாலடி
யென்னுள்வைகுமுனக்கெளிதாயதோ. 172

மைந்தன்கூறிடமாயனென்னுண்மையாற்
சிந்தியோடினன்றேவர்மன்னெண்கணோ
னந்தகாந்தகனென்னடியர்ச்சிப்ப
ரெந்தமாமுதனீசொல்லிறையென்றான். 173

எரிசினத்துடனீதனைதந்தையை
மருளகற்றியமைந்தன்வணங்கியே
கருதவும்மரிதாகுங்கடவுடன்
பெருமைகேளெனப்பேசலுற்றனரோ. 174

பிரணவந்தனில்வைகும்பெருமையோ
னரணிதன்னிலமர்ந்திடுயங்கிபோல்
முரணுறுமெணிலண்டங்கள்மொய்த்துலான்
மரணமென்னும்வரம்புகடந்தவன். 175

திலமுமுள்ளிற்சிறந்ததயிலமு
மலரும்வாசமும்பாலுள்வைகும்நெய்யு
மிலகுமாண்பெனவெவ்வுலகங்களு
முலவும்பல்லுயிர்தோன்றுமுறைகுவான். 176

எரியுக்தும்மும்பொன்னுமிழைகளுந்
திரையும்வேலையுஞ்சேர்ந்ததுபோலத்தன்
னுருவினுருமுரோமத்தெணிலண்ட
மருவச்செய்தளித்தேதன்னுள்வாங்குவான். 177

மூன்றுகாலமுமூன்றுசுடர்களு
மூன்றுலோகமுமூன்றுகரணமு
மூன்றுசெய்கையுமூன்றுகுணங்களு
மூன்றுதோற்றமுமாகியமூர்த்தியோன். 178

அரிதுமாயெளிதாயிமோதியைச்
சுருதிசொல்லிற்றலங்குமென்னுள்ளம்போற்
கருதுவாயெனிலெங்கணுங்காண்குவாய்
திரணங்காட்டமுதற்செறிதேவனே. 179

நெறியையோவினர்முன்னரிநேர்ந்திடான்
மறனேநீங்கினர்க்கேயெளிதாய்வரு
மறிதிநீயென்றறையவவுணர்கோன்
கறைகொணெஞ்சன்கைகொட்டிநகைத்தனன். 180

அண்டமெண்ணிலவன்றனுரோமத்தின்
மண்டுமென்றுமவற்ருெடும்வைகுவ
துண்டெனப்பகர்வாய்கிலேயோதென
முண்டகத்தயன்போற்றமொழிகுவான். 181

நொய்யதாகுமணுவினைநூறெனக்
கொய்துகூறிட்டகோணங்கடோறுளன்
வையம்வானம்வடவரைமீதுளன்
மெய்யுட்டோன்றிவிளங்கியமாமுதல். 182

கிகரிலாதவென்னெஞ்சிலுளனிவண்
புகலுஞ்சொல்லினுளன்மணிபூணுள
னிகழ்வினுன்னிதயப்பங்கயமெனு
முகையின்விஞ்சும்பொகுட்டுளமூர்த்தியோன். 183

ஆதலாலரியெங்கணுமாயுள
னீதிமோதியநீயிவண்காணென
வோதுமைந்தனைநோக்கியுறநகைத்
தேதமாரிதையத்தினியம்புவான். 184

அழிவிலாதெண்ணிலண்டத்துயிர்தொறு
மொழிவிலாமலுறைபவன்றன்னையிவ்
வெழுவிற்காட்டிலையேலுன்னிரத்தந்தோல்
முழுதுந்தேக்கிமுடிப்பன்குறையென்றுன். 185

இயல்பறுந்தந்தையிவ்வுரைசாற்றலு
மயர்விநெஞ்சனவன்றனைநோக்கியென்
னுயிருணற்கொள்வதற்கரிதென்றமால்
செயலினனவன்முன்னிவைசெப்புவான். 186

எந்தைநீசொல்லிடந்தொறுமெம்பிரான்
வந்திலனெனிலென்னுயிர்மாய்ப்பன்யா
னுய்ந்துளேனெனினுற்றவனைத்தொழு
மந்தமாலடியானலனென்றனன். 187

இரணியன்சொல்லிடந்தொறுந்தோன்றநற்
கருணையங்கடலாய்க்கடல்வைகுவோன்
றரணிவானிற்றயங்குமுயிர்தொறுந்
திரணங்காட்டந்தொறுஞ்சினையாயினன். 188

வேறு.

முகனிவைசொலவிழியழலுறவாய்நகைவந்திடவோர்கையினொ
னுகவிறுதியினிடிபோலொருதறிமிசையுரனொடுமோதுதலுங்
ககனமோடண்டமும்வெடிபடநீள்கனகனுளநடுங்கிடவே
மொகுமொகுமொகுவெனமானரசிங்கமுழங்கநகைத்ததரோ. 189

நீடியதறியினுளேநரகேசரிநின்றுமுழங்கிடலுஞ்
சேடுறுகுமரனுயர்ந்துவியந்துசிறந்தகல்படியின்மிசை
யாடியெழுந்துவிழுந்துமகிழ்ந்துயராரணநூல்களெலாம்
யாடிவயங்கியவெழுவினைவலமுறவந்துபணிந்தனனால். 190

அரனொடுதிசைமுகன்மாதவர்தேடியுமவர்முனுருதவரி
வரவருமகிழ்வொடுமதலைபணிந்திடவானவர்தாம்வெருவ
விரணியன்முனிவொடுமெழுவினுள்மிகநகைசெய்திடுமெம்பரனை
வெருவியகன்றிடுநீயிவண்மேவினைவெளியுறவருகெனவே. 191

பரவையினுவணனொடொருநொடியிடுமுனர்பாறியகன்றிடுநீ
வெருவலையமர்பொரவருகெனவேயசுரேசன்விளம்பிடலும்
வரையிவருந்தறிபிளவுறவானுயரண்டமும்விண்டிடநீள்
சிரமுறவடிபடிகுழியவளர்ந்திடுசீயமெழுந்ததுவே. 192

விண்டிடுதூணினெழுந்தெழிலார்நரமீளிவளர்ந்தசெய
லெண்டவராலுமுணர்ந்தறிதற்கரிதென்றிடில்யாரறிவா
ரண்டமுகட்டின்வயங்கியமர்ந்திடுமாதியிவ்வரியினொளிர்
முண்டகவுந்தியின்வந்ததுபோன்றனன்முடிவறைதற்கெளிதோ. 193

சீருறுதாரகையின்னினமாநரசிங்கமெய்யணியிழைக
ளுருவின்வீழ்ந்திடவேயதினுற்றொளிர்கித்திலமொத்தனவா
லேர்கொளுமுந்தியினலர்நளினத்திடையெய்துபொகுட்டெனுமா
மேருவயங்கியதென்னில்வளர்ந்திடுபெருமைவிளம்பெளிதோ. 194

ஆயிரகோடிவெள்ளம்மெனவேபகரவுணரினிருமடியாந்
தூயமுகங்கடொறும்விழிமூன்றுதுலங்கியுகாந்தமுறும்
தீயினையுமிழவுயிர்ப்பிறுதியினரைதேயுசகாவுரனு
மோய்வுறவேயெழவான்மணின்யாவையும்வாய்கடொறுமுளதால். 195

எண்ணிலகோடிகரங்களிலங்கிடவெயிறுகள்வரையெனவாய்
நண்ணிடவெரியொடுபுகையுறவிடிகளுமஞ்சநகைத்துலகின்
புண்ணியமாநரகேசரிபொறையிலவசுரர்கணிருதரலா
விண்ணவரொடுமெறன்மேவியவனைவருமுயவருள்செய்தனனால். 196

கரிபரியிரதமோடெண்ணிலவசுரர்கள்கடலெனநிரைபவரை
அரியடிவிரல்களினுகிரிலுறந்திடவண்டமுகட்டளவாய்
விரைவினினுயர்வரைபோலவெழுந்துவிழுந்துமடிந்திடநீ
டுரையினினிறைகறையோடினவலையுறுசாகரமாமெனவே. 197

அகலியவடிவிரனுனிகளினிடறிடவயமுறமிளிரிரதம்
புகரிபவினமொடுபாடலமெண்ணிலபொறையிலவசுரர்திர
ணிகரிலவரையெனுநிருதர்கள்கடுகியவிசையொடுசுழலுமவர்
மிகமுனியரிவிழியெழுமழல்வளைவுறவெந்துகரிந்தனரால். 198

வேறு.

அசுரரைப்படிமிலசயரைத்திடுமெழலுறக்குதியாற்
பிசையுமத்திகளுடலினிர்றிகழ்பிதிர்வுறப்பொடியாய்
நிசிசரக்குழுமடியவுக்கிரவுகிருறத்திடநீ
டசைமலைக்குவையுறநடித்தனதலையிலுறுகுறையே. 199

வடவரைக்குவடிடையடித்திடுமெதகரிக்குழுவை
யுடல்படிக்கணினுறவுனிக்கிளுமுகிரினிற்பரியைக்
கடையமுற்றிடுகெரவிரற்கொடுதணிசெய்கத்திரிபோ
லடல்மிகுத்திடுமெசுரரைச்சிரமறவதைத்திடுமே. 200

வகிர்படுத்துடலறவுரித்திடும்வரைவுயொத்தவரைக்
ககனமுற்றிடவிடுமுயிர்ப்பினிற்கரிபரித்திரளை
யுகிரிடத்தவணுளிசெயுக்கிரமுறுமறத்திரளை
நிகரின்மற்றொருநகநுனிக்கணினிறையவைத்திடுமால். 201

சிலர்களைப்பெருமலையினுற்றுடல்சிதறமொத்திடுமால்
சிலர்களைக்கடிதுயிரறக்கடறிரையினுய்த்திடுமால்
சிலர்களைக்கொடுவடவையிற்சிரமெரியவைத்திடுமால்
சிலர்களைத்திரிவரையிறக்கடுசினமொடொத்திடுமால். 202

நாசியுற்றெழுவாதமெற்றிடநாகமுற்றிடுவார்
வாசியுற்றவர்தேரினுற்றவர்மாருதத்திறலோ
ரோசைபெற்றுயர்வானமுற்றுவிலோசனத்துறுதீ
வீசவக்கணநீறுபட்டனர்வீரமற்றிடவே. 203

உகிரினிற்கரிபரியினுற்றவரொருகணத்துருவ
வகிருமெத்தியகுடர்களைக்கொய்துமகிழுமத்தசையை
நுகருமிக்கிடுகுருதியைக்கொடுநொடியினிற்பருகிக்
ககனமுட்கிடமிகநகைத்திடுமெனல்கடிக்குறவே. 204

அலகைசுற்றிடவிகலனுற்றிடவுணரத்திபரி
யிலகுநாற்கிரிசிகரெயிற்றிடையமரவிட்டுழல
வுலகமெத்தியவுதரவக்கினிதனிலுலர்த்துசரு
கிலையெனக்கடிதெரியவிட்டனவெவையுமிக்கணமே. 2 5

கரியினைப்படிமிசையடித்தனகவினுடைக்கரமே
பரியினைக்கொடுவடவையிட்டனபலதிருக்கரமே
நிருதரைக்கடறிரையினிட்டனநிகரிலக்கரமே
தெரிமணிச்சுடர்கலன்மெய்யிட்டனசிலதிருக்கரமே. 206

சிலர்களைக்கொடுகெடிதுசுற்றியசிலதிருக்கரமே
சிலர்களைத்திசையுறவிடுத்தனசிலதிருக்கரமே
சிலர்களைச்சலதியினமுக்கினசிலதிருக்கரமே
சிலர்களைத்தரையினுளரைத்தனசிலதிருக்கரமே. 207

அசுரரத்தனைவருநொடிக்கணினயமொடத்தியெலாம்
நிசிசரக்குழுவுடனுமுற்றிடநெடியநாற்கைகளால்
விசைகொடெற்றினனவர்களுற்றணைவிழுமியற்சொலினர்
தசையையுற்றிடுகெருவறத்தனியிடர்தணித்தனனால். 208

வேறு.

எண்ணிலகோடியாகியிலங்கியகரத்தினாலுங்
கண்ணுமிழ்தீயினாலுங்கடையுகக்காலதாகி
நண்ணியவுயிர்ப்பினாலுநலனிலாவசுரர்தம்மை
மண்ணிடைத்தேய்த்தும்வானிற்புடைத்துமேவதைத்தான்மாதோ.

மூரனுறுமசுரர்தம்மைமுடுக்கியேவதைத்தங்கார்க்கும்
வருணமாநரசிங்கத்தின்வலனினைநோக்கித்தீய
விரணியன்முனிந்துவாளுமிலங்குகேடகமும்பற்றித்
தரணியினெதிர்க்கநோக்கித்தனையனீதறையலுற்றான். 210

அண்டமுந்தானேயாகியளப்பிலாவசுரர்தம்மை
மண்டனில்மடியமோதிநின்றருள்மடங்கல்வீரங்
கண்டுநீயறிவிலாதாய்கடுஞ்சமரொழிந்துமாயன்
புண்டரீகத்தாடாழ்திநின்பிழைபொறுக்குமென்ன. 211

என்றிவையுரைத்தமைந்தன்றனையெரியெழத்தானோக்கி
வன்றிறனரசிங்கத்தைவதைத்துனைத்தறித்துவீழ்த்தி
வென்றிசெய்வானையான்றன்றொழுவனென்றுரைத்துவிஞ்சும்
குன்றெனவுயர்ந்தவெய்யோன்குவவுத்தோள்கொட்டியார்த்தான்.

இடங்கொண்டமூவுலகுமஞ்சவார்த்தவனெதிர்ச்சேடன்
படங்களுநடுங்கவெய்திப்பரிசைவாள்சுழலத்தீபோல்
மடங்கலையெதிர்த்துத்தாக்கிமண்விண்மாதிரங்களோடே
யடங்கலுநடுங்கவோங்கியமரினைவிளைத்தானம்மா. 213

அரனயன்வலாரியஞ்சவடர்ந்தெதிரவுணன்மெய்யைச்
சரியில்பொற்கிரியைச்சூழ்ந்தரங்கமார்பாலின்வேலைப்
பெருமைபோன்மடங்கலாயபிரான்கையாற்றழுவவாங்கே
யிருவருமசனியஞ்சப்புடைத்தெழுந்தெதிர்த்தாரன்றே. 214

வேறு.

பூதலம்விண்டிடமேருவசைந்திடவேயுயர்பொன்னுலகோர்
பீதிநிறைந்திடவெண்கரிதுஞ்சவலாரியயன்பிஞ்ஞக
ஞுதனுலைந்திடமாநரசிங்கமுநலனிலவிரணியனு
மோதிமலைந்தனர்வாயொலியானிவர்முகடுகிழிந்திடவே. 215

சீலமிலிரணியன்வாளொடுகேடகம்விசிறியடர்ந்துசெனு
மாலமெனச்சினம்விஞ்சிடவரியொடுமலையவல்வாதியவன்
கோலமிகுத்திடுமகுடமொடேயுயர்குண்டலமுஞ்சுழலக்
காலொருகைகொடுசுற்றினனண்டர்கள்கமலனோடரன்மகிழ. 216

உக்கிரமாநரகேசரிசுற்றியவுயரவுணன்மகுடஞ்
சக்கிரவாளகிரிக்குவடும்பொடியாய்விழவொண்டபனன்
மிக்கிடுமண்டலமாமெனவேசுழலப்படிவிண்ணமர்வோர்
கக்கினர்குருதிகள்திசையினிறுமதகரிகளிரிந்தவரோ. 217

வடவரைபோன்முடிமண்ணின்விழுந்திடமார்புறுதரளமெலா
முடுவினமென்னநிறைந்துவிண்ணுற்றிடவுதையமொடத்தமெனு
நெடுவரையிதுவெனவேயொளிர்குண்டலநிலனிடைவிழவொளிர்வாள்
சுடருறுகதிரெனவானுறவவுணனையெந்தைசுழற்றினனால். 218

பருதியின்மண்டலமகல்குடநகமிசைபாதிமறைந்தபினர்
விரைவினினேகிடுமுன்னரின்விண்ணுறுகோபுரவாயிலின்வாய்
வரைநிகர்கேசரிதன்னிருவூருவின்மலையெனவைத்துகிரா
லிரணியன்மார்புபிளந்துநகைத்தனனிடிகளுமஞ்சிடவே. 219

வடவரையுளினுறவாசுகியுடலினைவாங்கியதாமெனநற்
சுடருறவச்சிரநகமுடுவுகிர்கொடுதுலையுறவகிர்செய்தவன்
குடர்தொடையாகிடவேயுரன்மீதுதுலாவவணிந்தகலும்
படியொடுவானகமஞ்சிடவார்த்தனன்மீளியெனுமபரமன். 220

அந்தகனஞ்சிடுமிரணியனுகம்வகிர்ந்தரியார்த்திடலும்
நந்தொடுதுந்துமிசின்னமுழங்கிடநாகர்களரனயனோ
டிந்திரன்மாதவரிபுமருதத்திரளெண்ணிலர்விரைவினெய்திச்
சிந்தைகளிர்ந்துபொன்மாமலர்வீசினராடினர்திசைகளெலாம். 221

அரனயன்முதலினர்சிந்தையுவந்தரியடியின்வணங்கிடவு
முரனுறமிரணியன்மார்புபிளந்துமொழிந்திலசீற்றமுயர்
வரைதுகளாகமிதித்திடும்வாரிகணீரறவேபருகு
மெரியுறவடவையைநாவினிடும்பொழிவெழிலியைதுங்கிடுமால். 222

எண்ணிலகோடிசிரங்கள்கரங்களிலங்கவுலப்பிலதாங்
கண்ணிறைதியுலகெங்கும்வளைந்திடமூச்சுமிழ்காலறைய
மண்ணுடுவிண்ணினைநுகரவிரித்திடுவாய்புகையாயெழுவே
விண்ணவர்முனிவரலைந்துநடுங்கினர்மேவவுமிடமிலதாய். 223

பீதியுறச்சுரர்முனிவர்களோடுபெயர்த்துநடுங்கிடலும்
வேதன்வலாரிபுராரியுயர்ந்திடுமீளியினடிதொழுதே
யாதிபரம்பரவச்சுதவற்புதவந்தமொடாதியிலா
நாதமுனிந்திடலென்றுதுதித்திடநாலுமுகன்னறைவான். 224

வேறு.

உந்தியினுலகத்தோடுமெனைத்தந்தவொருவனுகும்
விந்தைநாயகனேவேதவுபநிடம்விளங்கலாத
வெந்தைநின்செயலையாவரறிகுவரிடரைநீக்குந்
தந்தைதாய்முனியிற்சார்புதனையனுக்கெங்ஙன்சாற்றும். 225

ககனமோடண்டமெல்லாங்கலந்துறுமுயிரின்மேவும்
நிகரிலாச்சோதிநீயேகருமத்தின்முயற்சிநீயே
பகையுனக்கியாவர்நட்பார்பகருதிவெம்மைநீழல்
சிகிகுளிரதன்மந்தன்மந்திமிரமாயொளியாய்நின்றான். 2[illegible]6

அளியுறுகடைக்கணோக்கிலனந்தவண்டங்கள்மேவும்
விளியினோரிமைப்பின்முன்னேவீய்ந்திடுமவைகளெல்லா
மெளியைபோலெய்திவெம்மைக்காத்திடுமிறைவநீபோற்
கிளருமிம்முனிவைக்காட்டிநருய்வர்கிளத்துவாயே. 227

களைகணுயுலகமெல்லாங்காத்திடுங்கருணைமூர்த்தி
வளருநின்மூனிவைநீக்கநீயலால்மற்றார்வல்லார்
மிளிருமாவுததிதன்னுட்டிரையைமீட்டிடுவெர்போன்று
தளருமெம்மிடரைநீக்கித்தணிதியிக்கோபமென்றான். 228

ஈதெலாமியம்பிவேதனரனுடுமிறைஞ்சவுந்தா
ணுதிதன்முனிவையோவாததிகமாயெழுதலோடும்
பீதிகொண்டுணைந்துநின்றபிதாமகன்கமலத்தெய்து
மாதையிவ்விடரைநீக்கவருதியென்றேத்தும்வேலை. 229

சுடருறுகலன்களெல்லாந்துலங்கிடநிகரிலாத
வடிவுடைவனசப்பாவைவானவர்துதிப்பவெய்தி
முடியுயரண்டகோளங்கிழிந்திடமுனிந்துநின்ற
கடவுளைக்கண்டுகையால்வெருவிக்கண்மூடினாளால். 230

மருவியேயொருவாதென்றமார்பிடைவயங்கித்தோன்றுந்
திருநரமடங்கலோங்குமுனிந்திடுஞ்செயலைநோக்கி
வெருவியிவ்வுருவநோக்காவிழியெனவிளம்பியேக
விரணியன்சிறுவன்றன்னையாவருமெமைக்காவென்றார். 2[illegible]1

பிரமனும்வலாரிதானும்பிறையணிசடையனோடும்
பரமபாகவதனுகுஞ்சிறுவனைப்பரிவாேனாக்கிக்
கரமெனில்கோடியாகுமிறைக்குறுங்கதத்தைநீயுன்
னுரமுறும்பத்தியாலேயொருவல்செய்யென்றாரன்றே. 232

அத்தியிற்றுயில்வோன்யார்க்குமகப்படானவன்றனுமம்
பத்தவற்சலனுயோங்கும்பான்மையானிகரிலாத
புத்தியையடைந்தாய்நின்னுற்பொறுக்குமிக்கோபமென்ன
வுத்தமச்சிறுவனன்பால்முடங்குளையதன்பாலுற்றான். 233

பாரிடையகன்றேயாழ்ந்துபலதிரையுறவங்கோங்கி
யாரும்வந்துறினுமஞ்சவறைந்துயர்ந்தெழுந்தேநீண்ட
வாரியுட்பயமிராதுதிரியுஞ்சில்வகுலிபோன்று
வீரியமடங்கறன்பால்வெருவுதலிலாமற்சேர்ந்தான். 234

வெருவுதலிலாமற்றூயபிரகலாதனன்றான்மேவி
யரியடியிறைஞ்சிநின்றேயறைகுவான்கராவானொந்த
கரிதனைக்காத்துலோகத்தவை வர்க்குங்களைகணுகிச்
சருதியுமுணரொணுதாய்தூணிடையுதித்தாயென்றான். 235

உன்னுளேயயனைக்காட்டியுன்றொழில்படைத்தியென்று
லன்னவன்கருத்தினுலுமறிகிலாவுருவமாகி
நின்னைநீபடைத்துத்தேவர்திரளினைக்காத்துநீசன்
றன்னைநீவதைத்துமூவர்தொழிலுஞ்சாதித்தாயென்றான். 236

உனையுணர்ந்தவர்க்குமுன்னுல்மடிந்தவொன்னலர்தமக்கு
மினியநல்வீடுநல்குமிறைவனீயென்னிலுன்றன்
முனிவருளிரண்டுமொக்குமெனினுமுன்கோபமுந்தில்
வினையறுமின்பமெய்தாதிதுவொழிந்தருள்செய்யென்றான். 237

பிறையணிசடையன்றானும்பிரமனும்வலாரிதானு
மறிவறிமுனிவரோடுமருகியேதளராவண்ண
மிறைவவிம்முனிவையோவியிடரறவிலங்குஞான
மறிகிலாச்சிறியேன்சொல்லைமறாதருள்புரிதியென்றான். 238

இருவிழிசுலுழிசோரவிசைதயமுட்புளகமாகப்
பரிவுடனிருகைகூப்பிப்பரமபாகவதனுகும்
பிரகலாதனன்றான்கூறப்பிறிதிணையிலாதசோதி
யருள்புரிந்துச்சிதன்னிலங்கைவைத்தணைத்துச்சொல்வான். 239

உனையருடாலைதன்னையொருகணத்திடையின்முன்னர்
முனிவுடனுரத்தைக்கீறிமுடங்குளையாகிநின்ற
வெனையெள்சல்செய்யாதென்மேலெல்லையிலன்புவைத்துத்
துணிபறமுனக்கியான்செய்நன்றியேதென்றுசொல்வான். 240

இனியுன் றன்மரபிலுள்ளோரெல்லையில்பிழைசெய்தாலு
முனிவுடன் வதையேனென் றுமொழிந்தயர்ந்தொளிருமூர்த்தி
வினையறசிறுவநீமீண்டேதுவேண்டினுமீவ
னினியநல்வரங்கேளென் றுண்டியம்பிடமதலைசொல்வான். 241

விறலுடையிரணியன் றனழித் திடுஞ்சுவர்க்கம்வேண்டே
னிறைவவுன்பதத்தைநற்று நாரதாதியர்களெல்லா
மறிவுறமடியராஞராதலாற்கதியைவெஃகே
னெறியுறுவிமலவென் றுநிகழ்த்தியீதறைவானன்றே. 242

உத்தமக்குலத்தையோவியிழிகுலத்துதித்தேனேனு
மத்தியிற்சிவனுகிப்பிறந்தறிவற்றேனேனுஞ்
சுத்தவுன்னடியார்பாதத்துகளதாய்த்திரியநல்கென்
னத்தவென் றுரைப்பச்சோதியகமகிழ்ந்தணைத்துச்சொல்வான். 423

பாரினின்வானின்மூந்துபரமபாகவதனுகுஞ்
சீருறமசுரர்கோனுய்ச்சிறந்திடுங்கிரீடஞ்சூடி
யேருறவரசியாண்டபின்னரென் னுழைவாவென் று
நேரிலாக்குமரன் றன்னைநோக்கியேநிகழ்த்தலுற்றுன். 244

மைந்தவுன் றந்தையாக்கைவகிர்ந்தியானளையத்தீமை
வெந்திடப்புநிதமாய்விரைவின்மற்றவனையீமத்
திந்தனமிசையினாலாலெரியிடையிட்டுப்பின்ன
ரந்தணர்விதிக்கும்வெள்ளம்விடுதியென் றறைந்தானன்றே. 245

அரியிவையளியினேமெருளநற்பிரகலாதன்
றரையிடைவணங்கிச்சென் றுதந்தைதன் றனுவையீமத்
தெரியிடைவளர்த்திப்பின்னிருபிறப்பாளர் நூலின்
கிரிகையைமுடித்துவந்துகேசரிதாளிற்றுழ்ந்தான். 246

வந்தடிதொழுதுநின் றமதலையைமார்பினேடுஞ்
சிந்தையினுவந்துகையாற்றழுவியசெல்வன் றன்னைக்
கந்தமார்மலருளோனுங்கறைமிடற்றிறைவன் றானு
மிந்திரன்முதலினேருமினிதுவந்தேத்தினால். 247

இடாறமுனிவையோவியிலங்கியசோதிதன்மேற்
கடிமலர்பொழிந்துபேரிமுரசுகாகளங்களார்ப்ப
விடையவன்விபுதர்கோமான் விரிஞ்சன்விண்ணவர்கயே
படிமிசைமுனிவரோம்பரிந்துதோத்திரங்கள்செய்தார். 248

சுரரொடுமுனிவரெல்லாஞ்சுருதிநூன்மறையையோத
மரைமலர்த்தவத்தோனேமம்வளர்த்திடப்பிரகலாதன்
சிரமிசைமணிகளாலேசிறந்தபொற்கிரீடந்தன்னை
யரிகவிழ்த்தணைத்தலோமொடினரடாரம்மா. 249

முடியினைக்கவிழ்த்துமைந்தனுச்சியையமோந்துவானம்
படியிலங்கிடவேயிந்தப்பதியையாளுதிநீயென்று
தடமலர்க்கைகளாரத்தழுவிமற்றவனையோவி
யிடரகலிமையோடேத்தவிறைவன்றன்பதியிற்சேர்ந்தான். 250

மறுவிலாச்சிறவன்றன்னைக்காத்துமற்றவன்றன்றாதை
யறையுமத்தூணிலங்கவழகியசீயமாகி
நெறியிலாவவனைச்செற்றநேமியோன்கீர்த்திவெள்ள
மறிதிநீவிதர்ப்பன்பெற்றவணங்கெனமுனிவன்சொன்னான். 251

நாரசிங்கப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - 1170.

## 11 - வது, துருவப் படலம்.

தத்துவமூவெட்டுறவளர்ந்தெழுந்ததனுமடிந்திடுமெதிற்சீவ
னித்தியமதனைப்பவமுறுகிரையத்தழுந்திடாநெறிநிவர்பதத்தின்
வைத்திடுமுதலாய்மறையினுச்சியினினுபனிடத்தின்மிகவயங்கும்
வித்தகவரியையிறையெனவுணர்ந்துவினையறவவனடிதொழுமின். 1

அரியரியுருவாயவுணனைவதைத்தாண்டன்பனுக்கருள்செய்மாக்கதையை
விரைசெறிகமலத்தயருருக்குமணிவியப்புடன்கேட்டுளமகிழ்ந்து
சரியிலாப்பிரகலாதனைப்போலத்தரணியின்மால்பத்தருளரோ
வுரையெனக்கிருவன்மாதவத்தையுணர்திடுயென்றியாழ்முனியோதும்.

அயன்சுதன்சுவாயம்பூமனுத்தவத்தாலருளுமுத்தானபாதனுக்குச்
செயலுறவிலங்குந்தேவியரிருவர்சிறந்திடவவர்களினழகார்
கயனிகர்நயனச்சுருதியுத்தமனைக்கவினுறப்பயந்தனள்சுநீதி
யியல்பெறுதுருவனெனப்பெயரிலங்குமிணையிலாமதலையையீன்றாள்.

இருவரும்பயந்தபுதல்வர்களைந்துபருவம்புக்கிலங்கிடுநாளி
னரசனுக்கன்பாஞ்சுருதியீன்றெடுத்தவழகியவுத்தமன்றன்னைப்
பரிவுடனிருபன்மடிமிசைவைக்கப்பரிவிலாச்சுநீதிதான்பயந்த
துருவனுந்தந்தைகவான்மிசையேறத்துலங்கியேவருகின்றவெல்லை. 4

மடிமிசையேறவருகின்றசுதனைமன்னவனழைத்திடாமெலிவா
லிடருறுந்துருவன்றிகைத்திடவவனைநோக்கியங்கிலகுநற்சுருதி
சுடருறுந்தாளமெனநகைத்தென்றன்சுதனுறுநலனுனக்குளதோ
புடவியாணிருபனிகழ்ந்திடுஞ்சுநீதிபுதல்வனாயபாக்கியனானாய். 5

திருபர்கோன்மடியினேறிடவேண்டிகிகரிலாயானுனைப்பயக்க
வரியினையுள்கித்தவஞ்செயப்போதென்றறைந்தவள்நகைத்திடவழுது
துருவனுந்தனையீன் சுநீதிதன்னுடனே யிவையெலாஞ்சொலவவளென்
பரிவிலாதிசழ்வானுந்தையாதலினன்பயந்திடவறியர்போலானாய். [மேற்

ஆதலிற்சுநீதியமரர்கட்கரியவரிவரத்தவஞ்செய்தேயுயரப்
போதுதியெனத்தாயடிமிசைவணங்கிப்பருவமைந்துறமெழிற்புதல்வன்
வேதனையறத்தான்விளங்கியபரனைவிழுமியக்ருத்தினினைமைத்துத்
தீதறப்பழுவத்திடையினிற்செல்லச்சிறந்திடுஞ்சுரர்முனிகண்டான். 7

விழுமியமுனிவன்வனத்திடையேகிவிளங்கியதுருவனைநோக்கி
யழகியகுமரவரசனையொருவியடவியினடைந்ததேதென்ன
விழிவெனக்குறவென்றாதைதன்மடியினேற்றிலானாதலினென்று
மழிவிலாவரியென்வினையறவரமாதவஞ்செயவடைந்தனனென்றான். 8

துருவனீதறையச்சுரர்முனிகேட்டுமகிழ்ந்துநீதுய்யமாதவர்க்கு
மரைமலரயற்குமரியமாதவனைமழலையாயுரைதெரிகில்லாப்
பருவமோரைந்துநிறைகிலாயெவனென்றறிகுதிபழுவத்தின்மிடையு
மரிபுலியுளியமடர்ந்திடுந்தவத்தையொழிகெனவவனிவையறைவான். 9

புற்புதம்போன்றவுடலினைநற்றிப்புவியிடைத்தந்தைதாயென்னுஞ்
சிற்பதத்தினையான்விரும்பலேனுயருஞ்சீதரமூர்த்தியாய்த்திகழு
மற்புதனடியணுகியேயடையுமெனைமறன்யாவையுமடையா
நற்பதத்துயர்நாரதத்தவவெனமாமுனிமகிழ்ந்திவையிவைநவின்றான். 10

இலகிளஞ்சிறுவவரியயோகியருமுனக்குநேரில்லெனவியம்பி
யுலகமுண்டுமிழ்ந்தவொருவனையொப்பில்பரம்பொருளவனைநீயுள்கி
நலனுறயமுனைநதிமருங்கிலங்குமதுவனத்திடையினினண்ணிப் [னால்.
பொலனுறத்தவஞ்செய்கெனவவன்செவியிற்றுவாதசாக்கரம்புகன்றன

பரிவுடன்முனிவனிவையெலாம்பகர்ந்துபழுவத்திற்சேறியென்றவன்றன்
சிரமிசைக்கரம்வைத்தணைத்துனக்கிறைவன்சிறந்திடுபதமருளுவனென்
றுரைசெய்தங்கொருவச்சிறுவனுண்மகிழ்வோடோங்கியகாளிந்திநதியி
னருகுறவிலங்குமதுவனத்தடைந்தேயரிவரவருந்தவஞ்செய்தான். 12

பரனையுள்ளிருத்தித்தவஞ்செயும்புதல்வன்பழுவத்தின்முத்தினத்தொரு
சரியிலாவெதிரிதனிலிளங்காயுந்தலனுயர்கபித்தநற்கனியுஞ் [காற்
சரீரமின்றிடத்தானுகர்ந்தொருமாதந்தவஞ்செய்தேயிரண்டதாந்திங்கள்
பருகினனாறுதினத்தினிற்கொருக்காற்பசும்புலும்தமாலமுமாதோ. 13

உவமையில்சிறுவனுயர்திரிமாதத்தொன்பதுதினமுறவொருக்காற்
றவர்வியப்புறநற்சலத்தினைப்பருகிச்சாதுமாதத்திடைச்சரியில்
பவனமங்குணவாய்ப்பன்னிருதினத்தினொருதினம்பருகியேயைந்தாய்
நவிலுமாதத்தின்போசனனாகிநலனுறவருந்தவஞ்செய்தான். 14

தலனிடைச்சிறுவன்றாளினங்குட்டந்தரிக்கமாதவஞ்செயவெருவி
யலையுமிந்திரன்றானிவன்றவமழிக்கவிடுத்திடவெழுந்துமாதவங்க
ணலியுமாபூதப்பிரேதகமனல்கானக்கினநிருதிகளடர்ப்ப
நிலைகுலைந்திடாமலரியினைமனத்துணிறுத்தியேநெடுந்தவஞ்செய்தான்.

ஐம்புலனடக்கித் துவாதசாக்கரத்தாலளப்பிலண்டங்களைத்தரிக்கு
மெம்பரன்றனைத்தன்மனத்திடையிருத்துமிவன்றனைப்பரிக்கிலாதவனி
வெம்பியமதமாமிதித்திடவமிழும்வேலையினம்பிபோலலைய
விம்பரிற்சிறுவனுயிர்ப்பையுள்ளடக்கவெவருமூச்சறங்கினரால். 16

அவனிகம்பிக்கமுனிவரோடமரருயிர்பெறவலைந்தரிவைகும்
பவமில்பாற்கடலையடைந்தெழிற்பரமன்பாதமேற்பணிந்துளநெங்கி
யுவமையின்மதலைதவஞ்செய்கோரத்தாலுலைந்தியாமுன்னிடையடைந்
நவையறுமுதல்வவிடரகற்றெனவேநாரணனஞ்சன்மினென்றான். [தோ

வெருவிவந்தடைந்தவயனொடுமுனிவர்விபுதர்நீரஞ்சலென்றருளித்
துருவன்மாதவத்தின்செயலிதுவெனவேதுலங்கியசோதியுண்மகிழ்ந்து
திருவுமார்பிலகத்திகிரிசங்கேந்திச்சிரமிசைக்கிரீடமுந்தயங்கக்
கருடவாகனனுய்க்கலன்சுடரெறிப்பக்கடிதினிற்சிறுவன்முன்வந்தான்.

கோமுகம்பணவமானகந்திமிலைகுறடுசங்கமுமிருதங்க
மாமுரசுடனெண்டிசையெலாமொலிகள்பரவிடமலரயன்விபுதர் [தப்
காமனையெரித்தோன்முனிவர்கள்முதலாய்க் கடிமலர்பொழிந்துவந்தேத்
பூமனுந்திருமார்பிலடங்கிமுராரிபுதல்வன்முன்வந்துநின்றனனால். 19

சிந்துவினொலிபோற்சிறந்தபல்லியங்கடிசையெலாமுழங்கிடவயனோ
டிந்திரன்முதலோர்துதித்திடமுராரியெய்திடவவனெழிலுருவஞ்
சிந்தைமற்றியானொருடனுமாகிச்சிறந்திடும்விழிகளைமுகிழ்த்திச்
சந்தமார்பரமன்றன்முனரடைந்ததுணர்கிலான்றவஞ்செய்துநின்றான்.

முன்னர்வந்திடவுமுணர்கிலாதிலங்குஞ் சிறுவன்றன்கருத்திடைமுராரி
மன்னுதன்னுருவமறைத்திடவெருவிமதளைதன்னிருவிழிதிறந்து
பன்னகப்பகைஞன்புயமிசைவயங்கும்பரமனைநோக்கியேகளிப்புத்
துன்னிடவணங்கியிருகணீர்நிலத்திற்சொரிந்திடவாடினனன்றே. 21

இருகரஞ்சிரத்தினிலங்கிடக்கூப்பியிதயமெய்புளகமாயெழச்சீ
ரரியினைத்துதிக்கும்பொருளினையறியாதருவிபோலிருவிழியினுநீர்
சொரியவேநின்றமதலையைநோக்கிச்சுருதியாற்றன்னையேத்திடநற்
பிரமனுங்குமரனிருகபோலத்துந்தன்கையின்பணிலம்வைத்தனனால். 22

அரிபரிவுடனச்சிறுவனற்கபோலத்திடையிற்றன்வலம்புரியழுத்த
விரியுநால்வேதபுராணசாத்திரத்தின்பொருளெலாநாவினில்விளங்கக்
கரதலாமலகம்போலமாதவன்றன்செயலெலாங்கருத்தினிற்றோன்ற
மரைமலருறவோன்மகிழ்ந்திடமதளைவாய்திறந்தேதுதித்தனனால். 23

ஒருமுதலாகியிருசுடராகியொளிதருமூர்த்திகள்மூன்றாய்
விரியுநால்வேதமாகிநல்வேள்வியைந்துமாயாறங்கமாகி
யிரையும்வாருதிகளேழுமாய்வரைகளெட்டுமாய்நவக்கிரகமுமாய்த்
[illegible]லிலங்கத்தசவவதாரமாகியசற்குணுவென்றான். 24

விரிவுடனீளமளவுமிதென் றவிளம்பரிதாகியவிரசைப்
பெரியமாநதியைக்கழிந்துலப்பிலவர்ம்பேரொளியானவைகுண்டத்
தரியுறமரியாதனர்தினிற்றிருவோடவனிமானீளையுமரச்
சிரமிசைக்கிரீடமிலங்கிடவயங்குஞ்சீதராநமவெனத்துதித்தான். 25

உயிர்தொறுமுளனுயுலப்பிலாவண்டமூரோமத்துணுனிதொறமுறைய
வயாவிலாப்பரமபதத்திடையிலங்கியகிலம்வானுண்டுமிழந்தளந்தே
யியல்புறமறைக்குந்தூயயோகியற்குமெட்டலாஞானமீயென்றன்
றுயரறத்தோன் றுஞ்சுருதிநாயகனேசோதியேநமவெனத்துதித்தான்.

மறைநெறியுறவேயிவையெலாந்துதிக்குமதலையைமகிழ்வுடனேக்கிப்
பொறியுறமுரத்தன்புகலுவான்வருடமிருபத்தையாயிரம்புவியி
னிறையனீயரசாண்டதற்பினரிரவிநிகரிலாவுவிதுமுதலோ
ருறையுமாபதத்தினுயர்ந்திடுமெதிகபதத்திடையுறுகுதியென்றான். 27

அளியுடன்பரமன் றுருவனுக்கிவ்வாறளித்துத்தன்பதியிடையமர
வொளியுறுஞ்சிறுவன்மலரயற்கெட்டாவொருமுதலாம்பரமேட்டி
யெளியவன்போலென்முன்னரினடைந்துமிலங்கியதன்பதங்கொடாமல்
நளினமன்னொருவுநாளழிபதத்தைநல்கினனென்றநொந்தனனல். 28

சிந்தையினிவையைகினைந்திடுங்குமரன்செகதலமாண்டினிதிருக்குந்
தந்தைபாலடையவவன்மகிழ்ந்தெழுந்துதனையனையளியுடன்றழுவி [க்
யந்தணர்மறைநூலறைந்திடச்சுதனுக்கம்பொனின்மவுலியைக்கவிழ்த்து
கந்தமார்பழுவத்தெய்திமாதவங்களியற்றிநற்கதியினையடைந்தான். 29

அடவியற்றுதையருந்தவஞ்செய்யவகன்றிடத்துருவனுமரசன்
புடவியைமறையினெறியுறச்செங்கோல்பொருந்திடவாண்டிடுநாளி
னிடருறுஞ்சுருதிபயந்தவுத்தமன்று னிவுளிமேல்மிருகயாத்திரையாய்க்
கடமுறுகரிகணெருங்கவேங்கடத்திற்கடிதினிற்சென்றனன்மாதோ. 30

உரனுறுபரிமேலுத்தமன்பழுவத்தெய்திநல்லுழைமரையுழுவை
கரிபரியிரலையிவையெலாம்வாளாற்களைந்தவன்றிரிந்திடும்போழ்திற்
சரியிலாநரவாகனன்பதிதன்னிற்சார்ந்திடுமியக்கரினுயர்ந்த
வரமுறுபுயப்புண்ணியாசன்வந்தடைந்துமற்றவன்றனைவதைத்தேக. 31

சரியிலுத்தமனையியக்கரில்வயங்கும்புண்ணியாசன்வதைத்தேகச்
சுருதிதன்றனையன்வருகிலானெனவச்சுரத்திடையடைந்துதான்றேடி
விரிவுறவனத்திமிடைந்திடவவளும்தினிடையுற்றவீய்ந்திடலுந்
துருவனீதுணர்ந்துசலத்தொடுமிரங்கிச்சுவணநாதன்பதிசூழ்ந்தான். 32

தனபதிநகரைச்சார்ந்திடுந்துருவனியக்கரைச்சரங்களாற்றணிக்கச்
சினமுறுநரவாகனனடைந்தெதிர்ந்துசிலீமுகமழையினைப்பொழியக்
கனமெனகிருபன்கனைகளைச்சொரிந்துகறைமிடற்றரன்சகாயன்ற
னினமொடுமிரியக்கரிபரிதுணியவிரதம்வில்லிறிடப்பொருதான். 33



சுடுகணைசொரிந்து துருவனின் றடரத் துலங்கியவிரதம்வில்லிற் றுக்
கொடிகுடையறலுங்குபேரன் விண்ணிடைக்கொண் மூவிடைக்காந்துவன்
விடமு றுமாயப்படையினைவிடுப்பவிரிவு றுகாலனல்வேலைப் [கொடிய
படமுடையரவுநிருதிகளலகைபலவுமாயெழுந்தனபரவி. 34

உரனு றுகுபேரன்விடுத் திடுமாயப்படையுலகஞ்சிடவரனுந்
துருவனெஞ்சுழன் றுசடுதிபினவைகடுணிந்திடவரிபடைதொடுத்துச்
சரமழைபொழிந்துதனபதிபதியைத்தழலிடச்சார்ந்திடும்வேலை
நிருபனுஞ்சுவாயம்பூமனுப்போந்துபவுத்திரனுடனிவைநிகழ்த்தும். 35

அரிவரத் துயர்ந்த துருவனீமதலையயனொடெவ்வுலகமுமலியு
மிருகயாத்திரைசெயுத்தமன் றன்னைவீட்டியவியக்கன்போய்க்காந்தான்
றருமமார்குபேரன் றனையிவன் முனியத்தக்கதோவறனிவையலவிச்[ஞல்
செருவினையொழிகென் றுரைத்திடத்தவிர்ந்த செம்மலையுறவணைத்தன

சரியின் மூதாதையுரைத்திடச்சமரந்தவிர்ந்திடுந்துருவனை நிகரி
லரனெழிற்சகாயனுவந்துவந்தனைப்பவவன் றனக்கருள்செறிநிருபன்
பரிவுடனினியவுரைபகர்ந்தவனைநிறுத்திமாமனுவினைப்பணிந்து [தோ.
விரைவினிற்றன்வாழ்புரியினினடைந்துவிளங்கியாண்டமர்ந்தனன்மா

மறைவளர்ந்திடவேயுலப்பிலாத்தானம்வழங்கிமாமகமெணின் முடித்துப்
பொறியிலங்கிடகீள்புவியினையாண்டுபுறந்தரன்போலவீற்றிருந்து
நெறியுடன் றினங்கள்மலிந்திடவருடமிருபத்தையாயிரம்நிறைய
வலனு றுதுறவனரசர்கள்போற்றத்தமரோமெமர்ந்திடுநாளின். 38

அரிதரையாளென் றறைந்திடும்வருடமிருபத்தையாயிரமகலச்
சுரர்துதிசெயமாமுராரிதன் னுருவாய்த்துலங்கியமாலவன் றூதர்
சரியிலாநந்தன்சுனந்தனென் றிவர்கடமணியவிமானங்கொண்டுதவித்
துருவனைக்குரம்பைதனிலொடுமேற்றத் துந்துமிமுழங்கியதன்றே. 39

பின்னரும்விமானமசந்தமங்செய்தப்பிறங்கிய துருவன் றன்கிளைஞர்
மன்னநற்பொன் னுமுடனு றுசுநீதிமைந்தன்மா றூதரைப்பார்த்தெ
னன்னையெங்குளளென் றறைந்திடவவருமவடனைவிமானத்திற்காட்டத்
துன்னியமகிழ்வினொடுபரன் றன்னைத் துதித்தவனும்பரிற்சென்ருன். 40

தருமலர்மாரிபொழிந்திடவுயருந்தவரிறும்பூதொடுமெகிழ
முரசுகாகளங்கள் துந்துமிநந்துமுழங்கிடத்தீப தூபங்கள்
விரைபுரையலங்கனைறியெலாமிலங்கவிமானமேற்றமரொடுந்துருவ
னிரவிதாரகைகளுடுபதிபதியினுயர்பதத்தெய்திவீற்றிருந்தான். 41

தந்தையோடினுததாயிகழ்ந்திடமெய்தளர்வறும்பருவமோரைந்தா
மைந்தன்மாவநத்திற்செய்திடுந்தவத்தைமகிழ்ந்தரிவந்தவன் றனக்குக்
கந்தமாமலரோன்மகிழ்ந்திடவுபர்ந்தபதியினையருளுமாக்கதையைச்
சுந்தரவுருக்குமணியினிதுணர்தியென்றனன் சுரர்தொழுமுனிவன். 42

துருவப் படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 1212.

---

# 12 - வது, மச்சப் படலம்.

தலமிசையுலவுகிருமியைக்குளவிதன்னிறமாக்கியதேலப்
பொலனுறுபிரமகுருவெனவெழுந்துபுலன்பொறிமுயற்சியாற்றிரண்ட
மலினநோயழியத்திருத்திமெய்ஞ்ஞானம்வளர்ந்திடத்தன்பதங்கொடுக்கு
மலைவிலாதுயர்ந்தபதத்தினச்சுதனையடுத்தவனடியரைத்தொழுமின். 1

சிதலைதன்வாயிற்புனலின்வான்மீகமுயர்த்திக்கட்செவியினைச்சேர்க்கு
மதியிலாதனபோற்பிறர்மனைவிரும்பிவரும்வினைத்தீயெலாம்வளர்த்துக்
கதமுறஞ்ஞானநிறைந்திடச்செய்துகதிரவன்சேய்நகர்நிரைய
முதவிடென்மனனேதயையிலாயந்தோவுரையரிபெயரையாமுயவே. 2

துருவன்மாதவத்தாற்றுலங்கிவானுயர்ந்தபதத்தினிற்றோன்றுமாக்கதை
வரமுனிபகரவிதர்ப்பர்கோனுதவுமனங்களுள்கேட்டுளமகிழ்ந்து [யை
சரியிலாப்பரமன்பின்னருமியற்றுஞ்சதுர்மலிசரிதையியம்பென்
றுரைசெயப்பரன்மீனாவெழுநலனையுணர்தியென்றியாழ்முனியோதும்.

சத்தியவிரதப்பெயருடைநிருபன்றவஞ்செயச்சக்கரந்தரித்த
வித்தகன்றோன்றியவனைநீயிரவிபுதல்வனாய்ச்சனித்துறவிளங்கிச்
சுத்தனுமனுவாயுயர்தியந்நாளிற்றோன்றியானின்னிடரகற்றித்
தத்துவமுயருஞானமெய்ப்பொருளைச்சாற்றுவனென்றரியகன்றான். 4

அரியிவையுரைத்தாண்டகன்றிடவரசனகல்விசும்பொளிருமென்றினுக்
சரியிலாச்சிராத்ததேவிதான்பயந்ததனையனாஞ்சிராத்ததேவப்பே [குச்
ருரைசெயவைவச்சுதமனுவாகியோங்கினானுயருமார்த்தாண்டாற்
கிருகையாலளிக்குமயந்தனிற்சிறியசகுலியாய்ப்பரனெழுந்தனனால். 5

அருக்கனுக்கரசனருக்கியமளிக்குமிருகையின்பயமதிற்பரமன்
றிருக்கறச்சிறுபெண்மச்சியமாகித்திரிந்திடவருவருத்துயர்மன்
பொருக்கெனக்கயத்தினுறுசலத்திடையிற்போடலுமந்தமீன்விதனம்
பெருக்கவாய்த்திறந்துநிருபனேயெனக்காவென்றிவைபேசியதம்மா. 6

பெரியமச்சியங்களனையயின்றிடாமற்பிறங்கியபுகழுடையரச
பரிவுடனெனைக்காத்திடுதியென்றறங்கள்பலவுந்தான்பகர்ந்திடநிருபன்
சரியிலாவரிதன்னிடரினையகற்றச்சார்ந்ததங்குணர்கிலான்றனே
கிருபையோடதனின்றுயரகற்றுவன்போற்கிட்டியமீனயத்தடுத்தான். 7

அயத்தொடுசிறியசகுலியைப்பரிவோடங்கையினேந்தியேயடல்சேர்
புயத்துமாநிருபன்றவளமாளிகையிற்புகுந்துதன்பொற்கமண்டலத்தின்
பயத்திடைவிடுப்பருத்துநல்வகுலிபாரினிலெண்டிசையெங்கும்
செயித்திடுமொரசச்சிறியவிக்கிரகமிடமிலையென்றுசெப்பியதால். 8

ஆவலின்வகுலிபகர்ந்திடக்கேட்டவரசர்கோன்பரிவுடனெடுத்துக்
கூவலின்விடவரண்டதனிடமூன்றுமுழம்வளர்ந்திதுகொளாதெனவக்
காவலன்வியந்துநூறியோசனைநீண்டகன்றநல்வெறிகமழ்கமலப்
பூவலரோடையயத்தினுள்விடுப்பப்பொலிந்திடுஞ்சலசரம்வளர்ந்த. 9

கன்னலின்முக்காலிடையினின்வகுலிகடுகிநூறோசனைநீளந்
துன்னியேவளர்ந்தீதிடமிலையெனலுந்தூயமன்னுவரியின்விடுப்ப
வன்னமீன்பெருத்துமனுவினைநோக்கியரசவிவ்வகலுமார்கலியி
னென்னிலும்பெரியதிமிங்கலமகரமெனையயின்றிடாதுகாவென்ற. 10

சரியிலார்க்கலியின்றயங்குமீனிவைகள்சாற்றிடவரசர்கோனென்ற
னிருகையினயத்திற்சிறியமீனாகியெழுந்துகுண்டிகையினிலசும்பில்
விரியுமோடையினிலிமைப்பின்முன்வளர்ந்துவிளங்கியவுததியிற்பெருத்
யுரைசலசரநீயன்றுலகெவையும்படைத்தளித்துண்டவனென்றான். [தா

மலரயன்வலாரிவிபுதர்மாதவர்க்குமகப்படாமாதவவின்று
சலசரமாகிவளர்ந்திடுங்கருமஞ்சாற்றுகென்றுரைத்துமன்வணங்க
வுலகமிண்டுமிழ்ந்தவொருவனுஞ்சகுலியுன்னையான்காத்திடவடைந்தே
னலனுடையரசவதற்குறுக்கருமங்கேளெனநவின்றனன்மாதோ. 12

ஏழுநாளளவினவாந்திரமானபிரளயமெய்துநீமிகவும்
வாழவோர்நாவாய்வருமதின்மிசையின்மன்னவாவுன்றமருடனல்
வேழமாவினத்தோடிரவிபோற்றோன்றுமிருடிகளெழுவருமேவப்
பாழிசால்புயத்தாயடைகுதியெனுஞ்சொற்பகர்ந்தமீன்பரவையுட்கரந்த.

பரவையுட்பகர்மீன்கரத்தலுமுயர்ந்தபதுமநாபன்செயலுள்கி
யரியயோகிகட்குமகப்படாமுதல்வாவடியரைக்காத்திடவிளிவா
யுரைசெயுஞ்சகுலியாகியீண்டருள்செய்யுத்தமமுகுந்தமாமாய
பரமவென்றுருகித்துதித்திருகண்ணீர்படியுறத்தன்பதிபுகுந்தான். 14

புரியினிலடைந்துமணிநிவந்தெழுந்தபொன்மனைபுகுந்துதெர்ப்பையின்மே
லரியிருபதத்தைமனத்திடையிருத்தியகங்குழைந்திருகரங்கூப்பித்
தரைமிசைவடகீட்டிசையினைநோக்கியிருந்துமுச்சதுமுகவிதாதா
விரவுவந்தணுகிப்பிரளயமுறமாவெழிலிகள்மிகச்சொரிந்தனவால். 15

கரிகரம்போலக்கனவினந்தாரையுறப்பொழிந்திடக்கமலத்தோ
னிரவுறவுகாந்தப்பிரளயமெழுலுமுயர்மனுமுன்னமோர்நாவாய்
வரவதின்மிசையின்மனன்கிளையோடுமேதகரிமண்ணிடைவிளையும்
விரைகளுமமரவிருடிகளெழுவர்விளங்கிடவேறினரன்றே. 16

தரையினுமகன்றுநிவர்ந்திடுநாவாய்தனின்மனுத்தமருடனெய்த
விரவிபோன்முனிவரெழுவருந்தோன்றலெங்கணுமிருளகன்றேகக்
கரையிலாதுயருமயந்தனிலம்பிமிதந்திடுங்காலையிற்பரம
னுரைசெயற்கரியபருமகீளத்தோடொப்பிலாவகுலியாயடைந்தான். 17

சரியிலாதுயர்ந்தககசகுலியாயெழுந்துசலத்திடைமிதக்குநாவாயை
யுரகபாசத்தானிவர்ந்திடுந்தன்கொம்பொளிபெறவழுந்திடப்பிணித்து
விரைகமழ்மலரோனிரவுகமொருவுமளவுந்தன்மெய்கொடுநீத்த
வர்சர்கோன்றமரோடிலங்கினும்தபினின்விரையமர்ந்தெங்கும்விளைய.

இரவியினவிர்பொலிருடிகளெழுவரிலங்காவாய்மிசைதன்னில்
விரைவிதைத்திடப்பிற்பயிரெழுந்துயர்ந்து விளைந்திடமகிழ்ந்திடுரூபன்
பெரியதோர்வகுலியுருவமாய்நீந்தும்பெயர்களாயிரத்தனைவணங்கிப்
பரமவென்மலினமறுத்தருள்செய்யும்பத்தவற்சலவென்றுபகர்வான். 19

தரைமிசையுயருமவாந்தரவயத்திற்றளர்ந்திடாதிடரினைத்தவிர்த்தா
யிருளதாயென்றும்வெடிவிலாவில்வாழ்வெனுமகன்பாழதாமசும்பி
னிரையநீந்திடநீயருள்கெனவுரைப்பகிகரிலாவகுலியாய்த்திரிவோ
னரசர்கோன்மகிழப்பிறப்பிறப்பறுக்குமறிவுறும்புராணத்தையறைவான்

சதுமறைப்பொருளினுயர்ந்ததத்துவமுஞ்சாங்கியமுயகிடமுதலாச்
சுதைதரும்பொருளாலிதவுபதேசந்துயரறவருளியபினர்த்தா
மதமெனநிகழ்த்துமச்சியபுராணமுரைத்தயனிரவுபோய்மகிழ
வுதையமாமுகம்வந்திடவயமொழியஷுவாவுமின்கரந்தனவம்மா. 21

அயனிரவொழியவவாந்திரத்தெய்துபிரளையமகன்றிடவவனி
துயரறவிரவிதோன்றிடநாவாய்மறைந்திடத்தலங்கியமனுத்தா
னயமொழிகரிதேரினர்தமர்சூழவளியுடனுலகினையாண்டான்
புயலெனவயங்குமுருவுடையரியைப்போற்றுசெய்நாவினனுகி. 22

விரைபுரைமலரோனங்கவேதத்தைப்பறித்தகல்வீரயினெய்துஞ்
சுரர்கள்சத்துருவாமதுகையிடவர்கடஞ்சிரந்துணித்துயர்மீனாய்
விரைவினிலெழுந்துசதுமுகக்கடவுள்வினையறமறையினையுதவி [தான்.
யரிகிவர்பதத்தினடைந்தனனெனுஞ்சொல் யாழ்முனிமலர்மகட்கறைந்

மச்சப்படலம் - முற்றிற்று.

ஆகூ திருவிருத்தம் - 1235.

---

## 13-வது, கூர்மப் படலம்.

---

தந்தைதாய்ப்பிராதாபதிசுதகடுணையலவென்பதோர்தன்மை
யந்தகன்வெருவவருமிரணியன்கைகெசிகம்பத்துடையரக்கன்
சந்திரகுலத்துத்தருமனோடிளைஞர்தயையில்கஞ்சமனிடத்துணர்ந்து [ர்.
சுந்தரவரீயேயுயர்பதங்கொடுக்குந் துணைவனென்றறிந்துய்மின்தொண்ட

பொருப்பிணைகிலார்கலவியாடகம்வாழ் புவியிந்தமூன் றின்மேற்றினமும்
விருப்பமுற்றென் றமிருப்பவன்போலவ் வியம்விளைத் துலகினிவ்வாக்கை
மரிப்பதும்யானுன் னுடனிசோதத்தி னு றவதுநிச்சயமனனே
பரிப்பவன் சாயிற்சுமடுவீழ்ந்திடுமென் றறிந்துநற்பரமனைப்பகர்தி. 2

வகுலியாய்வைச்சுதன் றனைக்காத்துவருமதுகைடவரைத்தான் [கேட்டே
மிகமுனிந்திமைப்பின் வதைத்தமால்புகழை விதர்ப்பர்கோனருள்மகள்
யகமலிசளிப்போடரிபினரியற் றஞ்செயலினையழைமுனியெனநற்
ககபதித்துவசன்கமடமாயெழுந்தகதையைநீகேளெனவறைவான். 3

தரையினிலனேகயுகந்தவமியற்றிச்சமனில்வித்தியாதரர்கன்னி
பரமனற்றிருமார்பழகுறவிளங்குபங்கயச்செல்வியைவணங்கி
சரியிலேழிசைகொள்கீதமாண்டறையத்தமனியவுருத்திருவழங்கத்
தெரியலையளியோளிடத்திடவவளுஞ் சிறந்தயாழ்பிணித்துளமகிழ்ந்தாள்.

திருவிடைகொடுப்பத்தெரியல்யாழிலங்கச்சேர்த்தவள்சேணிடைவரலு
மருவமர்மலரோனிகர்துருவாசன்வனப்புறங்கன்னியைநோக்கி
யரியற்றவஞ்செய்தரியுரத்தமர்ந்தவணங்குனக்கருளியவலங்கற்
றருகுதியெனவேவணங்கலும்வனிதைதவனுக்கவ்விலம்பகமீய்ந்தான். 5

உலகயின் றமிழ்ந்துபடைத்தளித்தழிக்குமொருவன்மார்பழகுறவிலங்கு
மலருறையணங்குகுழலிடையொளிருமஞ்சரியான்செய்மாதவத்தால்
நலனுறவளிக்கப்பெற்றனனதனைநாறவகொடுத்தனனென் று
கலனணிவனிதையேகமாமுனிவன்களித்துவிண்ணவர்பதிசேர்ந்தான். 6

திருவணியலங்கல்கரத்திடையிலங்கத்திகழமராபதிமறுகின்
வருமுனிவலாரிவரைநிகரயிராபதக்கரிவெரினின்மாம்திபோற்
றரளவெண்கவிகைகவித்திடநீலத்தடவரைமீதுபாற்கடலிற்
றிரைதவழ்சிவணச்சிறந்தசாமரைகள்குறைத்திடச்செல்வதுகண்டான்.

மைமுகில்மிசையினெழுகதிரெனவேவயங்கியமணிமுடிதிகளக்
கைமிசையுறநற்கலனிளவெயில்கள்பரந்தபோற்கவினு றவதிதி
செம்மல்வந்துறத்தந்துமியுடனிடக்கைதிமிலைசச்சரிகடற்றிறையின்
மும்மடிதழக்கும்வளைசினங்காளமுழங்கியவொலிகடிக்குறவே. 8

இரவியர்விடையரிபுக்கள்சாரணர்களிமையவர்மித்திரர்வருணர்
மருதரெண்வசுக்களியக்கர்தும்புருநாரதர்தெய்வவயித்தியர்சோமர்
செருடகாந்தருவர்சித்தர்கள்பிதுக்கன்கின்னரர்மறலிகிம்புருடர்
வருணமார்குபேரன்முனிவர்கவெட்டாமுதலினோர்மகிழ்ந்துசேவிப்ப. 9

கானவேழிசைகண்மலிந்திடத்தாளம்கவினுறபணவமார்ப்பரிப்ப
வேனகுவிழியார்நகருநகிலார்விதுநகுவதனியாரிரதத்
தேனகுமொழியாருருப்பசியரம்பைதிலோத்தமைமேனகைமுதலோர்
பூநனிகுழலினசைந்திடச்சிலம்புபுலம்பிடநடம்புரிந்திடவே. 10

இனையவற்புதத்தோடிந்திரனமராபதிநகரிலங்கிடவரலும்
வினையறத்தவஞ்செய்துயர் துருவாசன் விழியிணைகளித்திடநோக்கி
நனிவெறிகமழுமலங்கலையளிக்கநலவமராபதிக்கிறைவ [௧௧.
னினிதமர்செல்வமகிழ்ச்சியாலதனையெண்ணிலான் றரோட்டியால்வாங்

கயிலையங்கிரிபோற்கவினுறுகளிற்றின்கந்தரத்திலம்பகமணியப்
புயல்சொரிந்தெனமும்மதம்பொழிந்துயறம்பூட்கைதன்கரத்தினைநீட்டிச்
செயலுறவெறிகொளலங்கலையெடுத்துப்பதத்தினாற்படிமிசைத்தேய்க்க
மயர்வறுமுனிவனெரியுறநோக்கிவடவனல்பிறந்திடநகைத்தான். 12

திசைவிசும்பெரியச்சிவந்திடுநயனத்தனல்சொரிந்திடத்திகழ்வரைக
ளசைவுறவுயிர்ப்புச்சண்டமாருதம்போலறைந்திடவாசையினிலங்குங்
கசவினமிரியக்கதிர்மதிசுழலக்கடையுநக்கறைமிடற்றரன்போற்
சுசியுறநகைத்துச்சினமுறவதிஞ்சுதவிவைகேளெனமொழிவான். 13

உயர்வறவுயர்ந்தவொருத[illegible]முதல்வனுரத்திடையிலங்கிவீற்றிருக்கு
மயிலணிதெரியல்வித்[illegible]தரக்கன்னிகைபெறவவள்கையின்வாங்கி
யியல்புறவுனக்கின்[illegible]தெனனதனையிறைஞ்சிடாதிகழ்ச்சிசெய்திடுநீ
துயருறவிபவமணி[illegible]ருமுதலாயுததிகொள்கெனச்சொலிச்சபித்தான். 14

எரியுறுநயனமுனிசினத்துடனேயியம்பியசாபத்தாலுவரி
பரவியங்கைந்துதருநவநிதிகள்முதலெலாங்காந்துபாறிடலுஞ்
சுரரிறைவெருவித்துனியொடுவிபுதர்தொகுதியோடருந்தவரெய்த
விரணியவரையின்சிமிளியினிருக்குமயனுடனிவைபகர்ந்தனனால். 15

வினையறுமுனிவனுரைத்தசாபத்தால்விபவமோடுலப்பிலாதிழந்து
துனியுறுமதிதிசுதனிவைமொழியத்தூயமாமலருளோன்கேளாத்
தனிமுதலாகியுலகெலாம்படைத்ததயாளுவாந்தத்துவமூர்த்தி
பணிகெடவிரவிவருவபோற்றோன்றிற்பவமறவிடர்கெடுமென்றான். 16

இவையெலாமுரைத்ததிசைமுகன்பினாகியிமையவர்பதிமுதலிலோகா
பவமறவுயரும்பயோததியெய்திப்பரமனைத்துவதெசாக்கரத்தால்
நவையறமநத்தைவிளக்கிமெய்யாகநலனுறத்தவஞ்செயுங்காலை
யவிர்திசையண்டநிறைந்திடக்கலுழன்புயமிசையச்சுதன்வந்தான். 17

மணிமுடிதிகிரிவலம்புரிசார்ங்கங்வாள்கதைவனப்புறுமெய்யி
னணியுரனமருந்திருவெழில்முதலாமவிரணந்தங்கதிர்காட்டப்
பிணியறுமுனிவர்விபுதர்களிலங்கும்பிரபையாலரியுருக்காணார்
பணியணிமுதலும்பங்கயத்தவனும்பரமனையறிந்திறைஞ்சினரால். 18

அரனொடுவிபுதரரியுருவறிந்து தொழுதிடவருந்தவருடனுஞ், சுரரி
றைமுதலோர்துனிகெடவணங்கித் துதித்துத்தம்மிடரெலாம்பகரப், ப
ரநவர்தமைநீயஞ்சலென்றருளிப் பரவைகைக்கடைந்தமுதளிப்பன், வெ
ருவன்மினவுணர்தமையுமக்குறவாய் விரும்புமினென்றுரைபகர்வான்.
19

பிறையெயிற்றரவஞ்சிகரியோடமரும்பெட்டியைத்திறந்துய்யவேண்டி
மறவிலொண்மணிசேர்படத்தின்மேலந்தவிரும்பனையெந்தவன்கருப்பை
நெறியுறவெயிற்றூற்கடிக்கவவ்வகிதானிங்கியவ்வெலியினைவதைத்த
செறுனரைக்கருமமுறச்சுமந்தியற்றுத்தெறுக்கலாம்பினரவர்நிய. 20

ஆதலாலசுரருமக்குறவாகவிபற்றியாண்டவரொடுமேகிப்
பூதலமிசையினுயருமந்தரத்தைப்பயவலியாற்கொணர்ந்துததி
ம்தினினிறவும்யானுமவ்விடத்தினேருவன்வெருவன்மினெனுஞ்சொ
லோதியெண்கணனொடமரர்கடுகிப்பவுயர்திருவனந்தன்மேலுற்றான்.

அரியிவையருளிமறைதனும்வலாரியயனரனருந்தவருடனற்
சுரர்திதிசுதரையடைந்துநீரமக்குத்துணைவராய்வாரியைக்கடைந்தா
லரியநல்லமிர்தம்பிறந்திடுமெதனையருந்திநாமிறப்பிலாதிருப்போ
முரையுறுங்கருத்தென்றியம்பிடவசுரருவந்துதேவர்க்கிதமானார். 22

மாவலியுடனுந்தயித்தியர்சகாவாயவருதலும்வலாரியோடமர
ராவலிற்கடுகியடைந்துமந்தரத்தையடைந்துதம்புயத்திடையமைத்தே
யோவுதலிலாமற்கொணர்ந்திடச்சுமக்குமுரனறக்கால்கரமொடிந்தாண்
டாவிபோயனேகர்விழவரைவிழலுமரற்றிநொந்தபையமிட்டனரால். 23

சுரரொடுமசுரர்வெருவிநின்றரற்றியபயமென்றிடவுயர்சோதி
கருடவாகனனுயவர்முனிற்றோன்றிக்கனவரைவிழமடிந்தவரை
யருளினாலெழுப்பியகன்றமந்தரத்தையருணன்பினோன்புயத்தழுத்தி
விரைவினிற்பயமார்பரவையினுயரநிறுவினன்விபுதர்கள்போற்ற. 24

வாசுகியுடலைப்பாசமாய்க்கனத்தமந்தரவரையினைச்சிமிழ்த்தே
யாசறிருமாலமரர்களுடனவ்வரவினின்வாலினைப்பிடிக்க
மாசுறுமசுரர்பணிமுகம்பற்றவலத்திலெல்லோர்களுங்கடைய
வேசகல்பிறங்கனழுவமற்றதனையேந்துவாரிலாமலுள்விழுந்த. 25

உயருமந்தரங்கீழுததியில்விழலுமும்பர்களுடன்புருகூதன்
றுயருறவவர்க்கவ்விடரினையகற்றச்சுந்தரனவருடனமர்ந்து
மியல்புடைக்கமடமாகித்தன்வெரினினிலங்கியவோங்கலானெழுநீள்
கயலுடையுவரியழுவத்துளெய்திக்கவினுறத்தாங்கினனன்றே. 26

நியுதயோசனைநீண்டகன்றிடும்வரையைநிகரிலாக்கச்சபமாகி, யுயரு
ம்வென்னிடையிற்றாங்கியசெயலையும்பர்களறிகிலர்பிறங்கல், மயர்வறத்
தானேயெழுந்ததென்றுளத்தின்மகிழ்ந்தவர்வலனுடன்கடைய, வியல்பு
டைக்கமடம்வெரினிடைத்தினவங்கொழிந்ததிலதனிலையெளிதோ. 27

வாசுகியரூமலதனுடலிடையின்வலனுறுசத்தியைநிறுத்தி
யாசகல்வரைமேற்கிளர்ந்திடாவண்ணமங்கையாலதனுச்சியமைக்கத்
தேசுறும்விபுதர்தயித்தியருடனுந்திரண்டிருபக்கமுங்கடைய
மாசுணமுகத்தினுகாந்தவக்கினிபோலெழுந்ததுவரும்புகையுடன்றீ. 28

அரவிருநோக்கத்திடைவிடுமூச்சுமழலும்வெம்புகையுமாயடர
வரைசிகரசுரருடல்பொறியுகத்தாம்வருந்தினர்விபுதர்கள்வருந்தா
தரிபொழிமழையாய்க்கந்தவாகனனாயவர்மெயினயர்வினையொழித்தான்
கயலுறமுவரிகடையவுமமிர்தங்காண்கிலார்கடைந்தவர்சலித்தார். 29

சுரரொடுமசுரர்சுழலுமந்தரத்தைக்கடைந்துதங்கரவுரந்துலைய
வரியவர்மெலிவையறிந்துநீர்கடைதலொழிமினென்றவர்களைநிறுத்திச்
சரியில்சக்கரத்தோன்றன்னெழிறகரங்களாயிரங்கொடுசெலதியின்கண்
வரைசுழன்றிடத்தான்வலனுறக்கடைந்தான்வானவர்தானவர்மருள. 30

நெடியனகரங்களாயிரங்கொண்டுநிகரிலாமந்தரஞ்சுழலக்
கடையுமுக்கிரத்தாலுததியிற்றிரியுங்கட்செவிதிமிங்கலமகர
முடல்மறுகிடப்பல்சீவனுமுலையவிவையெலாமோருருவாய
வடவனல்மறுகவெழுந்ததங்காலவிடந்திசைவானமண்மறைய. 31

கடையுகச்சுசியிற்றசமடங்காகிக்கருமையாயெழுந்தெரிகொளுவிப்
படிதிசைவானமயர்ந்துவந்திடநற்பரமனைமூடியதென்றே
யுடனடுங்கசுரர்சுரரொடும்வெருவியோடிவெண்கயிலையினெய்திக்
கடிகமழ்கொன்றைச்சடையனைவணங்கிக்காவெனக்கபயமென்றனரால்.32

அரியயனரனாய்ப்படைத்தளித்தழிக்குமாதியஞ்சோதியாமமலா, தி
ரிபுரமெரித்தெம்மிடரினைக்களைந்தசிவசிவவந்தகாந்தகனே, யெரியெழுந்
துலகமேழையும்விழுங்க வெதிர்ந்திடுமாலமிவ்விடத்திற், சரணமுன்றா
ளெம்மிடர்கெடுத்தாளென்றுரைத்திடச்சங்கரன்மொழிவான். 33

இரைதிரைக்கடலிலெழுந்திடுமாலமிவ்விடத்தெய்தியதென்று
வெருவன்மினென்றங்கருளியுத்தமியாய்விளங்கியவுமையுடனுறைவான்
பரவுபகாரமாகவவ்விடத்தைப்பாரணைபண்ணினாற்சரியி
லரிதிருவுளத்துக்குவப்பதாமதனாலரிவைநீயஞ்சலையென்றான். 34

படிதிசைககனமுதலெரிந்திடவான்பரந்துவந்தெதிருமாவிடத்தைக்
கொடியிடைபாகனுலகெலாமுவப்பக்கோமளவங்கையினேற்பக்
கடுகுபோலாலந்திரண்டமர்ந்திடலுங்கடிதினில்விழுங்கிடக்கண்டத்
திடையினிலமரவெழிலுறுகாளகண்டனாம்பெயரிறையானான். 35

அந்தரந்திசைபாரடங்கலுமெரித்தங்கடர்ந்திடுமாலகாலத்தைக்
கந்தரந்தரித்தவிறைவனைக்கண்டேகளிப்புறுமமரரோடவுணர்
துந்துமிமுழங்கத்தருமலர்பொழிந்துதுதித்துநின்றாடினர்பாடி
யெந்தைநீயெமைக்காத்தருளுமீசனுநீயென்றடியிறைஞ்சியேத்தினரால்.

கயிலையங்கிரிமேற்கவினுறவுமையோடமர்ந்தகங்காதரன்றன்னைத்
துபரறவிபுதர்வலாரியோடவுணர்துதித்திடவரன்விடைகொடுப்பக்
கயலுடைக்கடலின்மந்தரஞ்சுழலவாயிரங்கரத்தினாற்கடையும்
புயல்வணத்தரிபாலசுரர்புத்தேளிர்புரந்தரன்புகன்றிறைஞ்சினரால். 37

மீயுயர்வரையைக்கமடமாய்த்தாங்கிமீதலைகிளர்ந்திடாதமுக்கித்
தியுமிழரவமுடலருவண்ணஞ்சிறந்ததன்சத்தியைமிறுவி
யாயிரங்கரத்தாலமிர்தம்வந்தெழவேகடைந்தனனாதியாம்பரம
னேய்விலாதொலிக்குமுததியினுச்சைச்சிரமெனும்பரியுதித்ததுவே. 38

நிகரிலாப்பரியைப்பரமன்மாவலிக்குக்கொடுத்திடநிறைந்திடும்படிகப்
புகரிபந்தெய்வமடந்தையரிலங்கும்பாரிசாதம்மவண்பொலிய
மகபதிக்களிக்கவளப்பிலர்துயருஞ்சவுந்தரியம்மெயின்மனனப்
புகல்வதற்கரியதமனியக்கொழுந்துபொலிவபோற்றிருவவதரித்தாள். 39

கனகமெய்யிலங்கக்கவினெலாஞ்சிறப்பக்கடலிடையுதையமாந்திருவை
முனிவர்கள்விபுதர்தயித்தியாநோக்கிவிரகவேதனையின்மூர்ச்சித்தார்
துனியகன்றிடவேவலாரியிந்திரைக்குச்சொன்னபீடத்தினையிட்டான்
வினையகன்றிடவப்பயோததியருளுமெல்லியல்வீற்றிருந்தனளால். 40

திரிபதைமுதலாஞ்சிறந்திடுநதிகடிகழ்ந்திடுமரிவையருருவா
யிரணியவருணக்குடத்தினிலயத்தையேந்தியங்கீந்திடவெட்டுக்
கரியவர்கரத்திற்கனககும்பங்கள்கடிதினில்வாங்கினர்கோக்கள்
பரிவுடனுதவபஞ்சகவ்வியமெய்ப்படியநீராட்டியவன்றே. 41

அவனிமாதளியாலங்கராகத்தோடிமவயங்கலந்தசந்தளிப்ப
வுவமையின்மலர்கள்வசந்தனங்குதவவுததிவெண்ணேத்திரமிரண்டு
கவினுறக்கொடுப்பவிபுதர்கட்கரசன்விசித்திரக்கலனெலாந்தரவே
நவமணியினங்களிலங்குகுண்டலங்களுகர்களீந்தனரன்றே. 42

சரியிலாத்தரளவடஞ்சரசுவதிதந்திடத்திருவிவையெல்லாம்
பரிவுடனணிந்துமகிழ்ந்திடும்வேலைப்பரவைமன்செயந்தியென்றுரைக்கு
மரியுறுமலங்கல்கொடுத்திடவதனையங்கையின்வாங்கியுண்மகிழக்
கருடகாந்தருவர்கின்னரர்கீதங்கிளர்ந்திடப்பாடியாடினரால். 43

வேதபாரகர்நற்சுருதியைவிளம்பித்துதிசெயமேகங்களெழுந்து
மோதுதுந்துமியானகமிருதங்கம்பணவங்கோமுகஞ்சங்குமுரச
மோதையார்கலிபோனிறைந்திடமுனிவரோதியமுகுர்த்தத்திற்கவினார்
பாதமீச்சிலம்புபுலம்பிடநடந்துபதியினைநாடினடிருவே. 44

இருடிகளிடத்திற்றவமுளவெனினுஞ்சபித்திடாதொழிகிலரிணையில்
சுரர்குருவிடத்தும்பார்க்கவனிடத்துந்தூயமாஞானமுண்டெனினும்
விரிவுறுகாமம்விடுகிலர்வலாரிக்குயர்விபவங்களுண்டெனினும்
பெருமையுற்றிடத்தன்வலனிலையெனுஞ்சொற்பேசியங்கேகினளம்மா.

சீருறுபிரமாதிகளிடத்துயரும்பெருமையுண்டென்னினுஞ்சிறந்த
நாரிமேற்காமம்விடுகிலார்பாரினலமுறுசிபிமுதனிருபர்க்
கேருறுதானமுளதெனிலவர்க்காயிசுவிலைகசத்தவீரியற்கும்
வீரமுண்டெனினுங்கமையிலையென்றுவிளம்பியேயேகினளம்மா. 46

தவமுறுசனகசனகனுதியர்க்குத்தாழ்விலாவாயுசுண்டெனினு
மூவமையற்றிருக்குநலனிலர்மார்க்கண்டயனென்றுமுளனெனினவியும்
நவையுறநிறையிந்திரியங்கிரகமிலையிந்தநற்குணமெல்லாஞ்
சிவனுளனெனினுமங்களன்மசானப்படையுடன்றிரிவனென்றகன்றாள்.

சிவன்முதலாகவெவரையுமெள்கிச்சென்றிடும்பங்கயச்செல்வி
யுவமையில்சகலகுணமுடைத்தாகியுயரரியிவனென்றேயவன்றன்
கவினுறுமார்பத்திலங்கிடச்செயந்தியலங்கலைக்கரத்தினுற்சாத்தித்
தவர்களெட்டாதபதத்தினின்றிறைஞ்சித்துதித்தனடனைகிலாதாள்.

திருவுயரரியைச்சேர்ந்துளமகிழச்சிறந்தநற்றுந்துமியடக்கை
வரிவளைதிமிலைமத்தளஞ்சின்னம்வாரியினெலியினுமுழங்கச்
சுரரயன்வலாரிமுனிவர்கள்முதலாய்மலர்மழைசொரிந்துநின்றாடித்
தெரிவையர்திலகத்திலோத்தமைமுதலோர்சிறந்ததீபங்களேந்தினரால்.

வாரியின்வயங்குதமனியக்கொம்புமலர்ந்தபோலெழிலுறத்தெய்வ
நாரியர்தமக்குத்திலதமாயெழுந்தநங்கைதன்புயத்தினிலணியுஞ்
சீருறுஞ்செயந்திமாலையின்வெறியார்மகரந்தம்பெருகத்தேன்மொய்ப்ப
வேருறுமுரத்தையரியளித்திடலுமிலங்கவீற்றிருந்தனடிருவே. 50

உயர்பயோததியின்மலர்மகளுதையமாகியபின்னரினெுப்பில்
செயலுறமிளிர்வாருணியெனுங்கன்னிதிகழ்வுடன்வருதலுமவளை
யியல்புறமசுரற்கீய்ந்திடப்பினரினீருருபுயத்துடனிலங்குந்
தயையுடையவனுயமிர்தமார்கலசமேந்தித்தன்மந்திரியுதித்தான். 51

ஆயுருவேதந்தனக்குயர்தெய்வமாகிமாமுகுந்தனுருருவாய்த்
தூய்தவனெழலுமவன்கையினமிர்தம்துலங்கியபொற்கலசத்தை
யேயெனுமுனரினமரர்கள்வாங்கியசுரரிதனைக்கவராமல்
மாயவகாத்தியெனவவனடியின்வணங்கியேசரணடைந்தனரால். 52

சுரர்பயமெய்திச்சரணமென்றடையச்சோதியுமக்கிந்தச்சுதையைத்
தருகுவன்றரையின்மிசைவயுமெனுஞ்சொற்சாற்றிடவமிர்தமார்கலசம்
விரைவினிலவனிமீதினின்வைப்பவிளையுறமசுரராங்காரம்
வரவலியதனுலதுதனையெடுப்பமாயவனகைத்திவைசெய்தான். 53

சுரர்களுக்கமுதமளித்தவரிடரைத்துணித்திடச்சோதியாம்பரம
னரிவையர்திலதமானமோகினியாயளியுறமலர்குழலிலங்க
விருவிலைவளைத்தங்கெயுமிளிர்விசிகமிதுவென்றுதல்விழிவயங்கத்
தரளமொத்திலங்குதசனமும்வலாரிகோபமாமதரமுந்தயங்க. 54

இந்துவைப்பிளவுசெய்துவைத்தனபோலிலங்கியவளிகமேருநற்
சுந்தரத்திலகந்துலங்கிடமணியார்தோடுசோத்திரத்திடைவயங்கச்
சந்திரனெழிலைப்பழித்திவெதனந்தயங்கப்பொற்குமிழ்த்துண்டஞ்சிறப்ப
நந்தினைநகுகந்தரத்தினன்கதிரைநகுகலனவிர்ந்லிந்திடவே. 55

வேயினைப்பழித்துவிளங்கியதோளின்மிளிர்மணித்தொடிகைவில்வீசத்
தூயபொற்கைகளழகினைப்பழித்துத்துலங்கியகரத்தினிற்சுடர்கள்
பாயுநன்மணிகள்மலிந்திடவிலங்கும்பசும்பொனின்கடையங்கணிறையத்
தேயுநுண்ணிடையிற்சிறந்தபொற்கலிங்கமெழிலுறமேகலைதிகழ. 56

சிருறுமமிர்தநிறைந்தபொற்கலசமூபையமாய்ச்சிறந்திடல்சிவண
வாரமாவடங்களழகுறவணியினவிருறக்கலவைகள்கமழ
வேருறப்பணைத்துக்கதித்துறநெருங்கியிருமுலைகறுத்திறுமாந்து
வாரினைமுனிந்துகெறுவிதமாகிவளர்ந்திடும்பயோதரம்வயங்க. 57

வடவிலைமிசையிற்கருமைசேருறவியொழுங்குறவயங்கியசிவண
விடவிழியணங்கின்வயிற்றிடையுரோமம்விளங்குகூதாளியின்சுழியை
யடர்திருநாபியழகுறவுருவிலந்தரம்போன்றிடைதுவளக்
கடியுறுகமலமலரெனத்திகழுங்காலிணையிலங்கியதன்றே. 58

பரிபுரமறற்றச்சதங்கைகள்கொஞ்சப்பரிமளமேனிமேற்கமழச்
சரிவளைகரத்திற்கறங்கிடத்தொடிகைதயங்கிடக்கந்தரமிலங்க
விருதனம்வயங்கவவிர்கொணித்திலத்தாவடமசைந்திடவிருவிழிகள்
பரவியவசுரருயிரினைப்பருகப்பசும்பொனின்கொம்பெனவடைந்தாள்.

கடைவிழிநோக்கமெழிலுறுகோடிகந்தர்ப்பருயிரினைக்கவற்றப்
படர்நிலவளித்தவிளநகைமுனிவரறிவுறுஞானத்தைப்பறிக்கக்
குடமெனவயங்குந்தனமியோகிகட்குவிரகவேதனையினைக்கொடுப்பத்
துடியிடையழகுதயித்தியர்கருத்தைச்சூறைகொண்டிடநடந்தனளால் 60

மறலுறுமசுரர்மனமெனுங்கலைகள்மன்னிடமருங்கினின்வயங்கத்
தெரிவுறுங்கலையாந்தீபகங்காட்டச்சிறந்துநீண்டகன்றிடுநயனப்
பெருவலைவிசிறியிளநகைக்கயிற்றாற்பிணித்துமாநதியெழுஞ்சுழியின்
பரிசினைப்பழித்தேயிலங்கியவிலஞ்சிப்படுகுழிபடுத்திடவந்தாள். 61

தெரிவையர்முதலாய்விரசமுற்றளையச்சிறந்திடுமோகினிவரலுஞ்
சுரரரியருளாற்றமைப்பயந்தெடுத்துத்துலங்கியவளையெனநோக்க
வரைநிகரசுரருயிருடனறிவுமறிபடமதிமிகக்கலங்கிக்
கரைசெயற்கரியமயலுறவெவருங்கண்ணிமையாதுபார்த்துரைப்பார். 62

ஆலமோகனமாமோகசனமாம்பலோவதரம்வந்தடருங்,காலனோ
முறவல்சகனமோமருந்தகாமனுக்கரசினைநிறுத்தும், கோலமார்விசை
யத்தம்பமோகொங்கைகூற்றுவன்வரவிடுசுருள்செய், யோலையோகுழை
யின்மணிமிளிர்தோடென்றுருகியேசோர்ந்திவையுரைப்பார். 63

அயனெமநயனங்களிப்புறவிடுத்தவற்புதவமிர்தமோவின்றெம்
முயிர்மனங்கவர்ந்துவந்திடுமின்னுனூறெதுபேரெதுபகர்வா
யயல்நமக்காருமிலையுனையேநாம்நம்பினமிவ்வமிர்தத்தை [ள்.
மியல்புறப்பகிர்ந்தீண்டளிதியோவெனவுமேந்திழைநகைத்திவையுரைப்பா

தெரிவையர்கருத்தைத்திசைமுகன்றனக்குந் தெரியவுமரிதெனவுரைப்
புருடர்நீரெனைநம்பினமெனுமுரையைப்புகலுவீரெனவிசந்தேத்தி[பார்
வரைவினிலவர்கைச்சுதைநிறைகலசமிளிர்வளைக்கரத்தினால்வாங்கிச்[ல்.
சுரரொடுமுமக்கிவ்வமுதினைப்பகிர்வ னென்றபின்சொல்லலுற்றனளா

இயானுமக்கினியென் னுமக்கியான்பகிருஞ்சுதையினையெப்படியிடினும்
நியாயமாய்க்கருதியிருத்திரோவெனுஞ்சொ னிகழ்த்திடவெமதுயிர்நீயுன்
கையாலுமுன்மனதின்படியினேப்பயிடினு நலனெனக்கருதுவமெனவே
தயாளுவாய்ச்சுரர்தமிடர்கெடவெழுந்த தையனல்லாளிவையுரைப்பாள்.

நீரயத்திடையிற்படிந்துபவாசநெறியுடனிருந்துநாளைக்கு
வாருமென்றுரைக்கவவர்களுமகிழ்ந்துவனிதைதன்சொற்படியேகி
நீரிடைமூழ்கிப்பசியுடனிருந்துநிகரிலாச்சுதைபொசித்திடத்தா
மார்வமோடெலோருமறுதினம்வரலுமமரரும்வணங்கிவந்தடைந்தார். 67

விரிவதாய்விவந்துதமநியம்நிரையவிளங்கியமண்டபமிசையின்
சரியிலாவலங்கரயங்கிடத் தூபதீபமும்நிறைந்தவண்சாரச்
சுரரொடுமசுரர்குசைகளாசனமாய்த்துலங்கிடவதன்மிசையாகக்
கசமிசையமிர்தகலசமங்கிலங்கக்கவினுறமோகினிவந்தாள். 68

வருமவளெழிலைநோக்கியுண்மகிழ்ந்துவரைநிகரசுரர்களுரைப்பா
ரரிவைநீயாயவடைவினிங்குதவென்றறைந்திடவவளுந்தன்மனத்திற்
றுரிதராமிவர்க்கொன்றிடாமலேநெறிசால்சுரர்களுக்களிப்பதுநலனென்
றுரைசெயாதுன்னியவுணர்கள்விரகமுறநகைத்துரைக்கலுற்றனளால்.

வெற்பெனும்புயத்தினவுணரைநோக்கிமிடலுடையவர்கணீர்தேவர்
துற்பலரவருக்கியான்முனரற்பச்சுதையினையளித்ததற்பின்னர்
பொற்புறுகலசமிகுதியையுமக்கீண்டிடுவெனென்றிதவுரைபுகன்றே
யற்புதத்தணங்குவிபுதர்கட்கன்பாலமிர்தெலாமளித்தனண்மாதோ. 70

அலையுநற்குழலாளளிகசிந்துரத்தாலானனவழகினால்வளையுஞ் [டார
சிலைநுதல்நெறிப்பாற்கடைக்கணினோக்காற் சிறந்தசோத்திரத்தலைதொ
விலவிதளெழிலால்முறுவலாற்கமலமுகைநிகர்நகிலினால்விடையாற்
கலையுடையதனாலசுரரையுருக்கிக்கடிதினிநசுரர்க்கமுதளித்தாள். 71

விதுநலவிரவியிவர்சனுப்பணினோர்மிடலுடையசுரன்வானவனாய்க்
கதுமெனவமிர்தநுகரவாண்டமரக்கண்டரியாழியாற்றுணிக்க
விதிவழிச்செயலால்ராகுவுங்கேதுவாகியுங்கிரகத்தின்விளங்கச் [ருள்.
சுதையெலாமமரர்க்களித்தவள்கலசந் துடைத்தந்தோவமிர்தமில்லென்

சுரர்களுக்கமுதமுதவியேகலசந்துடைத்திலைசுதையெனவவுணர்க்
குரைசெய்தாண்டவரைநகையினாலுருக்கியுவணமேற்பெண்ணுருவொழி
யரிபயோததியினடைந்திடவசுரரமரர்மேற்சினங்கனன்றுகாந்த [ந்தே
வெரியெழுநயனரிரதமாதுரகமிபமெணிலெழவெதிர்ந்தனரால். 73

சேவலோனெனவெஞ்சினத்துயர்மயனுற்செய்தவைகாயசவிமான
மாவலியமர்ந்துகொடிகுடைவயங்கமருங்கினிற்சாமரைபுரள
வேவொருதனுவும்விளங்கிடவெண்ணில்பலபடையிலங்கியேதோன்ற
நாவலோர்துதிப்பவவுணர்களார்ப்பவிமையவர்நடுங்கிடவந்தான். 74

சம்பரன்வாணன்விப்பிரசித்திசகுனிதாரகன்கயக்கிரீபன்
செம்பனுற்கரன்றீநிசர்பகன்சங்குசிராவயோமுகன்பவவிமூர்த்தன்
றும்பனிலவான்மாத்துந்துமிநிசும்பன்றன்மருடன்குரோதவன்சீ
ரம்பரநடுங்கவருமயன்கபிலனட்டன்சந்தாபன்சக்கிரனே. 75

வலன்புலோமாநாகாசுரன்சிரும்பன்வச்சிரத்தெயிற்றவனமுசி
நலனிலாமயிடாசுரனுயரரிட்டனேமிமாகாளியனுபன்
கொலைபயிலிரவவுலோமன்மாவுசனன்கூற்றுவனஞ்சிமிராகு
கலனணிவிவாதகவசனேடிலங்குகாலகேயனுமடைந்தனரால். 76

எதிரேபோர்ந்தக்கெழுபிரகேதியெதிரிலாச்சுமாலிமாதவர்கள்
பீதிகொண்டரற்றவடர்ந்திமொலிபெருவரைபொடிபடக்கதையால்
மோதியேமுனிவிலிருடபருவாத்நீமுடுகிடவிழித்துலகினுக்குத்
தீதுறப்பருவிற்கொடுதிகழ்காலநேமியோடனைவருஞ்சென்றார். 77

கரிபரியிரதங்கார்வயப்போத்துக்கடகமார்விருகமாற்சால
மிருணிகோமாயுக்கோடரநகுலமெஃகினங்குடாவடியிரலை
யருணமூடிகஞ்சிக்குரோடம்வெஞ்சரபமமெயிடஞ்சசஞ்சாக
மெரியுறநயனக்குயவரிசிரல்வாயசமும்வாகனங்களாயெதிர்ந்தார். 78

சல்லியம்வாமியுட்டிகன்சூரன்றந்தசூசன்வருசிகிரி
யொல்லையினடைந்தங்குயருங்கோலாகூலத்துடன்முசலிகைதெறுக்கால்
வல்லையினசுரரிவைமிசையமர்ந்துவாளயில்வேல்குந்தம்விசிறிச்
செல்லினந்தீயவெரியெழவிழித்துச்சென்றனராசுகஞ்சொரிந்தே. 79

தோலடிகரடம்வயவனற்கபோதஞ்சுவாகதஞ்சிவல்சில்லைகம்புள்
வாலொளிர்சரணுயுதஞ்சிகிகுடிஞைவருகருநங்கந்கங்கழுகு
மேலினிற்சிலவரமர்ந்திடமகரந்திமிங்கலம்விளங்கியவிடங்கர்
காலுடைக்குளிரமிவைகள்வாகனமாய்க்கடிதுவந்தார்த்தனரன்றே. 80

துந்துமியிடக்கைபடலிகைதக்கைதுடிகைசச்சரிபம்பைபணவ
நந்துயர்திமிலைகரடிகைமுரசுநவையறுகம்பலிகமுவை
சிந்துவினொலியுந்தியங்கிடமுழங்கச்சின்னங்காகளமெலாமார்ப்ப
வந்தகனடுங்கவரக்கரோடவுணரடர்ந்தனர்திசையெலாமெரிய. 81

நிருதரோடவுணர்பரிகரிமிருகநிறைந்திடும்பறவைகள்மகர
மெரிவிழியிடங்கர்திமிங்கலவிரதமிலங்கிடவெதிர்ந்திடமுனிந்து
சுரரிறையயிராபதத்தெருத்ததனிற்றலங்கியகொடிகுடைதயங்க
விரிகதிர்மௌலிவிளங்கிடவுபர்சாமரைபெய்துமவீசிடவந்தான். 82

வேறு.

இரவியர்பிதுக்கள்கங்குலினரிபுவிசுவதேவர்
வருணனெண்விசுவகன்மாவசுக்கள்வாதாவிகாமன்
குருசனிவிடையர்தெய்வவயித்தியன்குபேரன்றேயு
மருதர்மித்திரனிலேகர்வியாவசுதுவட்டாவாயு. 83

பத்திரகாளிசாத்தாப்பகரரிபராசீதன்மாச்
சத்தமாதாக்களாகுஞ்சரியிலர்மங்கைபங்கர்க்
கொத்தவிருடாக்கபியோடொப்பிலாவீரரெல்லா
மத்திமாக்கரங்கள்வெய்யமிருகமீதேறியார்த்தார். 84

சங்குகாகளங்கள்சின்னஞ்சச்சரியிடக்கைதக்கை
சிங்கலிலுருமைகோடிதிமிலைமாமுரசுபாண்டில்
மங்குலபோலதிர்க்கும்பேரிகும்பிகைதுடிகைவாரி
பொங்கியங்கெழுந்தவோசைபோலவார்ப்பரித்ததன்றே. 85

வேறு

அடல்முடுகிவீரரானதெவர்களமரர்பதியோடுமானைதேர்பரி
மிடையவரலொடுமொறில்மாவலிமிகமுனியமீளியேறுதானவர்
கடகரிகளேனமாகும்வாசிகள்கடவிநெடுவொளிசோனையாமென
முடுகியியல்வேல்கள்வாள்கள்மாகதைமுகிலிரியவீசினார்கள்கூடியெ.

விழிகள்கனல்வீறநீறுபூசியவிமலனெனவேதுநேரிலாதெழு
பழுதில்விடைமீதிலேறிவான்வருபவர்களழல்மேவும்வாளிதூவிட
வெழிலிகரியாகிவீழவேயெதிரிமையவர்கடோளமார்புதாளற
வுழுவையினம்வேகமாகிமேல்வரவுழலுமுழைபோலவாடியோடினார். 87

அசுரர்திரள்கூடியோடுமாசுகமனல்பரவவேவிவாள்கள்வேலுகள்
விசைகளுறவீசிவாசிமாகரிவிடைகள்சிகிகரடநீடுமூடிகம்
முசுவழுவைமீளியாளிபாடலமுதுகுதுடைகால்கள்வீழவானுயர்
பிசிதமலைபோலநீளவேகறைபெருகுநதிபோலமேவுமோடியே. 88

அரியுழுவையேனமானையாவிகமருணமிசையேறிவீறுதானவர்
சொரிகணைகள்சூரராகிமேல்வருஞ்சுரர்கடலைதோள்கடாள்கள்மார்புகள்
கரிகளுடல்வாசிநாசிவாமமெய்கடிதினறவோடவோடிவீழ்கறை
பருகியுயர்பேய்கள்பாடியாடினபணவமொடுபேரியோசைசேரவே. 89

அவுணர்திரள்வாள்கள்வேல்கள்வாளிகளயில்கள்கனல்காலவேவியேயடர்
சிவன்வெருவமூடலோடும்வானமர்தினகரர்கள்காலன்வாயுமாமத
னவையிலறுதேவர்தேர்கள்யானைகள்நகுலமரிமோழல்நீடுமேதிகள்
சிவல்சரபமேறிவீறியேகணைசிதறினர்களாசைதோறுமூடவே. 90

சுரர்கடிரள்கோபமோடுவாளிகள்சொரியவசுரேசர்தோள்கடாளுடைச்
சிரமிருகைமார்புநாசிநாசிவிழிசிதறவுயர்சீயம்யானைபாடல
மிருணிசசமேடம்நீடுகோடரமிரலைவெளில்கூகைகரடமூடிகம்
வரைவிழுவபோலவீழவோடின்வருகரைகள்கூளிமூளைபூசவே. 91

புலவர்திரள்கூடிமூடிநீள்கணைபொழியவசுரேசர்வாகுகாறுடை
தலையறுவர்தேரினுணிசாரதிதலனிறுவதுணியோடும்வார்சிலை
சிலையிறுவவானளாவுநீள்கொடிநெடியகடல்மீதினோமொகல
மலையினமிழ்போழ்தின்வீழுபாய்மரமெனவகலுமாழிரினாழ்வன. 92

கரமறுவர்காலகேயரானவர்கழலிறுவர்காளிகாபன்மாதிரள்
சிரமறுவரேதியோடுகூடினர்செவியறுவர்வாணனானவீரர்க
ளுரமறுவர்சூரரானதானவருடலறுவாமேதியேனமூர்பவ
ரரையறுவர்மீளியாளிமேலினரலகைகளியோடுபோடியாடவே. 93

கடகரிகள்கோடுகொல்கள்வாலொடுகரமறுவதேரினுணியாழிகள்
கொடியறுவவோடும்வாசிநாசிகள்குரமறுவமீளியாளிஞாளிக
டுடையறுவதீயரானவீரர்மெய்துளையுறவதுணியோடுவார்சிலை
கடிதினறவாடியோடிவீழுவர்கடலினிடையோடுசோரிவிழவே. 94

வருணன்மழைபோலவாளிதூவிடவடிவுடையமாரன்வேல்கடாவிட
விரவிமழுநேமிவாள்கடான்விடவியமனயில்காலபாசம்வீசிட
வருசுரர்கள்கோபமொடுவார்சிலைவளையவழல்பாயவோமொகணை
சொரியவசுரேசரானவீரர்கடுயரமுறவாசைதோறுமோடினார். 95

வேறு.

வசையறுவருணன்மயிடமமர்ந்தோன்மதன்வெய்யோன்
விசையுறமமரர்பலர்களுமேவிவிடுமெம்பால்
நிசிசரராசுரர்கரமுடறுணியநிலையற்றுத்
திசைதொறுமுறலின்மாவலிநெஞ்சிற்சினமுற்றான். 96

இரவியினவிர்போலிலகியவைகாயசமென்னுஞ்
சரியில்விமானமிசையினிலேறிச்சலமிக்குச்
சுரரொடுதிசையின்றேவினம்வெருவவுலகுட்க
வருசிலைநாணினொலியுறமழைபோற்சரமெய்தான். 97

வரிசிலைமூன்றாம்பிறையெனவளையவடிவாளி
யெரிபுகையுறவேயிறுதியின்மழைபோலெய்தார்ப்பச்
சுரர்சிரமிருகாறுடையுரமிருகைதுணியுற்றுக்
கரிபரியிருகங்கசமுடலெல்லாங்கடிதிற்ற. 98

கரியுரமொருகைகாலறவரைபோனிலன்வீழப்
பரிகுரமறநீள்படிவிழவிரதந்துகளாக
வரிகரியிருணியமிருகாரியடியற்றுத்
தரையினின்விழவங்குடல்குறைதாவிநடமிட்ட. 99

சிவனெனுமுனிவாமாவலிகையிற்சிலையாலே
யுவணனுமலையவிசைகொளும்வாளியுலகெங்குந்
தவர்பயமுறவேசொரிதலும்விபுதர்சரமற்றங்
கவனியினோடக்கண்டிமெவுணர்திரளார்த்தார். 100

மாவலிசிலையாலேவிடும்வாளிமழைபோலே
மேவிடவமரர்வெருவியுடைந்தநிலைகண்டு
தேவர்தமிறைவன் றிகழ்கரிமிசையிற்சினமிக்கு
மூவுலகதிரமுடுகியெதிர்ந்தான்வளையூதி. 101

வரிசிலைநாணினொலிதிசையுறவேவடிவாளி
கருமுகிலெனவெங்கனலுறவிடலுமசுரேசர்
நிருதர்கடலைகாலுரமரையறவேநிறைசோரி
யிரைகடலுறநீளிபமயமிருசங்ககமற்ற. 102

கடையுகவிறுதிதனிலெழுமுமையாள்கணவன்போல்
வடவரையிவருங்கரிமிசைவரும்வானவர்கோமான்
கடவியகணையாற்கரிபரியறவேயசுரேச
ருடைதலும்வெருவலெனவுயரேதியெதிருற்றான். 103

அந்தகன்வெருவவார்கலியெனவார்த்தெதிரேதி
சிந்தியகணையாற்கரிபரியிரத்ததிரள்மாளத்
தந்தியையிவருமுவரியினிறைவன் றழல்கண்ணன்
முந்தியநிருதன்றேரினைமூடக்கணையெய்தான். 104

இருவருமமரிலிடம்வலம்வருவார்கணைமாரி
சொரிகுவர்வேலுஞ்சூலமும்விட்டேபொரும்வேலை
விரைவினில்வருணனலவன்வாளிவிடலோடு
மிரதம்வில்லறவேபாறினன்வரைபோலெதிரேதி. 105

எதிபின்னிடலுமெரிசினமுறவேபிரகேதி
சோதிசெயிரதமீதுதுலங்கிச்சுரரெல்லாம்
பீதியையுறவான்பெய்முகில்போலப்பிறைவாளி
மாதிரமறையத்தூவியடர்ந்தான்வரைபோல்வான். 106

அத்திரமாரிதூவுமரக்கர்பெருமான்மேல்
மித்திரனெய்திவெஞ்சரம்விட்டேயவன்வில்லு
மத்திரியுறுதேர்தனையுமழிப்பத்தறைமீதிற்
குத்திரநிருதன்றோடினன்விண்ணோர்குழுவார்ப்ப. 107

வேறு.

மீளிபோலெய்தியேவினையுறுநிருதர்கோன்
ஞாளிபோலோடலுங்கண்டுநன்கென்றுவிற்
காளிநாபன்கடுங்கதமுடனெய்திவெவ்
வாளிபெய்தார்த்தனன்வானுளோரஞ்சவே. 108

வந்திடுங்காளிநாபன்விடும்வாளியாற்
சிந்திடும்தேவரைக்கண்டுகெண்டீயெழ
வந்தகன்கதைகொடேயவனுறுந்தேரினை
யுந்தியேபொடிபடுத்திடலுமங்கோடினான். 109

அரியமாயோகந்தனினுடற்றந்தேயரிபதத்தரசன்போயனுசச்
சரியிலாக்கற்பினரிச்சிசுத்தேவிதன்னுடைக்கொழுநனுக்கையினை
எரியினைவளர்த்தியிமைப்பின்மூன்றுனும்விழுந்துயரிமையவரேத்த
மருவமர்துளவமணியுமால்பதத்தின்மகிணனுடெய்தினன்மகிழ்ந்தே. 43

அரியினங்கிசமாய்மலர்மகளவிராய்ப்பிதுமனுமரிச்சிசுதானுந்
தரையினினுயிர்மாய்வேனனைக்சடையச்சார்ந்துநால்வேதசாத்திரங்கள்
விரைகளையுதவிவரைகளையகற்றிமேபெள்ளம்பரம்படித்தே
யரசனுயுலகாண்டியர்பதமடைந்தானனங்குகேளெனமுனிபறைந்தான்.

பிதுச்சக்ரவர்த்திப்படலம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 1612.

---

## 16-வது, இடப்ராசப் படலம்.

---

அரிதிருமகிணன்ரங்கமீதொளிர்வோனச்சுதானந்தகோவிந்தன் [ங்
பரமனுரணன்மால்பரவையைக்கடைந்தோன் பாண்டவர்தூதன்வேயூது
கரியவனிசரில்கச்சியினமர்ந்தோன்கவினுறநிறையுமஞ்சனமா
கிரியினிலுறைவோன்சகசிரப்பெயரோன்கேசவனெனவினைகெடுமே. 1

புடவியைத்திருத்திமறையொடுவிரைகள்புவிமகளருளவேமுயன்று
திடமுடனரசாண்டியர்பதத்தமர்ந்தபிதுவினன்செயலினைக்கேட்டு
வடிவுடைமலர்மான்மகிழ்ந்தரிபினருமியற்றியதருளெனமாறி
விடபனுமுராரிவெழுந்தயைகேளென்றியாழ்முனிதிருவினுக்கியம்பும். 2

துலங்கியபிரியவரதனுமரசனளித்திடச்சிறந்திடுசுதர்க
ளிலங்கியவாக்கினீத்திரனெழில்சாலித்துமசிகுவனெண்ணில்லாக்
கலன்களால்கிரிலிந்திரவாகுகவினுறமிரணியரேதா
கலன்களார்கிருதப்பிருட்டனுண்மேதாதிதிகவில்வீதிகோத்திரனே. 3

எதிரிலாப்பிரியவரதன்றன்சிறுவரிவரெழுவருமெழுதீவுக்
கதிபதியாகியமர்ந்தனரவரோடுதித்திடுமரிவையூர்சச்சு
வதியுசனனுக்குத்தேவியாய்ச்சிறந்தமகடெய்வயானையையின்றுள்
சதிருறமவடான்சோமனன்குலத்தின்யயாதிக்குத்தாரமாயினளால். 4

வேறு.

சுந்தரஞ்சால்பிரியவரதன்னருளும்சுதன்சுரர்கடுதிக்கவோங்கு
மந்தரநேர்புயமுடையோனுக்கினீத்திரன்மறவில்குணத்துமன்னன்
கெந்தமாதனவரையிற்கிளர்காவிலருவிநீர்ச்துறையினெய்திச் [னுல்
சிந்தையினிற்றிசைமுகனைத்தியானித்துக் கணிப்பருநாட்டவஞ்செய்தா

சதுமுகனைத்தன்கருத்தினமைத்தவன்றுன்பலகாலந்தவஞ்செய்நாளிற்
சுதைசுரர்கட்களித்தபிரான்சுதனருளவவனவையிற்றலங்குகின்ற

விதுவதநவயிலைநகுவிலோசனிபூருவசித்தியென்னுமின்னாள்
கதுமெனநற்கந்தமாதனவரையிற்கவினுறவேதோன்றினாளால். 6

பரிபுரம்வண்டிசைபகரப்பாதசாலகம்வயங்குபதம்பார்மேவச்
சரியில்வரான்மிசையலவன்றயங்கிடவேயரம்பையதின்மீதிற்சார
வரவின்மிசையாகாயமுறவதின்மீயிருவரைகளமரச்சங்க
மிருவில்கணைபிறையதின்மேற்புயலுயரவெழுகனகக்கொம்புபோல்வாள்.

மலரளகமாமதியின்வதனமிலங்கிடமுறுவனிலவைமான
விலகுமிருவிலோசனநாளிகங்குமிழிற்றுவியிடக்குயங்கள்மீதிற்
சலநிறையநித்திலத்தாவடமலையக்கரமிசையிற்கடகமின்ன
நலனுறுபொற்றுகிலின்மிசைகாஞ்சியுறவோதிமமுநாணவந்தாள். 8

சிந்துரநல்லளிகமுறத்தெரியலலைந்திடக்காதிற்றோடாட
மந்தரநேர்நகிலின்மணித்தாவடங்கள்புரளமலர்ப்பாதமீதி
னந்தமுறுபரிபுரங்களரற்றிடவேயாடகநற்றூசுமாடக்
கந்துகங்கொண்டனங்கன்மனங்கலங்கிடவேகரமாறியடித்தாள்மாதோ.

கரும்புருவந்தனில்வேடன்கரத்தின்வளைகரும்புறுநாணுறவேமுல்லை
யரும்புவெள்குபல்லிரவினரும்புநிறைசுடரினும்வாலவிரைவீச
விரும்புலவர்மனமரத்தினிரும்பெனவேசிதையவிழிகுழையினூடச் [சை.
சுரும்புமலர்க்குழலாடச் சுரும்பின்மிசைபந்துகொடா டினள்பொற்றோ

சந்தனங்குங்குமநானங்கஸ்தூரிதளவலர்கள்வாசம்வீச [யாற்
விந்தைநிகர்த்தந்தரத்தின்விளங்குதிலோர்த்தமைமுதலோர்வெள்கக்கை
கந்துகங்கொண்டறைந்தெழுமின்கவினைநலவாக்கிநீத்திரமன்கண்டே
சிந்தைமறுகிடவசந்தன்சிலீமுகமெய்நிறைந்திடவேயுரைசெய்வானால். 11

நாரியில்லாவிருசிலையின்குதைசிறகில்வாளிகொடுநாரியாரே
யாரையெய்யவடருகின்றீரரிகுழலின்விரகவிசையறைவதென்னே
மார்பினுறுகலசநிறைதனமுளதோவவைபரிக்கமருங்குகாணேன்
சீரினுறுவாயினுரைசெய்யாமற்சிலம்புசெப்பவருவீர்கூறீர். 12

சிலைகளிரண்டிரண்டெனவேயானனத்துமார்பிடத்துந்திகழ்வதேது
நலனுறுகந்தரம்பிறைபொற்றாமரைக்கீழ்நவையகலவமர்வதென்னே
நிலவைநகுநித்திலங்கள்வாய்தனினுந்தனந்தனினுநிறைவதென்கொல்
கலைமருங்கிற்றோன்றுறவேகலைபலவுங்கண்டுறுவகழறுவீரே. 13

கரமிசையின்வெண்சகுந்தங்கனமிசையெழுந்துநிலன்றவழ்வதென்கொ
லரிகுழலினமராமலுயர்ந்துயர்ந்தேயாழினிசையறைவதேது
பரிபுரங்கள்பதமிசையிற்பலகாலுங்கலகலெனப்பகர்வதென்னே
தரளவடநகிலின்மிசைதாங்காமற்புரள்வதெதுசாற்றுவீரே. 14

எனதுலகையிற்செபவடம்போலுமதுதனத்தரளவடமிலங்கக்கண்டேன்
கனமுறுமென்சிரமிசையிற்சடையெனவேயுமதுகுழற்பின்னல்கண்டே

நினைவிறைமேல்வைப்பதுபோற்சந்தகமேலுன்மனதுநிற்பக்கண்டேன்
முனிவர்களினதிகமென்பதறிந்தேனீமொழியாதமவுனத்தாலே. 15

உம்மிடத்தின்வரையமர்ந்துமலர்வாயினுகுதேனைநுகர்ந்துகாமன்
வெம்மையறப்பணிப்படத்தின்வீரியயோகம்விளையத்தவஞ்செய்வேனேல்
நன்மையுறசுவர்க்கமதினான்மடங்கினிற்பமுறுநவையையோவுஞ்
செம்மையிதுநுங்கருத்தைச்செப்புவீர்தனங்கள்செப்பாய்த்திகழுவீரே.

ஊருரையீர்விழிபாலேயுயர்விசும்பினுறைந்திடுவேனென்றுசொல்வீர்
பேருரையீரழகாலேபிறங்கியபூருவசித்தியெனும்பேர்பூண்டீர்
தாரருளீரிலவதரந்தருளீரென்றெனக்குத்தாரமாவீ
ராருளர்தாமும்மையல்லால்விரகவேதனையகற்றியருள்செய்வாரே. 17

வேறு.

விரகவேதனையினிவையெலாமுரைத்துமெலிந்திடுமாக்கினீத்திரனைச்
சுரர்கடாமகிழத்துலங்குபந்தறைந்துதோன்றியபூருவசித்தி
யிருகையாற்றொழுதேயெனக்குநீகொழுநனிணையிலாவரசவென்னுள்ள
முருகிடுமெய்யலையளித்தனையெனவேயுவந்தவனாரத்துறவணைத்தாள். 18

கலைமருங்ககலக்கற்பகத்தருநேர்காவினினுதிர்மலரணையி
னிலவிதழதரமளித்துமென்புள்ளினிசையினைமுழக்கியுமிணையில்
வலனுறுபுயத்தினகக்குறிவகுத்தும்வதனம்வேர்வுறவிருகரத்தின்
பொலனுறுவளைகள்பதபரிபுரங்கள்புலம்பிடக்கலவிசெய்தனளால். 19

அலரியத்தியிலேநாறிமேற்றிசையினஃதிடையடங்குவதறியான்
கலவியாமுலப்பில்கடலிடையமிழ்ந்திக்கவினுறுபூருவசித்தி
யிலகியவமிர்தகலசநேரிணையிலிளமுலையிறுகுறத்தழுவிப்
புலனொடுபொறியுமனதுமொன்றாகியுதவாண்டிறப்புணர்ந்தனனால். 20

தீபநேரரசன்புயந்தனையணைத்துச்சிறந்திடும்பூருவசித்தி
நாபியாம்பரதனிலாவிரதன்சீரரிகுருநவையில்கிம்புருடன்
சோபனமலியுமிரம்மியனிரணமயனலப்பத்திராச்சுவன்வெம்
பாபமற்றுயருங்கேதுமாலனோடிவர்நவமைந்தரைப்பயந்தாள். 21

மேருவுக்கதிகவனதையருள்மேருதேவிநல்விலதைவித்தகமாஞ்
சீர்கொளூர்ச்சரிதங்கட்டியொன்றாரிசிறந்திடும்பிரதிருப்பைத்தேன்
வாருறுகுயங்கொவிராமைநற்சியாமைவயங்கியபத்திராதேவி
யாருமொவ்வாவிக்கவமடந்தையரையாக்கினீத்திரன்சுதர்வேட்டார். 22

மேருவுக்கரசன்பயந்தநாரியர்தங்கொழுநராஞ்சிறுவரைவிளங்கப்
பாரினிற்பயந்துபழுதிலாதவள்பூருவசித்திபங்கயனமரு
மூரினிற்புகுதவிரகவேதனையாலுளமெலியாக்கினீத்திரன்றான்
மாரனெய்கணையால்மயன்மலிந்திடவேவனத்திடையவளைநாடினனால். 23

அடவியிற்காணானதிகளிற்காணானகன் றுயர்வரைகளிற்காணான்
கடிமலருறுநற்காவினிற்காணான்கலங்கியுள்ளழிந்திமோ +
னிடரகன்முனிவரருளினாலனலினிலகுகாமியமகமியற்றித்
திடமுடன்சுவர்க்கத்தடைந்தழகடையும்பூருவசித்திதோள்சேர்ந்தான்.

நலனுறவயங்குமாக்கினீத்திரன் றன்சுதனெழினாபிமன் மறையாற்
பொலனுறவியற்றுமகத்தினங்கியினிற்புயலனநாரணன்றோன்ற
நிலனுறவணங்கித்துதித்திடுமரசனிகலிலாவுன்றனைப்போலென்
குலமெலாமுயவேயெனக்கொருமதலைகொடுத்தருளென் றறைந்தனனால்

நாபிமன்னிறைஞ்சியிவைநவின்றிடலுநாரணனறைதவானுனக்குச்
சோபனமுறவேயான்சுதனாகத்தோன்றுவனென்றந்தப்படியிற்
பாபமில்லரசன்மனைவியாமேருதேவிதான்பயந்திடுமகவாய்க்
கோபமில்லிடபநிருபனாயெழுந்தான்கோகனகத்துமின்கொண்கன். 26

அரியினல்லுருவாய்ச்செனித்திடுமிடபவாசன்வான்மறுத்திடவகன்ற
தலரயினினெவருமுயக்கனவேடந்தாங்கியேவருடித்தானவன்றன்
சிரசினில்முடியைக்கவித்துயர்நாபிதவஞ்செயத்தேவியோடேக
நிருபனுமிடபனுலகெலாம்புரந்தானிகரில்செங்கோலினையோச்சி. 27

அவனியின்மனிதருபக்கருமத்தையனுட்டித்துக்காட்டிடவேண்டி
யுவமையிலிடபனிகரிலோர்குருவாயுயருபதேசமும்பெற்றுத்
தவரெனும்வலாரிதனையளாஞ்செயந்திதனைமணந்தவணிற்றோய்ந்து
பவமிலாதிலங்குஞ்சுதர்கள்நூற்றுவரைப்பயந்தனனறநெறிதழைய. 28

இடபனாநிருபன்பயந்தநூற்றுவரினிலங்கியபரதநாமத்தாற்
புடவியினிகரில்பாரதவருடமெனப்புகன்றிடும்பெயரான
திடமுடனுயரும்யோகிகளாகிச்சிறந்திடவொன்பதுகுமர
ரடவியினடைந்தாரெண்பதோடொருவர் கருமங்களனுட்டித்தாரன்றே.

செம்பொன்மால்வரையைச்சூழ்ந்திடுஞ்சம்புத் தீவினில்நவகண்டந்தன
யும்பர்கள்மகிழவரசராயினர்களுவமையிலாவிலாவிரதன்          [க்கே
வம்பவிழ்தொடைசேரிரமியனிரணமயன்குருவயங்கியவரியொண்
கிம்புருடக்கோன்பரதனற்கேதுமாலன்பத்திராச்சுவன்கிளர்ந்தே. 30

மறுவிலாவிவரொன்பதுநலப்புதல்வர்வயங்கியநவகண்டமனரா
யுறையவிவ்வகையின்சுதர்கணூற்றுவரையுதவியவிடபனாமரசன்
நெறியுறவரசாளவனியினுறைவோர்நிகரிலாவிருடிகேசனை
யிறையெனவிறைஞ்சித்துதிப்பவரலாதோரிதரதேவதைகளையெண்ணார்

அறநெறியுறநீளவனியையாளுமிடபனாமரசனூறியாக
மறைமுறைமையினால்நடத்தியேநவையின்மதலையர்தங்களைநோக்கிப்
பிறிதிணையிலாதபரன்றிருமகுணப்பிரானவனடியரைப்போற்று          [ல்.
மறிவுமெய்ஞ்ஞானமுறும்வழியினைநீர் தேர்மினென்றறையலுற்றனனா

தெரிவையருருவின்மயங்கியங்கவரைச்சேர்வதுநலனென விரும்பி
மருளுறசுணங்கன்புணர்வபோற்பவங்கள் வளைந்திடக்கலவியாமுலப்பில்
பரவையிற்படிந்துதொலைவிலாநிரையப்படுகுழிவிழுவதனைகோரீ
ரரிபதமுறவேயுபாயம்யானுரைப்பனனைவருங்கேண்மினென்றறைவான்

அரியடியறியுங்குருவினைவணங்கியாசையையகற்றிடச்சார்ந்த
பெரியவர்குழுவைப்பிறிகிலாதிருக்கப்பிறருடைமனைவியர்பொதுவாந்
தெரிவையரிடத்தின்மனஞ்செலாதமரச்சீவனீதுயர்பரனிவனென்
றருமறைநெறியினரியவிந்திரியம்பிராணவாசுகனொடுசெயிக்க. 34

சார்ந்தமித்திரர்சத்துருசுகதுக்கஞ்சரியெனவுணர்ந்திடத்தான
மாய்ந்துயர்மறையாலுறமகமெல்லாமச்சுதப்பிரியாய்ச்செய்யக்
காய்ந்திடுஞ்சினமும்வயிரமுமகற்றகயவர்வாழ்விடத்திராதொருவ
னேர்ந்தநற்கருமமுடிந்திடவிபற்றறியாயவர்ச்சனைதனைமுயல. 35

தானுறுந்துயர்போற்பிறரிடரறியதத்துவஞானமுண்டாக
வூனுறுமுடலாருயிர்முதலாகவுள்ளெங்குமுறுந்தனென்றுணர
வானவர்க்கமிர்தமரிவையாயளித்தமாயன்மாச்சரிதையைக்கேட்க
தேனுறுமலர்நீர்கொணர்ந்துமாதவனைத்தினந்தொறுமரிச்சனைசெய்ய.

பெருமைசேர்பிரமசரியநேரில்லாக்காரகத்தியம்பிறிதிணையில்
மருளறமறையினறியினர்வானப்பிரத்தஞ்சன்னியாசமாவிரத
முரிமையாந்திடத்தால்நடத்திடவீட்டுமுடைமையையென்னதேதென்று
தரையினிலிறவாதிருப்பவர்போலச்சாற்றுமாங்காரத்தைத்தவிர. 37

இருநிலமதனினுடலுறசீவனியற்றிடுபவங்களுக்கெல்லாம்
நிரையநிர்ப்பந்தம்பலவினுமழிதல்நிச்சயமிப்பவந்தீய
வருபிணியகன்றநலனுறவருந்துமருந்துபோற்பிராயச்சித்தஞ்செய்யி
னிரவிதன்புதல்வனுலகினெய்தாமலிலங்கிபகதியிடையமர்வர். 38

கருமசாத்திரத்தின்பிராயச்சித்தம்பகர்வர் கலர்செயும்பிராமணக்கொலை
னிருநிலமதனிற்றுவாசெசவருடங்கபாலத்தினிரந்திடினொருவுஞ் [தச
சுரையினையுதரநிறைந்திடப்பருகுந்தன்மதியோரந்தமதலை
யெரியெழக்காய்ச்சிக்குடர்கரிந்திடவேநுகரிலப்பவமறுமென்றும். 39

இருநிலமதனிலிரணியங்களவினியற்றிடுபதகனுங்கொடியோன்
கரியுறுமரசன்கரத்தினினுலக்கைகொடுத்திடவுடலினைக்கடிக்கச்
சிரநெரிந்தவனின்மடிந்திடவென்றுஞ்சிறந்திடுங்குருவினில்லாளை [றும்.
மருவுவோன்விடணமறுத்துத்தெற்குறவேநடந்துபோய்மரிப்பதேயென்

ஆவதைபுரிவோன்சுரைதனைநுகர்வோனுடகங்களவுசெய்நீசன்
தேவனுங்குருவின்மனைவியையணைப்போன்றீயராமிவருடன்சார்வாம்
பாவிமற்றவர்களெரிநரகுறுமற்பகர்பிராயச்சித்தசாத்திரந்தான்
கூவிலவணப்புனலவிரதங்கொடாதபோற்பாவம்வேரறுது. 41

சுரையுறுகடத்தைச்சுரர்நதியத்திற்றோய்த்திடச்சுத்தமாக்காத
பரிசெனமுராரிதியானமில்லாதுபடியினிற்செய்பிராய்ச்சித்தந்
தருமமில்மனிதர்பவங்களையாதுசக்கரந்தரித்தவன்பெயரை
யொருதரம்கினைப்போரனந்தபாவங்களொருவிடச்சமன்மூசுங்காணூர்.

மனைவிபுத்திரர்கள்மித்திரரெனத்தான்மனம்வையாதொழிகமாதவன்ற
னினைவுறவுயரட்டாங்கயோகத்தினெறியினைநினைவுறவியற்றித்
தனைநிகரிலாதவரிபதத்தெய்தத்தவஞ்செயுஞ்சதுர்நலனென்று
புதல்வருக்கிடபனிதவுபதேசமளியினற்புகன்றனனன்றே. 43

சரதநான்மறையின்பொருளினையிடபன் றனையர்கட்குரைத்துத்தன்சுத
பரதனைமுடியைக்கவித்துநீநெறியாற்பாரினையாளுதியென்று [ளும்
சுருதிநூல்வழியாற்றிகம்பறனுகித்துலங்குசன்னியரசத்தைத்தாங்கும்
விரதமுற்றுயர்நாராயணத்தியானம்விடாதனுட்டித்தனனன்றே. 44

தரையினினெதியாய்த்திரிந்திடுமிடபன்றனைக்கண்டுசேர்ந்திளஞ்சிறுவர்
விரைவினிலடித்துங்குத்தியுமுதைத்துமேனிமேல்வெள்கலாதுமிழ்ந்து
மிருகையாற்புழுதிசனையெடுத்திறைத்துமிகழ்வுரைத்தெங்கணுமார்ப்ப
வரிகள்மொய்த்திடவேநடந்திடுகரிபோலவனியிற்றிரிந்தனனம்மா. 45

அரியினையுளத்தினிறைத்திடுமிடபனனங்கனும்வெள்குருவவனய்ப்
புரிதொறும்விரைவிற்றிரிந்திடனேக்கிப் பொறியைநேர்தெரிவையரெவ
விரகமுற்றிடவவ்வனிதையர்சற்புமெலியுமென்றிமைப்பினிமொருவி[ரும்
நரருருவனத்தின்விலங்குபுள்ளெனவேநவையறத்திரிந்தனனன்றே. 46

அசைவில்மலைப்பாம்பெனவவண்கிடந்துமட்டமாயோகத்தின்செயலால்
விசையுறப்பதினுலுலகெலாமேவிமீண்டண்டத்துறைகுவோர்செயலைச்
சுசியுறவயங்குமனத்தினுலுணர்ந்துதூயநான்மறைநெறிதுலங்க
நிசியகன்றிடவான்வருகதிர்சிவணத்திரிந்தனனிகரிலாவிடபன். 47

சருகினைப்பொசித்தும்புனலினைநுகர்ந்துஞ்சதாகதித்தன்னையேயருந்திச்
சுரருலகளவாய்நிவர்ந்திடுங்குடிகாசலமெனும்பிறங்கன்மேற்றுலங்கி
விரைவினினிருகையதனினிற்றிரண்டகற்களைவிழுங்கியவ்வனத்தி
னெரியினைவருகென்றதனிடைமுழுகியிலங்கியவைகுண்டத்தமர்ந்தான்.

தரையினினரசிவ்வகையுறநிகரிறவஞ்செய்துமால்பதத்தெய்தும்
விரகிதுவெனத்தானியற்றியாண்டெரியின் விழுந்துவைகுண்டத்தின்மே
பரமனல்லுருவாய்வயங்கிடுமிடபன்பயந்திடுநற்சுதன்பரத [வும்
னருமறைநெறியினுலகினையாண்டானந்தணர்முனிவர்கள்மகிழ. 49

ஏசகல்பரதனெழிலுறப்பயந்தசுமதியோடிராட்டிரபூத
ஞசகல்சுதரிசனனலவாணன்றூமரேதுத்தனேடைவர்
மாசறுகுமரர்வயங்கிடவுலப்பில்மகத்தினைவளர்த்துமாதானம்
பூசுரர்க்களித்துத்தவஞ்செய்வான்சருதிப்புதல்வருக்கரசைநல்கினனல்.

நலனுறப்புதல்வற்கவனியையழித்துநாரணன்றன்னையுள்ளமைத்துப்
புலகனுச்சிரமத்துறைந்துயரரியைபுனல்மலர்துளவெலாங்கொணர்ந்து
பலனுறப்பரதனருச்சனைசெய்துபலங்கந்தமருந்தியெத்தினமுஞ்
சலமுறுசடையன்சதுர்முகன்மகிழத்தவர்களஞ்சிடத்தவஞ்செய்தான். 51

அரியையுள்ளமைத்தாண்டிருகரங்குவித்தேயருவிபோனயனநீர்பொழியத், தரையினிற்பரதனிருந்துளியவனிற்சலம்பருகிடவருமருணம், விரைவினினதிவாய்க்காற்றினின்மேவி மீளியார்ப்பரவத்தின்வெருவிக், கரைகொணீர்க்கால்வாய்கடந்திடக்குதிக்கக் கலங்கித்தன்கருப்பம்வீழ்ந்ததுவே. 52

பயந்தனிற்கருப்பங்கலங்கிவீழ்ந்திடலும் பயத்தினுற்குதித்திடுங்குரங்கங், கயந்தனினமிழ்ந்திமடிந்திடப்பரதன் கதுமெனச்சேர்ந்தவண்கருவி, னுயர்ந்தசீரிரலைக்குருளையைவியப்பா லெடுத்துத்தன்னுறைவிடம்புகுந்து, புயந்தனிற்சுமந்துங்கருணையால்வளர்த்தான் புதல்வரைப்பயந்தவன்றயைபோல். 53

அருணமீன்குருளைதனையெடுத்தளிபாலருந்தவப்பரதமன்னுசை
மருண்மலிந்திடவேவளர்த்திடச்சிறிதுவருடத்தின்மாணுநாட்சீவன்
றரணியிற்குரம்பையழியவானிடத்திற்சார்ந்திடும்போதிந்தவுழைமேற்
கருணையாலிருகண்ணுறக்களித்தேகிக்கவினுறுகுரங்கமாச்சனித்தான்.

தேகம்விட்டுயிர்வானடைவபோதருணக்குருளைமேலன்புவைத்திடுமெச்
சங்கமாவினையாலுழையதாச்சனித்துந்தவத்தினன்ஞானம்வந்துறவே
சங்கையைச்சிவனுமந்தியினிற்றினமுங்கவினுறப்படியுமாதவர்பா
லங்கையில்வளையேந்தரியின்மாக்கதையையளியுடன்கேட்டமர்ந்தனனால்

சந்ததம்பரனைநினைத்துழையாகித்தபோதனரிடத்தினிற்சார்ந்து
விந்தைநாயகன்றன் சரிதையைக்கேட்டு வினையகன்றிடச்சென்மங்கழிந்
அந்தணனொருவனிடத்தினிற்சனித்தானரிபத்தனுகியதவத்தால் [தே
சுந்தரவிடபன்சுதனுமாய்ப்பினரினருணமாய்த்தோன்றியதுணர்ந்தான்.

மரணம்வந்திடுபோதுழையின்மேற்கருத்தைவைத்திடச்செறிந்தபாவத்தா, லருணமாய்ச்செனித்ததறிந்தினியெவருமணுகிடாவண்ணமாய்மூங்க, ரிருள்கலிந்திடவேதெரிகிலாக்குருட ரியம்பியதுணர்கிலாப்பிதிரர், தரணியிலுழலுந்தகைமைபோற்றிரிந்தான்றுயங்கதெய்தினுமருந்தி. 5

தீவினையொருவவவனியினெவருஞ்செவிடந்தன்மூங்கனென்றுரைப்ப
பாவமிறனையான்றெய்வமறையோன் பயந்திடுஞ்சேட்டர்கள்பரிவா
லேவிடப்புனத்திற்பயிருகளழியாதிரவுமானிவையெலாமோட்டிக்
காவலாய்த்தினமும்பரமனைநினைந்துகானிடைத்திரியுநாடன்னின். 58

திருடர்கட்கிறையாமொருவனுனையினற்றீமைசெய்கயவர்களேகி
மருடருமலனைத்தலைவியானவட்குமாணிடப்பலியிடமற்றோர்

புருடனையவடன்கோயிலிற்பாசம்புயத்தினிற்பிணித்துக்காத்தவர்க
ளிருடரும்பொழுதிற்றுயின்றிடவவன்றன்விதியினாற்றப்பியேகினனால்.

கயவர்கள்விழித்தக்கோயிலிற்றங்கள்கட்டிவைத்தவன்றனைக்காணா
ருயருமெம்மிறைவன்வரினமைவதைக்குமென்றுளம்வாடியேபுனத்திற்
பயிரினைக்காத்துத்திரிசெடபரதனெனப்பகர்நாமத்தந்தணன்றன்
புயமழுந்துறநீள்கயிற்றினுட்சிமிழ்த்துப்போந்துகாத்திருந்தனரன்றே.

அந்தவேளையினிற்றிருடர்கட்கிறைவனாகியக்காளியையிறைஞ்சிக்
கந்தமாமலராலருச்சனைமுடித்துக்கடுகியச்செடபரதற்குச்
சந்துடன்றொடையலணிந்தலங்ததிசெய்தணிந்திடவருந்துவித்ததற்பி
னிந்துவினவிர்போலிலங்குவாள்கரத்தாலெடுத்தவன்றறித்திடும்வேலை.

அரிமனத்துறவேயவனிடுமனத்தையருந்திமற்றவன்றனைத்தறிக்கச்
சிரசினைநீட்டுஞ்செடபரதன்றன்றேசசுக்காளியைச்சுடலும் [றையோ
வெருவியாண்டவடான் விரைவினிற்சுடர்வாள் விசிறியத்திருடர்கட்கி
டொருநொடியிடுமுன்சுமடர்களெல்லாமுருண்டிடத்துணித்தனளன்றே

சந்ததந்திருடுங்கயவர்கட்கிறைவன்றமரொடுங்காளிதன்வாளால்
மந்தரவரைபோல்மடிந்தவண்விழவேவனத்தினிற்செடபரதன்றன்
முந்தியபயிரைக்காத்திடுந்தினத்திலொருதினமுடுகுதேரிரவி
சிந்துவினெழுநீர்படிந்திடவேண்டிச்செறிந்தகானேகிடும்வேலை. 63

விந்துதேசத்துக்கிறைவனாமிரகூகணனெனும்வேந்தர்கோனிகரில்
கந்தமார்கமலத்தயன்றுதித்திடுநற்கபிலனையிறைஞ்சிடக்கடுகி
யந்தமார்தந்தச்சிவிகையின்வருவோன்றனைச்சுமந்திடவவன்சிவியார்
சந்தியாவிரதஞ்செயவருமிவனைப்பிடித்துநீசிவிகைதாங்கென்றார். 64

உரனுறுசிவியார்செடபரதன்றனுரத்திடைமோதியேபிடித்து [யாம
விரைவினிற்கொணர்ந்து சிவிகையைத்தாங்க விடுத்திடமறுத்துரைசெ
லொருபுயத்திடையிற்சுமந்திடச்சிவிகையலைந்திடவுளந்திடுமரசன் [ல்.
எரியெழக்கனன்றுண்டிவன்றனைநோக்கி யிவையிவையியம்பலுற்றனனா

விடையெனப்பருக்குமெய்யினையுடையாய்விழுமியசிவிகையையலைத்துப்
படியினிற்கிடாப்போற்கொம்பினைச்சுமக்கும்பலனிலாதவர்கள்போனட
முடுகிநீயலையாதேகுழியலாதேன்முனிந்தனையாக்கினையிடுவென் [ப்பாய்
றிடமுடனிவர்போற்பரிக்குதியெனலுஞ்செடபரதன்னிவையறைவான்.

மறுவிலாதுயருஞ்சிவிகையுமுளதாய்மற்றதின்மீதினியுளையாய்
திறலுடையுனையேபரித்திடுஞ்சிவியாருளருமாயவனியிற்செல்லும்
நெறியுமீண்டுளதாய்நீயும்நித்தியனாயிருப்பதுநிச்சயமாயி
னிறைவனாயுலகாளரசயானுனைச்சுமப்பதுமெய்யெனவிசைத்தான்.67

வேதசாத்திரத்தால்விளங்கியபொருளைவிழுமியசெடபரதன்றா
னோதலுமிரகூகணமனன்கேட்டேயுவமையில்சிவிகையினிழிந்து

காதிதன்சுதனேகபிலனேசனகாதியர்களோகழறெனவிவன்றன்
பாதமேற்பணிந்திவ்வுரையினைமொழியப்பவமிலாவந்தணன்பகர்வான்.

என்னைநீயெவனென்றியம்பிடவேண்டாம்யாவனெவனுகிலென்னிவணீ
யுன்னியகருமந்தெரியயானறைவனேதுதியெனமனனெனுளியாற்
றன்னியமணியாற்றுலங்கியசிவிகைசுமந்தநீசுமந்திலையென்று
யன்னவாசகமேதுணர்த்துதியெனவேயந்தணனிவையறைந்தனனல். 69

கிருபவிவ்வனத்தோர்வணிகன்றன்றமரோடெய்தவேயிலாபங்கணிரப்பும்
பரிவுடன்வருவானெறியெலாந்தூறும்பலபலபூண்டுமேமலியத்
திருடர்களறுவர்சினேகிதர்போலத்திரிந்திடவிகலனுமிடைய
வெருவுறவசகமசகமெய்கடிக்கவிபரிதச்சுழலுயிர்ப்பறைய. 70

சிலரியுங்குராலும்வெடிபடக்கூவச்சிகியுறுவாயகலலகை
நலனுறத்துவபோலொளித்திடர்தரவேகவையுறவனத்தனல்பரவ
வலனுறமியக்கர்வாதைசெய்திடவேவளையெயிற்றரவமுங்கடிக்க [ம்.
விலையில்முண்மரத்தினிருந்திடும்வரைப்பாம்பிழுக்குறவிழுங்கியேயுமிழு

அயமிலாநதியையளியுடனேக்குமடவியிற்கானலைக்கண்டு
பயமெனப்பாறும்பழுதில்கெந்தருவர்பதியிடைச்சேர்ந்தவனொருவு
மியல்புறம்வரைமீதேறவேகருதிநெறியெலாமுள்ளுறவிழியுங்
கயம்வரவெருவிவரைமுழைவிழுந்துகடிதோடிக்கொடியினைப்பற்றும். 72

காரமிலசும்பில்விழுந்திவையிலாதகலனிலாத்தேனுகரப்போய்க்
கோரமாமதனிகொட்டவேபதைக்குங்கூடிவந்தவரெலாமொருவச்
சாருமவ்விடத்திற்புதுமையானவரைத்தடநெறிசலிப்பின்றிகடப்பன்
றூரவவ்வழியின்முடிவிடமறியான்றுரிதமுற்றேகியேமீள்வன். 73

அரியினுக்கஞ்சியெருவைகள்குரண்டத்தருகுறுமவர்கள்வஞ்சனையின்
மருவியோதிமங்கடனையகன்றறிவின்மற்கடவினத்தினைவிரும்பித்
திரியுமிவ்வழியிற்றுரிதமுகினையான்றினந்திரும்பாமலேபோவ
னிருப்பின்னிடத்திற்றுலங்கியவிவேகத்திவ்வனம்நீக்கியேசென்றான். 74

தூயனுய்வயக்குஞ்சடபரதன்றான்சொல்லியவுரையினைக்கேளா
வாயவையெலவுமறிந்தனனிரகூகணனவையேதெனவறியிற்
றீயவெங்கானந்தரையினில்வாழ்க்கைசிறந்திடுவணிகனேசீவ
னேய்விறத்துவமூவெட்டுமேலுவன்றன்றமரெனவுரைத்திடுமென்றே. 75

ஈட்டிடுமிலாபங்காமமேநெறியிலிடைவிடாத்தூறும்பல்பூண்டுங்
கூட்டுநற்றருமவதன்மமேயாகுங்கோரராஞ்சோரர்களறுவர்
பூட்டியஞானேந்திரியமும்மனதும்புனிதமாலாகியநிதியை
வீட்டினிலுறுமனுளதெலாம்பறித்துவிபரிதஞ்செய்குவரன்றே. 76

இகலனையமர்வோரில்லுறைமடந்தைதனையர்கள்மித்திரரிவர்க
டகைவிலாதவன்சொம்மாகியவசத்தைச்சதிருடன்கொண்டுபோயுறுவர்

மிகவும்வெம்மையதாமசகமோடசநம்விபரிதவிரவலராகு
நகிலுறுமடவார்கலவியேசுழல்காற்றெனநசிப்பித்திடுமெறிவை. 77

சிலரியேகாணுவிடத்திற்றாடகணுஞ்சீரிலாக்குரால்முனர்நின்று
பலபலவெள்கல்பகர்ந்திடுமவணும்பழுதுறுகொள்ளிவாயலகை [விபவங்
பொலனுறுமவிர்போலனவினைக்காட்டிப் பொருக்கெனமறைப்பபோல்
தலமிசைநிலைபோலெழுந்திமைப்பின்முன்சல்லபியாய்விடுமென்றே. 78

வனவனலசுபமியக்கராமவர்கள்வாதைசெய்நீதியிலரசர்
கனலுமிழரவங்கயவர்செய்வினையாங்கனமுளாரிலையில்பாதவந்நா
ளினலுறவெவர்க்குமிடாதுதான்பொசியாதிருநிலத்தீட்டியதனமாம்
வினைவரத்துயின்றுவிழிப்பனவிழுங்கியுமிழ்ந்திடுநீள்வரையகியே. 79

பயமிலாநதியைநோக்கிநிற்பனபாடண்டமார்க்கத்திடையமர்வ
நயமிலாவனத்திற்கானலைக்கண்டோரமாமென்றுபாறுவன
வியல்பறத்தனக்கெய்தாதனவெவையுமிச்சிக்குஞ்சுவையொளிபரிச
முயர்வுறவெழும்பேரோசைநாற்றம்மென்றுரைத்திடுஞானவிந்திரியம்.

பழுதில்கெந்தருவர்நகரிடைச்சேர்ந்தங்கொருவுதல்பருதிசால்விசும்பி
னழிவுறுசுவர்க்கத்தமர்ந்துபின்பாரினடைவனவகல்வரைமீதிற்
கெழுமிடக்கருதிநெறியின்முள்ளுறவேகீழுறவிழிவனமுராரி
வழுவிலாப்பதத்தினுறுவபோற்கன்மமருவிமண்செனனமாவனவே. 81

கடகரிவரவேவெருவிமால்வரையின்கந்தரம்விழுந்தவணுடியுங்
கொடிபிடித்துழல்வதெதுவெனிற்காலன்குறுகுவனெனப்பயமலிந்தே
யிடரெனும்விலங்கன் முழையினினமிழ்ந்தி யிழுக்குறுங்காமமாங்கொடி
திடமெனப்பிடித்துமரணமுற்றிடவேதீயுறுகோதத்தினடைவ. [யைத்

அயமிலாதொருவுமசும்பிடைவிழுந்தேயச்சுவைத்தேனுகரப்போய்
நயமிலாத்தேனீயறைந்திடப்படைப்பதெதுவெனினன்கிலாஞான
முயர்வுறும்பாழ்வெங்கூவலினமிழ்ந்தியொருவனில்லாடனைப்புணரக்
கயவளாமவடன்கணவனீதுணர்ந்துகதமுறப்பிடித்துதைப்பனவே. 83

தன்னுடன்கூடிவருபவரொருவத்தான்புதிதானவருடனு
மன்னியேநடந்துமுடிவிடமறியான்மறித்துமீண்டிடுவெனென்பதுதா [தே
னன்னைதன்னுடனே யத்தன்மித்திரர்க ளகன்றிடமரணமாய்ச்செனித்
பின்னரும்பிதாத்தாயுறப்பிறப்பிறப்புப்பிறிவுகாணுதிவணுழல்வ. 84

வெரிவியேயரிக்குக்குரண்டமோடெருவை மேவிடத்தமர்ந்துவஞ்சனையாற், சரியிலோதிமத்தையொருவிமற்கடத்தைச்சார்ந்துபோகுவனென்பதறையின், மரணகாலத்துக்கதிபயமுறவே மருளுறு’பிதரதேவதைதாள், பரவிமோகனநூலுணர்ந்தறிஞரைத்தா னிகழ்ந்துபாவியர்தமைச்சேர்தலே. 85

இவையெலாமுணர்ந்தேயிலங்கியவிரகூகணகட்கமாகுந்தன்னிடத்தி,
னவையறவளர்மெய்ஞ்ஞானமார்பொருளானலனிலாச்செனனமாவனத்

தைப், பவமறத்துணித்துப்பரகதியடைதி யெனப்பகர்ந்திடுஞ்சொலைய
றிந்தே, தவரினுமதிகசெடபாதன்று ளிறைஞ்சமற்றவனிவைசாற்றும்.

தெண்டிரைக்கடல்களுலப்பிலாவரைகடீவுகளெழிலுடையுலக
முண்டகத்தலைவன்புரந்தரன்விபுதர்முனிவர்தானவர்கள்மாசுணங்க
ளண்டமோடளப்பிலெழுவனவெவையுமனித்தியமழிவிலாவிறைவ [ன்
னெண்டவர்தமக்குமகப்படாதிலங்கு முராரியீதுணர்தியென்றிசைப்பா

ஆதலால்மனவுன்சிவிகையான்சுமந்ததிலையென்பதறிகுதியெனநால்
வேதசாத்திரத்தாலதிகனுயுயரும்விமலன்மாலாமெனவிரித்தே
யோதுதத்துவத்தையுணர்ந்திடவரசனுவந்தவன்பதத்தினிலிறைஞ்சி
யாதியாம்பரனைமனத்திடையழுத்தித்தவஞ்செய்துபரகதியடைந்தான்.

விந்துதேசத்துக்கிறைவனுக்கிவையைவிளம்பியசெடபரதன்றன் [செய்
சிந்தையிலரியையழுத்தியாண்டெவருஞ் செறிந்திடப்பழுவத்திற்றவஞ்
தந்தமாநவொயாதியாயெவையுமல்லவாயசைவிலாதுயரும் [ன்
விந்தைநாயகனுமுராரியாயிலங்கும் விமலன்வாழ்வைகுண்டத்தடைந்தா

அவனியின்மனிதருயவளப்பில்லாவருந்தவந்தனையனுட்டித்துப்
பவமறவவிர்கொளரியினல்லுருவாய்ப்படியினிலிடபனுமாகி
யுவமையிலறனுர்பரதனையுதவியுயர்தவத்தாற்கதியடைந்த
கவினுறுசரிதைகமலைகேளென்றுகழறினன்யாழ்முனியம்மா. 90

இடபராசப் படலம் முற்றிற்று.

ஆஉ திருவிருத்தம் - 1702.

---

## 17 - வது, வாமனப் படலம்.

அருணமாயெழுந்தவரக்கனைவதைசெய்தமரர்கோன்புதல்வனைவீட்டிக்
கருணையாலிரவிசிறுவனுக்கவிர்கொள்கவினுறுமுடியினைக்கவித்து
வருணன்மேற்சரங்கடேரந்துவாருதியின்வரைகளையடுக்கியேகடந்து
முராணுறநிருதன்வரனொடீரைந்துமுடிதணித்தவன்றனைத்துதிப்பாம்.1

கோலநுண்ணிடையார்குவிமுலைநுதியிற்குழுமியகிரந்திமீவிடுப்பப்
பாலருந்தாதவ்விடக்குருதியினைப்பருகிநீர்ப்புழுவெனமனனே [ராது
சிலநல்லறத்தைவிடுத்தின்னுவிளைத்துத் திருப்பொனுநிகோதத்தைத்த
பாலனுயுலகேழயின்றவனுமம்பகர்திமற்றவன்பதத்துறவே. 2

எழிலுறுமுராரியிடபனுமெழுந்தேயிம்பரின்விரதமாதவங்கள்
பழுதறமுடித்துப்பரதனையுதவும்பவமிலாச்சரிதையைக்கேட்ட
விழையொளிரரிவையினிதுடன்முராரிபின்னருமியற்றியசெயலை [ன்.
யழிவின்மாதவனேயுரையெனமுனிமின் றனக்குவாமனன்கதையறைவா

அரியணங்காகியசுரர்கட்கமிர்தமளித்திடாதமரர்கட்குதவச்
சுரர்களோடவுணர்சுடுசரஞ்சொரிந்துதொலைவிலாச்சமர்செயவலாரி
கரிவெரினிலங்கிவச்சிராயுதத்தைக்கடாவிடமாவலியயர்ந்து [ன்.
தரையினில்விழுந்தேயுசனனன்றருள்சஞ்சீவியாற்றமரோமெம்பிழைத்தா

மாவலியுசனனுதவுசஞ்சீவிமந்திரந்தன்னினுற்பிழைத்துத்
தேவர்கடமைத்தான்செயித்திடவேண்டிச்சிறந்திடுஞ்சுக்கிரன்றமரை
யாவலின்வணங்கியருச்சனைபலவுமளியுடன்சற்கரித்தெண்ணில்
கோவனமுதன்மாதானங்களெல்லாங்கொடுத்திடவவர்மகிழ்ந்தனரால்.

வேதியரளியால்விரோசனன்சேய்க்குவிச்சுவசித்தெனும்வேள்வி
போதினிலயனும்வெருவிடமறைஞயப்புகன்றவர்முடிக்கவ்வனலுட்
பீதகவுருவாய்வயங்குநாலிவுளிபிணிப்புணவரிக்கொடிதிகழ
வோதுதற்கரியவுருளையோடொருதேரும்பர்கணடுங்கிடவெழுந்த. 6

அன்றியும்பிணுகங்கர்த்திடுதனுவும்பருவாவமுமிணையில்
குன்றுவந்துறினுந்துகளதாமுரத்திற்குழுமுசாலிடையுடன்றோன்ற
வென்றியையுறவாண்டிமையவர்மகிழும்விறலுடைமாவலிதனக்கே
யென்றவிர்சிவணமணிகொள்மாலையினையீந்தனனிரணியன்சிறுவன். 7

உசனனோர்பணிலமளித்திடத்தன்னையுதவியவிரோசனன்பிதாவாம்
வசையிலாப்பிரகலாதனைவணங்கிமாவலிவையமீதேறி
யசுரர்கள்கடல்போலதிர்த்துவந்துறவே யமரர்கோன்பதியினையடைந்து
சசிநிகர்வளையைமுழக்கினன்விபுதர்சதமகனொடுலகஞ்ச. 8

அண்டம்விண்டிடுமென் றமரர்கள்குலைய வசுரர்கோன்சிலையினொலி
மண்டவெண்கரிகளிரிந்திடவுவரிமறுகிடவடவரையசைய [போய்
முண்டகன்மனமுந்துளங்கிடவிபுதர்முனிவர்கண்டுங்கிமாவலியைக்
கண்டுநெஞ்சுலைந்துவலாரியோடேகிக் கவினுறுகுருவின்பாலடைந்தார்.

அன்றுமாலமிர்தமெமக்களித்திடுநாளமரிடைத்தோற்றமாவலிதா
னின்றிவணுடிவளையினையூதியெதிர்த்திடுவலனிதேதென்ன
வன்றிறலுடையவிரோசனன்மதலைமறையவர்வேண்டியதளிப்ப
நன்றிகொளுசனனிகரில்விச்சுவசித்தெனுமகநடத்தினனென்றான். 10

அந்தணருடனேயுசனன்மாமறையையறைந்தந்தவேள்வியைமுடிப்பக்
கந்தவாகனன்போற்கடுகியேசெலுநாற்கந்துகந்தேர்சொடிநனலி
லெந்தநாட்டினினுஞ்சரமருவாவமிணையிலாக்கவசமவ்வெரியின்
வந்திடவலமிக்குயர்ந்தமாவலிமுன்மலைந்திடவரிதெனவுரைப்பார். 11

வரந்தருமயனுமதிகொள்வேணியனுமாலும்வந்திடினுமாவலிமுன்
பொருந்தரமிலாதுவெருவியோடுவராற்புகல்வதிக்கேதெனப்பகர்ந்தே
யரந்தையையடைவீரமர்செய்வீராகினதிதிதன்சுதனொடுநீயிர்
கரந்துயுமெனலுமவரிவரொனுதுகலங்கிநல்வலாரியோடொளித்தார். 12

வானவருடனும்வலாரிபோயொளிப்பமாவலிமகிழ்ந்தவர்பதியிற்
றானவர்களிப்பவிருதர்கள்வியப்பச்சதமகனேறுமாசனத்தின்
மீனெனமிளிர்கண்ணரம்பையர்கவரியசைத்திடவெண்குடைவிளங்கத்
தேனமர்தொடையலணிந்துவீற்றிருந்து திசையெலாம்புரந்தனனன்றே

சதசயிந்தவமேதத்தினைமுடித்துத்தானங்களெண்ணிலசெய்து
திதிதருசுதர்கள்மகிழமாவலிதான்சிறந்துலகாண்டிடக்கண்டே
யதிதிசோகிதளாயமுறுநயனளாகிக்காசிபன்றனையிறைஞ்சி
யுதவுதியெனக்கோர்மகவினைவலாரியிடர்கெடும்படியெனவுரைத்தாள்.

மனைவிநெஞ்சுளைந்துவணங்கியீதுரைப்பமறவிலாக்காசிபன்மொழிவான்
றுனியுறும்வலாரிசுரரொடுமகிழ்ந்துதுலங்கிடவுனக்கொருசுதன்றான்
றினகரனவிர்போற்செனித்திடவுயருஞ்சீதரன்றன்னையேயுள்கி
நினையுமந்திரத்தாலிலங்குமாவிரதநீமுயலென்றிவையுரைப்பான். 15

மீனமாதத்திற்றபனனும்விதுவுமேவிடுந்திதிமுதலாக, வானவர்மகிழ்ந்துவாதசியளவாய்மறுவிலாத்துவாதசாக்கரத்தாற், றேனமர்மலராலருச்சனைநிறைத்துச்செயம்பெறவிரதத்தைமுடிக்கிற், றானவருரங்களடர்ந்திடவுனக்கோர்தனையன்றோன்றுவனெனமொழிந்தான். 16

பதியிவைபகரவதிதிநெஞ்சுவந்துபழுதிலாத்துவாதெசாக்கரத்தாற்
புதுமலர்கொணர்ந்துநிகரில்காசிபன்றான்புகன்றிடுமந்தமாதததிற்
றிதிமுதற்றுவக்கித்துவாதசியளவாய்ச்சீதரன்விரதத்தைச்செய்யக்
கதுமெனக்கருடன்மிசைக்கருமுகில்போற்கவினுறுமாதவன்வந்தான்.

அலர்மழைவிபுதர்மகிழ்வுடன்பொழியவந்தரதுந்துபிமுழங்கச்
சிலைவளைதிகிரிகதையொள்வாடயங்குதிருக்கரங்கவினுறச்சுடரார்
கலனுறுநிறத்திற்கமலைவீற்றிருப்பக்கதிர்முடிவயங்கிடத்தோன்றும்
நிலமகள்மகுணனடியினிறைஞ்சியதிதிகண்ணீருறத்துதித்தாள். 18

இருகரங்குவித்துநயனநீர்புரளவிறைஞ்சியேதுதித்திடுமின்னை
யரியளிமலியவுனக்கியானருளும்வரமெதுபகரெனவறையத்
தெரிவைநெஞ்சுவந்துவலனுறுமசுரர்செருக்கவித்திடுமொருசுதனைத்
தருகுதியெனவம்முராரியானுனக்குத்தனையனாய்வருவனென்றகன்றான்

சதுமுகன்பிதாவாஞ்சக்கரனுனக்குத்தனயனாய்வருவனென்றகல
வதிதிநெஞ்சுவந்துபதியினையிறைஞ்சியரியருளின்செயலறைய
விதுநிகர்வதனமனைவியைப்பரிவால்விழுமியகாசிபனணைப்பத்
திதிசுதரிடக்கண்டுடித்திடக்கருப்பந்திரண்டவத்தூயவள்வயிற்றின். 20

அதிதிசாடரந்தானிலங்கிடக்கருப்பமவிருற்றநங்கரிவைமாதத்தின்
விதுவளர்ந்திடுநற்றுவாதெசியோணம்விளங்குமுற்காலவிசித்திற்
புதுமலரமரர்பொழிந்திடவலையார்புணரிபோற்றுந்துபிமுழங்க [தான்.
மதனனையெரித்தோனிடரினைத்தவிர்த்தோன் வாமனனாகியேசெனித்

வேதியர்மகிழகிகரிலாதவனாய்விளங்கியவாமனன்செனிக்க
வாதரவுடன்சேர்ந்தன்னையும்பிதாவுமணைத்தளிமிகுத்திடவளர்த்துச்
சாதகஞ்சவுளமுடித்துபநயனஞ்சதுமறைநூல்கொடுசெய்து
வேதசாத்திரநூல்விழுமியபுராணமனைத்தையுமோதுவித்தனனால். 22

சுரர்குருதிகழ்முந்நூலினைக்கொடுக்கத்துலங்கியகாசிபன்முஞ்சி
யருளவேயதிதியெழில்கொள்கௌபீனமளித்திடக்கமண்டலம்வியாசன்
றரவுயர்குசப்புல்சரியிலேழிருடிகணங்கடானுதவமான்றோலைப்
பரிவினாலவனிப்பாவைகல்கிடவான்பரிவிலாவிதுப்பொற்றண்டீந்தான்.

வேறு.

நாமகள்செபவடம்நல்கவேயயன்
றோமில்காயத்திரிதன்னைச்சொல்லநற்
பூமனன்முதலினோர்போற்றிசெய்திட
வாமனனடைந்தனன்மண்ணின்மீதரோ. 24

நருமதைநதியினுத்தரத்தினன்குறும்
பிருகுவாசம்மெனும்பேருண்டாய்விய
லரிமலர்ச்சோலைசூழாச்சிராமத்திற்
பரிவினால்மகஞ்செய்மாவலியின்பாற்சென்றான். 25

அருமறைநாவினினமரவொண்சிகை
வெரினுறவரைமுஞ்சிவிளங்கிக்காட்டவே
சரியில்கௌபீனநற்றவளமாயுற
வுரமுந்நூலுழையின்றோலொளிரவந்தனன். 26

தண்டெடன்கமண்டலந்தடக்கைமீதுற
மண்டனிலெழுகுசப்புலுவயங்கவே
முண்டகமணிவடமொளிரமூவுல
குண்டவன்வாமனனாகியுற்றனன். 27

அஞ்சனமரகதமளக்கர்நீலமார்
மஞ்சுகாயாமலர்மானுமேனிய
னிஞ்சொலாலாரணமிசைக்குனவினன்
கஞ்சமாமலருளோன்களிக்கவந்தனன். 28

அருமறைவடிவெனவற்புதக்குற
ளுருவதாய்வருகின்றவுத்தமன்றனைப்
பரிவினால்மாவலிவணங்கிப்பாதநீர்
சிரசின்மேற்றரித்தனன்றீமைவேரற. 29

அற்புதமானவவவனிமீதினுன்
பொற்பதமிலங்கைவைத்திவணிற்போந்தின்று
நற்பதநானெய்தநல்கினையென்மெய்
புற்புதமாகவேபோகுமுன்னென்றான். 30

மாவலிதுதித்திவையறையவாமனன்
பூவினினயனருள்புவனமெங்கணு
மாவலிற்கேட்பவர்க்கவையளித்திடுங்
காவலவுனைநிகர்த்தவரைக்காண்கிலேன். 31

சரியிலாமகமெனில்செய்ததானங்கள்
பரிவுடனளித்துவிண்பாரெண்டிக்குநீ
யொருதனிக்கோல்கொடேயோச்சினுயெனு
வருமறைச்சொற்கடாங்காசிகூறினான். 32

வேதநற்கொழுந்துபோல்விளங்குமாணவச்
சோதிசொல்லமிர்தெனச்செவியிற்றுன்னலு
மாதவனடிமிசைவணங்கி.மாவலி
யேதுவேண்டிடினும்யானீவன்கூறென்றான். 33

மருளகன்மாவலிமகிழ்ச்சியோடிமீ
துரைசெயக்கேட்டருளுலோகநாயகன்
தருமமுஞ்ஞானமுந்தவமுநின்னதென்
றருள்செய்துபின்னருமறையலுற்றனன். 34

மானமார்வேசிமற்றஃதிலாக்குலத்
தேன்மொழியற்பசந்துட்டஞ்சேர்மன
ஞனதுகொண்டிளமகிழ்விலந்தண
னீனமெய்துவரெனப்பினரியம்புவான். 35

காவலவாதலிற்காமமுற்றியா
ஞவலிற்காண்குவதனைத்துங்கேட்கிலன்
பாவமற்றுயரவென்பதத்தின்மூவடி
தாவெனமொழிந்தனன்றூழ்விலந்தணன். 36

அந்தணனிவ்வுரையறையமாவலி
சிந்தையின்மகிழ்ந்துநீசெப்புமூவடி
தந்தனனென்றுதான்றனம்பண்ணவே
யந்தமார்கமண்டலத்தயங்கையேந்தினன். 37

பிடித்திடுசிரகநீர்பெருகமூவடி
கொடுத்தனன்கோடிநீயென்றுகூறுமுன்
வடித்தவேலுடையமாவலியைக்கோபியாத்
தடுத்துயர்பார்க்கவன்சாற்றுவானரோ. 38

அவனியன்றிடந்துபின்னருந்திக்கான்றிடு
மூவமையிறனிமுதலானவுத்தம
னிவனுனைவஞ்சனையியற்றவெய்திய
கவடமாவனவுருக்காண்டிபின்னென்றான். 39

இந்திரன்றன்க்குலகளிக்கவெண்ணியே
நந்துசெந்திகிரியையேந்துநாற்கர
னந்தணச்சிந்துவாயடைந்துமூவடி
தந்திடென்றியற்றுகைதவம்பின்காண்டியால். 40

சரதமாணவக்குறளென்றுதானவ
கருதிநீமூவடிகரதலத்தினா
லொருதனிமுதல்வனுக்குதகஞ்செய்தியே
லரிதினிற்பெறுமுலகாள்கிலாயென்றான். 41

மாவலிக்கிவ்வுரைவழங்கிப்பார்க்கவன்
தேவர்தம்மிடரினைத்தீர்க்கச்சிந்துவாய்
மூவடிதாவெனமொழிந்தமாயனுக்
கீவதுகருமமன்றிகழ்தியாலென்றான். 42

எனவுரைபலவுரைத்தீதறீதெனச்
சொனவுசனன்றனைச்சுளித்துமாவலி
தனைநிகரிலாதசற்குருவென்றுன்னைநா
னினைவதுபழுதெனநிகழ்த்துவானரோ. 43

தடித்தெனவிளங்கியேதவிரிவ்வாழ்க்கைதான்
றிடத்துடனிருக்குமென்றவத்தஞ்சிந்தித்துக்
கொடுத்திடாதொழிசெனக்கொடுமைசூழநீ
தடுத்ததுகருமமன்றென்றுசாற்றுவான். 44

சாதலேநிச்சயந்தருமம்வெஃகநீ
ராதலாற்றுனிகெடவாவியாயினு
மீதலேநலனலாதெண்ணறீதெனா
வேதசாத்திரமெலாம்விதித்ததாமென்றான். 45

அருமறைநெறியினையறிந்துஞானமெய்ப்
பொருளினையுணர்ந்திடும்புலவராயினு
மிரவலர்க்களித்திடாவுலோபமெய்துமேற்
புரையுறக்கெடும்பயம்போல்வரென்றனன். 46

கொடுப்பவர்தங்களைக்கொடாதியற்றியே
தடுப்பவர்சுற்றமுந்தாமுங்கிடமா
யுடுப்பவுண்பனவிலாவுலப்பில்காலங்கள்
விடக்கொடுநிரையத்தின்வீழ்வரென்றனன். 47

அச்சுதன்குறளனாயணுகிமூவடி
நச்சினனெனிலதுநானளித்திடி
னொச்சியமிலாதுநற்பதத்தினோங்குவ
னிச்சயமதுபெறினிகருண்டாகுமோ. 48





ஆதலாலீதலேயறனென்றேயுயர்
வேதபாரகன்றனையெள்கிமேவிய
வாதியைமூவடியளந்துகொள்கென
வோதிநீர்கொடெடுத்தகம்பண்ணினான். 49

அளியினல்மூவடியளந்துகோடியென்
றொளிகொளுமாவலியுதகம்பண்ணவே
களைகனுயுலகினைக்காக்கும்வித்தகன்
கிளர்முடியுயரண்டங்கிழியவோங்கினான். 50

அகலகங்காலினுக்கவனிபோந்தில
ககனமுள்ளடியினிற்கமலத்தாயின
சகலலோகங்களுந்தாளிரண்டினிற்
புகுதவேகிவந்தனன்புயல்கொள்மேனியான். 51

சித்தசன்றனைத்தருஞ்செல்வன்றன்னரை
மெத்தியசூத்திரம்விளங்கச்சேர்த்திடு
பத்திசெய்கித்திலம்பரந்தமாட்சியை
யொத்தனகிறைந்திடுமுடுவினங்களே. 52

கவிகையாய்மவுலியாய்க்கவின்கொள்மார்பினி
லவிர்மலிகவுத்துவமாகியேமருங்
குவிலுறுநாண்மணியாகிக்கோதிலா
வுவமையிலலரிகீழொளிரவோங்கினான். 53

உலகெலாமளந்தருளொருவன்றூணணி
நலனுறமணிகொடாவடத்தினுயகம்
பொலனுறமூருவிற்றிகழ்ந்தபோன்றன
வலரியோனெனிற்பரன்செயலையார்வலார். 54

துந்துபிமுழங்கிடச்சுரர்கள்மாதவ
ரிந்திரனேடுவந்திறைஞ்சித்தூய்மலர்
சிந்தவேநீண்டருடேவனுந்தியின்
வந்தபோலாயினமலரவன்பதி. 55

மங்குல்போனீண்டருள்மாயன்சேவடி
திங்களார்வானின்மேற்செல்லப்போற்றிநற்
பங்கயன்கழுவிடவயங்கும்பாதநீர்
கங்கையாயுலகெலாங்களிப்பவெய்தின. 56

போதயன்கமண்டலப்புனல்கொடன்பினுல்
வேதமார்சொற்கொடுவிளங்குமாதவன்.
பாதமேனிறைத்திடப்பரந்தவானதி
தீதறப்பரிசுதத்தஞ்செய்ததெங்கணும். 57

காசினிசோங்செனக்ககனமீதின்மால்
வீசுதாளதின்மரமெனவிரிஞ்சனு
மாசின்மீகாமன்போல்வயங்கக்கங்கைநீ
ராசிலம்மரத்திற்பாயலெவபோன்றவே. 58

மூவடியிரந்திடுமுதல்வன்றன்னிரு
சேவடியகலத்திற்சேண்மண்கொண்டபின்
மாவலியின்னமோரடிக்குவைகிடந்
தாவெனவழக்குரைசாற்றினனரோ. 59

அரியிவையருள்செயவறன்செய்மாவலி
தரணிவான்முற்றவுந்தாளிரண்டினல்
விரைவினினளந்தருள்விமலனேயென்றன்
சிரசின்மீதோரடிசேர்த்தியென்றனன். 60

நளினமன்முதலினோர்தமக்குநண்ணலா
வெளியைபோலென்முனிவெய்திமூவடி
யளியெனத்தானமேற்றடியிரண்டினு
லொளிகொள்வான்புவியெலாமொடுக்குமுத்தம. 61

மானிலத்தயம்வரவையங்கிண்டிட
வேனமாயினவுனக்கின்பமாகவீய்
தானமொன்றனந்தமாய்த்தழைக்குமென்பது
தேனுறுதுளவுளாயவேதஞ்செப்புமால். 62

ஆதலின்மாயவுன்னடியனுமெனை
யீதிமூவடியெனவிரந்ததானத்தின்
மாதவப்பலனிவண்வாய்க்கவென்சிர
மீதுநின்றுளினைவிளங்கவையென்றான். 63

சிந்தையின்மகிழ்வொடுசிறந்தமாவலி
யிந்தநல்லுரையினையியம்பிநேரிலா
விந்தமாதேவியுந்தானுமேவியே
வந்தனைசெய்துமாதவனையேத்தினன். 64

மாவலிதேவியோடெய்திமாதவன்
சேவடியிறைஞ்சியாண்டேத்தத்தேமலர்
தூவியேயிரணியன்சுதனிறைஞ்சிடப்
பூவுளோன்புரந்தரன்விபுதர்போற்றினர். 65

மாதவர்துதிக்கமாவலியைநோக்கிமால்
பூதலமுதலதாம்புவனமெங்கணு
நீதிமெய்நிறையமாதானநின்னைப்போ
லீதலுக்கிசைகுவாரிலையென்றோதுவான். 66

என்னிருதாளிணையிறைஞ்சியேத்திவா
மூன்னுடைப்பிதாமகன்போன்றவுத்தம
வின்னவில்வலாரிதன்பதிதந்தென்பதம்
பின்னர்யான்றருகுவனென்றுபேசுவான். 67

சதமகன்பதியினைத்தந்துபின்னரென்
பதமுனக்களிப்பன்யான்பவமில்கீர்த்தியாம்
சுதலலோகத்தினிற்றுலங்குபோவென
விதியினையுதவியவிமலன்கூறினான். 68

அரியிவையருளவேயறஞ்செய்மாவலி
பிரகலாதனனொடுமிறைஞ்சிப்பிங்கலன்
சுரரொடுதுதித்திடச்சுதலலோகத்தி
னிரவிபோற்றமரொடுமிலங்கிவைகினான். 69

மாவலிசுதலலோகத்தின்வாழ்ந்திடத்
தேவர்கட்கிறைவனைச்சிறங்கவின்பதி
காவெனவருளிநற்கமலையாகிய
தேவிமார்பிலகவைகுண்டஞ்சேர்ந்தனன். 70

அதிதிதன்புதல்வனுயனுகிமாவலி
யுதவுமூவடியினுக்குலகமெல்லவுஞ்
சதுரினீரடியினற்றுவுமால்செய
லிதுவெனத்தவன்பொறிக்கியம்பினனரோ. 71

வாமனப் படலம் - முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் - 1773.

## 18-வது, அசாமிளப் படலம்.

சேடனுமலைந்திடத்திரியும்பொற்கணன்
வீடவேமுனிந்துயர்மீளியாகியே
ஆடகன்றனைப்பிளந்தயோத்தியெய்திநீ
டாடகைதனைக்கொல்வான்றுளேயேத்துவாம். 1

பாவமாரசுரனைச்சனித்துப்பார்க்கவ
னீவதுகருமமன்றெனவரிக்கருள்
மாவலிபோலவேமருளைநீத்தவர்
யாவர்களுளரென முனியியம்புவான். 2

வசிகரவேசியைத்தோய்ந்துமண்ணிடை
நிசாசரர்போலவாண்டுழன்றுபின்னெறி
யுசாவிமால்பதத்தினிலேனுங்குமந்தண
வசாமிளன்சரிதைகேளணங்கென்றேதுவான். 3

கன்னியாகுமிசமாதேசத்திற்கவின்
றுன்னியவடிவினுற்றுலங்குமந்தண
னின்னவிலசாமிளனென்னுநாமவான்
மன்னியகுருவெனமறுவினீதியான். 4

நீதியாசாரத்தினிறையசாமிளன்
வேதமாரோமத்தைவிளைக்கவெண்ணியெ
யாதரவுடன்குசப்புல்லரிந்திடச்
சீதமார்ந்தெழில்கொளாராமஞ்சேர்ந்தனன். 5

தருப்பையைக்கொய்யவுத்தியானஞ்சார்ந்தவன்
பொருப்பெனவளர்முலைப்பொதுமடந்தையா
மருப்பநுண்ணிடையுடையவளொடோர்விடன்
விருப்பமுற்றனங்கனூல்விளைக்கக்கண்டனன். 6

இலவிதழதரநீர்பருகியேருறு
முலையிடையணைத்தெண்புள்ளொலிமுழக்கியுஞ்
சிலைநுதலணங்கனுளவனொடேசெயுங்
கலவியையசாமிளன்கண்டுநைந்தனன். 7

வேதநூலோதியும்விரதமீட்டியும்
மாதவஞ்செய்குவர்வருத்தமெய்யினுக்
கீதலேயலாததிற்பயனிலேருறுங்
கோதைமார்கலவிபோற்சுகங்கொடாதென்றான். 8

தனங்கனவரைநிகர்தையலாசையா
லனங்கசாயகமுறவலையசாமிளன்
மனங்கலங்கிடமருளுற்றுமாமயி
லினங்களாருயானம்விட்டேகலானரோ. 9

விடனொடுகலவியைவிளைத்துத்தீர்ந்துமின்
கடிமலர்க்காவினைக்கடந்தங்கேகலும்
வடிவுடையசாமிளன்மயங்கிமற்றவ
ளடிமிசைவணங்கிநீயணைத்தியென்றனன். 10

துன்னுகாமத்தினுற்றொழுகவேதியன்
தன்னைமின்னோக்கியேசாற்றுவாளன
மென்னுடனுகர்ந்தெனைப்பிரிகிலாயெனின்
மன்னுவன்யானெனமருளன்கூறுவான். 11

என்னுயிர்கின்னதேயிணையிலாமட
வன்னமேயுன்னைவிட்டகல்கிலேனெனச்
சொன்னவேதியனொடுங்தோகைதன்மனை
மன்னியாண்டவனுக்குமனைவியாயினாள். 12

ஓதனமவளொமெருந்தியோதிடும்
வேதசாத்திரமெலாம்விடுத்துவிஞ்சிய
சாதியாசாரநற்சந்திவந்தனை
நீதிமெய்யொருவியேயிருதன்போன்றனன். 13

வடிவுடைப்பொதுமகளாயமாதினை
இடைவிடாதேதழீஇயின்பமுற்றவத்
துடியிடைமின்றொசுதரையீன்றிட
விடனெனுமசாமிளன்மிகமகிழ்ந்தனன். 14

மாதராள்கனிட்டனுய்ப்பயந்தமைந்தனைத்
தீதில்நாராயணனென்றுசீருற
வோதுநாமத்தினையுதவியுண்மகிழ்ந்
தேதமாரசாமிளனிருக்குநாடனில். 15

இருநிலத்தெண்பதோடெட்டென்றேதிடும்
பருவம்வந்திடநரைபரந்துளான்றனை
யிரவிதன்மதலையாமியமன்றூதுவர்
விரைவினிற்பற்றலுமிகநடுங்கினன். 16

சாதகர்கோரமாமுருவைத்தாங்கியே
போதநாராயணனென்றுபுத்திரற்
கோதுநாமந்தனையுரைத்துளைத்துநொந்
தேதமாரசாமிளனிறந்தனன்னரோ. 17

அந்தகாலத்தினிலசாமிளன்மிக
நொந்துநாராயணவெனநுவன்றுதன்
மைந்தனையழைத்தவன்மடியலோடுமே
சுந்தரமாதவன்றூதர்தோன்றினர். 18

மைந்தனையழைத்துயிர்மடிந்துளாயினு
ரந்தகன்றூதுவர்பற்றவந்தமார்
விந்தைமார்பகனடியார்விலக்கலும்
நொந்துசாதகரிவைநுவலலுற்றனர். 19

தீயவிவ்வசாமிளன்செனித்தநாண்முதற்
றீயவையெல்லவுந்துறந்துளானையாங்
காயும்வெஞ்சினத்தொடுங்கட்டியேகவீண்
டேயெனுமுன்றடுத்துளீர்கள்யாரென்றார். 20

சாதகரிவ்வுரைசாற்றமாதவன்
றூதுவரவர்களைநோக்கிச்சொல்லுவா
ரேதமில்லரியின்பேரியம்பிமாண்டிடு
நீதியன்றனைநலிநீயிராரென்றார். 21

என்றரிதூதுவரியம்பலோடுமே
தென்றிசையுற்றிமெறலிசெப்பிட
வின்றிவன்றனைக்கொடாண்டிமைப்பினேகவே
யொன்றியசாதகர்யாமென்றேநினர். 22

எரிநயனத்தராமியமன்றூதுவ
ருரைசெயக்கேட்டரியடியரோதுவார்
தருமமில்மனிதரைச்சமனவிந்திடும்
நிரையமெத்தனையெனவவர்நிகழ்த்துவார். 23

இரவிதன்புதல்வனுயியமன்வாழ்பதி
தரையினிற்கீழுறத்தாழ்ந்தெண்ணைசையும்
விரிவுறுமிடத்தினில்மிகுத்தகோரமாம்
நிரையமூவேழெனநிகழ்த்துவாரரோ. 24

வேறு.

தூய்மையிலாமிச்சிரமந்ததாமிச்சிரமிரவுரவந்துன்மதியோ
ராயவர்வீழுமகாரவுரவங்கும்பிபாகம்வெங்காலசூத்திரமற்
பாயவேபவர்கள்கலந்திடுமசிபத்திரவனஞ்சூகரமுகம்பல்
சீயொடுதசைசேர்ந்திடுமெந்தகூபந்திமிரமார்கிருமிபோசனமே. 25

தாழ்ந்திடுஞ்சந்தங்கிசம்பவரடையுந்தத்தசூருமிவதைபுரிவார
சூழ்ந்தவச்சிரகண்டகமுடையுறுசன்மலியததிதுதையும்வைதரணி
யாழ்ந்திடும்பதோதம்பிராண்டுரோதம்நீண்டகன்றிடும்விசஞ்சனங்கயவர்
வீழ்ந்திடுமிலாலாபோசனஞ்சாரமேயாதனம்விச்சிரியமே. 26

பெயரிவையுடையநிரையமூவேழும்பெரும்பவஞ்செய்திடுமினங்கள்
துயருறவடர்கிர்ப்பந்தமோரேழென்றிசைப்பர்சூலப்பிரோதமமாப்
பயமுறவளையுங்காரகத்தாரந்தெந்தசூகாதனம்பவர்க
ளயர்வுறும்பரியாவர்த்தனஞ்சூசிமுகமகல்வடகிலோதனமே. 27

அன்றியுங்கோரவிரககோணகபோசனமுடனேழிவையாகும்
நன்றியைமறந்தோர்பிறர்பொருள்பரர்தம்நாரியையடைந்தவர்மகவைக்
கொன்றவர்திருடிவிலக்குறக்கொடுப்போரிவர்களைக்கொடியபாசத்தி
னென்றிடப்பிடித்துமத்திகையோச்சவுருள்வர்தாமிச்சிரநாரகின். 28

பலதினந்தொறுமிப்பவந்தனைச்செய்வாரினங்களையிதிற்பதின்மடங்காய
நலனிலாக்குறூரமலிமந்ததாமிச்சிரநரகிற்றள்ளுவார்கள்
சலமொடுபரரைக்கெடுத்திடுமெவரையவர்களானுெந்தவர்சார்ந்து
வலியுறமுளையாய்த்தசையறநச்சிவலிப்பர்களிரவுரவத்தின். 29

மகாரவுர்வமாநிரையத்தின்மானும்மருளுறத்தமைநலித்தவரை தஞ்]
விகாரநாவதனுற்பிடுங்கியேபொசிப்பர் வேட்டையின்மிருகங்கொன்றவர்
சகாயரோடவரையெண்ணைகற்காயுங்கும்பிபாகத்திடைத்தள்ளி
கிகோதகாவலர்கள்வறுப்பர்களழல்சாலயமுறுமகப்பையைநீட்டி. 30

காலசூத்திரமாநிரையத்தினகலங்கழறிடினியுதயோசனையாய்
மேலெலாமுகாந்தத்துறுமிரவியைப்போல்வெம்மையாய்க்கீழ்வடவனலா
சாலவுங்குரூரமானவவ்விடத்திற்சற்பிராமணர்களைப்பிதாவைச் [ய்ச்
சீலமார்குருவையிகழ்ந்தவர்கோவின்மயிருறவருடஞ்சேர்ந்துழல்வார். 31

ஆயுதநிறையவடாயகநிரையமவியசிபத்திரவனமாந்
தீயமாநரகின்மறையுறைநெறியைத்திறம்பிப்பாடண்டத்தையடையுந்
தூய்மையிலவரையதில்விழவடித்துத்துரத்தவப்பனையினிற்படைமெய்
யோய்வுறவறக்கவுதிரம்வீழ்ந்திடவேயுளைந்துளைந்தோடுவரன்றே. 32

சூகரமுகமாகியநிரையத்திற்றூயவேதத்தையோதாமற்
சாகரமிசையிற்றவழும்வங்கத்திற்சார்ந்துகற்பழனத்தினுழுது
சேகரமிசையிற்சுமடினைச்சுமந்தமறையவர்செகதலத்தறன்மெய்
போகவேயரசாள்புரவலரிவர்கள்புகுதுவரிருணிமெய்கடிக்க. 33

ககமகிதெறுக்கால்மிருகமீமசகங்காய்ந்துகொன்றிடுநலனிலரைச்
செகமதிற்பழனப்பயிரைமேயாவினினந்தனைச்சினத்தடித்தவரை
யகலமாயாழுமந்தகூபத்தினடைத்திட்டவர்சொலுஞ்சீவ
னுகவிறுதியினின்வருமழற்போலக்கடிக்குமவ்வுருவங்களுறவே. 34

பஞ்சமாயாகம்பணுரவேதியரைப்பழுதிலாத்தந்தைதாயாசான்
றஞ்சிடவவருக்கிடாதுதன்னுதரம்வளர்த்திடுதற்குணமிகுத்த
வஞ்சகர்தமையுநியுதயோசனைநீள்மடுவதாங்கிருமிபோசனத்தின்
நஞ்சென மூடுக்கிவிடுத்திடவவரைநலமிலாக்கீடங்கடினுமால். 35

அறனுறுமவரையடித்தவர்பொருளைக்கவர்ந்தவரயனமுற்றவரை
மறனுறப்பறித்தங்குழலும்வஞ்சகர்களிவர்களைமறலிதன்றூதர்
கறையுறவடித்துமுடுக்கியேசந்தங்கிசநிரையத்தினிற்காய்ந்து
கிறையுமெஃகயத்தினழலுறும்பொடியைந்தலுமருந்திடவிடுப்பர். 36

பதிதனையிகழ்ந்தேபரர்களைச்சாரும்பழியுடைத்தீயபாவையரை
யதன்மமெய்திடத்தன்பாரியைவிடுத்துப் பிறரில்லாளோடடைந்தவரை
கதுமெனத்தத்தசூருமியென்னுமந்நிரையத்திற்றள்ளிக்காயிரும்பால் [க்
விதமுறுபுருடரரிவையரவர்மேல்விழுந்தணைத்திடவுடல்சுடுவார். 37

வயிரமுற்றடர்ந்துநிரபராதிகளுக்கிடர்செயுமதியிலாதவரைத்
தயையில்சாதகர்கள்கொடியவச்சிரகண்டகமகல்சன்மலிதன்னிற்
றுயரமுற்றலறவாமுறமுள்ளாற்றலங்கியவிலவின்மேலேற்றிக்
கயிறுறக்கயிற்றின் விடுத்துநீள்புவியினிழுப்பர்களகக்கரத்தடித்தே. 38

தருமமெய்யகற்றித்தனத்தினைவிரும்பிச்சற்புருடர்க்கிடர்செய்தா
ணிருபரானவரைநெறியறத்தாதிதனையணைத்திட்டநின்மூட
நரரையாசாரம்விடுத்தவேதியரைநகைமயிர்குடர்தசையெலும்பு
ருருதிநீர்நிறைவைதரணியிற்கரிமீன்குதிரைமீதேறுவிக்கவிடுப்பர். 39

மூவேலைக்கோகோன்வேட்டையைவிரும்புமூர்க்கரைப்பிராணரோ
த்தூங், கொடுமைசேர்பதோதநரகினுமுருட்டிக்கூர்மையாரழல்கொள்
வாளிகளைக், கடுமையாலவர்மெய் யுருவிடவிடுத்துக் கதறிடக்கதையினு
லோச்ச, விடமூ மூமரவமரிபுலிகரடிகடித்தவர்மெய்த்தசையருந்தும். 40

அச்சுதப்பிரிதியெனுமலாங்காரமுறமகஞ்செய்யுமந்தணரைச்
சிச்சியென்றிகழ்ந்துமறலிதூதுவர்கள்விசஞ்சன்னிரையத்திற்சேர்ப்பர்
குச்சியுற்றிடத்தாஞ்செயுமியாகத்திற்படுத்தகோவாகியங்கெய்தி
யச்சமெய்திடவேயாற்றிடுமவர்மெய்த்தசையினையருந்திடுமென்றே. 41

விடமதாமதராய்த்தங்கள்மேட்டிரத்தைமெல்லியர்புருடர்வாய்தன்னி
னிமெறிவிலரைக்குறூரமாமிலாலாபோசனநிகோதத்தினிழுத்துக்
கொடியமூத்திரமும்வீரியந்தனையுங்குடித்திடவதனிடையழுத்தி
நெடியமரத்திகையாலுடலெலாங்குருதி நிறைந்திடப்புடைப்பர்களன்றே.

விடமிடுபதகர்பிறரிலிற்றீயைவிடுப்பவர்சனங்களைவதைக்கக்
கொடியசூனியத்தைசெயற்றுவாரிவரைக்கொணர்ந்தகல்விச்சிரியத்து
மடர்சாரமேயாதனநிரையத்துமழுத்திநீள்பருப்பதத்துருட்டிக்
கடுகியதிருகுசக்கரத்தெறிந்துங்கழுவின்வைத்திருத்துவர்கனலின். 43

அருமறையவரைவதைத்தவர்சுரையைப்பருகினராடகந்திருடு
மருளர்கள்குருவின்பாரியையணைப்போர்மற்றவருடனன்புவைப்போர்
தரையிடையறனில்பஞ்சபாதகராமிவர்பசுத்தனைத்தடிந்தவர்க
ளரிவையைவதைசெய்கயவரிம்மூவேழ்நரகினுமடைகுவர்பலகால். 44

ஆதலாலறனிலசாமிளனிந்தநரகெலாமடைந்திடச்செயுமா
பாதகனிவனைவிடுத்திடுந்திகிரிபணிலமோடடற்கதையேந்தும்
நீதியாயினநீரெவரெனவெமக்குநிகழ்த்துதிரென்றுதென்றிசைமன்
றூதுவருரைப்பவவர்களைநோக்கிச்சோதிதன்னடியவர்சொல்வார். 45

வேறு.

அரியடியாரியாமசாமிளன்றனை
விரைவில்விட்டேகுதிரெனவிளம்பநற்
சுருதியினெறியினைத்துரத்திப்பாவஞ்செய்
கருமனீண்டிவனெனக்கட்டுரைத்தனர். 46

சாதகரிம்மொழிசாற்றமாதவன்
றூதுவரசாமிளன்சுருதியோதிடு
நீதியைநீங்கியிந்நிலத்திற்செய்திடு
மேதமார்மறத்தினுக்கியாவர்சான்றென்றார். 47

வேறு.

மாலடியவர்களுரைத்திடக்கேட்டுமறலிதன்றூதுவருரைப்பார்
காலெலரிநிலநீர்ககனமானிசருங்கந்துலோடேபகல்சோமன்

மேலவன் றிசைசெய்காலசற்சந்திவிழுமியவித்தவ:தெசமும்
ஞாலமேன்மனிதரவர்செயுமறனுக்குயர்ந்தசான்ரூமெனநவில்வார். 48

மருளுறநிலத்திலசாமிளன்செய்தமறயுறுமறங்களுக்கெல்லா
மிரவியேமுதலாயியம்புபன்னிரண்டுமிலங்கியகரியெனமொழிய
அரியடியவர்களந்தகாலத்திலிவனைறந்திடும்பரனுமம் [த்தார்.
விரைவினிலிவன்செய்பவங்களையெரித்து விளங்கிடச்செய்யுமென்றுரை

மாதவனடியாருரைத்தவிம்மொழியைமறலிதன்றூதுவர்கேட்டு
நீதியையகற்றியசாமிளன்செய்தகிசழ்த்தரிதாயபாவங்கள் [பே
ஏதமாநிரையத்திடாதிவன்றன்னை யிவனெம்மால்வெருவித்தன் சுதன்
ரோதிடக்கெடுமோமொழிந்திடுமெனலுமொப்பிலாவரிபத்தருரைப்பார்.

இறவுகாலத்திலசாமிளனாராயணவெனவியம்புநல்லெழுத்தைப்
பிறிவுசெய்திடத்தான்வருமிரண்டெழுத்தேபிதுப்பசுநாரிநான்மறையை
யறைபவரிவரைவதைத்தவராசான்மனைவியையணைத்தவர்சோரர்
நெறியறவெறியைப்பருகினர்செயும்பாதகத்தினைநீக்கிடுமென்றூர். 51

விதியையுந்தியினிலளித்தவனடியார்விளம்பியமொழியினைக்கேளா
வதன்மமேமுயலுமசாமிளனிறையையறிந்துரைத்தவனலன்வெருவிச்
சுதனுடைப்பெயரையறைந்தனனதனுலிவன்செயுந்தொலைவிலாப்பாவம்
கதுமெனக்கெடுமோகழறுவீரெனலுங்கார்வணன்பத்தர்கள்பகர்வார். 52

மருளினுற்கொளுத்துமுதாசனன்றூனும் வசைசொல்லியருந்திடுமெ ருந்தும், விரைவினிந்தனத்தையடர்ந்திடும்பிணியையழிப்பதல்லாலிவை விடுமோ, தரையினிலதனுற்சனித்தமானிடர்களிகழ்சசியால்வினைதத் தாற்சாற்றும், பரமனற்பெயரேயவர்செயுந்தொலைவில்பவங்களையெரித் திடுமென்றூர். 53

ஆதலால்மறையோன்மரணகாலத்திலறைந்திடுமால்பெயரவன்செய்
பாதகமெவையுமெரித்திடுமிதனைப்பழுதிலாமறலியுமறிவன் [ண்
போதுமினெனவேயவர்மிகவெருவிப்பொருக்கெனச்சமனிடையடைந்தீ
டதெலாமறையவிரவிதன்மதலையவர்களுக்கிவையுரைத்தனனால். 54

சரியிலாவிறையேயரியவன்செயலைச்சதமகனிருதிமாமருத
ரிரவிகால்வருணனுதாசனன்கமலனியமனுகியவியானீசன்
பிருகுவிச்சுவதேவதைவசுதெசமாப்பிரமர்பிங்கலன்மதிமுதலா
யொருவருமறியாரறிவிலாதவர்நீருணர்வதெத்திறமெனவுரைப்பான். 55

பரமபாகவதர்செயலினையறிவார்பங்கயத்தவனுமைபாகன்
சுரர்முனிகபிலன்மனுப்பகீரதிதன்சுதனுயர்மாவலிசனக
னருள்செறிவியாசன்மறலியாகியயானுடகனருளுஞ்சற்புதல்வ [ன்.
னிருளினையகற்றுஞ்சனற்குமாரன்றூ னிவர்துவாதசத்தரென்றறைவா

தரணியிற்றொலைவில்பவங்கள்செய்திடினுந்தனையனையளியுடனினைத்து
மரணமுற்றிடும்போதசாமிளனாராயணவென்னும்வாசகத்தாலே

யருணனுற்றிடவாண்டுதையமாமிரவியவிரினுலவிந்திடுமிமம்போல்
விரணமுற்றெழுந்தமறனெலாமெரிந்துவீடுபெற்றுயருமென்றறைவான்

மாதவன்பெயரைத்துதித்துவாழ்பவரைமறந்துநீரடைகிலீரெனவே
யோதியமறலிதனைத்தொழுதவர்களுலகநாயகனடியவரைப்
பூதலமிசையிலுணர்வதெக்குறியாற்புகலுதியெனப்பகர்ந்திடலுஞ்
சாதகர்செவியினரகசியமாகச்சமனிவைசாற்றினனன்றே. 58

திருமகள்கொழுநனடியவர்புயத்தினிலாஞ்சனந்திகிரிசங்கிலங்கு
முரமிசையமருமெழில்வனமாலையூர்த்தபுண்டரநெற்றியொளிரும்
பரமபாகவதர்குறியிஃதிவரைப்பரிசியாதொழிமினீர்தீண்டில் [ரித்தான்
விரைவிலென்பதவியழிந்திடுமெனுஞ்சொல் மெல்லெனச்செவியிடைவி

சாதகர்தமக்குமறலியிவ்வுரையைச்சாற்றிடுமெல்லையின்முராரி
தூதுவர்மறையோன்குரம்பையிற்சீவன்றலங்கிடமறைந்திடவெழுந்தே
யாதரவுடனெண்டிசையினும்நோக்கியவர்களைக்காண்கிலானவர்க [தான்
ளோதியமறைசால்மொழியின்மெய்ஞ்ஞான முறவிறையரியெனவுணர்ந்

அரிபினையிறையென்றறிந்தசாமிளன்று னனைத்தையுமிகழ்ந்துகானேகி
பரமபாகவதரடியினிலிறைஞ்சிப்பழுதறவவரருள்மொழியாற் [ப்
றிருவினையகனையொருமையுள்ளமுதிச்சிறந்திடுமியோகமுற்றிடவே
தரையினிலுடலைக்கழிததுமாறாதரினத்துடன்வைகுண்டஞ்சார்ந்தான்.

பொதுமகணிலையணைந்துமீரைந்துபுதல்வரைப்பெறுமசாமிளன்மாப்
பதிபெயரிடுமச்சிறுவனைமரணகாலத்திலழைத்திடும்பலத்தால்
விதமுறுநிரையத்தழுந்திடாதுயர்ந்தவீடுபெற்றனனெனவிதர்ப்ப
னுதவுமாமகளுக்குரைத்தனன்மண்விண்ணொப்பிலாநாரதமுனிவன். 62

அசாமிளப் படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - 1835.

---

## 19 - வது, உருக்குமாங்கதப் படலம்.

---

இருணியாயிடந்துங்குறளனாயளந்துமிலங்கியவனந்தனாய்ச்சுமந்தும்
வருணமார்சிசுவாயருந்தியுமிழ்ந்துமறுவிலாத்தேவகிசுதனா
யருணனணயனச்சதியபாமையாகியங்கரசனிற்பிறந்த [தொழுவாம்.
தரணியின்றனைத்தனூரத்தினிலணைத்தோன்றாளினைப்போற்றியே

அனமயமகற்றிப்பயந்தனையருந்துமறிவுபோற்பவந்தனையொருவித்
தினநலனியற்றியளிமலிந்திடுநற்சீதரன்றாளிணைநினைத்தாற்
சனனநோய்துயரமிறப்பகன்றிடவேசலனமில்கதியினியுயர்வாய்
மனனெனக்கினியாய்வணங்கினேனவனைமறக்கலாய்மரணகாலத்தும். 2

வேதபாரகனுநெறியினைவிடுத்தும்விடனெனத்திரிந்துமால்பெயரை
யோதுமவ்வொலிகேட்டொளிர்தருமுராரியடியவருருமெனவடைந்த
சாதகர்தமையும்விலக்கிநற்கதியிற்சார்த்திடுமெசாமியன்போல
வேதமற்றுயர்ந்தேயிலக்குவாருளரேலியம்பெனவிந்திரையுரைத்தாள். 3

திருக்கறவிலங்குந்திருவிவைமொழியச்சிறந்திடுநாரதமுனிவ
னிருக்கறைவசிட்டனெழில்கொளும்மாந்தாதாதனக்கிளிவாகியனிரைய
வருக்கமற்றிடவேயரிதினவிரதமறுவறநடத்திநற்கதிசே [ப்பான்
ருருக்குமாங்கதன்றன்சரிதையைப்பகர்ந்தானவைபொறியறியெனவுரை

இரவிதன்குலத்திற்சிறந்திடுமிக்குவாகுவின்மரபிடையிலங்கு,மரச
ரெண்ணிடபத்துவசன்மாதவத்தாலருளியவுருக்குமாங்கதனும், நிருபன்
வான்வலியாற்றிசையெலாம்வென்றுநிகரிலாச்செம்புத்தீவினைத்தான்,
தருமமெய்தழைப்பவொருகுடைநிழலிற்றவர்மகிழ்ந்திடப்புரந்தனனால் 5

உருவினற்றிருவுமொதுக்குமெய்யுடையாளொப்பிலாக்கற்பினுக்கரசி
தரையினிற்கனகமிதித்திடுமிடந்தோறிலங்கியேவளர்ந்திடத்தண்டை
பரிபுரமார்ந்நடந்திடும்பதத்தாள்பரவையினமிர்தநேர்மொழியாள்
மருவமர்குழலிதெரிவையர்திலகமறுவிலாச்சந்தியாவல்லி. 6

அறுசுவையடிசினினைவினுண்டாக்கியளப்பிலாரடையினுமளிப்பா
ளறுநரைதிரைமூப்பொருவிடவிளமையொளியுறப்பரிசிக்குங்கரத்தாள்
மறுவிலாவிவளையுருக்குமாங்கதமன்மகிழ்வொடுமணம்புணர்ந்தருளி
வெறிபுறுமலரிலமரளியெனவேவிரும்பியத்தோகையோடமர்ந்தான். 7

தரையின்வானிடத்தி னிகரிலாதிலங்குஞ் சந்தியாவல்லியைத்தின
மும், பிரிகிலாவரசன்விதிசைமாநகரிற்பலவுறவுலகையாடினத்தி, ன
ருள்செறிவசிட்டன்பராசரன்பிருகொடளப்பிலாமுனிவர்வந்தெய்தப், ப
ரிவினலவர்க்காண்டருக்கியமளித்துப்பணிந்துமன்னிவைபுகன்றனனால்.

நிரையம்வான்சுவர்க்கமிரண்டினுமுறுதுநெறியினலுயரிறைபதத்தின்
நரரடைந்திடவேயியற்றுமாவிரதமெவையவைநவிலுவீரெனவவ்
வரசர்கோனுரைப்பவருந்தவரரியையலாதுவேறதிதேவதையில்
தரையினிலேகாதெசியினைச்சிவனுநோன்பில்லையென்றுசாற்றுவரால்.

அறிவினல்மருளாலியற்றிடும்பவங்களறவரிந்தின்றதோரங்கி
யிறைவனுமுராரிதிவசமாவிரதமிதுவலால்வேறியம்புவதில்
மறுவிலாத்துரகமேதமாயிரமும்வாசமேயமொருநூறுங்
குறைவிலர்முகுந்தன்றினவிரதத்திற்சோடசத்தொருபலன்கொடாது.

கருமவிந்திரியம்ஞானவிந்திரியமிவைதெசத்துடன்கருத்தார
நரர்செயும்பவங்களரிதினவிரதநன்சறியாதவரெனினுந்
தரையினோர்வியாசந்தனினிணமருந்தாதிருந்திடினுந்தபனன்ற
னிரதம்வந்துறவேகெடுமிமமெனவாண்டெரிந்திடச்சமனுலகேறார். 11

கயைபகீரதிபுட்கரமுயரேவைகாசிபாரிணையிலாயாறனை
தயையுடைத்தவர்வாழ்சந்திரபாகைசமனிலாக்கவுசாமிவேணி
நயமிகுகுருக்கேத்திரமுதலானநற்றலமானவையெலவும்
புயல்வணமுராரிகலதினவிரதம்போலநற்கதியையீயாறு. 12

திருவிளையகனும்மிறைதினவிரதஞ்சிருறுகற்பகவிருக்க
மருளறவுயர்சிந்தாமணியிலங்குநவநிதிவறனைமேகாய்செடவே
தருமமோடொத்தகாமமுத்தியினைத்தருவபோற்சனனபாவங்க
ணரர்களுக்கொருவநல்குமென்றுரைத்துநற்றவர்பின்னருமுரைப்பார்.

தெசமியினொருபோதருந்திமாமுராரிதினந்தனிற்சத்துவரிலாதார்
பசிகெடப்பயம்பால்கிழங்கிவையயின்றுபவமறவிராத்துயிறுறந்து
வசையிலாதுயருந்துவாதெசிதன்னின்மறுவிலாவடிசிலநுகர்ந்து
நிசியினத்தினத்தினனம்விரும்பாமல்நெறிசெயவாரரிபதத்துறுவார். 14

சுத்தமாமேகாதெசிவிரதத்தாற்றலங்குவர்பிதுத்திரள்மகிழ்ந்து
குத்திரமறவேதெசமியின்வேதைகுறுகியவத்தினமொழிந்து
பத்தியினுயருந்துவாதெசிதன்னிற்பவமறவனமருந்தாம
லுத்தமத்திரையோதெசியிற்பாரணையாயின்றவரரிபதத்துறுவர். 15

தெசமிவேதையினைக்கூடியவேகாதெசியினில்விரதஞ்செய்யாமல்
வசையிலாதுயருந்துவாதெசிதன்னில்மருவுறுமனமருந்தாமற்
சுசியுறுந்திரையோதெசியிற்பாரணைசெய்சுத்தர்கட்கரவிறைசுமக்கும்
வசுதையைச்சற்பாத்திரமறையோர்க்குவழங்கியபலன்கள்வந்துறுமால்.

சிரவணங்கூடுந்துவாதெசிவரினேகாதெசிதன்னுடன்சிறப்ப
விருதினந்தனினுமனமருந்தாமல்மறுதினத்திணையில்பாரணையா
யரிதினவிரதஞ்செயினருந்தவஞ்செய்முனிவர்க்குமதிகமாயுயர்ந்து
மருவமர்துளவமணியிறைபதத்தின்வயங்கிவீற்றிருப்பர்களன்றே. 17

பாபமார்தெசமிவேதையுமின்றிப்பரணிமங்களன்றினமலாமற்
சாபமாதத்தினுயர்ந்திடுமேகாதெசிமகாவிரதத்தைத்தரித்து [ர்
மாபலன்கொடுக்குந்திருத்துவாதெசியின் மகிழ்வொடுமோதனமயில்வோ
நாபியினயனைப்படைத்தநாரணன்றனலமுறுங்கதியைநண்ணுவரால்.18

தெசமியின்வேதையுறப்பவமுறுமேகாதெசிவிரதத்தைச்செய்வோர்
சுசியுறமறையோர்க்களித்திடுந்தானந்தலம்கிடச்செயுமகாபலன்கள்
வசையிலாவிரவியயிர்விளங்கிடவேவசுந்தரைவளைந்திடுமிமமும்
நிசியுமற்றனபோலகன்றவர்தவமும்கிட்பலமாயிடுமென்றே. 19

தரைமிசையுலப்பில்வருடமுற்றிடநற்றவஞ்செய்சம்பாசுரன்றனக்கு
மரைமலரயனீயிரவிதேர்வலன்வருமுதையத்தினிற்றெசமி
பரவிடத்தொலைவில்பவமுறுமேகாதெசியுபவாசத்தைப்பரிப்போர்
தருமசெய்தானந்தவமகாபலன்களழிந்திடத்தவலடைந்திடுவார். 20

பஞ்சகவ்வியத்தாற்சுசியுறும்பாண்டம்பவமுறுஞாளிதீண்டிடவே
பஞ்செகத்துறைவோரனைவருமிளிவாயறைவபோற்றெசமியின்வேதை
நஞ்செனப்பரவநலனிலாவேகாதெசியுபவாசநன்றென்பார்
விஞ்சுமாதவங்களழிந்திடுமுயர்நால்வேதத்தையிகழுவார்குலம்போல். 21

தரையினிற்றெசமிவேதையுற்றிடுமேகாதெசிநோற்பவர்தருமம்
பரர்கடோடோயுமனைவிசெயன்றுணர்ந்துமவடனைப்பரிசிக்குமறிவில்
மருளனைவரித்தசிரார்த்தகாலந்தனிற்செயுந்தானமுமறலி
விரவிதேர்வலவனெழுமுனமியற்றுஞ்சந்திவந்தனமும்போலிறுமால். 22

அரிவையர்புணர்ச்சியனந்தலதயிலமசத்தியம்நீசரோடறைதல்
தரையில்வாணிபங்கள்பயிர்செயலசமரநெறிசெலவிலங்குதாம்பூலம்
விரைவினிகற்றிச்தெசமியின்வேதைவிழுங்குமேகாதெசிவிடுத்தே
யரிமகிழ்ந்திடுநற்சுசிகொளிவ்விரதமடைகுவருயர்பதத்தடைவார். 23

ஆதலாலரசவரிடலாற்பினர்வேறதிகதேவதைகளுமில்லை
வேதசாத்திரம்போல்விளங்கியவசனமில்லையிகழ்தெசமியின்வேதை
பேதமற்றுயரேகாதெசிவிரதம்போலவேயிலங்குநோன்பில்லை
யிதுமிச்சயமாமுணர்தியென்றறைந்தாரிணையிலாமுனிவர்களம்மா. 24

சரியிலாவிரதந்தனையருந்தவர்கள் சாற்றிடவரசர்கோனிறைஞ்சிப்
பரிவுடனவரையமருமாச்சிரமத்தேகுவீரெனப்பகர்ந்தருளி
யரிதினந்தெசமிதுவாதெசிமூன்றுதினததினுமிருதரமனமுண்
டொருவுடைத்திருநற்சந்தியாவல்லியுடனனுட்டித்தனன்மாதோ. 25

தெசமிவேதையினையொருவியவேகாதெசியினினிராத்துயிறுரந்து
வசையிலாமுனிவர்மறைநெறியுறவாண்டறைந்திடும்வசனத்தின்படியி
னசைவிலாதுயரும்விரதமோங்கிடவேயரசர்கோன்மகிழ்வொடுநடத்தி
திசியகன்றிடவானிலங்கியவிரவிநிகரெனவுலகினையாண்டான். 26

மறுவிலாவுயரேகாதெசிவிரதமண்மிசையனைவருஞ்செய்ய
நெறியுறுமுனிவருரைத்திடும்படியினிசரிலாத்தெசமிதான்முதலா
யிறைவனுமுராரிதினவிரதத்தையெழிலுறச்செய்குமினென்று [குமான்
பறையறைந்திடுமென்றுரைததனன்றானுள் படியெலாம்பார்த்திபர்பெ

அரிதினமதனிலுணழிந்திடுமெனவங்கறைதெசநிடேதத்தையகற்றி,
வருடமெட்டுறவேவளர்ந்தவர்முதலாய்வயதெண்பதானவரீறாய், விரதமி
வ்வகையிற்செயாதிடிற்றுரைதையனைசகோதரர்கள்வேட்டிடுமில், லரிவை
புத்திரர்கள்சகாவெவரெனினுமவன்மன்னெனப்பறையறைந்தான். 28

பறையறைந்திடலுமுருக்குமாங்கதனுள்பழுதிலாதுயர்செம்புத்தீவி
னுறைகுவோர்மகிழ்ந்துதெசமிதானமுதலாயுயரரிதினத்துமாவிரதம்
நெறியுறநடத்தித்துவாதெசிதனிலோர்தரமனமருந்தியேநேரி
லிறைவனுமுராரிபதத்தினேகுவராலியமன்வாழ்நகரம்புறபட்ட. 29

அறனுறுமரசன்றேவியுந்தானுளவனியிற்சனங்களுந்தானு
மிறைவனுமுகுந்தன்றினவிரதத்தைநடத்தியங்கிலங்கிடுநாளின்
மறவிலாநிருபன்சந்தியாவலியையணைத்திடமற்றவள்வயிற்றி
னெறியுறச்சனித்ததாங்கவினுறுகுமரனிகரிலாவசந்தனைப்போல. 30

ஏதமில்குமரனுதையமாகிடலுமிலங்கிடவருக்குமாங்கதன்றான்
மோதுதுந்துமிகாகளஞ்சினம்பணிலமுழங்கிடவந்தணர்மன்றயார்
சாதகம்நடத்தியுயர்தன்மாங்கதனெனுறழகியபெயரினைச்சாற்றித்
தீதகல்சவுளமுடித்துபநயனஞ்செய்தனன்றமரெலாமகிழ. 31

கவினினல்மதனனவிர்நிலவிரவிகருத்தினற்புந்தியாலுசன
னுவமையிலளியாலுடுபதியெனவேயோங்குசன்மாங்கதனியுதக்
சவளமார்கரியின்பலத்தையுற்றவனைக்காவலன்மகிழ்ந்திடவளர்ந்து
புவியினேழ்தீவினரசரையமரிற்புரந்தரன்றிகைத்திடச்செயித்தான். 32

எத்திசையினும்நேரரசரைச்செயித்தங்கேழுதீவுறுபுவியாண்டு
வித்தியாதரரைச்செயித்தவர்பயந்தவித்தியலோகையோடெண்மர்
கித்திலநகையாருடன்றொலைவிலாதநிகரில்கன்னியர்களைக்கொணர்ந்தே
யுத்தமமிகுதன்மாங்கதன்பிதாவுக்குவப்பொடுமணம்புணர்வித்தான். 32

சரியிலாதுயர்தன்மாங்கதன்றானேழுதீவினினுறுஞ்சனங்க
ளரிதினவிரதஞ்செயும்படிபறையையறைந்துதாய்தந்தையுந்தானும்
பரிவுடனனுட்டித்திடச்சமனுலகுஞ்சுவர்க்கமும்பாழ்படப்படியி
னிருவினையறவேயெவர்களும்பரமபதத்தினிலேறுவரன்றே. 34

இரவிபுத்திரனுமியமனுண்டியற்றங்கருமமுமிலாதுமூவேழாம்
நிரயமேடுறநீள்புற்படர்ந்ததிர்சென்னெறியினிற்றுவாதசாதித்தர்
பரவியதெனவேவமையும்வெம்மையும்போய்ப்பழுதிலாச்சித்திரகுத்தர்
வரைவதுமிலாமற்சுவர்க்கமும்பாழாயினவரிமாவிரதத்தால். 35

மனைவிதன்வசனங்கேட்டிடும்புருடன்வாழ்வெலாமழிந்தனசிவனைத்
தினகரன்சுதனுமறலியுள்ளழிந்துசித்திரகுத்தர்தம்முடனே
வனமிசையமரும்பிரமனையணுகியவனடியிறைஞ்சியாண்டெழுந்து
துனியுறுமுளத்தனிருகரமசனுற்றொழுதுநின்றிவையிவைசொல்வான்.

நீயெனக்களித்தபதம்படியானுநிருபனுல்கலைகுலைத்தலைந்தே
யோய்வுறுமுடலோடியானசெயுங்கருமமிலாதிவணுற்றனனெனநற்
றூயமாமலரோனவன்றனைநோக்கித்துனியுனக்கறவொருமனிதன்
காயமத்திறனைப்பகருதியெனலுங்கதமுடன்சமனிவையுரைப்பான். 37

விறலருள்மிகுந்தவருக்குமாங்கதனும்வேந்தன்மாமேருவைச்சூழ
வுறுமெழுநிலத்தீவினினமர்சனங்கள்பவமெலாமொழிந்திடாகல
மறுவிலாவுயரேகாதசிவிரதம்நெறியுடன்செயும்படிவகுப்ப
வறனுறுசுவர்க்கம்நிரயமுற்றிடாமலரிபதத்தடைவரென்றறைவான்.

விடங்கர்த்திடுமோகினியெனையிளிவாய்விடம் விடம்பிடவிதியிசோப
மடரினுமாலம்பரந்துசூழுறினுமளக்கரின் வடவனல்வரினும்
வடவரைமூடுகியென துமேல்விழினுமாதவன் றனக்குறதினத்தி
னடிசிலைநுகரேனெனவறனறியுமரசர்கோனறைந்தனனம்மா. 199

தந்தையீதுரைப்பங்கரிலாச்சிறுவன் சந்தியாவல்லியையழைத்துக்
கந்தமாமலரோன்குமரியென்னுரையைக்கடக்கலாயென்றுமன்னவனை
மந்தரவரையினிபத்திகொள்மொழியின்மாறினத்தனமருந்தெனவே
யெந்தையீதறனன்றெனவொருவிவாளிவள்முனிவகற்றதியென்றான்.

தனையனீதுரைப்பச்சந்தியாவல்லிசதுமுகன் புதல்வியைத்தழுவி, வனிதையர்க்கதிகமாயினைசவினுல்வயங்கினையவன் மகளாகும், புனிதைநீயானுய்வேதசாத்திரநற்புராணத்தின்பொருளினையுணர்ந்தா, யினியவுன்மகுணன்றனையிகழ்வாகவெண்ணலையெனத்தனித்துரைப்பாள். 201

அறனுறவவனியமர்ந்திடுஞ்செனங்களழிவிலாமுராரிதன்பதத்தி
னிறைவுறமறலிபதமழிந்திடவேங்கரிலாவரிதினவிரதங்
குறைவறவுலகமெங்கணுநடத்துங்கொழுனனைக்குருவுமச்சுதனு
மிறைவனுமெனநீகருதிடின்வடமீனெனப்பதிவிரதையாயிருப்பாய். 202

மறனுறகருமமிழைத்திடுகெனவேமகுணனவன்மொழிந்திடினு, மறனிவையெனத்தானவன்சொலைமருமலியற்றுவாரருந்ததிக்கற்பை, யுறவனிதையர்கடொழில்கொழுனன்றுனுரைத்தசொல்மறுத்தவன்றனக்குக், குறைவினைமுயலு மடநல்லார்ங்கிரையத் தழுந்துவர்கோடிவினைவினைய. 203

ஆதலிற்பிரமன்குமரியுன்சொலையகற்றிலேனென்றுமந்தரத்தின்
மீதினினரசன் விளம்பினேனெனவேயஃதினைவிபரிதமாகச்
சீதரன்றினத்தினைத்தினையருந்தித்தீயனுநரகினினடையேன்
றேருதிறையாகிலுனக்கடர்பவங்களுறமெனவின்னமுமுரைப்பாள். 204

என்னுயிர்க்கணவனுயகன்னவனையாறெருவிடும்படியிவணீ
மன்னினுயென்றுவயிரமுன்பேரில்வைக்கிலென்சினமுளதாகி
யின்னலைத்தருமிவ்வழியினற்கொழுனத் துரோகியுமிறைத்துரோகியுமா
யுன்னினும்பயத்தையளித்திடுங்கோதத்துளேயெனவுனதுபாற்சேறேன்.

நீயெனக்கிதமாங்கொழுநனுக்கன்புங்கிறைத்தவளாமெனுமகிழ்வாற்
றாயநற்றுணைவியெனவுனைப்பிரியஞ்சுரந்திடவமருவனதனுல்
நாயகத்துரோகியாகிவெங்கிரையத்தழுந்துவையென்றிவைநவின்றே
னுயவையறிந்துன்கணவனுக்கிடராமொழியகற்றென்றுபின்னறைவாள்.

அளிபொறைகொடைமெய்யறநெறிதிடமால்விரதமீதெல்லவுமுளதா, மொளியுறவுலகாண்டெரெழுதிவையொருதினத்திற்செயித்தெய்தும், வளர்பிறைசிவனுங்குமரனையுடையமனனவருந்தாதிந்தத்தீச்சொல், லிளையவயெனினுமிறைஞ்சுவன்றவிர்கென் றிருகரம்பிடித்துவேண்டினளால். 207

சந்தியாவல்லியினியநன்மொழியாற்றகாதவிச்சொற்றவிர்கெனவா
னிந்துநேர்வதன வயன்மக்களவளைநோக்கியீதியம்புவாளுலகெண்
மைந்தனைப்பயந்தாயருந்ததியெனவும்வயங்கியகற்பினையுடையாய்
சுந்தரமிகுத்ததுணைவியுன்சொல்லைமறுக்கிலேனென்றுபின்சொல்வாள்

அரிவையுன்மொழியைமறுத்திடாதரசனச்சுதன்றினத்தனமருந்தென்
றுரைசெயும்வசனமொழிந்தனனினியானேதுவேனதுமிகுகுமார
மெரியிடைவிழவும்விடத்தினைக்கொளவுமிரைதிரைக்கடலமிழ்ந்திடவும்
பரர்மனைவியரையணையவும்நினையும்பாவியரில்லையெனப்பகர்வாள். 209

குயவரிமிருகாபதிமுனின்றிடவுங்கொடியபாம்புடன்மருவிடவுங்
கயவர்களுடன்சூதாடவுமேத்தியந்தனையருந்தவுங்ககனத்
துயருமால்வரையினுச்சியிற்றுழவிழவுநெஞ்சுறுபவரில்லை
யயன்விதித்திடலாலவனியினிவையையடைந்துசெய்வார்களுமுளதால்.

ஆதலினிவைசெய்கயவரைப்போலவறனறமனத்திடைநினைக்க
வோதுதற்கரியதாமனக்கோட்டமுறைத்திடவுன்னினேனளப்பில்
பாதகிதையில்குறாரயாபாரிபழுதுறுபவத்தினைமுயலுங்
காதகியெனவேதன்னைநிந்தித்துப்பின்னருங்சழறலுற்றனளால். 211

அரிவையரிடத்திற்கருவினைவிளைக்கும் புருடன்சற்குணத்தினைய
டைந்தாற், சரியினன்மகவுபிறந்திடுமிகழ்துர்க் குணத்தினிற்சார்ந்திடி
னவத்த,மருளுறுமதலைசனித்திடுமதனால்மலரயனுன்கொழுநனுக்குத்,
தரையினில்விரோதமியற்றெனவளிக்கத்தாமதப்புத்தியாயினனால். 212

தாமதப்புத்திமிகுதலாலுனவுஞ்சாற்றவுங்குறாரமாமுறையைப்
பூமகளெனவேயெழில்கொணின்முனரிற்புகலுவேனெனவிவைமொழிய
காமனைநிகர்க்குஞ்சிறுவனைப்பயந்தகவினுடைச்சந்தியாவல்லி [க்
நாமகள்கொழுநனுதவிடவயங்குநாரியைநோக்கியீதுரைப்பாள். 213

அரிதினத்தன்னமருந்திடாதரசனறனெறிவழங்கியேவாழ
வரமருளியநீயெனதுயிர்நிகரின்மதலைதன்ஞவிவேண்டிடினுக்
தருகுவன்பதிக்கோரிடருறிற்றனமும்பிராணனும்வஞ்சிக்குந்தையல்
கிருமியாய்ச்சனிப்பரதற்கியான்றிடமாய்க்கண்டதுகேளெனப்பகர்வான்.

சிறியளாகியயான்பிதாவகந்தன்னிற்றிகழ்வொடுதிரிந்திடுநாளின்
நெறியுறவயங்குமெந்தையோமத்தைநிறைத்திடப்போழ்ந்தவித்தனத்திற்
பிறையவிரெனவோரங்குலிப்பருமம்பெறவொருகிருமிதோன்றிடலும்
பறவையிற்கள்வமலிந்திடுகொரடம்பற்றிமூக்கதனிற்கொத்தியதால். 215

நாசியிற்குத்தியெடுக்குமுன்னேட்டநானதிற்காகமும்விடுப்பக்
காசினியதனின்விரணமெய்யுற்றுக்கலங்கியங்கயர்ந்திடும்புழுவை
நேசமோடதனினுடலினிற்கரத்தால்நீரினைவிடுத்திடத்தெளிந்து
பேசியஞானமுறக்கழிபிறப்பிற்றான்செயும்பெரும்பவமெல்லாம். 216

தரையினிற்றவழ்மெய்தவளமாங்கிருமிசாற்றும்யான்சழிபிறப்பதனின்
விரையுறத்தியானம்விளங்கியகவுண்டினியபுரிமேவிமறையோன்
பரிவினிற்பயந்தமகளியானெந்தைபழுதறுசாத்திரபுராண
மருமறையறைந்துகவினுறவிளங்குமந்தணன்றனக்கெனையீய்ந்தான். 217

மறைநெறிமலியவயங்கிடுமெங்கதமகிழ்வினாலெனக்கெணில்கலன்க
ணிறைவுறவணிந்தென்மருகனுக்கவிரார்மிகரிலாப்பூடணமுதவிக்
குறைவறவுதவெறுக்கைநற்கோக்கள்கொடுத்திடக்கணவனாரெய்தி
வறுமையற்றிடநீண்டகலகந்தன்னினிருவரும்வாழுநாடன்னில். 218

வேறு.

மனையிடத்தினென்னுடனேவாழ் மறையோன்மருளழித்துத்தனத்
தைவாங்க, வினியசொல்லால்மெய்போலப்பொய்பகருமொருகணிகைத
னையிச்சித்துத், தினமுமவடனைப்புணர்ந்துதிகழ்தனங்க ளாபரணஞ்சே
ரவீய்ந்து, வினையுறவேவெறுமையனாய்மேவியென்றன் சலன்களையுந்த
ருதியென்றான். 219

பதிகலனைத்தருகெனலுமழியாமலெனைப்பயந்தானமருமூரிற
கதுமெனயானெய்திடலுந்தனந்தேடிக்கணிகையினைப்புணரவேண்டி
யுததியின்மேலோடுமரக்கலமீதினுற்றவன்றானேகலோடும்
விதமுறுமாசுகமறையமேவியவேழாயிரவோசனையவ்வங்கம். 220

கவடமரக்கலமீதிற்கயவர்கள்சென்றடர்ந்திடநீர்க்கடலினோடு
முவமையில்வங்கத்தினுறுமவர்களுமவ்வுததியிடையமிழ்ந்திமாளக் [டு
குவிநகிலிற்கணிகையின்மேற்காதலுறுமென்பதியோர்மரத்தைக்கொண்
பவனனெழும்விசைபோலப்பரவையினிற்பரம்பதனைச்சேர்ந்தானம்மா.

விதிவலியாலென்கொழுனன்வேலையினைநீந்தியொருவரைமீதேறிச்
சுவைமிகுராமிரதமுறுமுந்திரிகைப்பழமருந்தித்தூயதாய
நதிமிகுத்துப்பெருகருவிநாரமிருகரத்தினிடைப்பருகிமேக
பதமுறமோர்மராமரத்தினிடைத்துயின்றான்பரவுமிருட்கங்குறன்னில்

தரையினுயர்வானீரத்தடியினெனைச்சார்கொழுனன்றுயிலும்வேலைத்
திரிபுரைதசேர்காசிதனிற்சிறந்தமருமரசர்பிரான்பயந்தகன்னி
மருவுருவக்குழலியிரத்தினவதித்திரையுறலுமவளைவவ்வி
யிரவினிடையொருபிருதனையதனவ்வரைமீதின் விரைவின்மாதோ.

வேறு.

காசிமனனுதவுமினைக்கரத்தினேந்திக் கனவரையின்கந்தரத்தினி
டையினெய்தி, மாசகலுமலரமளியதனிற்றீயோன் மடியின்மிசையவட
னைக்கொண்டிருக்கக்கண்டான், டோசையுறுமுவரியெனவவன்றன்றே
வியதிர்த்தாப்பியிவளாரென்றுரைத்தலோடு, மாசினுறுமரக்கர்பிரானு
னக்காகாரமாகவிவடனைக்கொணர்ந்தேனென்றானம்மா. 224

அறனறியுங்காசிமன்னனருளுமிந்த வரிவையைநீயருந்தெனக்காகாரமாகக், குறையறவானுயருமராமரத்தின் கீழார் கோதிலாமறையவனைக்கொடுவாவென்ன, நெறியுறுகன்னிகையவளைநோக்கியுன்னைநீக்கியென்னையணைக்கவேகவடமாகி, யறையுமிவன்மொழிநம்பேலென்றுகூறவரக்கியுமீந்தாமெனத்தானகன்றுபோனாள். 225

அரசரெண்ணுங்காசிமன்னனருளுமின்னையணைத்திடுவானெனைவதைப்பானதற்குமுன்னஞ், சரியிலுயர்மறையோனாலிவனைக்கொன்றென்சலமுடிப்பனெனவரம்பையுருவதாகி, யிருநயனமுகிழ்த்துறங்கென்பதியைநோக்கியிருகரத்தாலெடுத்தணைத்தாண்டெழுப்பலோடும், வெருவியெழுபவன்றனைத்தானஞ்சலென்றுவிளம்பியுயர்நிருதிபினைர்மொழிவாள்மன்னோ. 226

இந்தவரைக்கந்தரத்தினமரும்வெய்யவிராக்கதன்றனில்லவனானவனென்பேரிற், சிந்தையறக்காசிமன்னனருளுமின்னைச்சேர்ந்தணைந்திண்டெனைவதைத்தபினரிற்றாய, வந்தண்வுன்றனையடுவனதற்குமுன்னமவன்றனையான்சொலும்வகையினீதான்கொன்று, கந்தனிகர்மறையவவுனுரத்திலென்னைக்கலந்தணைத்துக்காதலியாய்க்கோடியென்றாள். 227

சரியிலுருத்தரித்துநின்றவரக்கிகூறச்சதுமறையையுணர்பவன்றானவளைநோக்கி, நரர்தமக்குமரக்கியர்க்கும்புணர்ச்சியில்லைநலனிலாவெனையருந்தவந்தாயென்னத், திருவுருவாய்வயங்கிநிற்கும்நிருதியுன்னைச்செற்றிடயான்சிந்தையிலும்நினைந்தேனாகிற், குருவினொடுகோமறையோர்தமையட்டார்வீழ்நிரயத்தினமர்வனெனக்கூறலுற்றான். 228

தரையின்வருகாலமதிற்பாண்டுமன்னன்றனயனெனும்வீமனுக்காண்டிடும்பனாய, நிருதர்பிரான்சகோதரியாங்கமலவல்லிநிகரில்லாமனைவியுமாயவனைச்சேர்ந்து, விருதனெனுங்கடோர்க்கசனைப்பயப்பாளென்றுவியாசனருள்புராணமுளவாதலாலே, நரர்களுக்கும்நிருதியர்க்கும்கலவியுண்டுநான்மறையோயெனவவனும்நவிலலுற்றான். 229

நிருதியுன்றன்கொழுநனுயர்பிறங்கலொப்பானெறியிலாதவனையடும்நெறியேதென்ன, வரியமரர்க்கமிர்தளிப்பப்பொருமையாலாண்டாகவத்தினடர்ந்திடுமாவலிதன்மீதிற், சுரர்கள்பதியெழுந்திடும்போதவன்றன்வேலைத்தூய்மையிலாவிவ்வரக்கன்களவிற்கொண்டு, தரையினுயர்மராமரத்தின்வைத்தானென்று தடக்கையினாலெடுத்தவன்கைக்கொடுத்தாளன்றே. 230

நிருதியென்றன்பதியினுக்கீண்டினியசொல்லைநிகழ்த்தியிடுவேலையினிற்காசிராசன், றருபுதல்விநிசாசரனைவெருவிநோக்கிச் சாற்றுவாளெனைவதுவைசெய்யநீதான், விரைவினுயர்மராமரத்தின்கீழில்வைகும்வேதியனைக்கொணர்ந்தவனாலோமஞ்செய்வித், தருளில்நீயவன்றனைப்பின்வதையென்றோதவறனிலானம்மரத்தையணுகினானல். 231

வரையெனவேவருபவனைநோக்கித் தூயமறையவனீகடிதிவனைவதைத்தியென்ற, நிருதிமொழிந்திடவவனுமூரத்தினேவுகிரில்வேலிரவியெனவேகித்திக்கி, னிருளகலவெரிபரந்தவ்வரக்கன்மார்பை நெரித்துயிர்கொண்டிந்திரன்றனிடையினேகப், பரிவினொடுமவளென்றன்பதியைவிம்முபயோதரத்தினணைத்தின்பக்கலவிசெய்தாள். 232

சிந்தையினிற்களித்துயரென்பதியைச்சேர்ந்துசிறந்தநிசாசரியவன்றனொடுமேகிக், கந்தரத்தினிலங்குகின்றகாசிராசன்கன்னிகையைக்கலங்கிலெனவறைந்தேயுன்றன், றந்தையுறுபதியிலுனைவிடுவெனென்றுசாற்றிமடிந்திடுமரக்கன்றனங்கேயே, நந்துமிழுநித்திலங்கள்கலன்களெல்லாம்நலனுறுமென்கொழுநனுக்குநல்கினளால். 233

வேறு.

நேசம்விஞ்சிடவெதிர்ந்தநிருதிபெண்ணனையாகி
மாசறுசுவலின்மாழையமர்ந்திடமறையோனொடு
மேசகன்றிலங்குகின்றவிரத்தினவதியுமேறக்
காசியிற்கடுகிச்சென்றான்கன்னலேழரையின்மாதோ. 234

சுரர்நதிபரவியோடத்துலங்கியகாசிதன்னைக்
கரியுருவாகியூருங்காரிகைமறையோனுக்குப்
பரிவினிற்காட்டியிந்தப்பதியரிதலமாலீய
வரனுறையிடமாய்த்தென்னவந்தணன்பகரலுற்றான். 235

அரிதலமாயகாசியரனுறைவிடமாந்தன்மை
யுரையெனக்கரியாயூர்வாளுணர்த்துவாளெண்கணோன் ன்
சிரசினைப்பரசுபாணிகொயவவன்செங்கைதன்னை
விரைசெறிகமலன்சென்னிக்கபாலம்விட்டிலதாலம்மா. 236

முண்டகன்சிரசைக்கிள்ளுமயலகன்வெரினினின்றான்
வெண்டலைநிறையவெங்குமிரந்திடின்வீழுமென்றே
எண்டிசைவிசும்பினெங்கும்பலியெனவிரப்பதாகிப்
புண்டரீகக்கணுதனிலங்குபாற்புணரிசேர்ந்தான். 237

அங்கையிற்கபாலமேந்துமரன்பயோததியைநண்ணி
மங்குல்போல்வயங்குமாலைவழுத்தியேபலியென்றோதச்
செங்கையங்குலியினூரிற்குலிசநீர்தெறித்தலோடும்
பங்கயன்கபாலம்விண்டுபொடியினிற்றுகளாய்வீழ்ந்த. 238

கேசவனருணநீரைத்தெறித்திடக்கபாலங்கீண்டு
மாசகலவனிதன்னின்மறிந்திடப்பிரமகத்தி
யீசனைவிடாமற்பின்னரிடபவாகனனோர்நாளிற்
காசிமாதவனைச்சேரவப்பவங்கழியமீண்டான். 239

வேறு.

திரிபதைபெருகச்சிறந்தகாசியினிற்றிகழுமாதவனிடந்தன்னிற்
பரிவுடனமரக்கழிந்திடும்பிரமகத்திபஞ்சக்குரோசத்தை

யரன்கன்றிடலும்பிடித்திடனோக்கிஅதிசெயமிருந்தவாவென்று
விரைவினிற்றிரும்பியரிமுனரெய்தியுமாபதியிவைவிளம்பினனால். 240

மலர்மகள்மகுணனின்னிடத்தினில்யான்வருதலுமகல்பிரமத்தி
நிலமிசைப்பஞ்சக்குரோசமாமதனைநீங்கிடப்பற்றியவதனால்
நலவருளுறும்நீயமருமித்தலத்தைநல்கிடினென்பவமொருவ
விலகுவனெனமாதவனற்கருளியெழிலுறுபிராகையினமர்ந்தான். 241

மாதவனருளவிலங்கியகாசிதனிற்கரமானுறுமீசன்
றீதறவிவணின்மரித்தவர்செவியிற்சிறந்ததாரகப்பிரமத்தை
யோதியாண்டவர்கள்கதிபெறவருளியொளியுறவமர்ந்தனனதனால்
மாதவம்விளையுந்தலமிதுவெனவேமறுவில்வேதியன்றனக்குரைத்தாள்.

அரனெழிலிலகத்தாரகப்பிரமமரித்தவர்க்களியுடனருளச்
சுரர்நதிவயங்கப்பவமெலாமரித்துத்துலங்கியபதியிதுவென்று
திருதியோதிடலுமறையவனுடனேநிகரிலாக்கன்னியுமகிழக்
கரியுருத்தவிர்ந்தவ்வரக்கியும்வனிதையாகிநற்காசியிற்சேர்ந்தாள். 243

புகரிபவுருவைத்தவிர்ந்தவளரசன்புதல்விபூசுரனிவர்வரலும், நகரி
காவலர்கண்டியாவர்நீரெனுஞ்சொல்நவின்றிடவிரத்தினவதிதான், புக
லுவாள்நானிப்புரிமனன்புதல்வி யிவண்ணின்வைகினளெனப்பொறையார்,
நிகரிலென்றந்தைக்குரையுநீரெனவேநிசர்த்திடச்சுவாகுசென்றனனால்.

கங்குலிற்றயிலுமரிவையைக்காணார் கலங்கியந்தப்புரத்துறையு, மங்
கையராற்றுமொலியினைக்கேட்டுத் திகைத்திமென்னன்முன்னெய்திச்,
செங்கையைக்குவித்துச்சுவாகுவென்போனின் றிருமகளெய்தினளென
லும், பொங்கியவுவகையொடும்புரவலன்றன்பொருக்கெனப்புதல்விபா
லடைந்தான். 245

வந்ததந்தையினைத்தழுவியாண்டரற்றியிரத்தினவதிமன்னனைநோக்கி
யிந்தவெவ்விரவிலிராக்கதனொருவனெனையெடுத்திமைப்பிடையேகிச்
சிந்துவெண்டிரைசூழ்சிலையினிற்சேரவவன்மனையாளிவள்செயலா
லந்தணன்கரத்தாலவன்மடிந்திடலுமருவினையற்றதென்றறைவாள். 246

எனைமணந்திடத்தன்மனைவியாமிவளை வதைக்கவெண்ணியநிசாசர
னை, வினையகலமராபதியமர்வலாரிவேலினையிவள்கொடுத்திட்டுவே, துனி
யகன்மறையோன்றுணித்திடத்தோலா யவனையுமென்னையுஞ்சுமந்து, நி
னைவதன்முனரி னிவணடைந்தனளென் றறைந்திவைநிகழ்த்தலுற்றன
ளால். 247

காடமுட்டிடாதகவ்வுநாய்கெழுமாக்கலனுறபஞ்சகௌவியந்தீ
மூடுறபிணம்வேமிடத்தினிற்படியாமுருகவிழலங்கலீதெனநற்
சேடனும்வெருவும்நிசாசரன்கரத்திற்சேர்ந்ததும்பகிரதிபோல
வேடவிழ்தொடையாரரசயான்சுசியாயிவணடைந்தனனெனப்பகர்வாள்.

சுசியுறமறையோனுடனெனைக்காத்துத்துணிசெயும்நிருதனைச்சுருதி
யிசைவலவன்றன்வதைத்திடவியற்றியிவன்றனைக்கொண்கனாய்க்கொள்
நிசரியிதமாய்மகிழ்ந்திடவென்னைநிகரிலாவேதியன்றனக்குத் [ளும்
திசையினைச்செகுத்துச்சிறந்திடுமெந்தாய்கேளெனச்செப்பினளம்மா.

கவினுறுகுமரியிவைகழறிடநற்காசிமன்னிருதியையிறைஞ்சி
யுவமையில்மறையோனுடனுமென்மகளைக்காத்திவணுதவிசெய்மடந்தாய்
நவையகன்றிடுமுன்னாயகன்றனக்கென்குமரியைநல்குவனீதா
னிவரிருவரையுமளியுடன்காவென்றியம்பிடவவளிவைமொழிவாள். 250

எனையுடைக்கொழுனன்றனக்குமன்னவவுன்குமரியையீய்ந்திடினிவளை
யினிமைசேர்துணைவியெனக்கருதுவன்யானெனக்குநீயட்டமிமுதலாய்த்
துனியகன்றிடுநற்சதுர்த்தசியளவுந்துலங்கியபூசைசெய்குதியென்
றனநடையுருவாமரக்கியீதுரைப்பவரசர்கோனிவையறைந்தனனால். 251

புவியினிலங்கவுனதுசொற்படியின் பூசனைவருடங்கடோறும், ந
வையகன்றிடநானடத்துவனெனவேநவின்றுதன்குமரியையனவிற், றவ
ர்மகிழ்ந்திடவாரணச்சொலினெறியாற்சரியிலந்தணன்றனக்களித்தே, யு
வமையில்கலன்கள்சிலதியர்தனங்களுதவினன்காசிமன்னவனே. 252

காசிமன்னருளுங்குமரியுஞ்சிலதிதிரள்களுங்கணக்கிலாத்தனமு
மாசகன்மறையவன்றையுமென்பதியுமமர்ந்திடவரக்கியோர்கரியாய்
வீசுமவாலிலங்கவெரினின்மேற்சுமந்தவேதியன்சூழவிற்புகுத
வாசவனெனவுமளகைமன்னெனவுமற்றவன்றமரொடும்வளர்ந்தான். 253

உததியின்வங்கமுடைந்திடவுயர்ந்துமுயர்வரையேறியுமதன்மே
லதன்மமாரரக்கன்றனைவதைத்திடுமுன்னவன்றனைச்செற்றுயர்காசிப்
பதிமனன்மகளுமிருதியுமுறவேபழிப்பிலாவளகைமன்போல [வே.
விதிவழிச்செயலால்வினையவென் கொழுனன்விளங்கினன்விபவங்களுற

வறுமையாற்கொழுனன்கலன்றனம்வேண்ட மறுத்துநானென்றுமீயாம
நெறிதிறம்பிடவேபிறந்தகத்தடையும்நிகரினின்மூடியாமென்னைக் [ல்
குறைவறுகணவன்சிலதியர்தமையுங்கோதில்பொற்சிவிகையும்வரவிட்
டறனுறவழைப்பவவருடன்மானமற்றவணடைந்தனனம்மா. 255

ஈனமூன்மலியுங்குணத்தியாயினயானெய்தியென்கொழுனனையிறைஞ்சி
மானமுற்றிடவென்சிரசினைவளைத்துவசுந்தரைதன்னைநோக்கிடநற்
றனசீலனுமாய்த்தயையுடைக்கணவன்சலமிலாதெனையுறத்தழுவ
மானினமருளும்விலோசனஞ்சிரந்தமங்கையரிருவரும்பணிந்தார். 256

தேவியரிறைஞ்சியெனதுகால்வருடத்திகழ்ந்திடுகலனெலாமருளிப்
பாவமுற்றிடவாண்டுமெழலுமென்மீதிற்பரிவுடன்கணவன்வாழ்நாளி
னுவியாக்கையினையகன்றிடமடிந்தகன்மனையெய்திடவவன்றன்
றீவிழியடையமுனிந்தெனைக்கொழுனன்வஞ்சகியென்றுசெப்பினனால்.

பதியழைத்திடவும்பிறந்தகத்தமரும்பாவையர்பதினைந்துசெனன
மதன்மமார்காகமெனச்சனித்திடுவராதலினீகலனன்பா
லுதவுதியெனலுங்கொடாதபாதகத்தாலுலப்பிலாவருடமூவேழா
யதமுறுகிரையத்தழுந்தியெண்ணில்லாவிழிபிறப்பாகெனவிதித்தான்.

அந்தகன்கதமோடறைந்திடுமொழியாலளப்பிலாவருடமூவேழாய்ச்
சிந்தையினுனவும்வெருவுறுகிகோதத்தழுந்தியிக்கிருமியாய்ச்செனித்தே
னிந்தவினுதலியிதுவலாதெண்ணிலிழிபிறப்பெணக்குறுமென்று
நொந்திடவிவைதானெவையினினகலும்நொடிகுதியெனவதுமொழியும்.

பூசமுற்றிடுகோள்வளர்பிறையதனிற்பொருந்துமேகாதெசியமரு
மாசகன்றிடநீராடிநற்கதிசேர்மாகமாதத்திடைவரும்போ
தாசினையகற்றும்வராகமூர்த்தியினையன்பொடாராதனைசெய்து
பூசுரருடன்சாகரமிருந்தன்னமறுதினம்பொசிக்கிலிவ்வினைபோம். 260

சுரர்நதியதனிற்றோய்ந்திடவொருவாப்பாவமித்துவாதெசிதன்னி
லரியெனும்வராகமூர்த்தியைத்திருவாராதனமடைவுடனியற்றி
மருளறுமறையோர்க்குயருமாதானம்வழங்கிநற்பாரணையருந்தி
லெரியுறுதிரணமெனக்கழிந்திடுமாலென்றதுபின்னரும்பகரும். 261

ஆடகம்புவியினடியிடுந்தோறுமடைந்திடுஞ்சந்தியாவல்லி
கோடுடைக்கிரியாமுராரியைப்பூசித்திடிற்கதிகொடுக்குமிவ்விரதம்
பாடகமிலங்கும்பதத்தினாய்சனனந்தோறுநீபண்ணினாயஃதிற் [கும்.
சோடசத்தொன்றின்பலத்தினையருளிற்சூழ்வினையொருவுமென்றுரைக்

சாகரமெனவும்வளைந்திடும்பவங்கள்சருகெனவெரிந்திடவுயரு
மாகமாதத்திலரிதினப்பலத்தைவழங்கிடிற்கதிவருமெனயா
னீகுதனலனென்றளித்திடப்புழுவாமுருவினையொருவியாண்டிலங்கிக்
காகமோர்நயனமறத்திரணத்தைக்கடவுமால்பதத்தினிற்கலந்தாள். 263

ஆதலிற்கொழுநனிடரினையொருவியாவியோடும்பொருளனைத்து
மீதலேநலனுமலரயன்மகணீயேதுவேண்டிடினும்யானிசைவன்
ஓதுதியெனவுன்னிகரிலாச்சுதனையுருக்குமாங்கதன்மகிழ்வுடனே
யாதவனவிர்போலிலங்குவாளதனாற்றணித்திடவறைகுதியென்றான்.

தூயமாமலரோன்மகளிவைமொழியத்துலங்கியசந்தியாவல்லி
காயுநாராசஞ்செவிமடுத்தெனவுங்கலங்கியேவிசையுடனறையும்
வாயுவின்செயலால்நிலத்தின்வேர்பறியவலைந்திடும்வாழையைப்போல
வோயும்நெஞ்சினளாயதனையுள்ளடக்கிநகையுடனிவையுரைத்தனளால்.

உத்தமமிகுதன்மாங்கதன்செங்கோலோச்சியீண்டேழுதீவினையுஞ்
சித்தசனெனவாண்டிடுநலக்குமரன்றிசைமுகன்புதல்வியேயுனக்குப்
புத்திரனலம்வாவுனக்கிலாத்துயரமெனக்கிவண்போந்திடாதென்று [ள்
சத்தியமுறவுன்கொழுநனுன்மகனைத் தடிந்திடவுரைப்பனென்றகன்றா

அருளறமொழியுமலரயன்மகளையகன் றுயர்சந்தியாவல்லி
விரைவினிற்கொழுனனடியினையிறைஞ்சிவிநிதருமோகினியுன்னை
அரிதினத்தன்னமருந்திடாதொழியினரசனின்புதல்வனைநீயே [னால்.
பரிவினைத்தவிர்ந்துவதைத்தியென் றுரைத்தாளென்றிவைபகரலுற்றன

அவனியிற்செனித்தநரர்கடம்மாக்கையனித்தியமாதலினுலெண்
டவர்மகிழ்ந்திடநற்சிபிபுரவுய்யத்தசையினைப்பருந்தினுக்களித்தா
னுவமையிறதிசியமரர்கட்சத்தியுதவினனரவினைக்காத்துப்
பவமில்சீமூதவாகனன்கலுழற்குடலினையளித்தனன்பரிவால். 268

ஆதலாலரசவரிதினத்தன்னமருந்திடாதசத்தியனென்றே, யோதி டும்வசைச்சொல்லொழித்துநீயரியி னுயர்பதத்திலங்கிடவேண்டிற், றீத றுமகன்மேற்பரிவினையொருவித்திகழ்ந்திடும்வாள்கரத்தெடுத்துப், போ தயன்மகள்முன் மகன்சிரந்துணித்தி யெனவவன்செவிபுதைத் துரைப் பான். 269

மறுவறமறையையறையும்வேதியரை வதைத்திடும்பவத்தினுமதிக ஞ், சிறுவரைக்கரத்தாற்றுணித்திடும்வினையென் றுரைத்துயர்திசைமு கன்மகளுக், கறனலவிவையென்றறைவனென்றரசனவ்வயினடைந்து தானினது, நெறியுறவுலகம்நகெக்கிடுமொழியை நிகழ்த்துவையோவென ப்பகர்வான். 270

நீயயன்குமரிபிறர்களுக்கறனைநிகழ்த்துமெய்ஞ்ஞானத்தையுடையாய்
தூயையென்றனைச்சீருயருமாதவர்க டுதித்திடும்பெருமையையடைந்தா
மாயவன்றினத்தினனமருந்தேன் றுமகன்றனைவதைத்திடுகென்றுந் [ய்
தீயவிம்மொழியினு றுவனநரகுந்தீரொணுப்பழியுமென்றறைவான். 271

இந்நிலத்திலங்குமனைவியர்தமையுமொருவியென்பிராணநாயகியென்
றுன்னைநான்விரும்பியமர்வதுமுணர்தியுத்தமவரிதினந்தன்னி [ண்
லன்னநீயருந்தென் றுரைப்பதஞ்சுதனையடுதியென்றறைவதுந்தவிர்த்தீ
டென் றுயிருடனீயேதுவேண்டிடினுமீகுவனென்றிவைபகர்வான். 272

என்னலச்சுதன்மாய்ந்திடினியானிறப்பனீதுனக்கெய்துவபழியும்
வெந்நிரையமுமீதகற்றுதியென்றன் றுயிர்க்குயிரானமெல்லியலே
யன்னமேயுன்னைச்சரணமென்றடைந்தேனகத்தடியானுனக்கதனுல்
மின்னிடையணங்கேயருள்மகப்பலியையெனவுரைத்தவளடிவீழ்ந்தான்.

தூய்யவனுகியுலகெலாம்புரந்தசுதன்றனைப்பயந்திடுமரசன்
மெய்யெலாநடுங்கத்தயினியச்சொல்லைமொழிந்தவனடியினில்வீழ
வையுலாநயனிதயைதினையளவுமிலாதுமற்றவன்றனையழைத்து [பும்.
மெய்யனீயெனக்கன் றுரைத்திடும்வசன மறுத்தியோவென்றிவைவிளம்

புவியினினிலகுமரசனீபயந்தபுதல்வனின்னலச்சுதனன்றோ
விவனையான்வதையென்றியம்பலன்விருத்தனுனவுன்மெய்யினைத்திடாம

லுவமையிலரிதன்றினத்திஞேதனத்தைநுகர்கிலேனென்றிடாதருந்திக்
கவுதமமுனிவனுரைகடவாமற்கவினுறவாழுதியென்றாள். 275

இனியசொற்பகருநலனுளார்போலவிருடிகேசன்றினந்தன்னி [கைப்பத்
னமருந்தெனுஞ்சொல் லுரைக்குமோகினியை யழலெழநோக்கிமன்றி
துனியகறருமாங்கதனுயர்பிதாவைத்தொழுதநீயளப்பிலாப்பாவ
வினையம்வந்தடரவசத்தியனுகாதெனைவதையென்றிவைவிளம்பும். 276

அமிர்தத்தையமரர்க்களித்தமால்விரதமழித்திடாதசத்தியனுகாச்
சமன்முனர்நீயாளுலகினிற்செனங்கள்சார்ந்துவெந்நிரையத்தின்வீழா
விமையவரிகழாவறனுறவதன்மமெரிந்திடவெனதிடத்தன்பு [தும்
கிமிடமாத்திரையுங்குறைந்திடாதெனைக்கொன் றுயர்பதத்தேகெனகிசழ்த்

வினைகளைந்துயருமுராரிமாறினத்துவிரதபங்கமுமுறுவண்ண
மனைகளிப்புறவென்பிதாவெனும்நீயுன்னங்கையின்வாளினுலென்னை
முனிவர்கள்மகிழத்துணித்தியேலிலங்குமுகுந்தலோகமுமெனதாகு [ன்
மனைவிபுத்திரரென்றெஙியளியுறுர்கள்மறுவில்மெய்கிறுத்துவாரென்று

அரனிடர்களைந்தபரன்றினவிரதமழிந்திடாதென துசிற்றவை
யுரைமறுதுயர்சத்தியமுறவென்றன்சிரத்தினை யொல்லையிற்றுணித்துத்
தரையினிற்றசைதோல்கறையுறுங்குரம்பைசாய்ந்திடிற்றிவ்வியசரீரம்
வரவரிபதத்தினிலங்குவனென னுமன்னவன்றெளிந்துவாளெடுத்தான்.

அரிதினவிரதபங்கம்வந்துறுமலரசன்றன்சுதன்சிரங்களைய
விரவியினவிர்போலிலங்கியசுடர்வாளெடுத்துத்தன்கரத்தினுற்சுழற்ற
விரைசெறிகமலத்தயன்மகளவனைவிலக்கிநீசிறுவனைவதைத்து
நரகிடையுறுமல்முராரிநற்றிதியினனமருந்துதியெனநவின்றாள். 280

சிறுவனைவதைத்தறருமமன்றுயர்மாறினத்தனமருந்தெனச்சினேக
முறுமவரெனவேயயன்மகளுரைப்பவுவணமயில்சந்தியாவல்லி
யறனுறுமரசமறலிதன்மொழியாலயன்பரன்விரதத்தையழிக்க
நெறியறவிடுப்பவருமிவளவச்சொல்நீதியன்றென்றிவையறைவாள். 281

அரிதினவிரதமழிந்தகலவனியமருவோர்சமன்முனரடைந்து
நரகின்வீழ்வகைநான்முகன்வகுத்திடவேநண்ணியமோகினியுரைக்கும்
விரகினையிகழ்ந்துன்சிறுவனைவதைத்துவிளித்திடுமறலிதன்சிரசிற்
சரியினுன்னடிவைத்துயர்பரன்பதத்திற்சாருதியென்றிதம்வேலை. 282

இருகரமிசைவச்சிரமணிக்கடையமிலங்கிடநித்திலவடங்க
ளுரனுறக்கலன்கள்வயங்கிடக்குறையிலொளிசொழுங்குண்டலந்திகழ
விரைசெறியலங்கலலைந்திடவதனம்விளங்கிடநகையுறந்கிரீடச்
சிரசினையுருக்குமாங்கதன்முனரிற்றெறுவெனநீட்டினனவன்சேய். 283

தரைநடுங்கிடநீள்சாகரங்கலங்கத்தமனியப்பொருப்புகின்றசைய
விரவியுஞ்சுழலவுருக்குமாங்கதன்கையிலங்கியவாளினைவிதிர்த்து

விரைவினிற்றருமாங்கதனெழிற்கழுத்தின்வீசியோச்சிடவுயர்நேமிக்
கரமதாற்றடுத்துக்கருடவாகனனுய்க்கருமுகில்போலமாலடைந்தான்.

திருவுரத்திலங்கத்திருக்கரமதனிற்றிகிரிசங்கிலங்கிடச்சிரசிற், கரு
வரைமிசையிற்கதிரெனமவுலிகவினுறக்கலனெலாம்வயங்கச், சுரர்மழை
பொழியச்சதுமுகன்பணியத்துந்துமியுவரிபோன்முழங்க, விரைவினிற்ற
ருமாங்கதன்கழுத்துறும்வாள்விலக்கியேதோன்றினன்விமலன். 285

திருக்கிளர்ந்திடநற்கவுத்துவமணிவில்லிடத்திகழ்மாயவன்றோன்ற
உருக்குமாங்கதமன்னுவமையிறருமாங்கதனுயர்சந்தியாவல்லி
பொருக்கெனவயங்குங்கருணையங்கடலைநயனநீர்பொழிந்திடநோக்கி
யிருக்கெசுச்சாமவதர்வணவேதத்திசையுறப்போற்றியாடினரால். 286

நயனநீர்பொழியத்துதித்துநின்றுநலனுறுமுருக்குமாங்கதனைத்
தயையுடன்முராரியெழிலுறநோக்கிச்சதுமுகன்வரவிடுந்தையல்
மயல்விளைத்தனேகவிபரிதஞ்செயவுமகன்றனைவாளினுற்றணித்தே
யியல்புறமனவென்றினநலவிரதநிறுத்தினையுனக்கெதிரிலையால். 287

செகமெலாமுயவேசிறந்திடுமேரசதிடவிரதத்தினைச்செயுமிப்
புகழயனழியுந்தினத்தினும்பொன்றுதெனவிவைபுகன்றிடுந்திருமால்
நிகரில்மன்னனையுமவன்சுதன்றனையுமணைத்திடநெறியுறுபொறிமான்
மகிழ்வுடனிணையில்சந்தியாவலியைமார்புறத்தழுவினள்மாதோ. 288

அரியுறத்தழுவவுருக்குமாங்கதனுமவனருளுத்தமமனனுங்
கரமிருநாலும்வயங்கிடத்திகிரிவலம்புரிகவினுறவேந்திப்
பரனுருவெனவங்கிலங்கிநின்றேத்தப்பழிப்பிலாச்சந்தியாவல்லி
திருமகடழுவவவளுருத்தரித்துச்சிறந்துதாள்போற்றினள்மாதோ. 289

வித்தியலேகைமுதலரிவையர்கள்விதியினையுந்தியுனுதவு
மத்தனைத்துதிசெய்தாடியேமகிழவவரொடுமுருக்குமாங்கதனை
யுத்தமமனத்துச்சந்தியாவல்லியுயர்தருமாங்கதனுடனும்
வித்தகக்கருடன்மிசையினின்முராரிவிளங்கியபதத்தினிற்சேர்த்தான்.

தாரணிமிசையிலரிதினவிரதநிறுவுமன்சார்நெறியெல்லாம்
தோரணநிரையமலர்மழைமலியத்துந்துமிகாகளஞ்சின்னம்
வாரணமுழங்கத்தீபதூபங்கள்மடந்தையரேந்திடநிகரி
லாரணங்கிளரயாழொலிமிகுப்பவச்சுதன்பதத்தினிலடைந்தான். 291

வரைமரமுருகவீணைவாசித்துமதனசாத்திரத்தினூலுருக்கி, விரக
முற்றிடநற்கலவியைவிளைத்தும்விபரிதமுறுத்தவுமிதனைத், திரணமாய்
நினைந்துசுதன்றனைத்துணித்துச்சீதரன்பதியிடைச்சேரு, மரசர்கோன்
செயலினிடங்கொண்மோகினிமின்னயர்ந்தனள்புவியிடையம்மா. 292

அரிவரவுருக்குமாங்கதனுயர்ந்தகெதியிடையடையமோகினிமின்
றரையினிடரினயர்ந்திடவிதனைச்சமன்மொழிந்திடவயனெய்தி

நிருபனுன்மாயைக்ககப்படாதழிவில்கதியினிற்புகுந்தனனீதான் [லே.
விரைவினின்வரம்வேண்டளிப்பம்யாமெனநற்சுரரோமெம்விளம்பிமெம்வே

புகழுறுமுருக்குமாங்கதன்பரிவாம்புரோகிதன்றிரிபதைதன்னி
னகமருடணநீர்படிந்தரிசெபத்தைமுடித்தபின்னவனியினெய்தி [த்தி
நிகரில்மோகினியால்நிருபர்கோன்சுதனைத் துணித்தயர்நேமியோன்பத
னிகழ்வில்சேயுடனுமனைவியருடனுமெய்தியசெயலினைக்கேட்டான். 294

பதியினுக்கிடர்செய்யயனருள்குமரிபாதகியாமெனமனத்திற், கத
மூறவவளுக்குறும்வரமளிக்கக்கருதிநற்சுரரொடுமெய்துஞ், சதுமுகன்மு
னரினடைந்திவண்மகுணத்துரோகிசக்கரவரித்துரோகி, யிதுவறிந்திரு
ந்தும்வரங்கொடுத்திடவேயிசைந்ததேனென்றவன்மூனிந்தான். 295

புகழுடைப்பதியின்றுரோகியுமாகிப்புயல்வணன்றுரோகியுமாகி
யிகழ்வுறுமிவடன்னுடலெரிந்திடவாண்டிருளுறுபவமடர்சிவன்
சகலலோகத்துமிருப்பிடமிலாமற்றிரிகெனச்சபித்தபின்னிவளை
யகல்கிலார்வரங்களருளுவாரெவருமடைகவிச்சாபமென்றறைவான். 296

அரிதினவிரதஞ்செயுமவர்தம்மையிதுதவிர்ந்திடுமெனவறையுந்
தரையினுற்றவருமிவடனைப்போலவிடருறுவாரெனச்சபிக்க
விருளகனெறியினுறும்புரோகிதன்முனியம்பவக்கணத்துடலெரிந்து
வெருவிமோகினிதன்சிவனேகிடலுமயன்சுரர்மெலிந்துபோயினரால்.

தரையினிற்குரம்பையெரியமோகினிமின்றயங்கியசுவர்க்கத்தினெய்த
யரிதினத்துரோகிமகுணனுக்கிடர்செய்யவத்தியென்றடித்தவர்துரத்த
விருபதோடொன்றுகிளையமுற்றிடலுமிவள்கொடும்பாவியென்றதனின்
மருவுவோரரற்றநரகுகாவலர்கள்மறித்தடித்தோட்டினர்மாதோ. 298

உவமையில்சுவர்க்கநிரையமுற்றவர்களுறுகலேயென்றடித்தோட்டப்
புவியினிற்றனேழுலகினின்விரைவிற்புகுதலுமதினுறுமாக்க
ளவுணர்களியக்கரரக்கர்கணடுங்கியரிதினத்துரோகியாயளப்பில்
பவமுறுபதகியகல்கெனக்கதையாற்றகர்த்திடப்பாறினளன்றே. 299

தரையினிற்கீழேழுலகினுள்ளவர்கடியினுல்மோதியேதுரப்ப
வரைகடல்வடவையடவிகாசினியினுறைவவண்வைகுபூதங்கள்
விரைவினிற்றுரத்தவரற்றியேதிரிந்துமீளவும்பவங்கொள்மோகினிதான்
சுரரொடுபிரமன்றனையடைந்திருக்குமிடமிலேயென்றிவைசொல்வான்.

நரகுவான்சுவர்க்கஞ்சகலலோகத்துநண்ணிடுமெனையரித்துரோகி
வருகலேயெனவேவைதுகல்லுலக்கைமரங்கதைசுளகினுமடிக்க
வெருவினானரற்றியோரிடந்தனினுமேவிடமிலாமையால்மெலிந்தே
னருளுநீரிருக்குமிடமெனவவரையிறைஞ்சியின்னமுமிவையறைவாள்.

உருமினாலரவாலுரனுறுந்துட்டவிலங்கினானீசராலுயிர்போய்த்
தரையினின்மடிவார்தமக்குமாறினத்தினமருந்தியதயையிலர்க்கும்
நிரையமேயலாதுநிவர்கதியென்றுமுறுதிதுநிச்சயமிந்த
விரதவிக்கினியாமெனக்குயும்வகையைவிளம்புவீரெனவவரறைவார்.

திருமகள்கொழுனன்றினவிரதத்துக்கதன்மநீசெய்கையாலுனக்கு
வரமருளெமையுஞ்சபித்திடுமெறுவில்புரோகிதன்முனிவினைமாற்றி
யிருவினைக்கடலுளமிழ்ந்திடுநீதானமரிடமீய்குவமென்று
சுரரொடுபிரமனுருக்குமாங்கதன்றன்பதியிடைத்துலங்கியேகினரால்.

விறலுடையுருக்குமாங்கதற்கிதமாம்வேதியன்றன்முனரடைந்து
மறலிதன்னுலகுஞ்சுவர்க்கமும்பாழாயுறும்படிமாதவன்றிதியி
னெறியுறவிரதஞ்சகலருமநுட்டித்திகரிலாக்கதியமர்ந்திடலா [றைவார்.
லிறைவகுத்திடுமிவ்வுலகம்நில்லாதென்றெண்ணினோமென்றுபின்ன

தரையினிற்சனங்கள்சனித்திறந்திடவுந்தயங்கியசுவர்க்கமேறிடவும்
நிரையமுற்றிடவும்பரன்றினவிரதம்நீக்கமோகினிதனைவிடுத்தோம்
அருளறனறியும்புரோகிதவதனாலிவடன்மேல்முனிவகற்றியென்
றுரைசெயவவனுங்கதமொழித்தெவருமுறாவிடங்கொடுமிவட்சென்றான்

சரியிலாதுயரும்புரோகிதன்முனிவையொழித்திவைசாற்றுதலோடுஞ்
சுரரொடுமுனிவரிவடனைநோக்கியுனக்கிடஞ்சொல்லுதியெனவெங்
நரகுடன்சுவர்க்கம்நிறைந்திடமறலிக்கதிகமார்பத்தியநண்ண
வரிதினவிரதமருளுவீரெனலுமயனொடுசுரர்முனிந்தறைவார். 306

படியினின்மறையோர்வதைமுதலானபஞ்சபாதகத்தினையகற்றி
யிடர்கெடவழியாக்கதியினைக்கொடுக்குமிணையிலாவரிதினவிரத
மடியிரண்டதனாலுலகெலாமளந்தோனருளுவதலாலுனக்களிக்கும் [தார்
திடமிலையிவையைத்தருகுதிரெனில்வச்சிரத்தினாற்றெறுவமென்றுரைத்

நரர்பிறப்பிறப்பையொழித்துயர்கதியைநல்கிடுமாதவன்றிதியை
யருளுமென்றுரைக்கிற்சங்கரித்திடுவமதுவலவேறுகேளென்ன
விரவிதேர்வலவன்வரவதிற்றெசமியிறுதியிற்சூழேகாதேசி
தருகுதிரெனலுமவடனைநோக்கிச்சதுமுகன்முதலினோருரைப்பார்.

அரனுரையதனாலசுரசம்பனுக்கன்றயனருணன்வருபோழ்திற்
பரவியதெசமியிறுதியைக்கலந்தபதினொராந்திதியளித்தனனாற்
றெரிவைநீயதனையொழியவேறுளதாய்ச்செப்பெனச்சப்பனவேதை
மருவிடுமேகாதெசியினையருளுமெனவவர்வழங்கினமென்றார். 309

சப்பனவேதைகலந்திடுமேகாதெசிவிரதந்தனைச்சார்ந்தா
ரப்பினினுறையுமுராரியையந்தவிரவினாராதனைசெய்தா
ரிப்புவியிடத்தினவர்க்குறும்பலத்தையீந்தனங்கொள்ளுதியென்றே
செப்பியாங்கவர்தம்பதியினேகிடலுஞ்செகத்தினிலவ்விடத்தமர்ந்தாள்.

அயன்மகளரியின்றினத்தனம்நகர்தியன்றியேற்புதல்வனைவதையென்
றியல்பறவுரைக்கவறனுறசிறவன்கழுத்தினிலிலங்குவாளோச்சிப்
புயல்வணமுராரிபதத்தினினடைந்தவுருக்குமாங்கதன்புகழெல்லாம்[ன்.
தயையுடைவிதர்ப்பன்புதல்விநீயுணர்தியென்றியாழ்த்தவமுனிபுகன்ற

உருக்குமாங்கதப் படலம் முற்றிற்று.

ஆஉ திருவிருத்தம் - 2146.

---

## 20-வது, அம்பரீடப் படலம்.

---

கொலைபலசெய்துங் குருவினையிகழ்ந்துங் கோப்பிராமணர்களைநலி ந்தும், நலனிலானுகிப் பார்தனிற்குரவர் நாரியைவிரும்பிமெய்யறனற், றுலகெலாம்பழிக்குங் கயவனுயுழல்வெம் பவக்கடல்சுவறிடவொதுக்கிப், பொலனுறமடியார்க் கடியராய்த்திருத்திப் பொருந்துமாலினைத்தொ ழுந்தொண்டர். 1

உருக்குமாங்கதன்றன் சரிதையைக்கேட்டாண் ளெமகிளுருக்குமற் கிளையா, ளிருக்கறைந்திலங்கு மியாழ்முனிவனைத்தா னினிதுடனேக்கி யேயிணையில், மருக்கமழ்குழலி வயங்குமோகினிதன் மயக்கினையகற்று மால்விரதம், பெருக்கநற்சுதனைத் துணித்தமன்போல்வா ருளரெனிற் பேசுதியென்முள். 2

வம்பவிழ்குழலியிவையுரைத்திடலுமறுவிலாநாரதமுனிவ
னும்பர்கடுதிக்குமுருக்குமாங்கதனையொத்திபெரமபாகவத
னம்புவிமிசையினறனெறிவளரப்புரந்தவம்பரீடமன்செயலைச்
செம்பதுமத்திற்றிகழவீற்றிருக்குந்திருவனுய்தெரிதியென்றறைவான். 3

அலரிதன்குலத்தின்வயங்குமாந்தாதாவருளம்பரீடனேழ்தீவு
மிலகிடப்புரந்துதிருவினுதனைத்தன்னிருவிழிநாச்செவிசிரசு
புலனுறுமனங்கைகளிப்பினுேனக்கித்துநித்தவன்புகழினைக்கேட்டு
நிலனுறப்பணிந்துநினைந்துபூச்சாத்திரிகரிலாவடியவனுனன். 4

பரமபாகவதனுகியவரசன்பழுதகல்வசிட்டமாதவனே
டரியநற்றவஞ்செய்முனிவரையிருத்தாய்வரித்துமாமகமளப்பிலாத
தரையினின்முடித்துச்சகலதானங்கள்சற்பிராமணர்தமக்கருளி
யரிதினவிரதந்தவறநடத்தியாசையையகற்றியங்கமர்ந்தான். 5

அரிதினவிரதந்தவறநடத்துமம்பரீடனுக்கருள்புரிந்து
திருமகள்கொழுனனுருக்குமாங்கதனைச்சினத்துமோகினிதடுத்தனபோ
றரையினினெவருமிவனுறுவிரதந்தனக்கிடர்செய்யிற்சங்கரியென் [ற்
றுரைசெயத்திகிரிசகசிரவிரவியொளியுறக்காத்திடுமென்றே. 6

புகரிபத்திடரைத்தவிர்த்திடும்புனிதன்புகன்றிடவவிருடனுயருந்
திகிரிகாத்திடவேதிகழுமம்பரீடன்விருச்சிகத்திங்களிற்சிறப்பாம்
நிகரிலுத்தான துவாதசிவரலும்நெறியுறுமறையவர்தமக்குச்
சகலநற்றானமளித்தனமருந்தத்தமரோடுமெய்திடும்வேலை. 7

வேறு

விரைவினிற்றுருவாசமாமுனிவன்மேவிடலும்
பரிவினன்னவன்பதத்திடையிறைஞ்சியம்பரீட
னருளுவான்றிருத்துவாதசிப்பாரணையருந்த
வருதியென்றலுமாதவன்சம்மதித்துரைப்பான். 8

படியின்விஞ்சியயமுனைமாநதியினிற்படிந்து
கடிதினெய்துவனென்றுமன்னவனுடன்கழறி
விடையவன்னிகர்முனிநதிமேவிநீர்படிந்தாண்
டடைகிலான்மனன்பாலகமருடணனுகி. 9

நிகரிலாமுனிநீருறயாண்டையுங்காணான்
பகலவன்குணக்குதித்தபின்னைந்தினிற்பாதி
புகலுநாழிகைபோயிடிற்றிருத்துவாதேசி
யகலுமென்றுமன்னுதகபாரணைசெய்தானஞ்சி. 10

திதியின்விஞ்சியதிருத்துவாதேசியேகிடுமென்
றுதகபாரணைமன்னவன்செய்தமையொளிசால்
மதிகொள்வேணியனிகர்த்திடுமாதவனுணர்ந்து
நதியினீரிடையெழுந்தெரிபுகையுறநகைத்தான். 11

திருத்துவாதசிசெலுமெனச்செலத்தினைப்பருகிக்
கருத்தினுலெனையெள்கினனென்றயங்காய்ச்சுந்
துருத்திபோல்விடுமுயிர்ப்பினன்றுலங்குவேணியினைக்
கிருத்திதோன்றிடப்பிடுங்கிமோதினன்கிளர்சினத்தால். 12

அவனியிற்கடிதடித்தவேணியினிடைக்கிருத்தி
புவனமெங்கணும்நடுங்கிடப்போந்திடவவனை
யிவனினிக்கணமம்பரீடனைத்தெறுவென்று
சிவனெனக்கனன்றறைந்தனன்றேவர்களிரிய. 13

நிகரின்மாதவனுணையிற்கிருத்திநீண்டதிர்த்தாண்
டகிலமெங்கணுமஞ்சவம்பரீடனையடரக்
ககபதித்திருத்தோள்மிசைக்கவினுறுவான்கைத்
திகிரியுக்கிரமாகவேசென்றெதிர்த்ததுவால். 14

கோடிசூரியவவிரினைக்கொண்டொளிர்திகிரி
மூடிநீண்டடர்கிருத்தியைமுனிந்துசங்கரித்துக்
கோடிரம்முறுமுனிவனைக்குறுகிமேற்சுடலும்
வாடியோடினன்மலரயனுலகினின்மாதோ. 15

விரைசெறிக்கமலத்தயனடிமிசைவீழ்ந்திண்
டரிதிருக்கரத்தாழியென்மெய்யனலுறுத்த
வெருவியுற்றனன்விலக்குதிநின்னடைக்கலமென்
றுரைசெயத்திசைமுகப்பிரமன்னிவையோதும். 16

மறுகிமெய்சுடவந்திடுமுனிவநீகேட்டி
யிறைவனுந்தியினெழுந்திடுமியானுநான்படைத்த
குறைவிலண்டமுமவன்புருவத்தினைக்கோட்டி
னிறுமிமைப்பின்முன்னவன்படைதடுத்திடவெளிதோ. 17

இவையுரைத்தயனென்பதமழிந்திடாதிவணிற்
கவலையுற்றறுமுனிவநீயேகெனக்கடிதிற்
சிவனையுற்றுமாறிகிரிவந்தெனைநலிந்திடாமற்
பவமறுத்தருள்பரமகாவென்றிவைபகர்ந்தான். 18

சிந்தைவெந்துவந்துறுமுனிசெப்பிடவிடையோன்
விந்தைநாயகன்மெய்மயிர்நனிதொறுமியான்சே
ரிந்தவண்டமேபோலவெண்ணிலாவண்டமமரு
மந்தமால்கரத்தாழியார்தடுப்பரென்றறைவான். 19

படிவிண்ணீரடியாலளந்தருளியபரம
னடியனானவம்பரீடனுக்கிடர்செயுமறிவில்
கொடியமாதவநீயுயவேண்டிடிற்கோல
வடிவமாகியமாயனையடைகுதியென்றான். 20

அரனுனகதிதணலவகலென்றரன்கூறக்
கிரணமுற்றிடுந்திகிரிகாய்ந்திடக்கெடுமுனிவன்
கருணையுற்றவைகுந்தநற்கடவுளைவணங்கிச்
சரணமற்புதவுனதடியென்றிவைசாற்றும். 21

அம்பரீடனையிடர்செயுமருவினையாலே
யெம்பிரானுனதாழியெண்டிசையினுந்தொடர
வெம்பிமெய்யழலுறுதீயையொத்தனவிமலா
நம்புதும்பியைக்காத்தபோற்காவெனநவில்வான். 22

முனிவனென்றனையிகழ்ந்திடுமறிவிலாமூர்க்கர்
வினையையென்னடியாரறுத்திடுவர்மேதினியி
னினியபத்தருக்கிடர்செயுங்கயவர்கட்குற்ற
துனியகற்றிடுமுரனெனக்கிலையெனச்சொன்னான். 23

வேதசாத்திரநெறியுறுவித்தையுந்தவமு
மேதமற்றவர்க்கடைந்திடினவர்க்கின்பமீயு
நீதுகற்றவர்க்குற்றிடினவர்க்கிடர்செய்யு
மீதுநிச்செயமுனிவவுன்னிடத்துணர்கென்றான். 24

உவமையற்றிடுமம்பரீடனுக்கிடருறத்தந்
தவவுன்மீதடர்திகிரியைத்தடுக்கவெற்கரிதா
லவனியிற்றிருத்துவாதெசிவிரதத்தையடையும்
பவமிலாதவன்பாலுய்யப்பாறுதியென்றான். 25

வம்புலாவியதுளவணிமாயவன்கூற
வம்புராசியின்வடவைபோலாழிசுட்டிடவே
யும்பரம்பரமோங்கல்சுடிசையெலாமுழல்வா
னம்பரீடனையிறைஞ்சியுன்சரணமென்றடைந்தான். 26

திகிரிமெய்சுடவருடமொன்றெங்கணுந்திரிவான்
மிகவுநொந்துதன்னடிமிசைவீழ்ந்திடத்தயையுற்
றவனியெங்கணுமறனுறப்புரந்திடுமரச
னிகரிலாழியைத்துதித்திவைநிகழ்த்தினனம்மா. 27

இரவிகோடியர்க்குறமவிரிலங்கிடவெழுந்தே
யரிதிருக்கரத்தமர்ந்துயரவுணவைவதைத்து
விஸரவினுன்னுமுன்னடைந்தடர்வினையினையகற்றஞ்
சுரர்துதித்திடுஞ்சுதரிசனுநமவென்றான். 28

வேறு.

பரப்பினின்யான்செய்மகங்களுமறிவாற்பண்ணியதானமுமிணையி
லரிப்பிரிதியுமாயியற்றிமாதவன்றனனைத்திறுமுளனெனவறிந்து
விருப்பமுற்றுயர்மாறினவிரதத்தைவிளைத்ததுமெய்மையேயாகில்
நெருப்பிறைத்தவனைமுனிந்தடராதுநீங்குதிதிகிரியென்றனனால். 29

காவலனளியாலிவைமொழிந்திடவக்கணத்தினிற்றிகிரியோவிடலும்
பாவமற்றுயருந்தவமுனிவியந்துபங்கயன்மாலரனுகு
மூவராற்றவிராப்பவத்தினையிமைப்பினகற்றினைமனவெனமொழிந்து
தேவருந்துதிக்குமரசனுக்காசிசெப்பிநல்லனமருந்தினனால். 30

பரமபாகவதவுன்னையானறியாதிகழ்ந்திடவுறும்பவமெல்லாம்
பிரமன்மாலரனும்வியந்திடவிமைப்பினகற்றினைபிருதுவிதன்னிற்
றருமமெய்நிறையுமரசவென்றுரைத்துத்தவனனமருந்தியேகியபின்
வருடமொன்றவணினகன்றபின்னரசன்மகிழ்வினுற்பாரணைசெய்தான்.

திருத்துவாதேசிவிரதமாதவத்தைத்திடமுறச்செய்தரிதன்னைக், க
ருத்திறுவுளத்தினிருத்திநற்கதியை யடைந்தனனவன்கதைதன்னை,வி
ருத்தியால்மறையோர்க்கிருநிதியருளிச்சிறந்திடும்விதர்ப்பர்கோன்பலநா
ட், சிரத்தினுற்றவஞ்செய்தருளவேசிறந்த திருவனுய்தெரிதியென்றறை
ந்தான். 32

அம்பரீடப் படலம் முற்றிற்று.

அ௳ திருவிருத்தம் -2178.

---

# 21 - வது, பரசுராமப் படலம்.

நீதியையகற்றிநெறியிலாக்கருமநிறைந்திடவறன்மெய்யைத்துரத்திப்
பூதலத்தனேகவுகமிருப்பனபோற்பொற்கொடியார்சொலவிரகத்
தீதினைத்தினமுமியற்றிடும்வினையேன்பவமெலாந்தீர்ந்திடவேதன் [ன்
றாதைதம்மடியார்க்கடியராத்திருத்துந் தயாளுவாமுராரியைத்தொழுமி

அரிதிதியதனிற்றுவாதெசிவிரதமடைந்துயரம்பரீடன்றன்
சரிதையைக்கேட்டுமகிழ்ந்துருக்குமணிதவமுறுநாரதமுனியை
விரதமுற்றிடுவோர்க்குயர்பதமளிப்போன்மேதினியிற்றிகழ்நலனை
யுரையெனப்பரசுராமன்றன்செயலையுணருதிதிருவெனவறைவான். 2

விதுவினற்குலத்தினரசரின்மலிந்தவிறலுடைக்காதிமன்பயந்த
மதிநிகர்வதனச்சத்தியவதியைமறுவிலாப்பார்க்கவன்மரபிற்
சதுமறையுணருமிருசிகன்றனக்குத்தாரமாயுதவிடமகிழ்ந்து
கதமிலாமுனியக்காரிகையுடனேகவினுறவமர்ந்திடுநாளின். 3

காதிதன்மனைவியானகாரிகையுங்கவினுறுசத்தியவதியு
மேதமற்றிலங்குமிருசிகன்றன்னையிறைஞ்சிநின்றெமக்கிருவருக்குந்
தீதினையகற்றுஞ்சிறுவர்கள்வரவேசிறந்திடுபிண்டநீபருகென்
றோதிடமுனிவனிரண்டுமந்திரத்தாலுபையநற்சருவினைவைத்தான். 4

சாத்திககுணத்தையுறவொருசருவுஞ்சரியிலாராசதமலியுங்
காத்திரமனத்தையுடையதோர்சருவுமமைத்தவன்கங்கைமாநதியிற்
றீர்த்தமாடிடவேசென்றிடவதனைச்சிறந்திடுகாதிதன்மனையாள்
வேத்திரமெனவும்விளங்குதோளுடையவிழுமியமகளுடனுகர்ந்தாள். 5

சரியிலாதயருங்காதிதன்மனையாள்சாத்திககுணச்சருநுகர
விரிசிகன்பாரியிராசதமலியுஞ்சருவினையிலங்கியங்கருந்தச்
சுரர்நதியவணிற்றோய்ந்துமீண்டகன்றுதலங்கியமுனிவனிதுணர்ந்து
வரசமந்திரத்தின்சருவினைவிழுங்குமரிவையைநோக்கியீதறைவான். 6

சரியில்சாத்திகமார்சருவினையருந்துந்தவமுறுகாதிதன்மனையா
ளருமறைநெறியையடைந்திடுஞ்சுதனையளிப்பநீயரசமந்திரத்தாற்
பரவியசருவைநுகர்ந்திடுஞ்செயலாற்பாரிடைக்குறூரமாங்குணத்தை
மருவியமகனையருளுவையெனலுமற்றவள்மனமெலிந்தறைவாள். 7

தவமுறுமுனிவவுனக்கெழும்புதல்வன்சாத்திககுணத்தினையுறும
லவமுறுகுறூரமடுக்குமோவெனவாண்டவனவடனக்கிவையறைவா
னவையகலணங்குன்சுதன்றனக்குயருநற்குணமாகுகவவன்சேய்
புவனமுநடுங்கப்பொருந்துகாத்திரமாம்புந்தியையடைகுவனென்றான். 8

இரிசிகனிவைகளுரைத்திடலோடுமெதிரிலாக்காதிதன்மனையாள்
பரிவினற்பயந்தசுதன்கவுசிகனைப்பழுவத்தினருந்தவஞ்செய்து

சரியிலாவிசுவாமித்திரனாருந்தவனென விலங்கியங்கமர்ந்தான்
தெரிவையர்திலகச்சத்தியவதியீன்றாள்செமதக்கினிதன்னை. 9

இரிசிகன்குமரனாயெழுஞ்செமதக்கினிநலரேணுகையென்னு
மரிவையைப்பரிவால்வதுவைசெய்திடலுமவளவன்றனையணைந்தெதிரி
றருமமார்சுமதன்முதலிருவரைத்தான்பயந்திடத்தவரெலாமகிழ
மருளகல்மறையாற்சாதகஞ்சவுளம்வயங்குமுன்னூலெலாநிறைத்தான்.

சிறுவரைப்பயந்தாண்டெழில்கொளுஞ்செமதக்கினிமகிழ்ந்திலங்கிநோளி
ணிருதருங்கொடியவசுரரும்நிலத்தினிருபராய்ப்பொதுளியசெயலாற்
றரைமினுளயர்ந்துமெலிந்திடவவடன்சுமடினைத்தவிர்த்திடவேண்டி
யரியினல்லுருவாய்ப்பரசுராமப்பேராகிரேணுகைவயிற்றுதித்தான். 11

சுரர்மலர்பொழியத்துந்துமிமுழங்கத்துலங்கியபரசுராமன்றான் [ந்
மருளகன்மறையையுணர்ந்திடுஞ்செமதக்கினிமகிழ்ந்திடச்செனித்திடலு
தருமமெய்யோங்கச்சாதகஞ்சவுளந்தயங்குபநயனமுநடத்தி
வரனுடையவனாய்ச்சோடசவருடமுறவவன்வளர்த்திடுநாளின். 12

இரிசிகன்சுதனுக்கிரேணுகாதேவியிலங்கியதேவபூசனைக்குச்
சுராநதியதனினயங்கொணர்ந்திடவேதுலங்கிடவெய்தியவவடான்
மருவமர்விசிகமுடையவன்மானவானினோரெழில்கொள்கெந்தருவன்
விரைசெறியளகத்தெய்வவானுதலோடேகிடநோக்கினள்வியந்து. 13

மாலெனவயங்கியெழில்கொள்கெந்தருவன் மனைவியோடேகிடக்கவினார்
வேலெனமிளிர்கண்ணிரேணுகாதேவிவியப்புடனோக்கிமீண்டிடலுஞ்
சீலமார்செமதக்கினிமுனிபூசைக்குதவிடுஞ்செலமிலாதுததி
யாலமேபோலவழன்றிவடாழ்த்தசெயலெலாமறிந்திவையறைவான். 14

கற்புடையவள்போற்றிரிந்துநீயுயருங்ககனமீதேகிடுசிகரி, லற்புதமனையவெழில்கொள்கெந்தருவனரிவையோடுறுநலனோக்கிப், பொற்புறவெழில்சேர்தேவபூசைக்குப்புனல்கொணர்ந்திலையெனவுரைத்துச், சற்பமிங்குமிழும்விடமெனச்சீறித்தனையரைநோக்கியீதறைவான். 15

தனையனுஞ்சுமதனவனுடைக்கனிட்டனிவர்களைநோக்கியெண்டவத்தோன், முனிவொடுமிவளைத்துணிசெயுமெனத்தான்மொழிந்திடவவர் மறுத்திடலுஞ், சினமுறவவளோடவரையுங்கணத்திற்சிரமறவறுக்குதியென்று, புனிதனாய்வயங்கியுயர்ந்திடும்பரசுராமனைநோக்கியேபுகன்றான்

றந்தைவெஞ்சினத்தாலிவையுரைத்திடத்தன்றாயையுமூத்தவர்தமையு, மந்தகனெனவேமழுவினாற்சிரங்களவனியினுருண்டிடத்தறிப்பச், சிந்தையின்மகிழ்ந்துமுனியுனக்கிதமாம்வரத்தினைச்செப்புகென்றுரைப்பப், புந்தியையுடையோன்பரிவுடன்வணங்கிப்பிதாவுடனிவைபுகன்றனனால்.

இயல்புடைமுனிவகதமொழிந்திவணினீன்றவெல்றாயுடன்சேட்ட, ருயிரினையருளென்றுரைத்திடத்தவத்தோனிமைப்பின்முன்னெழுதி

றென்றுரைப்பத், துயிலுணர்ந்தவர்போற்சிரம்பொருந்திடமெய்துலங்கி வந்தடியினினிறைஞ்சத், தயையுடைத்தாதையுடனெழிலிராமன்றயங்கி யாண்டமருநாடனில். 18

நிருபர்கட்கதிகமாகிநற்படியைநெறியினாலாண்டிடும்வலத்தோன்
சரியிலாவரங்களுறுபவனெழில்சேக்சகசிரவாகுவாய்ச்சிறந்தோன்
கரிபரியிரதம்பொதுளவுற்றிடவேகார்த்தவீரியனெனும்வேந்தன்
மிருகயாத்திரைமேல்விருப்பமுற்றவனாய்விழுமியபழுவத்தினிறத்தான்.

பரிகரியிரதம்பரவைபோற்சூழப்பழுவத்தினடைந்திடுதன்ன
னிரிசிகன்சுதனுமிணையிலாச்செமதக்கினிமுனிகோசரத்திறுத்துத் [ண்
தரைமிசைவணங்கத்தவனலமொழியைச்சாற்றிநற்றேனுவையழைத்தா
டரசர்கோனுடனேயனைவருமருந்தவடிசிலையுதவுதியென்றான். 20

அருமறைமுனிவனிவைபகர்ந்திடவுமருள்செறிதேனுவுமெய்தி
யுரனுறுகார்த்தவீரியன்றனக்குமுவரிபோலடைந்தசேனைக்கு
மிரணியக்கலத்தினறுசுவையடிசிலினிதுறவருந்திடவளித்து
விரைமலர்கலவையுதவலுமரசன்வியந்துமாதவனுடன்மொழிவான். 21

சகலர்கடமக்குமடிசிலையுதவுந்தேனுவைத்தருதியென்றுரைப்ப
நிகரிலம்முனிவன்மறுத்திடவலந்தானிருபனவ்வாவினைப்பற்றிப்
புகரிபம்பரிதேர்புரவலர்பொதுளிப்போதலும்பரசுராமன்றான்
மிகவுநெஞ்சழன்றுமழுவினாலவன்றன்சேனையைவீட்டினன்மாதோ. 22

பாரினிற்கடல்போற்பரவியபதினேழக்குரோணிப்படையெலவும்
கூரியமழுவாலிமைப்பினின்வதைத்துக்குறைத்தலையெழுந்துகூத்தாட
வாரிபோற்குலிகப்புனல்திரையுறநீள்மண்மிசைப்பரவிடனோக்கி
நேரிலாதுயருங்கார்த்தவீரியன்றானெருப்பெழக்கனன்றெழுந்தனனால்.

உததிகள்கலங்க வடவரையசைய வுறுத்தெதிர் கார்த்தவீரியன்றா ன், சதமுகாத்திரமால் படையரன்பகழி சலத்தினால்விடுத்திடுமவை யை, மதிதவழ்சடையோ னிகர்த்திடும்பரசு ராமன்கைமழுவினாற் றுணி த்துக், கதலியின்வனத்தைக் கழித்தபோலவன்றன் கரங்களாயிரத்தை யுங்களைந்தான். 24

சகசிரகரத்தைத்தறித்தவன்மழுவாற்சடக்கெனவவன்சிரந்துணிக்க
நிகரிலாவரசன்சுதரயுதப்பேர்வெருவிநீணிலத்திடைவணங்கிப்
புகலுதற்கரியபசுவினைக்கொடுத்துப்போதிநீயென்றுனீரதிடலும்
சிகியுறுமுனிவையொருவிநல்லாவோடடைந்தனன்றுதையாச்சிரமம்.

விரைவினிற்பசுவோடடைந்துதன்றுதையுறைவிடமேவிநின்றிறைஞ்சி
வரனுறுங்கார்த்தவீரியனுடன்சேர்மன்னவர்மடிந்திடுஞ்செயலை
யுரைசெயுமுனிவனிரங்கிமண்ணரசைவதைசெயினுறும்பவமென்று
சுரர்நதிமுதலாமயத்திரைர்வருடந்தோய்குதிசுதவெனப்பணித்தான்.

உவமையில்முனிவனுரைத்திடமழுவோனுயர்ந்திடுதிரிபதையமுனை
கவுதமிசெனனமொழித்திடும்வேணிகவினைகழித்திடும்பம்பை
பவமகற்றியகாவேரிதண்பொருந்தம்பரவைநேர்கன்னியாகுமரி
இவைமுதலானநதியினோர்வருடம்படிந்தவனெய்திடுவேலை. 27

மழுவினால்மடிந்தநிகரிலாக்கார்த்தவீரியன்மதலையோரயுத
ரெழுவெனவயங்கும்புயமுடைப்பரசுராமனுண்டிலாதமையுணர்ந்து
விழுமியசெமதக்கினிமுனிசிரத்தைவிரைவினிற்றுணித்தவரேக
வழகினற்சரியிலிரேணுகையிராமாவடைதியென்றுகுலித்தழுதாள். 28

பாவமில்லணங்கிவ்வுரைபகர்ந்தழுதுபருவரலுறும்பொழுதிராமன்
சேவலோனெனவாண்டடைந்துயிரொருவச்சிரமமுந்தாதையைநோக்கி
நோவினலரற்றியனைதனைத்தேற்றிநுவலுவான்படியினிலரசர்
மூவெழுகுலமுமடிந்திடக்களைவனெனுஞ்சபதத்தினைமொழிந்தான். 29

மிகவுளைந்தரற்றுமனைமுனர்ச்சபதம்விளம்பிநீள்வடவரைநிகரா
யுகவிறுதியினிறுமையவள்கொழுனனுத்துயர்பரசுராமனுறன்
சிகைவிழியுறவெவ்வுயிர்ப்பினல்வடவைத்தீயவிந்திடக்கடல்சுவறக்
ககனமீதிரவிசுழன்றிடமுனிந்துகார்த்தவீரியனகர்சேர்ந்தான். 30

இரவியினவிர்போலிலங்கியமழுவாலிணையிலாக்கார்த்தவீரியனு
மரசர்கோனயுதச்சுதர்களைவதைத்தாண்டகன்றிடுமவனியையாளும்
நிருபர்கள்குலமூவெழுதலைமுறையுநிலந்தனிற்களைந்தவர்குருதி
சுரர்பயமுறநீள்சமந்தபஞ்சகத்திற்றுப்பெனநிறைத்தனனம்மா. 31

சமந்தபஞ்சகத்தினக்கயமமைத்துத்தரணியிலுலப்பிலாக்கிளையோ
டமர்ந்திடுமரசர்குருதியைநிறைத்துத்தாதைதன்குரம்பையையணிற்
சுமந்துவந்தெரியிற்கிடத்தியக்குலிகத்தோயமார்துலையினின்முழுகி [ல்
நிமிர்ந்துவேதியர்கொணிறைந்திடத்தாதைக்குதகமெள்ளுறநிரப்பினனு

தவமுறுசெமதக்கினிமுனிதனக்குத்தாரணியெங்கணுமாளு
முவமையிலரசர்குருதியாலுதகக்கிரிகையைமுடித்தபின்சிரார்த்தங்
கவினுறவிராமன்மறையினாலுயருங்காசிபவருந்தெனவவன்சொல்
லவமதித்தவன்றுன்மறுத்திடயானுளவனியையடைகிலேயென்றான்.

சிரமறமடியுட்பிதாவினுக்குரியசிரார்த்தநீநுகரன்றேலியானு
டரையைவிட்டகறியெனமழுப்படையோன்சாற்றிடக்காசிபமுனிவன்
விரைவினிற்புவியினகரொருங்ககன்றுவிபுலையிற்சனங்கள்சென்றுறுதற்
கரியமால்வரையினமர்தலுமிராமனவணிற்சென்றவனுடனறைவான்.

இறந்திடுந்தாதைக்குரியமாசிரார்த்தமருந்திடாதெள்கியானுள்குவ் [னலு
வுறைந்திடேனெனவன்றறைந்துமிப்புவிமீதோங்கல்மேலடைதியோவெ
மறந்தவறிலாதவறிஞனுகுலத்தோடம்பொன்மால்வரையின்மீதமரச்
சிறந்திடுமிராமன்வடவரைமிசையிற்சேர்ந்தவனடிதொழுதறைவான். 35

உவமையின் முனிவ வெனைத்தரும்பிதாவுக் குரியமாச்சிரார்த்தம்நீ
புரியா, தவமதித்தகன் றிவ் வரையின்மேலமர வடுக்குமோவறிஞயானுனு
ம், புவியின்மீதமரிப் பொருப்பைவிட்டகன்றே யென்னுடைக்காவலிற்
பொருந்தா, வ்வனிதானுளதே லடைதியென்றறைய வருந்தவனழன்று
போயினனால். 36

மழுவொளிர்கரத்தோ னுரையின்மாதவத்தோன் வடவரைக்குத்த
ரதிசையிற், பழுவமார்பறம்பின் மிசையமர்ந்திடுநாட் டன்னிஞேர்படிக
வன்னத்தின், விழுமியகபோதச் சேவலோர்பெடையை விரகமுற்றடை
ந்திடவிதுதான், பழுதிலாவெனது பதிசுகத்திருக்கப் பற்றுதியோவெ
னப்பகர்ந்த. 37

பெடையதுபகர வடருமாண்பதங்கம் பெலத்தினுற்பிடித்துனைப்பு
ணர்ந்தாற், கடுகியுன்பதிவந் தெனைச்செயுங்கரும மெதுவெனக்கழறிடக்
கபோதம், படியினிலரசர் குலமறுத்தவன்கை யாழிவந்தடுமெனப்பகர,
மிடலுடைக்கபோதம் பெண்புள்ளைப்பற்றத் திகிரியுஞ்சிரமறுத்ததுவே.

திறலுடன்பெடையைப் புணர்ந்திடப்பற்றித் திகிரியாற்சிரம்விழச்
சேவற், பறவைவீழ்ந்திடக்கண் டிரேணுகைசிறுவன் காவலில்படியிலை
யெனவே, யறியுமாதவத்தோ னவன்முனரடைந்துன் னுக்கினைநிறைந்
திடாவவனி, யெறுழ்வலிப்புயத்தா யில்லையுன்பிதாவின் சிரார்த்தத்துக்
கெனைவரியென்றான். 39

காசிபமுனிவனிவைகழறிடலுங்களிப்புடனவன்றனையிறைஞ்சி
மாசகன்மழுவோன்பிதாவினற்சிரார்த்தம்வரித்தனனுகருதியெனவே
யாசகறவத்தோன்சிரார்த்ததெக்கணையாயையவுன்காவலினமருங்
காசினிமுழுதுமருளெனக்கொடுப்பக்கடிதினேதனமருந்தினனால். 40

இலகியசெமதக்கினிதனைமழுவோனிணையிலாவெழுமுனிவருக்கு
ணலனுறவமரும்படிசெயுமகத்தைநடத்திடப்பிருகுகாசிபன்று
னலரியினவிர்நேரத்திரிவதிட்டனங்கீராக்கவுதமன்விசும்பிற்
பொலனுறுமறையையறைந்திடுகுச்சரிவருடன்பொலிந்தனனன்றே. 41

தாதையேழிருடிக்கணத்தொடுமெமரச்சரியிலாமகத்தினைமுடிக்குங்
காதிதன்மகடன்பவுத்திரன்றனைநற்காசிபனேக்கியெற்கருளும்
பூதலமிசையினிருத்தியோவெனலும்புணரிசூழேழுதீவினையு
மாதவமுயரத்திரிந்திடுமெழுவோன்வைகிடமிலாதுழன்றனனால். 42

பரவைசூழ்புவிகள்பழுவமெண்ணிலபொற்பருப்பதமிவையெலாமணுகி
விரைவினினமருமிடந்தொறுந்துடர்ந்துவிழுமியகாசிபன்றடுப்ப [வா
வரசர்வேரறப்போன் றளர்ந்துளம்வாடி யயமன்முன்னெய்தியென்மழு
விரைகடல்மிசைமுத்தரமியானெறியுமிடமெலாமெனக்கருளென்றான்.

கார்த்தவீரியனைக்களைந்திடுந்தவத்தோன்சுழறிடவருணமனிசைய
மாத்திரையளவினெறியவான்வயங்கி விழுந்திடுமழுவைப்பார்க்கவன்றன்

கோத்திரத்தமர்ந்தோன்குறகிவந்தெடாமற்குழுமியசிதலையாயரன்கைப்
பாத்திரம்பொடிசெய்பரியென விபுதர்படியினிற்றுகளதாயெரித்தார். 44

ஒருதரமெரியவீழ்ந்திடுமழுவையும்பர்கள்சிதலையாயெரிப்பு
வருணனக்கணிச்சிவிழுமிடநாற்பதியோசனைநீளமும்வழங்கத்
தரைமலையாளப்பெயரினையுடையசசியநற்பருப்பதத்தமர்ந்தா [தோன்.
னிருபர்வேரறுத்தக்குருதியைக்கயத்துணிறைத்துமாச்சபதத்தைமுடித்

அரசர்களிருபத்தொருதலைமுறையுமழிந்திடவதைத்திடுமெழுவோ
னுரனொடுந்தவமுந்தெசரதனருளுமுவமையிலிராகவனுயரும்
வரிசிலையுமிழும்வாளியால்வாங்கவாருதியருள்மலையாளத்
தரையினச்சசியவரையிடையமர்ந்தானெனத்திருவுடனவனறைந்தான்.

பரசுராமப் படலம் முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் - 2224.

---

## 22 - வது, இராகவப் படலம்.

திருவுடன்புவிமானினைமான்வயங்கச் சிறந்திடும்பயோததிநாப்பண்,
கருவரைமிசையிற்கவின்கொளுமெளினக்காடுபூத்தெனக்கரங்கண்கா,லு
ரனெழிற்கொப்புள்திகழ்ந்திடவிணையி லுரகநல்லணையின்மீதொளிகொ,
ளரியினையடைந்தேயழிவிலாப்பதத்தினமரயாமியற்றுவந்தோண்டீர். 1

அயமுறுதூண்டிலயமிசைக்கிருமிதனையுணவாமெனவருந்தி, மயிலை
யங்குழல்வதெனப்பவம்விடுத்து மறலிகைக்கொடாதுயர்மனனே, தயர
தன்றவத்தாற்றனையனுய்ச்செனித்துத்தசக்கிரீபன்றனைத்தடிந்து, குயி
ன்மொழிச்சனகியுடனயோத்தியின்வாழ்கோதண்டக்குருவினைநினைதி. 2

குவலையத்தரசர்திரள்களைவதைத்துக்குழுமியகுருதியின்முழுகு,மு
வமையில்மழுவோன்சரிதையைக்கேட்டவுருப்பிணிரேணுகைசுதனும், த
வனுரமடையப்பகழியால்வாங்குந்தசரதராமனைன்றுரைத்தா, யவனெ
வன்மொழியென்றியம்பிடமுனிவனணங்குநீகேட்டியென்றறைவான். 3

மறுவிலாவிரவியணைத்திடுஞ்சிராத்ததேவிதன்வயிற்றிடைப்பிறந்தான்
குறைவிலாவைவச்சுதனெனுமனுவாங்கோவவன்சேயிக்குவாகு
நெறியினலனேகவுகந்தவமியற்றிநிகரிலாத்திசைமுகனீயப்
பொறியுலாவியமார்பழகியவரங்கன்றனைக்கொணர்ந்ததுபொறிகேட்டி. 4

பூமகன்கலங்கமறையினைப்பறித்துநிகரிலாப்புணரியிற்புகுந்த
தீமுகத்தனைமால்வதைத்துநால்வேதந்திகழநான்முகன்றனக்கருளித்
தூய்மைசேர்விமானமிசையினின்கிழிற்றுலங்கரங்கேசனுய்வரவே
மாமலர்கொடுபூசனையினைச்செய்துமகிழ்ந்தயனமருநாடன்னின். 5

மனுவெனுமரசன்மலரயனுலகில்வைகிமற்றவன்றனையிறைஞ்சித்
தினகரனவிர்சால்விமானமேற்றிகழுந்திருவரங்கேசனைவணங்கித்
துனியகல்நிருபனயோத்தியினெய்திச்சுதனெனுமிக்குவாகுக்குத்
தனைநிகரிலாதவரவின்மேற்றுயின்றுதயங்கியசெயலெலாமுரைத்தான்.

மனுநிகழ்த்திடவுஞ்சிறந்திடுமிக்குவாகுமற்றவன்றனைநோக்கி
யனவெரினமர்வோனகரிடையிலங்குமரங்கனையான்றொழுதிடவான்
றினகரன்புதல்வவருளுதியெனமன்னுனக்கரிதாமெனச்செப்ப
வினையகல்வசிட்டமுனியிருபதத்தி னிறைஞ்சிநின்றிவைவிளம்பினனால்.

மலருளோன்றிருவாராதனைசெய்யுமறுவிலாவரங்கனையான்று [னலும்
னிலமிசைக்கொணர்ந்தீண்டருச்சனைசெய்யும் விரதத்தைநிகழ்த்துதியெ
பொலனுறுவசிட்டனயன்றன்மந்திரத்தைப் புகன்றிவையுளத்துறநிறுவி
நலனுறத்தவஞ்செய்யெனநவின்றிடமன்னகர்துறந்தடவியிற்சேர்ந்தான்

வனமடைந்தயன்றன்மந்திரஞ்செவித்துமன்னவனுலப்பிலாவருடம்
வினையகன்றிடநற்றவஞ்செய்யுநாளின்விபுதர்கட்கிறைவிடவடருங்
கனமழைபொழியக்காலறைந்திடநற்காமனோடரம்பையர்வரவான்
றினகரன்புதல்வன்சேயிவைதன்னிற்சிறிதுமாண்டயர்ந்திடாதமர்ந்தான்

நிலைகுலைந்திடாமற்றவஞ்செயுமனனைநெருப்பெழநோக்கியேவலாரி
யிலகுவச்சிரத்தைவிடுத்தலுமாழியெழுந்திடவெருவியாயுதத்தோ
டுலவையிற்பறக்கும்பூளைபோற்கரியின்மகபதியோடலுநிகரில்
மலரயனிவன்றான்செயுமருந்தவத்தைமனத்திடையுணர்ந்துவந்தனனால்.

வருமயன்மகிழ்வாற்றானருச்சிக்குமறுவிலாவிமானத்தினோங்குந்
திருவரங்கேசன்றனைநிலத்திருத்தச்செயுமனன்றவத்தினைநோக்கி
வெருவியபிரமனிராசதகுணத்தால்மேவுபாடவந்தனின்மெலியா
தருவினையொருவவமருமச்சுதனையானெங்கனளிப்பனென்றயர்ந்தான்.

மருளகல்பிரமனயர்ந்திடத்திருமால்வந்தசரீரிதானாகிச்
சுரர்நதியெனதுபதத்தினிற்றோன்றித்துலங்குநாளன்றுகாவேரி
யரியநற்றவங்கள்புரிகையினாலேயவளிடத்துறுவமென்றறைந்த [லாலும்
வுரையினும்விதுப்புட் கரணிமாதவர்முன் வருவனென்றுரைத்தசொல்

நிலமிசைவிமானத்தோடும்யானமர்ந்துநிகரில்பொன்வரையினைச்சுற்று
மலரியால்வருமத்தினமுறுஞ்சதுவாமுகஞ்சகசிரமகன்றிடுநாள்
மலரின்மீதுறைவோயுனக்கிரவாகும்பொழுதினினிவண்வருவேன்யா
னலனுறுமன்னுக்கெனையருளெனலுநான்முகனவன்கரத்தீய்ந்தான். 13

திசைமுகன்பரமனருளினாற் கொடுக்கச்சிறந்திடுவிமானமீதோங்கி நிசியகலிரவியவிருறுமணிசேர்நிகரிலாப்பணமுடையனந்தன், மிசைமரகதம்போல்விளங்கியவரங்கன்றனைக் கொண்டாண்டயோத்தியின்மேவுஞ், சுசியுறவயங்கிக்குவாகுவின்சுதனுய்த்தோன்றினன்விகுக்கியாம்பெயரோன். 14

கோத்திரத்தமர்ந்தோன்கு றுகிவந்தெடாமற்குழமியசிதலையாயரன்கைப்
பாத்திரம்பொடிசெய்பரியென விபுதர்படியினிற் றுகளதாயெரித்தார். 44

ஒருதரமெரியவீழ்ந்திடுமெழுவையும்பர்கள்சிதலையாயெரிப்பு
வருணனக்கணிச்சிவிழுமிடநாற்பதியோசனேகீளமும்வழங்கத்
தரைமலையாளப்பெயரினையுடையசசியநற்பருப்பதத்தமர்ந்தா [தோன்.
னிருபர்வேர றுத்தக்குருதியைக்கயத் துணிறைத்துமாச்சபதத்தைமுடித்

அரசர்களிருபத்தொருதலைமுறையுமழிந்திடவதைத்திமெழுவோ
னுரனொடுந்தவமுந்தெசரதன ருளுமுவமையிலிராகவனுயரும்
வரிசிலையுமிழும்வாளியால்வாங்கவாருதியருள்மலையாளத்
தரையினச்சசியவரையிடையமர்ந்தா னெனத்திருவுடனவனறைந்தான்.

பரசுராமப் படலம் முற்றிற்று.

ஆட திருவிருத்தம் - 2224.

---

## 22 - வது, இராகவப் படலம்.

திருவுடன்புவிமானிளைமான்வயங்கச் சிறந்திடும்பயோததிநாப்பண்,
கருவரைமிசையிற்கவின்கொளுமளினக்காடுபூத்தெனக்கரங்கண்கா,லு
ரனெழிற்கொப்புள்திகழ்ந்திடவிணையி லுரகநல்லணையின்மீதொளிகொ,
ளரியினையடைந்தேயழிவிலாப்பதத்தினமரயாமியற்றுவந்தோண்டீர். 1

அயமுறுதூண்டிலயமிசைக்கிருமிதனையுணவாமெனவருந்தி, மயிலை
யங்குழல்வதெனப்பவம்விடுத்து மறலிகைக்கொடாதுயர்மனனே, தயர
தன்றவத்தாற்றனையனுய்ச்செனித்துத்தசக்கிரீபன்றனைத்தடிந்து, குயி
ன்மொழிச்சனகியுடனயோத்தியின்வாழ்கோதண்டக்குருவினைநினைதி. 2

குவலையத்தரசர்திரள்களைவதைத்துக்குழமியகுருதியின்முழுகு,மு
வமையில்மழுவோன்சரிதையைக்கேட்டவுருப்பினிரேணுகைசுதனுந், த
வனுரமடையப்பகழியால்வாங்குந்தசரதராமனென்றுரைத்தா, யவனெ
வன்மொழியென்றியம்பிடமுனிவனணங்குநீகேட்டியென்றறைவான். 3

மறுவிலாவிரவியணைத்திடுஞ்சிராத்ததேவிதன்வயிற்றிடைப்பிறந்தான்
குறைவிலாவைவச்சுதனெனுமனுவாங்கோவவன்சேயிக்குவாகு
நெறியினலனேகவுகந்தவமியற்றிநிகரிலாத்திசைமுகனியப்
பொறியுலாவியமார்பழகியவரங்கன்றனைக்கொணர்ந்ததுபொறிகேட்டி. 4

பூமகன்கலங்கமறையினைப்பறித்துநிகரிலாப்புணரியிற்புகுந்த
திமுகத்தனைமால்வதைத்துநால்வேதந்திகழநான்முகன்றனக்கருளித்
தூய்மைசேர்விமானமிசையினின்றிழிற் றுலங்கரங்கேசனுய்வரவே
மாமலர்கொடுபூசனையினைச்செய்துமகிழ்ந்தயனமருநாடன்னின். 5

மனுவெனுமரசன்மலரயனுலகில்வைகிமற்றவன் றனையிறைஞ்சித்
தினகரனவிர்சால்விமானமேற்றிகழுந்திருவரங்கேசனை வணங்கித்
துனியகல்சிருபனயோத்தியினெய்திச்சுதனெனுமிக்குவாகுக்குத்
தனைநிகரிலாதவரவின்மேற்றுயின்றுதயங்கியசெயலெலாமுரைத்தான்.

மனுநிகழ்த்திடவுஞ்சிறந்திடுமிக்குவாகுமற்றவன் றனைநோக்கி
யனவெரினமர்வோனகரிடையிலங்குமரங்கனையான்றொழுதிடவான்
றினகரன்புதல்வவருளுதியெனமன்னுனக்கரிதாமெனச்செப்ப
வினையகல்வசிட்டமுனியிருபதத்தி னிறைஞ்சிநின்றிவைவிளம்பினனால்.

மலருளோன்றிருவாராதனைசெய்யுமறுவிலாவரங்கனையான்றோ [னலும்
னிலமிசைக்கொணர்ந்தீண்டருச்சனைசெய்யும் விரதத்தைநிகழ்த்துதியெ
பொலனுறவசிட்டனயன்றன்மந்திரத்தைப் புகன்றிவையுளத்துறநிறுவி
நலனுறத்தவஞ்செய்யெனநவின்றிடமன்னகர்துறந்தடவியிற்சேர்ந்தான்

வனமடைந்தயன்றன்மந்திரஞ்செவித்துமன்னவனுலப்பிலாவருடம்
வினையகன்றிடநற்றவஞ்செய்யுநாளின்விபுதர்கட்கிறைவிடவடருங்
கனமழைபொழியக்காலறைந்திடநற்காமனோடரம்பையர்வரவான்
றினகரன்புதல்வன்சேயிவைதன்னிற்சிறிதுமாண்டயர்ந்திடாதமர்ந்தான்

நிலைகுலைந்திடாமற்றவஞ்செயுமனனைநெருப்பெழநோக்கியேவலாரி
யிலகுவச்சிரத்தைவிடுத்தலுமாழிபெழுந்திடவெருவியாயுதத்தோ
லெவையிற்பறக்கும்பூளைபோற்கரியின்மகபதியோடலும்நிகரில்
மலரயனிவன்றான்செயுமருந்தவத்தைமனத்திடையுணர்ந்துவந்தனனால்.

வருமயன்மகிழ்வாற்றானருச்சிக்குமறுவிலாவிமானத்திேனோங்குந்
திருவரங்கேசன்றனைநிலத்திருத்தச்செயுமனன்றவத்தினைநோக்கி
வெருவியபிரமனிராசதகுணத்தால்மேவுபாடவந்தனின்மெலியா
தருவினையொருவவமருமச்சுதனையானெங்கனளிப்பனென்றயர்ந்தான்.

மருளகல்பிரமனயர்ந்திடத்திருமால்வந்தசரீரிதானுகிச்
சுரர்கதியெனதுபதத்தினிற்றோன்றித்துலங்குநாளன்றுகாவேரி
யரியநற்றவங்கள்புரிகையினாலேயவளிடத்துறுவமென்றறைந்த [லாலும்
வுரையினும்விதுப்புட் கரணிமாதவர்முன் வருவனென்றுரைத்தசொல்

நிலமிசைவிமானத்தோடும்யானமர்ந்துநிசரில்பொன்வரையினைச்சுற்று
மலரியால்வருமத்தினமுறஞ்சதுவாமுகஞ்சகசிரமகன்றிடுநோன்
மலரின்மீதுறைவோயுனக்கிரவாகும்பொழுதினினிவண்வருவேன்யா
னலனுறுமன்னுக்கெனையருளெனலுநான்முகனவன்கரத்தீய்ந்தான். 13

திசைமுகன்பரமனருளினாற் கொடுக்கச்சிறந்திடுவிமானமீதோங்கி
நிசியகலிரவியவிருறமணிசேர்நிகரிலாப்பணமுடையனந்தன், மிசைமர
கதம்போல்விளங்கியவரங்கன்றனைக் கொண்டாண்டயோத்தியின்மேவு
ஞ், சுசியுறவயங்கிக்குவாகுவின்சுதனுய்த்தோன்றினன்விகுக்கியாம்பெய
ரோன். 14

கவினுறவயங்கும்விகுக்கியின் சுதனீள்காமனன்னேரதாய்த்தயங்க, வவு
ணரைச்செயித்தோன் விடைமுரிப்பினுக்குக்கருத்து வென்றறைந்திடு
சொல்லாற், பவமுறுமதன்மீதிவனமர்கையினாற்பழுதிலாக் கருத்தனெ
ன்றியம்பக், குவலயத்தமர்ந்தோர்மகிழவீற்றிருந்தானவன் சுதன்குறை
விலாப்பிருது. 15

விறலுறுபிருதுசுதனுயர்விசுவகந்திமற்றவன்மகன்வேத
னெறியுறவயங்குஞ்சந்திரனவன்சேய்வருவானரச்சுவனவன்றன்
மறுவறுமதலைவயங்குசாபத்திமற்றவன்றவத்தினாற்பயந்தோ
னறனுறுபிரகதச்சுவனவன்றனளித்தவன்குமலையாச்சுவனே. 16

அந்தமார்குமலையாச்சுவன்புதல்வனசுரதுந்துவைச்செயித்திடலாற்
றுந்துமாரன்னென்றியம்பிடும் பெயராய்த்துலங்கினவனெழிற்குமரன்
சிந்தையின்மறையினெறியுறுதிவடாச்சுவனவனளித்திடுஞ்செம்மல்
சுந்தரமிகுத்துவிறலுறுபரியச்சுவனவன் சுதனுயர்நிகும்பன். 17

சீறியநிகும்பனருளியகுமரன்சிறந்திடும்பிரகினுச்சுவனு
மேருறுமவன்சேயிலங்கியசிரசாச்சுவனவனளித்தவனிளையா
வீரனுஞ்சேனைசரித்தவன்புதல்வன்விறலுறுவனுச்சுவனவன்றன்
பாரினின்வேட்டசதமனைவியவரைப்பரிவினாலணைத்தினிதிருந்தான் 18

பாரியரிடத்திற்புதல்வரில்லாமற்பழுவத்தினடைந்துமாதவங்கள்
சீருறுமகத்தைவிளைத்துமந்திரத்தாற்கொடுத்திடுஞ் செலத்தினைப்பருகி
யேருறுமவனுச்சுவன் கருத்தரித்துமிறந்திடாதுவகையிற்பயந்தான்
மாரனைநிகர்த்துவயங்குமாந்தாதாவெனும்பெயருடையமன்னவனை. 19

இம்பரிற்றந்தைகருத்தரித்தீனவிரவிபோலிலங்கியதவஞ்சா
னும்பர்கள்மகிழவெழுந்தமாந்தாதாவுதவியபுருகுச்சனெழிலா
ரம்பரீடன்மெய்யகல்கிலாநெறிசேர்முசுகுந்தனெனுமிவரயந்தேர்
தும்பிகணிறையமறையவர்மகிழத்துலங்கிநீள்பாரினையாண்டான். 20

மருளுறுந்தவத்தாலுயர்ந்தமாந்தாதாமைந்தரிற்புருகுச்சன்புதல்வன்
றிரசதச்சவன்றன்பயந்திடுங்குமரன்றிகழனரண்ணியனவன்சே
யருளுறும்பரியாச்சுவனவன்சிறுவனழ்கியனுந்திரியருண
நிருபன்மற்றவன்றனுதவியசூனுநிகரிலாச்சத்தியவிரதன். 21

சத்தியவிரதனுந்திரிசங்குசரியிலாவதிட்டர்சாபத்தா
லித்தலத்திசழும்புலையனுய்ப்பினரினிணையிலாக்கவுசிகனருளால்
வித்தகவனுடமுதலெனுமைந்தாமுடுக்களும்விளங்கிடநிகரில்
சுத்தனுயுயர்தெக்கணமடைந்திடவேதுலங்கிவனமர்ந்தனனன்றே. 22

உயர்விசும்பதனிறுறுதிரிசங்குபயந்திடுமுத்தமகுணமா
யியல்புடன்றயைமெய்யிலங்கியவரிச்சந்திரனெனுமரசர்கோனிலங்கக்
கயல்நிகர்நயனச்சந்திரமதியைக்கவினுறவேட்டிடவவடான்
செயலுறும்படிவமொளிருலோகிதனையுதவியேசிறந்திடுநாளின். 23

வே று.

அம்பரநற்பதத்தினச்சுதானந்தனுமா
யம்பரம்பாரிரடியினாலளந்தோன்றன்றேவி
யம்பரங்களேழுமழகார்வருணமுறு
மம்பரங்களாய்க்கெழுமவேதிகழுமாரணங்கு. 8

சேடன்பணங்கவிகையாகச்சிறந்தவுடற்
பீடமதினேறிக்கவின்கொணிலப்பெண்ணமுதங்
கோடுடையவெண்களிற்றுக்கோமுனிவர்தேவர்களு
மாடுறமாமுண்டகத்தோன்வாழுமுலகத்தினளால். 9

நாவினறைமறைகளுலுந்திருத்தாளாய்
மேவுபொறைமெய்யாவிழியிரண்டும்நல்லருளாய்
வீவிலறங்களெல்லாமேனியுரோமமுமா
யாவின்வடிவாகியெய்தினின்றாளவனிமின்னே. 10

கோவுருவாய்நின்றவசுந்தரையாங்கோமளத்தைத்
தேவருடன்றேவேந்திரன்முனிவர்தாந்திரண்டு
பூவிலயனுடனும்போற்றியெதிர்சென்றினிதா
மாவலுறநான்மறைகொடேத்தியறையலுற்றார். 11

அன்னேயவனியெனுமாரமிர்தேயன்புமிகும்
பொன்னேயகழ்வாரைத்தாங்கிப்பொறைநிறையு
மின்னேயுயிர்களுக்குவேண்டுமுணவருள்வாய்
தன்னேரிலாதநலத்தாமோதரன்றேவி. 12

பாரேயுருவாப்பருவரைகளேநகிலாக்
காரேகுழலாக்கடலேழுமாடைகளாச்
சீரார்சசியிரவிசேலோர்விழியிரண்டா
வேராரிளங்கொடியேயேழுலகுமீன்றமின்னே. 13

வேழ்விநிறையவிளைவயலாமெய்த்தவத்தோர்
சூழ்கைதவமொருவத்தூயநெறிபிறங்க
வாழுமுயிர்பதத்தின்வைகவருளளிப்பா
யாழிதிகழ்செங்கையமலன்றிருத்தேவி. 14

கோலமாகின்றெயிற்றிற்கொண்டுங்குறளுருவாக்
காலினாலன்றளந்துந்தாங்கிக்கமடமதாப்
பாலனாயுண்டுமிழ்ந்தும்பையநடந்தேயிருந்த
மாலினார்மாலாயணையுமடக்கொடியே. 15

என்றுதுதித்தார்மறைகொடேத்தியெழுந்திறைஞ்சி
மன்றன்மலரோன்விபுதர்மாமுனிவர்வாசவனு
மொன்றிமுலைப்பாலுதவுமாகண்டுளமகிழுங்
கன்றெனத்தாம்நெஞ்சுருகிப்பின்னுமவர்கட்டுரைப்பார். 16

வந்தகருத்தறிந்தோமண்மடந்தாய்வல்லசுர
ரந்தமென்றுமில்லாவரவர்கடாந்திரண்டு
வெந்திறல்கள்செய்யமெலிவுற்றமின்னேயுன்
சிந்தையிடர்மாற்றுவதற்கெம்மாற்செயலரிதால். 17

தீர்ப்பானுக்கைதவங்களெல்லாஞ்செகமுழுதுங்
காப்பானுமூவடிதாவென்றவுணன்கைந்நிறைநீ
ரேற்பானுமேழ்பொழிலுமுண்டுமிழ்ந்தவெம்பெருமான்
பார்ப்பாரந்தீர்ப்பான்கடற்றனைப்பைந்தொடியே. 18

ஆதலினால்மாயோனமர்பாற்கடலணுகப்
போதனலனென்னும்புரந்தரன்புத்தேளிர்திர
டீதில்மலரோன்முனிவர்சித்தவித்தியாதரரும்
நீதியுறுநிலமானோடுநெறிசென்றனரால். 19

சென்றார்பல்யோசனைகள்சேணுருவாத்தீயவரை
வென்றேகராவிசிப்பநொந்துவிதலையுற்றே
அன்றானைமூலமெனுமுன்வந்திடரகற்றி
நின்றான்றுயிலும்நெடும்பாற்கடலடைந்தார். 20

வேறு.

பெருந்தடவரையைநிறுவிநீளரவைப்பிணித்துறக்கடையயானளித்த, மருந்துபோலின்றானுகர்ந்திடவேண்டாம்நினைக்கவேவைகுந்தத்திருத்தி, யருந்துனியொருவித்தன்னிறமாக்குமமிர்தரவினிற்கருவணமா, யிருந்ததென்மீதிற்காண்மினென்றியம்பவருவபோற்பயோததியெதிர்ந்த.

பவமெலாமறுக்கும்பருவரலகற்றும்பலசமையங்களின்முயங்கு, மவமெலாந்துறக்கு மைம்பொறியடக்கு மறநெறிபொறையருளளிக்குந், தவமெலாமுயர்த்துஞ்சக்கரத்தவன்றாளிறைஞ்சிடச்சடக்கெனவருகென், றுவமைநேரில்லாப்பயோததிகரத்தாலழைப்பபோற்றரங்கமுமுலாவ. 22

மகனுரையிகழுங்கனகன்முன்னெழுவின் மடங்கலாயெழுந்துரம்வகிர்ந்து, மிகமெலிகயமன்றழைத்தசொற்பிந்தமுந்திதன்பதத்தினின்விடுத்தும், நிகரில்வாரிதியைக்கடைந்தமிர்தளித்துநிருதர்வேரறுத்தருணெமொல், புகழெலாம்பரந்து பொலிந்தபோற்றிருப்பாற் புணரியுமெழுந்து பொங்கியதே. 23

வெறிமலர்மகணன்புவிமகணினை யென்னும்வேல்விலோசனையுடனும், பொறியரவணையின்மிசைப்புயலெனவேபொருபடையைந்துடன்பொலிந்து, சிறையுடைக்கலுழன்வலம்வரத்திருமாலென்வயிற்சேர்தலான்மற்றை, அறுவகைச்சலதியெனக்குநேரலவென்றார்த்தபோற்கலித்தபாற்கடலே. 24

புயறனையூறும்புரந்தரனுடனற்புண்டரீகத்தயன்புவியா, மயிறுயரறமுப்பத்துமுக்கோடிபுலவர்மாதவர்புடைசூழ, வியலினாலடைந்தாரிவரி

டரொருவவெழுகநீயென் றுமாறனையே, துயிலெழுப்புவர்போல்முழங்கி
யதரங்கம்பிறங்கிடத் துலங்குபாற்கடலே. 25

முப்பதோடிரண்டாமிலக்கம்யோசனையாமுடுகியபயோததிநாப்பண்
டுப்பராமணிகோமேதகம்வயிரம்புஷ்பராகந்துய்யநீலஞ்
செப்பமார்மரகதம்வயிடூரியம்பசுஞ்செம்பொனாலிழைத்த
வொப்பிலாவிமானம்யோசனையெழுநூறாயிரம்நீண்டகன்றொளிர. 26

நேரிலாவனந்தனுடல்மிசைவேற்கணிறைந்திடும்பலமலர்மலியுஞ்
சீருறுமுன்னூற்றொருபதாயிரயோசனைசிறந்தகன்றநீளணைமேற்
பேர்களாயிரத்தோன்வனசமாமலர்கள்பிறங்குநீலக்கிரிபோலு
மேருறவிருநூற்றைன்பதாயிரயோசனைதனைவடிவெழிலுறவே. 27

பாதம்யோசனைநூறாயிரமகங்காலிருபத்தையாயிரம்பதுமப்
போதுநற்புளியாறைந்தினாயிரமன்பத்திரண்டாயிரம்பொலிவுற்
றேதமிறடையினகலமோர்கைந்நூறாயிரமெழில்கொளங்குலிக
ளோதினெவ்வொன்றாயிரமிருபத்தைந்தாயிரங்களவட்டமொளிர. 28

திருமுகவளையமுப்பதோரிரண்டாமாயிரம்யோசனைசிறந்த, புருவ
நேத்திரங்காதிவைகளுமொவ்வொன்றாயிரம்யோசனைபொருந்தச், சரியி
ல்வண்கொடிமூக் குயோசனையஞ்ஞூறொளிரமுந்நூறுயோ சனைதான்,
றெரிவுறுதிலகத்தூரியம்பிறைநேர்நுதலினிற்றிகழ்வுறத்துயில. 29

தூய்மையாந்தபனர்கோடிபேர் துன்னி யெழுந்தபோற்றிகிரியுந்துல
ங்கத், தேய்விலாக்குமுதசகாயன்வானகத்திற் றெறிந்தபோல்வலம்புரிசி
றப்ப, மீமிசையண்டத்தப்புறத்திருளுந் துறக்கும்வாள்கதையொடும்விள
ங்கத், தீவினையொருவப்பிறங்கியசார்ங்கந்திசைவிசும்பெங்கணுந்திகழ.

மீயுயர்மவுலிக்கவின்றிசையெல்லாம்விளங்கிடவிழிகளுமிலங்க
மாயிருவிசும்பினிவர்தமனியப்பூதரமெனவயங்கிடப்புயங்க
ளாயிரகோடிகாவதமளவாச்சிறகறைகாற்றுவந்தசைப்பத்
தூயமாக்கலுழன்றொழுதுபாற்கடலைச்சுற்றியேவலமதாய்ச்சூழ. 31

வானின்மீப்பிறழுங்கதிரெனமவுலிவயங்கிடவதனமுந்துலங்க
வீனமேயிலாதவிழிகளுமிமைக்கவிடாறநிலமளந்திடந்த
கோனணிந்தருளுந்தேன்முரறெறியல்குனிந்தெழின்மார்பினிற்குலாவச்
சேனைநாதன்கைப்பிரம்பொளிதிகழத்திசையிருநான்கினுந்திரிய. 32

உரமதாற்றிருவெட்டெழுத்தையுள்ளிருத்தியுறுபகையறுவருமோட
வரமதாற்றகருமயமெனத்துனிகளறுத்துயருந்தவமடையக்
கரமதாற்றொழுதுமெய்ம்மயிர்பொடிப்பக்கண்கணீர்புரளவேகளிக்கும்
பரமபாகவதர்மொழிந்தபல்லாண்டுபேரவையினொலியெனப்பரவ. 33

ஆரணனீயேயவனியும்நீயேயவனியன்றுண்டுமிழ்ந்தளந்த
காரணனீயேசனைகடல்நீயேகனைகடல்கடைந்தவனீயே

பூரணனீயேபொறிகளும்நீயேபொறிகளிற்பொலிபவனீயே
நாரணனீயேயென் றுரைநவின் றுநாரதமாமுனிநடிக்க. 34

ஒருமுதலுணர்ந்தோரிருபிறப்பாளர்முப்பகைகடிந்தவூற்றத்தா,ரரு
ள்செறிமறைநான் கறைபவர்வேள்வி யைந்துசெய்யறுதொழிலாள, ரிரு
ளெழுவிளமை யிரியவெட்டெழுத்தை யிதையத்துளிருத்துவோரேத்து,
முரையினையமிர்தின் சுவைபழித்தமரர்செவியினாலுண்டுண்டேயுவப்ப.

தருவமர்நகராளியைத்தளையிட்டோன் றந்தையின்பஃறலைதடிந்தோய்
கரியுரிசெய்யுங்கணிச்சிவானவன் றன்கையினிற்கடிகமன் றொழித்தோ
யரியரியரியேசெயசெயவெனவேயருமறையிசைகொடுபகர்வார்
தருதருமலரேசொரிபவர்தாளந்தத்தத்ததித்தியென்றேத. 36

கிம்புருடாதிகருடகாந்தருவர்கின்னரர்கீதம்யாழ்கிளர்த்தத்
தும்புருதுதிக்கநாரதர்வீணையிசைத்திடத்துந்துமிமுழங்க
வெம்பராதிருவாழ்மார்பமாமாயாவென் றுதம்மிதையத்திலிருத்தி
நம்பியேநயனம்புனல்கொளுமன்பர்நாவினான்மறைப்பொருணவில. 37

கண்ணினைமுகுந்தன் றிருமுகக்கவினைக்கண்டுளமகிழ்க்கண்களிப்பால்
விண்ணிறைமதியினிலவெனமுறுவல்விளங்கிடவளையொலிவிளைப்ப
மண்ணணங்குயருங்கமலமாமலரின்வரும்வடிவுடையவளாமப்
பெண்ணமிர்தனையரிருவருமமலன் றிருவடிசெங்கையாற்பிடிப்ப. 38

கருவரைமிசையினிறைகதிரெழிலைக்கனகமார்மவுலியேகாட்டப், பெ
ருவரைபிணித்தவரவெனப்புயத்தி னணிவலயங்களும்பிறழத், தருவெ
னத்திகழுந்தடக்கையிற்கவின்கொ டரளநற்கடையமுந்தயங்கத், திருவ
ரையதனிற்செம்பொனின்கொடிகத் தழகுவான் றிசையெலாந்திகழ. 39

விண்டலத்திருண்டபயோதரத்திரண்மேருக்கினும்விரிகதிரிரவி
மண்டலமெழுந்துவயங்கியபோலவள்ளையாங்காதினின்மகர
குண்டலநிறைந்தெல்லுறுகுருமணியின்குழாங்கணற்கவினொடுங்குலாவி
அண்டர்கள்பெருமான் றிருமுகத்தழகுக்கலங்கிருதம்பெறவமர்ந்து. 40

தன்னுடைக்கரத்திற் சார்ங்கமுமிரண்டாய் வளைந்தபோற்புருவங்க
டயங்க, நன்னிலவனையமுறுவலுங் கொடிமூக்கழகுடனயனங்கடிகழ, மி
ன்னொளிபலவாய்விளங்கியேயிருண்ட மேகமேலணைந்தமாண்பெனவே,
துன்னுபன்மணியின் றொகைகணீடுளபமணிதிருமார்பினிற்றுலங்க. 41

தெண்டிரைக்கடலினெழுகதிரெனநற்கவுத்துவமார்பினிற்றிகழ
வெண்டவர்வலாரியிமையவர்பிறங்கலிருசுடர்மகோததியிலங்கு
மண்டமுமயனோடுதித்திடவிலஞ்சித்தடத்தினிற்புறப்படவலரும்
புண்டரீகத்தினிகழ்களினெழிலிப்புவனமெண்டிசையினும்பொலிய. 42

திருநயனங்களிரண்டுடன்பவளச்செய்யவாய்திருக்கரமலரு
மருவுமிழ்மணியார்மார்பமுமாமையரவிந்தநாபியினவிருங் ....

தெரிவையரிருவர்செங்கையோடொளிர்வீரக்கழலமர்திருத்தாளுங்
கருமுகிற்றடத்திற்கமலகற்காமெலர்ந்ததோர்காட்சியைக்காட்ட. 43

கோகனகத்தேனிலமகணீளையென்னும்வேல்விழியொளிர்கொடியு
மோகையோடுறவேபயோததியிலங்கவுயர்மணிப்பஃறலைப்பகுவாய்
நாகணைமிசையிற்கருங்கடல்பரந்துகிடந்ததோர்நலத்தினையுறவே
யோகமாந்துயிலையுவப்பவன்போற்றன்கண்முகிழ்த்துறங்குவான்றன்னை.

வேறு.

இன்னமெய்வனப்புறத்துயில்கொள்ளுமெம்பெருமான்
றன்னையெவ்வகைகாண்பமென்றூர்கன்மாதவத்தோ
ரன்னவென்னிடையுயரிறையம்பரத்தும்பர்
பொன்னினன்னகரிறையொடும்போற்றிசெய்தனரால். 45

பச்சைமேனியபரம்பொருளாகியபரம
நச்சராவணைமிசைத்துயில்முகுந்தநாரணநின்
னிச்சையாலவதரித்திடுமிறைவவெம்மீச
வச்சுதாவனந்தாபள்ளியுணர்ந்தருளாயே. 46

வெற்பினைக்கடைமத்தெனவேலையுணிறுவிச்
சற்பம்வண்கயிறுகிடக்கடைந்தமிர்தத்தை
யற்பமாமசுரர்க்கிடாதெமக்குவந்தளித்த
வற்புதாவமலாபள்ளியுணர்ந்தருளாயே. 47

சீதமேயுறுநளினியினிடங்கர்வெஞ்சினத்து
மோதியேயொருதாளினையிசித்தவன்முடுகச்
சோதியேயெனுங்கறையடிதுனியறத்தோன்று
மாதிமூலவச்சுதாபள்ளியுணர்ந்தருளாயே. 48

சூதராமதுகைபிடவரவர்கள்மெய்துனிய
மோதிநீள்கடற்சேலுருவாமெனமுளைத்து
வேதநான்முதற்கருளியவிமலவித்தகனே
ஆதியேயரியேபள்ளியுணர்ந்தருளாயே. 49

சிவனெனும்விறலுடையபொற்கண்ணனைச்சேர்ந்தே
யவனுடற்குருதிப்புனலளக்கரின்மடுப்பப்
பவனவேகவெங்கேழலாயெயிற்றிடைப்படுத்தே
யவனியன்றிடந்தாய்பள்ளியுணர்ந்தருளாயே. 50

இருளகற்றியஞானமெய்ப்புதல்வன்சொல்விவரு
தருளகற்றியவாடகன்கரத்தினுலறையும்
விரியுநன்மணியெழுப்பிளந்திடவவிர்விளங்க
வரியுருக்கொளுவாய்ப்பள்ளியுணர்ந்தருளாயே. 51

மடிவிலாதுயர்மாவலிமூவடிவழங்க
நெடியனுயண்டமுகடுறநிவந்துபேரொளியாய்ப்
படியும்வான்றிசையடங்கலுமடங்குறும்படியீ
ரடியினாலளந்தாய்பள்ளியுணர்ந்தருளாயே. 52

விடத்தையுட்பொதிகுணத்திராவணனகர்மேவுந்
தடத்தைநற்றிமாவருணன்மேற்சரங்களைத்துறந்து
படைத்தலைக்குழாங்கொடுகவியெனுங்கினுற்பரவை
யடைத்தமெய்ப்பொருளேபள்ளியுணர்ந்தருளாயே. 53

சீலமாகியபிரமகற்பங்களுஞ்செறிந்து
வேலையெங்கணும்பரந்தண்டம்விண்டிடும்வேலை
பாலனாயுலகேழையுமுதரத்தடப்பதித்தே
ஆலின்மேற்றுயில்வாய்பள்ளியுணர்ந்தருளாயே. 54

கமலநாயகிகணவபீடுடையகாகுத்த
விமலநேமியநெடியவநிசாசரர்கால
விமலகேசவசுத்தசாத்திககுணவீர
வமலநாரணனேபள்ளியுணர்ந்தருளாயே. 55

இனையதானசொல்வழாமறைப்பொருளினாலேத்தி
முனிவர்வானவர்மகபதிமுண்டகத்திறையோ
டனைவரும்மமலாவிடரகற்றுவாயென்று
நினையுநெஞ்சினருருகினராலுளநிறைய. 56

எட்டெழுத்தையுமிதையத்துளிருத்தியேகமதா
யுட்டெளிந்திடக்கைதவமொழித்துயர்ஞானத்
திட்டியாலுயர்சிறந்தவேதப்பொருடன்னை
டொட்டிநின்றதாம்யோகமாயுகுநிடுமெல்லை. 57

வேறு.

செயலுறுமம்புயமலர்கள்சேர்ந்ததோர்
புயலொருகனகபூதரத்தையுற்றெனத்
துயில்பிறிந்தருளிநற்கலுழன்றோளின்மே
லியல்புறகமலைமார்பிலகவெய்துவான். 58

துந்துமிமுழங்கிடத்தூயபானுவு
மிந்துவுந்தயங்கிடவெழுந்தமேகம்போல்
நந்துசெந்திகிரியுங்கரத்தினண்ணநற்
சுந்தரமவுலியும்வயங்கத்தோன்றினான். 59

அறந்தவருதமாலணுகவார்வமுற்
றிறைஞ்சினர்கமலனேடெண்ணின்மாதவர்
நிறைந்தமெய்ஞ்ஞானியர்நயனம்நீருக
வறைந்தனராரணம்பாடித்துள்ளினர். 60

பாடினர்விளரியாழ்பலவும்பண்ணுற
வாடினர்முடிமிசையங்கைகூப்பினர்
பீடுறும்வைகுந்தப்பிரானைமேவியே
சூடினர்துளவங்கலெங்குதாண்மலர். 61

ஊழியாயிரங்கடான்யோகமாய்நின்றே
சூழுமாவினையறுந்தவர்க்குந்தோன்றலான்
வேழமூலம்மெனவிரைவின்வந்தபோ
லேழையாமெமக்கிரங்கினனென்றாடினார். 62

துள்ளினர்தரணிவானோக்கத்தூய்மல
ரள்ளினர்சொரிந்தனரானந்தக்களிப்
புள்ளுறப்பொடித்திடவுரோமங்கண்கணீர்
வெள்ளமொத்திழிதரவிளம்புவாராரோ. 63

வேறு.

ஈசநேமியவெம்பரனேயலை
வீசுபாற்கடல்மேவியவித்தக
மாசிலாமலர்மங்கைதன்னாயக
கேசவாகெருடக்கொடியாய்நம. 64

சீரெணவவுணன்றருசேய்விண்மண்
பாரணுபரமாவெனவேத்துமப்
பேரெணுதவனாகம்பிளந்தனை
நாரணாதிருநாயகனேநம. 65

ஆதியேயமலாவிமலாவருட்
சீதராமுகுந்தாசெகநுங்கிய
பூதநாயகமாயபுராதன
மாதவாமண்மகண்மகுணாநம. 66

பாவந்தானறப்பாரிருணீக்கிய
தீவந்தானெனச்சேணுயரண்டமுந்
தாவுந்தாளதயாபரசற்குண
கோவிந்தாகுறையேதுமிலாய்நம. 67

துட்டனாவிராவணன்றொன்னகர்
சுட்டவாசுகன்சூனுவுடன்கடல்
கட்டியேயவ்வரக்கனைக்காய்ந்தருள்
விட்டுவேவிதியுந்தருவாய்நம. 68

வேறு.

மதிஞானமிலாமறமேநிறையு
மதினாலடியோமுனைநன்கறியோங்
கதியாமுறநீள்கழல்நீயருள்வாய்
மதுசூதனமாயவனேநமவே. 69

வருமுக்கிரராவணனன்மவுலி
சிரமுக்கிடவேயுரமுஞ்சிதைய
வெரிமுக்குறுசாயகமெய்தருளுந்
திருவிக்கிரமாதிருமார்பநம. 70

வேறு.

காமனார்தமைநல்கியகாரணா
வாமயாயம்புராசியமர்ந்துளாய்
சாமரூபசங்குசக்கராயுதா
வாமனாமறையின்பொருளேநம. 71

சாதிகாதலன்வேள்வியைக்காத்துநீள்
தீதுசாலிலங்கேசனைச்செற்றுளாய்
சூதிராகெஞ்சர்தம்முனிற்றோற்றுவாய்
சீதராதிருநேமியினாய்நம. 72

மருடவிர்ந்தமறையொருநான்கினின்
பொருடெரிந்துனைப்போற்றிசெய்வார்க்கருள்
கருடவாகனனேகதிராழிய
விருடிகேசவிறையவனேநம. 73

சதமொழித்துக்கயவர்களாகிய
வதன்மறைத்துறந்தேயறநீங்கலார்க்
கிதமதாகியசிந்தையர்க்கெய்துவாய்ப்
பதுமநாபபழம்பொருளேநம. 74

வேறு.

தீமோதியபோல்வினையேதிகழுங்
காமாதுரர்வஞ்சகமேகளைவோய்
தாமாதரவால்கினேசற்குணனே
தாமோதரனேதலைவாநமவே. 75

எனவேபலவேதமெடுத்துரைசெய்
துனையேயலதொன்றுமுரைக்கிலா
மனமேயுடையோம்வினைமாற்றுகெனச்
சொனவானவருட்பிரமன்சொலுவான். 76

இராவணனிரணியனிரணியக்கணன்
றராதலத்துயிர்களைத்தடிந்தெல்லோரையு
மிராவணமியற்றுவாரிராமற்போச்சினு
பராவணைதுறந்துவந்தருள்தியையனே. 77

என்னையும்படைத்தனைதானுன்னின்னரு
டன்னினாலெண்ணிலாவுயிர்கடந்தன
னன்னவர்தமிற்கொடியவரைமாய்த்திடப்
பின்னைநானறிகிலேன்பெருமைநீயலால் 78

மகதனுந்தவக்கிரனுமாயமே
மிகுநரகனுமுரண்மிக்ககஞ்சனும்
பகனொடுசேதிபன்பவுண்டரன்றிறல்
நிகரில்சாலுவனுடனிருதரும்பலர். 79

தீயெனவுருத்தனரறமுந்தேய்ந்திட
மாயமெண்ணிலாதனவஞ்சம்விஞ்சவே
நோயெனத்திரிந்தனருலகைநுங்குவார்
தூயநான்மறைநெறிதிறம்பத்தோன்றினர். 80

சூழ்வினைதழீஇயகஞ்சுகத்தர்சுற்றிகல்
வேள்வியினவியையும்விலக்கியெம்மையும்
தாழ்வினிற்படுத்தியேதருக்கினர்கள்யாம்
வாழ்வினையொழிந்தனமாதவாவென்றான். 81

இருக்கினின்மறையவரிருகையாரவே
யருக்கியமளிக்கிலரறமுமோய்ந்திடத்
திருக்கறுமருக்கனற்றேர்செலாவகை
நெருக்கினரசுரர்கணேமியாவென்றான். 82

இன்னனபலபகர்ந்திடர்களேமுய
வன்னவர்தங்கள்வேரறுத்தெம்மன்னையா
மின்னிடைவசுந்தரையலக்கண்வீய்ந்திட
வுன்னுவாய்மாயவென்றுரைக்குமெல்லையின். 83

வேறு.

தேனுவின்னுருவிற்சென்றபார்மகள்
மானையெய்தமகுணன்மலர்ப்பதந்
தானிறைஞ்சித்தழைத்தெழுமன்பினா
ளீனமில்வசனங்களியம்புவாள். 84

என்பொருட்டினிரணியக்கண்ணினா
னின்புருட்டினையேனமதாகியென்
னன்பவச்சுதவாழியங்கையயான்
றன்புழந்துவந்தேனெனச்சொல்லுவாள். 85

நீசரானவரெங்குநிறைந்தனர்
பேசலார்கள்மெய்ப்பொய்கள்பிதற்றுவார்
கூசலார்மறவஞ்சக்கொலைசெய்வார்
நாசமாகிலராயமெய்நடுங்குவேன். 86

துலங்குமாசயிலத்தைச்சுமந்தயா
னலங்கொள்வோர்செய்தநன்றியைக்கொன்றிடும்
விலங்குநாவினரெய்தமிடுக்கிலேன்
கலக்குவேன்விடங்கண்டவர்போலவே. 87

எல்லையற்றபிறங்கல்களேந்தும்பரன்
கொல்லவல்லகொடியவர்தம்மினு
மில்லுளாளையிகழ்ந்துபிறர்மனை
புல்லுகின்றவர்தம்மைப்பொறுக்கிலேன். 88

எட்மொல்வரையேந்துமெனக்குநற்
சிட்டரோமுற்றேசெல்வந்துய்த்தவர்
கெட்டபோதினின்விட்டகெடுமெதித்
துட்டர்பாரஞ்சுமத்தற்கரியதால். 89

வேதபாரகர்தஞ்செயல்விட்டனர்
நீதிமாரினர்நீணிலமாள்பவர்
மாதர்கேள்வர்தம்வாய்மைமறுத்தனர்
தீதுசேர்கலரெங்குத்திரண்டனர். 90

உதவியாயினத்கொன்னலராயின
பதனமாயினர்பாரினையாள்பவர்
வதைகளேமுயல்வார்குருமாற்றமு
மிதமதாகவெண்ணார்வினையீட்டுவார். 91

ஆவிழந்தனரந்தணர்கன்றினர்
நோவவெவ்வியவவ்வியநோற்றிடும்
பாவர்தம்மைக்கணமும்பரிக்கிலேன்
காவெனக்கருணாகரவென்றனள். 92

செய்யமாதுக்கிடர்செய்ததீயனும்
வெய்யராவணன்வீழவேவாளிக
ளெய்தமாதவவென்னையிகழ்ந்திடி
னுய்யுமாறெனக்கில்லையென்றோதினன். 93

பாரியானநற்பாரணங்கானவள்
கோரமாங்கலரால்நொந்துகூறிய
நேரிலாவுரைகேட்டருணேமியான்
சீரிதாந்திருவாய்மலர்ந்தேசொல்வான். 94

பாவகாரியர்யாவரும்பற்றறக்
காவலன்வசுதேவன்கணுகிய
தேவிதேவகிதானருள்செயதாய்
மேவுவேனிலனென்றுவிளம்பினன். 95

தேசுடன்புவிமாதுசிறந்தனள்
வாசவன்கமலாசனன்வானவ
ராசையெங்குமுனிவரோடாடினர்
வீசுநாண்மலரின்வெறுவிஞ்சவே. 96

கீதம்வீணையிசைத்தனர்கின்னரர்
வேதமோதினர்மெய்த்தவத்தோர்களும்
போதனோடுவலாரிபுத்தேளிருஞ்
சீதமாமலர்வீசினர்திக்கெலாம். 97

இனையதாயகளிப்புடனெண்ணிலா
முனிவராகண்டலனயன்முந்தியே
யினியராகியிறைஞ்சினர்மால்பதம்
புனைதுழாய்மலர்சூடினர்போற்றியே. 98

போற்றிசெய்யுமவர்க்குப்பொற்பாரநா
வேற்றினானையும்பரோடேகெனச்
சாற்றியேபுவிதன்னைத்தெருமரல்
மாற்றியேவிடையீந்தருள்மாதவன். 99

அனந்ததீர்ந்தவமலன்றனன்பரா
மினந்தனோடெயோததியெய்தியே
மனந்தனல்கினந்தேமணிப்பஃறலை
யனந்தனர்க்கொருவாய்மையருள்செய்வான். 100

கற்புமிக்கிடுந்தேவகிகான்குறுங்
கெற்பமாகியுரோகணிக்கிள்ளையாம்
பொற்பினுடன்வயிற்றுதிபோயெனச்
சற்பராசனைமுற்செலச்சாற்றினன். 101

மாயைதன்னைவரவழைத்தாழியா
னுயரெண்ணுமசோதைமகளெனப்
போயுதித்திடுதேவகிப்பொற்கொடி
சேயுரோகணிசேயெனச்சேர்த்தியே. 102

திருவினாயகன்கூறிடத்தேவகிக்
கருவதாய்த்திங்களேழினைக்காட்டிமெய்
தருமுரோகணிதன்வயினாஞ்சிலஞ்
செருவலோனெனச்சேடனுதித்தபின். 103

அரவின்வைகியவாழியங்கையன்பாற்
பரவைதன்னைப்பொதுவர்தம்பாடியிற்
சுரபியெண்ணிலதாகிமுற்றோன்றென
வுரைசெய்தானுயிர்தோறுமுறைபவன். 104

அண்டமுற்றுமயின்றருளாழியா
னண்டர்தங்களைநோக்கியவனியி
னண்டனன்முனிதன்மரபாகியே
யண்டரென்னவவதரிப்பீரென்றான். 105

ஆயகாலையினட்டவசுக்களிற்
றாயனான துரோணனுக்கும்மவனுன்
சாய்விலாக்கற்பினுடரைத்தேவிக்கு
மேயவன்புகழ்வேதனியம்புவான். 106

மாதவன்வசுதேவன்மதலையாய்ப்
பூதலத்தினுதிக்கும்புதல்வனு
யாதலாநந்தகோபனசோதையாய்ப்
போதுமின்னிலத்தென்றனன்பூமகன். 107

திருவையுமுயர்தராணித்தேனையு
மருவுமானிலமீதினிசென்றுமா
னுரைசெயுக்கிரசேனன்பின்னேனுவந்
தருளுமாதுதரத்தினமர்ந்தனன்.

வேறு.

தேவகியுதரந்திகழநற்கருப்பமாகியசீதரன்றன்னைப்
பூவின்மெய்த்தவனேன்கயிலையங்கிரிவாழ்புராரியும்வலாறியும்புகழ்சேர்
தேவர்கள்முனிவர்கருடகாந்தருவர்சித்தவித்தியாதரர்சூழ
நாவினுன்மறைகொண்டுளமகிழ்களிப்பால்நயனநீருகநின்றநவில்வான்.

ஏகபாதவத்திற்பலமிரண்டியைந்தமூப்பணைநாற்சுவையினிய
தாகியிசிவமைந்தாறதாமுருவமமைந்ததோலேழெட்டுக்கவடே
யோகையாமூர்த்திநயனமொன்பதுபத்திலையுடையவ்விருக்கத்தின் [கும்.
சாகையினெருயுன்னிருந்துதானுகருஞ் சான்றதாயொருபுட்பார்த்திருக்

ஒருமரங்குரம்பையதன்மதன்மங்களுரைத்திடுமிருபலமாகு
மருவுமுப்பணைசாத்திகவிராசததாமதகுணமூன்றெனவறைவ
ரிரதநற்சுவைநான்கறம்பொருள்காமமினையிலாமோக்கமென்றுரைப்ப
ருரனுறசிபமொண்சுவையொளிபருசமோசைநாற்றங்களோரைந்தே.

உருவமாறெனவேயுரைக்குவதன்னை யுதரத்திற்கருப்பமொண்டொழிந்
யிருநிலமிசையிற்சனனமாங்குயர்தலியவனமூப்புறநாச [தே
முராணாறதோலேழெனுமதேயுட்டோல்மூடுதோல்வள்ளூரநிறையும்
குருதிமேதசைநீனத்திவெங்குடராநிணமெனக்கூறிவரன்றே. 112

கவடிருநான்கென்றறைவனவுயர்ந்தககனமாசுகங்கனலயமண்
ணுவமையின்மனசுபுத்தியாங்காரமுடனிவையெட்டெனவுரைப்பர்
நகையறநயனம்நவமெனவறிஞர்நவின்றதுநான்தெரிந்துரைக்கிற்
புவியிடைவிரசுஞ்செனங்கள்தம்முடலினவத்துவாரங்களாய்ப்பொலியும்

தெசவிலையெனவேயறைவதுபிராணுபானநல்வியானமுந்திரன
விசையறமுதானசமானநாகன்கூருமன்கிருகரன்விரைந்தெழுந்தே
யசைவுறதேவதத்தனஞ்செயமீங்கைவிரண்டாமெனவறைவர்
வசையிலீர்க்கஞ்சஞ்சரிக்குநற்சீவன்மறுவிலாப்பரனுமெிரண்டே. 114

அந்தமாமரநீயறன் மறங்குணநீசுவைசிபமமர்ந்திடுமுருவ
முந்துதோல்மூர்த்திநயனநீளிலைசெய்முயற்சிநீசிவனீபானீ
யெந்தைநீயெண்டிக்கேழ்கடல்வரையேழுலகநீயுந்தியினென்னைத்
தந்தநீதந்திக்குதவியேகராவைத்தடிந்தசக்கரக்கையனீயே. 115

பிறவியாமுலப்பில்பெருங்கடறன்னைப்பெருமவுன்றுடொழுநினைப்பா
மறுவிலாநாவாய்கொடுகடந்தேறிவானவர்மலர்மழைபொழியக்
குறைவிலாத்தீபநிறைதிசைவயங்கக்கொடிகுடைசாமரைநிகழ
நிறைவுசேர்பரமபதத்தினெய்துவர்கள்நின்னடியாரெனவாழ்வார். 116

ஐம்புலனடக்கியனிலமேயுணவாயருவரையேறிநீள்விசும்பி
னும்பர்கள்வெருவத்தழலினுப்பண்மெய்யோகமாயிருந்தவரெனினு
மெம்பரநின்றுடொழுநினைவரியாவேழயரிருநிலமுருக்கொள்
கொம்பிலாதுயரவெழுவபோல்வீழுங்கொடியெனமறுகிவீழ்ந்திடுவார்.

அண்டமெணிலாதநின்வயிற்றடக்கியருளுவாயைம்பொறியடக்கு
மெண்டவர்நின்றுடொழுதுதஞ்சென்ம விருஞ்சிறைறொருவுவரென்று
முண்டகருடனெவ்வுலகமுந்தமுராரியேயுனக்குமெய்ப்பிறவி [ல்
யுண்டெனவுரையாரறிஞருன்செனமம்வயிரியர்கோலமென்றுணர்வார்.

ஊரிவியுருவமிலிகுணமிலிபேரிலியிழைகருமமொன்றிலியா
லாருனையறிவாரறிந்தவர்பிறவியளக்கரின்வீழ்ந்திடாவண்ணஞ்
சீருறுமீன்கூருமகிரியரிமான்குறண்மழுச்சிலையலாயுதராய்
நேரில்யாதவனுமிவணினிற்றுன்றிநிகரிலாக்கற்கியுமாவாய். 119

கஞ்சமென்மலரோனுருவெனவுலகம்படைத்தியாற்ககனமீதெழுந்த
வஞ்சனமேகமாயவுன்னுருக்கொண்டளித்தியாலளக்கரினெழுந்த
விஞ்சியநஞ்சறுகருவோனுகித்துடைத்தண்டம்விண்டிடுமேனு
வெஞ்சின்மாவடத்தினிலையின்மேற்குழவியெனவமர்ந்திறிலாதிருப்பாய்.

அச்சுதானந்தகோவிந்தனேநமவேவாயிரம்பெயரினுய்நமவே
பச்சைமாமேனிப்பரமனேநமவேபயோததிதுயில்கொள்வாய்நமவே
நச்சுமாதவர்களுயகநமவேநான்மறைச்சோதியேநமவே
பிச்சையாய்நீயுண்டுமிழ்ந்தவிவ்வுலகிற்பிறந்தருளிறைவனேநமவே. 121

என்னும்வாசகங்களிருக்கெசுச்சாமவதர்வணவேதத்தினியம்பி
மன்னனுனசுதுந்துபியருள்போசனருளியமகன்முனுந்தோன்றி
மின்னுநேமியனுன்வயிற்றிடையமர்ந்தான்விளங்கியதுலகமெம்மிறைவ
னன்னையாமணங்கேவாழியென்றயனுமருந்தவமுனிவருமகன்றார். 122

என்றுநான்முகனுமிமையவர்திரளுமேழைபங்காளனுந்தாரக் [றே
குன்றினைநிகராங் கரியுடைக்கோவுங் கொடியபொற்கண்ணனைக்கொன்
பன்றியாயெழுந்தன்றிடந்தபார்மகடன்பாரநீயொருவியேவாழ
வின்றுமாநிலத்திற்றிருவவதாரஞ்செய்கெனப்போற்றியேகினரால். 123

மாதவரிமையோர்மலரயன்வலாரிமதிவளர்சடையினேன்பிறரும்
போதலுமுராரிதிருவவதாரமுணர்ந்திந்துபொலிந்தனன்கீழ்பால்
மீதலநிறைந்ததாரகைவிளங்கவிண்மிசைத்தருவெனமண்ணிற்
பாதவங்கனிகள்மலிந்திடப்பாலைவெம்மைபோய்மருதம்போற்படிய. 124

அறமெலாந்தழைக்கவமரர்கள்மகிழவானிறைசுரந்துபால்பொழிய
மறமெலாந்துணியமதியிலாவரசுரசுரர்வாளரக்கர்கடங்க
டிறமெலாமவியத்திரண்டவாமத்தோடித்திடத்தீவினைமடிய
மறுவிலாவீரமகளுளமகிழமண்மகடவம்வளர்ந்திலக. 125

அந்தரமிசையிற்றுந்துமிமுழங்கவமரர்கள்மலர்மழைபொழிய
நந்துசேர்மலர்க்கையுருப்பசியரம்பைதிலோர்த்தமைமேனகைநடிப்பச்
சுந்தரஞ்செறியாழ்நணுகுறவிசையாற்றும்புருநாரதர்பாடக்
கந்தநன்மலரினளாவியேவசந்தமுலாவிடக்கதிர்நிலாவெறிப்ப. 126

வேறு.

பொங்கிலாதவெட்டாந்திதிபோந்திடச்
சிங்கநாயிறரோகணிசேர்ந்தநாட்
சங்கநேமிதரித்தகைதன்னுடன்
செங்கண்மால்சிறந்தேயுதையஞ்செய்தான். 127

தேவகிக்கொடியும்வசுதேவனுங்
காவலிற்றழைகாலிற்கழன்றிட
வாவலின்னெழுந்தார்வமகத்துற
மூவரெண்ணியமூர்த்தியைப்பார்த்தனர். 128

வேறு.

கஞ்சமென்மலர்க்கண்ணிணைதிகழ்வுறக்கண்டார்
விஞ்சுநன்மணிமவுலியும்விளங்கிடக்கண்டார்
எஞ்சலின்றெளிர்திகிரிகோடிருகையிற்கண்டா
ரஞ்சலென்றவாட்கரமுந்தண்டமர்கையுங்கண்டார். 129

சிலைகுனிந்தெனச்சிறந்தநற்புருவமுங்கண்டார்
மலிகவின்கொடிமூக்குடன்வதனமுங்கண்டா
ரிலகுகுண்டலங்காதினினுறுமெழில்கண்டா
ருலகயின்றருள்வாய்மலரொளியையுங்கண்டார். 130

கந்தரந்திகழாரமுங்கலன்களுங்கண்டார்
மந்தரம்மெனக்குவவுத்தோள்வனப்பையுங்கண்டார்
சுந்தரஞ்செறிகவுத்துவந்துலங்குவகண்டா
ருந்திகண்டவருதரபந்தனத்தொளிகண்டார். 131

கோலமாங்கடிதடம்பொனிறுடையேற்குலாவக்
காலினூபுரம்பரியகந்தண்டைகள்கதிரை

யேலநல்லவிர்வீசிட்டெழிலியையிகர்க்கும்
பாலனுகிமெய்க்கவின்கொள்ளம்பரமனேக்கண்டார். 132

பொன்னினன்மலரிமையவர்பொழிவனகண்டார்
துன்னுநற்றுழாய்முடிமிசைத்துலங்குவகண்டா
ரன்னேயும்வசுதேவனுமத்தனும்ஞானந்
துன்னுசிந்தையாராடினரிழுகையாற்றெழுதே. 133

சுற்றியேவலம்வந்தொளிர்தாளிணேத்தொழுதே
யிற்றதாம்பருவமலெனவாடினரியல்பாங்
கொற்றமாகியயதுகுலமன்னனுங்கொடியு
மற்றைநாட்களிப்புற்றமையறைபவரானரே. 134

ஆயதோர்பெருங்களிப்புறமன்னேயும்பிதாவுந்
தூயகேசவமுராரியேகனகன்மெய்துளேத்த
ஓயமாகியபரமநற்பவளம்போற்றிகழும்
வாயநீமகவாயதேனெமக்கென்றுமகிழ்வார். 135

வேறு.

சிற்றவ்வைசொல்லத்திருவுறச்சீர்த்தம்பியுட
னுற்றுயர்கானெய்தியிலங்கையுறமொன்னலனேச்
செற்றுலகமேழுந்திருநாபியின்விளங்கப்
பெற்றவனேப்பெற்றனம்யாம்பெற்றவரம்பெற்றவரார். 136

கோலமெனமண்ணிடந்தகொண்டலோவன்றுனே
மூலமெனவந்தருளிநின்றமுழுமுதலோ
வாலநுகர்வாரந்தைதீர்த்தருளுமச்சுதனே
பாலனெனவெம்முன்வயங்கும்பரஞ்சுடரே. 137

என்றென்றுருகியிணேமலர்க்கண்ணுலியுக
நின்றுநினேந்துநெடியவனேத்தானேக்கி
யன்றிவ்வுலகுண்டருளுமாதிப்பரம்பொருளே
யின்றெம்மகவாய்வயங்குமாயமியம்புதியால். 138

வஞ்சனெனுங்கஞ்சன்மதியிலியோன்வந்திடுமென்
றஞ்சினம்யாமென்றறையவாழியான்கேட்டருளிக்
கஞ்சமலர்போன்றவிருகண்ணருளினுேக்கி
விஞ்சுதவஞ்செய்தவர்நீரென்றவிளம்பலுற்முன். 139

வேறு.

தூயனஞ்சுவாயம்பூமனுமந்திரத்திற்றேன்றியபிரமனஞ்சுதனும்
வேய்தாந்தோளிபிருச்சனியென்னும்பாரியாமெல்லியலுடனு
மாயனுமெனேத்தாங்கண்டிடவிரும்பிவரையினிலெய்திவான்மழையாற்
றீயினல்வெயிலால்மெலிந்திடார்சருகுதின்றமாதவம்புரிந்தனரால். 140

வாயுவேயுணவாயிவ்வகைபன்னீராயிரமாந்தெய்வவருட
மோய்விலாதரியதவம்புரிந்திடலுமுற்றனன்யானெளிதிகழத்
தூயமாதவனுந்தேவியுமென்னைத்தொழுதவர்பரகதிகேளார்
மாயம்யானியற்றப்பிறவிகடோறுமெமக்குநீமதலையாகென்றார். 141

பெருந்தவர்தமக்கன்றவ்வரமருளிப்பிருச்சனிகருப்பனாய்ப்பிறந்து
கருந்தடமுகிலம்போருகக்காடுபூத்தெனக்காட்சியாய்வளர்ந்தே
யருந்தினனென்றுயீய்ந்தருள்மூலப்பாலன்னையும்பிதாவுமுண்மகிழ[ன்.
விருந்துமெல்லெனத்தான்றவழ்ந்தழகாரநடந்தவர்க்கின்பமாண்டளித்தே

மற்றுமோர்பிறப்புக்காசிபனுகியதிதியாய்வந்துமாதவஞ்செய்
துற்றிடைக்குறளாயவரிடைத்தோன்றியுயர்ந்துமாபுராணவேதங்கள்
கற்றவனுகிமாவலியீந்தமூவடிதானங்கையேற்று
முற்றமூவுலகுமீரடியடங்கவளர்ந்தனன்முனிவர்கள்தொழவே. 143

ஆதலாலநாதிகாலமேதுடங்கியருந்தவஞ்செய்தனைமகவாய்ப்
பூதலத்திருகாலுதவிமெவர்நீருமக்குநான்புதல்வனாய்வந்தேன்
மாதுலனுனகஞ்சனைவதைத்துமண்மிசைப்பாரமும்நீக்கி
மீதலத்துயர்ந்தகதியுமக்களிப்பன்விளம்புவதுளதிங்ஙன்கேண்மின். 144

வேறு.

அன்னையெனும்நின்வயிற்றினன்பாயானமர்ந்து
பின்னையென்றன்மாயையினாற்போந்தேயுரோகணிப்பெண்
ணென்னுமனையீன்றமகனானசோதையெனு
மின்னின்மகளாய்ப்பிறந்தாளந்தரியாமென்கொடியே. 145

அஞ்சன்மினீர்கஞ்சனடைத்தகபாடம்வெளியாந்
துஞ்சினர்போற்காவல்செயும்வீரர்துயில்கொளுவர்
விஞ்சுபுனலார்நதியுமேகவழியும்விடு
மஞ்சுபடையுமெனைக்காக்குமெனவறைந்தே. 146

இந்தவிருளதனினென்னையிருகையேந்தித்
தந்தையெனுநீயேபொதுவர்பதிதான்புகுந்து
நந்தன்மனையாள்மகனுய்த்தவடனன்மகவா
மந்தரியைநீகொணர்வாயென்றங்கறைந்தனனால். 147

சோதியுரைகேட்டுத்தொழுதுபிதாவுந்தாயு
மாதியுருத்தீண்டுதற்கின்றஞ்சுவோமென்றறையத்
தீதில்வளையாழிசெறிந்ததிருக்கைத்தலமும்
பீதகநல்லாடைமகுடங்கரந்தபெம்மானும். 148

தூயசிசுவெனவேதான்தொழுதுதோன்றுமவன்
மாயைதனில்மாயன்வடிவுமுரையுமறந்
தாயெழுந்துவந்துதடக்கையினாற்றுனெடுத்தாங்
கேயெனுமுன்மார்பினணைத்தேங்கியிவையுரைப்பான். 149

யாதவர்கள்தங்கள்குலமீடேறயானின்ற
மாதவமேநீலமணியேமரகதமே
நீதுயருங்கஞ்சனுனைத்தீண்டுதென்முன்னேவினையேன்
சாதனலனென்னுத்தழுவியணைத்தாடாயே. 150

கையைநெறித்தாள்வயிற்றின்மோதினாள்கண்ணிணைநீர்
பெய்யவுளம்பொருமிப்பிழையுறும்பெண்ணமிர்த
மூய்யும்வகைகாணுதழலவசுதேவன்
றுய்யகுழவிதனைமோந்துதுளக்கமுற்றான். 151

என்மகனேஎன்னுயிரேஎங்கள்குலக்கொழுந்தே
துன்முகனுங்கஞ்சன்வினைசேருஞ்சுமூடனுனைக்
கொன்மினெனவந்தாற்கொடியேனுமின்றுயுங்
கன்மனதாய்நில்லோமடிவோமெனக்கழறி. 152

சிந்தைவெரீஇயின்பஞ்சிதையும்வசுதேவன்
செந்திருவிஞயகஞர்செப்பியசொல்நேருறவே
நந்தனுயர்மனையினற்குழவிதன்னேடு
மூந்துவன்யானென்னமொழிந்தான்றன்றேவியுடன். 153

மன்னனுரைகேட்மெனமெலியுந்தேவகியு
மன்னதுவேசெய்கருமமென்றங்கழகொழுகுந்
தன்னிகரிலாச்சிசுவைத்தன்னுயகன்கரதின்
மின்னிடையாள்வைத்துப்பொருமினள்கண்ணூலிவிழ. 154

கண்ணேமணியேகருநாயிறுபோல்வா
யுண்ணேயொழியவுனைப்பெற்றேனுனுவந்து
மண்ணோர்மகிழவளராமற்போக்குவனே
பெண்ணுகயான்பிறந்துபீழையினைப்பெற்றேனே. 155

இன்னபலபன்னியெழுந்தாற்றியீன்றவளா
மன்னையரந்தையுறவங்கைத்தலமேந்தி
மன்னன்குழவியுடன்வாயில்கடந்தேயமுனை
நன்னதியுமேகநெறிநல்கநடந்தனனல். 156

வேறு.

பொன்னின்மாமலரிமையவரெங்கணும்பொழிந்தார்
மின்னின்வான்மிசையதிர்ந்துமேகத்திரள்பொழிய
மன்னுதாரைகள்மாயன்மேல்விழாவணஞ்சேடன்
றன்னுமாமணிப்பணத்தினுற்கவித்தனன்றலங்க. 157

ஆறதாகியயமுனையைக்கடந்தெய்துமளவிற்
சிறுபேயினந்திரண்டெழுந்தரியினைச்சேர்ந்தே
யீறிலாதவைம்படைகண்டுகுலைகுலைந்திடைந்து
பாறிவீறுமாகாளிபாலடைந்திவைபகர்ந்த. 158

அயந்தருந்தடங்களினியினிடங்காலயர்ந்தே
வுயர்ந்தகையெடுத்தோலமிட்டெனையும்வேழத்தின்
பயந்தவிர்த்தவன்பாலனுய்வந்தனனென்று
செயந்திவந்தடிபணிந்தெழுந்தாடினடிகழ. 159

நம்பர்தம்மொடெடித்தவணண்ணியேயீய்ந்த
சம்புவின்பலமுவந்தருடேவகிதனைய
னிம்பருன்பெயர்தன்னினுலியாம்பிறந்திநா
ளும்பருந்துதிசெய்யவீடளிக்குமென்றுரைத்தான். 160

சீதரன்னருள்செய்தலுஞ்செயந்திநின்றுடி
யாதியோன்றனைப்புகழ்ந்தவனடிபணிந்தேக
மாதவன்செயுமாயங்களறிகிலான்மனத்திற்
பீதிமல்கிடவேவசுதேவனும்பெயர்ந்தான். 161

வேறு.

விஞ்சுமணிமாடவடமாமதுரைமேவுங்
கஞ்சனிவனையதுவனெனக்கடிதினேகி
யஞ்சியிருளூடெவசுதேவனழகாரு
மஞ்சனெமொயர்பதிநீண்மறுகில்வந்தான். 162

ஆயர்நகரெல்லையிலராகியடைவோர்தன்
னுயகனெனப்புகழ்கொணந்தன்மனைநண்ணி
மாயையெனுமந்தரியைவவ்விவசுதேவன்
றூயமினசோதையருகிற்சுதனைவைத்தான். 163

நந்தன்மகளென்னவருநங்கையையெடுத்தே
வந்துவடமாமதுரைபுக்குவசுதேவன்
சிந்தையயர்வுற்றெதிர்கொடேவிகையினீய
முந்தியழுவெங்குழவியுண்டதுமுலைப்பால். 164

குழவியழுமோசையதுகேட்டகொடியோரா
மெழுவினுயர்தோளினர்விழித்தனரெழுந்தே
யுழுவைநிகராகியடர்கஞ்சனிடையுற்றுத்
தொழுதுதுதிசெய்துபயமெய்தியிவைசொல்வார். 165

கொற்றவவுனக்கிளையகோமளம்வருந்திப்
பெற்றனளருங்குழவியென்றவர்கள்பேசச்
செற்றநிறைநெஞ்சொடுதிடுக்கெனவெழுந்தே
யெற்றுவனெனக்கடிதினேகினனடந்தான். 166

தீங்குநிறைகஞ்சனிலையாடனிடைசெல்ல
வேங்கினள்பெண்ணென்னமகவெட்டிதடனென்றே
வாங்கினனடித்துணைபிடித்துமறவோனு
மேங்கியிருகைகொடுசுழற்றியுறுமெல்லே. 167

கரத்திடைசுழற்றியறையும்முனிருகாலா
லுரத்தினிலுதைத்துயர்விசும்பினிடையுற்றாள்
பருத்தகதையாழிவளைகேடகம்வில்பாணம்
விரித்தசுடர்வாளயில்கொளெண்கரம்விளங்க. 168

காலணிசிலம்பிலகநற்கனகவாடை
யாவிடைமருங்கினெழில்மல்கநுவல்கின்றாள்
சீலமறுகஞ்சவுனையேவதைசெய்வோனாய்
மால்குழவியாயினனெனாவவள்மறைந்தாள். 169

வேறு.

அந்தரத்தெழுந்தஅட்சரியிவையயறைந்திடுமுரையினாற்கஞ்ச [கை
னைந்தனன்பகைஞன் வேறுளனெனவே நுண்ணிடைமடந்தையாமெங்
மைந்தரினெட்டாமதலைசத்துருவாமென்றசரீரிவான்மிசையிற்
றந்தசொற்பழுதாய்ப்பிறந்தபெண்டெய்வமாகிவான்றாவியதென்னோ.

அன்றுவான்மிசையினெழுந்தசரீரியறைந்தசொல்லசத்தியமான [ல்லாம்
தின்றியானுணர்ந்தேன்மெய்யெனநினைந்தே யெங்கைதன்மைந்தரையெ
கொன்றுமாநிலத்திற்கொடுவினைசெய்தே னென்றுதான்பலபலகூறிக்
கன்றியசினந்தீர்ந்தெதுகுலமன்னையனுசியைக்காவல்விட்டனனால். 171

காற்றளையகற்றித்தேவகிக்கினிமைசழறியுன்மைந்தர்கடம்மைக் [தழுவிச்
கூற்றெனவதைத்தேன்பொறுத்தியாலென்று கொடியவன்றங்கையைத்
சீற்றமில்மனத்தன்றுயர்வரத்திகைத்துச்சீர்வசுதேவனைச்சேர்ந்தே
யூற்றுநீரொப்பக்கண்சணீரொழுக வொற்கமுற்றிவையிவையுரைத்தான்.

ஓடுநீர்நதியின்வனத்துலர்மரங்களருவியோடொருமுகமாகக்
கூடியேபிறிப்பிற்கணத்திடைப்பலவா யொருவிடுங்கொள்கையேயொப்ப
வீடினர்மருகரிமையவர்தமக்கும்விதியினைவென்றிடவரிது
வாடியேதளர்ந்தால்வருவிலூழிவருமதோவராதொரீஇவற்றே. 173

மண்ணினிற்பிறந்தமனுரகுநகுடன்மதிதயனன்மகள்கொழுன,னெண்ணருங்காலமிருந்தவரிறத்தலல்லநீண்டிருந்தவருளரோ, பெண்ணருங்கலமேபின்வருந்துணையேபிழையினைப்பொறுத்தியென்றறைந்து,கண்ணினீருகத்தா னிறைஞ்சிமைத்துனன்றன் காலிரண்டையும்பிடித்தழுதான். 174

கஞ்சனும்வஞ்சனிவ்வகைபுலம்பிக்கபடநாடகக்கணீர்கலுழ [ன்
விஞ்சொலாற்றேற்றி யிறைஞ்சலுமெடுத்தே யிணையிலாவெழில்வசுதேவ
விஞ்சியவிதியேயுன்றனாலன்றன்மருகரைவீட்டியவதற்கு
நெஞ்சுளைந்தழுங்கிரங்கலையயின்மனைக்கேகெனப்போனான். 175

பொன்மனைபுகுந்தோர்மண்டபநாப்பண்புதுமணியாசனத்திருந்து
துன்மதியானவமைச்சரைக்கூவியவருடனிகழ்ந்ததுசொல்வா

னன்மதிமுகத்துத்தேவகிபயந்தபெண்ணிருநாலுகையுடனே [ள்.
யென்மதிமயங்கவாயுதம்பலகொண் டெழுந்துவிண்ணெய்தியேசொல்வா

மாதவனுருவமாறியீண்டுன்னைவதைத்திடப்பாலனுய்வந்து
பூதலத்திழிந்தானெனன்றிடிபோலப்புகன்றவள்போய்மறைந்தனளால்
எதிதென்றுணர்த்திரென்றுயிரனையீரென்னுடைவாழ்வுமதன்றோ
வோதுமினிதற்கேதுபாயமென்றிம்பவுருத்தெழுந்தறையலுற்றனரால்

தேனுகன்பெலம்பன்கேசிசாணூரன்முட்டிகன்றிறலுடைச்சகடன்
மானகவிகராம்பகனகனிகர்தன்மந்திரியானவருரைப்பார் [ரு
வானகமண்ணெண்டிசையெலாம்வடவாவனல்வளர்ந்தென்னவுன்பகை
ஞானுகாதுண்போமெமக்குநேருலகத்தியாருளரென்றுபின்னுரைப்பார்

நீயுயர்சிலையையெடுத்துநாணேற்றிநெடியசாயகங்களைவிடுத்தாற்
றீயுமெவ்வுலகுமுனக்கெதிர்நிற்பார்செகதலத்திலையுனக்கஞ்சி [ன்
மாயவன்கடலுள்வைகியாண்டொளித்தான் மலையிடையுமாபதிமறைந்தா
றூயமாமலரோன்றவத்துளோன்வலாரியிராவணிக்கன்றுதோற்றனனுல்

மாயனுக்கிதமாமுனிவர்வேதியரானிறைமகமறையிவையழியத்
தீயெனமூட்டுக்கியறைந்திடின்மாலின்முயற்சியுந்திறல்களுஞ்சிதையு
மாயிருநிலத்திற்சிசுவெனவந்தான்வளருமுன்மறைந்தியாக்கொல்வம்
நோயுறுபிணிமேலடர்வமுன்னருந்துமருந்திணுனுறுக்குவார்போல. 180

என்றவர்நயனமெரிந்துவெங்கதத்தாலிவையெலாமியம்பலுங்கஞ்ச
ன்ன்றுநம்முயற்சிநவின்றவிப்படியேநாரணன்றமரையேநாடிக்
கொன்றிளங்குழவியானவன்வளருமுன்னர்நீர்கடிதினிற்செரன்மி
னென்றவர்க்கினியவாடையாபரணமீய்ந்தினிதிருந்தனனிப்பால். 181

கண்ணன்றிருவவதாரப் படலம் முற்றிற்று.

ஆஉ திருவிருத்தம் - 2676.

---

## 25-வது, பூதனைவதைப் படலம்.

---

ஆரணனுமாயகிலமுற்றவுமயின்ற
பாரணனுமாயுயர்பதந்தனில்வயங்கும்
பூரணனுமாகியுறுபூதமுதலாகும்
நாரணனையேநினைமினேயநவகைடர. 1

மாதுயரின்மூழ்கிவசுதேவனெனுமன்னன்
தீதில்வடமாமதுரைசேருமுனசோதை
மாதவனைநாரணனைமாமகனெனத்தா
ஞாதரவினல்முலைகொள்பாலெழவளித்தாள். 2

ஏந்தினளுறத்தழுவியின்பமெனும்வேலை
நீந்தினள்மகன்றனதுநீலமுகில்மேனி
மோந்துநளினத்துமுகையாகியமுலைப்பா
லீய்ந்தனளுவந்தனளதின்னதெனலாமோ. 3

தூயவடமீனெனுமுரோகணிதுலங்கு
மாயர்மடவாருடனடைந்துமகவைத்தா
னேயமுடனீலமுகில்நேர்வடிவைநோக்கி
மாயனிவனோமதனனோவெனமகிழ்ந்தாள். 4

பேரிமுரசந்திமிலைதுந்துமிபெருத்த
தாரையுயர்சின்னமலிசங்கமிவையெல்லாம்
வாரியொலியஞ்சிடமுழங்கியதுவானோர்
பாரினுறநன்மலர்பொழிந்தனர்பரிந்தே. 5

சிந்தைமகிழ்வோடிலகுசேடியர்களோடி
யந்தமிகுமைந்தனையசோதையெனுமாது
தந்தனளெனப்பதம்வணங்கியவர்சாற்ற
நந்தனலனெய்தியமுனாதியினாடி. 6

பொன்மனையினிற்கடிதுசென்றுபுயல்மேனி
நன்மகன்முகக்கவினைநோக்கிநலனுற்றே
மன்மதனனைத்தருமிவ்வள்ளலிவண்வந்த
தென்மரபினோர்கடவமாமெனவிசைத்தான். 7

பூமடலின்வந்துதிகழும்புனிதனைப்போ
லோமமிறைவேதியர்களுற்றனருவந்தே
மாமலர்மின்னாதனிலன்வந்தருண்முகுர்த்தந்
தாமிசையவெண்ணிநலனென்றுரைகடந்தார். 8

போதனுடனேழுலகளித்தபுயல்வண்ண
மாதவவிறைக்குயருமந்தணர்மகிழ்ந்தே
யோதுமறையாகுதிகளோமமிறையத்தாஞ்
சாதகமகஞ்செய்தியலாசியுரைதந்தார். 9

வேறு.

திலதானமுனாருயிரகோதானமுடன்சேர்
பலதானமும்வெயிலோனவிர்பரவும்மரவுமிழும்
நலமாகியமணியோடிரணியதானமுநறுமா
மலரோனிகர்மறையோர்பெறநந்தன்வழங்கினனால். 10

தூயோனெறியருள்மல்கியநந்தன்றனியறவே
மாயோகிகர்வடிவாகியமைந்தன்பிறந்தனனென்
றாயோர்குலத்தனைவோர்களுமமிர்துண்டவர்போல
வேயூதினர்குனிந்தாடினரெழில்வீதிகள்மிடைந்தே. 11

வேறு.

கதலிநிரைத்தனர்கொடிகளெடுத்தனர்கமுகுநன்னட்டனர்மா
றுதிகளுலாத்தனர்ஞிமிறுமுயற்றியதொடைகணிரைத்தனரால்
மதியையடர்த்தெழிலுடையமுகத்தியர்மயில்களெனத்திரிவார்
குதலைமொழிச்சியர்தெருவிடையுற்றனர்குழலரிசுற்றிடவே. 12

ஆடினர்வீதிகளெங்கணுமண்டர்களன்புநிறைந்திடவே
யோடினர்வீழ்வர்களிப்பொடுதுள்ளுவருற்றுமெய்தழுவுவராற்
சூடினர்தளவலர்குழல்மிசையளிகளெழுந்துதுடர்ந்திடவே
பாடினர்சோபனநலனுளவிழவொடுபெணியணிபாவைநலார். 13

பாலொடுநெய்ததியாயரிறைத்திசைபாடினராடினரா
லாலிலையாமுதரந்திசழக்கலைமேகலையழகுறநற்
காலணிநூபுரமிசையெழவேவளையொலிகரமீதெழவே
வேலினைநயனியர்மண்ணிடைசுண்ணம்நிறைந்திடவீசினரால். 14

வெண்ணெய்கரங்கொடுமெய்யினெறிந்தனர்வீதிநிறைந்திடவே
யெண்ணெயிறைத்தனர்தாழியுடைத்தனரண்டர்களெண்ணிலராற்
கண்ணிணையழகியபெண்ணினர்கொங்கையினணிமலர்கவினுறநற்
சுண்ணமிறைத்தனர்தீபநிறைத்தனர்தூபநிறைத்தனரால். 15

அண்டர்களெண்ணிலர்வந்தருள்பெருகுமசோதைமகன்கவினைக்
கண்டனரன்பொடுநந்தன்மெய்தழுவினரினிமைகள்கழறினராற்
கெண்டையெனத்திகழ்கண்ணியர்கிளரொளியாகியகுழவிதனைக்
கொண்டனிறத்தரியென்றிருகைகொடுதழுவினர்குழுமியரோ. 16

வேறு.

உந்தியிலயனோடேழுலகளித்தவுவமையில்பரம்பொருடன்னை
மைந்தனென்றுவந்துநந்தனுமசோதைமங்கையுமற்றவர்கிளையு
மந்தரத்தெழுந்தவலரியினவிர்கண்டலர்ந்தவம்போருகமெனவுஞ்
சிந்துவினமிர்தைநுகர்ந்தவரெனவுஞ்சிறந்தினிதிருந்தனாட்டனில். 17

வஞ்சகக்கஞ்சமன்னவன்றனக்குவருடகாலந்தனிற்கொடுக்கும் [ண்டு
விஞ்சியகாட்சிக்களவிலாத்ததிபால் வெண்ணெய்நெய்யிவையெலாங்கொ
மஞ்சனையொருவாதிருந்துளமகிழ்ந்துமறுவிலாநந்தகோபால
னஞ்சுகமனையவசோதைநீமகனையகல்கிலாதிருத்தியென்றகன்றான். 18

நதியினிற்புனிதயமுனையைக்கடந்துவடமதுராபுரிநண்ணி
மதியெனத்துலங்குந்தனிக்குடைகவிப்பமருங்கினிற்சாய்மரைதிகழச்
சதமகனெனவும்வயங்கியகஞ்சன்றாளினில்வணங்கியேநந்தன்
ததிமிகுநெய்பாலிழுதுடனிருக்குந்தனமெலாமன்புடன்கொடுத்தான்.

அரசனுங்கஞ்சனந்தகோபாலனளித்திடுங்காட்சிகண்டுவந்து
வரிசையாங்கலிங்கங்கொடுத்தபின்னினியதாகியவாய்மைகள்பலவு
முறைசெய்தேநின்னூர்க்கேகெனவுரைப்பவுவகைசால்நந்தகோபாலன்
புரிசைசூழ்மதுராபுரியிற்றனமருமனைதனிற்புக்கினிதிருந்தான். 20

நந்தகோபாலன்மதுரையினெய்தியிருந்தநல்வாசகங்கேளாச்
சிந்தையார்களிப்பின்றேவகிகணவனவன்வயிற்சேர்தலுமெழுந்து
முந்தியேநடந்தவ்வாயர்நாயகனைமுகமலர்ந்திருகையாலணைத்தா
னுந்திநாண்மலரினுலகுதந்தோனையுதவியபுகழினையுடையோன். 21

இருகையாற்றழுவியிருவருமோராதனத்திருந்தினிமைகூறியபின்
பெருகியவுவகைபிறந்திடவரசன்பேசுவானந்தகோபால [ல்
சருகெலாமுணவாய்த்தவஞ்செய்வோர்பெறாத தவமுனக்கெய்தியததனு
முருகவிழ்தொடைசேர்முகுந்தனைநிகராமுகில்நிறக்குழவியைப்பெற்றாய்.

அனிலனலனலால்மாரியாற்சலியாதருந்தவஞ்செய்தவரெனினும்
பனியெலாமகற்றும்பருதிபோலாசில்புதல்வரைப்பயந்தவர்க்கல்லா
லினியமாபதத்தினணுகுவதரிதென்றியம்புவரியல்புடைச்சான்றோர்
புனிதமாதவரினதிகநீயானாயென்றுளமகிழ்ந்திவைபுகன்றான். 23

சொன்னநல்வசனங்கேட்டுளங்குளிர்ந்தநந்தகோபன்னிவைசொல்வான்
என்னுயிர்த்துணைவனீயெனக்குற்றவேமமாநலனுனதன்றோ
மன்னவவென்றன்மதலையுன்மகவேயென்றுநல்வாசகங்கூறிப்
பின்னருமுரைப்பான்கஞ்சனாலரசபெருந்துயருழந்தனையென்றே. 24

தங்கையென்றுணராதுன்னொடுமவளைத்தளையில்வைத்தவட்கருந்தனையர்
மங்கமுன்னடித்துமறஞ்செய்தானந்தோவல்வினைக்கஞ்சன்மாபாவி
யிங்கிவையன்றிப்பிறந்தபெண்ணிராதாகாயமேயாகியதென்றாற் [தார்.
பொங்கியேயடர்முன்வினைப்பயன்றன்னைப் பூதலத்தியார்கொலோகடந்

எனுமொழிவிளம்பியிருகணீர்விழவேதழுவியவண்டர்களிறையை
வினைவலிகடத்தலரிதெனவறியாவேழைபோல்மெலிவதுகடனோ
வனையனவெல்லாமுணர்ந்தநீயிடரையகற்றியேரோகணிபயந்த
தனையனையுன்றன்மகனுடன்வளர்த்தியென்றுபின்சாற்றுவானரசன். 26

உன்மகன்றனக்கிங்களப்பிலுற்பாதமுளவவைமேவிடாவண்ணம்
நன்னெறியறியுநந்தகோபாலவெங்ஙனங்காத்தியோநவைசேர்
துன்மதியானோரணுகிடாவகைநீயியற்றியென்றுணைவவென்றுணை
யின்னலெய்தாதுவளர்க்குதிநீயென்றியம்பினனியாதவர்பெருமான். 27

மன்னவனறைந்தவாசகங்கேளாமதிமறுகுற்றனனெழுந்தா
னுன்னினனிவைதானென்னகாரணமென்றறிகிலானுயிர்விடுமியாக்கை
யென்னமெய்நடுங்கியேங்கியேகடிதுசெல்வனென்றேகினனங்க
ணின்னல்செய்கஞ்சன்முயற்சியாமாயவினைகளையாமறைகின்றாம். 28

தீயினுங்கொடியவஞ்சகக்கஞ்சன்பூதனைதன்னைநீசென்றுண்
டேயெனுமளவிலவனியின்மனைகளெங்கணுமேகியேயியங்கி
நோயினுமுடுகிச்சிசுக்களையெல்லாநொடிப்பினிற்கொல்லுதியென்ன
மாயையையியற்றிமறலியுமஞ்சமண்மிசைமகவெலாம்வதைத்தாள். 29

அம்புவியடங்கத்திரிந்தறனஞ்சவளப்பிலாமகவெலாம்வதைத்து
வெம்பியசினத்தோடாயர்தம்பாடிமேவியொண்வித்தருமத்தின்
கொம்பெனமடவார்திலதமேபோலக்குயில்மொழிப்பெண்ணமிர்தாளு
ளம்பிணைவளைவில்குமிழ்பிறைவள்ளையாம்பல்சேரானனமிலங்க. 30

காலினிற்கனகநூபுரம்புலம்பக்கரத்தினின்வளைகலித்திடவே
நூலிடைமருங்கிற்பொற்கலைதிவளநோக்கினுலருந்தவரடைய
மாலெழமாலையளியொடுகுழல்மேலலைந்திடமதிமுகம்வியர்ப்பப்
பாலுறுகும்பப்பயோதரமசையப்பையயவப்படிமிசைவந்தாள். 31

நந்தகோபன்றன்மனையினிற்புகுந்துநலனுறுமசோதையைநண்ணி
யிந்துநேர்வதனத்தேந்திழாய்வனசநிறைந்தசோரொழிலியைநிகர்க்கு
மைந்தனைப்பயந்தாயுனக்குநேர்விண்ணின்மண்ணினுமியாவருமில்லை
கந்தமார்தொடைசேர்குழலிநீவாழியென்றிருகரத்தினுலணைத்தாள். 32

அணைத்தவள்மருங்கினழகுறவயங்குமச்சுதக்குழவியையெடுத்தே
யிணைக்கமலத்தினடிமருங்குந்தியிருகைதோள்முகத்தெழினோக்கித்
துணைக்கையாற்றழுவியுச்சியைமோந்துதூயவளாய்மனமுருகுங்
குணத்தினுளேயமுகமலர்ந்தினிமைகூறியேயுளங்களிப்புற்றுள். 33

கருமுகிலெனவுமரகதமெனவுங்கவின்கொள்காயாமலரெனவு
முருவுடையவனையுததியினமிர்தையொத்தவிம்மதலையைப்பெற்ற
வருமையைநோக்காயனைவருங்காணினளவிலாத்திட்டியாமென்றென்
றுரைசெயாமகவின்முகமொடுமுகம்வைத்துகந்தொருதனிமனையுற்றுள்.

மடிமிசையதனின்மதலையைக்கிடத்திவஞ்சகிவதைக்கவென்றெண்ணி
விடமுலைப்பாலையீய்ந்தனன்முகுந்தன்விழியினுலவள்முகநோக்கிக்
கொடியவணிலையிருகையாற்பற்றிக்குவிமுலைவாயில்வைத்தவட
னுடலிடையுயிருங்கனதனப்பாலுமொக்கவேயுறிஞ்சியுண்டிடவே. 35

கொடியவளுதரந்தீமடுத்தெனவேகுடரெலாமறுகிமெய்குலைந்து
விடுவிடென்றரற்றவிட்டிலனவடனுடலினையுயிரின்வேரறவே
கடியுடைக்கமலவாயினுலுறிஞ்சியுண்டனன்கமலனூர்படைத்த
நெடியபேரண்டத்தலகிலாப்புவனநிலையெலாமுண்டுமிழ்நெடியோன். 36

கடல்களும்வெருவக்ககனவான்முகடுமெதிரவெண்களிறிரிந்தோட
விடிகளுமுடையவலறியோசனையினிடத்துறுபாதவமெல்லாம்
பொடிபடவிழுந்துகைகள்கால்களகள்கட்டியபுணரியினைபோற்
படியின்மேற்கிடப்பப்பவளவாய்முலையைப்பற்றிமீக்கிடந்தனன்பரமன்.

பதகிவாய்மூக்குவரைமுழைநயனம்பயமிலாப்பாழ்மடுசிகரா [ப்
யுததிவெண்பிறைபோலெயிற்றினந்துலங்கவுயர்முலையோங்கலின்வயங்க
புதியவெங்கூற்றமனையவளியாக்கைபுயல்படர்பொருப்பினிற்பொலியச்
சதமகனயிலால்விருத்திராசுரன்மெய்தரணியிற்சாய்ந்தெனச்சாய்ந்தாள்.

கொண்டல்வாகனனூற்சிறகறப்புண்டுகுலைந்துவீழ்மால்வரைபோல
வெண்டிசையதிரவிழுந்தபூதனைதன்வாயினூலரற்றியவிரட்ட
லண்டர்களண்டம்விண்டதுகொல்லென்றயிர்த்தனராளக்கரின்காரி
கண்டவானவர்போற்கண்புதைத்தலறியாயர்கள்கலங்கியோடினரால். 39

ஆயர்கள்மடவாருரோகணிமடந்தையறிவழிந்தலறினாசோதை
வேயிழையனலின்வீழ்ந்திடுபதங்கம்போலவேயுளம்வெதுப்புற்று
மாயவெம்பேயின்முலைவிடமுண்டமணிவண்ணாவுய்தியோவென்னாத்
தீயுறுமெழுகுபோலவேயுடலுஞ்சிந்தையுமுருகிப்பார்வீழ்ந்தாள். 40

வீழ்ந்தவளெழுந்துவிம்மினாள்மகனே வினையினேனுனைப்பெற்றகால
த்தால், வாழ்ந்தனனென்றமகிழ்ந்தயான் மடியாதிரேனெனமயங்கிடும்
வேலை, சூழ்ந்ததோகையர்கள்வஞ்சகிமார்பிற்றுலங்கிய குழவியையெடுத்
தே, யாழ்ந்தவன்பினராயசோதைகைக்கொடுப்பவணைத்துமோந்தழுதர
ற்றினளால். 41

அன்னையாமசோதையிரங்கிடச்சீறியழுதுதேம்பினனருட்கண்ணன்
மின்னுநேரிடையாளுரோகணியுடனேவேறுளமங்கையரெல்லா
மன்னினார்குழவிமெலிந்திடவாலக்கிரகந்தான்பற்றியவாமென்
றுன்னிநற்கோவின்பால்கொடுசுழற்றியோட்டிமாமறையவர்க்கீய்ந்தார்.

ஆவினீரதனால்மஞ்சனமாட்டியதினுறுமண்கொடுவிளக்கிச்
சாய்வில்பன்னிரண்டுநாமமுஞ்சாத்திச்சதுமறையோதும்வேதியர்கள்
நாவின்மந்திரநீருடலெலாந்தெளித்துநவைவில்கோதானமுநல்கிக்
காவிகொள்விழியார்கருப்புரதீபங்காட்டினர்கவினுறப்பலகால். 43

உச்சிநன்னுதல்கண்மூக்கிருசெவிவாயுவமையில்கழுத்திருதோள்கை
பச்சைமாமேனியுரம்வயிறுந்திமருங்கெழிலூருவன்பாத
மச்சுதனனந்தன்முகுந்தனாரணன்மாலரிமதுசூதனன்முராரி
நச்சராவணையோன்முதலியநாமங்காவென்றுநவின்றுகாப்பிட்டார். 44

அந்தவேலையின்வாய்நந்தகோபாலனுயர்தம்பாடியிற்கடிது
வந்துமாபூதமடிந்தபேரியாக்கைவரையினைக்கண்டனன்மயங்கி [த்தே
சிந்தையார்பயத்தாற்றிகைத்துநின்றேங்கித் திருமகன்றனையெடுத்தணை
யெந்தைநீயிறவாதிருந்ததெவ்வாறென்றேங்குவான்பின்னருமியம்பி. 45

வருவதிங்கறிந்துமொழிந்தயாதவர்கோன் வாய்மையேநன்றுநன்றெ
னவாண், டுரைசெய்தென்மகனைக்காத்துவன்பேயினுயிருண்டானுலகம
ன்றளந்த, கரியவனுமென்றிருகரங்கூப்பிக்கரைசெயற்கரியதோர்களிப்
பா, லரிதிருவாராதனையெலாஞ்செய்வித்தந்தணர்க்கானிரையீய்ந்தான்.

கொமேருவெனமடிந்தவளுடலைத்தறித்துவெந்தீயினிற்கொளுத்த
வகின்மணத்தவளும்பரகதியடைந்தாளாருயிர்கொள்வதாயலகை
நகில்விடப்பாலையளித்திடவீடுகல்கினன்றனக்குநன்முலைப்பால்
பகலுநள்ளிரவுங்கொடுத்தவள்பயந்தாள்பெறும்பதம்பகர்வதற்கெளிதோ

உலகயில்பவளவாயினுலுவந்திக்கிளநகைக்யரும்பநீயுண்ட
தலகையின்கொடியவிட்மூலைப்பாலோவன்றியேயவளுயிர்தானே
விலகியசங்சோமலர்மகள்பூமானதரமோவண்டமோவெதுதா [ஞேர்.
னலனுறசுவைநீயுணர்த்தியென்றுரைத்து நாண்மலர்பொழிந்தனர்வா

பூதனைவதைப்படலம் முற்றிற்று.

ஆகூ திருவிருத்தம் - 2724.

---

## 26 - வது, சகடாசுரப் படலம்.

கோடகயாகம்நூறுசெய்தான்கைகுலைந்திடவமரர்கள்வெருவ
வாடகக்குன்றுமதிர்ந்திடமாதர்கருப்பங்கள்வெடித்திடவார்த்துச்
சூடகக்கையாற்பருதியைப்போலச்சுடருறுசூலம்விட்டதிர்ந்த
தாடகைதன்னைச்சரத்தினுற்றடிந்ததசரதராமன்தாள்பணிவாம். 1

கந்தனந்நந்தன்வடிவினைநோக்கிநலனுறவிருந்தமாநாளின்
வந்தனன்மதலைபிறந்தநாளதனுல்மறையவர்மந்திரவயத்தாற்
செந்திருமகள்கோனுகியாண்டிலங்குஞ்சிசுவைநீராட்டியேசிறப்ப
நந்துமிழ்தரளமுதனவமணிகள்வயங்குகோதானமும்நல்கி. 2

சுடரொளியெனமுண்டகத்தினிற்சுட்டிதிகழ்வுறநாமமுந்துலங்கக்
கடனிறவுருவன்காலினிற்றண்டைகவினுறக்கைவளைவயங்க
விடாறத்தொடையலேற்றவேகருதுமெல்லையிலிரணியந்தாரம்
படமணியிழைத்தபலபலதொட்டில்பண்பினர்தந்திடும்வேலை. 3

பூதனைமடிந்தசெயலதுகேட்டுப்போசராசன்றருபுதல்வன்
வேதனைமிகுத்துப்பலவுருக்கொள்ளுமவிடமுடைச்சகடவெய்யவனைச்
சாதனைமலிந்தகாலியாசுரனைப்பகைஞனைத்தடிந்தவன்குலத்தைச்
சேதனைசெய்யச்செல்லுநீரெனவத்தீயவர்முடுகியேசென்றூர். 4

துன்மதிச்சகடநந்தகோபாலன்றூயமாமனைதனிற்புகுந்து
நன்மணியிழைத்தவிருடைச்சகடநாயகத்தொட்டிலாயிருப்ப
கின்மலக்கொழுந்தையதனிடையேற்றிசிதானமும்படகமுமுழங்க
மன்மதபாணமனையகன்னியர்கள்மங்களம்பாடினூர்வாழ்த்தி. 5

வீறியபேரிபடலிகைதாளம்விளங்கியகாகளஞ்சின்ன
மூறுவாருதியினொலிகளுமஞ்சமுழங்கிடவும்பர்கடிரண்டு
நாறுமாமலர்கள்பொழியவேநந்தகோபனுமசோதையும்நலத்தின்
மாறிலாதுயர்ந்தரோகணிமாதுமடந்தையர்பலர்களுமகிழ்ந்தார். 6

அறுசுவையடிசினந்தகோபாலனகத்திடையருந்தியேயாயர்
நறுமலர்நானமலையசக்கமழநங்கையருடன்மனைக்கேக
மறுவிலாவசோதையுரோகணிவேறூர்மனையுளார்நந்தனுமஃதே
யிறைவனுந்துயில்வான்போன்றனன்சுற்றுமிடைச்சிறுமதலையரிருக்க. 7

எல்லையில்வஞ்சச்சகடனுங்கொடியோனியாவருமில்லை யென்றுணர்ந்தே
யல்லியங்கமலக்கண்ணனை வதைக்கவணுகினனவன்றிறமறிந்து
பல்லவமனையமெல்லியவடியாலடர்ந்தடர்ந்துதைத்தனன்பரம
னெல்லையிற்சகடனூராரம்பென்புசிதைந்துமெய்யொடிந்தனன்மடிந்தே.

சகடன்மெய்யொடிந்துதரணியின்விழவேதாமரைக்கண்ணனும்விம்மி
மிகமிகச்சீறியழுதனன துகேட்டசோதையுமெல்லியல்பலரு
டகமெலிந்தெய்தியணுகினராயர்பலருடனந்தனுமடைந்தான் [தார்
சிகரமொத்துருண்டவசுரன்மேற்றலங்குஞ் சிறுவனைப்பற்றியங்கெடுத்

எடுத்தவரசோதைகரத்திடைக்கொடுப்பவேங்கியே வாங்கிமெய்யணைப்ப
வடுத்தடுத்தழுதுதேம்பினனனையனவளொன்றுமறிகிலாளந்தோ
கெடுத்ததுவிதியேயென்றுளைந்தரற்றக்கிளிமொழிமாதராற்பலருந்
தடுத்தனர்மதலைபிழைத்தனன்றளரேலெனவவர்சாற்றிடத்தெளிந்தான்

தெளிந்துநன்முலைப்பாலீய்ந்திடச்சிறுவனுகர்தலுஞ்சிந்தைநோய்தீர்ந்தாள், தளர்ந்துகண்ணருவிமலிந்திடநந்தன்றனையன்றனுச்சியைமோந்தா, லுளைந்துளைந்தழுதவுரோகணிபுதல்வன்றன்னை யாண்டெடுத்துறவணைப்பக், குளுந்தவானனமால்கண்ணினலவனை நோக்கியேயிளநகை கொண்டான். 11

வேதமந்திரத்தாலுயர்திலவோமம்விளைந்தனர்வேதியர்நிறைந்த
போதொடுபுனலுஞ்சுழற்றிமானதியுள்விடுத்தனர்பொற்கொடிமடவார்
தீதுசெய்பூதம்பசாசுகளணுகாவகையரிநாமங்கள்சிறப்ப [தாள்
வோதியர்ச்சகர்கள்காப்புமிட்டதற்பினசோதைமின்னுரத்தெடுத்தணைத்

வதினலசுரனிறந்தனன்வானத்திடிவிழச்சிதைந்தவாபோலென்
றோதினனந்தனதற்கிளஞ்சிறுவருரைப்பக்கேளுன்மகனுதைந்து
பாதநற்சிலம்புபுலம்பிடவுதைப்பச்சகடநீளவுணனுய்ப்பட்டா
னீதுநிச்சயமென்றியம்பலுமவர்சொல்மெய்கொளாரெல்லரும்நகைத்தார்

இவரிளஞ்சிறுவர்மழலையாமொழியரென்னறிந்திவ்வுரைபகர்ந்தார்
குவடுகளுருமிற்பிளந்ததுபோலச்சிதைந்தனன்கொடியவாளசுரன்
துவரிதழ்துடிப்பவழுமிளங்குழவியுதைத்திடமடிவனோசொல்லீ
ரவனியினிறும்பூதெனநகைத்தவுணப்பிணந்தனையப்புறத்தெறிந்தார். 14

சகடாசுரப்படலம் முற்றிற்று.

௮௨ திருவிருத்தம் - 2738.

---

## 27-வது, காலியாசுரப் படலம்.

பாததுளியினற்கருங்கல்லாய்க்கிடந்தாள் பண்டையினுருவமாயேக
ப், பேதைபாகன்ருனெடுத்திடும்வில்லைப்பிடித்தொருநொடிப்பின்முன்
ஞெடித்த, போதினிலமர்தினிருந்தபின்புவியினுமுழுதபொற்கொழுவி
னிற்ரேன்றஞ், சீதையைவதுவைசெய்துவந்திருந்ததெசரதராமனைத்
தொழுவாம். 1

மைக்குழலசோதைமற்றமோர்தினத்தின்மதலைமெய்பணிகலன்வயங்க
வொக்கலையிருத்தியுவந்துசீராட்டவுலகிடந்துண்டுமிழ்ந்தொருவ
னக்கணத்தவடான்பரிக்கலாப்பாரமாகவேயவனியினிருத்தி
யிக்கணம்வருவானேனிவன்மாலோவென்றவணினைந்திடும்வேலை. 2

சீரிலாக்கஞ்சனுரையினைக்கேட்டுத்தீமைசெய்காலியாசுரன்வெங்
கோரமாங்கொடியனுயர்தம்பாடிகுறுகியேவெஞ்சினத்துடனும்
பாரெலாமுலையப்பருவரையதிரப்பறவைகள்யாவையுமடியக்
காரெலாமிரியக்கடுவினைபோலக்காற்றுருவாகியாண்டடைந்தான். 3

வேறு.

விஞ்சமாமரகிரைகளெங்கனும்வேரோடேயுயர்விண்ணின்மேற்
பஞ்சுபோலெழவொன்ருடொன்றடிபடவொடித்துபறந்தவான்
மஞ்சுநேரியதுகளினேடினவானுளோர்களிரிந்துநொந்
தஞ்சினுரிதுசண்டமாருதவேகமென்னவறைந்தனன். 4

வரைநெரிந்தனமரமுரிந்தனமறுவிலாமதவெங்கரித்
திரள்சுழன்றனகிருடிபொன்றினசினமுறும்புலியரிமரை
யிரலையெண்கினமிவைமடிந்தனவெழில்கொளும்பசுநிரையெலா
மிரியவண்டர்களலறிநொந்தனரிறுதிகாலமிதாமென. 5

புழுதிமாமழைபொழியமாதிசைபுவனமேழ்கடல்மறையவே
யழுதவாடிமெய்குலையவோடினராயரோடவர்மாதரார்
சுழலுமாசுகமுருவதாயொருகடிகைசூழவறைந்துதா
னெழுதொணுவடிவுடையமாலையெடுத்துவான்மிசையேகினன். 6

சுரர்நடுங்கிடமுனிவரஞ்சிடவேகுதுன்மதியாகமேல்
வரைவிழுந்தனபோலவெய்தியபாரமெய்யுறமற்றவன்
றரணிமீதுறவிழவெறிந்திடுவோனையேயரிதன்னிவர்
கரமிரண்டினுமிவரியங்குயர்கந்தரத்தைவளைத்தனன்.

தாலமன்னியகால்கழுத்துறசகடமென்னநெகிர்த்தவன்
ஞாலமீதுறநெரியவாருயிர்நமன்றனக்கடிமைத்தன
னலமாகியடர்ந்துவீழசுரேசன்மார்பினிலழகுறப்
பாலனாகியமாயன்மாலரிபரமன்வைகியிலங்கினன். 8



அன்னகாலையசோதைநங்கையறைந்தவாயுவின்மணலினு
லின்னதென்றறியாதுகண்கண்மூகிழ்த்துவிம்மினளேங்கியே
பொன்னின்மாமலர்நிறையுமென்கொடிபோல் விழுந்தனள்புவியின்மேற்
கன்னலொன்றுகழிந்தபின்னரொழிந்தமீதறைகாலரோ. 9

மாயமாகியறைந்துவாயுவகன்றபின்னரெழுந்துமான்
றூயமாமணிவண்ணமாகியகுழ்விகண்டிலடெருரு
வாயினீரறவலறியேசிறுகன் றபேர்யுறமனமெலிந்
தோயுமாவெனமண்ணின்மீதுவிழுந்துநொந்துளமுருகினள். 10

எவினால்விழுமென்கலாபமயூரமென்னவுமஞ்சியே
ஆவிபோயினவுடலிதென்னவுமறிவழிந்துமெய்சோர்ந்தனள்
காவிநேர்விழியாணவெங்கிபகண்டெண்களிலெற்றிநற்
கோவிமார்களெடுத்தபோதுயிர்வந்துகொம்புபுலம்புவாள். 11

பேயின்மாவிடமுலைநுகர்ந்துபிழைத்தபின்னரெடுத்தம்யா
மாயமாஞ்சகடத்தினுய்ந்தனைமைந்தவாயுவின்விசையினாற்
போயநீயினிவருதியோபுயல்போலுமேனியபுனிதநின்
வாயும்வாண்முகவழகுமூரலுங்காண்கிலாதுயிர்வாழ்வனே. 12

அந்தவேலையினந்தகோபனுமாயருமவர்மாதரும்
வந்துவீழ்ந்துபுலம்பினார்களெழுந்துமைந்தனைவவ்வியே
யிந்தமாயமியற்றவல்லவரியார்கொலோவெனவேங்கியே
முந்தியோடினர்தேடினார்திசையெங்கணுமுகில்வண்ணனை. 13

பாரின்மேலின்மடிந்தபாதகவசுரன்மீதுபரஞ்சுட
ரேரின்மல்கிகுழவியென்னவமர்ந்தகண்டவரெய்தியே
யூரினோதவுரோகணிப்பெணசோதையொண்குலவாயர்தன்
ஞரிமாருயர்நந்தகோபனடந்துநண்ணினர்தாமரோ. 14

வேறு.

மின்னெயிற்றிருகண்விரிகடலென்னமெய்வரைபோலவேகிடந்த
யின்னல்செய்யசுரன்மார்பினினீலமணியெனவிலங்கியகுழவி
தன்னையொண்மடவாளசோதையுஞ்சிறந்தநந்தனுமுரோகணிதானுந்
துன்னியபொதுவர்தோகையர்குழுவுங்கண்டவரிடருறச்சூழ்ந்தார். 15

இளநகையரும்பவணிகலனிலங்கவிந்திரநீலமேபோன்று
கிளரொளிதிகழக்கிடந்தவிக்குழவிதன்னையாண்டெடுத்திடுகிளைஞ
ரளவிலன்புடனுமசோதைகைக்கொடுப்பவழுதணைத்துச்சியைமோந்து
உளமகிழ்களிப்பாற்றன்முலைப்பாலையளித்திடவுண்டனன்முராரி. 16

உரைசெயற்கரியகளிப்பினால்மகனையுரோகணியெடுத்துறவணைத்தா
டெரிவையர்பலருந்தழுவினர்சிறந்தநந்தனுஞ்சேர்ந்துறப்புல்லப்
பிரமனைநிகர்த்தமறையவராசிகூறியபின்னர்நீசெய்த
வரிதிருவாராதனத்திலுன்புதல்வனுய்ந்தனனென்றறைந்தனரால். 17

காலன்வாயகப்பட்டெய்ந்தவர்போலக்கதறூறுமலகையாற்சகட்டா
லாலநேராமிவ்வசுரனூற்குழவிபிழைத்ததுமச்சுதனருளே [த்தான்
மேலுமோர்வினைகள்வரினுமற்றவன்றன் விலக்கியேகாப்பனென் றுரை
சிலமேரிறைந்தநந்தன்மாதவன்மேற்றேவருமலர்மழைபொழிந்தார். 18

இனையநன்குற்றுமதலேதன்னுடனுமியாவருமேகியேயியல்மா
மனைதொறும்புகுந்தாரசோதையுமகனைமஞ்சனமாட்டியேவயங்த [ற்
வினமணியிலழ்த்தவிழையெலாமணிந்தாண் டிராப்பகலொருவிலாயெிவி
கனவிலுங்காண்பனுணரினுமவனைக்கண்களாற்கண்டுளங்களிப்பாள். 19

சுடர்மணிச்சுட்டிநெற்றியிற்பிறழத்தூயநன்மதலேயையசோதை
மடிமிசைக்கிடத்தவிளநகையரும்பவவன்முகம்நோக்கிவாய்திறப்பப்
படிமுகடண்டஞ்சசியுடுப்பருதிபவமிலெண்பாலர்பூமகனேழ்
கடல்வரைதீவுகட்செவியுலகங்கண்டுகெண்புதைத்தனணடுங்கி. 20

சிறந்தபேருலகமியாவையுமவன்றன் றிருமலர்வாயினிற்கண்டு [ல்
நிறைந்தபேரொளியாய்நின்மலக்கொழுந்தாய் நின்றருள்சோதியாநெடுமா
பிறந்தனனென்றேபேதைநெஞ்சுருகப்பின்னருமாயையாற்பிணிக்க
மறந்துதன்கொங்கையாரமிர்தூட்டிமகனெனமகிழ்ந்தனளசோதை. 21

காலியாசுரப் படலம் முற்றிற்று.

ஆஉ திருவிருத்தம்-2759.

---

## 28 - வது, குக்குடாசுரன்வதைப் படலம்.

தரணியிற்சமதக் கினிமுனிமாளத் தடிந்திடுந்தனையர்களுடனும், கரமொராயிரத்தோன் றனையொருகரத்தின் கதிர்கொள்பூமழுவினல்வதைத்தே, அரசர்களிருபத் தொருதலைமுறையை யறுத்தவராக்கையிற் பெருகும், குருதியிற்குளித்தோன் றனுவினைவாங்கிக் கொண்டவன்புகழினையுரைப்பாம். 1

நற்கவினிறைந்தமதலையைநினைந்துகாடொரும்வைந்துதைந்துருகு
முற்குணமிகுந்தயாதவன்மகற்குநாமநீமொழிகெனச்செப்பக்
கற்கனன்முனிவனெய்தவேயண்டர்தலைவனன்புடன்கழல்வணங்கி
யற்கியமியாவுமளித்தபின்றவிசினிருந்தவனுசிகள்பகர்ந்தான். 2

என்னநற்றவமோயான்றொழநீயென்னில்விடையெய்தினுயென்று
சொன்னபின்முனிவன்றன்முகம்நோக்கித்தூயநீகேட்டியென்மகனுக்
குன்னுணர்வுவந்தநாமநீயருடியென்றுகைகூப்பியேயுரைப்பக்
கன்னலம்புரிகவென்றருந்தவத்தின்கற்கனுமுனிவனுமறைந்தான். 3

அறைந்தநன்முனிவன்றன்னுடன்மொழிவானுயர்கோனியாதவன்
றனக்குப், பிறந்தபெண்ணுலாயாற் றீயனுங்கஞ்சனுரோகணிபெற்றசே

ய்தன்னை, யறிந்திடின்மறஞ்செய் தானியேமுயல்வ ளுதலாலருந்தவவி ழைவ, மறைந்திவன்றனக்கு நாமமீயிடுதி யென்றனன்மதியினுலுயர்ந் தோன். 4

நந்தகோபாலன்மொழிந்தசொற்கேட்டோன்மறைமுனிவனுமிசைய
வந்தபேருவகைமலியவேயாயர்மகிழ்ந்தன ராவணம்வயங்கக்
கந்தனன்மாலைசதலிபூகந்தார்கன்ன லுக்கவினுறநிறைத்தார்
செந்திருமகளையனையவர்வீதிசேர்ந்துசோபனமொழியறைந்தார். 5

துந்துமிமுழங்கச்சுரர்மழைபெய்யத் தூயமாமறைவலோர்சூழ
முந்தியபேரிசச்சரிதிமிலைமுரசுகாகளம்வளைமுழங்க
நந்தனோடசோதையுரோகணிநங்கைகநலந்திசழாயர்கணண்ண
வந்தமார்வேதமறைந்துயர்கற்கன ழலினெய்யாகுதிவளர்த்தான். 6

ஓமவாகுதியிற்சாதகம்பண்ணியுரோசணிபெற்றசேய்தனக்குத் [ன்
தூய்மைசேரிராமன்சங்கருடணனென்றுலகுளோர்சொல்லிடவின்று
காமவேடந்தையாகியவரிக்குக்கண்ணனென்றோதியேபினருந்
தீமையோரறவேவளர்ந்தருள்வாசுதேவனென்றுரைத்தருள்சுரப்ப. 7

வேறு.

பூமலரின்மழைபொழிந்தேயந்தரத்தினிமையோர்கள்போற்றிசெய்ய
வாமமலிமங்கையர்கள்மங்கலகீதம்பாடிமகிழ்ந்துவாழ்த்த
தேமலர்மின்னுயகற்குத்திருநாமகரணஞ்செய்வித்துநந்தன்
மாமறையோரெண்ணிலர்க்குமாதாநங்கோதானம்வழங்கினனே. 8

வேதநிகர்கற்கமுனிநந்தகோபன்றனைவேறழைத்துச்சொல்வான்
மாதவத்தால்நீபெற்றமதலைதனைமனிதனென்றுமன திற்கொள்ளேல்
சீதரனுக்கொப்பனிவன்சிறந்தவசுதேவனுக்குமுன்னாட்சேய்கா [ன்.
ணீதுணர்தியிடரொருவியுனக்கும்வீடெய்துவிப்பனென்றுஞ்சொன்னு

எனுமொழிகள்பகரந்தவவடியிறைஞ்சியென்மகனீடேறிவாழ்தல்
முனிவவுனதருளன்றோவென்றுரைத்துமுகமலர்ந்தவாயர்கோனுக்
கினிமையுடனுசிசொலியிருத்தியெனவேகிவசுதேவனுர்க்குந்
துனிகளறதேவகிக்குமிவையெல்லாந்தனித்துரைத்தான்தூயகற்கன்.

பூதநிகழ்காலமுணர்கற்கமுனிபோயதற்பின்பொதுவர்கோமான்
நீதகலுசற்புடையவசோதைதனக்கருந்தவன்சொல்லெல்லாஞ்செப்பி
மாதவத்தாற்றன்பயந்தமதலைதனையிருபோதுமொருவராகி
யோதையுறமுததியமிழ்துண்டவர்போலிருந்தவர்தாமுவந்தநாளின். 11

வேறு.

துன்றுமணியாலவிர்கொள்சுட்டிவதனத்தின்
மின்னவொளிராரவடமெய்யினின்வயங்கப்
பொன்னுறுசிலம்பொலிபுலம்பவிருதாளாற்
றன்னிகரிலாதவிறையோன்றவழுமந்நாள். 12

அக்கிரமமேவுமதுரைக்கரசனேவக்
குக்குடமெய்யாகியசுரன்குறுகமாபோன்
சக்கரமெடுத்தகையினாற்றலைபுடைப்ப
வக்கணமாற்றியுயிர்மாண்டவுணன்வீழ்ந்தான். 13

நந்தனுமசோதையுநடுங்கிமெய்குலைந்தே
யுய்ந்தமகனைத்தழுவியுச்சிதனைமோந்தா
ரந்தகனின்விஞ்சவுணனுங்கையையெடுத்துச்
சந்தறநறுக்கியெறிந்தார்தரணிமீதின். 14

மாதவர்கள்மாமலர்பொழிந்தனர்கள்வாழ்த்தி
வேதியர்களோமநிறையாகுதிவிளைத்தார்
தீதகலநெய்யினுறுதீபவொளிகாட்டி
யாதரவினாலனையணைத்துமுலையீய்ந்தாள். 15

சிங்கலில்சதங்கைகள்சிலம்பினுடனேசீர்
தங்கியுறுகாலிடைசலஞ்சலெனவேதான்
குங்குமகருப்புரநிறைந்தமெய்குளிர்ப்ப
வங்குநிறைதோயவனையையநகைசெய்தான். 16

ஆடரவைவாவெனவழைக்குமதுபற்ற
வோடவழும்வீழுமழுமொன்றுமறியார்போல்
மாடவொளிதீபவெளியால்மகிழும்வானோர்
தேடரியசோதிசிறுமூரலெழுமாதோ. 17

தாதவிழுமாலைதிவளத்தவழுவோனைப்
பீதியுறுவோனெனவிருந்திறைபின்னோக்கி
யாதரவின்மீளவுமசோதைமடியேற
மாதுளமகிழ்ந்துமகனைத்தழுவினாள். 18

வீறியகருப்புரமெயிற்கரமளைந்த
சேறுறநடந்துமடியேறியிடவேசீ
ரேறியவசோதையிறுகத்தழுவியின்புற்
றூறிநிறைகொங்கையமிழ்தூட்டினளுவந்தே. 19

குக்குடாசுரன்வதைப்படலம் - முற்றிற்று.

ஆ௲ திருவிருத்தம் - 2778.

---

## 29-வது, நவநீதப் படலம்.

---

பகலவன்குலத்திற்றோன்றிப்பரதனுக்காசையீய்ந்து
நிகரிலாச்சனகியோடும்நெடியகானகத்துமேவி
குகநெறியெனக்கீயென்றுகூறியகொற்றவில்லி
புகழினையறைவோர்மதிர்புதல்வருண்டாகிவாழ்வார். 1

துளைபலவுளவாம்பாண்டத்தமைகிலாத்தோயம்போல
வளிமலிமுகுந்தன்காதையறிஞர்கள்மொழியக்கேட்டு
முளமகிழ்ந்துட்கொளாதேயுறுபவம்விளைக்குநெஞ்சே
களவுடையாக்கைநில்லாதுயரரிகழல்வாய்த்துய்ய. 2

காவியங்கண்ணிஞர்கள்கறந்தபாறதிநெய்பாரார்
மேவலார்மனையினென்றுமுன்னலார்விரைவின்வந்தே
யாவிளங்கன்றின்வாலைப்பிடித்திழுத்தன்பினேடு
மோவியவுருவினனைக்கண்டுளமுருகிநின்றார். 3

துணைவரோடேகியையன்சூழ்ந்தனனுயரில்வி
னிணையிலாக்கறக்குமுன்னமிளங்கன்றைநுகரவிட்டான்
பிணையெனும்விழியினார்கள்பிடித்தனரடிக்கவெண்ணி
யணைகயிறெடுப்பநக்கானவர்மகிழ்ந்தணைத்துக்கொண்டார். 4

பழுதிலாவண்டரில்லினுறிமிசைப்பாண்டந்தன்னி
னிழுதெலாமள்ளித்தானும்நுகர்ந்திளஞ்சிறுவரெல்லாந்
தொழுதிடவளித்துப்பின்னுந்துயில்கொளுமாற்கந்தன்னை
யொழிகெனவடித்திட்டாயரெய்திடவோடிப்போனன். 5

கறைதனிலேறியாயர்மனைதனின்முகட்டிற்கட்டு
முறிமிசைக்குழிசிதன்னையுயர்ந்தகோலதனற்குத்தித்
தறையிலோர்துளிவிழாமற்றன்னுடைவாயாலேற்றான்
மறைகளுந்தேடிக்காணுமலரடியுடையவள்ளல். 6

வானையோரடியிற்கொண்டோனசோதைதன்மகனுய்வந்து
நானமேசெடிசெய்மேனிநறுமலர்த்தொடைவயங்க
வானெய்யைத்தேடிக்காணுவாய்ச்சியரடிசில்கொள்ளும்
பானையைத்தகர்த்துத்தொட்டிற்பசலழக்கிள்ளிப்போந்தான். 7

களவுசெய்மால்காணுமற்காளமார்மனைகடோறுந்
தளவலர்நகையார்வைத்தவுறிதனைத்தடவிமல்கு
மனைநெய்பால்வெண்ணெயெல்லாமசோதைசெய்கலனர்தன்மெய்
யொளிவிழக்கவினைக்காட்டவுண்டையாற்றெறித்தேயுண்டான். 8

## வேறு.

மாதவஞ்செய்யாய்ச்சியர்கள்கூடியேநம்மனையினெய்பால்களவுசெய்
யுமவனைப்பற்றித், நிதகனுமசோதைமுனம்விடுவமென்று செப்பினவரி
ல்கடொறுந்திருடமெல்லப், போதமிறைதனைப்பற்றியெண்ணில்மாதர
கந்தொறுமோர்புதல்வனெனப்போந்துபின்னர், நீதியுறுமனைமுலைப்பா
லருந்துவோனைநேரிழையார்நோக்கிவெள்கியொருவினரால். 9

வேறு.

தற்பரனாயசோதிதமருடன்திருடித்தன்பங்
கொப்பியதுப்புவெண்ணெய்விலாளத்துக்குவந்தளித்துச்
செப்பிளமுலையாரெல்லாம்பின்பிடித்தேகச்சிறும்
சுப்பிரதீபம்போலத்திரிந்தனன்சுரர்கள்போற்ற. 10

சிலையெனும்நுதலின்மாதர்சிறந்தவுன்மைந்தன்தோழர்
பலருடன்வந்தெம்மில்விற்பாறயிர்பருகிப்பின்னு
மிலையிலையென்றுபோனானென்றனரவர்மருங்கிற்
கலையினைப்பிடித்துநக்கான்களித்தவரணைத்துக்கொண்டார். 11

சங்கருடணனுந்தானுந்தமருடன்யாண்டுமேகிச்
செங்கிடையதரச்செவ்வாய்ச்சிறுமியருடனேகூடி
யங்கவர்வளையுடைத்துச்சிற்றிலையழித்துமண்ணை
நுங்கினனதனைக்கண்டோரசோதைக்குநொடித்தலோடும். 12

உரோகணியுடனசோதைமகன்றனைப்பிடித்தீண்டுற்ற
திராமநீயியம்புகென்னத்தம்பிமண்டின்றானென்றா
னராவணைதுறந்தவையனண்ணனேதின்றானென்னச்
சரோருகவதனத்தாயோடனைவரும்நகைத்தார்சால. 13

வெள்ளைநீர்வண்ணத்தண்ணல்மெய்யன்றிவிரகுசொல்லா
னுள்ளவாறுரையாயாயருறியினெய்திருடியுண்ட
கள்ளநீமண்டின்வாயைக்காட்டெனவடிப்பக்கண்ணன்
மெள்ளவாய்விரித்தானன்னைவெருவியேயிவைகண்டாளால். 14

பிரமனைக்கண்டாளண்டகோளத்தின்பெருமைகண்டா
ளிரவியைக்கண்டாள்வானினிந்துவைக்கண்டாளெட்டு
வரையினைக்கண்டாளேழுமகோததிதன்னைக்கண்டாள்
கரியிருநான்குங்கண்டாள்கனகமாங்கிரியைக்கண்டாள். 15

ஏருறத்திசையின்வைகுமெண்மரைக்கண்டாள்வானிற்
றாரகைக்கண்டாடேவதவத்தினர்குழாத்தைக்கண்டாள்
பாரினைக்கண்டாளாயர்பாடியிற்றன்னைக்கண்டாள்
சிறுமகனைக்கண்டாள்சிறந்ததன்கைக்கோல்கண்டாள். 16

ஏதிவனியற்கையென்னாவேங்கினளிருகண்மூடி
யாதியாயகண்டமெல்லாம்தன்வயிற்றடக்கிநின்ற
சோதியாமிவனையென்னேயென்மகனென்றுசொல்லும்
பேதமையென்னவென்றுபீதிகொண்டசோதைநின்றாள். 17

தூயவனெஞ்சிற்றோன்றுசுடரொளிஞானமெல்லா
மாயையால்மறைத்துப்பின்னும்வாய்விம்மியழுதான்வள்ள
லாயதுகண்டசோதையையநானடியேனென்று
நீயழேலென்றணைத்தாள்முன்கண்டதினைவொன்றில்லாள். 18

வேறு

மின்னிடைமேனகைமுதலாமடவாரேத்த விழுமியதுந்துமிமுழங்க
விண்ணுளோர்கள், பொன்னின்மலர்மழைபொழியமுனிவர்வானோர்போ
ற்றிசெயத்தும்புருநாரதர்கள்பாடத், துன்னுமணித்தாவடங்கள்மார்பினு
டத்துலங்கநகைத்தேநடிக்குஞ்சுதனைநோக்கி, யன்னைநவநீதமளித்துவந்
துசித்தமனப்பரியவன்பினுடனமருநாளின். 19

நவநீதப் படலம் முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் - 2797.

## 30-வது, ததிபாண்டப்படலம்.

நிலநீர்காலனல்விசும்பாயுலகமெல்லா நீண்டசுரர்முதலாகிவரையா
மத்தா,லலையாரும்பயோததியைக்கடைந்துதோன் றுமமிழ்தினைவிண்ண
வர்திரளுக்களித்துத்துய்ய, சிலையாலேயிலங்கைநகராளுமன்னன் சிரங்க
ளொடுவரங்களறச்செற்றுமீண்டு, மலர்மேவுசனகியுடனயோத்தியெய்து
மாதவன்றன்மலரடியைமனத்துள்வைப்பாம். 1

வல்லூறுபசுந்தலைசயைக் காட்டத்தானுர் மரமொருவியிழிந்தவன்
பாற்சேர்தலேயச், செல்லூருந்திருமேனியெழில்கொளெம்மான் றிருவடி
யின்கொழுகொம்பின்பற்றுவிட்டே, அல்லூருங்கருங்குழலார்கலவிகாட்
டுமெல்குறனிலமுழ்ந்நரகமைக்குநெஞ்சே, சொல்லூறுமிறைபெயராஞ்சு
தையையுன்னித்துலங்கிடவுன்னிடத்தமைத்திதுயர்போயுய்ய. 2

அரியுறைநறுங்குழலலேயமலர்கள்வீழ வணிகாதிற்றேடிரண்டுமெசைபவி
ஞ்சும், வரிநெடுங்கண்ணிணையிலகவாசம்வீச மதிநுதலின்வெயர்வரும்ப
மணிகள்மின்னக், கிரியனையபயோதரங்கள்மிளிரத்தோளிற்செழுமணிப்
பூண்வயங்கவொளிரிருகைதன்னிற், சரிவளைகள்கலகலவென்றொலிப்ப
மத்தாற்றாழியினிற்றயிர்கடைந்தாளசோதைதானே. 3

தாழியினிற்றயிர்கடையுமசோதைதன்னைத் தனயனெனுங்கண்ண
பிரான்முலைதாவென்றே, யாழியுறுங்கையினிலைமத்தைவீழ்த்தே யழுதி
ருகையாலவடனகிலைப்பற்ற, வேழைவருமிளங்கன்றுக் கிரங்குமாப்போ
லெடுத்தணைத்துமனமுருகியுச்சிமோந்து, வேழமுனுளமழக்கவந்தமைந்
தனுர்க்குவிம்முமுலைப்பாலளித்தாள்விருப்பமிக்காள். 4

ஆவிலையிலன்றுதுயிறாதியோனுக்கழகியதன் முலைப்பாலையளிக்கும்
போழ்தின், பாலுறதீமூடுகிடவேபொங்கக்கண்டு பரமனைத்தானிலத்தி
ருத்திப்பாறினுள்மின், னீலமுகில்மேனியின்வாய்துடிப்பச்சீறிகிலமத்தா
ற்றாழியினைப்புடைத்துமெல்லக், காலிலணிசிலம்பசையாமற்றனேகிக்க
ரந்துதனிமனைபுக்கான்கள்வனுகி. 5

உரலதனையுருட்டிநிலநிறுத்திமேனின் றுயர்ந்தசிக்கந்தனையறுத்து வெண்ணெயள்ளி, வெருகுதினத்தினவளித்துப்பயந்தார்போலத் தாய்வரவுநோக்கிநின் றவிழிக்கும்வேலை, யெரியவித்தும்பாலிறக்கியசோலைதநங்கை யென்செய்தான்மகனெனவந்தெய்திக்கண்டாள், பெருகுததிநதியெனமண்ணிறைந்தேயோடப்பெருந்தாழிபலவோடாயுடைந்தவண்ணம்

மூலையிய்ந்தேனிலையென்றுதாழிதன்னைமுனிந்துடைத்தானுமெனத்தான்முறுவலெய்தி, கலனுறந்திருமகனைக்காணுளாகிகடந்தெங்குந்தேடிடவோர்மனையினுள்ளே, நிலவேபோலொளிசிறக்கும்வெண்ணெயள்ளி வெருகினுக்குநெடுநேரங்கொடுத்துநின்ற, வலரோனையுந்தியினிற் றந்தமைந்தன் தனையடிக்கக்கோலெடுத்தாளசோதைதானே. 7

அன்னைதனையடிக்கவருகின்றாளென்றுண் டகப்படாதேமுகுந்தனிலத்திலோட, மின்னிடையிற்கலையசையக்குழல்மென்மாலைவீழ்ந்திட நல்விரிசிகையின்மணிகள்மின்னப், பொன்னின்மணிச்சிலம்பரற்ற வளைகளார்ப்பப்புகரிபக்கோடனையமுலையாரமாட, வன்னமெனநடக்குமின்னுளோடியேயவ் வச்சுதனைப்பிடித்திடத்தானணுகுங்கால. 8

விதிவேண்டவரமளித்துப்பூமிபாரம் விலக்குதற்குவடமதுரைபிறந்துபின்னர், நதிதாண்டியசோதைமனைபுக்கநம்பிநற்றவங்கள்செய்துமுன்னுளழிந்திடாத, பதிவேண்டியறிவுடனும்பிறந்தேயாயர் பதியிருந்துபரமன்தன்வரவுபார்க்குந், ததிபாண்டனுறைமனையினெய்தினான்மற் றவனுமிவன்றாளிணையைப்பற்றிச்சொல்வான். 9

போதயனுமாதவருமனேகக்காலம்பொருந்தியநற்றவம்புரிந்தும்வெளிசெய்யாத, ஆதியுனைக்கண்டுகொண்டேனருள்நீவீடென் றறைந்திடவுமச்சுதனின்றருள்செய்வானு, மேதுரைத்தாயானந்தன்மதலையென்னையன்னைபிடித்தடிப்பதற்கீண்டெய்துகின்றாள், பேதையென்றன்கால்விடுதியென்றுகூறத்ததிபாண்டன்முறுவலித்துப்பேசுவானல். 10

நறுமலரினயன்முதலாநாதரெல்லா மிராசதமுந்தாமதமும்நண்ணித்தாங்க,ளிறையெனவேயாங்காரத்திருக்கமாயமியற்றியபோலெனையின்றுமயக்குவாயோ, வுறவினையேயன்றனக்குமெனக்குவந்நாலே மில்லவர்க்குமியான்பிடித்தவுயர்தாழிக்கும், குறைவில்பதங்கொடுத்தருள்நீகொடாயேலுன்னையசோதைகரத்திற்காட்டிக்கொடுப்பேனென்றான். 11

எனுமளவிலசோதையணுகிடலுமாயோ னிய்ந்தனன்யான்பரகெதிநீயிம்புகின்ற, வனைவருக்குமனக்குமுன்றன்மைத்தாழிக்குமடைதிரெனவச்சுதனுண்டருளலோடு, முனிவர்தொழப்புதுமலர்கள்பொழியத்தேவ துந்துமிகள்பலமுழங்கவண்டமிப்போ, யினியகெதியெய்தினர்கணந்தன்மைந்த னன்னைகையிலகப்படாதேகினானல். 12

எழுநாலுமனையிலுளோரெவருந்தாழி யுடன்றதிபாண்டனும்வான்மீதேகும்வண்மை, பழுதோயவருந்தவஞ்செய்யசோதைநங்கை பார்த்து

மறந்தனன்மாயன்மறைப்பப்பல்கா, லழுதுசெலுந்தன்மகனைத்துடரமா றி லட்டமாயோகிகட்குமகப்படாமல், முழுமாயஞ்செய்கின்றமுராரியன் பர்க் கெளியவனாகுவபோற்றாய்முன்னின்றானல். 13

முன்னஞ்சிகின்றமகன்கரத்தைப்பற்றி முகில்போலுமேனியந்தி கொடாழி, பின்னஞ்செய்துறியறுத்துவெண்ணெயள்ளிப் பவனங்கள் பெறவளித்துப்பிழைநீசெய்த, துன்னெஞ்சிலுணர்ந்திலேயோவில்கடோ று முற்றமுனம்புரிநிமையுலப்பிலாத, வன்னெஞ்சப்பேய்முலையைநீய ன்றுண்ட மதத்திறலோவிவையென்மைந்தாவென்றாள். 14

என்றுனாத்துமிகநகைத்தவசோதைமைந்த னிருகரமும்பிடித்திழு த்துமனையினெய்திக், கன்றுகள்வால்பிடித்திழுத்தும்பாரிலுள்ள கட்டெ றும்பையதன்செவியிற்கடிக்கவிட்டு, மன்றல்கமழோதியர்கள்வளைகள்சா டி மற்றவர்கள்சிற்றிலையுஞ்சிதைத்தவந்தே, யொன்றுமறியார்போலகிற் குங்கள்வ வுன்னையினியுலூகத்திற்பிணிப்பேனென்றாள். 15

பெரியவுரலுருட்டியவன்முன்னர்வைத்துப் பிரமனுடனுலகுதந்த பெரியோன்றன்னை, யரியதவஞ்செய்துமகிழசோதைநங்கை யழகியநற்க யிற்றையவன்மருங்கிற்சேர்ப்ப, விருவிரல்மாத்திரம்போதாதாகப்பின்ன ரிடையர்மனைத்தாம்பெல்லாமெடுத்துக்கட்டத், திருமகன்றனிடைக்கது வும்போதாதாகத் திகைத்தனள்வந்துரோகணியுஞ்சிரித்துநின்றாள். 16

அரிவையர்கள்மிகநகைக்கவசோதைநங்கை யாயர்மனைத்தாம்பெல் லாமுடிந்தொன்றாக்கிக், கரியவனைக்கட்டுதலும்போதாதாகிக் கைசலித் துமெய்வேர்வுசொரியக்கண்டு, வரையினமர்யோகிகட்குமறைநாலுக்கும் வானவர்க்கும்வாசவற்குமலரின்வந்த, பிரமனுக்குமகப்படாப்பெரியோ ன்றாய்கைத் தாம்பினாலுலூகலத்திற்பிணிப்புண்டானல். 17

ததிபாண்டப் படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - 2814.

---

## 31 - வது, அருச்சுனப் படலம்.

தரணியினினைவயற்றிற்றசமாந்திங்க டங்கியவளின்றதர்பின்மரு டானெய்த, விருநிலத்திற்கிடந்திருந்துதவழ்ந்துசாட்டி யிலங்கநடந்தெ ழிலுறுமன்மதன்போலாகி, யரிவையர்கள்கலவியெனுமளக்கர்வீழ்ந்தே யருவினையத்தழுந்தியுயிரலையாவண்ணம், திருமகடன்னாயகனைத்துதிமி ன்றய்ய தினகரனற்பாறிமம்போற்பவங்சுடர. 1

தினகரன்றன்சுடர்போன்றசுட்டிநெற்றி திகழ்ந்திடவேதிருநாமந் துலங்கக்காதிற், கனகமணிக்குண்டலங்கடிகழக்கையிற் கடகமின்னக்கர் தாத்திற்கலன்கள்மின்ன, வினைகளறவருதாளில்சதங்கைகொஞ்ச வின்

ங்கியபொற்பரிபுரங்கள்மிழற்றியார்ப்ப, வனகனுயருரலுருளத்தவழ்வான்முன்ன ரருச்சுனமாயடைந்தவரையறையலுற்ரும். 2

அளகைநகர்க்கதிபதியாமியக்கர்கோமா னருணளகூபரனுமணிக்கிரீபன்ருனும், வளமையுறுமொருசயிலமருங்கின்வான நதியின்மடவார்சூழமதுவைத்தேக்கி, யுளமகிழுன்மத்தர்கணக்கினத்தராகி யொளிர்நளினமலர்கள்பறித்தெறிந்தேவீழ்ந்து, மிளநகையின்ஞர்களுடனெழுந்துங்கையாற் றழுவியுமாண்டவர்விளையாட்டெய்தும்வேலை. 3

இயலினிசையறிதவத்தன்கரத்தின்வீணை யேந்தியநாரதமுனிவந்தெய்தலோடெவ், கயலைநிகர்கண்ணியர்கள்வெருவியோடிக் கரையினெய்திக்கலிங்கமருங்குறத்தானிற்க, மயலினுறுதனபதிதன்சிறுவராஞேர்வணங்காமனக்கினத்தராகிநின்ரு, ருயர்மறையையுணர்ந்தரியாயிரநாமங்க ளோதிமகிழ்வோனவருக்குரைக்கின்ருனல். 4

தனபதிதன்சிறுவரெனுந்தருக்காலிங்க டருமநெறிதிறம்பிமதுபானம்பண்ணித், துனிகளுறுகாமத்தின் றுணைவராகித் தூயநதியினக்கினத்தராகித்தோன்றித், தினமுறுபல்காலங்கள்மரமேபோலச் செருக்கினீர்தெரித்திரத்தையடைந்தோரெல்லா, மனதிலுறுமாங்காரமிலராய்ப்பாவ மரமாகிப்பரகதியின்வாழ்வாரன்றே. 5

ஆதலினுற்றெய்வவருடங்களனூறு மருச்சுனமாயறிவுடனீர்நிலத்திஞேங்கி, மாதவன்றனருள்பெற்றுவருவீரென்று மாமுனிவன்சாபவுரைவழங்கியேகப், பூதலத்தின்மருதிரண்டாயிராமனென்னும் புனிதன்முனர்வயங்குமராமரங்கள்போன்று, நீதகற்றவுரலுடனேதவழும்வண்மைச் சீதரன்முன்பலசாகைதிகழநின்ருர். 6

அளகைநகர்க்கிறைபுதல்வர்முனிசாபத்தா லடர்ந்தவிரண்டருச்சுனத்தினுப்பணியன், வளமையுறுமுரலுடலுந்தவழும்போழ்தின் மலரடியினுந்திடவம்மரங்கள்வீழ்ந்தாண், டிளமையுறுவடிவினராயெழுந்துதோன்றி யிருவொருவஞானமூறவணங்கியாடி, யுளமகிழுங்களியுறவொண்கண்ணீர்சோர வுடல்புளகமாகினின்றேயுரைக்கின்ருரால். 7

நீரெரிகானிலன்வானமைந்துங்கூட வையைந்துதத்துவமாய்நிறைந்துநின்ற, பேருருவுங்கருமமுமாயுயர்ந்தசோதிப் பெருமையனுப்பிரமன்முதலாயதேவ, ராருமுணையறியார்களவர்தஞ்செய்கை யறிதிநீயெனமறைகளறையாநிற்குஞ், சீரில்குணத்தீவினையோமாகின்றேந் தேவவுனையெம்மாற்ருன்றெரிக்கலாமோ. 8

பருதிகண்டபனியெனநீள்பவங்கடன்னைப் பற்றறுக்குநின்பாதபதுமமென்று, சுருதிமொழியறையுநலனின்ருடன்னிற் றேய்ந்துலகோர்பாவங்கணித்துமண்ணிற், பெருகியவானதியறிவள்கருங்கல்லான பெண்போலவருச்சுனமாம்வடிவம்போந்தீண், டரியவினைதவிர்த்தெழுந்தேமறிவோமென்றே யரியருளால்விடைகொடுப்பவவர்கள்போனர். 9

இடியெனவேயதிர்ந்துமருதிரண்டும்வீழ யாவதுசொலென்னவஞ்சி யண்டரெய்தக், கொடியிடையாளசோதைரோகணியாங்கொம்பு கோபாலர்நாயகனெல்லாருங்கூடி, வடிவுடையமைந்தன்மரத்தடிபடாமல் மாயவன்றன்காத்தானென் றுறைத்துப்பின்னர், படியின்மரம்விழுந்திகோரணமேதென்னப் பார்த்துநின் றவிளஞ்சிறுவர்பகரலுற்றார். 10

கரியமுகில்வண்ணனிவன்றனே தன்னைக் கட்டிவைத்தவுரலுருள க்கடிதினேகி, மருதிரண்டும்நடுவுறவேதவழ்ந்துகாலால் மற்றதனையுதைத்திடலுமண்ணின்வீழ்ந்தீண், டிருகுமாரநினெழுந்தாரிவன்றடன்னி லிறைஞ்சியவர்விண்மீதிலேகினரென், றுரைசெயவிவ்விளஞ்சிறுவர்கண்ணன்போல வுண்மையைப்போற்சடமொழிந்தாரென் றுநக்கார். 11

சுட்டிநெற்றிதுலங்கிடநல்வதனம்வேர்க்கச் சுடர்மணிப்பூணணியில கவசோதைதன்னைக், கட்டிவைத்தவுரலுருளத்தவழும்வண்மை கண்டுநந்தன்கறையினிடைக்கயிற்றைவாங்கி, விட்டிடலுநகைத்தெழுந்துநடித்துப்பாடி மெல்லமெல்லநடந்துபின்னர்விசையினேடைச், சிட்டர்புகழாயர்குலதிலதனுவோ னசோதையுரோகணியிவர்கள்சிரித்தாரன்றே. 12

தூயபலம்விற்பாளைவள்ளநோக்கித்தோகைநல்லாய்விலைதருவேனென்கையார, நீயிடுதியோகனியையென்னக்கொண்டு வாவெனத்தானென்னயிருகையாலள்ளி, யாயர்திருவீதிதனிற்சிந்திப்போக வவள்முறத்தில்வெறுங்கைவைத்துமுகத்தைப்பார்த்தா, னேயமுடனவளளித்தகனியையெல்லாந் தமர்களுக்காங்குவந்தளித்தானெடியமாயோன். 13

காலினமர்சிலம்புகலின்கலினென்றார்ப்பக் கவின்கொளுவரைக்கிண்கிணியினுதமோங்கக், கோலமுறுங்கரவளைகளொலிப்பக்காதிற் குண்டலங்கடிவளமுகங்குறுவேர்வாக, நீலமுறவிருண்டகுழலலையச்சுட்டி நெற்றியினினிலங்கமணிவடங்கடாழ, ஞாலமிசைத்தாளெடுத்துக்கரத்தைநீட்டி நவநீதத்தாரவானடிக்குநாளின். 14

நந்தனுடனுபநந்தனை வில்வானையா நம்பதியிற் றன்னிமித்தம்பலவாய்த்தோன் று, மைந்தனுயிர்கொள்வதற்குவஞ்சப்பேயாய் வன்சகடாய்க்குக்குடமாய்வாதமாகி, யிந்தனிலத்தினின்மருதாய்ப்படர்ந்தவெல்லாமெரியின்விழும்விட்டிலைப்போலிறந்துநீங்கி, யுய்ந்தனனின்மதலையரியருளாலென்றே யுரைத்தின்னமியம்புவதுண்டென் றுசொல்வான். 15

யாமன்னியிருந்தபதிவிட்டெல்லோரும் யமுனையெனுநதிக்கரையிலிலங்குகின்ற, பூமன்னும்பொழில்விருந்தாவனத்தினெய்திற் புல்லுண்டுகனிகாய்கள்புனல்களுண்டா, மாமன்னுமிடமமைத்துமாடகூட மண்டபங்களாலையங்களழகாய்ச்செய்யிற், சாமன்னனகரெனவேபாங்காமென் று கட்டுறைப்பநந்தனதுகருமமென்றான். 16

நந்தனஃதுரைத்திடலுமாயரெல்லாம் நலனுகவெழுந்துபலசகடுதென்னிற், கந்தமலர்க்குழலியர்களெண்ணில்மாதர் கலன்களிழை மணியிலகக்

கடுகிப்போன, ரந்தரதுந்துமிமுழங்கப்பேரியார்ப்பவசோதையுரோகணி யாரமணிகள்மின்ன, மைந்தரிருவரும்வயங்கமணித்தேர்மீதின் வானவர் கள்மலர்பொழியமகிழ்ந்துசென்றார். 17

ஆனிரைகளணிமணிகள்கறங்கியாட வளவிலிளங்கன்றினங்கள்துள்ளி யோட, நானநறுமலர்தொடையல்கமழநந்தனவமணித்தேர்மிசையினண் டர்திரள்கள்சூழ, மானநியாகியயமுனைக்கரையில்வீறி யமைத்துயர்ந்த மனைகளெல்லாம்வயங்கமாலைழச், தேனுறுபூம்பொழில்விருந்தாவனத்தி னெய்தித் திருவுறவாண்டினிதமர்ந்தான்செல்வமோங்க. 18

ஆயர்களெல்லாமகிழநந்தகோப னருட்கமலக்கண்ணனையுமவன்மு ன்னோனுஞ், சேயினையுந்தமருடனுங்கூடச்சென்று சிறந்தவிளங்கன்று களைமேய்மினென்றான், றூயவிளஞ்சிறுவருடன்பாலின்வண்ணன் றுல ங்கிடநற்காயாம்பூவண்ணனெய்தி, வேயினிசையூதியெங்குங்கவணிற்கல் லை வீசியவன்சொற்படியின்மேய்க்குநாளின். 19

அருச்சுனப்படலம் முற்றிற்று.

ஆகு திருவிருத்தம்-2833.

---

## 32-வது, பகாசுரன்வதைப் படலம்.

கருவிடையிற்சிறையிருந்துகலங்கவேண்டா காசினியிற்பிறந்துபின் னர்ப்பிணிகளாலும், நரைகடருமூப்பினுமெய்நலியவேண்டாம் நல்குற வாமளக்கர்விழுந்தழுந்தவேண்டா, மிருநிலத்திலிறந்துகடுஞ்சமனூர்தன் னி லிருந்தரியகொடுமிரையத்தழுந்தவேண்டா, மரியினுயர்திருப்புகழை யறைமின்றொண்டீ ரழியாதபரமபதத்தடைகுவீரே. 1

மாயமிகுசகடனுடல்சிதைந்தவாறும் வாயுவெனவடித்திடுவோன்ம டிந்தவாறு, மாயவெல்லாங்கேட்டுமிக்கனன்றகஞ்ச னருவினையாம்பெ கனகன்கன்றாகும்நீசன், றீயனையவிவர்களைத்தானொக்கிநந்தன்சிறுவனை நீர்கடிதேகித்தெறுமினென்றான், றீயினையுங்கொல்லவல்லதறுகணாளர் சமனில்விருந்தாவனத்திற்சார்ந்தார்மாதோ. 2

இனியதமருடனேகிக்கண்ணன்மேய்க்கு மிளங்கன்றினிரையுடனே தானுங்கன்றாய்த், துனிகளறுமனத்தினிலனெங்குந்துள்ளித் தூயமுகி ல்வண்ணனைத்தாறுடுங்காலை, வினயமெலாமறிந்துநகைத்தையன்மெல்ல விளையாடியவுணக்கன்றினைக்கால்பற்றிக், கனியுதிரவெறிந்தனனக்க பித்தம்வீழக் கடியவனுங்கருவரைபோல்மடிந்துவீழ்ந்தான். 3

இளங்கன்றாகியவவுணன்கபித்தத்தோடு மிடியெனவேயிரட்டனுற மடிந்துவீழக், களங்கனியாகியவண்ணன்செயலைக்கண்டு கடிமலர்கள்பொ ழிந்தனர்கள்களிக்கும்வானோர், விளங்கனியெல்லாமெடுத்துத் தமரோ

டேகி விளையாடிங்கன்றினம்வீதியின்கணூடை, வளங்கொனண்டரிலக்
டொறுமேகிக் கன்றுவந்ததிரோவென்றுரைத்துமனையிற்புக்கான். 4

கனிவிழவேபாவினிளங்கன்றைப்பற்றிக் கண்ணனெறிதலுமவுண
னுகிமாண்டு, பனிவரைபோல்கிலத்துருண்டானென்றுகையிற் பழங்கா
ட்டியிளஞ்சிறுவர்பகர்தலோடு, மனமெலிந்துநந்தனுடனசோதை நங்கை
மார்பினணைத்தேமகனைக்காப்புமிட்டுத், துனிகளூறுமவ்வனத்தினேகா
தேநீ தூயவிளங்கன்றினைமேய்த்திடுதியென்றுள். 5

என்றவளிவ்வுரைபகரத்தமரோடேகி யிளங்கன்றினினங்களைத்தா
ன்மேய்த்துநிற்பக், கன்றியசிந்தையினவுணன்பெகளுபாகிக் கயிலையென
க்கடிதினெய்திமூக்காற்கொத்தி,யன்றுலகமளந்தவனைவிழுங்கலோடு ம
றியாகிச்சுடமீளவுமிழ்ந்தபோதின், மன்றல்கமழ்துளவினன்விரணத்தை
க்கீறுமாறெணவேவாய்பிளப்பமாண்டுவீழ்ந்தான். 6

வாயால்வீழ்குருதிநதிகிகராயோட வடவரைபோல்மாண்டுவிழப்பெ
கனைக்கொன்ற, தூயோனைத்துதித்தனர்கள்முனிவரெல்லாஞ் சுருதியு
றத்தும்புருநாரதர்கள்பாட, வோயாமல்மலர்மாரிசொரிந்தார்வானோ ரு
யர்தேவதுந்துமிசங்கொலிப்பவெய்தி, ஆயோர்கள்நந்தன்மகிழ்வெய்தப்பு
க்கா னசோதையுரோகணியாகத்தணைத்தாரன்றே. 7

ஆகமுறவணைத்துருகியுச்சிமோந்தாங் கசோதைநங்கையழுதழுதுவி
ம்மிச்சொல்வா, டோகையர்கான்வினையேன்றன்பயந்தமைந்தன் றோன்
றியநாள்முதலாகத்துடர்ந்தடர்ந்த, வேகமிகுபேய்சகடுக்குடங்காவ்வீறு
கன்று கொக்காகிவினைசெய்தாரா, லேகனிவன்விதிவழியாலுய்ந்தானி
ன்ன மிடர்வருவதறிகிலேனென்றுநைந்தான். 8

இரங்கியிவையுரைத்தலவசோதைதன்னை யெழிலுடையரோகணி
தான்றேற்றிச்சொல்வா, டரங்கமுறுசாகரத்தில்வங்க்தன்னைச் சாயாம
ற்காற்றுதவித்தந்தாற்போல, வருங்கடியவினைக்கடலைக்கடக்கவுன்றன்
மதலைதனக்கருள்புரிவான்றெசக்கிரீவ,னுரங்குடையவாளிதொட்டவொ
ருவனென்றெயுரைத்திடரையகற்றவவளுவந்தாளன்றே. 9

பெகாசுரன்வதைப்படலம் முற்றிற்று.

ஆ௨ திருவிருத்தம் - 2842.

---

# 33-வது, அகாசுரன்வதைப் படலம்.

விரிவுறகயத்துளிடங்கர்மாவலிப்பவெருவித்தன்மெய்தளர்ந்தொதுங்கக்
கரியொருகயத்தையெடுத்துயர்முதலேகாத்தருளென்றுரைகழறப்
பரிவுடன்கருடன்மிசையினிலெய்திப்பருதியைநிகர்த்தவாளியினல்
வரைநிகர்கராவைவதைத்திபத்திடரையகற்றிஞேன்மலரடிதொழுவாம்.

வேறு.

மகவினுக்குப்பாதயமுங்கட்டியீய்ந்துவரு வினையையொருவியெய்தி வாழ்கியென்று, புகலுமன்னைமுகம்நோக்கிமுறுவல்செய்து பொதுவர்கன்றினினமேய்க்கப்போனுன்வள்ளல், பெகனிறந்தசெயல்கேட்டுச் சிந்தைநொந்துபிறையெயிற்றன்பிலவாயனகஞசன், சிகியெனவெங்கடுஞ்சினத்திஞேடு நந்தன்சிறுவனையான்வதைப்பனெனச்சேர்ந்தானன்றே.

வரையாகவுடல்சிறம்வண்குவடதாகவாய் பிறங்கல்முழையாகவாரிதன்னுள், ளெரியாகநயனவிணைமெயிறுகுன்றினிலங்குபிறையிரண்டெனவானறைகால்போல, விரிவாயமூக்கதனினுயிர்ப்புவிஞ்ச விளங்கியொருகாவதமானிலத்தினீண்ட, வரவாகித்தான்கிடந்தானறனிலாத வறக்கொடியவகனுயவசுரனம்மா. 3

ஆயர்தங்கள்சிறுவரெல்லாம்வியந்துநோக்கி யருவரையின்முழையிதென்றுகாணலாலே, வாயுவனல்வீசியதாமென்றுபாம்பின் வாயிடைப்புக்கார்கள்கன்றின்பந்தமோடு, மாயதெல்லாமுணர்ந்தருளிய சோதைமைந்தனதின்வாயினருக்களளவாகிநீண்டான், தீயுமிழுமவுணனுடல்பிளந்துசிவன் சிரம்வெடித்தாண்டேகிடலுஞ்சிதறிவீழ்ந்தான். 4

படியின்மிசையுததியெனக்குருதியோடப் பகுவாயினெயிறிரண்டும் பரந்துவீழ, வுடலொடிந்துபிளந்துவிழுமசுரன்சீவனுயர்ந்து சுடர்ச்சோதியெனவெழுந்துகண்ண, னடிமலரிற்புகுதுதலுங்கண்டவானே ரந்தரதுந்துமிமுழங்கவாடியேதண், கடிமலர்கள்பொழிந்தனர்கள்வீணையேந்திக் கந்திருவர்நாரதரேழ்கானஞ்செய்தார். 5

அந்தரத்தின்மிகவயங்குஞ்சோதியாகியசுர னுயிரடியிணையினெய்தக்கண்டே, யிந்திரியமவித்துயர்ந்தமுனிவர்வானே ரெழுந்தாடியிணையடியினிறைஞ்சிநின்று, செந்திருவிநாயகனீயயனீவேணிச்சிவனீ மண்ணீவிண்ணீசிறந்ததீநீ, வந்தறையுமணிலனீவானீயெம்மை மதியாமல்மயக்குகின்றமாயனீயே. 6

அண்டமுநீயதினுறையுஞ்சீவனீயேயறிவுநீமருளுநீயருளுநீயே, யெண்டிசைநீயுறவுநீபகையுநீயேயிரவியுநீயிந்துநீயெல்லாம்நீயே, தொண்டனும்நீதலைவனுநீதருமம்நீயேதனிதளுறுபாவமுநீசுருதிநீயே, யெண்டவநீயுனக்கிடர்செய் யவுணனுவியிலங்குபெருஞ் சோதியெனவெழுந்தாய்நீயே. 7

என்று துதித்தகவசுரன்றனக்குநல்குமிணை யடியையென்றெமக்கு மருள்வாயென்றே, யொன்றியசிந்தையராகிமுனிவரும்பருவந் திறைஞ்சிப்போயபின்னரொப்பிலாதான், கன்றினங்களுடனுயர்சிறுவரோடுங் கடிமலர்சால்பொழிலமர்காளிந்தியாற்றிற், சென்றுயர்ந்தவாலுகங்கள்மலியவோங்குஞ் செழும்புளினத்துறவிருந்தான்சேர்ந்துமன்னோ. 8

அகாசுரன்வதைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 2850.

## 34 - வது, வற்சாபகாரப் படலம்.

மாதவன்பரமன்வாமனன்முகுந்தன்மாயவன்மலர்மகள்மகுணன்
சீதரன்முராரியச்சுதாநந்தகோவிந்தன்தெசரதகுமாரன்
யாதவன்மதுசூதனன்பரமேட்டியிருடிகேசனுபேந்திரன்மா
லாதிவிண்டரிகேசவனயன்றந்தையமலனென்பவரடிதொழுவாம். 1

துணைவர்தமைநோக்கியருள்சுரந்தநெஞ்சன் றூய்மையுறுபாதயம் யாமருந்தவேண்டு, மிணையில்பொழில்நதிக்கவின்களிருந்த பாரீரென்றிடக்கைதனிலளையார்திரளையேந்தித், தணியவிரரேருறைகறை கறியைவைத்துத்தன்னரையிற்குழல்சொருகிக்கோலாக்கொம்பு, பணைகொளடித்தோளிரண்டினிடுக்கியுண்டான் பரமனிடைச்சிறுவருமப்படியேயுண்டார். 2

கண்ணணவர்தமைநோக்கியென்கைதன்னிற் கறிச்சுவையையறிதிரென்றுண்டவர்வாயிட்டே, யுண்மகிழமகத்தவிசுதுகருமையனுவந்து தந்தித்திரளையுண்ணுங்காலதன்னி, னண்ணியிவைநோக்கியிறைசெய்கை நன்று நன்றெனவேமொழிந்துகன்றின்குழுவையெல்லாம், விண்ணின்மிசைக்கரந்தனனெண்டவர்கட்கெல்லா மேலாயநலங்களுறுவிதாதாமன்னோ. 3

கன்றினங்களதிதூரமேயக்கண்டு கண்ணபிரான்றதித்திரளைக்கையாலேந்திச், சென்றவனத்தெங்கணுந்தேடிக்காணான் றிரும்புவமுன்சிறுவர்தமையொளித்தான்வேத, னென்றின்வெயிலால்மேனியெல்லாம் வேர்ப்பவெய்தியண்டர்தனையர்தமையீண்டுகாணு, னின்றுபின்னர்நான்முகன்விண்கரந்ததெல்லாம் நினைந்துநெறியறிநெடுமால்முறுவல்செய்தான்.

ஆயர்தங்கடனையர்திரளெண்ணிலாதாரவர்கள் நிறம்வடிவுங்குணமறையுஞ்சொற்க, ணையமுடனவருதுங்குழல்கள் கன்றினிரைமேய்க்குங் கோலாவின்கொம்புபூண்ட, தூம்மையறுமணிகலன்கடுகிலின் வண்ணந் துள்ளுமிளங்கன்றினங்கள்மெய்யிற்றோற்ற, மாயவைகளெல்லவையுந்தானே யானுனளப்பிலண்டந்தானுவாற்கரிதோவம்மா. 5

அந்தமுறுமைந்தர்கள்கன்றினங்களோடே யச்சுதனுமுறத்தந்தாம
னையினெய்தித், தந்தையுடன்முன்றினத்தினுரையைச்சாற்றித்தாய்க்கு
முன்னாள்மறைத்தவைகளெடுத்துகாட்டச், சிந்தைமகிழ்ந்தெடுத்தணைத்
தேஉச்சிமோந்துசிறந்தவன்றாமுதலிரட்டியன்பரானார், நந்தனுடனசோ
தைபெருந்தவத்தைப்போல நன்மகவையவர்கள்பெறினலம்பெறாரோ. 6

ஆலிலையினமர்ந்தருள்வோனயன்கொண்டேக வழகியகன்றினத்து
ருவாயமர்ந்துதோன்றிச், சீலமுறுமாவினங்கடங்கன்று சேர்தலுமே
வாலெடுத்துமோந்துநக்கிக், கோலமுறுமுலைகொடுத்துக்குளிர்ந்தமெய்
யாய்க் குழைந்துமனமுருகியிருகண்ணுஞேக்கிப், பாலிரட்டிசுரந்தளிக்க
ச்சிறக்கும்பாரிற் பசும்புல்லும்பதின்மடங்குதளிர்க்குமாதோ. 7

இன்பமுறுமைந்தர்கள்கன்றினங்களாகியெழிற்சோதியொருவருட
மெய்துங்காலை, பன்மரங்கள்பழநிறையவுயர்ந்தகோவர்த் தனகிரிமேற்ப
சுநிரையையாயர்மேய்க்க, வன்பினுடனசோதைமகன்குழலையூது மளவி
ன்வந்தேயாவினங்கள்முலையிற்பாலை, யென்புருகியிளங்கன்றுக்களிக்க
வாய ரெய்திமைந்தர்தமையணைத்தாண்டிருக்கும்வேலை. 8

இனியதமர்கன்றினினம்வருடமொன்று மிறையென்செய்தானெ
ன்றேயெய்தினிற்ப, வனசவிறைவான்கறந்தவெண்ணில்கன்று மைந்தர்
களுமானிலத்திற்றிகழக்கண்டா, னனகனசஞ்சலன்விமலனமலனுதியரு
பியரிபரமேட்டியானேன்றன்னைத், தனிகளடரிராசதமாங்குணத்தினு
லே சோதியெனவறிந்திலனுனென்றுசொல்வான். 9

யாவருமில்பாழ்ங்காலத்தண்டம்விட்டே போகவெள்ளமாகவடவிலை
மேற்றோன்றுந், தேவனுநீயுலகமெல்லாம்வயிற்றுள்வைத்துத் திருநாபி
க்கமலத்திலென்னைப்பெற்ற, 'வீவில்பரஞ்சோதிநீயறியாதுன்னை வினை
யேன்றானிகழ்ந்தவெல்லாம்பொறுத்தென்றன்னைக், காவெனவேதுதித்
திறைஞ்சியெழுந்துபின்னுங் கைதொழுவோன்மண்ணினிவைகண்டான
ன்றே. 10

தூயசுடராழிவளைகதைவாள்சார்ங்கந் துலங்கியகைநாலிலங்கத்துள
வஞ்சேர, மீயுயருமவுலிகதிரொளிபோற்றோன்ற விலையில்கவுத்துவமார்
பின்விளங்கிக்காட்டப், பாயுமிளவெயிலெனப்பொன்னுடைசூழப் பச்
சைமுகில்போலிலங்கும்பரமன்றன்போ, லாயரிளஞ்சிறுவர்கன்றினின
ங்களெல்லா மழகுறநான்முகன்றியங்கிமயங்கினுனல். 11

வெயில்பரவுங்கதிரொளியைநிகராமென்று மின்மினிதான்பார்ப்ப
துபோல்வினையேனுன்றன், செயலறியாதிழைத்தபிழைபொறுத்திநின்
றன் றிருநாபிதனிற்பிறந்தசேயானன்றோ, புயலனையமேனியனேமதலை
காலா லுதைத்தாலும்பொறுக்கிலனோவன்னையைய, வயருமெனக்கரு
டியுன்றன்வடிவமாய ரருள்புதல்வரோகன்றினமோவார்நீ. 12

பூதமைந்துபுலன்களைந்து பொறிகளைந்து புகல்கருமேந்திரியமைந் துசிவனேக, பேதமுறமாங்காரமனமான்மூன்று பிரகிருதியுடனுமிருப த்தஞ்சென்றென், றோதியதத்துவங்களுநீவேதாந்தத்தி னுபனிடத்தினு றுபொருணீயுன்னையேத்து, மாதவர்கட்கெளியனுநீமாயைநீயே மாயை தனைமாயையினால்மயக்குவாய்நீ. 13

அண்டரண்டமனந்தமெல்லாமுன்றன்மேனி யழகியரோமத்தினு னியமர்ந்ததாலென், றெண்டவர்கள்வேதாந்தமறையுமென்றே யியம்பிடு வார்தம்மையுநீமயக்காநிற்பை, யுண்டுனக்குப்பிறப்பிற்பென்றோதுமூர்க் க வுணர்விலியருன்வயிற்றினுலகமேழுங், கண்டனன்மார்க்கண்டனெனு மூரைகேளாரோ காகுத்தாவுன்மாயைகடவாதாரே. 14

குற்றவுமிதனைக்குற்றற்பயனிலாத கொள்கையைப்போற்கோகன கைகேள்வாவுன்னை, யுற்றிலர்களருந்தவஞ்செய்துழிகால மியோகிகளா யிருந்துழன்றுமுயல்வோரெல்லா, மெற்றியகந்துகம்பாரின்வீழ்வபோல வெழில்வானிற்சுவர்க்கமெய்திப்படியின்வீழ்வர், பெற்றநிரைமேய்த்தரு ள்வாய்நின்பாதத்தைப் பேணினரேமீளில்பதம்பெற்றுவாழ்வார். 15

பூதனைதன்முலைப்பாலுமுயிருங்கூடப் புயல்வண்ணாநீறுகரப்புன் மையானு, ளேதமறவாக்கையகில்கமழவென்று மீறிலாப்பரகெதியைய டைந்தாளென்றால், மாதவனேநீயருந்தும்வெண்ணைபால்நெய் வரும்வழி யில்மண்செடிவாயூதுநல்வேய், தீதிலிளங்கன்றதனைமேய்க்குங்கோலாக் கொம்பிவைகள்செய்ததவமார்செய்வாரே. 16

நாதகமநாரணனேநமவேதத்தி நற்பொருளேநமவானினுயர்ந்துநீண் ட, பாதநமபரமநமவுலகமேழும் பயந்தபரமேட்டிநமவெவர்க்குமேலா, மாதிநமவனந்தநமவண்டமெல்லாமின்றருளுமாயநமவுயர்ந்துதோன்றுஞ் சோதிநமவென்றிறைஞ்சித்தொழுதானுவின் மகளுடனற்சுருதியெல்லா ஞ்சொரியுஞ்சொல்லான். 17

என்றுதுதித்தயனிறைஞ்சிவெருவிநிற்ப விறைவடிவெல்லாமொரு வியேகனுகிக், கன்றினங்கடேடிமுன்னாட்செல்லுங்காட்சிக் கவினுறவே தநித்திரளைக்கையினேந்திச், சென்றுவனத்தோடிடலுமகிழ்ந்துபாரிற் சேர்ந்துவலம்வந்துதிருவடியின்மீதி, லொன்றியயனிறைஞ்சினன்கன்றி னங்களண்டருதவுமிளஞ்சிறுவரெல்லாமுவந்துசூழ. 18

வந்தெதிர்ந்ததுணைவர்தமையளியினேடுமார்புறத்தானணைத்தருளி மலரோன்தன்னைச், செந்தளிர்க்கைமலராலேகெனவேகாட்டித் திருநய னத்தருள்சுரந்துசிறந்துநோக்கச், சிந்தைமகிழ்ந்தெழுந்தாடியிருநாலாகி த் திகழ்கண்களானந்தவாரிசோர, வுய்ந்தனன்யானெனவிறைஞ்சியெழு ந்தானன்பி னுடல்புளகமாகவயனும்பர்புக்கான். 19

அயன்விடைகொண்டேகியபினசோதைமைந்த னவ்வனத்திற்றிரி ந்தெங்குந்தேடிக்கண்டே, வெயிலொளியால்மேனியெல்லாம்வெயர்ப்பக்

கன்றி னினங்களொடுமீளவருவானேபோலக், கயலுகளும்யமுனைநதிக் கரையில்வந்து கரத்தேந்துந்ததித்திரளையவர்க்குக்காட்டித், தயிர்செறி யுமன்னமிவைநுகர்வீரென்ன வருந்தினமென்றூர்களிறை தானுண்டா னல். 20

வனசமுனிவான்மிசையின்வருடமொன்று மறைத்ததெல்லாமறந் தவர்கள்வள்ளலோடு, மினியவிருந்தாவனத்தினிடையிற்கன்றி னினங்க ளொடுமெய்தியிலிற்புகுந்தாரின்று,' துனிகளுறுமசுரனரவாகிமேகந்தோ ய்வரைபோற்கிடந்தான்வாய்புகுந்தோந்தூய, வனகனவனுடல்பிளப்பவு ய்ந்தோமென்றே யறிந்தவெல்லாநந்தனுக்கன்றவர்கள்சொன்னார். 21

நந்தனுடனசோதையுரோகணியாநங்கை நயனங்கணீர்சொரியமெ லிந்துவாடி, மைந்தனைத்தாமார்பினுறத்தழுவிமோந்து மஞ்சனநீராட்டி யமிர்தூட்டிவண்மைக், கந்தமுறுஞ்சந்தனமெய்க்கணிந்துநானங் கமழுந றுங்கடிமலர்சேர்தொடையல்சூட்டி, யந்தவனத்தெய்தாமல்யமுனையாற் றி னடைதியெனத்தமரோமெனுங்காலை. 22

வற்சாபகாரப் படலம் முற்றிற்று.

ஆகூ திருவிருத்தம் - 2872.

## 35-வது, தேனுகன்வதைப் படலம்.

நிலையிலையிளமைதனமுயர்சுவர்க்கமென்பதுநிச்சயமதனுற்
சலமுறுகுமிழியெனவெழுகுரம்பைசாய்ந்துயிரலையுமுன்றெண்டீர்
மலைகளினமுவச்சலதியையடைந்தமதிளிலங்காபுரிமன்னன்
றலைகளைத்தடிந்தோன்புகழினைத்துதிப்பஞ்சமனிலாவீடுபெற்றுய்ய. 1

பெகனகன்கன்றுமசுரனிவரைமாயன் பெருவனத்தில்வதைத்த தெல்லாங்கஞ்சன்கேட்டு, மிகமுனிந்துதேனுகனையழைத்துநீபோய் வி ரைவின்விருந்தாவனத்தினெய்திவெய்ய, ககபதிகட்செவியதனைத்தெறு வபோலக் கண்ணனைநீகணத்திடையிற்றெறுவாயென்று, சிகியெனவே யிருநயனஞ்சிவப்பச்சொல்லத் தேனுகனுந்தாலவனஞ்சேரும்வேலை. 2

வேறு.

ஆயர்மைந்தர்களாவினங்கன்றுக
ேயபால்வண்ணனேடுந்துலங்கவே
நேயமோடெய்துமாதர்நிறைந்திட
மாயனெய்தினன்மன்மதனுமென. 3

வேயிசைத்தனன்வீதிகடந்துபோய்
மாயனெய்தினன்வண்டிசைபாடவே
தூயதண்மலர்துன்னுமுய்யானத்திற்
பாயும்வாளைபரந்தநதியின்வாய். 4

தாங்குவாரியினூடொகுந்தாமரை
யூங்குமேவுநல்லோதிமமுற்றிடப்
பாங்கினாலவர்பாடலிதாமென
நீங்கிலாவளிகீதமிசைத்தன. 5

அயனிறைந்தலைவீசிக்கொழுத்திடக்
கயல்கள்வாளைகலந்தெங்குந்துள்ளின
வியல்பினாலலர்தாமரையின்கணின்
றுயிறுறந்தெழத்தூவியன்னக்குழாம். 6

ஓய்விலாதுபரந்தெங்குமோடியே
பாயும்மந்திகளாற்பன்மரத்திடைக்
காயுநன்மலர்க்கொம்புகடாழ்வன
மாயன்றன்னைவணங்குவபோலவே. 7

தொண்டைவாய்மடவார்துலங்குங்கண்போற்
கெண்டையோடக்கெளிறுகிளர்ந்தெழப்
புண்டரீகங்களிற்பொலிந்தாடிய
வண்டுபாடுமதங்கியர்மானவே. 8

மேகமெங்கணுமேவியசோலையிற்
கோகுலங்கள்மகிழ்ந்தெங்குங்கூவிய
நாகமாமலர்வாசங்கணாறிடக்
கேகயங்கள்கிளர்ந்துநடிக்குமால். 9

விழையுமாதவஞ்செய்சிலமெல்லியல்
குழையுந்தாமறைக்கோலவடியுற
மழைபொருந்திருமேனியின்வண்மையை
யுழையினங்களுவந்தெதிர்நோக்குமால். 10

தூயநன்னதிவண்மையுஞ்சோலையின்
வீயினங்கள்விளங்கியதோற்றமு
மாயர்மைந்தரனைவர்க்குமாதியா
மாயவன்மொழிந்தேமகிழ்வேலையின். 11

காமனென்னுங்கவினுடைமெய்யனுந்
தாமனென்பவன்சாரங்கஞ்சேர்வனந்
தீமறஞ்செயுந்தேனுகனாகிய
நாமனண்ணினனென்றுநவிலுவான். 12

காலனானகரமெனும்வேடமாய்த்
தாலமாவனஞ்சார்ந்துநெருக்கிய
சீலமில்லவனைவிசெகுத்திட
நீலமேனியநீயெய்துவாயென்றான். 13

தாமன் கூறலுந்தாமரைக்கண்ணனே
டாமதாமென் றிராமனறைந்துயர்
தூமகேதுவின்றோற்றமெனவெழுந்
தீமையோனுறுமாவனஞ்சேர்ந்தனர். 14

தாலமாவனத்திற்சென்றுசார்தலும்
ஆலமாமெனவேயடர்தேனுகன்
பாலினூர்வண்ணன்முன்னிற்பனிவரை
யேலவேகரமாயெதிர்தாக்கினன் 15

தானுந்தன்னுடைச்சேனையும்வெங்கர
மானவேடமளப்பிலவாகியே
வானடுங்கிடமாமரம்வீழ்ந்திடக்
கானடங்கலுங்காலிற்றுகைத்தனன். 16

எண்டிசைக்கரியெய்தியதாமென
விண்டலம்விண்டதாமெனவாய்விட்டே
மண்ணெங்கிடவந்துபிற்காலினைக்
கொண்டுதைத்தனன்கோலவிராமனை. 17

வாலெடுத்துயர்ந்தேவந்துதைத்திடுங்
காலினைப்பற்றிச்சுற்றிக்கடிதினிற்
பாலின்மேனியன்விட்டெறிந்தான்பருந்
தாலம்வீழவனுஞ்சிதைந்தனன். 18

சீலமின்றியதேனுகன்சேனையைப்
பாலின்வண்ணன்றடக்கையிற்பற்றிநீ
டாலமேல்விட்டெறியச்சிதைந்துபோய்
ஞாலமேல்விழுந்தார்கள்நடுங்கவே. 19

அலமெடுத்துறுமையனெறிந்திட
மலைவிழுந்தனபோல்விழுந்தாரவர்
தலையுருண்டனதாலநிரம்பிய
பலமுருண்டெனப்பார்மிசையெங்கணும். 20

அந்தரத்திலதிர்ந்தனதுந்துமி
நந்தொலித்திடநாகமின்னுறைலாஞ்
சிந்தையிற்களிப்பெய்திடத்தேவர்க
ளுந்துநன்மலருற்றனபாரெலாம். 21

பாலின்மேனியன்றன்னைப்பரிவினுற்
சீலமார்தரச்சேர்ந்துதழுவினுற்
தாலம்பலமெண்ணிலதாங்கியே
மாலினேடுவளர்நகர்புக்கனர். 22

## வேறு.

கோலமுறச்சுருண்டிருண்டகுஞ்சிமீதிற்கோதூளி நிறைந்துகவின் குலாவமார்பின், மாலையலைந்தெழக்காதிற்குண்டலங்கள் வயங்கமுகம்வெயர்வரும்பக்கடைக்கணோக்குஞ், சீலமுறப்பொன்னுடைதிகழக்காலிற் சிலம்பிணைகள்சிலம்பவிசைவேய்கொடுதி, நீலமுகில்வருவதுபோலெய்துவானை நேரிழையார்நோக்கியிமைக்கிலர்கள்மாதோ. 23

கைத்தலத்தின்வயிரமணிக்கடகமின்னக் கத்தூரித்திலகநெற்றிக்கவின்கொண்டோங்க, நித்திலத்தாவடமணித்தாவடங்கொண் மார்பினிலவொளியுங்கதிரொளியும்நிறைந்துபாய, வித்துருமவாயிலகத்துணைவர்சூழ விளங்கியசுன்றினங்கள்பின்னர்வேய்கொடுதிச், சித்தசனுமலைக்கவருவானைக் கண்டேதெரிவையர்கள்சித்திரங்கள்போலநின்றார். 24

வஞ்சகப்பேயுயிர்முலைப்பாலுண்டானென்பார் மாயமிகுசகடுதைத்தவள்ளலென்பார், விஞ்சியகாற்றுருவோனை வதைத்தானென்பார்வினையுறுகன்றால்விளவையெறிந்தானென்பார், நஞ்சுமிழுமராவினைவாய்பிளந்தானென்பார்நல னிலாப்பகன்வாயைக்கீண்டானென்பா, ரஞ்சனவண்ணத்தனிவன் பாரீரென்பாரழகொழுகும்வடிவினனைப் பாரீரென்பார். 25

கோலமிலாக்கரவேடமாகிநின்ற கொடியவனைத்தாலமரத்தெறிந்துகொன்ற, பாலைநிகர்வண்ணனிவனைக்கீரென்பார் பாரிலிவனடந்தகவின்பாரீரென்பார், நீலகிரிதாரமலைபோலவீதிநிறைந்திடத்தாம்வருசெயலைக்காணீரென்பார், சீலமுறுமசோதையுரோகணிதாமுன்னாட்செய்ததவப்பயனதனையுன்னீரென்பார். 26

ஆயர்மாடமாதரிவரழகுநோக்கியன்பினுடன் முகமலர்ந்தாண்டிவைகள்கூற, மாயனொடுமிராமநம்பிமனையினெய்தமனமகிழ்ந்த வசோதையுரோகணியின்வந்து, நேயமுடனெடுத்தணைத்துமுச்சிமோந்து நீராட்டியமிர்தூட்டிநிறைந்தவாசத், தூயகருப்பூரம்பனிநீர்கலந்தசாந்து துலங்கியமெய்க்கனியவையன் றுயின்றனன்றே. 27

இருளிரியவொளிமலரலரக்கீதவின மூரலவுலகிலகமறையோரேத்த, அருணனெழிவிரதமிசையவிரோடெய்தவ லரியுததியினெழவு மமரர்கோமான், றிருவமருமணிமார்பனனந்தவோவிச்சிறுயரு மூரோகணிதன்சிறுவனொடு, கருமுகில்போலினிதிருந்தான் யமுனைதன்னிற்காளியன்றன்சேர்ந்தசெயலறைகுவோம்யாம். 28

தேனுகன்வதைப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - 2900.



# 36-வது, காளியமர்த்தனப் படலம்.

சலத்தினையகற்றுந்தவத்தினிலுறுத்துஞ்சனனமுமரணமுமிலாத
நலத்தினையளிக்குமுலகெலாம்புகழுநற்பதமளித்திடுந்தொண்டர்
புலத்தியன்சுதன்றன்றனையனீரைந்துமகுடமும்பொடிபடவவன்றன்
குலத்தொடுமடியநெடுங்கணைதொடுத்தகோதண்டக்குருமலரடியே 1

வேறு.

காசிபன்றன்மனையாள்கத்துருவைமைந்தன் காளியனாங்கட்செவிய
ன்வளரும்போழ்தி, னாசினிறைமதிவானினிலங்குநாளினருணனனுசனா
க்கரவின்குழுக்களெல்லாம், மாசிலமிர்தளித்திடவேகாளியன்றான் மதி
யாதுதன்பாகந்தானேயுண்ண, வீசுசிறைக்ககபதிவானெழுந்துசீறி வெ
குண்டவனைக்கொல்வதற்குவிரைவினெய்த. 2

ஆயிரமாம்பணமிலங்கவிழிகளெல்லாமனலுறவேகாளியனுமடர்ந்து
வந்து, வாயினாறுமெயிறதனாற்கலுழன்றன்னை வானோர்கணடுங்கிடத்தா
ன்கடித்துச்சீறத், தூயககபதிவெகுண்டுமூக்காற்கொத்தித் துலங்குமிட
ச்சிறகதனாலறையும்போழ்திற், றீயவன்றான்மனங்கலங்கிப்பாரினோடத்
திசையெங்கும் பின்றொடர்ந்தானருணன்றம்பி. 3

சவுபரியாமெழில்முனிவன்யமுனைதன்னிற் றவம்புரியுநாளதனிற்ற
ரங்கநீரி, னுவமையிலாமகரகிரானமீனொன் றனைப்போதினுவணனெய்
திப்பிடிக்குங்காலை, பவமில்முனியுணர்ந்திதனைவிடுதியென்று பகர்ந்தி
டலுஞ்சலசரத்தைப்பற்றித்தின்ன, வவமதித்தாயென்னாணையிவணி
யென்று மணுகினுயிர்விடுதியெனச்சபித்தான்முன்னாள். 4

அந்தமுனிசபித்தவெல்லாமுணர்ந்துகண்க ளனலுமிழுங்காளியன்
றான்யமுனைதன்னில், வந்துமிகவாழ்மடுவில்மாதரோடு மறைந்துறைய
மேலின்வருபறவையெல்லாம், வெந்துவிழுநீர்கொதிக்குமதனாற்காற்று
வீசியிடவிருமருங்கினுயிர்கள்வேகு, மந்தவிடத்திருநிலத்தினுருமெய்தா
ரனலுமிழும்விடவரவாண்டமருநாளின். 5

கடம்பொழியுமதகரிக்காக்கராவைச்செற்ற கண்ணபிரான்கலன்றிக
ழுநித்திலத்தின், வடம்புனையுந்திருமார்பன்றுணைவரோடும் வயங்காவினி
னங்களொடுகோனில்வந்து, விடம்பொழியுநீர்பருகிவீழ்ந்தோருய்ய விழி
யருளானோக்கியக்கரைமேனின்ற, வடம்பின்மிசையேறிமருங்கம்பொ
ற்கச்சை யழகுறவேகுப்புற்றானயத்தினன்றே. 6

கடமலிந்துதிசையையுறுங்கரியையேலக் கண்ணபிரான்கடுவிசையி
ற்குதித்தலோடும், விடமறநீரெழுந்துகரைபுரண்டுநூற்று விரற்கடையா
மளவுமிருமருங்குநல்கப், படமணிகளிலங்கிடவோராயிரத்தின் பகுவாயி
லெயிறதனாற்கடித்துமாய, னுடலினைத்தன்மெய்யாலும்வாலினாலு முற
வளைத்துச்சுற்றினனாலும்பரஞ்ச. 7

அரவுவளைத்தரியுடலைச்சுற்றக்கண்ட வாயரிளஞ்சிறுவரெல்லாமல றியோடித், தரணியிடைவீழ்ந்திருகண்புதைத்தாராவி னினங்களெல்லா ந்தலையெடுத்துக்கதறிவந்த, மூரலளிசால்பொழில்விருந்தாவனத்தினண் டர் மூன்றிலுறமாளிகைகள்ஞெள்ளல்வாய்ந்த, புரியதனிற்றன்னிமித்த ம்பலவுண்டாகப்பொதுவருடனந்தனிவைபுகலலுற்றான். 8

வடிவுடையசங்குநிறவண்ணன்கூட வகல்கிலாதீண்டிருந்தான்மைந் தனுக்காண், டிடருளதோவறிகிலேன்பழுவந்தன்னினெண்ணிலாத்தன் னிமித்தமெய்திற்றென்று, கடுவிசையிற்கானகத்திலெய்தலோடுங் காரி கையாளசோதையுரோகணிதன்னோடு, கொடியிடையாந்தொறுவியர்கள் பொதுவரெல்லாங் கூடியேவிரைவினிற்சென்றார்கள்மாதோ. 9

அடவியிடைக்காண்கிலர்கள்கண்ணனேகு மயனமறியாரடியினடை யாளங்கள், கொடியவையங்குசங்கமலங்கொண்டுபோன குறியறிந்துசெ ன்றவர்கள்யமுனைதன்னின், மடுவினிடையரவுடலைச்சுற்றவீழ்ந்த மைந் தனைக்கண்டார்கள்மனமறுகிக்கண்ணீர், படியினிடைநதியெனவேயோ டவோடிப் பயமுறமெய்விதலையுற்றுப்பதைத்துப்பார்த்தார். 10

இடிகள்விழமராமரம்வேருடனும்வீழ்ந்த தென்னநந்தனுடனுயரெ ல்லாம்வீழ்ந்தார், வடிவுடையவண்டர்தங்கள்மகளிரெல்லா மண்மிசையி ற்கரனெரித்துமறுகிநைந்தார், கொடியிடையாளசோதையுரோகணிமெ ய்வாடிக் குலைந்திருகண்மோதிவயிற்றெற்றிவீழ்ந்தே, யுடலினுயிரிலையெ னவங்கோய்ந்துகண்ணீ ருறவரற்றித்தாயிவைகளுரைப்பதானாள். 11

விடமூலைப்பாலளித்தவளாற்சகட்டாற்காற்றால் மிடைந்துவிழுமரு திரண்டாற்குக்குடத்தாற், கொடியகன்றாற்கொக்கினாலரவாற்செய்யுங் கொடுவினைக்குமுய்ந்தனையேகுமராவந்தோ, படமெணிலாதனலுமிழும ரவுகின்னைப் பற்றியுடல்சுற்றிடயான்முன்னாட்செய்த, கடுவினையோவு ன்கவினைக்கண்டகண்ணிற் கனல்மடுத்தாய்மைந்தவெனக்கழறினாளால்.

நந்தனுடனண்டர்களுமடவார்தாமும் நாவுலரமெய்ம்மறந்துநடுங்கி யேதான், மைந்தனினியுய்குவதிங்கிலையாலாழ்ந்த மடுவினின்வீழ்ந்தெல் லோருமாள்வோமென்று, சிந்தைநொந்தாருரோகணிசேய்பின்னோன் செய்யுஞ் செயலறிந்துதியங்காமல்நகைத்துநின்றான், உந்தியினிலுலகுத ந்தவரியோர்க்கன்ன லுறமளவுமரவினுடலுற்றானன்றே. 13

மாயவன்றனுடல்வரைபோல்வளையக்கண்டு மற்றவனைச்சுற்றுமரா நொந்துவாங்கி, மீயுயரும்படமோராயிரம்விரித்து விழிகளிரண்டாயிரமு மனலேயேலத், தீயினுறமூலவையெனவுயிர்ப்புவிஞ்சச் சிறந்தபகுவாய் கடொறமிரண்டுநாவுங், காயும்வடவைக்கனலின்கொழுந்துபோன்றங் கண்ணபிரானைக்கடிக்கக்கடுகினானால். 14

தூயவனைக்கடித்திடவாண்டெய்தும்போழ்திற் சுற்றிவளைத்தயந்த னிலேதுலங்கியாடத், தீயுமிழுமரவினுடனொந்துசிந்தை தியங்கியிடவச்

சுதனுந்தேவதேவ, னுயிரநற்பணமிலங்கமணிகள்மின்ன வலங்கிருதமாய்
வயங்குஞ்சிரமேலுற்று, மீயுயருங்கெருடகாந்தருவரோடுங் கின்னரரும்
வியப்பெய்தநடித்தானன்றே. 15

துந்துமிகள்பலமுழங்கத்தாளமொத்தத் தும்புருநாரதர்பாடச்சுரர்
களெல்லா, மந்தரத்தின்மழைபொழியமுனிவரேத்த வரம்பையர்களனே
கர்விளக்கங்கையேந்தக், கந்தரத்திற்கலன்றிகழமுறவெலய்தக் காதில
ணிகுண்டலங்களலையமார்பின், சுந்தரஞ்சேர்நவமணித்தாவடங்களாடத்
துலங்கியநற்படங்கடோறும்நடித்தானன்றே. 16

வேறு.

புகரிபவிறையிமையவர்கணமொத்துத்தாளம்பொங்கியிடச்
செக்கிணகிணநககிண்கிணதித்தித்தாந்தோந்தொங்கதொகு
தொகுதொகுதோதிகுதிகுதிகுதிகுதோதிகுதோதிகுவெனவே
யகிபடமிசையரிநடமிடவநதவாயர்கள்தேறினரால். 17

வேறு.

அனநடைவிதுமுக வட்மிசைநகில்முக் தாநகைசுத்தத்தகிலேர்குழ
லா, ரினமொடுவிதிபகடுடையிறைபிவரொத்தேமிக வொத்தப்புகலோர்
தாளஞ், செனகிடகுகுதகுகிடகுகுதகு கிடகுகுதித்தித்தாதிகுதோவெ
னவே, துனிகெடும்வகையகிபடவலிதொலையத் தாளுகிர்வைத்தச்சுதனு
டினனல்.

வேறு.

மத்தளிசச்சரியுறுமிதுடமுழாவான் மயங்கிமுழங்கிடவீணையிசைக
ளோடுந், தத்திதிதிகிரிகிடுதோந்தாந்தாந்திக்குத்தரிதிகிட கிறுதிகிட
வென்றுதாள, மொத்திடவேபணங்களாயிரத்தின்மேலு முகைந்துகைந்
துநடித்திடலுமுலகமுண்ட, வத்தனளவில்பாரஞ்சுமக்கலாற்றுனக மெ
லிந்துவிதலையுற்றேயயர்ந்தானம்மா. 19

ஆயிரநற்பணங்கடளின்மிதிப்பவை யனழலுமிழும்விழிகளெல்லாம்
பிதுங்கவெய்ய, வாய்களினிறுசிகளின்கறையின்வெள்ளமான திபின் வீ
ழ்ந்திடத்தான்மயங்கும்வேலை, தூயமலர்க்குழல்சோரவளைகள் சோரத்து
டியிடையார்துணைவியர்கள்புதல்வரோடு, மாயனிருதிருவடியின் வணங்
கியாமுமெம்முடையமகிணனுமுன்சரணமென்றூர். 20

தாமதமாகியகுணமுஞ்சர்ப்பமானசனனமு மானவனென்னதவஞ்
செய்தானே, தேமலரோன்றேடியவுன்றிருப்பாதத்தைச் சிறந்திடவே
யிவன்சிரங்கள்மீதிற்சேர்த்தாய், வாமனவுன்னன்புமிகுபத்தராவோர் ம
ண்ணரசுஞ்சுவர்க்கமகபதிதனூரும், பூமலரோனுலகுமுயர்வீடு மெண்
ணூர்பொலிந்தவுன்றன்றிருவடியைப்போற்றிவாழ்வார் 21

அச்சுதனும்பரமநமவண்டமுண்டவாயநம மாயநமிவகிலந்தன்னி, னி
ச்சையினுலவதரித்தேயிடரைநீக்குமீசநம வென்றிறைஞ்சி யெமக்கெங்
கொண்தப், பிச்சையினையருடியென்றூகூறலோடும் பிரமனையன்றுதவி

யபேராயிரத்தோ, னச்சரவினுச்சிமிசைப்பாதம்வாங்க நலனுறகாளியன் வணங்கிநவிலலுற்றான். 22

கெர்ப்பமரமுதலாகித்தீர்க்கமாகிக் கிளைத்தெழுந்ததாமதமாங்குணத்தைவெய்ய, சர்ப்பவுருவாயவவைக்கொலகம்நீயே தந்தனையால்வினையேனுக்கருள்புரிந்தன், பொற்பமருந்திருவடியென்சிரங்கள்மீதிற் பொலியவைத்தென்புன்பிறவிபோக்குமைய, வற்புதவுன்சரணடைந்தேனென்றுகூறு மரவினுக்காண்டருட்கமலக்கண்ணன்சொல்வான். 23

கோலமுறவென்னடியின்குறிநின்சென்னி கொண்டிருக்கவுவணனுனைக்கொல்கிலானால், வேலையுளோர்மண்ணகத்தீவதனுள்மேவு நீயெனவேவிடைகொடுப்பவிளங்கும்வாடா, மாலையுடனிரவிநிகர்மணிகள்சோதி வயங்கியநற்கலன்கள்பரிமளத்தின்வர்க்கம், நீலமுகில்மேனியனுக்களித்துநின்ற நேரிழையார்காளியன்றனுடனும்போனார். 24

அமிர்தமயமாயமுனைவயங்கியோட வவரளித்தமாலைபரிமளத்தின்வர்க்கஞ், சமனில்மணித்தாவடங்கள்கலன்களெல்லாந் தயங்கிடத்தன்னிருகரத்தாலணிந்துகொண்டு, விமலன்வருமெழிலோக்கிநந்தன்வந்து மெய்யிறுகப்புல்லினன்பால்வண்ணநம்பி,யமலனையுற்றேயணைத்துமகிழ்ந்துநின்றானாயரெல்லாமடைவடைவேதழுவினாரால். 25

அன்புடனேரோகணிசென்றணைந்தாள்மார்பி னளப்பரியதுயரமுடனசோதைநங்கை, என்புருகிநையுமிவளெதிரேயெய்தி யெழிலுடையமைந்தனைமெய்யிறுகப்புல்லித், துன்பமுழலுந்தையுடன் யானுமண்டர்தொகுதியுடனுயிர்துறந்துபோகாவண்ணம், வன்புடையவரவுநின்னைச்சுற்றிவாலால் வளைத்திடவுமுய்ந்துவந்தாய்மகனேயென்றாள். 26

இனையமொழிபகர்ந்துமகனெழிலைநோக்கி யினிதுடனேயசோதைமகிழ்ந்திருக்கும்வேலை, தினகரனீள்குடகடலினுறவானெட்டுத் திசையுமிருள்செறிந்திடலுமாயரெல்லாங், கனிகணுகர்ந்தாவின்பால்பருகித்தாங்கள் கண்டுயிலும்போதெழுந்தகாட்டுத்தீயால், மனம்வெருவிவிதலையுற்றே யிராமநம்பிமணிவண்ணாகாத்திடுமினென்றார்மாதோ. 27

வெருவியண்டர்மொழிந்திடலுங்கண்ணன்சொல்வான் விரைவினில்நீரெல்லோருங்கண்கள்மூடி, னெரியொருவுமெனவுரைப்பமைந்தர்மாதரிடையரெல்லாமிருநயனம்புதைத்தலோடும், வரையெனவாண்டயர்ந்தெழுந்துநாக்கைநீட்டி வடவனலும்விதலையுறவளைத்துக்கொண்ட, வெரியதனைவிழுங்கியபினசோதைமைந்த னுயருருவாகினின்றுவிழுமினென்றான். 28

மூடியகண்திறந்திடலுமெரியைக்காணார் முகமலர்ந்துமனமகிழ்ந்தவண்டரெல்லா, மாடினர்கள்நந்தன்மைந்தனறிஞனென்றே யணைத்தனர்களாதவன்கீட்டிசையினெய்த, வோடியயாமங்கிரண மோங்கவோங்கு

மொளிசிறந்தவாயரோமெம்விரைவினேகி, நீடுவிருந்தாவனத்தின்பாடியெ
ய்தி நிமலனெனும்படிகவண்ணனிருக்குநாளில். 29

காளியமர்த்தனப் படலம் முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம்-2929.

---

## 37-வது, பெலம்பன்வதைப் படலம்.

---

காசினியதனிற்றுய்யகலப்பையிற்கொழுவிற்றேன்று
மாசிலாமடந்தைதன்னைவனத்திடைவவ்வவந்த
நீசிதன்குழலைப்பற்றிநிகரிலாவுடைவாடன்னு
ஞசியைக்கொய்தோன்முன்னேன்ஞானநாயகன்றுள்வாழி. 1

தன்னிடத்தமைக்குமாவின்சாரத்தைக்கழித்துச்சேற்றைத்
துன்னிடப்பரிக்குந்தாழைசூழ்ந்திடுந்தடறுதானே
என்னமால்சரிதைகேட்டுமெவையினையெள்கிப்பாவ
முன்னிடென்மனனேமாயோன்கழலுறுமலினமோய. 2

ஆனிரையாயர்மைந்தரலாயுதனிவர்களோடும்
பானல்கல்லாரங்கஞ்சநிறைந்திடப்பன்மீன்றுள்ளத்
தேனமருயானஞ்சூழச்சிறந்திடுதடாகஞ்சேர்ந்த
கான்வரையருவியோடுங்கவினெலாங்கண்டான்கண்ணன். 3

கிரியின்வீழருவியோசைகிளர்ந்தறைபணவமேய
வரியிசைபாணியேலவழகுறநடிக்குமஞ்ஞை
சுரிகுழற்கணிகைபோன்றசுகவினமிழற்றுஞ்சொற்கள்
பரிணிதர்நோக்கிநோக்கியுவகையாற்பகர்வதொத்த. 4

கழையினம்வெடித்தமுத்தினினமெலாம்நிலவைக்கால
வழலுமிழரவமீன்றமணிகதிரொளிபோலான்ற
கொழுமுகிலினங்கள்போன்றகோடுடைப்பூட்கைசூழ
வுழையினங்குதிப்பக்கன்றினினங்களுந்துள்ளியோடும். 5

குருகினநிரைகள்சேரக்கோகிலமெங்குங்கூவ
வரியினமுரலக்கொஞ்சுமஞ்சுகம்பறந்தேயோடச்
சொரிமலர்ச்சோலையெல்லாஞ்சூழ்ந்திளமந்திபாயத்
திரையுறுநதிகளெல்லாஞ்சேல்கயல்வாளைபாயும். 6

மலர்நிறைபொழிலும்வாவிநதிவரைமாட்சியெல்லா
மிலகியமுறுவலெய்தக்கண்டனனெழிலிவண்ணன்
நலனுறுசிறுவரெல்லாம்நடித்தனரிசைகள்பாடித்
தலமிசையயுரும்பாண்டிரகமெனும்வடத்தைச்சார்ந்தார். 7

தாமனுமிடபன்றானுஞ்சக்கரத்தலைவன்றானுஞ்
சோமனல்வண்ணன்றானுமற்றுளதுணைவரோடெங்
காமரொண்கழலானென்றிக்கடகியேயென்றார்தம்மைப்
பூமரங்காறுந்தோற்றார்சுமந்துதான்போகும்வேலை. 8

தேனுகன்மடிந்தசெய்கைகேட்டனன்றீயகஞ்ச
னீனமேமலியுநெஞ்சன்பெலம்பனென்பானைநோக்கி
ஊனமில்நந்தன்சேயையொல்லையிற்றெறுநீயென்னக்
கானகந்தன்னிற்சேர்ந்தான்கடியதீவினையேபோல்வான். 9

ஆயர்தம்மைந்தராயவுருவுகொண்டணுகித்தூய
மாயவன்றுணைவரோடேசேர்ந்தனன்வடத்தின்கீழின்
றீயவனிராமனோடுதெறித்திடுங்கழலாற்றோற்றான்
மாயமென்றுணரான்பாலின்வண்ணன்மற்றவன்றோளூற்றான். 10

தூயவன்றன்னைத்தோளிற்சுமந்துபோய்மீளவாரான்
மாயவல்லசுரனீண்டவரையெனவுயர்ந்தமெய்யன்
காய்கனற்கண்ணன்பேழ்வாய்கடியவன்பிறையெயிற்றன்
றீயுறமுயிர்ப்பனாகிச்சேணிடைநிமிர்ந்தானன்றே. 11

பிறையெயிற்றசுரன்வானிற்பெயர்வகண்டிராமநம்பி
யுறுவலிக்கரத்தால்வஞ்சனுச்சியிற்புடைப்பத்தேவர்க்
கிறைவனன்றெடுத்துவீசுமிலங்குவச்சிராயுதத்தாற்
சிறகறும்பிறங்கல்போலச்சிதறிமண்ணிடையின்வீழ்ந்தான். 12

வாயிடைக்குருதிசோரவிரவலன்மடிந்துவீழத்
தூயமாமலர்சொரிந்துதுதித்தனரிலேகரெல்லா
மாயவன்மகிழ்ந்துபாலின்வண்ணனைத்தழுவிக்கொண்டா
னாயர்தஞ்சிறுவரெல்லாமன்புடனணைத்தாரன்றே. 13

பின்னுமெல்லோருங்கூடிப்பெருங்கழற்றெறித்தலோடு
மன்னினன்வீணையேந்துமறைமுனிமாயன்றன்னை
யின்னிலத்தியற்றுமாயமறிகிலேனிறைவாவென்று
சொன்னவன்றன்னைநோக்கித்தூயவன்கழறலுற்றான். 14

விரைவினின்யமுனைநீரிற்படிந்திவண்மீடியாயி
னுரைசெய்வனிலத்தின்பானீண்டுற்றனவெல்லாமென்றே
யரியிவைமொழியக்கேட்டவருந்தவன்கடிதினெய்தி
யிரையுமாநதியின்மூழ்கியெழுமுனமிவைகண்டானால். 15

தவமுனிவேடமோவித்தராபதிமைந்தனாகி
யவனியிற்பிறந்துதாயரனேகர்சீராட்டக்கண்டான்
புவனியிற்றவழ்ந்துபின்னர்நடந்தைந்துபருவம்போக
வுவமையில்மைந்தனாகிவளர்ந்தெழிலுறுவகண்டான். 16

ஆயிரமடவார்தம்மைமணம்புணர்ந்தவர்தோள்சேர்ந்து
தூயவொண்மைந்தர்தம்மைப்பெற்றநன்மகுடம்சூட்டி
மாயிருஞாலமெல்லாமன்னனுயாளக்கண்டான்
தீயராஞ்செறுநரோடுஞ்சினத்தமர்செய்யக்கண்டான். 17
கரிபரியிரதமெல்லாங்களத்தின்வீழ்ந்தவியக்கண்டான்
சரியிலாவீரரோடுந்தனையர்கள்மடியக்கண்டு
வெருவித்தானோடிநீரின்வீழ்ந்தபோல்மெய்ந்நடுங்கிக்
கரையின்மீதேறியெய்திக்கண்ணனோடறையலுற்றான். 18
ஐயயானவனிதன்னிற்பிறந்துபேரரசனாகி
மையுறுகண்ணினாரையணைத்துநன்மைந்தருண்டாய்த்
துய்யநன்மகுடஞ்சூட்டித்தோல்பரிசிறுவர்வீரர்
வெய்யரால்வீழயானும்வெருவிநீர்வீழ்ந்துபோந்தேன். 19
எண்ணருந்தவங்களெல்லாமழிந்ததாலினியென்செய்கே
னண்ணல்நீயருடியென்னவரும்பிவநகையனாகுங்
கண்ணன்யானிலனிற்பூட்டுங்கழலினைத்தெரியாமுன்ன
மண்ணினிற்பிறந்துவாழ்ந்ததெவ்வன்மாதவநீயென்றான். 20
மாயவனகைத்துத்தான்செய்மயக்கினைபொருவலோடுந்
தூயமாமுனிவன்ஞானந்தெளிவுறத்தொழுதுசொல்வான்
மாயிருஞாலமுன்றன்வயிற்றுள்வைத்தனிற்றோன்று
மாயிரம்பெயரினோயுன்செயலினையறிவாராரே. 21
நீயயனரனுய்த்தோன்றியெவர்க்குமுன்னிற்கிலாத
மாயையையியற்றியுள்ளும்புறத்தினுமருவினாயென்
றாயவையுணர்ந்துநோக்கினவற்றினுமணுகாயாகித்
தூயநான்மறைக்குந்தோன்றாச்சுடரொளியாகிநிற்பாய். 22
உயிர்க்குயிராகிநின்றவொருவனேயுலகில்நீசெய்
யியற்கையைக்கேட்டவென்றன்பிழைபொறுத்தென்றுமாய
மயக்குளதென்மேல்வாராதருளெனவணங்கிஞான
முயற்சிசெய்வீணையேந்துமுனிவன்வானுலகிற்போனான். 23
தூயமாமுனிவன்போனபின்னர்நற்றுணைவரோடு
மாயவன்முன்னோனோடும்வண்ணவானிரைகளோடே
யாயர்தம்பதியினெய்தியுரோகணியசோதையான
தாயர்தாளிறைஞ்சலோடுந்தனையரைத்தழுவிக்கொண்டார். 24
தீயவன்தன்னைமுன்னோன்சினத்துடன்வதைத்ததெல்லா
மாயவன்மொழியநந்தனிராமனைமகிழ்ந்தணைத்தான்
றாயர்கண்ணருவிசோரத்தனையரைத்தழுவிக்கொண்டா
ராயர்கள்திரளுமாதரனைவருமகிழ்வுற்றாரால். 25

பெலம்பன் வதைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 2954.

# 38 - வது, கூறைகோள் படலம்.

நீரினிற்குடைந்துபாரினிகரிலாக்கலன்கள்பூண்ட
நாரியர்தி ஙிலைவாரிநலனுறுங்குருந்திலேறி
மூரலார்வதனம்வானின்முழுமதிபோலத்தோன்றக்
கார்முகில்போலநின்றகண்ணனைவணக்கஞ்செய்வாம். 1

கொலையலாதியற்றுமற்றைக்குணத்தினெண்மடங்கதாகி
நிலையிலாச்செல்வம்நற்றிநெறியறவிளைக்குநெஞ்சே
தொலைவிலாப்பவங்களெல்லாந்துரந்திநாமச்சோதி
அலைவிலாப்பதத்தின்வாழுமச்சுதன்பெயரேத்துய்ய. 2

தினந்தினந்தோறுமையன்சிறந்தநற்றுணைவரோடும்
வனந்தனிலேகியாவினிரைதனைக்கறந்துவாறு
றினந்தனையேத்தவேபாலடிசில்செய்தினிதருந்தி
மனந்தனில்மகிழுமாரிக்காலம்வந்தடுத்தமாதோ. 3

எதிர்ந்தரிசார்ங்கங்கொண்டுநாந்தகம்விசிறியெங்கு
மதிர்ந்திடவளையையூதியசுரர்மேற்கணையெய்தாற்போல்
விதந்தருவில்லுத்தோன்றமின்னிவானிடித்துமேக
மதந்தருகரிகள்மானவெய்தியேபொழிந்தமன்னோ. 4

வானமீன்மறையநாரதரம்வளைந்தெங்கும்பெய்யப்
பானல்சால்கயங்கொள்பாரின்மின்மினிபரந்ததெல்லா
மூனமேயிலாதநாலுமறையினுலொளிப்பவிஞ்சி
யீனமேமலிந்துதோன்றுமிதரநூலான்றபோன்ற. 5

புயல்நிறச்சோதியோன்றன்பொற்றிருவடிகளல்லா
லயலொன்றுமறியாவன்பரளப்பரிதூயவெந்தீத்
துயருறவந்தபோதுஞ்சோர்விலாதிருந்ததேபோற்
சயிலம்வான்பொழியச்சற்றுஞ்சலிப்பிலாதிருந்ததன்றே. 6

தங்கள்தொல்வினைகடன்னுல்நல்குரவெய்தித்தாக்க
வெங்கணுமெரடுங்கிமுன்னளருந்தவத்தியல்பினாலே
யங்கண்மாலெய்தக்கண்டாண்டாடியவன்பரேய
மங்குலினீட்டங்கண்டமயூரங்கணடிக்குமன்னோ. 7

உழலுமாதவங்கள்செய்துவருந்திமுன்னுற்றநேமி
யழகனைக்கண்டார்கண்ணினுந்தவாரியேபோற்
றழலுறும்வெயிலினாலேகொதித்தமாசயிலமீதி
னெழிலிகள்பொழியயாண்மெருவிகீழிழிந்தமாதோ. 8

செறிந்துவான்பொழியயாருஞ்சென்றிடாவயனமெங்கு
மறிந்துதானெய்தாவண்ணமடர்ந்துபுற்படர்ந்துமேவச்

சிறந்துநான்மறையையோதித்திருந்திடவுருச்சொல்லாமல்
மறைந்தநாவினர்கள்போலவழிகளுமறைந்தமன்னே. 9

நதிதடாகங்கள்கூபம்நற்கயநாமமெல்லா
மெதுவிதென்றறியாவண்ணமேகமாய்ப்பரந்தவெள்ள
மத்தன்மமீதறமீதென்றுமறிஞர்களறியாரென்று
மதியிலானுணராதொன்றாய்மதிப்பபோல்வளைந்ததன்றே. 10

அரியொன்றங்கறையப்பின்னரதனினமரற்றுமோசை
சுருதியையறைவிப்பான்போற்சொல்லுவார்பலரும்போன்று
தரணியிற்கும்பத்தோங்தானுழல்வறியன்செய்கை
தெரியவேமெல்லமெல்லத்திரிந்தனகூனனந்து. 11

துயர்வரவரிநாமச்சொல்லொழிந்திடும்சோம்பர்போன்று
குயிலினக்குரலினோசையடங்கினகூத்தராடுஞ்
செயலினிற்றோற்றம்பின்னுமொழித்தவர்சீர்கற்பார்போல்
மயிலினமாடமந்திமுடுக்கரினேக்குமன்னே. 12

வேறு.

அருளதனாலவதெவர்க்குமளிக்குமன்ன னரசாளுமவனிதனக்கன்
றிமாற, முரசுநிறைபேரியொலியொழியவேதன் முகம்வெளுத்துநகைமா
றிநிதிகளில்லா, திருகரத்தின்கொடையகற்றியேங்குமாப்போ லெண்டி
சையும்வானகமுமிருண்டமேகஞ், சொரியுமயமறமின்னுமிடியுமன்றிச் சு
ப்பிரமாயகன்றசரற்காலந்தோன்ற. 13

மருளரைச்சேர்ந்தறனறியாப்புன்மையானோர் மதிநிறையுமறிஞர்க
ளையடைந்துதூய, வருமறையின்பொருளுணர்ந்துஞானமெய்த வடரும்
வினையகலமனஞ்சிறந்தார்போலக், கரைபுரண்டுகெழுகினம்வேர்பறிந்து
வீழக் கலங்கிமிகக்குறைந்தோடுநதிகளெல்லாந், திரையமர்ந்துவரம்பினு
ள்ளேயடங்கிமேவச்செறிவயல்கடொறும்பாய்நீர்தெளிந்தமாதோ. 14

வலனுறச்செங்கோலோச்சிஉலகமெல்லாம் வண்மையுறவரசாளும
ன்னனேங்கும், நிலமிசையினுயர்ந்தெழுந்ததீயரெல்லாம் நிலைகுலைந்து
மெய்நடுங்கியேங்குமாப்போ, லரிகிரணத்தருணவொளிபரவயாண்டு மல
ர்ந்தெழுந்தவனசமலர்நிறையவாங்கே, மெலியுமிதழ்குவிந்துகவிழ்ந்தொ
துங்கிநீரின் விளங்குதவிலாம்பல்பொலிவழிந்ததன்றே. 15

சிந்தையினிலறனினையாக்கயவர்முன்னாட் செய்தவத்திற்சிறிதுசெ
ல்வமெய்தத்தம்மை, யிந்திரனாயுன்னியென்றுமிருப்பார்போல வியல்ப
றவங்கடங்காதுழ்வினைகள்சூழ, நொந்துசெய்வதிலராகியுழல்வார்போன்
று நொய்யகரையழித்தோங்கிதடாகநீரின், முந்தியெழுந்தேதுள்ளிக்களி
க்குமீன்கள்முயற்சியிலாதயமொருவக்கிடந்ததன்றே. 16

வேறு.

நீருணுங்கயங்கயங்குடையநீள்கயல்
வீரணந்துடிபடவிதரிவாவின

வாரணத்தடியின்வாரணஞ்சிதைந்தெனக்
காரணமாம்பியைக்களைந்தகாலினல். 17

கூவிளமிலவமிங்குலிகஞ்சிந்துரம்
பூவகமுருக்குக்கன்னிகாரம்பூழின்மை
தாவியகரந்தந்தைவரும்பின்சாலஞ்சே
றாவியதொளித்தலுந்துறுத்ததெங்குமே. 18

சிட்டர்தங்கிழுறச்செய்யும்பாடவத்
துட்டரோவிடநல்லோர்துலங்குமாட்சிபோற்
குட்டிமஞ்சிந்துரங்கொண்முப்பெய்தலே
விட்டிடநதித்துறைதொறும்விளங்கிய. 19

சூதநற்கோடுகெணியவாவிவிற்
சாதியினேயினதற்றகாலத்து
வாதுவரென்னவாரணத்திளங்கன்றின்
மீதுறப்பாய்ந்தனவிகடகச்சமே. 29

பூகநற்கோடுறும்பொய்கையிற்புனல்
மேகநீரறச்சரற்காலமேவவே
யேகமாமினம்பிறிந்திரங்கித்தென்னவம்
மாகமுள்ளுறக்கிடந்தாற்றநீகமே. 21

வேறு.

கானிலுறுமரங்களெல்லாந்தளிர்ப்பவான்ற காட்சியுறுதமலகஞ்சேண்கமலங்காட்டப், பானலுயர்கல்லாரமலர்ந்துவிஞ்சும் பங்கயங்கணிறைந்திலகுமிலஞ்சியெல்லாந், தேனினிசைமுரலவனந்திகழவாளை சேல்கயல்கடாவுமெழில்சிறந்துதோன்ற, மானினங்கண்மறிகளொடுபெரந்தேயோடமந்தியினங்கண்டுவெந்துநோக்குமன்றே. 22

கார்காலங்கழியவுலகங்களெல்லாங் கதிரவன்றனவிர்பரந்துகாட்சியெய்தப், பாராரும்பொழில்களெல்லாம்வயங்கவாயர் பதிமாதரெண்ணிலர்கள்பரிவினொடுந், தாராருங்குழலசையவாரமாடத் தனமிலங்கநதிக்கரையிற்றனுமாதத்தில், நீராடலுவந்துவந்துமருங்குநோவ நெருங்கினர்கள் நிறைகனகக்கொம்புபோல்வார். 23

வாசமிகுகாலேகங்கமழவேதான்வந்தெழில்கொள்பாளிதங்கள்கரைமேல்வைத்தே, யாசில்வதனத்தினிருகண்ணின்வாயி னழகினுறுமரவிந்தங்கழுநீராம்பல், மாசிலயத்துள்ளலைந்துமறைவபோல மடந்தையர்கள் விழுந்தெழுந்துகுடையநீரி, ஞைசையுறுமார்கழிநீராடினுர்களுயர்ந்தெழுந்தவளியினங்கள்பாடியாட. 24

அனங்கன்மனந்தமொறித்திகைப்பவானி னரம்பையர்கள்நாணவுயரண்டர்மாத, ரினங்களயந்தனின்விழுவரெழுவர்கையா விலங்குமலர்பறித்தெறிந்தேயெறிவர்தூய, தனங்களிணேவயங்கவிடை துவளவில்லார்த

ரளநகையெழக்குழறுடன்னைச்சுற்ற, மனங்கனியுங்களிப்பினொடுதினமு மெய்தி மார்கழிநீராடியவர்மகிழும்நாளின். 25

பரிபுரந்தாண்மிசையரற்றப்பொன்னினாடைபன்மணிகள்பவருடை நாண்மருங்குவாய்ப்பத், தரளமணித்தாவடமொண்டாமமாடச் சந்துவெறிவீசவுயர்பீலிப்பின்னல், சிறமுறவேயிருகாதிற்குண்டலங்க டேமாம்பூவுடன்சிறப்பவேய்கொடூதி, விரைவினின்வந்தாய்ச்சியர்பொற் கலைகள் வாரிவெளியமலர்க்குருந்தேறிநகைத்துநின்றான். 26

வேறு.

அம்பரமெல்லாம்வாரியழகியகுருந்தினேறு
மும்பர்கள்பெருமான்றன்னைநோக்கியொண்முறுவல்செய்து
வம்பவிழ்குழலினார்கன்மார்பினீரமிழநின்றே
யெம்பரவென்செய்தாய்நீயெங்கலைதருதியென்றார். 27

மார்கழிநீரினாடவந்தனமியாங்களந்தோ
நீரினுட்சீதமாற்றோம்நீயெஞ்செம்படங்களெல்லாஞ்
சோரர்போல்வாரித்தூயகுருந்தின்மேற்றோன்றிநக்கா
யாரிதுசெய்வாரையாவம்பரமருள்வாயென்றார். 28

பொதுமடவோரலோம்யாம்பொதுவர்தம்மகளீரன்றோ
ததிகளவாடுமையாதகுதியுமறிந்திலாயோ
மதிமுகமிலகநின்றுநகைத்தெமைமயக்கிடாதே
யுதவுநீயெங்களம்பொற்கலையையென்றுரைத்தாரன்றே. 29

நிந்தனைசெய்தாயையநீயிவண்செய்ததெல்லாம்
நந்தகோபாலனாற்குமசோதைக்கும்நவின்றிடோமோ
சுந்தரவினிநீயெங்கடுகிலினையளித்தாயாகில்
வந்தனைசெய்வோமென்றுமடந்தையருரைத்தாரன்றே. 30

அரிவையருரையைக்கேட்டேயச்சுதன்முறுவல்செய்து
தெரிவைமீர்நீயிர்சாபத்திங்கணீராடுகின்ற
விரதமாப்பலனிங்கெய்தவிரைவினிற்கரையினேறி
யிருகையாற்றொழுதீராகிலீவனுந்துகில்களென்றான். 31

ஆரியன்கூறக்கேட்டவரிவையரவனைநோக்கி
நீரினுளொருவிநின்முனக்கினத்தினராய்நிற்கின்
பாருளதனையுமெம்மைப்பரிபவஞ்சொலாரோவையா
சீரியவல்லசொல்லேலென்றுபின்செப்பலுற்றார். 32

சிற்றிலையழித்தியாங்களடுசிறுசோற்றைச்சிந்திப்
பற்றியகலசந்தன்னைத்தகர்த்துமெம்பட்டைப்பீறி
விற்றலும்வளைநெறித்துநீயெம்மைமயக்குங்கல்வி
கற்றநீசொற்றதெல்லாம்கேட்பமெங்கலைதாவென்றார். 33

கருந்தருடவிழியினார்கள்கழறலுநகைத்துக்கண்ணன்
பெருந்தடநீரகன்றொவ்வொருத்தியாய்ப்பெயர்ந்துவிஞ்சுங்
குருந்தருசெய்தியென்னைத்தொழுதிரேற்கூறையீய்வன்
வருந்தநீர்நீருள்நின்றுவணங்கினுங்கொடேன்யானென்றான். 34

கருமுகில்வண்ணன்கூறக்கேட்டகாரிகையாரெல்லாம்
விரகனெல்லோரும்பல்கால்வேண்டினுங்கூறைதாரான்
றெரிவைமீரென்செய்வோமென்றுரைத்தவர்திகைப்பச்சென்றோ
ரரிவைநக்கினத்தோடேகித்தொழத்துகிலளித்தானையன். 35

தனியேசென்றொருத்திகூறைவாங்கலுந்தையனல்லா
ரினியேதுகருமமென்னாவிலங்குபூங்கொம்பாமென்ன
வனமேபோலெய்திநின்றேயனகனையிருகைகூப்பக்
கனமேனியிறைவன்கண்டானவர்க்குங்கலைகளீய்ந்தான். 36

வில்கிளர்கலன்கள்பூண்டமெல்லியலொருத்தியோர்கை
யல்குலைமறைப்பமற்றையங்கையாற்கூப்பலோடுஞ்
செல்கிளர்ந்தெனவேதோன்றுஞ்சீதரனவளைநோக்கி
வெல்கிளர்தசனமூரலிலங்கிடவியம்பலுற்றான். 37

தெரிவையர்யாவரேனுமெனைத்தொழச்சேர்ந்துநின்றே
யொருகையைக்கூப்பினாரேலவர்கரந்துணிக்கவொப்பி
லருமறைபுகலுமென்னவவளல்குல்மறைகைவாங்கி
யிருகையாற்றொழலுங்கண்ணனகைத்தவடுகிலையீய்ந்தான். 38

ஒருத்திபின்னொருத்திசென்றுதொழுதிடவுவந்துமாய
னருத்தியினளித்தகூறையனைவரும்புனைந்துகொண்டு
மரத்தினுமிழியுமுன்னம்வள்ளலைப்பற்றிக்கொண்டே
துருத்தநீயாங்களுன்னைத்தொழுதபோற்றொழுதியென்றார். 39

நீயவநீதியெம்மைச்செய்ததுநினைந்துகொண்டே
யாயநீதொழுதியென்னவனகன்வான்முறுவல்செய்து
சேயிழையார்கட்கெல்லாந்தனித்தனிசெங்கைகூப்ப
மாயனன்முகத்தைநோக்கிமடந்தையர்விளம்பலுற்றார். 40

இருகணானோக்கயாங்கள்மயங்கினமெதிரிலாத
புருவநீகோட்டவுன்றன்மாலினிற்பொருந்தினோம்யாந்
தரளவெண்ணகைநீசெய்யத்தாழ்ந்தனமதுதன்னாலிவ்
விருகையாற்றொழுதவண்மைகண்டிலமிறைவவென்றார். 41

ஆதலாலடிச்சியோமையழகுறத்தொழுதியென்ன
மாதவனகைத்துச்செங்கைகூப்பலுமகிழ்ந்துநின்று
சீதரன்கடைக்கணோக்கில்முறுவலிற்செப்புஞ்சொல்லின்
மாதர்களுருகிமாலைவணங்கித்தம்மனைகள்புக்கார். 42

கண்ணனுமுறுவல்செய்துகானகந்தனின்மேய்த்த
வெண்ணருங்கோவினேடிலங்கியதுணைவரோடும்
கண்ணியேயாயர்தங்கள்பதிதனில்நாட்கடோறு
மண்ணணங்குவப்பப்பாதமலர்கொடுதிரியும்நாளின். 43

கூறைகொள்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 2997.

## 39-வது, சிந்தையந்திப் படலம்.

கந்தர்தன்றூதைதன்னைக்கயிலையோடெடுத்தெண்டிக்கிற்
றந்திகோடிறத்துவென்றதசக்கிரீபன்றூன்சாய
விந்திரனிரதமீதிலிலங்கிவெம்பகழிதூவுஞ்
சுந்தரவிராமன்பாதந்தொழுமினேபிறவிதீர. 1

ஐயன்றன்றுணைவரோமோவினந்தூரமேய்த்து
வெய்யவன்கிரணந்தன்ஞல்மெய்யெலாம்வெதும்பித்தாமோர்
பொய்கையின்பொழிலினெய்தத்துணைவர்கள்புண்டரீகக்
கையவெம்பசியினெஞ்தோமென்றலுங்கண்ணன்சொல்வான். 2

இந்தநல்வனத்திஞ்ண்டொரெழில்கொளுய்யானந்தன்னில்
அந்தணரெல்லாமாங்கிரதமெனும்யாகஞ்செய்தார்
முந்தியான்விடுத்தேனென்றுமொழிந்துநீரடிசில்வேண்டி
வந்தனைசெய்துவாங்கிவருதிரென்றுரைத்தான்மன்னே. 3

இறையவன்மொழியைக்கேட்டதுணைவர்கள்கடிதினெய்தி
மறையவர்தம்மைத்தூரவணங்கித்தாம்வந்ததெல்லா
மறைதலுமாயர்தங்கள்மதியெலாமழகிதென்று
முறுவல்செய்தேதுமில்லைப்போமெனமுடுக்கினரால். 4

வேதியரிகழ்ந்ததெல்லாந்துணைவர்கள்விளம்பக்கேட்டே
ஆதியோனகைத்துநீயிரந்தணர்தேவிமார்க
டிதிலாதிருந்தசோலைசேர்ந்தவர்களுக்குச்செப்பி
போதனம்வாங்கிவாருமென்றமாலுரைத்தான்மன்னே. 5

நந்தகோபாலன்மைந்தனவின்றிடத்துணைவரேகி
யந்தணர்தேவிமாரைவணங்கிநின்றறைதலோடுஞ்
சிந்தையின்மகிழ்ந்துதூயவறுசுவையடிசில்சேர
வந்தமார்குழிசிதன்னிலடிக்கித்தாஞ்செல்லும்போழ்தின். 6

காதின்றகுண்டலங்களலைந்திடக்கைத்தண்டேந்தி
வேதியர்மோதிவைதுவெகுண்டவர்தடுக்கவுந்தான்
கோதையர்கில்லாரெங்குஞ்சிதறித்தாமோடிக்கூடி
மாதவனிற்குமந்தவனத்திடையேகினரால். 7

பாரிலிவ்வண்ணமாதர்பரந்திடுங்காலமாலி
ஞருறவொருத்திவல்லேடைந்திடவவடன்கொண்கன்
கோரவெஞ்சினனுய்வைதுகோதைதன்கரத்தைமான்ருல்
வாரினூற்பிணிக்கச்செல்லும்வகையிலாதாகிநொந்தே. 8

சினமுறுகணவனெய்தித்தடுத்திடவசோதைசேயா
மனகனைச்சிந்தைசெய்யச்சிந்தையந்தியளேயாகி
வினையறவுடலினுவியோவிப்பொன்விமானமீதிற்
கனகனையுகிராற்போழ்ந்தகரியவன்பதத்திற்சேர்ந்தாள். 9

திருந்தியமகங்கள்செய்துஞ்சிறந்தபல்தானமீய்ந்து
மருந்தவமளப்பில்காலமனிலமேயுணவாய்த்தம்மெய்
வருந்திடுவோருங்காணுமாதவன்பதத்தின்மங்கை
பொருந்தியதிறம்பூதென்னுப்புலவர்கள்புகன்றரன்றே. 10

அன்னதுநிகழும்வேலேயந்தணர்தேவிமார்கள்
பொன்னுறுகலன்களெல்லாவடிசிலும்பொருந்தமேவித்
துன்னிஞரனகன்கானத்தெழிலுறநின்றசோலே
மன்னியேகண்டார்நீலமுகிலெனவயங்குவானே. 11

சிரந்தனிற்பீலிப்பின்னநிகழநற்றிலகமின்ன
வுரந்தனிலாரமாலேயுடன்வனமாலேதோன்ற
வரந்தருபாதந்தன்னின்மணிச்சிலம்பொளிரவேயோர்
கரந்தனிற்கமலமேந்தித்துணேவர்தோளுறுகையானே. 12

இளரொளிக்குண்டலங்கள்கெழுமியகாதினுனே
யளியுறும்வனசமன்னவழகியநயனத்தானே
யிளவெயில்நிகராமாழையிலங்குடையாடையானே
களினம்வாய்நெகிழ்வபோலநகைதிகழ்வாயினுனே. 13

சோதியாயுலகமெங்குந்துலங்கிநின்றுனேக்கண்டு
வேதியர்தேவிமார்கள்விழியிணேகளிக்கநோக்கி
யாதியானருகிசெய்தவவர்களேயருளாலேயன்
மாதரீரிவணேன்வந்தீர்மகுணர்பாலேகுமென்ருன். 14

தனயர்கள்வேண்டாமெம்மைச்சார்வுறுங்கொழுநர்வேண்டா
மனைகளும்வேண்டாம்நீயேகெதியெனவந்தோமையா
வனகநின்பாதஞ்சேருமறிவினையருளாயாகில்
வினையுறுபிறப்பாமெம்மைக்கணவரும்விரும்பாரென்ருர். 15

அரிவையர்மொழியைக்கேட்டவரியவற்கருளிச்செய்வான்
றழுமமெய்நீதியின்றித்தற்கராணுலுமென்ற
னிருபதமடைந்துவாழ்வரியாவரேயெனினுந்தாழ்ந்த
வருநரகடையார்தேவர்முனிவர்க்குமவரேமேலோர். 16

ஆதலாலனவிரும்மென்னருளினுற்கெதியுண்டானீர்
மாதரீரும்மைமைந்தர்மகுணர்தாமென்கல்செய்யார்
போதுமினென்னலோமெம்புனிதனைப்போற்றிசெய்தே
யோதனமளித்துமாதர்சாலையையுற்றபோழ்தின். 17

மறையவர்சிந்தைசெய்துஞானம்வந்துறுதலாலே
யிறையவனந்தன்மைந்தனுமெனவறிந்தாரேக்கி
யறைமறைவேள்விதோன்றுமனலுறயாகுதிச்செந்
நெறியலனுலகந்தானுய்கின்றவனிவனேவன்றே. 18

சோதியென்றறியாதந்தோவெள்கியாந்துயரமுற்றோம்
வேதநூலறியார்செய்யும்விரதங்களறியாரேழை
மாதராராதியென்றேயறிந்துவான்சதியைப்பெற்று
ரோதியாங்குங்குமங்கள்சுமந்திடுங்கரமேயொத்தோம். 19

என்றவர்சிந்தைநொந்துதுயரமோடெதிரேசென்று
மன்றலங்குழலினுரைமகிழ்ச்சியோடினிமைபேசி
யொன்றினுரவருந்தாமுமுலகமீரடியாற்கொண்டு
நின்றவன்றுணைவரோடுநிறையுமோதனத்தைப்பார்த்தான். 20

நறுமலர்க்குழலினுர்கணண்பினுற்கொணர்ந்துதந்த
வறுசுவையடிசிலெல்லாந்துணைவரோடருந்தியைய
னிறையுநீர்பருகியாவினிரைகளோடணுகியாயர்
மறுகினிலெய்திநந்தன்மனைதனில்வைகும்நாளின். 21

சிந்தையந்திப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-3018.

---

## 40-வது, கோவர்த்தனகிரிப் படலம்.

---

சுரர்பதிவிடுப்பவேழுமுகில்சொரிந்திடவேநோக்கி
வெருவியபொதுவர்மாதர்மேவுமானிரைகள்வீயா
தொருகையாலுலகமெல்லாம்புகழ்ந்திடவும்பரோங்க
வரையினையெடுத்துக்காத்தமாலினைவணக்கஞ்செய்வாம். 1

அயத்திற்சைவலமேபோலவகத்தடர்பாவமெல்லாம்
பயத்தின்மண்ணகற்றுந்தேற்றன்விதையெனப்பரமனுமங்
கயத்திடர்கயத்தினெய்தியவன்களைந்ததுபோல்நீக்கு
முயத்திடத்துடனேநெஞ்சேயுலகளந்தவனைப்போற்றாய். 2

இந்திரன்தனக்கெல்லோரும்பூசனையியற்றுங்காலம்
வந்திடநந்தகோபன்மகிழ்ச்சியாலாயர்தம்மைத்
தந்திடுந்தண்டுலங்கள்சரியிலாமுற்கமாட
மிந்துவினவிர்போல்வெண்ணைததிநிறைபால்களென்றான். 3

ஆயர்கோன்கூறலோமொயிரங்கண்ணினன்றன்
றாயபூசனைகட்கெல்லாந்தொடங்கலும்நந்தன்றன்னை
மாயவனோக்கியீதுமந்திரநூலோர்வல்ல
நேயமாமுலோகிதம்மோகிகழ்த்துதிதெரியவென்றான். 4

மைந்தன்றன்மொழியைக்கேட்டுமெகிழ்ச்சியோடாயர்கோனு
னந்தனதெல்லாமையாநாமுறைவனங்களெல்லாங்
கந்தரம்பொழியவேண்டிக்கருணைசெய்தருளுந்தெய்வ
மிந்திரனுதலாலேயவற்கிடும்பூசையென்றான். 5

தந்தைதன்னுரையைக்கேட்டுத்தாமரைச்செங்கண்மாய
னெந்தைநீயறிகிலார்போலிஃதெனக்கருமஞ்செய்தாய்
தந்தமுன்வினையினாலேதருமபாவங்களெய்து
மிந்திரனமக்குச்செய்யும்நலனெனச்செய்வாயென்றான். 6

கான்படர்புல்லைமேய்ந்தாக்கறந்திடும்பாலேபோலத்
தான்செய்தநீதிதானேதருந்தருமங்கடன்னை
வான்பொழிகாலம்வந்தாற்றடுப்பனோவானோர்வேந்த
னோன்பினியவற்குவேண்டாம்வேறியானுவலக்கேண்மோ. 7

வேறு.

காவெத்தனையதன்மீதுறுகனியெத்தனைவாசப்
பூவெத்தனையடர்ந்தேபடர்புல்லெத்தனையிவைமே
யாவெத்தனையதன்பால்கொடுநாம்வாழ்குவததனாற்
கோவர்த்தனகிரியேநமக்கிதமாங்குலதெய்வம். 8

இயல்பாலளித்திடும்பாலனவருக்கமிவையெல்லா
முயவானுறுகோவர்த்தனகிரிதேவதையுருவா
யயில்வாரவைகாண்மின்னெனவறைந்தேயதற்கெல்லா
முயல்வீரெனநந்தன்முதலோர்நன்றெனமொழிந்தார். 9

விதமாகியமலிதண்டுலமிகுமாடமுமூறற்கந்
ததிபாலிழுதுடனேயுயர்சகடங்களில்நிரைத்தார்
மதியானனமடவார்திரள்மலர்சந்தனமேந்தி
நதிநீர்விழுகோவர்த்தனகிரியெய்தினர்நண்பால். 10

மலைமேலுறநீர்விட்டனர்மலர்சந்தனநிரைத்தா
ரிலைமேலனவருக்கம்பலவரைபோலெதிர்குவித்தே
நலமேவியததிவெண்ணைகணறுநெய்யிவைபடைத்தார்
வலமாயுயர்கோவர்த்தனகிரிசூழ்ந்துறவந்தார். 11

மாலன்னையிராமன்னவன்மாதாவுயர்நந்தன்
சீலம்முறுபொதுவொர்திரள்செவித்தேவணங்கிடலுங்
கோலம்முறுகோவர்த்தனமுருக்கொண்டனவெனக்கை
நாவின்னனமெல்லாநுகர்ந்தானாரணனம்மா. 12

கிலமீதினிற்றொழுமாயர்கள்குழுவோடிவனின்றே
மலைமேலுயர்தெய்வம்மெனக்கரங்கள்கொடுவாயி
னிலைமேலமரனம்பாறயிரெல்லாமெடுத்துண்டா
னலைவீசியதிருப்பாற்கடலரவிற்றுயில்மாயன். 13

சீராயமர்கோவர்த்தனகிரிதேவதையுருவா
யோரார்கரநாலாலனமெடுத்தேயருந்தியதால்
பாரீருயர்நந்தன்மகன்பகர்சொற்பழுதாமோ
வாராய்ந்திடின்வரையேதெய்வமாகண்டலனன்றே. 14

என்றேயிவைமொழிந்தாயர்களிலங்கும்மடவார்கள்
குன்றாகியகோவர்த்தனமிசையிற்குழுமித்தாங்
கன்றாநிரைமேயக்கடிமலர்ச்சோலையினுவந்தே
யன்றாவிலையமர்ந்தானுடன்மகிழ்ந்தாண்டமர்வேலை. 15

வேறு.

இந்திரனதைவானுயரெனக்கிடுமென்னமெல்லாம்
நந்தன்றன்மைந்தன்கூறும்நலனிலாவுரையைக்கேட்டு
வந்தனைசெய்துகுன்றைவலம்வந்தேயளித்தின்றென்னை
நிந்தனைசெய்தாரென்னநெருப்பெழக்கனன்றுநக்கான். 16

தூயதாமனமெனக்கின்றிடாததுன்மதியாரான
தீயரானிரைகள்மைந்தர்சேயிழையார்களெல்லா
மாயவேயூழிக்காலத்தெழுஞ்சமவர்த்தகப்பே
ராயமாமேகந்தன்னைத்தனைவிடுத்தறையலுற்றான். 17

சூழ்மணிமாடம்வீதிதுலங்கியவாயரெல்லாம்
வாழ்விருந்தாவனத்தின்மடிந்திடவானினேகி
யூழிகாலத்தில்நீதான்பெய்யுமுக்கிரத்தினோடே
யேழுநாளிடைவிடாமற்பொழிதியென்றியம்பினானால். 18

ஆயிரங்கண்ணன்கூறிவெகுள்தலுமாயர்வைகுந்
தூயநற்பதியையெல்லாஞ்சூழ்ந்துவான்கருகிச்சண்ட
வாயுவந்தறையமின்னியிடித்துவானவர்களஞ்சத்
தீயவல்லரக்கர்தோற்றமென்னவேதிரண்டமேகம். 19

தரணியெண்டிசைகளெங்கும்வயங்கிடத்தாங்குகின்ற
வரவின்வெம்படம்நடுங்கவலசிவெங்கரிகளோட
வரையினம்பிதிரவெண்ணில்மராமரம்பரிந்துவீழச்
சொரியுநாரதரமின்னியிடித்ததுகாலஞ்சூழ. 20

ஆவினம்நடுங்கியோடஆயர்களலறிவீழக்
கோவியர்குழவியோடுங்குலைந்துமெய்யயர்ந்துபாறக்
காவினமொடிந்துசாயக்கரிகரம்போன்றதாரை
தூவிவானேறவீழச்சொரிந்தனவெழிலியெங்கும். 21

நந்தனுமசோதைதானும்நடுங்கிமெய்நாவுலர்ந்தே
வந்திடரோகணிப்பெண்மயங்கினன்மகளிரெல்லாம்
நந்தினமந்தோவென்றுகம்பலைநண்ணவாய
ரெந்தையுன்சரணமென்றுண்டிறைஞ்சிடவிறைவன்சொல்வான்.

புரந்தரன்சினத்தினேவப்பொழியுஞ்சீமூதமெய்து
மரந்தைநீரொழிதிரஞ்சலென்றவர்க்கருளியையன்
கரந்தனிற்கோடற்பூவையேந்தியகாட்சிதோன்றப்
பெருந்தடவரையைநொய்தினெடுத்தனன்பெருமையோங்க. 23

வேறு.

உயர்ந்தகோவர்த்தனகிரியையோர்கையா
லயந்தடவரைமிசைபுரளவாயர்கள்
பயந்திடும்பருவரலொழியப்பாருளோர்
வியந்திடவேந்தினன்விண்ணுளோர்தொழ. 24

பருவரையேந்தியபரமனாயரைத்
தெருமரலொழிந்திவண்சேர்மினென்றலு
மரிவையர்பொதுவரானிரைகள்கன்றுகள்
வெருவரலொழிந்தவண்விரைவினெய்தினர். 25

தந்தையும்தாயரும்விரைவிற்சார்ந்தனர்
சிந்தையினுவந்துவந்திராமன்சேர்ந்தனன்
மைந்தனின்றேந்தியவரையைநோக்கியே
புந்தியின்மகிழ்ந்திடப்புனிதன்கூறுவான். 26

வேறு.

சிறியனென்றென்கைக்குன்றம்வீழுமோவென்றுசிந்தை
மறுகிடவேண்டாமிந்தமால்வரைவானோர்க்கெல்லா
மிறைவனினதிகம்நொய்தினென்கரத்திருக்குமென்று
மறிதிர்நீரளித்தவன்னமருந்தியதெய்வமென்றான். 27

என்றவர்க்கிவைமொழிந்தேயிளகிலாமுறவரேன்றக்
குன்றினையேந்திநின்றான்கோவலக்குரிசிலம்மா
வன்றொருகுழவியாகியண்டங்கள்வயிற்றுள்வைத்தா
னின்றவன்வளர்ந்துநின்றலொருவரையேந்தலானே. 28

பொடிபடமரங்களெல்லாம்பொறியுகவரையின்மீதின்
வெடிபடுமண்டமென்னவெணில்மழையேறுவீழக்
கடகரிக்கரம்போல்வீழுந்தாரைகொள்மாரியோடு
மிடைவிடாதேழுநாள்கள்பொழிந்தனவெழிலிமன்னோ. 9

நன்னெறியறிந்தேயைந்துபுலன்களையடக்கிநாவிற்
றன்னிகரிலாதசோதிதன்பெயரோதுவாரை
மூன்றுறுபிறப்பிற்செய்ததீவினைமுடுகினாலு
மன்னிடாவாறுபோலிம்மாரியால்மெலிந்தாரில்லை. 30

ஊழியிற்பெய்யுமேகமேழுநாளோய்வில்லாம
லாழியைநிகர்த்துவெள்ளமலையுறப்பொழிந்தபின்னர்
வேள்வியைநெறியிற்செய்தவேதியர்தம்மையூழாற்
சூழ்வினைமாய்ந்ததென்னவகன்றனதோற்றமின்றி. 31

துளிகளுமின்றிமேகமொருவிடத்தூயவானம்
வெளியுறவிரவிதோன்றிவிளங்கிடவாயர்மாத
ரளவிலாமகிழ்ச்சியெய்தியாவொடுமெலக்குன்றைக்
களவினெய்யுண்டான்வைத்துக்கவினுறநிற்குங்காலை. 32

கெருடகாந்தருவர்சித்தர்வித்தியாதரர்கள்கீத
வரிவையரியக்கரொப்பில்கின்னரரளப்பிலாதோர்
தெரிமலர்சொரிந்துதேவதுந்துமிமுழங்கியாடிப்
புருடவுத்தமனேயென்றுபோற்றிசெய்தார்களன்றே. 33

பருவமோரேழுதன்னினேழுநாள்பருப்பதத்தை
ஒருகையினேந்திநின்றவொருவனையுணராதேயான்
தெருமராலுற்றுச்சிந்தைகலங்கினேனென்றுதேவ
ரருமறைமுனிவரோடும்வலாரிவந்தறையலுற்றான். 34

மாரியின்மெலிந்திடாமலேழுநாள்வரையையேந்து
மாரியனீயேயென்பதறிகிலேனண்டம்பூத்த
வேரியங்கமலத்தோன்றன்றாதையேவினையேனந்தோ
பாரிடைநந்தகோபன்பாலனென்றெண்ணினேனால். 35

காமனுயிரங்கண்ணாலேகாமவேடனைத்தந்த
வாமனனெழிலைநோக்கியிறைஞ்சியேமண்ணினின்று
பூமனுவிலகுதந்தபுனிதனேநூற்றுப்பத்து
நாமனேயடியேன்செய்தநவையினைப்பொறுத்தியென்றான். 36

பிற்குணத்தினர்கடம்மையீசனுமென்றும்பேசித்
துற்குணமகற்றுவாய்நீசுருதிநீசோதிநீயே
சிற்குணமானாய்நீயேதிக்குணமிரண்டுநீக்கி
முற்குணமானாய்நீயேமூவுருவாயதேவே. 37



என்னைநீவிபவந்தன்னுளிருத்தின[illegible]னாலே
யுன்னையானறிந்தேனில்லையும்பரி[illegible]னெழிலியுண்மின்
மின்னியேமறைந்தாற்போலவெளி[illegible]செய்வைமறைப்பைமீள
வுன்னரிதாகுஞ்சோதியெளியையபோ[illegible]னிற்பாய். 38

ஆதலினடியேன்செய்தபிழைபொறுத்தருடியென்ன
மாதவனிருபதத்தின்வணங்கியேவலாரிநின்றான்
நீதகல்காமதேனுவந்தடிவணங்கித்தேவா
போதயன்பணியால்வந்தேன்புனிதனேகேட்டியென்றே. 39

மலரயன்மொழிவானெந்தைமண்மிசைநின்றனீயுன்
முலையுறுபாலினாலேமஞ்சனமாட்டிமூவா
நிலையுடையானுக்கோத்தநாமநீநிகழ்த்துகென்று
னலையுறுபயோததிக்குளமர்செல்வவென்றதேனு. 40

நவமணிக்கொம்பில்வாலிற்றாளினிற்கழுத்தினண்ண
வுவமையின்மேனியோங்கவுந்துதன்முலைப்பாலாலே
புவியினினனகனைபுயலைமஞ்சனநீராட்டித்
தவர்மறையறையப்பேரிதுந்துமிதழங்கிற்றம்மா. 41

தேனுவின்முலைப்பாலாலேசிறந்திடுவானைநோக்கி
யானையிற்றிலதமாகியமரயிராபதந்தான்
வானதிநீரைப்பொன்னாற்மணிக்கும்பக்கலசத்தேற்று
மானவன்மேனியெல்லாமஞ்சனமாட்டிற்றன்றே. 42

ஆவினுக்கெல்லாமேலாமழகியகாமதேனு
பூவினிற்றொடைபொன்னாடைபுதுமணியிழைகள்சாத்திக்
கோவினைக்காத்ததாலேகோவிந்தநாமந்தன்னை
நாவினால்நவின்றுபட்டங்கட்டியநலன்கள்மேவ. 43

பேரிமாமுரசுசங்கஞ்சச்சரிபிரளையத்தி
னாரவாரங்களென்னவறைந்திடவுயர்ந்ததேவர்
சீரிதாமலர்கவேத்தேனுவும்வலாரிதானும்
பாரினில்வணங்கியேகப்பரமனங்கிலங்கிநின்றான். 44

ஆயர்கோனசோதைமங்கையுரோகணிராமவண்ணல்
மாயனைத்தழுவிக்கொண்மேகிழ்ந்தனர்மாதரோடும்
நேயமாம்பொதுவரெல்லாம்துதித்தனர்நிரைகளோடுந்
தூயமாபதியிற்புக்கித்துலங்கியாண்டமருநாளின். 45

கோவர்த்தனகிரிப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - 3063.

---

## 41-வது, வருணப் படலம்.

மந்தரவரையின்வெய்யவாசுகிதன்னைவீக்கிச்
சிந்துவைக்கடைந்துதூயவமுதினைத்தேவர்க்கெல்லா
மிந்துவினுதலியாயவரிவையாய்ப்பகுந்தாண்டீய்ந்த
செந்திருமகுணன்பாதந்தொழுமின்செய்வினைகடீர. 1

ஏருறுமிரவிதோன்றிற்றுவாதசியில்லையென்றே
பாரணைமுந்திச்செய்வான்பருதிதேரெழுவமுன்னே
நீரினிற்படியலோடும்நிகரிலாவருணன்றூதர்
சேருறநந்தன்றன்னைப்பற்றித்தம்முலகிற்சேர்ந்தார். 2

நதியினீரதனின்மூழ்கும்நந்தனைத்தேடிக்காணார்
பதியினிற்புகுந்தேயுற்றதுரைசெய்வார்பகரக்கேட்டு
விதிகொடிதந்தோவென்றுவிழுந்தழுந்தசோதைவிம்மித்
ததிகளவாவொனைத்தழுவிநின்றரற்றினளால். 3

மைந்தவுன்றாதைபோனான்வாழ்கிலேனுயிரைமாய்ப்பே
னெந்தைநீதனியனானையென்றென்றேயிரங்குவாளோ
டுந்தியின்மலரோன்றன்னையுதவினோனழுதுதேறித்
தந்தையைத்தருகின்றேன்யான்றவிர்துயரென்றுசொன்னான். 4

சங்கொடுசக்கரம்வாடண்டொடுசார்ங்கந்தோன்றச்
செங்கதிரொளியேயேலச்சிறந்திடுங்கிரீடந்தோன்றப்
பங்கயமலரலர்ந்துபடர்ந்திடக்கவின்கொண்டோங்கு
மங்குல்போலெய்தினின்றான்வருணன்மாபதியின்மாதோ. 5

கண்டனன்வருணனீலமுகிலினிற்கமலம்பூத்துத்
தண்டுளவணிந்துவானின்சசியொடுமிரவிதோன்ற
மண்டனில்வந்ததென்னவயங்கியமாயோன்றன்னை
யெண்டவர்தொழும்பாதத்தினிறைஞ்சிநின்றேத்தினானல். 6

ளினமாமலரின்மீதினான்முகன்முதலோரியார்க்குங்
களகணுயுலகமெல்லாங்கடந்துமீவிரசைமேற்பே
ரொளியுளேயுறையுஞ்சோதியொருவர்க்குமகப்படாதா
யெளியைபோலென்முன்னிற்கவெத்தவஞ்செய்தேனென்றான். 7

சிந்தைசெய்துலகமெல்லாந்திருத்தியேயவற்றுக்கெல்லாந்
தந்தையாமெண்கணான்றன்றந்தைநீயுன்னைப்பெற்ற
நந்தனுந்தந்தைதனைநதியினென்றூதர்தந்தா
ரெந்தைநீபொறுத்தியென்றேயிருபதத்திறைஞ்சினானல். 8

பன்மணிவருக்கத்தோடும்பாசிழைவெண்பட்டாடை
நன்மதிநிகர்த்தசங்குதரித்தநாரணன்முன்வைத்து
மன்மதற்றந்தாயுன்றன்றந்தையோடெய்திவாழ்தி
யென்மதிமறவாதன்றாளேத்திடவருள்செய்யென்றான். 9

சிந்துவுக்கிறைவனீய்ந்தசெழுமணியிழைகளாடை
யிந்துவைநிகர்த்தசங்கமேந்தினனணிந்துகொண்டே
நந்தனுந்தானுமெய்திநன்மனைபுகவசோதை
சிந்தையினுவந்துவந்துசிறுவனைத்தழுவிக்கொண்டாள். 10

நந்தன்றன்மனைவிதன்னோடுறைகுவானாரமூழ்கிச்
சிந்துவுக்கிறைமுன்றன்னைத்தூதுவர்சேர்த்தவாறு
மைந்தனங்கண்ணனெய்திமாலுருவானவாறு
முந்திவந்திறைஞ்சிநின்றண்டெதிமன்மொழிந்தவாறும். 11

மற்றவனுற்றதெல்லாமுரைத்திவன்மைந்தனென்று
பெற்றனம்யாமேயென்றுமுரைத்தல்பேரிழுக்கதன்றி
நற்றவக்கற்கன்முன்ஞள்நவின்றனனிவனேயண்ட
முற்றுமானவனுமென்றுமொழிந்திஞ்சொல்லுக்கேற்க. 12

விடமுலைப்பாலையீய்ந்தவெய்யவளுயிரையுண்டுங்
கொடியவச்சகடுதைத்துங்காவியாசுரனைக்கொன்றுங்
கடியவெங்கன்றெறிந்துங்ககத்தின்வாய்பிளந்தும்பாரி
னெடியதாய்க்கிடந்தபாம்பினெஞ்சினைப்பிளந்துநின்றான். 13

காளியன்பணங்கடோறுங்காலினல்மிதித்துக்காட்டி
நீளுமால்வரையைக்கையினேந்தியிங்கிலத்தின்மீதி
ஞள்களேரேழும்நின்றநாமெலிந்திடாதவண்ணங்
காளமாமேகம்பெய்யுங்கல்வருடத்தைக்காத்தான். 14

ஆதலாலிவனையீன்றவன்னைநீயத்தனுமென்
றோதுபேதைமையையோவியொளிநிறச்சோதியோன்றன்
பாதமேற்பணிந்துயர்ந்தபதந்தனிலடைவோமென்றே
மாதவன்மலர்ப்பாதத்தின்வணங்கிநின்றிவைகள்சொன்னார். 15

அந்தமுமாதிதானுமளப்பரிதாயவுன்னை
மைந்தனென்றெண்ணியாங்கள்மதிமயக்குற்றோமாகி
லெந்தைநீயுயர்ந்தவீடீண்டெமக்கருளென்றேயேத்துந்
தந்தைதாய்நயனங்காணத்தன்னுருவாகிநின்றான். 16

நீலமாமேனிகண்டார்நேமியுஞ்சங்குக்கண்டார்
நாலுகைவனப்பைக்கண்டார்நலந்திகழ்கிரீடங்கண்டார்
சீலமாந்திருவைமார்பிற்சிறந்திடக்கண்டார்பொன்னின்
கோலமாராடைகண்டார்குனிவில்வாள்கதைகைக்கண்டார். 17

துளவணிமார்பினூரந்துலங்கியவெழிலைக்கண்டார்
தளவலர்நகையைக்கண்டார்தாள்களினெழிலைக்கண்டார்
களவினில்வெண்ணெயுண்டபவளவாய்க்கவினைக்கண்டா
ரளவிலாக்கருணைநல்குமழகியநயனங்கண்டார். 18

குண்டலங்கதிர்களேலக்குழையினிற்குலாவக்கண்டார்
மண்டலவதனங்கண்டார்வளைவிலின்புருவங்கண்டா
ரண்டமுன்னுண்டான்மேனியழகுகண்டமிர்தந்தன்னை
யுண்டவர்போன்றுகண்ணிற்புனல்கொளவுரைக்கலுற்றார். 19

உயர்ந்தறைக்கப்படாயையுரலினிற்கட்டினோமியா
யியல்பினேமுலகுண்டாயைமண்டின்றாயென்றுசொன்னோஞ்
செயலிலாமுடையவுன்னைவெண்ணெயுண்டிருடனென்றோம்
பயமிலாமாயவுன்னைபயப்படென்றடிக்தோமென்றார். 20

எந்தையும்நீயேயானுயெமக்குநீமகவுமானு
யந்தமுநடுவுமானுயாதியுநீயேயானய்
செந்திருநீயேயானுய்சிறந்தவள்கணவனுை
யுந்தியின்மலரோனுனுயுருத்திரமூர்த்தியானுய். 21

என்றவர்துதித்திறைஞ்சியெமக்கருள்கதியையென்ன
வன்றுலகுண்டசோதியளியினுலவரைநோக்கி
யொன்றியதவத்திரட்டவ்சுக்களிலுயர்ந்தோரன்ரே
வென்றுமீறிலாதவீட்டையீய்குவன்பின்னரென்ருன். 22

ஆயவையெல்லாங்கூறிஆதியாமுருவைநீத்து
மாயையாலவர்கடன்னைமயக்கியேமைந்தனுகித்
தூயவர்முன்னின்ருனைச்சோதியென்றறிகிலாராய்ச்
சேயெனவெடுத்தணைத்துச்சிறந்தினிதிருந்தாரம்மா. 23

வருணப்படலம் முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் - 3086.

---

## 42-வது, குழலூது படலம்.

---

அரியுளைழயுழுவைநாகமரவொடுபெறவையாவி
னிரையுடனினிதுகேட்பநிறைமரமதக்கள்வீழ்ப்பச்
சுரர்மடவார்கணையத்துலங்கியதொறுவமாத
ருருகவேயூதிநின்ருேன்புகழினையுரைத்துய்வோம்யாம். 1

இந்திரையிலங்குமாயர்பதிதனிலெழில்கொளாயர்
சிந்தையின்மகிழவாவினிரைகளுஞ்சிறந்துதோன்ற
நந்தனுமசோதைதானுநலஞ்செறியழகுகொண்ட
மைந்தனேடினிதிருந்தார்வந்ததுவசந்தகாலம். 2

தூயமாவசந்தகாலந்தோன்றிடத்துணைவரின்றி
யாயர்தம்பதியையோவியஞ்சனக்கொழுந்துபோல
வேயிசைவாயினூதிவிண்ணவர்மகிழ்ந்துபோற்ற
மாயவன்யமுனையாற்றின்வண்மையைக்கண்டான்மன்னோ. 3

அலையொலிகறங்கவீசியோடியயமுனைநீரி
னிலகியவாளைபாயவெழிற்கயல்சேல்கவுள்ள
நலனுறவரால்கடாவநந்தினம்பரந்துமேய
நிலமிசைவயங்குமந்தாகினிதனைநிகர்த்தமாதோ. 4

வேறு.

மதுநுகர்ந்தழுந்திமயங்குதலறிஞர்மதியலவென்றுரைப்பனபோ
லுததியினலரியெழுபொழுதவணினுயரரிமுரன்றிடமுன்னுட்

கதிர்மறைபொழுதிற்குவிமலர்களினக்கள்ளுணுமளியதிறொலிகேட்
டிதழுறமலர்வாய்குடைந்தெழுந்தனவாலியல்பர்சொல்மறுதவரெனவே.

கங்குலிற்பாத்தைசலவியினழுந்திக்கதிரவன்வரப்பொதுவியரா
மங்கைதன்னிடத்திற்செலவவள்சினத்தாண்டடைத்தவாசலினமர்பவன்
றிங்கள்சாவிருளிற்குவிமலர்களினத்தேனுகாரியிரவொருவத் [போற்
தங்குமம்மலர்விட்டகன்றலர்குவிந்தகுமுதத்திற்சார்ந்தவணிழுந்த. 6

செங்கமலத்தொண்பொகுட்டினித்திலங்கள்சிதறிடவுமிழ்ந்திடுபனில
மங்குறத்திடவீழ்நறவம்வெண்ணளினத்தான்றிடவதனனப்பேடை
பொங்கியமதுவாலகன்றதன்றூளாற்பொருந்தியவாநவநீத
மங்கியினுருக்கிவிழவெள்ளிவள்ளத்தேற்றிடுமெரிவையைநிகர்த்தே. 7

விரியும்வானளினத்தமரனச்சேவல்விழுமியபெடையின்மீதேறிப்
பிரிவிலொண்கலவிவிளைத்தனபோன்றபீழையாற்பேட்டனமதுகண்
டெரியிடைவிழுந்ததெனவலருஞ்செங்கமலத்தினிருந்தனவரால்கள்
பரவியவ்வனலையவிப்பபோலதனிற்பயமுறவெழுந்துதாவியதால். 8

வாலொளிர்நளினங்குரண்டமென்றஞ்சிவகுலிபோய்வளையினையணு
கிச், சாலவும்வெருவியயத்தினுளவைதான் சார்ந்ததென்றகன்றுகூம்பா
மற், பாலடைந்தவையும்பணியெனப்பயந்து பயமொழிந்தேதுள்ளிவானி
ன், மேலெழுந்தழலின்மிடைந்தவெள்ளியைப்போல் விரியுஞ்செங்கமல
த்தின்வீழ்ந்த. 9

வலமும்வாமமுமாங்ககன்றபங்கயமும்வானுறநளினமுமலர
வலர்தரும்பானலயத்ததினுப்பண்வளர்ந்தவாறுசுகனலைப்ப
விலகியபக்கத்திருமலரினுந்தானியங்குவதிராகுபார்க்கரனைக்
கலைநிறைகுபேரனுடனுமோர்பக்கந்தனிற்கலந்ததுதனைக்கடுக்கும். 10

கேடகங்கதிர்வாளயில்கணைபலவுங்கிளர்ந்தவொணதிருறமவர்தங்
நீடியகதுப்புநயனமானனம்வாய்நிகரிலிகாதறத்துணித்தே
ஓடுறகமடம்வராலுகள்வாளையுலப்பில்சின்மீன்விசைத்தறைய
மூடுமைசவாலங்குவளைசெங்கமலங்குமுதநாளிகமுறிந்திற்ற. 11

விதுநிறைகலையுற்றதனிடைக்களங்கமுறவுந்தான்விளங்கியதெனவே
மதுநுகராறுகாவிவர்ந்தவெண்ணளினமலிந்திடவயங்கியமுனை [த்துப்
ளதுகுலத்தின்றவனெழிலிபோல்வடிவாமெழிலினையெண்ணில்கண்விழி
புதியசெங்கமலம்விளக்கதாயேந்திப்பொலனுறநோக்கியபோலும். 12

நகையுறவதனம்வயங்கவேயெழிலார்நயனங்கள்களிப்புறநோக்கி
யகிலுறுபனிநீர்கணவன்மெய்குளிர்ப்பவங்கையால் விடுமெரிவையைப்போ
லிகழ்விலொண்பணிலமுமிழ்ந்தநித்திலஞ்சேர்கமலநீலோற்பலமிலங்க
மகிழ்மலர்நிறைந்ததிவலைமாலாகமணமுறவீசியயமுனை. 13

வயலுறுகளைவண்டடருநீர்க்கொடிகொடமர்ந்தலர்மலர்கடேமாமேற்
குயில்சுகம்நிறையத்தென்றறன்காலங்குலாவவேயாவிமீன்குதிப்பச்

செயலுறுமிவைவேள்சிலையதினுறுநாண்சிலீமுகம்காகளம்புரவி
வியல்புறுமிரதந்துவசமொத்திலங்கத்தரணிமானேந்தியதன்றே. 14

பொங்களிசிலைநாணெனவிளங்கனங்கன் சரம்படாப்பெதும்பைபூவ
ணையிற், றங்கியொண்கொழுநன்கலவியைவிளக்கச் சார்கெனக்காந்தனி
லிடைவாள், செங்கையைவிசைகாலவன்வலித்தெனவேசீகரமெறிதிரை
வமிழ்த்தும், பங்கயமலரைத்தருணநல்விபந்தன் றுதிக்கையாற்பற்றியே
விசித்த. 15

ஊடியமடவாளதரந்தன்வாயாலுவப்பொபெற்றவெங்கரத்தால்
மூடியவோட்டத்துடனுடன்படாதங்கலைபவடனைமூனிந்தெழுந்தே
சாடியதலைவனெனவயமிசையிற்றபனன்றன்சுடரினுல்முகிழ்த்த
வேடைக்குமுதந்தனையளிகுடைந்துநெறியிலாதெற்றியசிறகால். 16

திரையெனுங்கரத்தாலருக்கியமளித்துத்திவலையால்மஞ்சனமாட்டி
மரையிலையதனிற்சிதறுசீகரமொண்மரகதத்தாலமேற்றான
நிரைகொளாலாத்தியேந்தினநளினந்தீபமாய்நிகரில்வெண்கமலத்
தரியிசைபாடவனமசைந்தாடவரியையாராதனைசெய்த. 17

வேறு.

நாகமாமலகங்குந்தம்நாவல்மாதவிநரந்தை
பூகமாம்பிரம்வருக்கைகேசரமகிழ்பொற்கொன்றை
மாகமார்கோவிதாரங்குரவகம்வழைமந்தார
மேகமாராரந்தாழைபாடலம்விளங்குமன்றே. 18

கோகிலங்கூவக்குஞ்சோடஞ்சுகங்கொஞ்சவாடும்
கேகயங்கிளரவண்டுகின்னரர்போன்றுபாடப்
பூகமேல்மிழற்றும்பூவைபொலிந்திடக்கபோதமெல்லாம்
நாகமேற்றிகழபூகம்நன்மரந்தோறுந்தாவ. 19

இனையனவயங்குகின்றவெழில்விருந்தர்வனத்தின்
மனமகிழ்ந்தினிதிருக்குமணிவண்ணனுறையும்வேலை
தினகரன்குடபாலெய்திமறைதலுந்தீரவொண்ணு
வினையெனக்கங்குலெய்திவிளைந்தனவுலகமெங்கும். 20

வேறு.

தலைவன்விட்டகலவிடருறுமவள்போற் றபனன்போய்மறைந்திடங
ளின, மலர்குவிந்திடத்தற்பிறிந்தநாயகன்றன் வரமகிழ்மங்கையரென
வே, கலைநிறைமதிகண்டலர்ந்தனகுமுத மலையினைக்கண்டநற்சேவல்,
பொலனுறுபெடையின்றுயர்கினைந்தவைதா னலனுறப்பொதும்பிற்புக்க
ணைத்த. 21

வேறு.

இடரொரீஇமடவாணுனியிதழ்க்கதவடைக்கவாரஞ்
சுடருறவணிந்துதூயமுகந்துலங்கிடத்தன்கேள்வன்

வடிவுவந்தணைத்தமின்போல்வயங்குஞ்செங்கமலம்கூம்ப
வுடுமதியிலங்கக்கொண்மூவருவெனவளைத்தகங்குல். 22

உயர்தனிச்செங்கோலோச்சியுலகினையாண்டமன்னன்
பெயரவங்கற்றம்பார்த்துத்தீயவர்சூழப்பின்னோர்
தமையுடையரசனெய்தியவர்களைத்தள்ளிமேவுஞ்
செயலெனவிருளைநீக்கிச்சிறந்ததுகேழ்பாற்றிங்கள். 23

வியாளமேற்றுயிலைநீங்கிவெய்யவருடனேபாரிற்
சுயோதனன்மடிந்துவீழக்குந்திதன்சுதர்மேல்வைத்த
தயாவினால்மாயனெய்தித்தரணியிற்பிறந்தானென்றே
பயோததிபரந்துதேடும்பண்பெனநிலவுகாய்ந்த. 24

நிசியெலாமகலவானில்நிறைந்தெழுமமிர்தம்போன்ற
சசிநிலவெறிப்பவாவித்தண்மலர்வெறிகனாறத்
திசையெலாமிலங்கத்தென்கால்பையவேசிறந்தாண்டெய்த
வசையும்வண்பொழிலிற்கோட்டினவர்மலர்வாசம்வீச. 25

பொன்மலைவில்லியெண்கண்புனிதன்புத்தேளிர்நாத
னன்மதிமுனிவர்தூயநாகர்கள்சூழ்ந்துபோற்றத்
தன்மயமானவண்டமடங்கலுந்தானேயுண்டான்
மன்மதனாணநின்றான்மண்மகள்மகிழமாதோ. 26

வேறு.

பரிபுரங்கள்பாதமிசைக் கதிரைக்காட்டப் பசும்பொன்னினாடையுடைதிகழத்துய்ய, தரளவடமொடுதாமந்திவளக்காதிற்றயங்கியகுண்டலமலையப்பீலிப்பின்னல், சிரமிசையிற்கவினுறவேகேயூரங்க டிரண்டுயர்ந்தபுயமிசையினெழிலைக்காட்டக், கரமிசையின்வயிரமணிக்கடகமின்னக்கந்தற்பனெனக்கழைகொடுநின்றானால். 27

கரும்புருவம்நெறித்தெழில்சேர் கடைக்கண்ணோக்கிக் கண்ணபிரானூதுகுழற்கானங்கேட்டே, யரம்பையுருப்பசியொடுமேனகையிலங்குமழகுசெறிதிலோர்த்தமையோடனேகமாதர், கரும்பிரதமொழியினர்கள்வளைகள்சோரக் கலைநெகிழக்குழலவிழக்கடிதினெய்தி, விரும்புறவேநோக்கியுலைமீதுதைத்த மெழுகெனவேமெய்மறந்தங்குருகிநின்றார். 28

இருகரங்களிலங்கமழையெழிலிபோன்ற விறையூதுங்குழலமிர்தகீதங்கேட்டே, கெருடகாந்தருவருயரியக்கர்கேழில் கின்னரர்கிம்புருடரெழின்மிக்கதூய, வுருவுடையதும்புருநாரதர்கள்சித்த வித்தியாதரர்களும்வந்தெய்திக்கையின், மருவியகின்னரியிணையில்வீணைசோர மதிமயங்கிசசித்திரம்போல்நின்றார்மாதோ. 29

வடிவுடையமதனனெனவயங்குகண்ணன்வாயினூறுவேயினிசைசெவியின்வாய்ப்ப, அடவிதனிலழல்வளர்த்துவருந்திச்செய்யு மருந்தவங்களொருவியோகிகளுமொக்கக், கடலினூறுமமிர்தமகவவியிதெல்லாங் கை

த்திடவானமரர்களுங்கடிதினெய்தி, யுடலுருகியானந்தவாரிசோர வுறனோக்கிமெய்மறந்தோவியம்போல்நின்றார். 30

கோகிலங்கள்பிணிமுகங்கள்கபோதம்பூவைகொஞ்சுசுகமோதிமநீள் குரண்டம்நாரை, போகமிகுமன்றில்புதாவினங்கள் பார்ப்போடசுணப்புள்ளிவைகளெல்லாங்கடிதிற்புக்கே, யோகையுடன்சிறகுகுவித்தூற்றுநோக்கியுருகியிருகண்ணிமையாதிருந்த தூய, நாகமிசைநடித்தருள்வோன்வேயினூது நாதவிசையிருசெவியோர்ப்புற்றுணைந்த. 31

கருமுகிலஞ்சனநீலங்காயாம்பூவின் கவினிகராமுருவுடையகண்ணன்வாயின், மருவுகுழலூதவெழுநாதகீதமசோதியினமிர்தெனவேசெவியின்வாய்ப்ப, வரியநறுமலரினூறுவேரிதன்னையருந்துதல்விட்டெய்தியளிபாடாதாடா, திருசிறகுவிரித்துயர்வானசையாதேகாதெழுதியசித்திரம்போலவிருந்ததன்றே. 32

நாகரிகனானவள்ளலூதுகின்றநற்குழலினெழுநாதகீதங்கேட்ட, சுகரம்பஞ்சானனஞ்சார்த்தூலங் கைமாத்துலங்கியவாவிகமயிடமெண்குசீறி, மோகரத்தினெய்தாளிகுருளையோடு முசுகுசினமொழிந்துகண்களிமையாதாகிச், சாகரமாய்ச்செவிநெறித்தேயுருகிநிற்பச் சற்பங்கள்படம்விரித்தாடாமனின்ற. 33

காதினிற்குண்டலமிலங்கநெற்றிமீதிற் கஸ்தூரித்திலகவொளிகவினைக்காட்டச், சீதரன்றன்வாயினிசையேழுநாணச் சிறந்தகுழலூதவெழுநாதந்தன்னால், பாதவங்கள்மதுச்சொரியமலர்கள்வீழப் பரந்துகனியுதிர்ந்திடவேபணிவார்போலப், பூதலத்திற்பரமனின்றதிசையைநோக்கிப்பொலிந்ததமாலச்சர்கைவளைந்தமாதோ. 34

கானிலெழுநிலவெறிப்பத்தண்கால்வீசக் காவினறுமலர்வாசங்கமழக்கேழி, னானவெறியுறுமேனிதிகழ்கின்ற நாரணனூதும்வேயினாதங்கேட்ட, மானினங்கள்மேய்ந்தபுல்லுங்கடைவாய்சோர மகிழ்ந்திருகண்ணுலமையப்பார்த்துநிற்க, வானிரைகள்செவிநெறித்துமுலைப்பால்சோர வகங்குழைந்துகன்றினுடனோக்கிற்றம்மா. 35

மாயவன்றன்வாயினிடைவேயைவைத்து மகிழ்ந்தினிதினூதவெழுகீதங்கேட்ட, வாயர்மடவார்களெல்லாமுருகிநெஞ்ச மாவிதளர்ந்தேயொன்றுமறியாராகி, யேயெனுமுன்குழலோசைநெறியினெய்தியிடைதுவளக்கலைநெகிழவளைகள்சோரத், தூயகுழலவிழவிமைப்போதின்முன்னந்துலங்குபரமன்றனைத்தான்சூழ்ந்தாரன்றே. 36

கறந்தநிறைபாற்கலசந்தறையின்வையார் கவிழ்ந்துடையவெறிந்தோடிக்கடிதிற்சென்றார், சிறந்தவனமருந்துகரநீரிற்காட்டார் தியங்கிமனநடுமாறவிரைவிற்சேர்ந்தார், துறந்துதுயிலணந்தனுடன்பாறினார்கள் சோரொருவற்கிவெழுன்னே துளங்கித்தம்மெய், மறந்துமதிமயங்கிவல்லையேகினார்கள் மாலெழுவார்தமைத்தடுக்கவல்லார்யாரே. 37

வேறு.

பெருகியவன்பின்மாதர்பிறங்கிருங்கூந்தருழ
வுருகியமனத்தராகியோமெம்போதொருத்திதன்னைக்
கருகியசினத்தளாகியவளன்னைகடிதினெய்தி
யிருகரம்பிடித்தலோடிமெய்துமாறறியாளாகி. 38

சந்தன்றன்மைந்தன்பாதநல்ன்களைபினைந்துநைந்த
சிந்தையளுடலினுவியரியடிசேரநேரி
லந்தரத்தமரர்பூவின்மாரிகள்பொழியவான்ற
சுந்தரவிமானமேறித்துலங்கியகெதியிற்புக்கான். 39

செந்தழல்வளர்த்தெண்ணில்லாவருந்தவஞ்செய்தோராலுங்
கந்தமாமலரோனாலுங்காண்கிலாச்சோதிபாதஞ்
சிந்தனைசெய்யச்சிந்தைசிந்தையந்தியளாய்ச்சிரா
யுந்துநற்கதியைச்சேர்ந்தாளவளல்லாரோடிச்சென்றார். 40

வேறு.

காலிலணிநூபுரத்தைக்கையிற்பூட்டிக் கரத்தினுறமணிக்கடகந்தாளினிட்டார், நூலிடையின்மேகலையைக்கழுத்திற்சாத்தி நுண்டுளையினுரவடமருங்கிற்சேர்த்தார், கோலமுறுபொன்னுடைதலையிற்சூட்டிக் குழலிலணிதொடைகளெல்லாமரையிற்சூழ்ந்தார், மாலுறவேயின்னதென்றுமறியாதோடி மணிவண்ணன்மேனிகண்மெயங்கினூரால். 41

அலர்ந்தெழுந்ததாமரையின்மதுவையுண்ண வவாவுடனேயளியினங்களடைவபோல, நலந்திகழுந்திருமேனியையன்கைகால் நயனமுகம்வாய்மார்பில்நாட்டம்வைத்தே, தலந்திகழும்பிரசமுறுமீய்கள்போலத் தளர்ந்தனர்கள்பொன்னுடைதறையின்வீழ, வுலர்ந்தயர்மின்னார்களிருகைகள்கூப்பி யுத்தமவெம்மயல்தீரென்றுரைக்கலுற்றார். 42

புன்முறுவலாலாவிதளர்ந்தோமின்றன் புருவநெறிப்பால்மயலைப்போதப்பெற்றோம், நின்மலநின்கடைக்கண்ணினோக்கினாலே நிலையழிந்தோமெம்முயிர்கள்நிற்கும்வண்ண, முன்மணிமார்பழுந்தவெமையணைத்தியென்றே யுரைத்திடவேயோரொருத்திக்கொருத்தனென்ன, மன்மதனுமியவுருவமனேகமாகி மாதர்கடந்தோளணைந்தான்மாயன்மஃதோ.

இருளளகமவிழமலர்கமழவேர்வி னெழில்வதனமுத்தரும்பவிருகைமீதிற், சரிவளைகளொலித்திடநன்மணியால்மின்னுஞ் சதங்கையவிர்பரிபுரங்கடாளினார்ப்ப, வரையெனவேகதித்ததனத்தங்கராகம் வாசமுறுகுங்குமமுமுதிரவைவேல், பொருகயல்களெனுநயனம்பூசலாடப் போர்மதனனுணவணைத்தருளினனுல். 44

உருவுடையவுருப்பசிமேனகையரம்பை யொப்பிலாராயர்தங்கள்மடவாராகித், தரையிடையிற்பிறந்திலம்பாமென்றனைந்து தளர்ந்தமதனேவுமலர்ச்சாபகத்தால், விரகமுறவாடினர்கள்பொதுவர்மாதர் விளங்

கினர்கள்கலவியுறமதனான்மிக்குப், பெருமையுறமானந்தவாங்காரங்கள்
பெருகிடலுமறைந்தனனாற்பிரமன்றாதை. 45

மறைந்ததனங்கண்டுபின்னுமிழந்தார்போல மதிமயங்கிவாய்வெரு
விவாடினார்கள், நிறைந்தபொழில்வனமடங்கத்தேடினார்கள் நிலமிசையி
ற்காண்கிலராய்நெடிதுநேர, மிறந்தவர்போற்சோர்ந்தனர்களெழுந்தார்
மீள விறைவவெம்மையிகழ்ந்தனையோவகன்றாயென்றே, யறைந்தனர்க
ணாலியிருத்னத்தின்வீழ வரிவையர்களெல்லாருமயர்ந்துசொல்வார். 46

சுரிகுழன்மேல்மலர்த்தெரியல்சூட்டினாயே துணைமுலைமேற்றொய்
யிறனையெழுதினாயே, தரளவடமார்பழுந்தத்தழுவினாயே சரியிலாவாய
மிர்தின்சுவைதந்தாயே, பிரிகிலேனுனையென்றபேசினாயே பிறிதில்லை
யுனக்குநிகராரென்றாயே, யிரவிடையிற்றனித்தெனைவிட்டேகினாயே
யென்றுசொல்லுமாதர்பின்னரிவைசெய்தாரால். 47

இளமையுறுமொருத்தியுயரரிபோல்நின்றே யிலங்குமயிற்பீலிசிரந்
திகழவாயின், துளைகளுறவேயினிசையூதக்கேட்ட தோகையர்களிரும
ருங்குமுன்னுஞ்சூழ்ந்து, விளையுமயறீரவெம்மையணைத்தியென்றும் வித்
துருமவாயமுதமளித்தியென்றும், வளைகடிசழ்கரமுறத்தான்றழுவிமாய
னல்லனிவள்மங்கையெனமயங்கிச்சொல்வார். 48

தூதுரைத்துவருவதற்குச்செல்வாரில்லை தோகையரையேவிவிடி
லெமக்குமுன்ன, மாதரவாயவனெழிலைக்கண்டபோதங் கணைத்திடுவர்மீ
ள்வதில்லையதுவுமன்றிச், சீதளமாகியமதியுந்தென்றறானுந் தீயெனவே
வீசியிடச்செய்வகாணேன், மாதவன்றான்மறைந்தவனும்வாரானென்று
மயங்கிடமாமாயனிவைசெய்தானால். 49

மானவனுங்கொருத்தியுடனெய்தியுன்மேல் மயல்மிகுத்தேனென்
றுமலர்பறித்துச்சூட்டிக், கானிடந்தேகால்கள்நொந்ததென்று கழறு
மவடனைச்சுமந்துகடிதினேக, மீனைநகுவிழிக்கவின்கொளெனக்குநேரா
மெல்லியர்களில்லையென்றேயாங்காரந்தா, னானவளைவிட்டொருவவனு
ஞ்சோர்ந்தா ளரிதனைத்தாமாய்ச்சியர்கடேடினாரால். 50

மடந்தையர்கள்வனங்களெங்குந்துருவியோடி வாடிமனம்வருந்தும
வர்வண்மையாகிப், படர்ந்தகொடியங்குசம்பங்கயமிலங்கும் பரமன்றாட்
குறிகண்டார்பணிந்துசென்று, தொடர்ந்திடலும்பசும்புல்லாற்றோன்றா
தாகத் துளங்கிமிகச்சோர்ந்தவர்களெழுந்துகண்ண, னடந்திடவேவசு
தைமின்னினுரோமமாகி நலந்திகழப்பொடித்தனவோவென்றுநைந்தார்·

அடியெடுத்துத்தொடருமடவார்கள்மற்றோ ராயிழையாணடந்தேகு
மடியைக்கண்டே, யுடல்கனன்றிங்கெம்மை யெல்லாமொருவிக்கண்ண
னொருத்தியைக்கொண்டேகினனென்றுரைத்துப்பின்னர்,கொடியிடை
யாளடிச்சுவடுகாணார்மாயன் கோலமலர்த்தாளழுந்துங்குறியைக்கண்டு,
வடிவுடையான்மற்றவளைச்சுமந்துசென்றா னெனத்தம்மனமுருகிவாடி
னாரால். 52

தோகையர்கள்நம்மையெல்லாநீத்துக்கண்ணன் றுடியிடையாளொருத்திதனைச்சுமந்துபாரி, னேகினனுலென்றிரங்கியடியின்பின்ன ரெய்துமவரிளங்கொடிக்கங்கிறைவனன்பால், நாகமலர்செறிந்திருண்டகுழன்மேற்சூட்டி நலந்திகழவிருந்தபள்ளியறிந்துநைந்தே, யாகமெலிந்திவளென்னதவஞ்செய்தாளென் றறையுமவராழுதாற்றுமவளைக்கண்டார். 53

என்னேயிங்குடறளர்ந்தேயிரங்குமாறென் றிளங்கொடியாருரைத்திடலுமியம்புவாளாற், றன்னேரிலாதவரியென்னேடெய்தித் தையனல்லாயுன்மயலிற்றளர்ந்தேனென்றும்,புன்னுகமலர்பறித்தென்குழன்மேற்சூட்டிப் புயலழகனெனைச்சுமந்துசென் றுகானி, னென்னுகமெலிந்திடத்தானகன்றுபோனு னென்செய்கேன்றேழியர்காளென் றுநைந்தாள்.

அவளுடனுமாதரெல்லாமடியின்பின்ன ரடவியெல்லாந்துருவல்புரிந்தாண்டுகாணுர், தவளமணல்மலியமுனுநதியிற்சேர்ந்து தளர்ந்தவர்கள்கூடல்வளைத்தாவிநைந்தே, துவளுமவர்முன்னீலமேகமென்னத் துலங்குமணித்தாவடங்கள் மார்பிற்றேன்றப், பவளநிகர்வாயினிளமுறுவல்செய்து பரமபுருடன்றேன்றப்பணிசெய்தாரால். 55

பணிந்தெழுந்தமடவார்கள்கொங்கைமீதிற் பரிமளநற்சந்தனகஸ்தூரிவாங்கி, யணிந்தனர்களச்சுதன்றன்மேனியெல்லா மவரவர்க்காண்டொருவனெனவனந்தம்பேராய், மணந்துதையமிளிர்மலர்கள்குழல்மேற்சூட்டி மணிசூழ்ந்தமரகதம்போற்காவைச்சேர்ந்து, தணிந்திடநற்கலவிதனைத்தினமுஞ்செய்தான் ருனவற்றுளகப்படாத்தலைவன்றானே. 56

வண்டமரும்பூங்குழலார்மகிழ்ந்துசுற்ற மதனனெனவிலங்கியெழிற்கரத்தினுலே, செண்டுகொண்டுவிளையாடிக்குரவைகோத்துச் சிறந்தெழுந்தபொன்னூசலாடவாடி, யண்டரெல்லாந்திரண்டுமலர்பொழியவோங்கு மந்தரதுந்துமிமுழங்கப்பணிலமார்ப்ப, வெண்டவர்களானந்தவாரிசோர வேத்திடவேயினிதின்மகிழ்ந்திருந்தாளின். 57

குழலூது படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-3143.

## 43-வது, அம்பிகாவனப் படலம்.

சீராதிருவிக்கிரமாதிகழ்
மாதவாமதுசூதனனேயுயர்
யாதவாவெனவேத்தடியார்கடம்
பாதநுளிதத்தாற்பவநீருமே. 1

இம்பர்மாவனத்தேவியல்பாயது
செம்பொனுர்மதிட்கூலஞ்சிறந்தது
நம்பர்வாழுநற்கோயிலிலங்கிய
அம்பிகாவனமென்பதோராலயம். 2

தரணிமேவுஞ்சரசுவதியென
வுரைசெய்யாறுமந்தாகினியொப்பது
கரையின்வாளைகள்பாய்ந்திடக்கற்பக
நிரைகணீடுநெடும்பொழில்சான்றது. 3

ஆறுவாகனனன்பினமர்ந்தது
தோகைமாமயிற்சண்முகன்சூழ்ந்தது
மாகவானுறைமானகர்போன்றது
நாகம்பூண்கொடித்தவன்வாழ்பதி. 4

சரதநான்மறையோர்துன்னிச்சார்ந்திட
விரதமாதவர்சூழ்ந்துவிளங்கவே
துரிதம்வீழத்துவசமுமேறியே
யிரதமோடுவிழாவவணெய்திய. 5

ஆசைதோறுமவனியுளோரெலாங்
காசுலாமுலைமாதர்களித்திட
வாசமாமலர்சூழ்பொழில்வானுறு
மீசன்வாழம்பிகாவனத்தெய்தினர். 6

அந்தநாட்டனிலாயர்கள்சூழ்ந்திட
நந்தகோபனசோதைநலங்கிளர்
மைந்தன்பால்வண்ணன்மாதர்களின்புறுஞ்
சிந்தையோடம்பிகாவனஞ்சேர்ந்தனர். 7

பம்பைபேரிபணவமுழங்கிடக்
கொம்புகாகளங்கோடுதழங்கிட
வும்பர்மாமலர்சிந்திடவோடிய
வம்பிகாவனத்தம்பிகைபாகன்றேர். 8

சித்தர்போற்றிடத்தேவர்களாடநற்
பத்தரானந்தமாகிப்பரந்திட
வித்தகன்விடையேறியருளிய
சுத்தனன்பொழிற்கோயிறுலங்கினான். 9

கற்றைவார்சடையிற்கங்கைதோன்றிட
வொற்றைமான்மழுக்கையனுயரவே
பற்றலார்புரம்வெந்திடப்பார்த்தொளிர்
வெற்றியாமிறைவீற்றிருந்தானரோ. 10

தூபமெங்குநிறைந்திடத்தூயதாங்
தீபமாதர்களேந்திச்சிறந்திடச்
சாபமேவரையாக்கியதாணுவைப்
பாபம்வீயப்பணிந்தனராயரே. 11

வாசமாமலர்மாலைநிறைந்திடத்
தூசுமாமணமல்கச்சுகந்தமு
மீசன்மேனியிலங்கிடச்சாத்தியே
ஆசில்பூசனைசெய்தருச்சித்தனர். 12

இம்பராயர்கணந்தனொடெண்ணிலா
ரெம்பராவெனவேத்தியின்புற்றவர்
நம்பர்பாதம்பணிந்துநலனுறும்
அம்பிகாமலர்த்தாளிலர்ச்சித்தனர். 13

பருதிமேற்றிசையுற்றிருள்பாய்ந்திட்
வரிவைமாரண்டரன்னமருந்தியே
யிரவிடைத்துயில்போதெழில்நந்தனை
யரவுபற்றிவிழுங்கியதாமரோ. 14

வேறு.

கள்ளிருளதனிலெய்திநந்தனைநாகம்பற்றி
முள்ளெயிறதனாற்கவ்விவிழுங்கலுமுறையோவென்னப்
பள்ளிகொள்ளாயரெல்லாம்பதைத்தெழுந்தனர்களோடிக்
கொள்ளிகொண்டரவைச்சூழ்ந்துசுட்டனர்குழாங்களாகி. 15

கதித்தவெங்கொள்ளிகொண்டுநெடிதினிற்சுட்டபோது
பதைத்திலநந்தன்றன்னைவிட்டிலபகுவாய்வெந்தீக்
கொதித்திடவிழுங்கும்பாம்பைக்குறுகிநற்கண்ணன்காலா
லுதைத்தலுமவனைவிட்டேயுரகமாமுருவைநீங்கி. 16

இலங்கியகிரீடந்தோன்றவெழில்மதனிவனுமென்னக்
கலன்களும்வயங்கப்பொன்னின்கலிங்கமுநவிற்சூழ்ந்து
துலங்கியேநின்றான்றன்னைச்சுந்தரனினிதுநோக்கி
நலன்கொளும்படிவினாய்நீயாரெனநவிலலுற்றான். 17

வசிலாமரபின்விஞ்சும்வித்தியாதரர்க்குளேயான்
மாசிலாநாமமேசுதெரிசனனென்பேர்வானி
னாசையோரெட்டுந்தூயவிமானமேலமரவெய்தித்
தூசுநாண்மாலையாரந்துலங்கியான்றிரியுநாளின். 18

அருந்தவனங்கிராவின்றனையாரங்கீரனென்னும்
பெருந்தவத்தினரையென்மெய்க்கவினுறும்பெருமையாலே
யிருந்தவர்முனரினியீர்குரூபரென்றெள்கல்கூறத்
திருந்தியமறைகொணுவர்சிகியெனச்சினத்தாரன்றே. 19

எம்மைநீகுரூபரென்றீண்டெள்குமுன்கொடுமையாலே
வெம்மைசேரரவமாகிமேதினிவீழ்வாயென்று
மும்மையாங்காலமெல்லாமுணர்ந்திடுமுனிவராய
செம்மையோர்சபிக்கவேயான்சிகியுமிழ்புயங்கமானேன். 20

தரணியிற்கருங்கல்லானுடன்னை முன்னுருவமாக்குந்
திருவடிமெய்யைத்தீண்டலுற்றனன்வினைகள்தீர
அரவமாமுருவையோவியமரரிலுயர்ந்தேனைய
பரமனேபோற்றியென்றுவலஞ்செய்துபணிந்துபோனான். 21

ஆயவன்வணங்கித்தூயவிமானமீதெய்தலாலே
தூயனுநந்தகோபன்சுதன்றனைத்தழீஇயின்புற்று
ஞயர்களெல்லாமீண்டுந்தயின்றனரவனிமீதிற்
பாயிருளொருவவும்பர்பனிமதியெழுந்ததன்றே. 22

தூயவான்மிசையினிந்துதுலங்கிடவிராமனோடு
மாயவனுருவமெய்திவாயின்வேயினிதினூதி
ஆயர்கள்மாதரெல்லாமமைந்தபோதளகையின்கட்
டுயனுஞ்சங்கசூடன்சேர்ந்தவண்கரந்துநின்றான். 23

சீலமில்சங்கசூடனென்றவன்றிருடனாகிக்
கோலமாமடந்தைமாரிஞெருத்தியைப்பற்றிக்கொண்டு
ஞாலமீதோடலோடுநென்னுதலரற்றக்கேட்டுச்
சாலம்வேருடனேவாங்கித்தாலகேதனனுஞ்சென்றான். 24

தாலகேதனன்மாச்சாலஞ்சுழற்றியேசார்தல்கண்டாண்
டாலமேயனையசங்கசூடனுமவளைத்தந்து
காலினிலோடலோடுங்கருமுகில்வண்ணன்சென்று
சீலமேயிலானைக்கையான்மோதலுஞ்சிதைந்துவீழ்ந்தான். 25

அவனுயர்சிரத்திற்றோன்றுமாதவனவிரையான்ற
நவமணிதன்னைவாங்கிநாரணன்முன்னோனுக்கே
யுவகையினீய்ந்தபின்னரொள்ளியவேயையூதிக்
குவிமுலைமாதரோடுங்கூடியேகளிக்கும்போழ்தின். 26

செறியிருளொருவக்கீழ்பாற்றினகரனுதையமாக
வெறிகமழ்சோலைசூழ்ந்தவம்பிகாவனமேவாது
நறுமலர்க்குழலினுருமசோதையுநந்தன்றானு
மிறைவனுமெழில்விருந்தாவனத்திடையெய்தினரால். 27

ஆனுடன்சூழவைகுமாயர்கள்பதியிற்சென்று
தேனமர்பொழில்கடோறுந்திகழ்நதித்துறைகடோறு
மீனிடைவிண்ணிலிந்துவிளங்குதல்போல்வேயூதி
மானனையார்களோடுமோல்மகிழ்ந்துறையுநாளின். 28

அம்பிகாவனப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-3171.

---

## 44-வது, நப்பின்னைப் படலம்.

கதலிபூகங்கழைவிளைசெந்நெல்சூழ்
மதில்பிறங்கமணிதிகழ்கோபுர
மிதுலையின்கணின்விஞ்சியகும்பகன்
புதல்விநாயகன்பொன்னடிபோற்றுவாம். 1

மாதவத்தினசோதைமுன்னோன்மனத்
தீதகற்றியகும்பகன்சீர்மையான்
மேதினிக்குள்விளங்குமிதுலையா
மேதமற்றபதியினிருப்பவன். 2

திருந்துநான்மறையோர்மகிழ்செம்மையான்
பெருந்தவத்தினரெண்ணும்பெருமையான்
றெரிந்தஞானத்தன்செய்ததவத்தினாற்
பொருந்துசெல்வத்தளகைமன்போலுவான். 3

ஆயவன்செய்யரியதவத்தினால்
மாயவன்றிருமார்பினின்வைகிய
நாயகிக்குநிகரெனுநன்னுத
றாயநப்பின்னையென்பவடோன்றினள். 4

வளையும்விற்கணைவள்ளையொடாம்பல்சேர்
களிநம்போற்றிகழ்நல்வதனத்தினு
ளொளியிலாரந்துகிரிடைச்சேர்த்தபோ
லளவில்வண்மையடைந்திடுமூரலாள். 5

கழைகொடோளிநற்காந்தளின்கையினு
ளிழைகொள்மெல்லிடையாளெதிரில்லவள்
மழைகொள்மேகக்கருங்குழல்வண்டெ
ளிழையும்வண்கமலத்தெழிற்பாதத்தாள். 6

பேதைநீங்கிப்பெதும்பைப்பருவத்திற்
கோதைதன்மகளாயுயர்கும்பகன்
வேதியர்க்களித்தேமிகுதானங்கள்
மாதவத்தினன்வாழ்கின்றநாடனில். 7

காலநேமிதனையர்கள்காய்சினத்
தாலமாயவெழுவரவனியிற்
கோலமாகியகும்பகனாவினி
னீலமேகவிடையெனநின்றனர். 8

நடக்கிலெண்டிசைமுற்றநடுங்குமாற்
படக்கிற்சேடன்பணங்கள்வளைக்குமால்

மடக்குவார்களைச்செற்றுமரங்களை
யொடிக்குங்காலிட்டுகைந்துகெற்சிக்குமால். 9

இன்னதாயவிடபங்களேழையு
மன்னநன்மிதுலைக்கரசாகிய
மன்னவன்வெகுலாசுவன்வண்மையான்
கொன்மினென்றுதன்சேனைக்குக்கூறினன். 10

அரசன்கூறவடைந்தவநீகினி
பரவியெங்கணும்பாசம்விட்டேயெறிந்
திருகரத்தினுமாயுதமேந்திநீ
டரணியிற்றிரிசேக்களைத்தாக்கினர். 11

வாலெடுத்தெதிர்வாய்கொடுகெற்சித்துக்
காலெடுத்துத்துகைத்துக்கடுகித்தம்
பாலெடுத்தவரைக்கொம்பிற்பாயவே
வேலெடுத்தகைவீரர்கள்மாண்டனர். 12

மாயும்வீரரைக்கண்டுமிதுலைமன்
றூயகும்பகன்றன்னுடன்சொல்லுவான்
பாயுமாவிடையேழையும்பற்றியே
நீயகற்றுதியென்றுநிகழ்த்தினன். 13

கொம்பினாற்கொலைசெய்விடையேழையு
மம்பின்வாளினடர்ந்தெறிபாசத்தி
னிம்பரின்வதைத்தாருக்கென்மங்கையைக்
கும்பகன்றருவேனென்றுகூறினன். 14

நடையினேறிமநாணநன்றுலையே
விடையள்மெல்லியறன்னெழிற்காகவே
கடுகியாண்டடர்ந்தாரகம்விஞ்சிய
விடையினாற்றறைவீழ்ந்துமடிந்தனர். 15

சிந்தைநொந்துதியங்கியகும்பக
னிந்தவெவ்விடையேழையுஞ்செற்றிட
நந்தன்மைந்தரொடும்நண்ணுவாயென
முந்துதூதரையேவிமுடுக்கினன். 16

தூயகும்பகன்றூதர்கள்சொல்லினு
லாயர்குழவருஞ்செறிந்தனு
மாயனும்மதிவண்ணனுநன்னெறி
சாய்விலாமிதுலாபுரிசார்ந்தனர். 17

தூதர்நந்தன்வரவினைச்சொல்லலுந்
தீதகற்றியகும்பகன்சென்றெதி

ராதரத்தினரத்தலைவோரையு
மேதமற்றதன்னில்லிற்கொண்டேகினான். 18

ஆசிலாதவறுசுவையோதனம்
நேசமோடளித்தேகிறைசந்தனம்
பூசிநற்பொனினாடைகளீய்ந்துதண்
வாசநாண்மலர்மாலைவழங்கினான். 19

ஏறுமாவரையேலவெழுந்தன
சீறியீண்டெதிர்ந்தாரைச்சிதைத்தமை
கூறிநொந்திடுகும்பகன்றனொடு
மாறிலாநந்தன்மைந்தனியம்புவான். 20

கொடியவேளிடபங்களைக்கொன்றுநின்
னிடரகற்றவனென்றுமுன்னோனுடன்
கடுமையிற்சென்றகண்ணபிரானந்த
விடைகள்மேலடர்ந்தான்வெகுண்டேயரோ. 21

கடியவெவ்விடையேழுங்கனனூறக்
கொடியகண்களினோக்கிக்குரலினா
விடிகளஞ்சவதிர்த்தங்கெதிரிலா
விடமெனப்பரந்தேதுள்ளிமேல்வர. 22

வாலினைப்பற்றிச்சுற்றியும்வந்தடர்
காலினைப்பற்றிக்கல்லொடுதாக்கியு
மாலமொத்தங்கடர்விடையேழையுங்
காலனொத்துக்கடிதினிற்செற்றனன். 23

அந்தரந்தனிற்றுந்துமியார்த்தன
நந்தொலித்தனநாண்மலரெங்குமே
சிந்தியாடினர்தேவர்கள்சிறிய
வெந்தைவல்லதியாவர்வல்லாரென்றே. 24

ஒப்பிலேழ்விடையைச்செற்றொலித்திடு
மப்பின்மீத்துயிலையன்றன்றோளினிற்
றுப்புநற்கொம்புபோலத்துலங்கிய
நப்பினைத்திருநற்றொடையிட்டனள். 25

அண்டமுண்டருளாரியன்றன்னுடன்
கெண்டையங்கண்கிளிமொழிநப்பினை
மண்டபத்தினமர்ந்துவயங்கிட
வெண்டவத்தினர்வேதியரெய்தினர். 26

அங்கியின்னிறையாகுதிபெய்தனர்
சங்குபேரிதழங்கிடச்சாகைமா
நங்கைநப்பினைநற்கந்தரத்தினிற்
செங்கைமங்கலநாண்செறித்தானரோ. 27

மற்றுமாகுதிசெய்துவலமுறச்
சுற்றித்தேயுவைத்தூய்மலர்த்தாளிறை
பற்றவம்மிமிதித்துப்பல்லாண்டெழ
வுற்றநோக்கினரும்பருந்ததி. 28

தூயநந்தன்றுணைமலர்த்தாளின்மேல்
மாயநப்பினையோடுவணங்கவச்
சேயைமார்பினிற்சேர்த்தித்தழுவிட
வாயர்நோக்கியகமகிழ்ந்தாரரோ. 29

யீசனப்பின்னைதன்னுடனின்புற
மாசிலன்னமருந்திமகிழ்ந்தன
ஞசினற்கலனுற்பதினயிரந்
தூசுமீய்ந்தனன்றூயமன்கும்பகன். 30

மாயனப்பின்னைதன்னுடன்மாமணித்
தூயதேர்மிசைதோன்றவலாயுத
னையர்நக்தனோடந்நகரோவிப்போய்ச்
சாய்விலாநெறிதாம்விரைந்தேகினர். 31

தேரின்மீதிற்சிறந்திடவேறியே
யேருறும்விருந்தாவனத்தெய்தினந்
தாரைசின்னம்பணிலந்தழங்கிட
மாரனென்னமனைபுகுந்தானரோ. 32

உருகுசிந்தையசோதையுரோகணி
யருகுசென்றடிதாழ்ந்திடவன்பினுல்
மருகிதன்னொடுமைந்தனையார்வமுற்
றிருகையினணைத்தேயின்பமெய்தினர். 33

தூயநப்பின்னையோடுதுலங்கிய
மாயவன்றனக்குப்பின்னுமானக
ராயர்நல்கியவாயிரமாதரை
நேயமோடளித்தன்புகிறைந்தனர். 34

கமலைநீளையிராதைமந்தாரகை
சமனில்பாளிகைசந்திரிகையெழி
லமையுமெய்யிந்துவல்லியளப்பிலாக்
கமைகொளாய்ச்சியர்தோளணைந்தான்கண்ணன். 35

வண்ணமார்கலன்மார்பின்வயங்கிடக்
கண்ணனன்மதனுணுங்கவிளுற
வெண்ணின்மங்கையரோடின்பமெய்தியே
மண்ணின்மீதுமகிழ்திருநாடனின். 36

நப்பின்னைப்படலம் முற்றிற்று.

ஆ௲ திருவிருத்தம் - 3207.

## 45 - வது, அரிட்டாசுரப்படலம்.

அரிகேசவனுயர்மாதவனருளாளன்முகுந்தன்
றிருநாயகன்மதுசூதனன்றிருவிக்கிரமன்மா
நரகாசுரன்றனைச்செற்றவனாராயணன்மாயன்
கரிவீடுறவருள்செய்யிறைபுகழேசழறுமினே. 1

அலவாயுதமெடுப்போன்மிகவழன்றோர்கையிற்புடைப்ப
மலைபோலுயர்பெலம்பாசுரன்மடிந்தானெனக்கேட்டுப்
புலையேயுறுகஞ்சன்சினமெழவேபுகையுயிரா
யலைவீசியகடலாமெனநகைத்தானனல்பிறங்க. 2

கோரம்முறுமரிட்டாசுரன்கொடியோன்றிறற்கேசி
சோரன்சகடவியோமனனிவர்தன்னுடன்சொல்வா
ணூரம்முறுவிருந்தாவனத்தாயன்மகன்றன்னை
நீர்சென்றினித்தெறுமின்னெனவிடுத்தானெருப்புயிர்ப்பான். 3

அரசன்சொலவரிட்டாசுரனழன்றேயொருவிடையாய்த்
தரையெங்கணுமலையக்குரம்பெயர்த்துத்தழலுறமால்
வரையொத்துயர்வாலானிவர்கொம்பால்வளைமுகில்க
ளிரியக்கவிடமாமெனவெழுந்தான்சுரரிடைய. 4

மலையாமெனவெரினின்மிசைவான்மைமுகில்மொய்ப்பத்
தலைமேலுறுமிருகொம்புகள்சாலம்மெனவுயர
வுலகேழுறகுரம்லாசையிற்கருப்பங்களுமுடைய
நிலமீதினினுயர்மேருவைநிகர்த்தேயெதிர்ந்தனனால். 5

ஆயோர்கவிடத்தாலலையிமையோரெனவஞ்சி
மாயாவுனக்கபையம்மெனமலர்த்தாள்மிசைவிழுந்தார்
தூயோனொருதோழன்றுயர்தோள்மேற்கரம்வைத்தே
தீயோன்வருசெயனோக்கினன்சிரித்தேயெதிர்நின்றான். 6

மதியாதெதிர்நின்றானெனவரையாமெனவருவான்
கொதியாவிடிவெருவக்குரலுறவாண்டடர்ந்திடலுந்
ததிதேடியவிறைகொம்பினைப்பிடித்தேயுறத்தள்ளப்
பதினேழடிபின்னுற்றுவிழுந்தானுடல்பதைத்தே. 7

பதைத்தேபினரெழுந்தானிலனுயரும்பருப்பதம்போற்
கொதித்தேயெதிர்நடந்தான்றனையிருகொம்பையும்பற்றி
யுதைத்தேயிருநிலத்தின்மிசையுறத்தள்ளினனுரத்தின்
மிதித்தானிறையரிட்டாசுரன்வீழ்ந்தானுயிர்மாய்ந்தே. 8

வாயாலெழுகுருதிப்புனலாறுயெழமாண்டான்
தீயேயரிட்டாசுரன்றேவாதிகடிரண்டே
யோயாமலர்பொழிந்தேத்தினருயர்துந்துமிமுழங்க
ஆயோர்திரண்டுதித்தாடினரையன்புகழ்பாடி. 9

வேறு.

மாயோனையன்பின்மணிமார்பணைத்துமகிழ்ந்தகோபனிலகத்
தாயாமசோதைமணிவண்ணனைதனையன்றனைத்தழுவவே
தூயோயென்றுயர்திரள்மாதர்வந்துதுதிசெய்துநின்றுதொழவச்
சேயோன்விளங்குமனைமேவியின்பமுறவாழ்தினத்திலொருநாள். 10

அரிட்டாசுரப்படலம் முற்றிற்று.

ஆஉ திருவிருத்தம் - 3217.

---

## 46-வது, கேசிவதைப் படலம்.

ஆயன்முகுந்தனருளாளனாதியமரோர்தமக்குமுதல்வன்
றூயன்காராவைவதைசெய்துதந்திதுனியைத்துடைத்தபரமன்
மாயன்முராரியுலகேழுமுண்டமணிவண்ணனெந்தைவிசைய
னேயன்புராரியிடரைத்தவிர்த்தநெடுமாலினைத்துதிசெய்வாம். 1

கொடியதாயகஞ்சன்விடவேயதிர்ந்துவருகேசிவெங்குரகத
வடிவாகிமேருவரைபோல்நிமிர்ந்தவெரினால்விண்மங்குலிரிய
வடியாலநந்தன்முடிதானடுங்கவனலாகுகண்கள்பெரிதாய்க்
கடல்போலிரைந்துகடிவாய்திறந்துகருமேகமென்னவரவே. 2

பரியாகவந்துகொடியோனடர்ந்துவரவாயர்தங்கள்பதிவிட்
டிரிவோரையஞ்சலெனவோதிமாயனெதிரேநடந்துசெலவெண்
ணுரைவாயின்வீழவிடிபோலதிர்ந்துநொடியாகுமுன்பினுயரு
மிருகாலின்மார்பின்விசையோடுதைப்பவிறைதப்பிநின்றிதுசெய்தான். 3

உரமீதுதைத்தவிருகாலையோர்கையுறவேபிடித்துவிசையால்
விரிவானவானின்மிசைவீசலோடுமொருநூறுவிற்கடையுயர்ந்
திருமானிலத்தின்விழலோடுமோவிபதையாவெழுந்ததரையி
னுருமேறுபோலவதிராவெதிர்ந்துவருகேசிமால்முனுறவே. 4

வன்மீகமுற்றவரவாகுமென்னவருமாவின்வாயினிடையே
தன்மாகரத்தைநுழையப்பெருத்ததடிபோலகட்டுளடர

நன்மாவினுக்கவுயர்பல்லொடிந்துநெறியைந்துநாலுமடையாய்ப்
பொன்மானகர்க்குளுயிர்போனகேசிபுவிமீதருண்டுவிழவே. 5

வரைபோலுருண்டுவிழுகேசிவாயினிடைபோய்வற்றுள்மிடையுந்
திருமால்கைமீளவருபோதிரத்தநதியோடவேதிசைதொறும்
அருமாதவத்தரயிராணிகேள்வனயனோடுநூயமலரே
சொரிவார்துதித்துநனிவாழியென்றுசுரரோமெம்வானினுறவே. 6

வேறு.

நந்தனுமசோதையுங்கடிதினண்ணித்தம்
மைந்தனையணைத்தனர்மார்பினூரவே
சிந்தையின்மகிழ்ந்தரோகணிதன்சேயையு
மிந்திரைகேள்வன்றானிருந்தநாட்டனில். 7

கேசிவதைப்படலம் முற்றிற்று.

ஆகதிருவிருத்தம் - 3224.

---

## 47-வது, வியோமனைப் படலம்.

வேலிணைவிழியினூர்கலவிவெஃகிநீர்
காலதூதவர்கள்வந்தடையுமுன்கரி
யோலமென்றழைத்திடவுற்றகொற்றவன்
கோலமேவினைந்துய்மின்கூற்றவன்பாறவே. 1

மாயனுமுன்னவன்றானுமற்றுள
வாயர்கள்மைந்தருமாவின்கூட்டங்கள்
மேயவெங்கானிடைவிண்ணினோங்கிய
தூயதோர்காவினிற்றுலங்கித்தோன்றினர். 2

மாயவனரசன்மந்திரியலாயுதன்
நீயதிருமனற்சேனைக்காவல
ஞயர்கள்சிலர்களுஞ்சோரராஞ்சிலர்
தூயசேனையர்சிலராகித்தோன்றினர். 3

மையெடுத்தோடியேமறஞ்செய்சோரரைக்
கையினைக்கட்டுமின்காலைவாங்குமி
னெய்யுமின்குத்துமுனிவர்கடஞ்சிரங்
கொய்யுமினென்றிவைகூறுவார்பலர். 4

பசியினுக்கசந்தனையெடுத்துப்பற்றினோந்
தசையுமக்கருந்தநற்கிடுந்தந்தெனு
விசையுநீரென்றவர்கரத்தையெற்றியே
விசையுடனோடுவார்நகைப்பர்மீளுவர்.

அரசனுக்காடிரண்டதனிரட்டியாண்
டுரைசெயுமந்திரிதனக்குநூறமில்
வரிசையாய்மறிக்குறிதருவம்தம்மெனுச்
சரசமாய்த்தாம்விளையாடுங்காலையின். 6

கயவனுங்கஞ்சனேவிடக்கனன்றவெம்
மயன்மகன்வியோமனனுருவமாறியே
யுயரரியுறைவனத்தவரொடொன்றியே
யயமெலாமுழையினுளடைத்தடைத்தனன். 7

மையெனத்திரிதருமைந்தர்தங்களை
வெய்யவன்முழையினுள்விடுத்ததன்மையை
அய்யனுண்டறிந்தவனுக்கையைத்தழீஇக்
கையினைப்பிடித்துநீகள்வனென்றனன். 8

கையினைவிடுதியான்கள்வனன்றென்று
பொய்யினைப்புகலலும்புனிதன்விட்டிலன்
மெய்வரையெனவுயர்விண்ணினேருங்கினு
னையனக்கவனுரத்தடிக்கமாண்டனன். 9

வியோமனன்மண்மிசைவீழ்ந்துமாண்டபி
னியாழமர்பாட்டொலிநிறையத்தேவர்கள்
வியாளமேனடித்தருள்விமலவித்தகத்
தயாளுவேயென்றுதண்மலர்சொரிந்தனர். 10

தீயவன்றுணைவரைச்சேர்த்தமாபெல
வாயினிற்கல்லினைவாங்கிவாயினுற்
றூயவனழைத்திடத்துன்பமோவிட
வாயர்தம்பதியினுனிரையொடெய்தினுன். 11

வஞ்சகவியோமனன்மடிதல்கேட்டனர்
நெஞ்சினில்மகிழ்ந்துதாய்தந்தைநீதிமெய்
விஞ்சியவுரோகணிவிரைவினெய்தியே
மஞ்சனையணைத்துத்தாமுவந்துவாழ்த்தினுர். 12

துன்பமாண்டொருவிடச்சுரர்துதிக்கவே
யன்பினினப்பினையரிவைதன்னுடன்
அம்பொனின்மணிக்கலனணிந்துநாயக
னின்பமொடமர்ந்தினிதிருக்குமெல்லையின். 13

வியோமனப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 3237.

---

## 48-வது, அக்ரூரப் படலம்.

மருளறவருளுறமறையினண்ணிய
பொருளுறமுதல்வனைப்புதல்வனுகியாத்
திரன்களைமேய்த்திடுந்தேவதேவனை
யிருளகல்சிந்தையோடேத்துவாமரோ. 1

வடமதுராபுரிமன்னன்கஞ்சனுங்
கடியவனூரதனெய்தக்கண்டவ
னடிமிசைபணிந்தருக்கியமளித்திடக்
கொடுவினையகல்முனிகூறல்மேயினன். 2

முன்னம்யான்வருவனமொழியக்கேட்டிலை
பின்னருமுன்னெடும்பிறந்தபெண்ணென
வுன்னியேயன்புவைத்துறுதியெண்ணிலாய்
மன்னவநீயெனமற்றுங்கூறுவான். 3

உன்னூரத்துதைத்துயரும்பரேகுமின்
மின்னிடையசோதைதான்பெறவிளங்கினுள்
மன்வசுதேவன்றன்மைந்தனுனவ
னன்னெறிநந்தன்சேயாகிநண்ணினுன். 4

நந்தனுன்மறையறைநெறியைநண்ணுவான்
சிந்தையின்மகிழ்சகாவானசெய்கையாற்
குந்திதன்முன்னவனுக்கொற்றவன்
மைந்தனையவன்வயின்மறைத்துவைத்தனன். 5

அன்றியுமுரோகணியருளயாரையும்
வென்றிகொளலாயுதவீரனுனவ
னுன்றனக்கரும்பகையாகுமுத்தம
மன்றலர்துளவினுேனுமெம்வாழ்ந்தனன். 6

ஆதலாலரசநீயறையவேகிய
பூதனையுடனசுரேசர்பொன்றிய
வேதனையுற்றனைமேலிங்கெய்துவ
தேதெனவின்னமுமுணர்ந்துகொள்ளென்றான். 7

நற்றவனிவ்வுரைநவிலலோடுமெக்
கொற்றவன்றேவகிக்கொம்பனுளுடன்
கற்றறிவிலாவசுதேவக்கள்வனைப்
பற்றிநீர்தருதிரென்றுரைபகர்ந்தனன். 8

சங்குலினிமுத்தவன்முன்னிற்காட்டினர்
தங்கையைமைத்துனன்றன்னைச்செற்றிட

யங்கையின்வாளெடுத்தடர்தலோமெச்
சிங்கவிலருந்தவன்விலக்கிச்செப்புவான். 9

பகைஞனைக்கொல்கிலாய்பழிவந்தெய்தவே
மிகமுனிந்தெதிரிலாவிவரைவீட்டியே
விகழ்வுனக்கெய்துமென் றியம்பலோமெவெஞ்
சிகியுறுவிலோசனன்செங்கைவாள்வைத்தான். 10

பருந்தளைசெய்தவர்தாளிற்பாய்ச்சியே
யெரிந்திடுபனஞேரில்லுள்வைத்தன
னருந்தவனிவைமொழிந்தகன் றுபோயபின்
பொருந்தியவமைச்சரோடிவைபுகன் றனன். 11

ஆனகதுந்துபிமைந்தராருயிர்
வானகத்தேற்றவாளமர்மலைந்திடக்
கானகத்தவர்களையழைத்துக்காட்டிதெஞ்
சேனைகள்சூழவில்வேள்விசெய்யுமின். 12

சகலன்முட்டிகனெடுசகலன்சாணூர
னிகரிலாமல்லர்களசுரர்ஙின் றனர்
மிகமுனிகுவலயாபீடமீது று
மிகழ்வின்மாபாத்திரனிங்குளானரோ. 13

ஆதலினந்தனில்லமருமைந்தரா
மேதலர்தமையழைத்திகல்செய்தேயவர்
சாதல்காண்குவமுயர்தனுவிழாச்செய
வேதியர்தமையழைவிரைவினென் றனன். 14

வேதியரெய்திவில்வேள்விசெய்வதற்
கோதினர்சதுர்த்தசியுயர்ந்தமாதிதி
ஆதலின்முயலெனவறைந்தபேரிகை
வீதிகள்கரிபரிவீரர்துன்னினர். 15

கன்னல்நீள்பூகம்நற்கதலியெங்கணு
முன்னதமாகவேயுயர்த்துத்தோற்றியே
துன்னியகொடியுறத்துலங்குமாலைக
ணன்னகரிலங்கிடநாற்றினரோ. 16

அரிவையரரசர்களந்தணாளர்கள்
விரதநன்முனிவர்வில்வேள்விகாண்குவார்
பரிவினேடெங்கணும்பரவித்தோன் றினர்
கரிபரிநிறைந்திடுகஞ்சனூர்தனில். 17

வரையெனவுயர்ந்தமாதனுவைவண்மைசேர்
தரணியிற்சகட்டின்மேற்கொணர்ந்துதாங்கியே

விரைவினின்மண்டபம்விளங்கவைத்திடச்
சரியிலாமறையவர்வந்துசார்ந்தனர். 18

உயர்ந்திடுமுருத்திரமூர்த்தியோனுக்கு
வியந்திடுமருச்சனைவேள்விசெய்தபின்
சயந்தருதனுவின்மேற்றூமஞ்சூட்டியே
யயந்தனைநறுக்கினூராடிப்பாடியே. 19

தரணியின்கோட்புறுதனுவிழாச்செய
வரசனக்குரூரனையன்பினலழைத்
திருகரம்பிடித்துனக்கியாரும்நேரிலை
யுரைசெயுக்கருமமொன்றுளதுகேளென்றான். 20

குந்திதன்முன்னவன்கொடுமைகேட்டிதன்
மைந்தரைநந்தன்றன்மனையில்வைத்தன
னிந்தவெம்மொழிமுனியியம்பினனென்றான்
சிந்தையினிடரினித்தீரவேண்டுமோல். 21

நந்தன்வாழ்மனையினைநண்ணித்தேவகி
மைந்தரைவில்விழாக்காணவம்மெனத்
தந்தவையாலவருயிர்தடிந்தியான்
சிந்தைநோய்தீர்வனீசெல்லவேண்டுமோல். 22

விருத்தனூமுக்கிரசேனன்மேதினி
யருத்தியோடாளவெண்ணப்பன்றீங்குறு
கருத்திதேவகியவள்கணவனோடுமே
பொருத்தரைவைத்திலெனுயிருண்பேனரோ. 23

மகதனென்மாமனும்வாணன்சம்பரன்
சகமெலாமடர்ந்திடுந்தவக்கிர
னிகல்செய்சாலுவனரகாசுரனிவர்
சகியர்களாதலாற்றூழ்வொன்றில்லையால். 24

என்னுயிர்த்துணைவனீயேகிநந்தனோ
டொன்னலர்தமைக்கொணர்ந்துதவுவாயெனா
மன்னனக்குரூரனையணைத்துமாமணி
துன்னுநற்கலன்களுந்தூசுநல்கினன். 25

அறனில்வெங்கஞ்சனீதறையக்கேட்டிடு
மறனிலக்குரூரனம்மன்னைநோக்கியே
திறனுடுமுயற்சியைச்செய்தல்வேண்டுமோ
லிறைவயானேகுவனென்றுபோயினன். 26

இரதமதேறியக்குரூரனேகுவான்
சரதநான்மறைகளுந்தவருங்காணொணா

வரிதனைக்காண்பதற்களப்பில்காலமுன்
விரதமாதவஞ்செய்தேனெனவிளம்பினான். 27

பவமறப்பயோததிபாம்பின்மேற்றுயி
லுவமையிலரிபுகழொன்றுமில்லதாய்ப்
புவியினோர்புராணநல்லுரைபொருந்தினுஞ்
சவவலங்காரமாய்த்தளர்ந்துபோமென்றான். 28

வஞ்சகப்பிறவியுள்மருண்டுவீழ்ந்தவ
னஞ்சனவண்ணனுக்கடியனானபின்
விஞ்சினவினையெலாம்வேரினோடுமே
பஞ்சனலுற்றெனப்பாறுமென்றனன். 29

ஆசுறுவினையெனுமனற்றிலாழ்ந்துவீழ்
நீசனென்பிறவியாங்கடலைநீங்கிட
வாசமென்மலருறுமங்கைகேள்வனு
மீசனைக்காணவெத்தவஞ்செய்தேனென்றான். 30

நீலமால்வரையுடன்கயிலைநின்றிடுங்
கோலமாமெனமலர்க்குயிலின்கொண்கனு
மாலினோடலாயுதன்றன்னைவண்மையால்
ஞாலமேற்காண்பனென்றறைகுவானரோ. 31

வானிவர்ந்தளந்துமண்வழங்குபாதத்தின்
யானிறைஞ்சிடவிருகைகளாரவென்
மேனியைத்தழுவிலென்வினைகள்பாறுமே
யூனுடைப்பிறவியுமொழியுமேயென்றான். 32

தீதுறுகஞ்சன்றான்செப்பவெய்திய
தூதுவனென்றெனையிகழ்ச்சிசொல்வனோ
வேதமிலன்பருக்கெளியனாகிய
ஆதியாதலினருள்புரிவனுமென்றான். 33

அனகனுக்குறவுவெம்பகையிலாமெனி
னனிசிலர்கலன்சிலரடைவதேதெனிற்
கனகமீகற்பகங்கலர்துற்புத்தியி
னுனுமுமிதருவபோலுறத்துவானென்றான். 34

வாசமென்வனசமார்மங்குலேலப்பொற்
றூசுடன்கலன்களுந்துலங்கிநின்றரு
ளீசனற்பதத்தடிப்பொடியையென்மெயிற்
பூசுவன்கடிதெனப்புகன்றுபோயினான். 35

வனமுறுமுலர்முளின்காட்டம்வானத்தின்
கனமுறுவருடத்தாற்கங்கைசேர்ந்தபோ

லனகனையித்தினமடையயான்செய்நல்
வினையெதுகொல்லெனமகிழ்ச்சிவீறினான். 36

குன்றெடுத்தாவினைக்காத்தகொற்றவ
னன்றுலகளந்தவனடியிறைஞ்சிவீ
டொன்றவேவிடுத்தகஞ்சன்செய்யொப்பிலா
நன்றியையெங்ஙனம்நவிலுவேனென்றான். 37

புடவியினாவின்பின்போகுமச்சுத
னடியினிற்கொடியரவிந்தம்வாரணம்
படியவேபடியினிற்றிகழப்பாரினப்
பொடியின்மேற்புரண்டனனடியின்வீழ்ந்தனன். 38

மெய்மயிர்பொடித்திடவிழிகணீருகக்
கைமலர்கூப்பியேகடிதுசெல்குவான்
மைமுகிற்கொழுந்தெனவயங்கிநின்றரு
ளையனைக்கண்டனனடியின்வீழ்ந்தனன். 39

பாதமென்மலரினைப்பற்றிவிட்டிலன்
பேதையேன்பிறப்பெனும்பிணியைநீக்கிய
நாதனேநான்மறைதனக்குநண்ணலாச்
சோதியேயெளியைபோற்றோன்றினாயென்றான். 40

மானிலத்தழுந்துறவணங்குமன்பன்றன்
மேனியைத்தழுவினன்விளம்புவானுரை
யானகதுந்துபிகுலத்துளாயினா
யீனமிலெந்தைநேராகும்நீயென்றான். 41

இனையவக்ரூரனுக்கினிதியம்பியே
மனைதனிலருக்கியம்வழங்கவாதனத்
தினிதுறவிருந்தனமருந்தினானிறை
நனிமலர்சாந்துடனானம்நல்கினான். 42

அருளினக்ரூரனைநோக்கியையநீ
விரைவினிலெய்தியசெயல்விளம்புகென்
றுரைசெயக்காந்தினியுதவுநன்மகன்
பரிவினானோக்கியேபகர்தலமேயினான். 43

வினையுறுகஞ்சன்முன்வீணையேந்திய
முனிவனுமெய்திநற்குந்திமுன்னவன்
றனையநீர்நந்தனில்சார்ந்துளீரென்றே
யனையவுமறைந்திடவனல்கொள்நெஞ்சினான். 44

தீயவன்றங்கையைச்சூரசேனன்சே
யாயவன்றனைத்தன்னங்கைவாளினா

ஞேயென மூடுக்கிடலோடும் தூலறி
தூயனாரதமுனிவிலக்கிச்சொல்லவே. 45

வாளிருகிலத்தினின் வைத்துமற்றவர்
தாளினிற்பருந்தளைதைத்துவைத்தபின்
ஞானிகளரிதனைநலியுமாறென
மூளும்வெங்கணனுமைத்தெறமுயற்சியால். 46

வில்லுயர்வேள்வியைக்காணவேவிரைந்
தெல்லையினுமையழைத்துதவுவாயெனுப்
புல்லியன்விளம்பிடப்பொருந்தியெய்தினே
னல்லியங்கமலக்கண்ணப்பவென்றனன். 47

காந்தினிசுதனிவைகழறக்காளியப்
பாந்தளினடித்திடும்பரமன்கஞ்சனும்
வேந்தன்பாலெய்துவன்விரைவினின்றெனு
நாந்தகச்செங்கையானகைசெய்தானரோ. 48

ஆயதோர்காலையினுயர்தம்பதி
நாயகனுகியநந்தனெய்தியே
தூயவக்குரூரனைத்தழுவிச்சோர்விலா
வாய்மையினலனுமெகிழ்ந்துகூறுவான். 49

மன்னவநின்கிளைமைந்தர்மற்றுளோ
ரின்னலெய்தாதிருந்தனர்களோவெனுச்
சொன்னபின்றன்மதிக்கஞ்சன்றூய்நெறி
யொன்னலான்கொடுமையையுரைக்கலுற்றனன். 50

தங்கைதன்றனையரைத்தடிந்துதந்தைதாய்
சிங்கலெய்திடச்சிறைவைத்ததீயனும்
வெங்கண்ன்கொடுமையைவிளம்பிலேனெனு
விங்குநீயெய்தியதியம்புவாயென்றான். 51

வடமதுராபுரிமன்வில்வேள்வியைக்
கடிதினில்மைந்தருநீயுங்காணவாண்
டடைகுவாயென்றனக்கறையவேவினன்
கொடியவனென்றுரைகூறினனரோ. 52

தூயநற்காந்தினிசுதன்சொற்கேட்டனு
மாயர்தங்நாயகனளப்பிலாவளை
காயநற்சுவைகொள்பால்கறவையாயுடன்
மாயன்முன்னோனுடன்வழிக்கொண்டானரோ. 53

மாயவன்மதுரையினேகும்வாய்மைகேட்
டாயர்கள்மாதரரான்பினெய்தியே

நீயுறும்வெண்ணெபோலுருகிச்சிந்தையி
னேயுறவிவையிவைநுவல்வதாயினர். 54

கண்ணன்வாய்முகங்கடைக்கண்கள்காண்கிலோம்
பெண்ணெனப்பிறந்தியாம்பீழையெய்தினேம்
வெண்ணெயுண்கள்வநீமீள்கிலாயெனில்
மண்ணின்மீதுழல்கிலமாய்வமென்றனர். 55

கடிமலர்நாயகிகாமமுற்றிடும்
வடிவுறுமேனியின்வனசவேரியின்
கடைவிடுத்தெனவுன்றன்கடைக்கணேக்கின
லுடலுயிருருகுவோமுய்வதேதென்றார். 56

ஐம்பொறியுனதிடத்தழுந்தவாவியுன்
வம்பணிதுளவணிபதத்தின்வைகவே
யம்பரத்தரிவையர்க்கதிகமாயத்தி
னிம்பரினணைத்தயாமெஙன்விட்டெய்குவம். 57

தனமுறுகலவைதன்னடிதயங்கவே
வனசமார்நீலத்தின்குறியெம்வாய்தொறு
மினவுனவிரலுகிர்ப்பொறியெம்மெய்யிடை
மனவணைத்துய்ந்தயாமொருவின்வாழ்கலம். 58

பரவையினமுதநேர்பவளவாயினின்
மருவுவேயிசையினெம்மனமுருக்கியே
குரவைகோத்துயிரெலாங்கொள்ளைகொண்டநீ
பிரிவையேற்றடுத்துனைப்பிடிப்பமென்றனர். 59

நேரிழையார்நமைப்பிரித்துநேமிகொள்
வீரியனேடுமேமதுரைமேவிடுங்
கோரவிக்குரூரனையக்குரூரனென்
றேருறுநாமமிட்டனர்கள்யாரென்பார். 60

என்றுரைத்தெய்தியவெழில்கொள்மாதரை
யன்றுலகளந்தருளையனேக்கியே
மன்றலர்குழலினீர்வருந்தலீண்டிரு
மின்றுயான்வருவனென்றேகினனரோ. 61

ஆயர்களுவமையிலசோதைநாயகன்
றேய்விலாயமுனையிற்படிந்துசெல்லவே
மாயவன்காந்தினிமைந்தனஞ்சிலோன்
றூயகாளிந்தியாந்துறையிலெய்தினர். 62

வேறு.

பேயினுயிர்முலைப்பாலோடருந்துங்கோமான் பெலம்பனுயிர்வதை த்தவன்பித்திகையினிற்பத், தூய்மையுறுகாந்தினிதன் சுதனீர்மூழ்கித்

துலங்கிமேனின் றவரையயத் துட்கண்டான், மாயமெனவெழுந்தவரைக்
கோட்டினோக்கி மறுத்துமயந்தனில்மூழ்கிமற் றுங்கண்டே, தீமையிலா
வறநெறியைத்தேர்ந்தமன்னன் திகழ்சோதியுருவினவிர்சிறப்பைக்கண்
டான். 63

பேரொளியாயுயர்ந்ததொருநகரினுப்பண் பிறங்குமணிமண்டபத்தி
ன்மீதுவெண்மைச், சீருலவுவளையாழிகதைவாள்சார்ங்கந் திகழ்கரங்கடி
ருமார்பிற்கவுத்துவந்தோ, ளேருலவுகிரீடநுதல்வதனங்கண்வா யெழிற்
காதிற்குண்டலம்பொன்னுடைபாதங், காரெழிலிமிசையினலர்கமலம்பூ
த்த காட்சியுறுமேனியனைக்கண்டானன்றே. 64

சிரமுயர்ந்தகதிகுஞ்சிமேகங்கண் டினகரன்சந்திரன்செவிகடிசை
யோரெட்டுக், கரையிலளப்பிலவுவரியுதரங்கொப்பூழ் ககனனகனகமரங்
களுரோமமாகி, விரைகமழுங்கமலமலரிறையோன்சிந்தை விழித்தல்பக
ல்முகிழ்த்தலிரவாகியோங்கு, மொருவனெனவயங்கியருள்சோதிதன்னை
யொளிகொள்மணிமண்டபத்திற்கண்டானன்றே. 65

கடலுறுமீனெனவுமொளிருதும்பரத்தின்கனியினுறுமசகமும்போ
ற்கருமேகத்தின், வடிவுடையான்வயிற்றதனிலண்டகோடி வயங்கியெ
மாறதனைக்கண்டான்மற்றும், படியினெழுதகளென்னீண்டாழ்ந்தகன்ற
பரவையுறுமறலெனப்பல்லுயிர்களெல்லாம், நெடியவன்றனிடத்துதித்
தேயமருந்தன்மை நெறியறியுமன்னவர்கோன்கண்டானன்றே. 66

சனந்தசனகாதியரைக்கண்டான்பூவிற் சதுமுகனைக்கண்செசிதர
னைக்கண்டா, னனந்தனைக்கண்டான்ககத்தின்பதியைக்கண்டா னருள்
செறிசேனாபதியைக்கண்டானன்ப, ரினந்தனைக்கண்டுளமகிழ்வான்கண்
ணுளார்தாமிலங்கியுறுகோலமெல்லாங்கரந்தாற்போல, வனந்தனிலானி
ரைமேய்த்தகோமான்மீள மறைத்திடலுங்காணுமலெழுந்தான்மன்னோ.

திரைகுரைகாளிந்திநதியயத்தின்மூழ்கிச் சிறந்தமன்னனெழுந்துய
ர்ந்தகரைமீதேறி, யரியினிணைத்தாண்மலரினிறைஞ்சிநீயே யண்டரண்
டமெண்ணிலவாயவற்றின்மேலா, மொருவனுமாய்ப்பேரொளியாயுயர்ந்த
வாதி யுன்றூங்குமுன்னூலுமுணராயென்று, கரைபுரளுமானந்தக்கண்
ணீர்சோரக் களிப்புடன்கைதொழக்கண்ணனகைத்தானன்றே. 68

அன்னவன்றனுடனிரதமீதினேறி யாழ்ந்தகன்றயமுனையிகந்தப்பா
லேகித், துன்னுகொடிமிடைசிகரமுயர்ந்துதோன்றத் துலங்குமதுராபு
ரியினெயிலைச்சூழ, மின்னியெழுமுகிலளவாயிலங்கிநீண்டு விழுமியமாம
லர்விறையமிழற்றுகின்ற, வன்னமயில்கோகிலநற்கபோதம்பூவை மலிந்
தெழுந்தவாராமமிருந்தார்மாதோ. 59

புரிசையகழ்பித்திகையினிலங்கியோங்கும் புறப்பொழிலினிருந்துபு
யல்வண்ணன்மாயோன், வரிசையுறுகாந்தினிதன்மகனைநோக்கி வடமது
ராபுரிநகர்க்குவருவேனுனை,விரைகமழுந்தொடைமார்பவிதனைமுன்போ

ய் விளம்பென லுமகிழ்ந்திரதமிசையினேறி, மூானுடையமுன்றிலிடைக்கஞ்சன்முன்னர் முகுந்தன்வரவதனையவன்மொழிந்தானன்றே. 70

அக்குரூரப்படலம் முற்றிற்று.

ஆ௲ திருவிருத்தம் - 3307.

---

## 49-வது, தாருகன்வதைப் படலம்.

தாலமிசைமறைமொழிந்தவருடம்நூறுந் தணிந்திடத்தானிருந்திடினுந்தாய்கைம்மீதிற், பாலனெனச்சிறிதுதிங்கள்கழிந்தபின்னர்ப் பருவமுறப்பாவையர்தங்கிலிற்றோய்ந்து, மேலினுறுநரைதிரைமூப்படரநோய்கள் வெய்யதுயர்முகேவிந்தவுடல்விட்டேகிக், காலனிநெரகிடையினமூந்தாமுன்னர்க் கண்ணனெம்புகழினையாங்கழறியுய்வாம். 1

சிந்தைமகிழ்காந்தினிதன்சிறவன்றேர்மேற் சென்றிடலுஞ்சிறந்துயர்ந்தபூங்காத்தன்னி, னந்தனுடனுயர்திரளெல்லாங்கூடி நலனுறவேமகிழ்ந்திருப்பப்பொதுவர்தங்கள், மைந்தருடன்மதிவண்ணன்மருங்கினெய்த வானுறுசெங்கதிர்குடபாலிழியும்போழ்தி, னிந்திரைநாயகன்மேகக்கொழுந்துபோல விலங்கிமதுராபுரியினேகினுனல். 2

வேறு.

சதுரன்றாமரைக்கண்ணினன்சாமள
வெதிரில்லாமெய்யனேழுலகாள்பவன்
முதிருமும்மதயானைகள்மூந்திய
மதுரைமானகர்வீதியின்வந்தனன். 3

கரிநிறைந்தனகார்முகிலாமெனப்
பரிநிறைந்தனபாய்திரையேலவே
வரிநிறைந்தவரிவையர்தங்குழல்
பரிநிறைந்தனபூரணபொற்குடம். 4

தோரணங்கணிறைந்துதுலங்கிய
வாரணங்கள்முழக்கிமலிந்தன
பாரணங்குதவஞ்செய்தபண்பினுல்
நாரணன்கடிதேகுநல்லாவணம். 5

கன்னல்பூகங்களிகொள்சுரும்பினந்
துன்னுபங்கயமாலைதுலங்கிய
வன்னம்போன்றவர்தோள்கழுத்தானன
நன்னலத்தினைநத்திவந்தாலென. 6

குயிலினம்மெனவன்னக்குழாமென
மயிலினம்மெனமங்கையர்வந்தனர்
வெயிலின்வெண்ணெயுருகுவபோல்மெலிந்
தயர்வமாயனழகுகண்டாரரோ. 7

செய்யகண்ணினன்றஞ்சனந்தீட்டுவா
ளாயன்வீதியடைந்தனனென்றலுந்
துய்யமையுறுதூரியக்கோலுட
னெய்தமாயனிலங்கநகைத்தனன். 3

தூசுமென்மருங்கிற்சுற்றும்வேலையின்
மாசிலச்சுதன்வந்தனனென்றலு
மேசெறிந்திலளாடையிழுத்தெய்த
வீசனுண்ணகைசெய்தினிதேகினான். 9

இழையொண்முத்துத்துளையிடுமெல்லையின்
மழைதடுத்தவன்வந்தனனென்றலுங்
கழைகடோளிதரளங்கைந்நூலுடன்
றொழுதுமாலுறவீதியிற்சோர்ந்தனள். 10

கொங்கைபாற்குழவிக்கருள்வேலையிற்
செங்கண்மானகர்சேர்ந்தனனென்றலு
மங்கைமார்மகவைப்பிறிந்தேவந்து
பொங்குமன்பினிற்கூலம்புகுந்தனர். 11

கலையுஞ்சோரக்கருங்குழல்சோரநன்
முலையின்மீதணிமுத்தஞ்சிறந்திட
மலரினைங்கணைமாமதன்வாங்கிய
சிலையினாலெய்யவேதிகைத்தாரரோ. 12

பால்குடித்தனைபாம்பினடித்தனை
மால்கொடுத்தனைவந்தனையாமென்பார்
வேல்களொத்தகணாரியர்வீதியின்
மாலடிப்பதுமங்கண்டுமொழ்கியே. 13

கண்ணனென்பர்விற்காமனிவனென்பர்
வெண்ணெயுண்டருள்வித்தகன்றானென்பர்
மண்ணின்மீதில்வருங்கொண்டல்காணென்ப
ரண்ணலைக்கண்டவாயிழையார்களே. 14

கரியமேனிக்கருமுகிறானென்பார்
வரிகொணீள்விழித்தாமரைதானென்பார்
சரியிலாநகைதண்ணிலவாமென்பா
ரரியைனெள்ளவிற்கண்டணங்கார்களே. 15

நந்தகோபன்செய்நற்றவமாமென்பா
ரிந்தமானிலஞ்செய்தவமாமென்பார்
சிந்தையாரக்களிப்பர்தெருவினில்
வந்தமாயனைக்கண்டெழின்மாதரார். 16

ஐகொள்மெய்யனசோதைதிருமகன்
கைகள்கால்முகங்கண்கள்செந்தாமரை
மைகொள்நீலமரகதமேனிய
னெய்தினானென்பரேந்திழையார்களே. 17

வேயினேழிசைகேட்டுவிரும்பிய
வாயர்மாதரருந்தவநன்றென்பார்
தாயசோதைதவம்பெரிதாமென்பார்
மாயன்மேனியைக்கண்டமடந்தைமார். 18

கோலுங்கன்றின்குழூஉமிவனுண்டிடும்
பாலும்வெண்ணெயும்நெய்யும்பரிந்தெழு
மால்கொளண்டர்கள்மங்கையர்கூறையுஞ்
சீலநற்றவஞ்செய்ததென்பார்சிலர். 19

கேளிரெங்கணும்வீதிகிளர்ந்தெழ
வேளிரங்கிவணங்கிடுமேனியை,
வாளரங்கள்மதித்திடுகண்ணியர்
சாளரங்களிற்றாமுற்றுநோக்கினார். 20

நிரைகொளோடைநிறைவனசங்கள்போற்
றெருவினானனந்தோன்றச்சிறந்திடு
மரிவைமார்சணினோக்கினராசையே
மருவவீதியிலேகினன்மாதவன். 21

வந்தகாரியமுற்றுகவஞ்சகர்
வெந்துநீறெழவேதம்விளங்கவே
மைந்தநீயென்றும்வாழுதிவாழியென்
றந்தணாளர்கள்கூறினராசியே. 22

இந்திராதியர்வேதனிருடிகள்
கந்தநாண்மலர்வீசிக்களித்தனர்
நந்தகோபன்செய்நற்றவத்தெய்திய
மைந்தன்வீதியினெய்திவயங்கவே. 23

கழைகொடோளிகளெண்ணிலர்கையினாற்
றொழுதுமாலிற்றுவண்டுமயங்கவே
அழகின்விஞ்சியவைங்கணையோன்றந்தை
யெழில்கொள்வீதியினெய்திடுமெல்லையின். 24

கொடியனாகியகஞ்சன் றன்கோயிலி
னடைகுவான் றகில்மைகளைவிப்பவன்
படியிற்பல்வனப்பட்டுடைகொண்டுதான்
வடிவனாகியமாயன்முன்னெய்தினான். 25

உம்பர்தம்பரனுற்றவன் றன்னையே
யம்பரம்மெனக்கின் றளித்தாயெனி
லிம்பரின்னலனெய்துவையென் றலும்
வெம்பினன் றகில்வெள்ளையதாக்குவான். 26

தழையுறும்படிதாங்கிக்கவித்துயர்
பழுவந்தன்னிற்றிரிந்துபல்லாக்களோ
டுழலுவாய்கஞ்சமன்னனுடுத்திடு
மிழைநலத்துகில்சுற்றுவையோவென்றான். 27

ததிதெருத்தொறுந்தாங்கிவிற்கும்மிடை
மதியினீமொழிந்தாயெனமாதவன்
வெதிருறுங்கரத்தாற்குத்தவீழ்ந்தவ
னுதிரம்வாயுகவேயுருண்டானரோ. 28

தூயதுசுகொண்டேகிடுந்துன்மதி
மாயவேகவிங்கப்பொதிவைத்தவ
னேயமாகுங்கிளைஞர்கள்நின்றிலர்
சீயங்கண்டசெந்நாயெனவோடினர். 29

வேறு.

தாருகன்மடிந்துவீழக்கவினுறுகலிங்கந்தன்னை
ஆரியனணிந்தபின்னரலாயுதனுடனுயர்க்கும்
பாரினில்வறிஞர்கட்கும்பரிவிற்சம்படங்களீய்ந்து
தேருறுவீதிதன்னிற்றிகழவேயெய்தும்வேலை. 30

தாருகன்வதைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-3337.

---

## 50-வது, சுதாமப் படலம்.

---

ஆலமேபோலுமாலிமடியமாலியவானஞ்சி
ஞாலமேலிலங்கையோவிநாகலோகத்திற்பாறச்
சீலமார்கருடன்மீதிற்றிகழ்ந்துயர்கிரியேவுங்
கோலமாலிருடிகேசன்புகழினைக்கூறியுய்வாம். 1

தூயவன்சுதாமாவென்போன் றுலங்கியதொடையல்சேர்ப்போன்
மாயவன்றன்னைநோக்கிவணங்கினனெழுந்தேயாடி.

நாயினேனிருக்குமில்லினுயகவருகவென்றே
தீமையில்குணத்தோன்சொல்லச்செல்வனுஞ்சென்றானன்றே. 2

அரியவன்மனையினெய்தவாங்கவன்மகிழ்ந்துதன்னிற்
றெரிவையுஞ்சிறுவர்தாமுந்திகழ்திருவடியின்வீழ்ந்து
பரிவினுதனத்திருத்திப்பரமன்பாதோதகத்தை
யரிவினையொருவவுட்கொண்டாடிமெய்புளகமானுர். 3

தளவங்கல்லாரமௌவல்சண்பகஞ்சாதிநாகந்
துளவமம்போருகம்பார்துலங்கியவிலஞ்சிவாசங்
கிளரும்பாடலத்தில்மென்பூக்கெழுமியதொடைகளெல்லா
மூளமகிழ்ந்தையன்மார்பினணிந்துநின்றுருகினுனல். 4

அலங்கலையணிந்துநின்றலன்பனையருளினேக்கி
யிலங்கியசெல்வமெல்லாமெய்திப்பின்னிணையில்லாமற்
றுலங்கியகதியின்வாழ்தியென்றளிசுரந்துசொல்ல
நலங்கிளர்சுதாமாவேத்திநவின்றனன்பின்னுமாதோ. 5

என்பிலாப்பிறவியாகியிழிவினையடைந்தாலும்முன்
னன்பெனக்கருடியென்றேயாங்கவன்மொழியக்கேட்டுத்
துன்பகல்சிந்தையாய்நீபெறுகுதியென்றுதூயோ
னின்பமோடவனைநில்லென்றெழிலுறவேகுமெல்லை. 6

சுதாமப் படலம் முற்றிற்று.
ஆ௶ திருவிருத்தம் - 3343.

---

## 51 - வது, திரிவக்கிரிப் படலம்.

சங்குசக்கரம்வாள்சார்ங்கந்தண்டெழிற்கரங்களோங்க
மங்குன்மீவனசம்பூத்தமாண்பெனவயங்குமேனி
செங்கதிருதையமேலச்சிறந்திடுங்கிரீடந்தோன்றக்
கங்கையார்பதத்தின்வானமளந்தருள்கண்ணன்வாழி. 1

தேனமர்குழலினுர்கள்சிறந்துவந்தெரிதினேக்க
கானமெய்கமழவாதிநாரணனெய்தும்வேலை
யூனவில்வளைந்தபோன்றுன்டொளியறுகுரூபியாகுங்
கூனிநற்சுகந்தங்கொண்டுகுறுகினள்வீதிதன்னில். 2

அய்யனுண்டவளைநோக்கியாரிடைச்செல்கின்றுய்நீ
துய்யநற்சுகந்தந்தன்னைத்தருதியோவென்றுசொல்லக்
கையினிற்றொழுதேயன்பிற்கண்ணினீர்புரளநின்று
மெய்யநின்றுதிநானென்றவளிவைவிளம்பலுற்றுள். 3

மாமையில்கூனிமூன்றுவக்கிரியாகுமென்பேர்
தூய்மையில்கஞ்சனுர்க்குச்சுகந்தமெய்யணிவன்கண்டாய்

நீயிவணெய்தப்பெற்றேனெனக்குநேராருமில்லை
யாயனுமுன்மெய்தன்னிலணிகுவன்சுகந்தமென்றாள். 4

குங்குமங்கலந்தசந்தம்பாளிதம்பனிநீர்கொண்டு
செங்கையாற்குழைத்துமார்பிற்கொட்டிச்சிந்தூரந்தன்னைத்
திங்கணுணனந்தான்றிகழ்வுறநுதலிற்றீட்டி
யங்கண்மாலழகுநோக்கியடிமிசைவணங்கிநின்றாள். 5

சிந்தூரஞ்சுகந்தமெல்லாந்திகழ்வுறவணிந்துநின்ற
வந்தமில்கூனிதன்னையங்கையாற்கழுத்துமார்பு
மிந்திரைகொழுநன்பற்றியெடுத்துறநிமிர்த்தலோடுஞ்
சுந்தரியாகிநின்றாடய்யவானரம்பைநாண. 6

மாதவராசிகூறிமகிழ்ந்தனர்வானமீதிற்
றூதவிழ்மலர்கடூர்த்தார்தானவர்பகைஞரானோர்
பூதலந்தன்னிற்கூனும்புன்மையாமுருவையோவிச்
சீதரன்முன்னர்நின்றாள்செய்யவளாகிமாதோ. 7

வேறு.

மூடவர்கேட்கிலர்கண்ணிலர்மூங்கையர்
நொடியிற்கூனிநிமிர்மங்கையைநோக்கிமா
லடியிற்றாளைமெய்யப்பிநின்றாடினார்
கடிதிற்கேட்டனர்கண்டனர்போற்றினார். 8

அந்தவேலையரம்பையுநாணநற்
சந்தமெய்யுருப்பெற்றவடாமரை
யுந்தியோனுத்தரீகத்தைப்பற்றியே
யிந்திரைக்கிறைவாவெனைப்புல்லென்றாள். 9

கூனிமிர்ந்தெழில்கொண்டதிருவனாள்
வானின்மங்கையர்நாணுமடந்தையைத்
தான்மகிழ்ந்துநின்னில்லினிற்சார்குவன்
போகினின்மனைக்கென்றபின்போயினாள். 10

திரிவக்கிரிப்படலம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 3353.

---

## 52-வது, சிலையிறுத்த படலம்.

---

ஆசையாலறனல்லவைசெய்திங்க
ணாசமாகிநமன்கைப்படுவமுன்
வாசியாகியகேசியைமாய்த்திடு
மீசன்றாளிணையேத்துவமுய்யவே. 1

வேய்களெங்கும்விளங்கிடவூதியே
ஆயர்மைந்தர்களாவலங்கொட்டவெஞ்
சியம்போலவிலங்கித்தெருவினில்
மாயனெய்தினன்வானவர்போற்றவே. 2

ஞாலமீதுயர்மண்டபநாப்பணோர்
கோலமாய்த்திகழுங்குலமால்வரை
போலவேமிகத்தோன்றும்பொலிவுடைச்
சாலையெய்தினன்றாமரைக்கண்ணனே. 3

தூபதீபங்களெங்கணுஞ்சூழ்ந்திடத்
தீபமாலைநிறைத்துச்செறிவுறுஞ்
சூபமோகனந்தோன்றப்படைத்துநீள்
சாபமுன்மைகடானும்நறுக்கினன். 4

அரசரெங்குமுறைந்தழகான்றன
விரைசெய்மாலைவிளங்கிமலிந்தன
முரசுபேரிபணவமுழங்கவே
நிரைசெய்மாகரிதேர்கணிறைந்தன. 5

இனையதாயவெழிலுடைவில்லுறு
நனியுயர்ந்தொளிர்மண்டபநாப்பணின்
வினையிலாமல்விளங்கியவண்டர்க
டனையர்சூழ்ந்திடச்சார்ந்தனன்மாயவன். 6

வேறு.

இந்திரதனுவையேலவெழில்கொளுஞ்சாபந்தன்னை
நந்தன்மாமைந்தனெய்திபெடுத்துயர்நாணையேற்றித்
தந்திவெங்கரத்தாற்கன்னன்றன்னைத்தான்முறித்தலேய்ப்ப
வந்தரம்நடுங்கநாரிகாதறவொடித்தானம்மா. 7

ஒடித்தமாதனுவினோசையுறவுயரண்டகோளம்
வெடித்ததுகொல்லோவென்றுவிண்ணவர்வெருவிநொந்தார்
தடித்துமல்கிடவானெண்ணிலிடிதறைவீழ்ந்தவென்றே
படித்தலஞ்சுமந்தநாகம்படந்தமோறிற்றன்றே. 8

விஞ்சியமதுரைதன்னில்விளங்கியவரசரோடு
மஞ்சினன்கஞ்சன்பூமிபிளந்ததென்றையமுற்றான்
வெஞ்சினமுற்றதிக்கின்புழைக்கைமாவெருவியோடக்
கஞ்சமாமடந்தைகேள்வன்கவினுறநின்றான்மாதோ. 9

வில்லினையெடுத்தொடித்தவிறலுடைப்பொதுவன்றன்னைக்
கொல்லுமினென்றுசேனைக்காவலர்குழாங்களாகி
யொல்லையிற்கரிமாத்தேரினினங்களுமுறவாண்டெய்தி
யெல்லையில்சனைகள்பெய்தேயெறிந்தனர்வேல்வாளெல்லாம். 10

துந்துமிபிடக்கைதக்கை துடிகைக்கம்பலேயினலே
யந்தரநடுங்கவீரரளப்பில்வெங்கணைகள்பெய்து
குந்தம்வேல்முசுண்டியீட்டிகுலிசந்தோமரமுலக்கை
யுந்தினர்திசைகடோறுமுலகெலாமஞ்சமாதோ. 11

ஒடித்தவிற்பாதிகொண்டேயுரோகணிசேயுமாறு
மடித்தனரிரதங்கைம்மாவயமெலாமடியவீரர்
முடித்தலையுருளமார்புமுழங்கைகாலொடிந்துவீழப்
படித்தலத்துதிரவெள்ளம்பரவைபோலோடிற்றன்றே. 12

சாரிகையாகிவெங்குந்தாலகேதனனுமானுந்
தேரினிற்கரியின்கோடுசிதைந்திடப்பரிகள்போன்ற
வீரர்கள்வதனங்கைகால்வெரினெலாம்விண்டுவீழப்
பார்கிறைகுருதியோடப்புடைத்திடப்பாறினரால். 13

படியினின்பாயனெய்திப்பகடுதேர்முறியமோது
மடியிைனளஞ்சித்தங்களகந்தனிற்புகுந்தமன்னர்
மடநல்லார்குழாங்கள்சூழமற்றவர்மருங்குநோக்கா
ரிடையெனும்பெயரினலேயெய்துவன்கண்ணனென்றே. 14

இரிந்தனர்வீரரெல்லாமிமையவர்பூவின்மாரி
சொரிந்தனர்பொதுவர்தங்கள்சுதரெலாம்பார்க்கவேபோர்
முரிந்தவிற்றுண்டத்தோடுமுராரியுன்னேனென்றுறுந்
தெரிந்தவிர்பொழிலிற்சேரத்தினகரன்குடபாற்சேர்ந்தான்.  15

சிலேயிறுத்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 3368.

---

## 53 - வது, கஞ்சன்முயற்சிப் படலம்.

புந்தியிற்கதங்கடீர்ந்துபொறைகெறியறன்மெய்யெய்தச்
சந்ததம்பதுமநாபன்றாள்களைக்கருத்தின்வைத்துக்
கந்தமாமலரர்ச்சித்துக்கரங்களைக்கூப்பிநின்று
வந்தனைசெய்யுமன்பர்க்கடியிணைவணங்கியுய்வாம். 1

தினகரன்குடபாலெய்தச்சிறந்திடும்யாமஞ்சூழ
கனிகடுந்துயரமெய்துநந்தன்றாள்மிசையின்மீதே
அனகனுமுன்னேன்றானுமயம்படிந்தமுதுசெய்து
கனகமார்பாரின்மீதிற்கண்டுயின்றார்களன்றே. 2

கக்குல்வந்துற்றகாலேக்கனகமாமண்டபத்தின்
சிங்கவாதனத்தின்மீதிற்றிகழவீற்றிருந்தகஞ்சன்
தங்கைதன்றனையரெய்தித்தன்னகர்புகுந்தாரென்று
வெங்கனல்பொழியுங்கண்ணான்முன்னின்றுவீரர்சொல்லார். 3

நந்தகோபன்சேயெய்தினன் நகர்புகுந்து தூசு
தந்ததாருகன்றன் முற்றத்தலையினிற் கரத்தால்மோதிச்
சந்துமெய்க்கணிந்த கூனிதன்னைக் கூனிமிர்த்துச்சார்ந்தே
யிந்திர தனுவைப்போன் றழெழிற்சிலையிறுத்தானென்றார். 4

அன்றியுமடர்ந்தே தாக்குமயவகரிவீரர்மாளச்
சொன்றதாளிருந்தசோலைகுறகினனென்றலோடுங்
கன்றியவரசனுக்குக்கடியமுட்டிகன்சாணூரன்
குன்றிவர்கரியின்மாபத்திரனிவர்கூறலுற்றார். 5

நீயுருத்தெழுந்தபோதுநீரணிகடவணைமி
யாயிரநயனன்வானோரமரிடையாற்றாராகிச்
சாய்வதங்கல்லாற்போர்செய்தருக்கிலாரெய்துங்கண்ணன்
மாயவேபொருவம்நாளையென்றவர்வணங்கினரால். 6

உரைசெய்தவவரைநோக்கியுவந்தெழிற்கலன்கணல்கி
யரசனுண்டிருந்தவேலையாசினிமதியுந்தூய்தா
யெரிசுடர்விளக்குங்கண்ணுக்கிருண்டவாயுருவமெல்லாம்
தெரியநல்லாடிநீழற்சிரமிலாதாயிற்றன்றே. 7

இனையதற்குறிகளெய்தவிடருறத்துயில்கொள்மன்னன்
கனவினிற்கரம்பூண்டேரினேறியோர்கடத்தினெண்ணை
நனையுநீள்குஞ்சியோடெக்கினனாகிப்பேயி
னினமொடுபிணத்தைத்தானுந்தழுவியாண்டிருப்பக்கண்டான். 8

ஆயதுகனவிற்கண்டாண்டஞ்சிமன்னிருந்தகாலைத்
தூயமாத்தாண்டன்கீழ்பாற்றோன்றியேயிலங்கல்செய்ய
மாயவனகரியெய்திச்செய்திடும்வலத்தினாலே
தீயவனழன்றசிறிச்சிறந்தமண்டபத்திற்சேர்ந்தான். 9

இம்பரினதன்மமேவியெழில்கொள்மண்டபத்தின்மீதி
னும்பரினுயர்ந்தமாடத்தோங்கரியாசனத்திற்
செம்பொனின்கலன்கள்பூண்டுதினகரனவிரேபோல
வம்பமர்குழலினார்கள்வாழ்த்திடவிருந்தான்மாதோ. 10

ஆதவன்கிரணம்போன்றவவிர்மணிக்கிரீடந்தோன்றச்
சோதிசெய்மதியைப்போலத்துலங்கியகவிகையோங்க
மாதர்சாய்மரைகள்வீசமங்கலநாதமல்கக்
கீதயாழ்வீணையெல்லாங்கிளத்தியமடவார்சூழ்ந்தார். 11

நடித்திடவல்லராசும்பாடியபிநயங்காட்டப்
படித்திடுபுராணமெல்லாம்பழமறையோர்களோத
விடித்திடுமுரசம்பேரியிலகிடவாமக்கண்டோ
டிடித்திடவிருந்தான்பாரிற்சுரர்களுபசனுநாண. 12

கயிலையில்லங்குமீசன்கமலத்துவாழும்வேதன்
மயிலினிற்றோன்றும்வீரன்வக்தெதிர்மலைந்தாரேனு
மயுதயானையின்பலத்தையடைந்தயானவரைவென்று
புயனிறத்தவனும்போன்றப்பொருவனென்றிருந்தான்மன்னோ. 13

மூன்றிலின்மருங்குசூழமூன்றுறாமிதண்கள்மீதி
ஞான்றியமறையோர்மன்னருலப்பிலாமனிதரெல்லாஞ்
சென்றினிதிருத்தலோடுஞ்சிறையிருந்தவர்கடம்மைக்
கன்றியசினத்துக்கஞ்சன்கடிதினிற்கொணர்மியென்றான். 14

உக்கிரசேனன்வண்மையுயர்வசுதேவனொப்பில்
சக்கரன்றன்னைத்தந்தாடவநெறித்தேவகன்று
னக்கிரமத்துக்கஞ்சனன்னையோடவரையெல்லா
முக்கிரக்காவலாளருறுதளையுடன்கொண்டேகி. 15

கஞ்சன்முன்காட்டலோடுங்கடலின்வாசுகிவாய்வீழ்ந்த
நஞ்செனக்கனன்றுநக்குநந்தன்றன்மைந்தன்வைகு
மஞ்சர்கள்மடிதல்காண்மினென்றுமற்றவரையெல்லாம்
விஞ்சியவிதணின்மீதினேற்றினன்வினையம்வல்லான். 16

நந்தகோபன்றானுயர்திரளொடும்நண்ணிநெய்பா
லிந்துவைநிகர்த்தவெண்ணைகதிபிவையெல்லாங்கொண்டு
வந்திடக்கஞ்சனோக்கிமணிமுடிதுளக்கிவஞ்சச்
சிந்தையிற்கனன்றுநீயிர்சேருதிரிதண்மீதென்றான். 17

ஆயவனுரைத்தலோடுமாயர்களோடுநந்தன்
றூயதாமிதணின்மீதிற்றலங்கியேயிருந்தான்கஞ்சத்
தீயவன்செயலைநோக்கித்தேவர்கோன்முனிவர்சூழ
மீயுயர்விசும்பினெய்திவிளங்கினன்விபுதரேத்த. 18

வேறு.

இடியெனப்பிளிறிக்கண்டையிரட்டல்களெழவே
கொடியதாய்வருகுவலையாபீடமேற்கொண்ட
கடியனையமாப்த்திரன்கஞ்சனுக்கிளைய
நெடியனாகியக்குரோதனோடெண்மரும்நின்றார். 19

சகலன்முட்டிகன்சாணூரன்சலதனென்றிவர்கள்
சிகரின்மல்லர்களெண்ணிலர்நிறைந்தெங்குஞ்சூழக்
ககனமஞ்சிடத்தவண்டைமல்லாரிகள்கறங்கச்
சிகியெழுங்கணர்சென்றுமன்னடியிணைதொழுதார். 20

சிகரவாயிலிற்சினத்தமாபத்திரனுடனே
திகரிலாதவெங்குவலையாபீடத்தைநிறுத்தி

யிகல்செய்சாணூரயாதவன்மதலையைச்செற்றேன்
பகையற்றுதியென்றவன்பகர்ந்திடும்வேலை. 21

கஞ்சன்முயற்சிப் படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 3339.

## 54 - வது, குவலயாபீடமகாபத்திரன்வதைப்படலம்.

ஆயன்மாதவனச்சுதானந்தகோவிந்தன்
பேயினாருயிருடனுகர்ந்தருளியபெரியோன்
றூயவன்குடக்கூத்தன்மால்சோதிபாற்கடலோன்
வேயையூதியவித்தகனெனவினையறுமே. 1

என்றகீட்டிசைபெழுதலும்விரைவினீராடி
மன்றல்மாலைநித்திலவடமார்பினின்வயங்க
வென்றியந்தும்பைபுனைந்துநற்கச்சையும்விளங்கத்
தன்றுணைப்பெரும்புதல்வரோடெய்தினன்றனிமால். 2

பொதுவர்தம்புதல்வர்களிருபுடையினுமார்ப்ப
மதுரைவீதியிற்சிவண்ணனுடன்வரவணங்கி
யதிரதக்குழாமயங்கரிதேரணிநிறையு
மதியுறங்கொமஞ்சிகரத்தின்வாயிலிற்சென்றார். 3

வேறு.

கோடுடைக்கிரிநிகர்குவலயாபீடமேற்
பீடுடைப்பாகன்மாபத்திரப்பெயரினா
னாடகக்கோயில்வாயிலினடைந்தட்புகு
மேடுடைத்தொடைகொண்மார்பினனைநில்லென்றனன். 4

என்றலுமாயவனிடையர்தஞ்சிறுவருஞ்
சென்றியாமரசர்கோன்செல்வமேநீக்கிமீள்
இன்றனம்விடுதியாற்கேழிலாப்பாகனே
யுன்றனக்கியான்புகின்வருவதென்னுரையெனா. 5

தூயவன்புகறலுஞ்சுடரழற்கண்ணுடைத்
தீயவன்கரிதனைச்செலவிடுத்தேயிசித்
தாயர்மன்புதல்வனேயகல்கிலாதுன்னுயிர்
மாயுமென்றுரைசெயமாயவன்கூறுவான். 6

தடையெனைச்செய்திடிற்றந்தியோடுன்னையுங்
கடிதினிற்கொல்குவனென்றலுங்கதமுறா
விடியெனக்குமுறுமாகரிதனையிறைவன்மேற்
படியதிர்த்துறவிடுத்தான்கொடும்பாகனே. 7

ஆயிரந்தோலினின்வலியுடைத்தாயழற்
பாயும்வெங்கண் ணுடைப்பகடடர்ந்தோர்கையாற்
றாயமந்தரமுறச்சூழ்ந்தவாசுகியென
மாயவனுடலினைச்சுற்றிவாங்கியதரோ. 8

ஆலமாமென்னவங்கழலுமாகரிகரங்
காலபாசம்மெனக்கட்டலுமொருவினா
ஞாலுகாலினினுழைந்தேகியேநாரணன்
வாலினோர்கையினாற்பற்றியேவாங்கினான். 9

கலுழனாகந்தனைக்கவ்வியேதிரிவபோ
னிலனின்மேல்விற்கடைநீளமையைந்துற
வுலகுளோர்மகிழ்வுறச்சுற்றிவிட்டும்பருன்
வலமதாய்வரினிடம்வந்தனன்மாயவன். 10

இடம்வலஞ்சாரிகையெண்ணிலதாகநின்
படியினிற்பகடுறும்பகடுசேறிடமுகத்
திடிவிழுந்தாலெனக்குத்தியேயிறையவன்
கடிதினிற்புடவியிற்கால்விசைத்தோடினான். 11

கரிகரத்துறுமவன்போலவெய்திக்கண
னிருநிலத்திடைவிழுந்திடவிருகொம்பினாற்
றரையினிற்குத்திடத்தப்பியேயோடினான்
கருவரையொத்தகைம்மாகதமுற்றவே. 21

விஞ்சினத்தோடுதன்மேல்வருங்கரியின்முன்
னஞ்சனக்குரிசில்சென்றேயராவொத்ததன்
விஞ்சுநற்கையினைப்பற்றிவீழ்ந்தேபக
டஞ்சிடக்கொம்பிரண்டும்பறித்தானரோ. 13

கொம்பிரண்டும்பறித்தேயொருகொம்பினால்
வெம்புமாபத்திரன்மடியமேல்மோதினா
னும்பலும்பாகனுமோங்கல்போலேவிழ
வம்பரத்தமரர்கள்மலர்பொழிந்தாடினார். 14

குவலையாபீட மகாபத்திரன் வதைப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - 3403.

---

## 55-வது, சாணூரன்வதைப் படலம்.

---

இலகியவடிவஞ்செல்வமிளமைதாய்தந்தைதாரஞ்
சலமிபினென்பதன்னிச்சமனுலகடையாவண்ண
மலையுறுமளக்கர்மீதினராவணைத்துயிலுமைய
னலனுறுபெயரைநித்தம்நவின்றியாம்வாழ்வர்தொண்டர். 1

மல்லர்கடிரண்டெதிர்மலேந்தவரையெல்லா
மொல்லேயினுரத்தின்மிசைகுத்திமெய்யொடித்துங்
கல்லிடையடித்துமிருகால்கரமுறித்துஞ்
செல்லுறவெறிந்துவதைசெய்தனனிராமன். 20

சிறிவருசாணுரனுடன்சினமுதிர்ந்தே
மாறிவருமுட்டிகனுமல்லருமடிந்தார்
தேறினர்கடேவகியுயர்ந்தவசுதேவ
னீறில்புகழ்தேவகன்முனேனிவர்களெல்லாம். 21

துந்துமிமுழங்கியதுதூயமலர்தூவி
யந்தரமிசைந்தவர்களோடமரரெல்லாஞ்
சிந்தைமகிழ்வோடுதுதிசெய்தனர்சிறந்தே
நந்தனொடுமாயர்துயரற்றுநலனுற்றார். 22

சாணூரன்வதைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-3425.

## 56-வது, கஞ்சன்வதைப் படலம்.

மாதவன்மாயவன்வாமனன்வானோர்க்கமுதீய்ந்தான்
சீதரனாராயணனுயர்பரமன்றிறனேமிப்
பூதனேயுயிருண்புனிதன்முராரிபுயல்வண்ணன்
வேதனேயருளும்விக்தகனெனவேவினைதீரும். 1

மல்லர்மடிந்தார்சாணூரண்முட்டிகன்மாண்டாரென்
றெல்லேயிறுன்பமெய்தியகஞ்சனிடிபோலுஞ்
சொல்லுறவாயனசுதர்களேயோட்டித்துறமின்க
ளொல்லேயில்நந்தன்காற்றளேயிடுமென்றுரைசெய்தான். 2

சீலமிலாதவுக்கிரசேனன்வசுதேவன்
கோலமிலாததேவகன்வஞ்சக்கொடியோரை
ஆலகிகர்த்தேகொல்லுமினுயர்பதிமேவி
ஞாலமிசைத்துய்நற்பவுசெல்லாந்தருவீரால். 3

என்றுமுனிந்தேகஞ்சனுரைத்தானிவைகேட்டார்
நின்றுநடுங்கும்போழ்தினில்நீலத்திருமாலோர்
குன்றினும்விஞ்சுங்கோளரிபோலக்குதிகொண்டே
சென்றனன்மீளியாதனமீதிற்றிகழ்வான்முன். 4

வந்தெதிர்நின்றமாமணிவண்ணன்றனேநோக்கிச்
சிந்தையழன்றோர்கேடகம்வாளோடியர்தீப்போ
லந்தகனேப்போனின்றடர்வானேயரிநோக்கித்
தந்தியையுறவெங்கேசரிபோலச்சலமிக்கான். 5

அழலுறுநயனக்கஞ்சனையாங்கேமுடிபற்றி
யெழிலுறுவண்ணன்சுற்றிடவெறிசக்கரமேபோற்
சுழலமணிப்பூண்குண்டலமோடுஞ்சுடர்வாளுங்
கழலநிலந்தானதிரவிழுந்தான்கனல்போல்வான். 6

நிலனுறமாண்டான்மார்பினினின்றநெடுமோல்மேல்
மலர்கள்பொழிந்தேவானுறுமிமையோர்திரள்வாழ்த்த
வலனுறுகஞ்சற்கிளையவர்வடிவான்சிலைகையி
னிலகியவெண்மரார்த்தனரெய்தார்சரமாரி. 7

சீலமில்கஞ்சனிளைஞர்களெண்மர்திறல்வீர
ராலமெனத்தாமெய்துமெறிந்துமடர்வாரை
மாலெதிர்சென்றுமற்றவரைத்தாமதியாதே
காலொடுகையைப்பற்றியெறிந்தான்ககனத்தே. 8

அம்பரமீதினுவிதளர்ந்தேசுழல்கின்ற
பம்பரமேபோல்வீழ்ந்துமடிந்தார்படியின்மே
லும்பர்கள்கண்டேயாதவசோதியுலகுண்ட
வம்பரவாழியென்றுசொரிந்தார்மலர்மாரி. 9

கஞ்சன்வதைப்படலம் முற்றிற்று.

ஆகதிருவிருத்தம் - 3434.

---

## 57 - வது, உக்கிரசேனன் முடிசூடு படலம்.

கொலைபலசெய்தோர்பிறர்பொருள்கவர்ந்தோர் குருவினையிகழ்ந்திடுமூர்க்கர், நலமிலியானோர்பஞ்சபாதகத்தர் நவையுறுகுணத்தினரெனினு, மலர்மகள்கொழுநன்றன்றிருப் பெயரைமறக்கலாவடியரைவணங்கி, னலரிகாணிமம்போலருவினை யொருவவமரர்கடுதித்திடவாழ்வார்.1

சினமுறுகஞ்சனிளைஞர்களுடனு மடிந்திடச்சிறந்ததேவகியு, மனமகிழ்சூரசேனன்றன்சேயும் வல்வினையொருவியேவரவே, யனகன்வந்தெதிர்சென்றிறைஞ்சிடக் கண்ணீர்நிலனுறத்தழுவியின்புற்றூர், கனகன்வல்லுரத்தைப்பிளந்தவனன்னைகவின் முலைப்பாலினை நுகர்ந்தான். 2

மாலுறுமகிழ்வாலிருகணுலன்னை வதனத்தைநோக்கியங்குரைப்பான், பாலனும்பருவத்தென்விளையாட்டுக் கண்டிலைபயந்தநீயென்ன, வேலவார்குழலியிருகணீர்சோரவிரு குறத்தழீஇக்கொண்டென்மைந்த, சீலமில்கஞ்சன்றனைவதைத்தென்றன் சிந்தைநோயகற்றினையென்றாள். 3

அன்னையிவ்வசனமுரைத்திடக்கேட்டு வரிவசுதேவனைநோக்கி, வீங்கிலமதனிற்றந்தைதாய்குற்றமற்ற வில்லாளிவர்க்கேவல்வா மன்னமிட்டிலாதான்றன்றசையைத் தாணருந்தியதொக்குமுன்மகவாய், மன்னயான்பிறந்துநீசிறையின் கண்வருந்தச்சோறருந்தியதென்றான். 4

தூயமேனகையுநாணுஞ்சுபத்திரைதன்னையீன்று
மாயிருஞாலந்தன்னில்வயங்கியேயமருநாளின். 10

குருதட்சணைப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - 3455.

---

## 59-வது, உத்தவப் படலம்.

---

வேலையைவரையாற்கட்டிவிலங்கலோடிலங்கைமேவிச்
சூலியைக்கயிலையோடுமெடுத்ததுன்மதியோன்சென்னி
ஞாலமேற்றுணிந்துவீழநல்லபல்லத்தையேவி
நீலமால்வரைபோல்நின்றானடியிணைநெஞ்சுள்வைப்பாம். 1

மாதவன்மதுரைதன்னின்வைகிடுந்தினத்தோர்நாளின்
தீதிலுத்தவனைநோக்கிச்செப்புவானெனக்கன்பாய
தாதையாநந்தனாரென்றாயனாளசோதைநேய
மாதராரென்னையோவும்வருத்தம்நீயகற்றவேண்டும். 2

என்னுயிர்த்துணைவநீயேயிக்கணமேகியாயர்
தன்னகரதனிற்பின்யான்வருகின்றதன்மைசாற்றி
யன்னையைப்பிதாவைத்தேற்றியாயர்கள்மடவாராய
மின்னனாரிடரைநீக்கிமீள்தியாலென்றுரைத்தான். 3

இந்திரைகொழுநன்கூறவிரதமீதுத்தவன்போய்ச்
சிந்தையின்மகிழ்ச்சியோடுமாயர்தம்பதியைச்சேர
நந்தன்வந்தணைத்தேயின்சொல்நவின்றன்னமருந்துவித்துச்
சந்துதண்மலரளித்துப்பின்னிவைசாற்றலுற்றான். 4

வேறு.

மாயவன்றானினிதினிருந்தானோவீண்டுவருவனோவடமதுரைமருவி
னானோ, தாயெனவேயசோதைதனைநினைப்பனோதன் றந்தையென்றே
யென்மேலிற்றயர்வைப்பானோ, ஆயர்தங்கள்சிறுவரையு மறந்தானோதா
னன்பினுறுமரிவையரையெண்ணிலானோ, தூயபசுத்திரளுடனேதோன்
றக்காணேன் றொல்வினையேனென்செய்கேன்சொல்வாயென்றான். 5

தீயாலுமழையாலும்விடையினாலுஞ்சீறியெழுமரவாலும்பரியினாலும்,
மாயாமலெனைக்காத்தான்வருகிலானோ வனத்தினுறுகோக்களெல்லாம
வனையுன்னி, மேயாதுவெருண்டோடும்வரையிற்கானில் வெறுநிலத்தின
திமணலின்விளங்கியெங்கும், காயாம்பூவண்ணனடிகாணுந்தோறுங்கன
லினுறுமெழுகாவேனென்றுசொல்வான். 6

வேயோசைகேளாத செவியினாரும் விளம்பியசொல்லழல்நாராசம்
போற்றைக்கும், காயாம்பூமேனியனைநோக்காக்கண்கள் கமரினுறுகுழி

யெனவேகாணுதோன் றும், பேயாகித்திரிகின்றேனென் றனைந்துபெரு
ந்தாரையாய்நயனம்புனல்கள்வீழ, வாயாலொன் றுரைக்கிலனுள்வெதும்
பிவிம்மி வாய்விட்டங்கரற்றியவனிரங்குங்காலே. 7

அன்னநடையாகியமின்னசோதையெய்தி யாயர்குலநாயகனை நோக்
கிஞால, மன்னவனும்வடமதுரையெய்திவாழும்வஞ்சனைக்கஞ்சனை வதை
த்துமகிழ்ந்துபின்ன, ரன்னையெழிற்றேவகியாய்த்தந்தைதானு மருள்செ
றியும்வசுதேவனுகிப்போனுற், கென்னவுன்னியிரங்குகின்ருயரசர்மைந்
த னிடையர்சுதனுகுவனேவென் றுசொல்வாள். 8

உத்தவனேகேட்டியென்றன்மைந்தனென்னை யுவந்துமுலைதாவெ
ன் றுகடையுந்தாழி, மத்தினையேபிடித்துநகைசெய்தவாயின் வசனமுகங்
கண்காதுமார்புகாணே, னித்திலத்தாவடமசையச்சிலம்புமார்ப நிருதத
மிடுந்தாள்காணேன்வெண்ணெயேந்துங்,கைத்தலத்தினெழில்காணேன்
கறையிஞர்த்த கயிற்றுடனுந்தவழ்ந்துசெலுங்கவானைக்காணேன். 9

கன்றினங்கடனைமேய்க்குங் கோலுமீதே கறையினின்யான்கட்டி
வைத்தகயிறுமீதே, சென்றுதாழியையுடைத்தமத்துமீதே சிகைமிசை
யின்வயங்குமயிற்பீலியீதே, தன்றுணைவர்மருங்குறப்பார்மரங்களெல்லா
ந்தழைத்திடவேதானூதுவேயுமீதே, யென்றனையுமறந்துவட மதுரைக்
கேகு மென்மகன்ருன்வருகிலன்யானென்செய்கேனே. 10

இனையனவெலாமொழிந்துமைந்தன்மேனி யெழில்நினைந்துவிளையா
டுந்திறத்தையுன்னித், தனமுறுபால்பெருந்தாரையாகியோடத் தடமல
ர்க்கண்ணீர்முலையிற்றதும்பியோட, மனமுருகியுளம்வெதும்பியுருகுகின்
ற மங்கைதனைநந்தனெனுமறிஞனேக்கி, யனநடையாயம்மதலைக்கழுகின்
ருய்நீ யறிவிலியோதுயரொழிதியென்ருனன்றே. 11

நங்கையழக்கொழுநனெய்தித்தடைப்பப்பின்னர் நந்தனிரங்கும்போழ்
திலசோதையான, மங்கைதுயரொருவுகெனமாறிமாறி மாயவனுமிறை
யையுன்னுமவரைநோக்கிச், செங்கைகுவித்தேதொழுதுமறைக்கும்யோ
கீசுரர்தமக்குமெட்டாததேவதேவ, விங்கிவர்க்குச்சுதனுகியன்பையீய்ந்
தாயென் றுரைத்தேயுத்தவன்ருனியம்பலுற்ருன். 12

அருவரையின்மிசையினெய்தியனந்தகால மநிலமுணவாகவனப்பில்
லாயோகம், பெருகுதவத்தினர்கள்பெறுமின்பந்தன்னைப் பெற்றவர்நீ
ரும்பெருமைபேசுவார்கள், நிரையமகலுயர்கதியேயடைவாரீது நிச்சயமா
மென் றுரைத்தானுத்தவன்ரு, னிருதயத்திலிருவர்களுமாயன்சீரை யெ
ண்ணியெண்ணியிராமுழுதுமவிழித்தான்றே. 13

மறுவில்பரமேட்டிபுகழ்பாடியாடி மனம்வேறுவைக்கிலராமன்பர்த
ங்கள், பிறவியெனுமிருளொருவுஞ்சோதியெய்தும் பெற்றியெனக்கங்கு
லறக்கதிரோன்ருேன் ற, நிறைதயிமைநிலமத்தாற்கடைவோரெல்லாம்
நெடுமாயன்கீர்த்தியினைக்கீதம்போல, வறைபவர்கள்குரலோசைசெவியி
னுரு மயிழ்தெனவேகேட்டனனுத்தவன்ருனம்மா. 14

இரவியெழவரவணைத்தினெய்துமாதரிரதமிசைவந்தனர்யார்முன்ன ரெய்தி, யரசரிலக்குரூரனென்றேபெயருராகி யச்சுதனைப்பிரிவித்துக் குரூரஞ்செய்த, விரகனிவன்மீளவந்ததென்கொலென்று விளம்பினர்க் கேயறிந்தவருத்தவன்வந்தானென், றுரைசெய்யவரிவையர்களெல்லாங் கூடி யுத்தவன்றனுடனில்வணங்கியுரைப்பதானர். 15

அரியுன்னைவரவிடுத்தகருமமேதிங் கன்னைபிதாவின்பாலினேவினு னோ, வெரியுருகுமிழுதெனவேயுருகுமெம் பெண்ணினைநினைக்கிலானஃ துமறிவாம்யாங்கள், விரிமலரின்மதுவில்லாதொருவும்வண்டு வெறுமை யனைவெறுத்துவிடும்வேசிதானுந், திரள்கனிகளுதிர்மரத்திற்பரவைதா னும் போலவெம்மைச்சீதரனும்நினையானென்றார். 16

பூதனையினுயிர்கவர்ந்தமாயன்றன்னைப் பொருந்தியவெம்மாவிகொ ள்ளவருகிலானோ, தாதையுடனன்னைதனைமறந்துவேந்தர் தம்பதியிற்சா ர்ந்தவன்றானரசர்பெற்ற, மாதர்தமைமணஞ்செய்வதல்லாலெம்மை மதி த்திடுவனோவிருந்தாவனத்திலன்று, சூதுநினைந்தும்மைவிட்டுப்பிறியே னென்றகுளுறவுசெய்தவன்றன்றூதாசொல்வாய். 17

கைகொடுகைகளைக்கோத்துக்குரவையாகக் களித்தாடிப்பாடித்தன் கடைக்கண்ணாலே, மையல்விளைத்தும்மையலால்மாதராரை மனத்தாலு மூள்கிலன்யானென்றுதானே, மெய்யுரைப்பார்போலிதங்கள்மொழிந்து நீண்டுவிளங்குவிருந்தாவனத்தினெம்மைவிட்டுப், பொய்யுரைத்துப்போ னவன்றானுகந்தனிற்பூமகள்பெட்புறவென்கொல்பொருந்தினானே. 18

என்றரிதன்புகழ்பாடிக்களிப்பார்பின்ன ரிரங்கிடுவர்நகைத்திடுவரி றையென்மேய்த்த, கன்றிதுவாமெனவணைப்பரிழுதுபால்நெய் கடத்தினு ளவிவைதிருடுக்கள்வன்றன்னை, யன்றுமுதலின்றளவிப்பதியிற்காணோ மென்பரடர்மழைகாத்தேயங்கையேந்துங், குன்றினைத்தான்ரொழுவர்க ருமேகங்காணிற்குடமாடுகூத்தனெனவெழுவரம்மா. 19

உத்தவனைநோக்கியரிமயலினாலே யுருவறியாதயர்ந்துலகமெல்லாமு ண்ட, வத்தன்விடுதூதுவனுமளியேகேளாயாரமதிவசந்தமெல்லாமனலா ய்வீசுஞ், சித்தசன்வந்தெய்தின்றானவன்றன்கையிற்சிலையினுநாணன் றோநீயுமந்தோ, சித்தன்விருந்தாவனத்திலாவோடெம்மை நினைப்பதுண் டோபொய்யின்றிசகழ்த்துவாயே. 20

அளிகேளாயரியெம்மேலாசையில்லை யஃதறிந்தோமவனன்பைவிடு துமென்றால், விளைவானமயல்கடல்போல்வளர்ந்துசூழ மீண்டுமவனுரு வையுள்கிமெலிவதாகி, யுளம்வேகக்கலைசோரநாணமேக வூதுகுழலிசை கேளாவுடனைகின்ற, வெளியேன்றம்முச்சியிற்றன்பாதம்வையா னிவன் புருடோத்தமனானதெங்ஙனென்றார். 21

நீதேதுமில்லாததெரிவைமார்கள் செயலினைக்கண்டுத்தவன்றான் றெரிந்துநோக்கிப், பூதானங்கோதானங்கனகதானம் புரிந்துபுவியின்வே

ள்வியைந்துஞ்செய்து, மாதானம்வழங்கியருந்தவங்கள்செய்த மாதவத் தோர்பெறுதகலநீயிர்பெற்றீர், தூதாகியெனைவிடுத்தவிறையும்மேலிற்சு ரக்குமருடுயோனீண்டடைவனென்ருன். 22

நந்தனுடனசோதைசுதனென்றுநையநாரியர்கணுயகனென்றேமோ கிப்பச், சிந்தைமகிழ்ந்துத்தவன்ருனுலுதிங்கள் சிறந்தாயர்பதிதன்னிலி ருந்தபின்ன, ரிந்திரைதன்கொழுநனுடன்றந்தையன்னை யிலங்கியவாய் ச்சியரிவரையிறைஞ்சியேத்தி, யந்தமுறுமிரதமிசையேறிநின்ருண்டன் பினுடனிவையிவையேயறைகின்ருனல். 23

அன்றுலகமளந்தான்றனடிக்டோயுமவனிநமசெடிகணமவன்ருன் மேய்த்த, கன்றுநமவாவுநமமயல்கொள்மாதர் கழலிணையிற்றாள்கள்நமக ரத்தினேந்துங், குன்றுநம்வெழில்மடவார்கலைகொண்டேறுங் குருந்துந மவென்றென்றேதொழுதுகூறி, மன்றல்மலர்பொழில்சூழுமதுரையெய் தி மாயனுடனிவையெல்லாமொழிந்தான்மாதோ. 24

சீதரன்ருன்கேட்டருளிகைத்துவந்து சீர்மையுறமுத்தவனேடிர விற்சென்று, மாதவஞ்செய்கூனிமனைவாயினெய்த வணங்கியவள்மாழை யுறவிதானந்தோன்றச், சோதியுறநீபநிறைவயங்கத்தீபதூபமெழ மணி மாலைதுலங்கப்போற்றித், தாதவிழுமாலைநிறைமண்டபத்திற் ருமரைத் தாள்பன்னீரால்விளக்கினுளால். 25

குங்குமங்கத்தூரியுடன்பனிநீர்சேர்த்துக் குழைத்துநிறைசந்தனமெ ய்குளிரக்கொட்டிச், சிங்கலில்வெண்பட்டாடைபுனைந்துகாஞ்சி திகழ்ந்தி டவேதனத்தினணிகலன்கள்மின்னத், தங்கமுறுசெங்கைதனிற்கண்ண னேடுதொனிருந்து தண்மலரைம்பான்மீச்சூட்டி, யங்கையுறவணைத்திரதி சமழ்க்கமேவியனுராகக் கலவிசெய்தாளரம்பையன்னுள். 26

உத்தவப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 3481.

## 60-வது, பாண்டவப்படலம்.

திருமகளும்புவிமகளும்நீளமின்னுந் தேவியராச்சிறந்திடமாமதன ன்றன்னே, டருள்செறியுங்கமலபிரான்சுதனுமாக வண்டமெல்லாந்தன் னகட்டுளடக்குமையன், காமுடிதாள்விழிபெயராயிரமேயாகக் ககபதியி ன்வாகனமாய்ப்படையைந்தேந்தி, யுரகமுயர்மெல்லணையிலிலங்குகின்ற வொருமுதலாமவன்புகழையுரைத்துய்வோம்யாம். 1

மாயவனுங்கூனிதனைமகிழ்ந்தணைத்துமனையிருத்தியென்றவளையொ ருவிக்சேழற், றூயவனுமுத்தவனேடக்குரூரன் றலங்குமிடத்தேகுதலும வன்வந்தெய்தி, நேயமுடன்வணங்கியடிவிளக்கியந்த நீர்சிரத்திற்றெளித்

துமணியவிர்களான்ற, பாயுமெழில்மண்டபத்திலமர்தியென்றன் பாவ மறவுயர்ந்தனன்யான்பரமவென்றான். 2

காந்தினிதன்சுதன்களித்துக்கழறுவானேக்கண்ணபிரான்றழுவியுட னிருத்திப்பாரின், வேந்தன்வசுதேவன்றன்கோத்திரத்துள் மேவியநீயெ ன்றனக்குத்தந்தையன்றோ, பாந்தளுயர்த்தோனகரிற் குந்திதேவிபா ண்டவர்களோடெய்தியிருந்ததன்மை, யாய்ந்தவர்களிடரொருவச் சேறி யென்றேயரிமனையெய்தவவன்விரைவிற்சென்றான். 3

வேறு.

இரதமீதேறித்தூயவக்குரூரன்றானேகிச்
சரதநான்மறையோர்சேருமத்திமானகரிற்சார்ந்தே
விரதமாத்துரோணன்றன்னைவிதுரன்வீமனைக்கண்டு
சுருதிநூல்வழாதகுந்திசுதர்கள்பாற்சென்றானன்றே. 4

தருமனோடைவரெய்தித்தாடனிலிறைஞ்சலோடு
மருகரைத்தழுவிக்குந்திவணங்கிடமலர்க்கைதன்னு
லிருகணீர்சோரவேதானணைத்தபின்னெழிலாலோங்குந்
தெரிமணிமண்டபத்திற்சேர்ந்தினிதுரைக்கலுற்றான். 5

குந்தியுன்முன்னோன்றன்னைக்கொடியனாங்கஞ்சன்செய்த
வெந்துயரங்கள்வீழவிரலுடைமாயன்றோன்றிச்
சிந்தையின்மகிழ்ச்சியெய்தத்தீயவன்றன்னைச்செற்றே
யந்தமாமதுரைதன்னிலமர்ந்தனனென்றானன்றே. 6

ஆயவையெல்லாங்கேட்டாண்டழுதபின்மகிழ்ந்துகுந்தி
பாயும்வெவ்வுழுவைசேரும்பழுவத்திற்பாண்டுவேந்தன்
மாயவேகளைசனில்லாவல்வினையேனும்வாடிச்
சேயிவரைவரோடுமிந்தமாநகரிற்சேர்ந்தேன். 7

பாதகனானபாந்தளுயர்பவன்பயத்தினுள்ளே
யேதமார்கழுவைநாட்டியெழில்கொள்வீமன்கழுத்தின்
மீதுறுமரவைக்கட்டிவியாளலோகத்திற்றள்ளி
யோதனத்தருநஞ்சிட்டானுய்ந்தனர்விதியாலென்றாள். 8

கொடியகானகத்திற்செந்நாய்க்கூட்டத்திற்குரங்கம்போல
விடவரவுயர்த்தோன்செய்யும்வினையினுளிருந்தோம்வெய்ய
கடியனாங்கஞ்சன்றன்னைக்களைந்தவன்களைகணாகி
யிடரினையகற்றிலுய்வோமென்றுதானிரங்கினளால். 9

அவ்வுரையெல்லாங்கேட்டவக்குரூரன்றானோந்து
நவ்விபோல்விழியினாளோநாரணனருளினாற்றால்
வெவ்வினைசெய்வோர்மாண்டுவீழ்குவர்பிரையந்தன்னிற்
கவ்வைநீயொழிதியென்றுபின்னருங்கழறலுற்றான். 10

மாயவன்மொழிந்தகேட்டிவஞ்சனை நும்மைச்செய்யும்
தீயவர்சிறிதுநாளின்மடிகுவர் திண்ணஞ்சிந்தை
நோயினையொருவுகென் றுநுவல்கின்றானெங்காய்நீயுன்
சேயினரோர்மொலைமறக்கலைதினமுமென்றான். 11

இந்நல்லுறுதிசொல்லியெங்கைநீயிருத்தியென்னா
வந்தனாமரசன்பாலினக்குரூரன்றானெய்தச்
சிந்தையின்மகிழ்ச்சியோடுமொதனஞ்சிறப்பவீய்ந்தே
யிந்திரைகொழுனன்கோடிருந்தனனோவாண்டென்றான். 12

என்றலுமக்குரூரனியல்பிலாக்கஞ்சன்றன்னைக்
கொன்றவன்றாய்தந்தைக்குக்கோலமாமகுடஞ்சூட்டி
என்றுதையத்தைப்போன்றெம்மிடரெலாமொருவமாயன்
வென்றிசெய்திருந்தானென்றுபின்னரும்விளம்பலுற்றான். 13

இருநிலமதனிற்செல்வமிளமையிவ்வுடனில்லாது
தருமபாவங்களிந்தத்தரணியுள்ளளவுநிற்கு
மரசநீயஃதுணர்ந்துன்னனுசன்றன்புதல்வர்தம்மை
வரிசையால்வளர்த்தியென்னமன்னவனுரைப்பதானான். 14

அறனெலாமறிந்துசொன்னாயக்குரூராவதெல்லா
மறையுறுவாய்மையாமுன்மருகரென்மைந்தரன்றே
குறைவிலாவரசநீதான்கூறவேண்டுவதோவென்றங்
கறையுமந்தனைத்தானீங்கியைவரைநிறுத்திப்போனான். 15

பரியுறுவையமீதிற்பழனஞ்சூழ்மதுரையெய்தி
யரியினைவணங்கிக்குந்தியருள்செறிபுதல்வரோடு
மூரகமீதுயர்த்தோன்செய்யுமுயரும்வஞ்சனையினுய்ந்தே
தெரிகிலாநயனனூரினிருந்தனர்செல்வவென்றான். 16

மைத்துனரோடுங்குந்திவருந்துறுவசனமெல்லாம்
நத்துறுசெங்கையையனகையுடன்கேட்டுத்தீய்மை
யித்தலத்தியற்றினார்களிருநரகடைவரென்று
வித்தகன்மதுரைதன்னின்விளங்கியேயமரும்நாளின். 17

பாண்டவப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - 3498.

---

## 61-வது, சராசந்தணபசயப் படலம்.

இம்பரின்வரைபோலோங்கியெதிர்ந்திடுமிரவிசேயை
யும்பர்கள்வெருவத்தோளினெருக்கித்தன்னூரின்மேவுங்
கும்பகன்னன்றன்கைகால்குறைத்தவன்சிரத்தைநீனா
மம்பரத்திடையினிட்டவழகனைவணக்கஞ்செய்வாம். 1

சித்தசன் றன்னைத் தந்தோன்கஞ்சனைச்செற்றசெய்கை
அத்தியும்பிராத்திதானுமத்தனையனுகிவீழ்ந்து
கைத்தலமுதரத்தெற்றிக்கண்ணினீர்சோரச்சொன்னு
ரத்திறங்கேட்டமன்னனழலெனக்கொதித்தானன்றே. 2

மருகனைக்கொன் றமாயன் றன்னையான்வதைப்பனென்னுக்
கருகியசினத்தனுகிக்கரிபரியிரதமெல்லாந்
தருகுதிரென் றுவெய்யசராசந்தன்கூறலோடும்
பெருகியவாரிபோலப்பெயர்ந்தனவனீகவீட்டம். 3

சங்குகள்பணவம்பேரிசச்சரியிடக்கைதக்கை
மங்குலினிடிகளஞ்சமுழங்கிடவயவரெல்லாம்
பொங்கினுரிறுதிகாலத்தனைவரும்பொன்றத்தோன் று
மங்கைபங்காளனென்னமகதனுமெழுந்தான்மாதோ. 4

கரியினம்வரைகளேலக்கண்டைகள்கலிப்பச்செல்லப்
பரியினம்பவனமேயப்பார்மிசைப்பரந்துதாவ
விருகிலத்தக்குரோணியிருபத்துமூன் றசூழத்
தெரிமணியிரதமீதிற்சென் றனன்மகதர்கோமான். 5

அதிரதர்சூழப்பேரியறைந்திடுமெமலையெய்த
வெதிர்நிகர்தோளின்மாதர்வெண்மையார்கவரிவீசக்
கதிரவன்றேற்றநாணக்கனகமாமவுலிமின்ன
மதுரையைவளைந்துசூழ்ந்தான்மகதராசன் தான்மன்னே. 6

ஆதவர்போசரெல்லாமாலங்காணிமையோரேலப்
பீதிகொண்டிரியும்வேலைப்பிறங்கலால்வருடங்காக்கு
மாதவன்முறுவல்செய்துமதிவண்ணனேடுங்தேரின்
மீதுசென் றடர்ந்துவிஞ்சுமீளிபோற்றூக்கினுனல். 7

நீதியில்மகதராசனெடுவரைபோலநின் று
சீதரன் றன்னைநோக்கிச்சிறியனுமிவனேரல்லன்
பூதலத்தென்னேடேநீபொருதியோவிராமவென்ன
மாதவனகைத்துக்கஞ்சன்மாமனுக்கிவைசொன்னுனல். 8

உன்னுடைமருகன்கஞ்சனுயிர்கவர்ந்தோனும்யானே
யென்னுடன்பொருவாய்நீயென் றியம்பியேயிலங்குகின் ற
தன்னுடைக்கரத்துச்சார்ங்கம்வளைத்துயர்சரங்கள்கோடி
மின்னுடைமேகம்போலப்பொழிந்தனன்வீரர்வீரன். 9

அன்னதுகண்டுநெஞ்சமழன் றுயர்மகதன்சேனை
துன்னினர்கணையின்மாரிசொரிந்தனர்திசைகடோறும்
பொன்னெடுவரைபோற்றோன் றும்புகரிபம்பரித்தேர்தூண்டி
மின்னகுவேலும்வாளும்விட்டெறிந்தார்த்தாரன்றே. 10

இடிகளும்வெருவப்பேரிமுழங்கிடவிலங்குசங்கந்
துடியொகெறங்கச்சின்னங்காகளந்துலங்கியார்ப்பக்
கொடிகுடைகவரியோங்கக்கொடியவரெதிர்ந்துவானம்
வெடிபடச்சிலைநாணோசையுறச்சரம்விடுத்தார்மாதோ. 11

சக்கரமுசுண்டிகுந்தந்தண்பெயர்பிண்டிபால
முக்கிரமிக்கசூலங்கற்பணமுலக்கையொள்வாள்
கொக்கரித்தெறிந்துவெய்யகோடுங்கணைபொழிந்துசூழ்ந்தார்
நக்கனுன்முகன்வலாரிநாட்டங்கள்புதைத்தாரன்றே. 12

வேறு.

முரசதைந்தன திமிலைவளை முழங்கின முடுகி
யரசர்வெஞ்சினமடையவளவில்வெங்கணைபொழிய
விரதமுந்தியவரிதன்னெழில்கொள்வெஞ்சிலைவளைய
வுரகனஞ்சிடுபகழியுலகமெங்கணும்விசிற. 13

வீரர்தஞ்சிரமுருளவீறுவெங்கரிமிடைய
மூரிவெஞ்சிலைமுரியமூளுவெம்பரிமுடுகு
தேரினங்களுமழியவீடுசெம்புனறிரைகொள்
வாரிமண்டிடவெழில்கொள்மாயன்வெங்கணைமுடுக. 14

கரமிழந்தனர்சிலர்கள்கதையிழந்தனர்பலர்கள்
குரமிழந்தனகுதிரைகொடியிழந்தனரிரதர்
சிரமிழந்தனர்வயவர்சிலையிழந்தனரரச
ருரமிழந்திடுகரிகளுயிரிழந்தனகடிதின். 15

கொடிதுணிந்தனகுடைகள்கடிதொடிந்தனகுதிரை
யடிதுணிந்தனவுடலமறவிழுந்தனகொடிய
கடமிடைந்திடுகரிகள்கதமிழந்தனநெடிய
படிபரந்தனகுருதிபரவையெங்கணும்நிறைய. 16

வயவருந்தினவிரதமழியவன்சினமுடுகு
கயமடிந்திடவுதிரமுவரியின்கடிதடைய
உயரும்வெண்கொடிதுணியவுருளும்வண்டில்களொடிய
வயமுருண்டிடவெருவியரசரெங்கணுமிரிய. 17

இரிவைகண்டடர்மகதனிரதமுந்தினன்முடுகி
யரிமறைந்திடநெடியவழலும்வெங்கணைபொழிய
வரிநெடுஞ்சிலைவளையமழைவணன்பொழிபகழி
யரவைநுங்கியகலுழனெனவரிந்தனவதனை. 18

நெடியவன்கணைசொரியநெறியில்வஞ்சகனெடிய
கொடிமறிந்தனவெழில்கொள்குடையொடிந்தனவிவுளி
யடிதுணிந்தனவலவனுடறுணிந்தனனெடியின்
மடியவெஞ்சிலைமுறியவெருவிநொந்தனன்மகதன். 19

மகதனஞ்சிடவெதிரும்வரிநெடுஞ்சிலையவர்
சிகிதருங்கணர்பரியின்வெரினின்விஞ்சினர்சிலவர்
நகைதரும்புகைமிடையநகமெனும்பரிகரிகள்
செகதலங்களுமதிரவடரவந்தனர்சிலர்கள். 20

எழிலியஞ்சிடமுரசமிலகுதுந்துபியறைய
மழுமுசுண்டியொடயில்கள்வளையும்வெங்கதையெறிவ
ருழுவையென்றிடவடைவருலகமெங்கணுமறைய
மழையெனும்படிகணைகள்பொழிவர்வந்துறுமறவர். 21

மணிகணின்கணினெனமும்மதமுறுங்கரிமிசையி
னணிகலன்கதிரொளியையடரவந்தனர்சிலவ
ரிணையில்வெம்பரிகடவியிருநிலந்துகளுறமொய்
கணைபொழிந்தனர்சிலவர்கமலனும்பர்கள்வெருவ. 22

வேறு.

மங்குனிகர்வெங்கரியின்விஞ்சியெழுமொன்னலர்கள்வந்தடரலுஞ்
சிங்கமுழையின்கணினகன்றுவெளியெய்தியடர்செய்கையெனவே
சங்குநிறவண்ணனிரதந்தனிலிழிந்தொளிர்தடக்கைதனிலே
கங்கணமிலங்கிடவடர்ந்துயர்கலப்பைகொடடித்தனனரோ. 23

ஒடிந்துபடியிற்றுகளழுந்தவிரதங்களுயருங்கொடியொடுங்
கடந்தருகரித்திரள்கள்கோடுகைசிதைந்துகடிதிற்புரளவே
மிடைந்தெதிரடர்ந்ததுரகந்துடைதுணிந்துமெலிவுற்றுவிழலு
மடிந்தனர்கள்வெஞ்சிலைபிடித்துவருமொன்னலர்கள்மண்ணின்மிசையே.

ஆடினகவந்தமெணிலாதவலகைத்திரளடர்த்தவவணி
ஞோடினநிலத்தினுறுசெங்குருதியாறுநதியொத்தலையெழ
வீடினபிணக்குவைகள்மேகமுறவெங்கணுமிடைந்தவிமையோ
ரேடவிழுமாமலர்பொழிந்துமறையாசிசளியம்பினரரோ. 25

பரித்திரள்கரித்திரள்படைத்தலைவரின்னவருணத்தினர்களென்
றுரித்தெரிகிலாவகையுருத்துயர்கலப்பைகொடுறக்கியடியா
நெரித்துடலினிற்றசைகள்பூளையெழுசெங்குருதிநீருகநிலத்
தரைத்தனனுருத்திரனொடந்தகனுமஞ்சமதிவண்ணனமரின். 26

இரைத்துவருசேனையிருபத்தினொடுமூன்றுதொகையக்குரோணியி
னொருத்தருமுயாவகையுருத்திறதியுற்றிடுமுருத்திரனெனப்
பருத்துயர்கலப்பைகொடுவீரர்கரிமாவிவைபடச்சமர்செயுந்
திருத்தமதுகண்டுதுதிசெய்தனர்கடேமலர்கள்சிந்தியிமையோர். 27

கண்டுமெகதன்கொடியகாலனெனவேயிரதமீதுகனல்வா
னெண்டிசையுமஞ்சவளையூதிவிண்ணெழுந்தெழிலிபெய்வதெனவா
னண்டர்கணடுங்கவில்வளைத்துநெவோளிகளநந்தம்விடலும்
விண்டலமறைந்திருள்பரந்துயரவும்பருதிவெய்யிலகல. 28

அதிர்த்தெழிலிபெய்வதெனவாசுகம்நிறைந்திடவழற்கணுறவே
கொதித்துயர்கலப்பையொருகைகொடுசுழற்றிவருகொல்கணையெலா
முருத்திரதமாமடியமாவலவனென்புகளொடிந்துபடியிற்
பதைத்திடவடித்தனனெதிர்த்தமகதப்பகைஞனஞ்சியிடவே. 29

அலத்தினடியாலிரதமாவினொடுசூதனுமழிந்துயிர்விடச்
சலத்தொடுமிழிந்துமகதன்கொடியதண்டுகைபிடித்தெதிர்தலும்
நலத்துறுமுரோகணிதன்மைந்தனகைசெய்துயர்கலப்பைகொடுதன்
வலத்தொடுமெறைந்திடமணிக்கதைபிளந்துதுகளாயினதரோ. 30

அடற்கதையொடிந்துபொடியாயுதிரவேயழலுறங்கணரச
னுடற்கனலவந்தெழிலலாயுதனுரத்திடைபுடைத்திடலுநீள்
கடற்குள்வடவாவனலையொத்தமகதன்கதிர்முடித்தலைதனைத்
தடக்கையினிழுத்துவதைசெய்யுமுன்முராரிதடைசெய்தனனரோ. 31

வேறு.

சீதரனிராமன்றன்னைநோக்கியேசெப்புவானம்
மாதுலன்மாமன்றன்னைவதைசெய்யலாகாதையா
வேதமிலக்குரோணியிருபத்துமூன்றுமாள
வேதனையெய்தினானைவிடுதிநீயென்றுசொன்னான். 32

மாயவனியம்பலோடுமேதிவண்ணன்மகதன்றன்னை
நீயுயிருய்ந்துபோதியெனுமுரைநிகழ்த்திவிட்டான்
தூய்மையில்நெஞ்சினானுந்துயரமுநாணுமெய்த
வேயெனுமுன்னந்தான்வாழெழில்நகர்க்கெய்தினானால். 33

தரணியாள்மகதராஜன்பின்னருந்தாரின்வெள்ள
மிருநிலத்தக்குரோணியிருபத்துமூன்றுங்கொண்டாண்
டரிதனையடரச்சுற்றுஞ்சேனையையனகன்கொல்ல
வெருவியேவலனுமஃகிமீளவும்வென்னிட்டானால். 34

சினமுறுமகதனிங்ஙன்பதினெழுசமரஞ்செய்தே
யனிகமுந்நூற்றுத்தொண்ணூற்றொன்றதாமக்குரோணி
தினகரன்பனியைச்செற்றசெய்கைபோல்வசுதேவன்றன்
றனையரால்மாளவெள்கித்தனியனாய்வெருவிப்போனான். 35

கதமுறுமகதராஜன்கரிபரியிரதஞ்சூழப்
பதினெழுசமரஞ்செய்துபடையெலாமாளவெள்கிச்
சதுரெலாமழிந்துதானுந்தரணியில்வெருவியோட
மதுரையில்வசுதேவன்றன்மைந்தர்கள்மகிழும்நாளின், 36

சராசந்தனபசயப் படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - 3534.

---

## 62 - வது, சிரகாலன்வதைப் படலம்.

ஆழிமன்வெருவவாளியடரவிட்டிலங்கைமேவிப்
பாழிசேர்புயநாலைந்தோன்படைஞராமூலவெள்ளம்
வேழமுன்னனேகவையமிடையவோர்வில்லாற்கன்ன
லேழரையளவிற்செற்றவிராமனைவணக்கஞ்செய்வாம். 1

பீதகவாடைதோன்றப்பிறங்கியகிரீடமோங்கச்
சோதிசெய்கலன்கள்மின்னத்துளவநற்றொடைவிளங்க
வாதனந்திகழவேறியச்சுதனமரும்வேலை
மாதவர்வனத்திருந்துமண்டபந்தன்னிற்சார்ந்தார். 2

தீதகல்முனிவர்தாளினிறைஞ்சிநற்சீதரன்றா
னாதனமீய்தலோமோசிகள்மொழிந்துசொல்வார்
மாதவதீயர்தம்மைவதைத்தருள்செய்யவந்தா
யாதலின்யாங்களெய்துமருந்துயர்கேட்டியென்றார். 3

கரவீரபுரத்தின்வாழுங்கடியவனசுரர்கோமான்
சிரகாலனென்போன்தேவர்திரளெலாமழிக்கும்வெய்யோ
னூரநாகர்பதியினாலுமழிப்புணானுயிர்கட்கெல்லாம்
வருகாலனையானெங்கள்வனத்தினையழித்தானென்றார். 4

திருந்துநல்வேள்விதன்னைச்சிதைத்தெங்கள்செபமிதெல்லா
மிருந்தையாகிடத்தீயிட்டேயெண்ணில்பாதவத்தைப்பேர்த்துக்
கருந்தடங்கண்ணினார்தங்காமமாங்கவெவைப்போலெம்
மருந்தவமழித்தான்றன்னைச்செற்றிடரகற்றியென்றார். 5

விஞ்சியமுனிவரிங்ஙன்விளம்பியேயிடருற்றாரை
யஞ்சன்மின்னீயிருங்களருந்தவமழிப்பான்வைகு
மிஞ்சிசூழ்நகரினெய்தியிமைப்பின்முன்னவனைக்கொல்வே
னெஞ்சின்மாவனத்தினெய்துமென்றரியியம்பினானால். 6

மாதவன்முனிவர்தம்மைவனத்துநீரேகுமென்று
தீதுசெய்சிரகாலன்றன்சேருகோசரத்தினெய்த
ஆதுகாசளங்கள்பேரியுவரிபோற்கறங்கவோங்கும்
யாதவன்சேனைசூழவிராமனோடேகினானால். 7

தாருகன்றடந்தேர்தூண்டச்சார்ங்கங்கையிலகித்தோன்றப்
பூரியன்பொருந்திவாழுங்கரவீரபுரத்திற்செல்ல
வாரியனெய்துந்தன்மையறிந்திமெசுரர்கோமான்
வாரிபோற்சேனைசூழவந்தெதிர்தாக்கினானால். 8

கரிகளுங்கரிகடாமுங்கனன்றெதிர்தாக்கவேதாம்
பரிகளும்பரிகடாமும்பாய்ந்துவெஞ்சமரின்மூள

முரசுகாகளங்கள்பேரிமுகிலென முழங்கவெற்றி
யரசருமசுரர்தாமுமடர்ந்துபோர்செய்தாரன்றே. 9

மழுவயில்நேமிதண்டுமுக்கரம்வலையங்குந்த
மெழுமுனையீட்டியெல்லாமெறிந்துவெங்கணைசொரிந்தே
யுழுவைகள்போலத்தாக்கியுடல்சிரந்துணியவெய்ய
கழுதுகள்சூழயாண்டுங்கவந்தங்கணடித்தவன்றே. 10

தேரினிற்கரிகள்மாயச்சிலையறவிவுளிசாயப் .
பாரினிற்குதித்துவெய்யகேடகங்கட்கம்பற்றித்
தேருறத்தாக்கிக்கைகா றணிந்திடநிலத்தின்வீழ்ந்தார்
வாரிபோலுதிரவெள்ளமடுத்திடச்சுழுதுமாட. 11

பரியினுமிரதமீதும்படைத்தலைவீரர்மேலுங்
கரியினுங்கடியவாளிகதுமெனச்சொரிந்தங்கார்த்து
வரிசிலைவலத்தினுலேவாளெயிற்றசுரர்கொல்ல
விரிகின்றசேனைநோக்கியிருவருமெதிர்த்தாரன்றே. 12

கயிலையும்நீலவெற்பும்வயங்கியகாட்சிபோலப்
புயல்வணன்முன்னனேடும்பொருசிலைவளையவாங்கி
யயிலெயிற்றசுரரேறுமிரதங்கள்வெய்யவாசி
கயமெலாமடியயாண்டுங்கணைமழைபொழிந்தாரன்றே. 13

சிலையறக்கொடிகள்வீழத்தேரினமுறியவீரர்
தலையறப்பரிகள்சாயத்தந்திகளுருளவோங்கு
மலையெனவசுரராக்கைமண்ணுறக்குறையின்வாரி
நிலமிசைநதியாயோடநிறைந்தனகவந்தமாடி. 14

வேறு.

சிவர்சிவமுறப்பலிசெங்கைநீக்கிய
நவர்நவநீதமுண்ணுதராசுகந்
தவர்தவலொருவுறத்தரணியெங்கணும்
பவர்பவமடிந்திடப்பரந்தவாமரோ. 15

ஐயிலையயன்வில்லளவுமாசுகம்
நொய்தெனநொய்தினினுழைந்துதோலயம்
வையமீவையமாய்வீரர்மாளவே
துய்யதுய்யாரழலெனத்தொடர்ந்தவால். 16

கிரியிவர்கிரியெனநிலனைக்கீண்டரு
ளரியரியாகியவவுணர்மாளவெம்
பரிபரிவுறக்குரந்துணித்துப்பார்விழக்
கரிகரியாயிறக்கணைகள்பெய்தனன். 17

சிந்துரமியத்தனைதுயிலுஞ்செங்கணன்
சிந்துரங்காஞ்செவிசிதறவாசையிற்

சிந்துறங்காலறத்தெவ்வர்சாடறஞ்
சிந்துரப்புனலுகச்சிலீமுகம்பெய்தான். 18

வேறு.

உடலறக்கரிகள்வீரருரமறவுயர்ந்ததேரி
னடியறவலவன்மாளவயனிரைவாலுமற்றே
துடையறக்கொடிகள்வீழத்துவசங்கள்வீழக்கண்டே
கடிமலர்பொழிந்துவானோர்களித்தெங்குமடித்தாரன்றே. 19

வருகரியிரதம்பாய்மாவாளெயிற்றசுரர்வீழ
விருவரும்பொருததன்மைகண்டனலெரியுங்கண்ண
னுருளுமாவிரதமீதினுற்றுயர்சிரகாலன்றன்
பொருசிலைவளையவாங்கிப்புயல்வண்ணன்மேலெய்தார்த்தான். 20

தீயவனெய்யும்வாளிதிசைகளைமறைப்பக்கண்டு
மாயவனதனையெல்லாம்வாளியாற்கொய்துவீழ்த்தே
யேயெனுமுன்னர்வானமறையவாசுகங்களெய்தா
னுயவையறுத்துவெய்யவசுரன்விண்டுளங்கவார்த்தான். 21

சொரிகாலவருடமேலத்துலங்கியபல்லங்கள்கொண்
டிருளாலம்நடுங்கவார்த்தேயெய்துநின்றானைநோக்கி
யரிகாலன்படையைவாங்கியருச்சித்துவிடலும்வெய்ய
சிரகாலன்சிரத்தைதள்ளிச்சென்றதுதெய்வவாளி. 22

துந்துமிமுழங்கவானிற்சுரர்தருமலர்கடூவி
யிந்திரனயன்றன்னோடுமேத்திவிண்ணிறைஞ்சினர்கள்
சிந்தையின்மகிழ்ச்சிமேவுமுனிவர்கடிரண்டுவாழ்த்த
நந்தொளிர்வண்ணனோடுநாரணன்மதுரைபுக்கான். 23

தீயவல்லசுரன்றன்னைச்செருக்களத்தவியநூறி
மாயவன்மதுரையெய்தித்தந்தையைவணங்கிப்பின்னர்
தாயினையிறைஞ்சிநீதிதருமஞானங்களோங்கத்
தூயநான்மறையோர்சூழத்துலங்கியேயமருநாளின். 24

சிரகாலன்வதைப்படலம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 3558.

---

## 63 - வது, காலயவன்வதைப் படலம்.

---

பீடுடையசோதிபெருமானமரர்பேணுஞ்
சேடனினமர்ந்தவிர்கொடேடைவகினைதோறு
மாடியவனன்பெயர்களாயிரமுமன்பாற்
பாடிமகிழ்வோர்பரமபாகவதராவார். 1

மாலயன்மதிச்சடையன்வந்தமர்செய்தாலும்
ஞாலமிசையென் றுமடியானவனிலாத
காலயவனுமசுரன்முன்வினைகளைந்த
சீலமுறுநாரதனடைந்திவைகள்செப்பும். 2

உன்னுடையதோழனுயரும்மசதராஜன்
மன்னன்வசுதேவனருள்மைந்தரொமூண்டே
யிந்நிலமதிற்றசமொடேழுசமர்வென்னிட்
டென்னுவமுன்னோடியதுரைக்கவெளிதன்றே. 3

ஆதலினுயர்ந்தவசுரர்பதிநீயேகில்
மாதவனிடைந்திதெறிண்ணமெனும்வாய்மை
யோதிமுனியேகலுமுருத்திரனையொத்தே
நீதுசெறிகாலயவனெஞ்சினமிக்கான். 4

ஆடல்வயமாகரியின்மீதவுணன்மூன்று
கோடிபடைநாயகர்கள்கூடிவரவேமுன்
னீடுகொடிசூழிரதமேறிநெறியில்லான்
காடுகள்கடந்துபலநாடுகள்கழிந்தான். 5

வடமதுரையெய்திமதில்சுற்றுறவளைத்தே
கொடியவசுரன்னுடல்கொதித்திடவுமார்ப்ப
நெடியவனவன்றிறலறிந்துநெறிசேருங்
கடலரசன்மானகரினிற்கடிதுசென்றான். 6

மாதவனடைந்திடலுமேவருணராசன்
சீதமலர்தூவியிருசேவடியிறைஞ்ச
ஆதியிவண்வந்தகருமத்தடைவையெல்லா
மோதுதியெனப்படியளந்தவனுரைப்பான். 7

காலயவனானவசுரன்கடிதினெய்திச்
சீலமுறுமாமதுரைசேர்ந்துறவளைத்தான்
ஞாலமிசையெய்தியிடும்நன்னகரமில்லைக்
கோலமுறுவண்பதிகொடுத்திடுதியென்றான். 8

மாயவன்மொழிந்திடமகிழ்ந்துவருணன்றா
னேயமுடனேசனைதுவாதெசநிறைந்த
வாயமுறநீளமகலம்மழகிதாகத்
தூயதுவராபதிதுலங்கிடவமைத்தான். 9

அயனருளவானவர்கடச்சனவணெய்தி
யியல்பினுறுமாளிகைகளெண்ணில்சிகரங்க
ளுயருமவிர்மண்டபமொண்வேதிகைகள்வீதி
கயமுறவவோளிகளெலாங்கடிதமைத்தான். 10

அருணவயமாயிரமலங்கிருதமான
வருணமுறுபாசிழைவருக்கநயவாடை
தருணமுறுதந்திகடயங்குமணியெல்லாம்
வருணன்மகிழ்சிந்தையொடளித்தனன்வயங்கி. 11

எண்ணெதிரில்சாய்மரையிலங்குகுடையெண்ணில்
வண்ணமுறுநன்மணிவயங்கியிடுமாழை
கண்ணியகலன்கள்கதிர்போலொளிர்கிரீட
முண்மகிழ்வினோடளகையுற்றவனளித்தான். 12

சந்திரவிமானமெனவேதரளமல்கிச்
சுந்தரமணித்திரள்கொடேணணிதுலங்க
மந்தரசிகர்த்தயருமண்டபமகிழ்ந்தே
யிந்திரனளித்தடியிறைஞ்சினனிவந்தே. 13

வாரியின்வயங்கியிடுமானகரைநோக்கிச்
சீருறுகுபேரனகர்தேவர்பதியெல்லா
மேருறபகீரதியினுவிழிவையெய்தும்
பார்ந்தியையேலுமெனவேயுரைபகர்ந்தார். 14

எதிரில்மடவார்புருடர்யாருமிரவின்கண்
மதுரையினுறங்கியரிமாயையையயற்றக்
கதிருதையமாகுவமுனேகடிதொரீஇநீ
ளுததியின்விளங்குநகருற்றபின்விழித்தார். 15

வடமதுரைவைகுகரிமாமனுடர்மாதர்
கடலினுறமானகர்தனிற்கடிதுமேவி
யடையவரிதானொருவனேயடன்மிகுத்த
கொடியவசுரேசன்முனரிற்குறுகினின்றான். 16

எறுபுரிவானெனவெதிர்க்குமசுரேசன்
சீறியரிதன்னையமர்செய்திடுதியென்ன
நாறுமலர்தண்டுளவிளற்றொடையணிந்தோன்
பாறினனகைத்துவிசையோடுபடிமீதே. 17

வேறு.

அரியமாதவர்களாகியளப்பிலாவூழிகாலந்
தரையினினீரின்வெய்யதழலிடையோகஞ்சாதித்
திருவினையகற்றித்தங்கள்மனங்கொண்டுபிடிக்கவொட்டா
வொருவனைப்பிடிப்பதாகவோடினனசுரன்மாதோ. 18

எதிர்நின்றசமர்செய்யாமலேகின்றயிடையாவுன்றன்
மதியெலாமிஃதோமண்ணின்வானெங்கும்பாறிப்பின்ன
ருததியினொதுங்கினூமுன்னையான்பிடிப்பனென்னுப்
புதியவெங்கூற்றம்போலப்பூரியன்றுடருங்காலை. 19

மனுவின் றன்மதலையிக்குவாகுவின்மரபில்வந்தோன்
முனிவரெண்மாந்தாதாவின்சுதன் முசுகுந்தனென்போன்
றனியகல்சுரர்கோனுக்காய்த் தூய்மையிலசுரரோடே
சினமுறப்பொருதுநின் றோனுயிரந்தெய்வவாண்டு. 20

மறனுறுமசுரரெல்லாமடிந்திடவென் றுநின்ற
திறனுறுமரசன் றன்னைநோக்கியேதேவர்கோமா
னுறுகெதிபரமனீய்வதல்லதிங்கொருவராலும்
பெறுகுவதரிதென் றிப்போதுபெறுவவெல்லாங்கேளென்றான். 21

ஆயிரனயனவேந்தனருள்செறிந்திவன் கூறத்
தூயனுமாந்தாதாவின்சுதன் முசுகுந்தன்சொல்வான்
தீயராமசுரரோடுசெருச்செய்தவருடமெல்லாம்
மாயிருஞாலத்தேயான் றுயில்கொளவரமீயென்றான். 22

வேறு.

அரசனிவ்வரம்வேண்டலுமமரர்கோன் முனிவர்
தரணியின் னுயர்வரையினிற்கந்தரஞ்சார்ந்தே
யிருகணிற் றுயில்கொளுமுன்னையிடையின்வந்தெழுப்புந்
துரிதரக்கணமெரிந்திடுவாரெனச்சொன்னார். 23

அந்தநல்வரம்பெற்றுயர்முசுகுந்தனனுகிச்
சிந்தையின்மகிழ்ந்தோங்கலிற்கந்தரஞ்சேர்ந்து
சுந்தரஞ்செறியுருவினன் றுயில்கொளாகரத்திற்
கந்தனன்மலர்க்காவினுட்கண்ணனுங்கரந்தான். 24

கடிதினிற் றுரந்தோடியேகடுந்திறலவுணன்
படியினின் வரைமுடுக்கரிற்புகுந்துயர்பரமன்
வடிவுறத்துயில்கொள்கின் றான் றன்னைமாலென் று
கொடியவன்னவனுரத்தினிற்புடைத்தனன்கொதித்தே. 25

தெழித்துரப்பியேதீயவன்புடைத்தலுமரசன்
விழித்துநோக்கலும்விடையன் முன்வேளெரிந்தாற்போ
லிழைத்தமாதவயோகிகளிருக்குமாச்சிரம
மழித்தவெய்யவன்சாம்பராயவனியின்மாண்டான். 26

துயிலையோவியேயெரித்திடுந்துட்டனுரென் று
பயிலுவானவண்பரஞ்சுடர்மரகதமலைபோ
லியல்பினுழிசங்கெழிற்கதைசார்ங்கம்வாளேந்தி
மயிலெனுந்திருமார்பினின்வயங்கவந்தனனால். 27

கண்டனன் கருணாகரவடிவினையமிர்த
முண்டதாமெனக்களிததிறைஞ்சவன்மிகவுவந்தே
யண்டர்நாயகவுனதடியார்க்கடியவனுந்
தொண்டனேன் வினைதொலையமுன்றோன் றினையென்றான். 28

அன்பினானந்தநயனநீரவனியிற்புரள
வின்பமாகமெய்புளகமுற்றேத்துவான்றன்னைத்
தன்பெருந்தடந்தாமரைக்கண்களானோக்கித்
துன்பமோவினாய்வேண்டுதிவரமெனச்சொன்னான். 29

விந்தைசேர்புயனியம்பிடமுசுகுந்தன்விளம்பு
மிந்தமானிலத்தின்பம்போலிடருறுகும்ப
வந்தனாகிப்பாழ்க்கூவலினழுந்தியவென்னை
யெந்தைநீகதிக்கேற்றனாதென்சொனாயென்றான். 30

வேறு.

காய்ந்தவெங்கனலைக்காலுங்கட்செவியிலங்குகின்ற
வீர்ந்தநுண்வேலைக்கவ்வியெயிறுநாவீழ்ந்தாற்போன்றே
யாய்ந்திடுமுணர்விலாமலத்திரச்செல்வம்நற்றிச்
சாய்ந்துவென்னரகின்வீழ்வர்தரணியினறிவிலாதார். 31

ஆதலினடியேனிங்ஙனம்புலன்றனக்கேயாளாய்த்
தீதுசெய்திடுவேனுன்னைச்செல்வமேவேண்டிப்பெற்றால்
வேதனைநரகின்வீழ்ந்துமீளவும்பிறந்திறந்து
பூதலத்துழல்வதல்லாலென்னையான்பொருந்துவேனால். 32

போதனோடமரர்வானான்புரந்தரன்முதல்வராய
மாதவர்தம்மைநீயேமயக்குமாயன்றானுன்றன்
பாதமேபற்றினேனைப்பற்றுமோபரமமூர்த்தி
யாதிநீயருள்செய்துன்றன்பதமெனக்கருடியென்றான். 32

இவைவுரைத்திறைஞ்சியேத்தியிருகணீர்சோரநின்ற
நவையகல்நெஞ்சினானைநாரணனருளால்நோக்கி
யுவமையில்மறையோனாகிப்பிறந்துயர்வதிரியுற்றுத்
தவமுயல்யானேயெய்தித்தருகுவன்கதியையென்றான். 34

என்றுரைத்தின்பமெய்திமுசுகுந்தன்றன்னையேவிப்
பொன்றியவசுரன்சேனைக்குழாத்திடைப்புகுந்துதன்கை
யொன்றியவாளில்மூன்றுகோடிபேர்சிரமுருட்டி
நின்றிடுமளவின்வந்தானிகரிலாமகத்தர்கோமான். 35

தீமுந்துநயனனானமகதர்கோன்சேர்தல்கண்டே
யாமந்தைக்கன்றுபோல்வானவனியிற்கடிதினோடிக்
காமந்தீயடரவேடர்கணிப்பருங்குழாங்கள்சேருங்
கோமந்தவரையின்மீதிக்குவட்டினிற்கரந்தான்மாதோ. 36

மாயவனோடக்கண்டமகதனுங்கடிதினெய்தி
யாயநீமீடியென்னாவருவரையிடத்தினெய்தி
வாயுவின்படையுந்தேயுவழங்கியபடையும்விட்டான்
தீயெழவோதங்கூடித்திசையெலாம்நடுங்கச்சென்ற. 37

வரையினைமுற்றஞ்சுற்றிவாயுவுங்கனலுங்கூடி
யரனுயர்தேரினேறியமர்செயவிமைப்பின்வெந்த
திரிபுரத்தவர்கள்போலத்தீயராஞ்சவரர்மாள
வெரியுயர்வானைமுட்டியெழுந்தனபுகையுமெய்த. 38

அறனுறமறையையோம்புமருந்தவர்க்கிடர்கள்செய்யு
மறனுறுமெயினரெல்லாமடிந்திடநகைசெய்தாங்கே
யிறைவனப்பிறங்கலுச்சியிரண்டைந்தோடொன்றகூட
வறையும்யோசனையினின்றுமவனியிற்குப்புற்றானல். 39

கரியரிமயிடமெண்குகவிபுலிகனலின்மாள
வரையினிலுச்சிநின்றுமகதராசன்றான்காண
வெரியினின்விழுந்தாற்போலக்குதித்திறையேகியேதார்
பரியிரதங்கசென்னுந்துவரையம்பதியிற்சேர்ந்தான். 40

மன்னவன்வசுதேவன்றன்மலரடிவணங்கிப்பின்ன
ரன்னையையிறைஞ்சிப்போசனடியினிற்றொழுதுவந்தே
முன்னவன்றாளில்வீழ்ந்துமுனிவரந்தணர்களேத்த
வென்னையாளுடையவையனினிதுவீற்றிருக்குநாளின். 41

காலயவன்வதைப்படலம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-3599.

---

## 64-வது, இரேவதிப் படலம்.

காவினுண்கொளாற்கல்லைக்காரிகையாக்கிக்கால
காலன்வில்லிறுத்துத்துய்யகமலையைமணஞ்செய்நீரேழ்
காலங்காந்தாரத்தெய்திக்கம்பத்தோன்றன்னைவீட்டிக்
காலருள்சுதனேடெண்டகண்ணனைவணக்கஞ்செய்வாம். 1

அறனெறிவிளங்கமுந்துமுகத்தினானரததேசத்
திறையவன்மொய்ம்பால்மிக்கவிரேவகனென்னுமன்னன்
மறுவில்பூமடந்தைநேராமிரேவதிமாதைப்பெற்று
நெறியுறுமறையோராசிநிகழ்த்திடமகிழும்நாலின். 2

மன்னவனிரேவகன்றன்மகளெழில்பொருவமண்ணி
னின்னவின்மகுணன்றன்னையெங்கணும்நாடிக்காணான்
மின்னிடைமடவாளோடும்விண்மிசையிரதமேற்போய்
நன்மலர்க்கிழவன்வாழும்நற்சபையதனிற்சேர்ந்தான். 3

பொன்னவிர்தரளம்நீலம்பொலிவுறுபதுமராகம்
நன்மணிவயிரங்கோமேதகம்நிவர்மரகதங்கள்
மின்வயிடூரியங்கள்வித்துருமங்களெல்லாந்
துன்னுதூணெண்ணில்கோடிதுலக்குமாமண்டபத்தின். 4

இந்திரனியமன்வாயுவருணனொடெழிற்குபேரன்
முந்தியநிருதிதேயுமுக்கணன்றொழவுநாகர்
சிந்தையின்மகிழ்ந்துசித்தர்வித்தியாதரர்கடேவர்
சந்திரனிரவிதுய்யசாரணரியக்கர்சார. 5

கெருடகாந்திருவரோங்குகின்னரர்திரளினோர்கிம்
புருடர்தம்புருவோர்கீதநாரதர்பொலிந்துதோன்றப்
பொருடருமறையாறங்கஞ்சாத்திரம்புராணநீதி
மருடவிர்ந்திடவிதெல்லாம்வடிவுகொண்டேத்திவாழ்த்தி. 6

கிளரொளிக்கிரீடந்தோன்றக்கேயூரம்புயத்திலங்க
வளருமுந்நூலுமார்பின்வயங்கிடமாழையேய
வொளியுறுமேனியோங்கவுலகெலாமுண்டானுந்தி
களினவாதனத்தின்மீதுநான்முகனிருந்தான்மாதோ. 7

ஆயவன்றிருவோலக்கத்தனைவர்க்கும்விடையீந்தாங்கே
தூயவன்கோயிறன்னுட்டுலங்கிடமேவும்வேலை
வேயுறுகோளியானவிரேவதிமின்னினோடுந்
தீய்மையிலரசன்சென்றுதிருவடியிறைஞ்சினானால். 8

இறைஞ்சியவரசன்றன்னையெண்கணனோக்கிநீயீண்
டுறைந்ததுமொழிதியென்னவுவந்தியான்பெற்றமங்கை
நிறைந்தவிவ்வடிவுக்கொத்தமகுணனைநிலத்திற்காணா
தறந்தவறுதவையவடைந்தனனின்பாலென்றான். 9

இவையெலாங்கேட்டவெண்கண்ணிறையவனகைத்துநீதான்
புவியினையொருவியென்பாற்புகுந்தவவ்வுகமும்போயே
நவையகல்மன்னவிங்குத்துவாபரத்தந்தநண்ணிற்
றுவமையிலிராமநம்பிக்களித்திநீபோதியென்றான். 10

இரணியகர்ப்பன்கூறவிரேவதனிறைஞ்சியோவித்
தரணியின்மகடன்னொடுமிழிந்துநற்றபனன்விஞ்சுங்
கிரணமேல்வெருவுசெம்பொன்கிளர்மணியினங்கள்சூழ்ந்து
வருணமாளிகைகளோங்குந்துவரையினடைந்தான்மன்னோ. 11

துவரையினடைந்தமன்னனுரோகணிசுதனைநோக்கி
நவையொரீஇமலரோனென்னொடுரைத்தநல்வாசகத்தாற்
புவிதனினிகரிலாதபொற்கொடியானான்பெற்ற
வுவமையில்மின்னைநீநேர்ந்தேனுனக்கெனவுரைத்தானன்றே. 12

மன்னவனுரைத்தலோடுமுரோகணிமைந்தனோக்கி
முன்னுறுமுகத்திற்றோன்றுமுறைமையாலுயர்நீண்ட
வன்னவடோளினீண்டவலாயுதம்பூட்டிவாங்க
மின்னிடைசிறியாளானாள்விண்ணவர்மலர்கவே. 13

துந்துமிமுழங்கவானிற்சுரர்கள்மாமலர்கடுவே
மைந்தனைத்தழுவியன்பால்மகிழ்ந்தனன்வசுதேவன்றான்
நக்தொளிர்கரனுமன்னைமார்களும்நலனையுற்றா
ரந்தணர்முனிவரெய்தியாசிகள்பகர்ந்தாரன்றே. 14

பணவமாமுரசுபேரிபடலிசைமுழங்கப்பொன்னா
ரிணையில்காகளங்கள்சின்னமிலங்குகின்னரங்களார்ப்ப
மணமலிபூகங்கன்னல்வாழைவண்டுவசமோங்கக்
கணையிணைநகுகண்மாதர்களித்தனர்வீதிதோறும். 15

தோலிரதங்கடுயவிவுளிகளெங்குந்துன்ன
வேலொளிர்வீரரெல்லாங்கவினொடுமிடையச்செம்பொன்
பாலிகைநிரைத்துமாதர்சோபனம்பாடினார்கள்
மாலைகணிறையத்தீபம்வழங்கியவீதிதோறும். 16

அராவுருத்தவிருமையன்றன்னொடுமெணங்கின்மிக்க
விரேவதியிலங்கித்தோன்றவிருக்கறைகற்கனெய்திப்
புராதனமுனிவர்வேதம்புகலுமந்தணர்களோடே
தராதலமிலங்கவோமத்தழலினாகுதிநிறைத்தான். 17

கங்குநேரளகநங்கையிரேவதிகந்தரத்திற்
சங்கொளிர்வண்ணன்செங்கைதனனின்மங்கலநாண்சாத்தி
மங்கையர்மகிழவம்மிமிதித்துத்தீவலமாய்வந்தே
யங்கண்வானதனிற்றோன்றுமருந்ததிநோக்கினாரால். 18

அந்தணராசிகூறவருந்தவர்மகிழ்வாலேத்தத்
தந்தையைவணங்கித்தாயாந்தேவகிதாளின்வீழ்ந்து
நந்துறுகரத்துமின்னாளுரோகணிநற்பாதத்தி
னிந்துநேர்வண்ணன்றேவிதன்னொடுமிறைஞ்சினனால். 19

சீயமேபொருவுந்தாலகேதனன்றேவியோடுந்
தூயபொற்கலத்திலன்னமருந்தினற்சுகந்தநான
மாயுநன்மலர்களோடேயணிந்தின்பப்பெருமையாக
நேயமோடினியசெல்வம்நிறைந்திடவிருந்தான்மாதோ. 20

இன்னலனெய்துமுன்னோன்றன்னுடனிலேகர்வாழ்த்தத்
துன்றுநன்மணிசேர்மாடத்துவரையினிலங்கிமாயோன்
மின்னுபொற்கவிகையோங்கவிருந்தனன்விதற்பன்பெற்ற
வன்னமேயென்றுதூயநாரதனறைந்தானன்றே. 21

இரேவதிப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - 3620.

---

# 65 - வது, படங்காண் படலம்.

நீலமுங்காயாம்பூவும்நிறைந்தலைறகடலுந்தூய
ஞாலமெண்டிக்குமஞ்ஞைக்கந்தரநிறமுநாணுங்
கோலமோடாழிசங்குசார்ங்கம்வாள்கதைகொண்டோங்கு
மாலினைநினைந்துவாழுமடியர்தாள்மனத்துள்வைப்பாம். 1

ஆலின்மேலமருமையன்புகழெனுமமிர்தந்தன்னைச்
சீலமாரவிதர்ப்பன்கொம்புசெவியினாற்பருகித்தேக்கி
மாலினால்மனமோடாவிமற்றவன்றாளைப்பற்றக்
கோலவோவியம்போல்வைகுங்கோதைக்குமுனிவன்சொல்வான். 2

வேறு.

காளமேகமொளிர்வானநீலவரைமானுமேனிகமலங்கள்கை
தாள்களுந்தினயனங்களிந்துநிகர்சங்குசெஞ்சுடர்தயங்கியே
நீளுமாழிகதிர்பொருவுநன்மணிநிறைந்தபொன்முடியிலங்குமா
லாளும்வானுலகமேழுநீயுணர்தியார்கலிக்குளமிர்தாமினே. 3

வீரஞ்சியுறவேயெதிர்க்குமவன்வெதிரினின்னிசைகளூதுவோன்
மாரனஞ்சுகவின்மேனியன்றதினெய்வைத்தவெண்ணைதன்வயிற்றிடுஞ்
சோரனஞ்சைநுகர்தூயசேவினமர்தோகைபாகர்சொலுமாயிரப்
பேரனிஞ்சொலரிசெயல்கள்கூறரிதுபெருமையுற்றகமலப்பெணே. 4

வில்லின்மல்லினுயர்தம்பியின்பரிவிசித்ததேரிலயவேதநூல்
வல்லமாவிருடிகேசன்மாயனுயர்மாதவற்குவமையாகவு
மல்லிமாமலரின்வந்துபாரினுறமன்னைநின்னைநிகராகவு
மில்லையேழுலகின்விஞ்சுபேர்கடமிலியாருமெவ்வெழிலிலங்குவார். 5

கன்றினால்விளவெறிந்தசோதியுரகாரிமீதிலுயர்கருமுகி
லன்றபாலனெனவண்டரண்டமவையயிலுமாதியமரோர்பிரான்
குன்றினால்மழைதடுத்தவென்றிபுரிகோவலன்புகழ்கள்கூறொனா
தென்றுநாரதன்மகிழ்ந்துபுண்டரிகவிந்திரைக்கிவையியம்புவான். 6

முன்னர்மாமிதிலைவில்முறித்தமிர்தின்முந்துசீதையெனுமுண்டக
மின்னினோடிலகுவள்ளலென்னநெறிவிஞ்சுமாசிறுவரைப்பதி
மன்னர்கோன்மகிழ்வொடெய்தியேயுனைமணம்புணர்ந்தருள்வன்மாமட
வன்னமேயெனமொழிந்துநாரதனிருக்கினாசியுமறைந்தனன். 7

செஞ்சொலொண்டவனியம்புசொல்லிருசெவித்துளைக்கமிர்தமாகவே
யெஞ்சினன்முனிவனைப்பணிந்துநின்னிருக்கைசேறியெனவுரைசெய்து
விஞ்சுநஞ்சுறுகளத்தனேல்கமதைவிழவிமெவிமலன்மாலுறும்
வஞ்சிகொஞ்சுகிளிகஞ்சமாமலரின்மங்கைபொங்கமிர்தின்வந்தமின். 8

அருந்தவத்தினர்கடங்களாச்சிரமமடையவாவினிரைகாத்துநீள்
குருந்திறுற்றிடையர் மாதர்தங்கடுகில் கொள்ளைகொள் கொழுனன்வர
வருந்தினாள்கலையிழந்துசோர்வுறவயங்குமேகலைவசுந்தரை [வெனா
பொருந்தமெல்லமளிமீதுநன்மலர்பொரிந்துவெந்துபொடியாகவே. 9

விளங்குபூண்முலையிலங்குவெண்டரளமாலையும்வெடிவெடித்திடத்
துளங்குமாதின்மெயின்மீதுகோதையனல்சுற்றிடச்சுறுசுறுக்கெழக்
களங்கமெய்யின்மணிகருகவம்பொனணியுருகவெள்வளைகள்கழலவே
யுளங்கொள்மால்வடிவையுன்கியேமயலினாலுருக்குமணியுரைசெய்வாள்.

வேறு.

பண்ணார்மொழியார்கலைகொள்பரமா
கண்ணாகருணாகரகார்முகிலே
விண்ணாருரகாரிவிலோதனவென்
னுண்ணோவுதவிர்ந்திடவந்துதவே. 11

வேயூதியவித்தகவித்துரும
வாயாதுவராபதிமன்னவனே
காயாமலர்மேனியகன்றினமே
யாயாவெனையஞ்சலையென்றணையாய். 12

கற்கொண்டுபெலானிரைகாத்தருளி
மற்கொண்டமர்தோளொடுமோமதுரை
விற்கொண்டுமுறித்தருள்வீரியமாஞ்
சொற்கொண்டதெனாருயிர்சுந்தரனே. 13

தானேவருகூனிதன்னாகமுறக்
கூனேகிமிரத்தழுவுங்குமரா
தேனேகனியேதிருவுக்கிரமா
வானோரமிர்தேயெனவேமொழிவாள். 14

ஆரஞ்சுடுமென்றுமையாக்கும்விழும்
வீரன்றிறமுள்ளும்விரும்பியெழு
மாரன்கணையேவமயங்கிமொற்
சிரஞ்சுகமாகியதேன்மொழியே. 15

வன்னெஞ்சுளமாரன்மலர்க்கணையா
லென்னெஞ்சுறுமால்கடல்போலெழவே
தன்னெஞ்சினையோவெளிகாணவிவ
னுன்னஞ்சனமேனியினாற்றணையாய். 16

கரியாருயிர்கொண்டருள்கண்ணவெனும்
விரிவாயரவைப்பிளவீரவெனு
மரியாகியவச்சுதனேயெனுமா
றரியாதெழுமாலுறுதார்குழலே. 17

பாலேகவர்வாய்பலமாயைவலா
யாலேயமர்வாயலைவேலையுளாய்
மாலேதருவாய்வந்தேயணையாய்
கோலேகொடுகோவணைகொற்றவனே. 18

வளையுங்கழலும்மயலுந்திடவே
விளையுங்கனகங்கனல்மேனியெலா
முளையும்மனமோர்கணமேழுகமா
யளையுங்கணினீருளமிழ்ந்திடுமால். 19

சோறும்மெழுமாவிதனுக்கெனுமா
லாருந்துணையில்லையனங்கனெயச்
சேருங்கணையாலுடறீயுமுனே
வாருங்கவினுற்பலவண்ணவெனும். 20

வல்லாய்பலமாயைகள்மாதவனே
புல்லாயிருகொங்கைபொருந்திடவே
நில்லாய்மறையாதுயர்நிற்கும்வகை
சொல்லாயெனமாமயில்சோர்ந்தனளால். 21

சோராவணமீதுதுயர்க்கணுறு
மாராவமுதாளையணைத்தனராற்
காரார்குழல்காரிகையார்கள்பனி
நீரார்களபம்மெய்நிறைத்தனரால். 22

அன்னேகமலத்துறையாயிழையே
யென்னேயிவையேதெனவேயிடருற்
றன்னுப்பனிநீருடல்மேவிடலு
மின்னுயிர்வந்துவிளம்பினளால். 23

உறியார்நெய்யுருட்டியுவந்தருள்வோன்
சிறியேனிருகண்விழிசேருமவன்
மறிமால்கடல்போல்பவன்வந்தனனு
லறிவீரெனதாருயிராமடவீர். 24

கன்றால்விளவன்றெறியுங்கையினான்
குன்றால்மழைகாத்தருள்கொண்டல்குவா
லொன்றாயதினப்புறமும்முயர்வா
னின்றானெமுனீரறியீர்மடவீர். 25

புயவின்னளினம்மலிபொற்பினவன்
மயல்தந்தவன்வந்துநகைக்குமவன்
செயலொன்றலவேபலதேர்வரிதா
லயவின்மடவீரவனுரெனுமால். 26

வளையார்கையினர் துகில்வாரியுமே
விளையாடியகையினென்மெய்தழுவி
யளையாயிருகொங்கையினச்சுதவென்
றுளையாவுயிர்சோர்ந்தனளொண்கொடியே. 27

அளியார்குழலாளயரப்பனிநீர்
துளியாவெழவீசியதோகைநல்லார்
மிளிர்தாமரைமேலுறைமின்னினுளந்
தெளிவாயுறவேயிவைசெப்பினரால். 28

மானேயனமேமயிலேகுயிலே
தேனேயமுதேதிருமாமகளே
யேனீயயர்வாயிடர்நீயொழியாய்
வானோர்பெருமான்மணமேபுரிவான். 29

துயர்நீயொழியத்துவராபதியி
னுயர்மாதவன்வந்தணைவானனையே
யயரேலெனவம்மடவாரறையக்
குயில்நேர்மொழியாளிவைகூறினளால். 30

வேறு.

செஞ்சொல்நாரதன்மொழிசெவியிற்சாரவென்
னெஞ்சுளேந்தரிபுகழ்நிறைந்துநிற்பினுங்
கஞ்சநாபன்றனைக்காண்கிலேனெனிற்
றஞ்சுமென்னுடலினைத்துறந்துபோமுயிர். 31

ஆதலான்மையலாலலக்கணெய்துவேன்
சாதலானுறுதுசெய்சதுருண்டாமெனில்
மாதரீரிதற்கொருவாய்மையின்னல
னோதுவேன்கேண்மினென்றுரைக்கலுற்றனள். 32

புயலினம்போருகமலர்கள்பூத்தெனச்
செயல்பெறுந்திருவுருத்தெரிபவேபடத்
தியல்புறவரையவல்லீர்களென்னிலென்
னுயிருடல்மேவுமின்றெனவுரைக்கவே. 33

பங்கயத்தவளிவைபகரப்பாங்கியா
மங்கையெள்ளுதலிலாமதனவல்லிநீள்
வெங்கயந்தனைத்தெறும்வீரனல்வடி
விங்கிதத்தெழுதுவன்படத்திலென்றரோ. 34

மருதிறவுரலொடுதவழ்வண்மையுங்
குரவையுங்குருந்தறுங்கொள்கையுங்குழல்
மருவவேமதனகோபாலனுமெழிற்
றெரியவும்படத்தினிற்சித்திரிக்கவே. 35

திகிரிசங்கங்குசபாசந்தேனின
மிகவிரும்பியமலர்விசிகமிக்குவில்
சகவுயிர்மயங்கிடச்சத்திக்குங்குழல்
நிகரிலொண்கரந்தொறும்நிறைந்திலங்கவே. 36

கரும்பெனச்சிலைமலர்கணைகள்காமர்நாண்
சுரும்பெனக்கலன்களுந்துலங்கவண்டளை
வரும்பெனச்சிறுநகைதிகழவண்டரும்
விரும்பியமதனகோபாலன்விஞ்சவே. 37

குண்டலம்விளங்கிடமதனகோபன்மெய்
கண்டனளுருகினள்கடுகியென்னுயி
ருண்டவனிவனிவனிவனென்றேயொளிர்
முண்டகத்திறைவியுமொழிந்துசோர்ந்தனள். 38

உயிரிலையெனவுடலுருகிமாழ்கிய
வயல்திகர்வனிதைதன்னயர்வுநீங்கிட
வயில்விழிமங்கையராலவட்டத்தா
லுயிர்வரக்கமழ்பனிநீர்சொரிந்தனர். 39

எழுந்தனள்மதனகோபாலனீயுமா
லழுந்தியமின்னவளடியிரண்டினு
முழுந்தருளுவமுனமுற்றநற்திரு
விழுந்தனளேமுறலுற்றுவெம்பியே. 40

உடலிடையுயிரிலையெனவுமோய்வுறுந்
துடியிடைமங்கையைச்சூழுமாதரார்
கடியுடைக்குங்குமக்கலவைமேனிமேற்
றடவிடத்தெளிந்தபின்சாற்றுவாளரோ. 41

வேறு.

எய்வீரெனநின்றருளிக்குவிலீர்
கொய்வீரெனதாருயிர்கோகநகக்
கைவீரியரேகலவீர்கடிகோல்
பெய்வீர்மதனன்சமர்பின்னிடவே. 42

குன்றுதயர்கோடிவில்வேளுருவை
வென்றீரமிர்தாமெனவேவெளியி
னின்றீரடியேனைநினைந்தொருகா
லொன்றீரணையீருனிருரையே. 43

துய்யீரிடைமங்கையரைச்சொல்வபோல்
வையீரடியேனையுமாமணமே
செய்யீர்கலவிக்கடல்சேர்கிலிரேன்
மெய்யீர்வுறமையல்விளைத்திடுவீர். 44

பிணையேர்விழியாயர்கள்பேதையர்கா
லிணைநீர்முனிறைஞ்சியெழுந்திலிரோ
துணைநீரெனவேதொழுவேனையிங்ங
னணையீரிவையென்னவருக்கிறைவீர். 45

எதிராய்வருகூனியரம்பையென
மதுராபுரியார்மகிழத்தழுவுஞ்
சதுராவவடன்னினிகழ்ச்சியளோ
கதிராழியநானுமோர்கன்னிகையே. 46

ஏடார்தொடைமார்பினர்வாருமெனப்
பீடார்கைபிடித்திவைபேசியெனைக்
கூடாதிவணூடினர்கொண்கரென
வாடாமலர்மங்கைமயங்கினளால். 47

மின்னேரிடையாளணைமீதயர
வென்னேயிவளுய்வகையேதெனவே
பொன்னார்முலைமேற்பனிநீர்பொழிய
வெங்நீரெனமாதுவெதும்பிடவே. 48

மாலேகிறைமங்கைதுயர்க்கடலே
தாலேதணியும்மெனவேதையலார்
மாலாமிறைவந்தனனுமெனவே
வேலேவிழிமாதுவிழித்தனளால். 49

தோழித்திரளோரிருகைதொழுதே
யாழித்திரளாரமிர்தேயனமே
தாழித்திரள்சாடரிதன்னுடனீ
வாழத்திரளுந்துவவாறுளதால். 50

படத்தேயுறுரூபினினென்னபயன்
றிடத்தேநெறியோகிகள்சிந்தையெனு
மிடத்தேயுறுமாலுனதேந்துமுலைத்
தடத்தேபுணரக்குறிதானுளதால். 51

ஆமேமொழிவோமெனநீர்நினையா
தேமாமுனிநாரதர்செப்பியசொற்
போமோபழுதேபுயலேருருவா
மாமாதவனின்னைமணம்புணர்வான். 52

ஆமாமவையையமிலாரமிர்தே
நாமேமகிழச்சொலுநற்கெவுளி
பூமாதுதெளிந்துகொள்பொற்றவரைச்
கோமான்மணமின்றேகூடுவனே. 53

எனவேபல தூய்மொழியே துவுட
னனமேதுயராறெனவேயறைவார்
தனமேலிழைமேலியதையனலா
ரினமர்மலர் தூவியிறைஞ்சினரால். 54

மையார்விழிமங்கைநலார்வசன
மெய்யாகவிரும்புவிதர்ப்பன்மக
ளுய்யாவுயிருய்ந்துமிருந்தனளால்
செய்யாளெனவந்தருடெள்ளமுதே. 55

பொன்னின் குடைசாய்மரையும்பொலியத்
துன்னும்மலருந் தூய்சந்தனமு
மின்னும்மணியாரமுமெய்யிலக
வன்னந்துயராறியமர்ந்தனளால். 56

தன்னேர்பிறிதில்லவடாரணியெண்
பொன்னாரமிர்தம்புணரித்திருவா
மின்னாளமர்வேலவிதர்ப்பனெனு
மன்னாதரவாலுள்குமாறறைவாம். 57

படங்காண்படலம் முற்றிற்று.

ஆகூ திருவிருத்தம் - 3677.

## 66-வது, விதர்ப்பராசன் மந்திரப் படலம்.

செங்கமலஞ்செறிமேகமெனத்திருமேனிதிகழ்ந்தெழவே
சங்கொடசெக்கரம்வாணிவர்தண்டெழில்சாபமமர்ந்திலகு
மங்கைகள்மார்புறமங்கைகவுத்துவமம்பொனிறைடையெழிற்
கங்கையுதித்துயர்பாதமுமென்னிருகண்ணினைநண்ணினவே. 1

துன்னுமணித்திரள்வில்லிடுதூணணிகோடிதுலங்கியெழும்
பொன்னினிழைத்தவிர்மண்டபமீதரியாதனமேபோலியத்
சன்னல்மொழிக்குயின்மங்கையர்விழுமியகவரிகள்கொண்டெழவே
மின்னுசுடர்க்கதிர்மவுலியுறத்திருவெய்தும்விதர்ப்பர்பிரான். 2

அந்தணருமறைமுனிவரனேகர்களாசிவிளம்பிடவே
இந்திரனென்னவிருந்தனன்மைந்தனுருக்குமனென்பவனும்
வந்திடமுந்தியபருணிதர்பழையவர்மந்திரிமார்களுறச்
சிந்தைமகிழ்ந்தரசெய்திநிறைந்தவிதர்ப்பனெனுந்திறலோன். 3

அம்பெனும்நீள்விழிகாதடருந்திருவாகியவாய்வளையைக்
கொம்பனையீர்மணிமண்டபமீதுகொணர்ந்திடுவீரெனவு
மும்பரொடேமுலகின்றவள்சேவடியைப்பணியொண்மடவா
ரெம்பரனீவருகென்றனனென்றணரிந்திரையின்புறவே. 4

அந்தமொழிக்குமகிழ்ந்தவுருக்குமணித்திருவன்னமனு
ணந்துறவெண்டரளத்தொடுபொற்பமர்நற்கலனும்மிலகக்
கந்தமலர்க்குழல்வண்டெழுநீளிருகண்ணிணைகாதுறவே
வந்தனள்பொய்யிடைகொண்டுவிதானநிழற்றனின்மாமயில்போல். 5

மற்குடையாமல்மலைந்தவரைத்தலைசாடிமறந்தருகஞ்
சற்குடையாதவன்மார்புடனென்புதகர்ந்திடநின்றுயருங்
கற்குடையாகவெடுத்தவன்மீதுருகாதல்நிறைந்தெழுமின்
பொற்குடைசாமரைமல்கிடவேநிடந்தனள்பூமிசையே. 6

துன்னியநவமணியுறுகனகம்பிறைதூசிடைதுயில்வரவம்
பொன்னமர்கிண்கிணிநூபுரமவிர்கொள்பதங்கடமிற்பொலிய
வன்னமும்வெள்கிடவேமயில்கூசிடவாரமிர்தாமெனவே
மன்னனிருந்தவைகாணவிருப்புறுமாதுநடந்தனளால். 7

ஓதமெழுந்துறுநேமியின்மூந்தியவமிர்தினுதித்தமினோ
சீதமெழுந்தலர்செங்கமலத்தினமர்ந்துறைசெந்திருவோ
பாதம்விளங்கியஞெகிழிமிழற்றிடுபெரியகமின்னவரு
மாதிவள்மண்மிசையேகியதென்னெனவுன்னினர்மாதவரே. 8

அண்டர்கள்வந்துதுதித்திடவானினரம்பையுநாணிடவே
தண்டைசிலம்புகலின்கலினென்னநடந்தருடாளிலகக்
கண்டவர்நெஞ்சுகளிக்கமரத்தொடுபுல்லுயர்கல்லுருக
மண்டபமெய்தினள்கெண்டைகளஞ்சமதர்த்தடர்வாள்விழியாள். 9

வந்தனளந்தணர்மாதவர்பாதம்வணங்கியெழுந்துபினுந்
தந்தையையன்பினிறைஞ்சிமுனோனடிதாழ்ந்துயர்தாமரையாள்
சிந்தைமகிழ்ந்திருகண்கள்களித்திடுதாதைமருங்குசிறந்
தந்தமலிந்திடுமாசனமேறியிருந்தனளாரமிர்தே. 10

பண்கொளுநன்மொழியாமலர்பங்கயமீதமர்பாவைமுனுள்
மண்கொளுமச்சுதன்வேயிசையூதினனெனநினைவாணுதலாள்
பெண்களின்விஞ்சியகவினுடையாளுயர்பெருமையினுனிறையுங்
கண்கள்களித்தெழவுடல்புள்கம்முறுகாவலர்கோன்மகிழ்வால். 11

மாதவர்நான்மறையறைபவர்பண்டிதர்மந்திரிமார்களுட
னீதியினுலுயருங்குணவீடுமெனிவைகள்நிகழ்த்திடுவான்
காதுறுநீள்கயலென்னும்விலோசனிகவினைநிகர்க்குமவ
னேதமிலாதகுலத்தினினல்லவனியாவர்கொலோவெனவே. 12

முரசறைமுன்றிலினிருபரிடுந்திறைமுகிலளவாய்வளரக்
கரைசெயலரியதொர்மகிழ்வொடுமெதனிறைகறையடிவெரினின்வரு
மரசனுரைத்தலுமஃதுணர்முனிவர்களந்தணர்மந்திரிக
ளுரைசெயலுற்றனர்புரவலவெம்மனமுறுபொருள்கேளெனவே. 13

வேறு.

அலகைகளெழக்குருதியாறெனமடுப்பச்
சிலைகொடுதெவ்வர்கள்செருக்கறவெதிர்த்தே
யிலகுமுடிமன்னவமகட்பெறுவரேனு
முலகுதனினல்வரனுணர்ந்தருள்வர்கற்றோர். 14

அளவில்விபவங்களுறவேண்டுமெகிழன்னை
கிளைஞர்கள்குலத்தினலனுற்றவர்கிளைத்தே
தளர்விலுயர்கல்விதனையோருமுயர்தாதை
யுளமகிழ்வுறுங்கனியுருபவனையுன்னும். 15

ஆதலின்மகட்பெறுகையல்லறருவிக்கு
மோதரியமெல்லியலுருக்குமணியாகு
மாதுளமகிழ்ந்தருணல்லமணவாளன்
யாதவர்குலத்தினுளனென்றபின்னிசைப்பார். 16

உத்தமகுணக்குரிசிலோதுவமையில்லா
வித்தகன்வனப்பினுடன்வேயினிசையூது
மத்தனெழில்பச்சைநிறவண்ணனடலாழி
நத்தினொடுவைத்தகரநாரணனுமாவான். 17

கஞ்சனைவதைத்திகல்செய்காலயவன்மாள
வஞ்சகமியற்றியிடைமாதர்துகில்கொள்வான்
நெஞ்சின்மதனஞ்சும்வடிவன்னெதிரிலாதான்
விஞ்சுமதில்சூழ்துவரைமேவியமர்வீரன். 18

யாதவர்குலத்துள்வசுதேவனருளம்மான்
மாதவன்முராரியரிவாமனனுமாவான்
தீதையகல்கற்புடையதேவகிதன்மைந்த
னேதமறுசோதிநலனோதரியதெம்மால். 19

மன்னன்வசுதேவனருண்மைந்தனெழில்மாயோ
னன்னமெனுமென்னடையுருக்குமணியாகு
மின்னின்மணவாளனெனவெய்தியிடவீர
முன்னுன்மரபோர்செய்தவமாமெனமொழிந்தார். 20

என்றமுனிவோர்களொடுமெந்தணரிசைப்பக்
கன்றுநிறையோடுசெறிகாளைபுகழ்கேளா
வென்றிபுனைமன்னவன்விதர்ப்பனுண்மகிழ்ந்தே
நன்றுரைசெய்தீரறிஞரென்றுரைநவின்றான். 21

ஒவியமுயிர்ப்புடனிருந்ததெனவோங்குங்
காவிவிழியாளையுயர்காமனிகர்கண்ணற்
கீவமெனவெம்முடனியம்பினன்விதர்ப்பன்
பூவினமர்பொற்கொடிதன்மெய்புளகமாக. 22

பாவைவருநல்லமிர்தெனப்பகர்சொல்லாற்று
முருகினர்கணீதிமுயலுத்தமர்களெல்லாங்
கருகினனுருக்குமனனெஞ்சுறுகடுந்தீப்
பெருகுசினம்விஞ்சினபினாகிமுனிவொத்தே. 23

மடித்தனனடர்க்குமனல்வாயுறநிலத்தி
னடித்தனனகைத்தனனவைக்கணர்களஞ்சத்
துடித்தபுருவத்தனுருமும்வெருவுசொற்கள்
வெடித்திடவழற்கணுறவெய்யவன்விளம்பும். 24

அருந்தவர்சொல்நன்றுமறையாய்பவர்சொல்நன்று
பொருந்தியவமைச்சருரைநன்றுபுகழ்வெய்தித்
திருந்தநிலனாளுமிறைசிந்தையதுநன்றென்
றெரிந்தெழுமனத்தினனுருக்குமனியம்பும். 25

வியந்தெழுமறைப்பொருளுணர்ந்தவினையில்லா
துயர்ந்தவரெனத்தகையமாதவருமொத்திங்
கயர்ந்துமதிதப்பினவரென்றெணவறைந்தீர்
நயந்தினையுமில்லவனையேயுமதுநாவால். 26

நீர்சொலுமிடைக்குலமடைந்துநெறியில்லாற்
காருறவுகூறுகுலமேதவனடர்த்த
வீரமெதுநல்லுருவமேதவன்விளங்கு
மூரெதுபகர்ந்திடுமினென்றுமறிகில்லீர். 27

ஆயர்குலம்வந்துததிவெண்ணெய்நெய்யருந்திப்
பேயின்முலையுண்டடியுமுண்டுபிணியுண்டு
காய்கனிகொடேனினொடுகெந்தமுறுகானிற்
போயுடல்வளர்த்தவனையோபுகலுவீரே. 28

மாதர்திரடங்களுறிவைத்தததிபால்நெய்
யாதரவினாலுதரமல்கிடவருந்திப்
போதுமுனர்கண்டவர்கள்போகவெனவோடிப்
பீதியுறுபேதைதனையேபெரியனென்றீர். 29

ஒள்ளியமனைக்குளுரலேறியுறிதாவி
மெள்ளவுயருங்கலமிழிச்சியதின்வெண்ணெய்
யள்ளிநுகர்மிச்சில்வெருகும்பெறவளித்த
கள்ளனையும்வள்ளலெனவேகழறுவீரோ. 30

தெருத்தனிலிடைக்குலமடக்கொடிகள்சீராய்
நிரைத்தெழவொளிக்கைவளையெல்லவுநெறித்தே
சிரித்தவர்கள்மார்பினினகக்குறிகள்செய்யுந்
துருத்தனையுருத்துயனெனச்சொலுவதென்னே. 31

நீரினுறுமாதர் துகில்வாரிநிறைபோதின்
காருறுகுருந்தின்மிசைநின்றுகரைமீதின்
வாருமிருகைகடொழுமென்றவரைமால்செய்
சோரனையுமாரனிகரென்றுரைதொடுப்பீர். 32

மஞ்சுபுனைமாடவடமாமதுரைமன்னுங்
கஞ்சனெனுமாதுலனையேகருணையின்றி
நஞ்சமெனவந்துவதைசெய்யுநலனில்லா
வஞ்சகனையிஞ்சொலினனென்றுரைவகுப்பீர். 33

சீலமுசுகுந்தனிடைசென்றவன்விழிக்க
வாலமெனவங்கைதனின்மோதியவணீறாய்க்
காலயவன்மாளவிகல்கண்டுநகைசெய்மெய்
நீலனையுமாலெனநிகழ்த்திடுவதென்னே. 34

ஊதுகுழலோசைதனினுழையுமாயர்
மாதர்புளினத்தினுறமாலெழமயக்கிச்
சூதுநிகராகுமுலைதோறுமணைதோறும்
நீதிநெறியில்லவனையென்னெனநினைத்தீர். 35

அடருமகதத்திறைவனுற்றறனிலாற்றான்
றடவரையொளிப்பவனல்சுற்றுவதுதப்பிக்
கடலிடைவயங்குதுவராபதியைக்காக்கு
மிடையனையும்வத்துவெனவெண்ணுமுறையென்னே. 36

யாதவர்முடிக்குரியரல்லரிதுவன்றி
நீதியிலிடைப்பதிவளர்ந்துநெறியில்லாச்
சூதனவநீதநுகர்சோரனையெம்மின்னு
மாதுமணவாளனெனநீருரைவகுப்பீர். 37

எதுகுலமறிந்திடையனென்பதுமுணர்ந்து
மதிமுகமடந்தைதனையீய்வமெனும்வாய்மை
யுதவுமுனிவோர்களுயர்மந்திரிகளெந்தை
முதுமதியின்வந்ததெனவேபலமொழிந்தே. 38

மாதவமுழந்தெனதுதந்தைபெறவந்த
கோதைதனையாவரெனினுங்குழலிசைத்தாற்
கீதுமெனவோதினர்களுவையிருவாளாற்
சேதனைசெய்வேனெனமொழிந்துநனிசீறி. 39

எங்கள்குலமுய்யவருமாரமிர்தமென்றன்
தங்கையெனுமுத்தமிதனக்குநிகராகத்
திங்களவிர்வெண்குடைகவித்தசிசுபாலன்
றங்கமரபாளனுளனென்றுரைதொடுத்தே. 40

சேதிபர்கடங்கள்குலதீபசிசுபாலற்
கோதுகவுருக்குமனஞேலையினையெங்கள்
மாதுதனையீவனிவணிற்கடிதுவாவென்
றீதுறவரைந்துபலதூதுவரையேவி. 41

உருக்குமனலர்க்குளமருத்தமியைநாளைச்
செருக்கொடுசிறந்தசிசுபாலன்வரவேநான்
பொருக்கெனவளித்திடுவெனென்றுபொறையில்லான்
பெருக்குமுரையாற்சபதமானவைபிதற்றி. 42

மதகரிகடேர்நிரைகள்மாவினணியெல்லாம்
விதமுறவலங்கரிமுன்வீதிதொறுமேவிப்
புதுமைபெறவேவிபுதர்தங்கள்பதிபோல
வதிகநயவேதமுரசம்மறைமினென்றான். 43

என்றவனெழுந்துசினமேறவெதிரெங்கும்
நின்றவர்நடுங்கவெரிகண்ணனெறியில்லான்
குன்றெனவுயர்ந்தமதயானைமிசைகொண்டே
யென்றுதவழ்மாளிகையினெய்தினனிருந்தான். 44

உன்மதமெடுத்துநெறியொன்றுமறிவில்லாத்
துன்மதியுருக்குமனனிவ்வுரைதொடுப்ப
மன்மதிகலங்கினன்மறைத்தவர்திகைத்தார்
நன்மதிமுகத்தவணடுங்கியுளம்நைந்தாள். 45

மாதவர்கடந்தமிடம்வைகிடவிதற்பன்
கேதநிரைநெஞ்சொடுகிரீடமுடிதாழ
வேதகமில்மாளிகையினெய்தினனமர்ந்து
போதிலுறைமாதுமணிமாடமிசைபோனள். 46

ஏதமில்விதற்பன்மொழியுஞ்சிறுவனென்பா
ஞேதியதுமற்றுமுயறீமையுமுரைத்தார்
மாதவவுருக்குமணிவேதியனைமால்பாற்
றூதெனவிடுத்தருளுமாறதுதொடுப்பாம். 47

விதற்பராசன் மந்திரப்படலம் முற்றிற்று.

ஆகதிருவிருத்தம் - 3724.

## 67 - வது, தூதேவு படலம்.

விராதன்விரல்சேர்கரன்விசாரவுழையேழு
மராமரமும்வாலியும்நிசாசரருமன்ற
மிராவணனும்வீழவொருவாளிதனையேவிச்
சராசரமுமானவரிதாளிணைதுதிப்பாம். 1

என்றமொழிமன்மதனவல்லிதனையின்புற்
றொன்றவுயிராரமெய்யுறத்தழுவியின்பா
லின்றவருபேருதவியேழ்கடலின்விஞ்சு
மன்றல்கமழோதியெனவேமகிழ்வொடோதும். 20

மின்னுமுகிலேகிலவன்மேனியின்முயங்கு
மன்னமுழின்மன்கையமர்சங்கினினயர்க்குந்
துன்னுமளியேகிலிறைதுயசிகைசேரு
மன்னவரிபாலினிதினேகுமவர்யாரே. 21

எய்துமவராரிவணெனைத்துயரின்மூழ்கச்
செய்பவர்கள்செய்கையுமெதிர்ந்தசிலைவேளின்
வெய்யகணையால்வெருவுகாதலும்விளம்பி
யுய்யும்வகைசெய்கணவனென்னுழையுறத்தான். 22

ஏதெனமனத்தினினையாவிடரிதுற்ற
மாதினையணைத்தினியமன்மதனவல்லி
போதனிகராகியபுரோகிதனருட்செய்
வேதமொழிமானவனையேவெனவிரித்தாள். 23

அங்கிவனையேவியிடினல்லிமலர்மானே
சங்கொளிகொள்கையனுறைநற்றவரைசார்வான்
செங்கமலமன்னகழல்வீரனொடுசேர
விங்குவருவானயரலென்றிவையுரைத்தாள். 24

உரைக்குநலமன்மதனவல்லியையுவந்தே
இருக்குமுதனாலுமறையோதுமவனேயத்
திருக்கறநெறிக்குளமர்செல்வனையென்முன்னர்ப்
பொருக்கெனவழைத்திடுமினென்றுரைபுகன்றாள். 25

மாதிவைமொழிந்திடமகிழ்ந்தருளுமாதர்
வேதமொழிநாவினனைமேவினர்பணிந்தே
நீதகலுருக்குமணிசேருமணிமாட
மேதமகல்பூசுரவெழுந்தருள்கவென்றார். 26

கொஞ்சுசுகமன்னவர்கள்கூறுமுறைகேளா
வஞ்சமகல்கஞ்சமலர்மாமுனிநிகர்த்தே
விஞ்சுமறைநல்வடிவுகொண்டெனவிளங்கிப்
பஞ்சியடிவஞ்சியமர்பைம்பொழிலடைந்தான். 27

நூலொளிருமார்பினனுணங்கவருநன்னா
னாலுமறைநாவினனலந்திகழுமெய்யன்
பாலினுறோரமகலப்பருகுமன்னம்
போலமழிஞானமுறுபுண்ணியன்மகிழ்ந்தே. 28

ஏசகலுருக்குமணியென் னுமடமின்மேல்
வாசமலர் தூவிமறை நாலுமலிவாய்மை
யாசிகள்பகர்ந்திருகணூர்வு றுகளிப்பா
னேசமலிநெஞ்சினெடுநின் று துதிசெய்தான். 29

உருக்குமணியோ துமறையோன் மிகவுகப்ப
வருக்கியமளித் துமணியாதன மிசைக்க
ணிருக்கறையுநாவின னிருக்கென விதஞ்சொல்
முருக்கிதழின்வாய்முளரியாள்பலமொழிந்தாள். 30

மால்பிரமனேற்றில்வருவோன்மகிழ்வொடெய்த
நாலுமறையோதியதினற்பொருளெனத்தான்
கோலமுறவேள்வியனல்கொண்டவருவப்பச்
சீலவமுதம்பருகுமெம்படிசெய்விப்பீர். 31

திங்களின்மும்மாரிபொழியச்செகதலத்திற்
றங்கியுயர்தேவதைகள்மூர்த்தியொடுசார
வெங்குமருள்மெய்யினரியைந்தெழுவவெல்லா
முங்கள்மறையால்வருவதல்லதுவுமுண்டோ. 32

வேந்தரதிபாதகம்விடும்படிவகுப்பீர்
சாந்தமுறசாத்திககுணத்தினொடுசார்வீ
ரோர்ந்துயருநாலுமறையுள்ளபொருளெல்லா
மாய்ந்தமுதலாமிறையறிந்தருளுவீரே. 33

உத்தமகுலத்துதயமாகியொளியுள்ளீர்
கைத்தலநெலிக்கனியெனப்பொருள்கள்காண்பீர்
சித்துறுமறைக்குளுயர்சீரினையறிந்தே
நித்தலுமனற்பிறழும்வேள்விகணிறைப்பீர். 34

எண்கணனுநும்பெருமைகூறவரிதென்று
லிங்கினிநிகழ்த்துமவர்யாரெனவிசைத்தே
சிங்கலின்மறைத்தலைவனன்பொடுசிறப்ப
மங்குலெனநீள்குழன்மடந்தையிவைசொல்வாள். 35

மன்னவன்விதர்ப்பன்மகனாகியவென் முன்னோன்
சொன்னநெறியில்லவசனங்களவைசோர
வென்னிடரறத்துவரையிஞ்சியினின்விஞ்சி
மின்னகரினிற்கடிதுசென் றுவரல்வேண்டும். 36

ஏகிவரலேதுகருமத்தெனவிசைக்கிற்
பூகநிறைசூழ்கழனிப்பொற்றுவரையுற்ற
மாகமுகில்வண்ணன் மதுசூதனனெம்மாயோன்
யாதவன்முராரியரியாயர்குலம்வாழ்வோன். 37

ஆரவனெனக்கருதுமையவுரைகேண்மோ
வீரனவன்யாதவர்குலத்துவருமெய்யோன்
மாரன்வெஃகுமேனியினன்மாதவன்முகுந்த
ஞரணன்முராரிநவநீதனுகர்நல்லோன். 38

கண்ணன்மணிவண்ணனுயருங்கனகவெற்பு
மண்முழுதுமுண்டுமிழுமாலிருடிகேசன்
வெண்ணெய்நுகர்கள்வனெலிவேலைதனின்மேவு
மெண்ணரியசோதிபுகழ்கூறவெளிதன்றே. 39

காலயவன்மாளவகைசெய்தகரியோன்றன்
பாலின்வருநற்கருமமேபகரின்முன்னே
ராலிலையமர்ந்தவனென்னெஞ்சிலகலாத
மாலினைவிளைத்தனன்வளத்துவரைமன்னன். 40

கஞ்சனுயிர்காயுமிறைகாளமுகில்காயா
வஞ்சனமுநாணுமெயிலங்கவரிவந்தென்
னெஞ்சுகிறையக்கணின்முனிற்பனுறவாரா
னெஞ்சில்வசுதேவனருள்செம்மலினையில்லான். 41

விரைகமழ்துழாய்பிறழுமேனியிறையென்முன்
வருவனுடனேமறைவன்மாதர்தருநெய்பால்
பருகினவனெண்ணில்குணமென்மனதுபற்றி
யுருகுமுயிரன்னவனையல்லவைகளுன்கேன். 42

அன்னவனெனுவிகணினெஞ்சினகலாத
மன்னவனையுன்னியவன்மார்பினெழினத்து
மென்னையறியாதுநவையெய்திடவேயென்
முன்னவன்மறத்தினுறுதுன்மதிமுளைத்தே. 43

அரியையெள்கலாக்கியலவன்களையருந்து
நரியைநலனென்றுரைசெய்நன்கிலர்கள்போலக்
கிரிகைகொடுகோநிரைகெடாதவகைகாத்தோன்
பெரியபுகழிற்சிறிதுபெட்புமில்பசாசன். 44

சேதிபர்கடங்கள்குலதீயசிசுபால
னேதமுறுவான்றனையளிப்பெனிளையாளா
மாதினைமணஞ்செய்திடநாளைவருசென்றே
தூதுவனையேவினன்விதர்ப்பனருடோன்றல். 45

ஆயவனுரைத்தமொழிகேட்டவெனதாவி
மாயுநொடியின்முனரதற்குளொருவாய்மை
யாயுமறைநாரதனறைந்தமொழியாலே
தூயமணிவண்ணன்வருமென்றுடல்சுமந்தேன். 46

அறிந்தருன்மறைத்தலைவபாரினடர்கன்றை
யெரிந்துவிளவின்கனியுதிர்த்தவரியென்பா
னுறந்தவமிலாதொருவினுளையுதயத்தே
யிறந்திவெனிக்கிறைவனுனைவிதையெண்ணி. 47

அற்பர்கள்செருத்தொழிலடக்கிசிலனோடே
விற்பெருமைபெங்கணும்விளங்கவினையேன்றன்
கற்புமகலாதவகைவிற்கடிதினேகிச்
சற்பவனையச்சுதனைபெற்குதவுதக்கோய். 48

ஆயுமறையந்தணவெனுருயிரலைந்தே
யோயுமுனரிற்கடிதினெண்வெரையுற்று
மாயவனுநாளையுதயத்துவருவண்ண
நீயுதவிசெய்தருளுகென்றபினிகழ்த்தும். 49

நளனெனுமஙீபன்மொழியாலனநடந்தே
வளவிலுயர்கற்புகிறைபெங்கள்குலமாளும்
வளமையுறகன்னிதமயந்திபெனுமாதி
னுளமகிழவேயுரைசெய்றதுமுணர்வாயே. 50

மாதவனருட்படியின்வாரிதிகடந்தே
மீதுயரிலங்கைநகர்மேவிவினைவீடச்
சீதையுயிருய்யவொளிராழிகொடுசென்று
றுதுரைசெய்வாயுசுதனன்மையுணர்ந்தோய். 51

ஆதவின்மறைத்தலைவனீயறனறிந்தோய்
மாதுயரின்மூழ்குமென்மறக்கமதுதீர
யாதவனிடைக்கடிதினேகுமுதவிக்கிங்
கேதுமிகரில்லையெனவிந்திரையிசைப்பாள். 52

இன்றுதுவரைப்பதியினேகியெழில்சேருங்
குன்றெனவிவந்ததொருகோபுரநல்வாயில்
சென்றுபிறமன்றவர்கடேவர்களிலங்க
வன்றிவுலகுண்டருளுமாதியையடைந்தே. 53

எஞ்சில்குணமாயவமுராரியெனவேத்திச்
செஞ்சொன்மறையோதியரிசித்தமகிழ்வித்தே
யஞ்சுதவிலாமலெனதாவிகிறைகாதல்'
விஞ்சியெழுமாறதனைமெல்லெனவிரிப்பாய். 54

கோவியர்கள்காதலெழவேகுழல்கொடூத
மோவியமுநாணுமுருவாவுனதுமாவின்
மேவியவுருக்குமணியானமடமின்னின்
றேவியுயிருய்யவருளென்றுமுரைசெய்வாய். 55

56

சிற்றினமதாகவருநீசிசுபாலன்
சுற்றமொடுகோசமுறவேதொடரவேகி
விற்றெழில்வயங்கிடவுருக்குமணிமின்னை
யுற்றுமணநீபுணருவாயெனவுரைப்பாய். 56

கூனிவருவாணிமிரவங்கைகொடுகோதின்
மேனிதழுவுங்குமரனுக்குயர்விதர்ப்பன்
மானுனதுதேவியெனவேவரமளித்தா
லானியிலையென்னுமொழிநீயுரைசெய்யையா. 57

சிங்கமெனவந்துசெருவென்றவசன்முன்னு
ளெங்கள்குலவிந்துமதியோமெனமெய்தித்
தங்கணகருற்றுயர்தவாவலியெனத்தா
னங்கைபிறழ்நேமிவரவேயருள்செய்யையா. 58

இலங்கைநகரின்மிதுலைமாமயிலிருந்தே
கலங்கும்வகைசெய்தகிருதன்னுயிர்களைந்து
வலங்கொளுமிராமனெனவந்தருளிவீரந்
துலங்கியுறமன்னனெனைமன்னும்வகைசொல்வாய். 59

காலனெனவந்தடர்கராவினலைகைம்மா
மூலமெனவன்கலுழன்மீதுசென்முராரி
சீலமெனவென்வினைகடரும்வகைசெய்ய
நீலமுகில்வண்ணன்வரவேதுவறிநீயே. 60

இன்னபடிசொல்லுமுறையென்னவறியாதேன்
சொன்னமொழிதன்னுணலனுள்ளதுதொடுத்துப்
பின்னுமிதமானவசனங்கள்கொடுபேசி
மன்னனெனைவந்தணையுமாறுன்ரவகுப்பாய். 61

நீரொடும்வளர்ந்துகிறைசெந்நெலொடுகன்னல்
காரொடுமுலாவுகதலித்திரள்கள்காணுஞ்
சீருடையபூகநிரைசேர்கழனிசூழு
மூர்களிருநூறமகிழ்வோடுதவுவேனுன். 62

வீசுகதிரின்சுடர்விளங்குமணியிட்ட
மாசின்மதிபொன்னினம்வயங்கியுறுமாரந்
தேசுநிகழாபரணமாடைவிடுதேர்கள்
வாசியிபமோடருள்வனீகடிதுவந்தால். 63

சேறியுறுகாதலுரைசெய்துதிருமாலோ
டீறினலனெய்தவருவீர்கொலெனவிற்றைக்
கூறமிருணூறகதிர்கீட்டிசையுதிக்குங்
காறமெனுடற்குளுயிர்காணுமறிகற்றோய். 64

வாயுவெனவேகமலிவாசிநிரைபூண்டே
யேயெனுமுனெய்துவதிலங்கியவிமான
மாயதொருதேரின்மிசையேறியருளையா
மீயுயர்கடற்றுவரையேகியிவண்மீள்வாய். 65

இன்றுதுவரைப்பதியினேகிநெறிநாளை
மன்றல்கமழ்நற்றுளவமாயனொடுவந்தா
லென்றனுயிரும்மொழிவதில்லையதுபோற்செய்
நன்றியிலையென்றுரைசெய்நாயகிநினைந்தே. 66

மழைமுகிலின்வண்ணனருள்மாறுமறைமுன்னோன்
விழைகருமமும்பலவுமோலையின்விரித்தே
யுழையின்விழியொத்தகணிமாதவனையுள்கித்
தொழுதுகையினீயமறையோனுமிவைசொல்வான். 67

அன்னநடையாகியொளிரன்னையயரேனீ
சொன்னநலனாயதுவராபதியில்வாழு
மன்னவனுனைப்புணரவேவரவுரைத்துன்
முன்னம்வருவேனெனமறைத்தவன்மொழிந்தான். 68

மறைமொழியினாசிகள்வழங்கினன்மகிழ்ந்தே
யுறுபுரவிபூணிரதமுற்றனனுவந்தவ்
விறைவியுமெழுந்துகடிதேகெனவிசைத்தங்
கறைவதன்முன்வானயனமாகிடவுயர்ந்தான். 69

வேறு.

அம்பொன்மாமணிவிஞ்சுதேரினனந்தணாளர்குலக்கொழுந்
தும்பர்மீதினெழுந்துசெங்கதிரோடிமேல்கடலுறுவபோ
லிம்பர்மாவொடுகடவுசாரதியெழிலிமேல்விடவியன்மறை
நம்புநாவினன்வரைகள்காடுகளகலாடுகெண்ணியே. 70

வாரிதிக்குளெழுந்துமாருதம்வீசியோடுமரக்கல
னேரெனக்கடுவிசைகொடேயிரதத்திலேநெறியேகிவான்
காருதைத்துறுகோடரத்துயர்கதலிகைத்திரள்கவினுறச்
சீருதித்தமர்துவரைமாநகரணுகினன்றிகழ்வேதியன். 71

அண்டரிந்திரரந்தரத்துவிமானமோடுமமர்ந்துற
வெண்டவத்தினர்நிலவுநம்மிறையிரணியப்பதியிலகவே
முண்டகத்துறைமாதுமார்பன்முராரிமேவுதிருப்பதி
கண்டனன்விழிகளிகொளச்சதுமறையையோதுகருத்தினான். 72

செம்பொனாலவிரெயில்கள்சூழகன்வேலைநின்றுசிறந்தெழ
வும்பர்வானினுயர்ந்தகோபுரமண்டபங்களுமொளிகொள
வம்புராசியெனத்திரண்டனவணிகம்வீதியினடையவே
வம்புலாவியவளகவாணுதன்மாதர்வாழ்துவராபதி. 73

மின்னுமாமணிமிளிர்வகோபுரமுயரவானின்விளங்கியே
சுன்னிலாவவிர்தரளமாளிகைகிரைகள்வில்லிடுநகர்தனிற்
பொன்னின்மால்வரைகயிலையங்கிரிநீலவெற்பணிபொற்பினுற்
றுன்னுவீதிகடோறுமல்லல்பிறங்குநன்மைதுலங்கவே. 74

தேவர்மாமுனிவோர்கள்வந்துதிரண்டுமாமலர்சொரியநற்
பூவிலோனரனோடிந்திரனமரர்மாதர்கள்பொலியவே
நாவினுன்மறையறையும்வேதியர்நாவலோர்துதிசெயலமா
மூவராமொருமுதல்வன்வாழ்பதிமுரசினோசைமுழக்குமால். 75

வீதிதோறுநெருங்குமாபரிதேர்கள்வேழம்விளங்கிடச்
சோதிவாள்கதைவின்முசுண்டிதுலங்குகையினர்சூழநற்
கீதமெல்லிசையாணர்வீணைகளத்தினர்கிளிபோலவே
மாதரார்களிலங்கிவாழ்துவராபதித்திருமாநகர். 76

சந்துபாடலமகிழ்பலாமுகிழுவுபூகநிறைந்தெழு
மந்தமாநகர்முந்துமாமறையந்தணாளனடைந்துநின்
றிந்தமாபுரியிலையுமாபதியெந்தலோகமுமிலையெனச்
சிந்தையாரநினைந்துதேரினில்வந்துவீதிசிறந்தனன். 77

வீதிநண்ணியமைந்ததேரினெழுந்தமாமறைவேதியன்
சாதுரங்கமிடைந்துகாகளமோடுபேரிதழங்கிட
மாதவன்கருணாகரன்கருமேகவண்ணன்மகிழ்ந்துவா
ழேதமின்மணியதிர்கொள்கோபுரவாயிலெய்தினனெழிலுற. 78

ஆயுநான்மறையந்தணாதிபன்வாயில்வந்தமர்வேலையின்
மாயனாயன்முராரிமாதவன்வாமனன்றிருமாலரி
வேயினூதியவாயனச்சுதனச்சராவணைமேவுவோன்
தூயமாமுகில்வண்ணநாதனிருந்தவாறுசொல்வாமரோ. 79

விளங்குமாமணிநீலமாரவினங்கள்வித்துருமங்களுங்
களங்கமில்வயிடூரியம்வயிரங்கள்மின்னுறுகங்கணந்
துளங்கவில்லிடுபதுமராகநன்மரகதங்கடுதைந்திட
வளங்கொணேணிகோடிமீதுயர்மண்டபத்தின்மருங்கரோ. 80

வேறு.

பொன்னின்குடையுயர்சாமரைபொலியக்கதிரவிர்பொற்
றன்றுமெழின்மணியின்றிரடாளத்துடன்றுலங்க
வன்னந்திகழரியாதனமிசைமாமுகின்மான
மின்னுஞ்சுடர்ப்படையாழியனிருந்தான்றிசைவிளங்க. 81

நீலத்தடவரைமேலவிர்நிறையுங்கதிர்பொருவக்
கோலத்துறுமவுலிச்சுடர்திசைவானொளிகொள்ளப்
பாலத்தருமதரத்திகள்பலகாலுறநோக்கும்
வேலொத்தகண்மிளிர்மெய்யெழில்விபுதர்க்கிறையொப்ப. 82

மின்னிலகுமணியாரமுமிளிராபரணஞ்சூழ்
முன்னூறிகழ்திருமார்பமுமுளரித்திருமுகமு
நன்னுகுமிழ்ந்திடவில்லிநென்னித்திலநகையும்
பொன்னுடையிற்பிறழுங்கடிதடமுங்கவின்பொலிய. 83

காதிற்பிறழ்மகரக்குழைகதிர்பொன்னொளிகாட்டச்
சோதித்திருப்புருவத்தெழில்குனிவில்லெனத்துலங்கித்
தீதற்றநற்றிருவாய்மலர்திகழ்துப்பெனச்சிறப்பப்
பாதத்தனிவீரக்கழல்படிவானவிர்பரப்ப. 84

அலருங்கதிரவனுமெனமணியின்றிரளமரும்
வலயங்கவினுறுதோளிணையுயர்மந்தரமான
வலையும்புனல்குடைந்தேறியவரிவைத்திரடொழவே
கலையன்றருள்கரமீதணிகடையம்பொலிவுறவே. 85

அம்போருகமலராமெனவருட்கண்ணிணைசிறப்பக்
கம்பாரமுமணியும்பிறழ்களமுங்கவினுறவே
யம்பாசிழையொளிவீசிடவணிமார்பினினழகாய்
வம்பானிறைதொடரேடணிதுளபத்தொடைவயங்க. 86

கருமாமுகில்காயாமலர்கடலஞ்சனமெனவே
திருமேனியையுடையானவிருடையான்செகமுடையா
னருளாளனமுயர்கேசவனமரர்க்கிறையமல
னுருவாகியுமருவாகியுமுயிர்தோறமரொருவன். 87

பண்ணேர்மொழியார்சோபனப்பல்லாண்டிசைபகர
விண்ணோர்சதமகனெண்டவர்விரிஞ்சன்மலர்பொழியக்
கண்ணாரமுதச்சோதியன்கருணாகரன்றிருமால்
மண்ணோர்தொழவிருந்தான்மரகதமாமலைமான. 88

சந்தார்பொழிற்றுவராபதிச்சதுவேதனும்வியவா
வந்தேயுறக்குடபாலினின்மறையோர்புனலிறையாக்
கொந்தார்துளவணியும்மெதுகுலதீபகமன்னன்
செந்தீபமுமிருபாலெழகின்றன்றிசையிலக. 89

அன்றனைமுன்வருமச்சுதனழகார்முகிலெனவே
நின்றேயருளும்வேலையினிறைவேதியன்வரவை
யென்றேடெடுத்தவழ்கோபுரவணிவாயிலொரியம்பக்
குன்றன்மழைதடுத்தானிவன்கோணர்மின்னெனக்கூற. 90

மதுசூதனன்மொழிகேட்டெயர்மணிவாயிலினமர்வோர்
சதுமாமறைநிறைவேதியதிபாலிமுதயிலு
மெதுவாகுலவிறையோனுனையழையென்றனனெனவே
யிதமாயுடல்புளகம்முறவெழுவேதியனெய்தி. 91

வேறு.

கண்டனன்மணியவிர்கனகமண்டபத்
தண்டருமுனிவருமந்தணாளரு
மெண்டிசைத்தலைவருமகிழ்வொடேத்திடும்
புண்டரீகத்தரும்புரவலன்றனை. 92

திருவளர்மார்பனைத்தேவதேவனை
மருடருபிறவிதீர்மருந்தைமாயனைக்
கருமுகில்கமலங்கொண்டெழுந்தகாட்சியா
முருவனைநிறையுமுத்தொளிருமெய்யனை. 93

சுத்தசாத்திகருணத்தொழிலினான்றனை
யத்தனையருச்சுனமொசித்தவையனை
வித்துருமத்தெழில்விளங்குவாயனை
நத்துறுநித்திலநகைமுகத்தனை. 94

விதியொடெவ்வுலகமும்விதித்தநாபனைச்
சுதைதருமொழியனைத்தூயசோதியைப்
புதிதலரரவிந்தம்பொருந்துங்கண்ணனை
மதியெனவயங்கியவதனத்தான்றனை. 95

மகரகுண்டலம்பிறழ்காதின்வள்ளலைத்
திகிரிசங்கமர்ந்தளசெங்கையான்றனை
நிகரிலாமுராரியைநீலவண்ணனைப்
பகிரதிவளர்ந்தெழும்பாதத்தான்றனை. 96

களவினில்வெண்ணெய்நெய்கவருங்கண்ணனை
யொளிகொளுத்தரிகத்தினுடனுலாவிய
துளபமுமாரமுந்துலங்குமார்பினின்
மிளிருமுந்நூலணிவித்தகன்றனை. 97

திவ்வியமாலைத்துகிறிவளுவான்றனைக்
கவளமார்கரிநடைகாட்டுஞ்சோதியைத்
தவளமாந்தளவுடன்சாதிமஞ்சரி
குவளையோடிலங்கியகுஞ்சியான்றனை. 98

பணவரவணைமிசைப்பதுமநாபனை
யுணவுளவுயிர்தொறுமுறைகுவான்றனைக்
கனிகலன்பிறழ்வுறவருக்கனுமெனு
மணியுடைநாண்செறிமருங்கினான்றனை. 99

பொலன்கொள்பீதாம்பரம்புனைகுவான்றனைக்
கலங்குறவீரையைக்கடைந்தமந்தரம்
விலங்கொணுவகைசெறிவியானமாமெனத்
துலங்குகேயூரங்கொடோளினான்றனை. 100

அண்ணலையமலனையாதியோன்றனை
வெண்ணெயைநுகர்ந்தருள்வித்தகன்றனைப்
புண்ணியவிதர்ப்பர்கோன்புரோகிதன்மகன்
கண்ணினாற்கண்டனன்களிக்குஞ்சிந்தையான். 101

உளமகிழ்வெய்தவென்புருகினானுவந்
தளவிலன்புளகிறையந்தணாளனும்
வளையொடுதிகிரிசேர்மன்னன்மைமுகி
லொளியெழுமேனிகண்டுவந்துபோதுவான். 102

சீதராவாழிசிராமவாழியெம்
மாதவவாழிமாமாயவாழியெம்
யாதவவாழியெம்மிறைவவாழியென்
றோதியேமலர்சொரிந்துவந்துபோற்றினான். 103

சூழ்ந்தவிர்மணியணிதுலங்குமார்பனை
யாழ்ந்தெழுமன்பினோடாசிகூறியே
தாழ்ந்தனவிருவினைதருமமோங்கிட
வாழ்ந்தனன்மரகதவடிவவென்றனன். 104

சிந்தைநற்களிப்பெய்தத்துதிசெய்வான்றனை
வந்ததென்கருமமார்வரவிடுத்தபே
ரந்தணவுறைநகரறைகுவாயென்றான்
செந்திருமகளுறத்திகழுமார்பினான். 105

சீதரன்கவினுறுங்கமலச்செங்கணு
னோதியநலமெழுமுரையினால்மகிழ்
வேதியன்புளகமெய்யெழவிரும்பியே
யாதவகேட்டியென்றியம்பலுற்றனன். 106

குண்டினபுரத்தரசியற்றுங்கொற்றவ
னெண்டவர்வியப்புறும்விதர்ப்பனென்பவன்
பண்டுசெய்தவத்தினாற்பயந்தபைங்கிளி
தெண்டிரைக்கடலமுதனையசெந்திரு. 107

உத்தமகுணத்தள்கற்புயருமோதிமஞ்
சித்திரங்கவின்கெடச்சிறந்தமேனியா
ணத்துறுநித்திலநகையள்நன்மதி
யொத்தொளிர்திருமுகமொளிருமொண்ணுதல். 108

மின்னெனுமிடையினாள்வேய்கொடோளினாள்
அன்னமென்னடையினாளாம்பல்வாயினாள்
பொன்னவிர்மேனியாள்புயல்கொள்பூங்குழ
றன்னிகரிலாதவேற்றடங்கண்மாமயில். 109

விற்புருவத்தினள்வீணையாமெனச்
சொற்பகர்கிளியனள்சோதியாயெழுங்
கற்பகக்கையினள்கமலமாமுகைப்
பொற்புறுபயோதரமிலங்குபூங்கொடி. 110

மல்லலார்வடவிலைநிகர்வயிற்றின
ளொல்லையிலேனுநேர்ச்சுழிகொளுந்தியா
ளல்லிசேரனிச்சமெல்லனத்தின்றாவிசெம்
புல்லவமுறத்திடச்சிவக்கும்பாதத்தாள். 111

வேறு.

தாதவிழுசெங்கமலமீதிலுறுதையல்
பூதலமுயர்ந்தபுவனங்கடிசையெங்கு
மாதவநிறைந்துறவமர்ந்தருளுமங்கைக்
கோதியவியற்பெயருருக்குமணியென்பான். 112

அன்னவள்விசேக்கவருனுதனலையாழி
தன்னினிவர்பொற்புடையநற்றவரைசாரு
மன்னவசுதேவனருள்மைந்தவுயர்வானின்
மின்னுமுகில்மேனியவெனவுரைவிரித்தான். 113

வேதியனுரைத்தநலமிக்கமொழிகேளாத்
தீதகலுருக்குமணிசிந்தையினினைந்தே
யேதுனைவிசேத்தகருமத்தினியவெல்லா
மோதெனவலைகடலினுற்றவனுரைத்தான். 114

வேயினிசையூதியருள்வித்துருமமொத்த
வாயனிவைகூறமறைவல்லமறையோனு
மாயமுகில்மேனியவனந்தவருளாள
தூயமதுசூதனவெனவினிதுசொல்வான். 115

வேலெனும்விலோசனியுருக்குமணிமின்னி
னீலமுகில்மேனியெழினெஞ்சினினிறைந்தே
மாலெழமயங்கிமனனொந்துமெய்யுமாழ்கி
வேலையொலிமீதெழமெலிந்துளம்வெதும்பி. 116

நிறையுமுகிலொத்தவிர்கொணின்வடிவுகண்கண்
டறிகிலன்விருப்பமுறநின்செயலினுர்வ
முறமயலெழுந்துயிருமோயுமுடல்சோருஞ்
சிறியவள்படுந்துனிதெரிக்கவரிதையா. 117

விழியினுறுநீர்களலைவேலையெனவோட
வழுமலரணைக்குள்விழுமாவியுடல்சோரு
மழைமுகில்கணேர்வரினின்மேனியெனவாடித்
தொழுமெழுமழைக்குமயல்சொல்லவெளிதன்றே. 118

ஓதவிசைகற்கிலள்கிளிக்குரைபயிற்று
ளோதிமலர்சூடுகிலளூசல்மிசையாடாள்
காதலெழுமின்வளைகள்கைகழலநொந்தே
யோதுவதுநின்பெயரலாதுபிறிதோதாள். 119

கந்துகமடிக்கிலள்மதன்கணைகளேவ
நொந்துடல்வெதும்பியுநுடங்கிவிளைகாதல்
வந்துறநெடுந்துனிகடீரும்வகைகாணாள்
சிந்தையினிலுன்றனைநினைந்துருகுசெய்யாள். 120

அன்னமும்விரும்புகிலளாடுகிலணீருந்
துன்னுமலர்சாந்துபனிநீர்மெய்சுடுமென்னு
மின்னுமுகிலஞ்சனவிலங்கலொளிர்காயா
நன்மலரெனத்திகழுநின்வடிவைநாடி. 121

பேயினுயிர்பாலினொடுமுண்டபெரியோனே
யாயர்குலம்வந்தருளுமையவனையென்றே
யோயுநகில்மீதினிழையுள்ளவைகளெல்லாந்
தீயுமுருகுங்கருகுமுள்ளமயல்சேர. 122

மருதிறநடந்தருளுமாயவெனுமாரன்
பொருதுறவெழுந்தமயல்போகவணைமீதின்
மருவியணையாதவமுராரிதிருமாலென்
றுருகியெழுவாயெரமோதவரிதையா. 123

குழலிசைகொடுதியருள்கொண்டலெனுமாவி
யுழலுமுலைமேலணிகலன்களுளயாவு
மழலெழவெரிந்துபொடியாகிடவயர்க்கும்
கழைபொருவுதோளிதுயர்காணவெளிதன்றே. 124

ஓதுவதுமுன்பெயர்களுள்ளுவதுன்மேனி
சீதரவுன்மாநகர்சிறந்திடுதிசைக்கண்
காதலெழவேயுடல்கரைந்துயர்கரத்தால்
மாதுதொழுமச்செயல்வகுக்கவரிதையா. 125

கோவியர்கணாணவவர்கூறைகொடெழுந்தே
காவுயர்குருந்தின்மிசையேறியகணாமின்
ஞவியினுநெஞ்சிடையுமம்பகவிணைக்கு
ஞவினுளுமெங்குமுளையென்றுமுளைநல்லோய். 126

உன்னவரிதானகவின்மாதவவுன்வீரந்
தன்னிகரிலாதசெயலின்மயறழைக்கு
மன்னம்வடமீனனையவாரமுதனங்கா
மின்றுனதுதேவியெனவேநலன்விரும்பும். 127

அற்புதமுகுந்தவரிகேசவவனந்த
சற்பவணையச்சுதசழக்கர்தலைசிந்த
மற்பொருதமாயவுனதாசையின்வருந்தல்
கற்புடையகன்னிகைகருத்தையுணராமல். 128

ஏதமிறையுங்குணனுருக்குமனனென்போன்
நீதமுயல்வோனெறியில்சேதிபனிடைக்கே
யோதரியவொண்கொடியையீவனெனவுன்னித்
தூதுவனையேவினனறங்கள்மறைசோர. 129

சீலமில்முனோனுரைசெவிக்குறுதலோடுங்
காலன்வரவேயுயிர்கலக்கமுறுவார்போல்
வேலின்விழியாள்விதலையுற்றவியல்வேலை
யாலநுகர்வார்தமினுமஞ்சினளயர்ந்தாள். 130

அஞ்சலெனவேறுதுணையற்றவளவாழி
விஞ்சியுறநாகவணைமேவியருளில்லாக்
கஞ்சனுயிர்செற்றகருணாகரவெனாவி
துஞ்சுமுனம்வந்தருள்செய்யென்னுமுரைசொல்லி. 131

மாதினவருந்துமவளென்னைவருகென்றே
யாதவனென்னாயகனிடைக்கடிதினேகித்
நீதமுயல்வோர்கள்செயல்செப்பெனவுரைத்தா
ளாதியெனவோமமுறுமந்தணனுரைப்பான். 132

முன்னையுகமெண்டிசையுமூவுலகுமஞ்ச
வின்னல்செயிராவணனிலங்கைநகர்தன்னில்
மன்னவனிராமனைநினைந்துளம்வருந்து
மின்னெனவிருந்தனள்விதர்ப்பன்மகள்வீர. 133

என்றுரைபகர்ந்தவனுருக்குமணியென்னுந்
துன்றகுழல்மாமயிலுரைத்தசொலையெல்லா
மொன்றுமொழியாமலுலகங்களையுமுண்டால்
மென்றளிரின்மீதுதுயில்வானொடுவிரித்தான். 134

கழைகொடிசையூதியருள்கண்ணவனைநாடித்
தொழுதுமயலெய்திமெலிசுந்தரியுனக்கே
யெழுதியநலோலையிதுவென்றுகையினீந்தான்
மழைமுகிலின்மேனியிறைவாங்கினன்மகிழ்ந்தே. 135

வாங்கியருளோலைதனைவாசகமவலான்கை
யீங்கிதனையோதுதியெனக்கடிதினியத்
தீங்கிலமறைப்பொருளுறத்தெளியுமின்சொல்
லோங்கியிடமூதறிவுணர்ந்தவவனோதும். 136

வேறு.

நீதுசெயுருக்குமன்செயலினுலுறும்
வேதனைகடுவெனவிளையவெண்ணெயுண்
சோதிமுன்னுருப்பிணித்தோகைதன்றுய
ரீதெனவெழுதியமொழியியம்புவாம். 137

மாயவமானவமதுரைமன்னவ
வாயநீகேட்டுவெந்தருணின்றேவியாந்
தூயகுண்டினபுரத்தோகைகாதலா
லோயுநானெழுதியவோலைவாசகம். 138

விண்ணவரிறைவிடுவெருடமிஞ்சவே
மண்ணுறுபொதுவர்கள்மகளிராவுயக்
கண்ணகன்வரையினைக்கவித்துக்காத்தருள்
புண்ணியவொன்றுநீபுகலக்கேட்டியால். 139

சுருதிகடெரியவுமரியதோன்றனின்
கருமுகிலெனக்கவின்காட்டுஞ்சோதிசெய்
யுருவினின்மயலெழநீயுருமையால்
வெருவுவென்காணேனேவேதத்துன்ளுளாய். 140

கண்ணுளைமனத்துளேகாண்கிலேனுனை
யெண்ணுமுன்வருகுதியருளுமீகலாய்
வெண்ணெயுங்கள்வவுன்விரகெலாமொரு
பெண்ணுடன்வளர்த்தியோபெருமையானநீ. 141

குருந்துமேலேறியுங்குரவைகோத்தும்வாய்
பொருந்துவேயூதியும்பொதுவர்வெண்ணெய்பா
லருந்துநீயடியனேனுள்ளமாரவே
யிருந்தணைகாண்கிலேனென்னமாயமோ. 142

ஆயர்தம்பாவையர்க்கமுதமாகநல்
வேயிசையூதிமுன்விளங்கிநின்றநீ
வாயுநேர்படக்கடல்வங்கம்போலவே
யோயுமென்முன்னிலாதொளிக்குமாறெனே. 143

துலைவிலாப்பொதுவர்தந்தோகைமார்க்குநற்
கலவியுமளித்தவர்களிப்பவாழுதி
யிலவிதழதரமீந்தெனையணைக்கிலாப்
புலவியென்னருடிலயம்பூதநாயக. 144

சேணிலனுளனிறையென்றுசெம்மருன்
காணுதியெனக்கனல்கனகன்கையறை
தூணில்வந்துதித்தநீயென்முன்றோன்றலா
வீணினையுரைத்தருள்விளங்குநேமியாய். 145

கஞ்சமாமடுவினிற்கராவினாலய
ரெஞ்சிறேலழைக்கமுன்னெய்திநின்றநீ
பஞ்சபாணத்தினாலுலையும்பாவியேன்
றுஞ்சிடாதொல்லையிற்றேன்றுதூயவ். 146

ஆளுவாயுன்றிருவடியினன்றியே
மீளலாத்துனியென்மேல்விளைத்துவைக்கினுங்
காளமாமுகினிறக்கண்ணநீயலா
ஞாளிபோன்றவரைநானத்திலேனரோ. 147

உன்னையென்னுயிரெனவுள்குநெஞ்சொடு
நின்னிருதிருவடிநெகிழலாதய
ரென்னினைவறிகிலாவீதியென்னிலா
னின்னலொன்றிடுமுருக்குமனென்முன்னவன். 148

பாஞ்சுறுகதிரொளிதனிலும்பாரினில்
மேஞ்சுறுமின்மினிவிழுமிதாமென்றும்
ஆஞ்சுறுகற்பகத்தழகையன்றென்றே
காஞ்சிரநலனெனுங்கயவர்போலவே. 149

நெறித்திறன்றிறம்பியநீசனாகியே
மறத்திறனுறுசிசுபாலமன்னன்கைக்
கறத்திறன்கெடவெனையளிப்பனென்றன
னிறத்துளவுதவுவர்க்குதவிநேமியோய். 150

நன்றியிலானுரைசெவியினண்ணநான்
பொன்றிலாதிருந்ததுபுயலின்மேவினா
ளன்றலர்தாமரையமைந்தமேனியா
முன்றனைக்காணலாமென்னுமூற்றத்தால். 151

உயிர்சுமந்துழன்றனனுலகுணேமியா
யயர்வொழிந்தடியனேற்கஞ்சலென்றுதோய்
தயிரனைகைகளாற்றமியனைத்தழீஇத்
துயரறுத்தாளுதிவந்துதோன்றியே. 152

பாரிலானிரைக்குமொண்பாவைமார்க்குநீள்
கோரவெம்பருவரல்குறுகவந்திடில்
வீரியரமர்செய்துவிலக்குமெய்ந்நெறி
யாரியவறிந்தநிற்கறையவேண்டுமோ. 153

அரக்கனூற்றெனவளக்கரிற்கவிழ்
மரக்கலமெனவடியேன்மெய்வாடுமுன்
பொருக்கெனவருகலையென்னிற்பொன்றுவன்
பரக்கழியுணக்குறும்பதுமநாபனே. 154

உடலிடையென்னுயிரொருவுமுன்றெவி
கடலிடையமருவாய்கடிதினெய்தியே
யிடமுடையுனதுமார்பணைத்திடாயெனிற்
கொடியனேனுயிர்நமன்குறுகுங்காண்டியால். 155

நாளைவந்தெனைமணநண்ணிலாயெனில்
மாளுவனெரிதனில்விழுந்துமாண்டபின்
மீளுமோர்பிறவியின்வினையினேனைநீ
யாளுநல்வரமருளமலவச்சுத. 156

ஆதலிலச்சுதவடியனேனிங்ஙன்
சாதலின்முன்னம்வந்துதவிச்சார்வுறுஞ்
சேதிபன்சிரங்களைந்தெதிர்நிசெய்யகண்
மாதவவுன்றிருவடிவணங்கினேன். 157

வானுநீமண்ணுநீமற்றுமுற்றுமே
யானநீமதுரைமாநகரினங்கையாற்
றானுவந்துரமுறத்தழீஇக்கொணற்றவக்
கூனியாய்ப்பிறந்திலேன்கொடியளாயினேன். 158

நெடியவமாதவநிலமளந்தரு
ளுடையவவானிரையுவந்துமேய்த்திடு
மடவியிலுன்றிருவடியினார்வுறும்
பொடியதாய்ப்பிறந்திலேன்புன்மையாயினேன். 159

அலையுலாநதிகுடைந்தன்னம்போனடை
நலனுலாமகளிர்நச்சினத்தராகியே
மெலியவாண்டொல்லையின்மேவிநீகவர்
கலையதாய்ப்பிறந்திலேன்கவலையுள்ளத்தேன். 160

ஆயர்மாமடநல்லாரார்வமோடெய்தச்
சீயமான்புலிகரியாவுஞ்சேரநின்
வாயினுலிசையெழமகிழ்வொடூதுநல்
வேயதாய்ப்பிறந்திலேன்மலினமேவுவேன். 161

குணங்கெடுங்கருதலர்குரகதங்கரி
பிணம்படக்குருதிகள்பெருகநீடுபேய்க்
கணங்குதித்தாடவேபொருதுகாத்தெனை
மணம்புணர்ந்தருளவாவாசுதேவனே. 162

ஏழையேனறைந்தபுன்மொழிகள்யாவையு
மாழியாய்பொறுத்தியாலடியளேனைநீ
சூழவாநாளையென்றனியினாற்பல
ஊழியாங்கடிகையொன்றறிதியுத்தம. 163

இனையனபொருடரவெழுதும்வாசக
மனையவுமொழிந்திடக்கேட்டவாழியா
னினையவுமரிதிவள்கற்புநீணில
வனிதையர்திலதமென்றுளமகிழ்ந்தனன். 164

நாயகியெழுதுவாசகத்தினன்குறத்
தீயுறுந்துப்பெனவுருகுசிந்தையான்
றூயகம்பிரிந்திடைப்பாடிசார்ந்தவன்
பேய்முலையுண்டபீதாம்பரத்தரி. 165

துய்யபாற்கடலிடையமுதிற்றோன்றிய
செய்யவளாமெனத்திகழுஞ்சிந்தையான்
மையில்மாணவக்குறளாகிவானுளோ
ருய்யவேழுலகளந்தருளுமூழியான். 166

செந்திருமகளெழுதனையசெய்கையால்
வந்திடும்புளகமெய்ந்நிறையுமாதவன்
சிந்தையிற்களிப்புறும்வாசுதேவமா
லந்தணன்றனக்குரையருளினனரோ. 167

அருந்ததியனையவளலையினாயிழை
யிருந்துழிகாலையேயெய்திநன்மணம்
பொருந்துவன்பாணியாதிரதமீதுபோய்
வருந்தலைமின்னெனவுரைவழங்குவாய். 168

விண்ணவரெதிர்க்கினும்வேலைசூழ்ந்திடு
மண்ணவரெதிர்க்கினுமலைந்துமாமணம்
புண்ணியத்தணங்கினைப்பொருந்துவேன்மலர்ப்
பெண்ணெண்ணுந்தத்துறலொழியப்பேசுவாய். 169

இப்பொழுதிரவினிலேகியந்தண
துப்புறமதரமின்றனிகடர்ந்திட
வுப்புடைக்கடலிடையலரியோங்கிடு
மப்பொழுதணுகுவோமறைதியாலென்றான். 170

கிளிமொழியனநடைக்கெண்டையங்கண்ணி
யுளமகிழ்ந்திடமுன்னுலகளந்தவன்
வளமுறுமணிகலனவிர்கொள்மார்பினிற்
றுளபமல்கியமலர்த்தொடையுமீந்தனன். 171

வாங்கினன்மதுவுகுந்துளபமாலையை
வீங்கினன்குவவுத்தோள்மகிழ்ச்சிவிஞ்சவே
யோங்கியமறையினாலேத்தினானுளந்
தீங்கிலோனறநெறிதெரிந்தவேதியன். 172

கதிரவனவிரெனக்காட்டுநெற்கல
னுதநியிற்சலஞ்சலமுதவுமாரமு
மதுரமென்மொழிமறையவனுக்கீந்துமாக்
கதியுறமிரதமுமருளிக்கார்வணன். 173

ஓடுமிவ்விரதமேலேறியொண்கொடி
வாடவெமுன்னரென்வரவுசொல்கென
வாடினன்மகிழ்வொடுபொடியந்தணன்
வீடியவினையெனவிளம்புவானரோ. 174

ஆரியவாழியென்னமலவாழிபோர்
வீரியவாழிநீயெனவிளம்பியே
சீரியமாயனைவிடைகொண்டேதிகழ்
தேரின்மீதேறினன்மறைதெரிந்துளான். 175

இரதம்வானெறியுலவெழிலிதாவுறப்
பரிதனைமுடுகுகோல்வலவன்பார்வையாற்
கருதுவோர்மனத்தினுங்கடுகியேகினன்
சரதநான்மறையறிந்தவர்களெண்ணுவான். 176

இவ்வழிதுவரையினெந்தைபாலெய்துஞ்
செவ்வழியந்தணன்செய்கைசெப்பினு
மவ்வழிவிதர்ப்பர்கோன்புதல்வியன்னமென்
னவ்விபோல்விழியினுள்செயனடாத்துவாம். 177

தூதேவு படலம் முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் - 3901.

---

## 68 - வது, அலங்கற் படலம்.

---

சூழவக்துறுதுனியறத்துலங்கியகதைநீ
ளாழியோடுகோடாதவச்சார்ங்கம்வாளமர
வூழியாயிரமொருகணமாகவேயுலகம்
வாழவாழிமேலமருவோன்மலரடிதொழுவாம். 1

வேறு.

மறையவன்வையமேல்வல்லையேகவாண்
டிறைவியம்பகமிமையாதுநோக்கியே
மறைநதலுமலரணைமேவிவாரிதி
யுறையரிவடிவினையுள்குவாளரோ. 2

நீலமால்வரையினம்போருகந்நிறை
கோலமாய்க்குருமணிகுலவுமெய்யொளிர்
மாலினாரிவர்கொலோவந்துநின்றனர்
வேலைநேர்விழியினீர்விளம்புவீரெனும். 3

கண்ணின்முன்னெய்துவான்கரங்களாரவே
யெண்ணிறொல்வினையினேன்றழுவவெய்தினான்
வெண்ணெயுண்கள்வனாம்விரகன்வித்தக
னுண்ணயமிலன்கொலோவுரைமினீரெனும். 4

மன்னவன்றுவரைவாழ்வாசுதேவன்யா
னுன்னுமுன்னென்னுயிருருக்கியுண்டவன்
பின்னவன்வந்தனன்பிரிந்துபோயினா
னின்னவனின்னமுமென்செய்வான்கொலோ. 5

எனுமுரைபற்பலவியம்பியேந்திழை
மனமயல்மல்கிடமலர்க்கண்முத்துகக்
கனலுறங்கிலின்மேற்கலன்கடந்திட
வனநடையெனுமினாளணையிற்சோர்ந்தனள். 6

சோருமின்மயலுறந்துனியைநோக்கியே
வாருறுமுலையின்மேன்மணங்கொளும்பனி
நீருறவிடுத்தனர்நிறைந்தசந்தனம்
வாரிமெய்பூசினர்மங்கைமார்களே. 7

ஏங்கினர்பொருமினரிருகண்ணீர்விழப்
பாங்கியர்பருவரற்பரவையினுறப்
பூங்குழல்மடமயிலெழுந்துபூவணை
நீங்கினணடந்தனணிறைந்தசோலைவாய். 8

பாடலமாதவிபனசமார்நிழற்
கோடுடைநாகமாமலகங்கோங்கொடு
பீடுடையாசினிபிண்டிபூகம்வா
னீடியதாழைசண்பகநிறைந்தன. 9

அற்புதமலர்மலிதுணர்களான்றெழும்
பொற்பெழவெழிலிமேற்பொலிந்ததாமெனுஞ்
சொற்பெழவிபுதர்தம்பதிதுலங்கிய
கற்பகமரநிரையெனவுங்காட்டவே. 10

நாகமேற்கேகயநடிக்கநல்லிசை
பூகமேலளிசெயச்சூதம்பொற்பெழக்
கோகிலங்கூவவஞ்சுகங்கள்கொஞ்சவே
யூகமாங்கனியுதிர்த்தோடுய்யானத்தில். 11

ஞாவிபுங்கமலமுங்கடிகொள்பானலு
மேவியேயலர்ந்தெழவிளங்குந்தன்மையாய்த்
தாவிநற்கயலெழத்தரங்கம்வீசிய
வாவிமீனிறைந்தொளிர்வானம்போன்றதே. 12

குரண்டநற்கொக்குறவயதுட்கூடிற்றென்
றரண்டுசேலினஞ்சுரிவளையையண்டின
மருண்டுவீழிறவொடுபிறவிமானவே
கரண்டநீர்முழுகிமீதெழுந்துகாட்டின 13

ஓதிமந்தாமரையுறங்கச்சிகரங்
கீதமேமொழிந்திடக்கிள்ளைபேசவே
நீதியால்மகிழ்நனைத்தெய்வமாய்நினை
மாதரார்மனமெனத்தெளிந்தவாவிநீர். 14

வளையினமதிர்த்தெழவாளைதாவநல்
லளியினமரற்றிடவலையுந்தாமரை
களியனந்துயில்விடக்கயல்கள்பாயவே
யொளிகொடண்புனலலைகடலையொத்ததே. 15

பொன்னெழிற்படியெலாங்கெழுமிப்பொற்புற
மின்னவிர்மணியெலாம்விளங்கப்பித்திகை
துன்னியபங்கயஞ்சூழக்கோடுகள்
மன்னியதந்தமார்வாவிநேருற. 16

நீலமும்வயிரமுநிறைந்தவென்றெழி
லேலுமாமணிகளுமிரணியத்திழை
கோலமாந்தூணணிகோடிதுன்னவே
மேலெலாஞ்சந்திரகாந்தமின்னிய. 17

கந்தனார்தந்தைவாழ்கயிலையாமெனச்
சந்திரனார்பதந்தரணிவந்தென
விந்திரனாருறுவிமானமீதெனச்
சந்தமார்மண்டபந்தயங்கநாப்பணே. 18

ஆரநீள்காவினிக்கமர்ந்திலங்கமீ
மூரியேரரம்பையிற்றமாலமூடியே
வேரிமாமலர்மலிவிதானம்வீக்கிநீர்
வாரியார்தரளமாமாலைநாற்றினார். 19

எல்லையில்கருப்புரமிழைத்தசந்துட
னல்லகுங்குமவெறிநாறமோடுறப்
பல்லவம்படுத்துமீப்பங்கயத்தினின்
மெல்லியதளவமாமலர்விரித்தனர். 20

58

தண்பனியயந்தனைத்தெளித்துச்சாதியும்
பண்புறமௌவலும்பரப்புமெல்லணை
மண்பவமரவருவனப்பினிந்திரை
யொண்பவளக்கொடிபோலவுற்றனள். 21

மேவினள்வெறிகமழ்மலரின்மெல்லணை
யாவியுக்குரம்பைவிட்டகல்வதாமென
வோவிலங்காந்துயர்கனலையுற்றயர்
தூவிநல்லனமெனத்துளக்கமெய்தினள். 22

மதிகலங்கிடுமெழுமைமயல்விஞ்சிட
விதிகொடிதோவெனவிளம்பும்வாய்வெரீஇத்
ததிகளவாவொய்தமியளேனைநீ
வதுவைசெய்தணைத்திடவாவென்றோதுவாள். 23

கூனிவாவெனக்கரங்கொண்டேற்றவள்
மேனிமாமணமுறத்தழுவும்வித்தகா
தேனவாவொமெலர்தேடும்வண்டென
நானவாவெய்தநீநணுகிலாததென். 24

இன்னனகூறிநொந்தரந்தையெய்தவே
யுன்னுமால்வடிவினையுயிருமோய்ந்திட
முன்னையூழ்வினையெங்ஙன்முடியுமோவென
வன்னமானடையினளயரும்வேலையில். 25

அகிலம்வானளந்தவனணுகிலாமையொண்
ணகையிலாநங்கையைநணுகுகாமத்தின்
சிகையநல்பரவமெய்சிவப்பச்செல்வபோற்
ககனமீதலறிமேற்கடலின்மூழ்கினன். 26

அனைத்துலகும்பெறுமாதிமூர்த்தியை
நினைத்திவனேபரனென்றுநெஞ்சினுற்
றினைத்துணையாகிலுந்தெளிகிலாதவர்
மனத்தினைப்பொருவினவளைந்தபேரிருள். 27

வெய்யவன்சுடரொளியொருவவீங்கிருள்
வையகந்திமிர்ப்பிழம்புறவளைத்திடச்
செய்யவடிசையெலாநோக்கிச்சிந்தையி
லுய்வகையிலையெனவுள்கிக்கூறுவாள். 28

வளைந்தனைகிலம்விசும்பருந்துமாறென
விளைந்தனைகங்குலேவிழையுமென்னுள
முளைந்திடக்கருநெருப்புதவினையென
வளைந்தனள்பருவரற்கடலுளன்னமே. 29

சந்தனங்கரிந்துகத்தரளமாமணி
வெந்துகமையலாலுளம்வெதும்புவாள்
நொந்தனடிசைதொறுநுழைந்துவந்தெழு
மந்தியிற்பசலையுற்றயரும்வேலையில். 30

வேறு.

அம்பரக்கயற்பதாகையரிபரிவசந்தன்வைய
மும்பரினிந்துகொற்றக்குடையெனவுருவமாருஞ்
சம்பரன்பகைஞனுக்குச்சராசனத்தரிநாணேற்றி
வம்பவிழசோகவாளிமலர்மகள்கருத்திலெய்தான். 31

வேறு.

அல்கிளர்வருசதாகதியருப்பின
வில்கிளர்மலர்க்கணையுந்தவாய்வெறீஇ
மல்கியகருமணிவடிவவாவென
வொல்கியவொண்கொடியுறைக்கலுற்றனள். 32

காளமாமுகிலெனக்கடுகிவந்தெனை
யாளவேயஞ்சலென்றணைத்தியைங்கணை
மாளநாணறவில்லுமண்ணில்வீழ்ந்திவண்
வேளினார்விறலொரீஇவென்னிட்டோடவே. 33

கங்குலேழுகமதாக்காதல்விஞ்சயான்
மங்கிலாமுன்னம்வந்துதவிமாதவ
சங்கிராமத்திகின்முசுண்டர்ச்சார்ந்திட
வெங்கும்வாளிகடொடுத்தெய்துவாயென்றாள். 34

அணிகலனகலவாயிழையும்வாடவான்
திணியிருளகலநெய்த்தீபந்தீதெனப்
பணமணியுமிழவான்பருதிபோன்றொளிர்
மணிவிளக்கெடுத்தனர்மாதரார்களே. 35

செறுக்குறுவேனிலான்சிலையின்வாளிக
ணெருக்கிமெய்யுறமயனிகழவேதென்றல்
பெருக்கவச்சுதன்கவினினையும்பெட்பினா
லுறுக்குமற்கிளையவளுளையும்வேலையில். 36

உலகயில்மாதவனுதவுமாலினாய்
மெலிகொடிசெயலினைக்காணவேண்டியே
யலைகொளுமளக்கர்மீயமர்ந்துநோக்கிய
நிலமகளெழின்முகநிகர்த்ததிந்துவே. 37

கொள்ளியும்விள்ளலாக்கொடியகங்குலை
யள்ளியுள்விழுங்கிவானகன்றபாரிடை

வெள்ளியையுருக்கியேவிரித்தல்போன்றது
தெள்ளியகிலவினைப்பரப்புந்திங்களே. 38

உடுக்களுமுட்கிடவிருளுமோய்வுற
மிடுக்குறக்குமுதங்கள்விதர்ப்பர்கோன்மகள்
நடுக்கமுற்றொளிர்மதன் கணையினையவே
யிடுக்கணுற்றிடவிளங்கியதுதிங்களே. 39

அல்லியங்கமலம்வாய்குவியவாம்பல்க
ளெல்லையிலுருமதிவரவெழுந்தன
நல்லறிவினர்களேயொதுங்கநன்கிலாப்
புல்லறிவினர்கடாநிறைந்தபோன்றன. 40

மெல்லமாவிடமெனப்பரந்தவெண்ணிலா
வல்லிமாமலருறையன்னம்போன்றொளிர்
வல்லியாகந்தனில்மதனம்பொடுஞ்
செல்லவேயுளமனலுறத்தத்தேம்பினள். 41

வேறு.

சோமனல்விளையுந்தீமெய்சுறக்கிடத்தோமில்வாசத்
தாமமோடாரமெல்லாந்தழலதாயிருந்ததாகக்
காமவேள்சரத்துக்காற்றாக்கன்னிகையுயிரைக்காக்குஞ்
சேமமாண்டிலாதுவிஞ்சுந்தெருமாலுறவேசொல்வாள். 42

வேறு.

அந்திதந்தவனலெழவைங்கணை
சிந்திமன்மதனுஞ்செருச்செய்திட
வெந்தசிந்தையளாய்மெலிவேனென்மே
லிந்துவந்தெரிவீசினையேயென்றாள். 43

சீதளந்தருதெள்ளமிர்தோடுநீ
யோதனற்கடலில்லுதித்தாயெனும்
நீதியென்னளவேயொழிந்தாய்நிறை
வேதனைப்படவெங்கனல்வீசினாய். 44

நயமிகுந்தவர்போலவுநண்ணினா
யயரவெங்கனல்வீசினையன்பினா
லுயருமொள்ளியர்போலுள்வினைமலி
கயவர்சிற்றியல்காட்டினைவெண்மதி. 45

கெடியமாதவனாரென்னைநேர்கிலா
விடமறிந்தெரிசிந்தினையிந்துவே
கொடியையாயினையென்னளவிற்குளி
ரடையநேர்கிலையென்றயர்ந்தாளரோ. 46

அம்பிறைக்குமரிக்கொண்கனுசைமா
லம்பிறைக்குங்கணுள்கொண்டனங்கவே
ளம்பிறைக்கவுளைந்தமன்றிவா
னம்பிறைக்குடல்வாடியலைந்தனள். 47

மதியினாலுமுன்னேன்மனத்தெண்ணவ
மதியினாலுமதன்கணைவந்துறு
மதியினாலுமெலிந்துளம்வாடினள்
மதியினார்குண்டினபுரிமாமயில். 48

பாலினார்வண்ணர்பின்வந்தபார்த்திபன்
பாலின்மாலெழப்பைந்தொடிமானனம்
பாலும்வெண்மதியாலும்படர்கனற்
பாலைவேலியுட்பைங்கிளியொத்தனள். 49

கரனைவென்றருள்கார்முகிலேயச்சங்
கரனிருந்தகையிலையன்றேந்திய
கரன்முரண்களைந்திரிக்குக்கார்முகக்
கரனெய்யாவகைகாத்தருள்வீரெனும். 50

சிலையெடுத்துத்திரள்மழைகார்த்தரன்
சிலையெடுத்தொடித்தாயெனைச்சேரநச்
சிலையிதென்னரவிந்தங்கள்சேரும்பா
சிலையடுத்துறுமேனியசெப்பெனும். 51

வாலிகாலன்றன்மாலெழமாருதி
வாலினாலெரிமாநகர்போலமெய்
வாலிலங்குமணியிழையேகுநோ
வாலின்னுவுறவாடினள்மாமயில். 52

சரியவண்ணனிணைவினிற்காரிகை
கரிநுகர்ந்தவிளங்கனியாய்க்கர
னரியுறுஞ்சிலைநாணுமிழம்புள
வரியைநொந்தரங்தைக்கடல்மூழ்கினுள். 53

காஞ்சனங்கன்கடுங்கணையேவமெய்
காஞ்சனம்பெறக்கண்ணிணைநீருகப்
பாஞ்சசன்னியமேந்தும்பரமன்மால்
பாஞ்சரிந்திடநொந்தனள்பண்மொழி. 54

கஞ்சமாமலர்மேவியகாரிகை
கஞ்சமாமனைக்காய்ந்தவன்மாலினு
லஞ்சினுளனங்கன்விடும்புக
ளஞ்சினுலுமழல்மதியாலுமே. 55

புலியினலலையும்பொழில்போலவம்
புலியினல்மெலியும்மலர்ப்பொற்கொடி
கலையும்பார்விழவேகதிர்வீசுமே
கலையுமேயுருகிக்கரியாயின. 56

தீயின்மேன்மெழுகாகியசிந்தையா
ளோயுமாலினுருகுமுளைக்குமால்
வேயினூதியவித்தகவாவெனச்
சாயும்பாயலிற்றுமரையன்னமே. 57

வேறு.

வளையும்வளையாழியையொத்தெழுமால்
விளையும்விளையாட்டொருமெல்லியலா
ளுளையும்முளையுந்துறவுள்ளுயிர்பித்
தளையுமமளைவெண்ணெயருந்தியெனு. 58

மலையும்மலைமீதில்வசந்தமலா
தலையும்மலையாழியமர்ந்தவனென்
றலையும்முலைமேன்மெழுகாயுளமே
கலையுங்கலையுங்குலையக்கவலா. 59

மதிவந்தனல்வீசியமாதுவரா
பதிவந்தபரம்பொருள்பாரெனுமாற்
றதிமுந்தியருந்துதடக்கைகொடே
யெதிர்வந்தணையென்னுமிளங்கொடியே. 60

மையார்கடலின்வருமாமதியும்
வெய்யோனெனவேயனலேவிசிறு
மையாதுவராபதியாயடியே
னுய்யேனினிவந்துதவாயெனுமால். 61

வேறு.

வாசுதேவவாமனமுகுந்தமாதவாவெனு
மாசையால்மெலிந்தவென்னையஞ்சலென்றணைந்திடாய்
நீசனனசேதிராசனின்கைவாளிதன்னினு
னசமாகவேயடர்ந்தென்முன்னிநெய்துநாரணு. 62

அந்தியாலுமன்றிலாலுமாயர்வேயினலும்வே
ளுந்துவாளியாலும்வீசுதென்றலாலுமும்பரி
னிந்துமூசிலவினுலுமீடழிந்தவென்னையுன்
விந்தைசேருமார்பினுற்றணைத்திவீரியாவெனும். 63

முண்டகங்கலக்கெழுந்தமங்குநீலமுகிலெனக்
குண்டலங்களலையவீசுகுங்குமங்கள்மேனிமேல்
மண்டவண்டலம்புமாலைமார்பின்மாமணித்திரன்
மிண்டியண்டமுண்டகண்டவீரவென்னைமேவியாள். 64

கஞ்சமன்னனைக்கடிந்தகாளைபாலிலேகுமென்
னெஞ்சுவந்துரைத்தியென்னைநீமறந்துமீள்கிலா
வஞ்சமென்னமல்லடர்த்தவாசுதேவனுன்னையும்
வெஞ்சிறைப்படுத்தினன்கொலென்றயர்ந்துவிம்முமால். 65

பாருமேருவும்பரந்தவானமுண்டபெண்டொரால்
சேருமாருநேரிலாதுவீசுவாசுதேவரே
வாரும்வாருநீரளித்தமால்வளைக்கவேயெனா
பாருமார்பினணையுமென்பயோதரம்பணைக்கவே. 66

வள்ளல்வாசுதேவனுமுகுந்தமாதவன்னிவண்
கள்ளனாகிவந்துநின்றுகண்ணுளேகரந்தென
துள்ளமேவிமாலிழைத்தெனுயிருநாணுமனமொடே
கொள்ளையாடியேகினானிதென்னமாயைகொண்டனன். 67

கலைகழன்றவளைகழன்றவிழைகழன்றகாமவேள்
சிலைகழன்றவாளிவீசுதென்றல்வந்தடர்த்திடத்
தலைகழன்றுகயமண்வீழவேதடிந்தமாயன்மால்
வலைகழன்றபோதெனாதென்மனமொடாவியென்னுமால். 68

அனங்கனெஞ்சழன்றுசிந்துமைந்துவாளிமேலவா
மனங்கனன்றுசிந்தைநொந்தயர்ந்துவாடுமென்னிரு
தனங்கடம்மினியணைந்துவாழ்திசாரும்வானரத்
தினங்கள்கொண்டிலங்கைவேரறுத்தவீசவென்னுமால். 69

புண்ணியப்புரோகிதன்குமாரபோகவென்றயான்
விண்ணுயர்ந்ததேரினேகிவேய்கொடுதுமேகமார்
வண்ணர்தம்மொடெய்தினான்மகிழ்ந்துவாழமதியிலேன்
பெண்ணினெண்ணமேபிழைபிறந்ததென்றுபேசுமால். 70

வேறு.

அயரும்வீழுமெழுமயலாரெனும்
வெயர்வுசேர்வுறவேகைவிதிர்க்குமா
லுயருமாமதிவெய்யதென்றேதிங்
துயரவாரியின்மூழ்கியதோகையே. 71

திக்குறக்கண்டிடுக்கெனுந்தன்னிரு
பக்கமுற்றனன்பாரளந்தானெனுஞ்
சக்கரக்கரன்றனணைத்தானெனு
மக்கணம்மகன்றனெனுமன்னமே. 72

எல்கிளர்ந்தவெழிற்றிருமாலெனைப்
புல்கவல்லையிற்போதுவனோவென
மல்கிம்புனற்கண்ணினள்மாலினு
லொல்கியொல்கித்தெருமாலுற்றனள். 73

மின்னனுநன் முகில்மேனியன் மால்மனம்
தன்னவிண்மதியுஞ்சுகியாகவே
யின்னதென்றறியாதயர்வாளெழுந்
தன்னமும்பலபன்னியறைகுவாள். 74

ஏகுமாமறையோனிரதத்தினிற்
போகுவான்றுவராபதிபுக்கபின்
நாகமேனடித்தாற்குநலனுரை
யாகயான்படுங்காதலறைவனோ. 75

காதல்கேட்டடென்கருத்துமுணர்ந்தரு
—ளாதியோன்றயையெண்ணிலனுமெனுந்
தூதுபோகியதூய்மறையோன்வரும்
போதுமாயினதென்றுபுலம்புவாள். 76

அந்தணாளன்விழைவுறமாரணக்
சந்தையோதிடத்தாழ்த்தனனோவுயர்
விந்தனோடுவெருவினனோவென
நொந்தமாமயில்பின்னுநுவலுவாள். 77

சிலைகொள்மாயன்றிருநகர்சேர்வுற
மலைகொளாழிகண்டஞ்சினனோவெனு
முலைகொள்பாலுயிர்தானொருமூச்சினு
லலகைவீழவருந்தினன்றேவியே. 78

தூயதேவர்கடும்புருநாரத
ராயுநான்மறைமாதவரந்தணர்
நேயமானநிருபர்கடுன்னிய
வாயில்காணமயங்கினனோவெனும். 79

நிறையுந்தேவர்கள்வந்துநெருக்கலா
லிறைவன்மாதுவராபதியேந்தலுக்
கறைகுவாரிலரோவறிவானுயர்
மறையினனிவண்வந்திலனென்னுமால். 80

முதிருநூலறிவோன்மொழிகேட்டவச்
சதுரன்றுமரைக்கண்ணினன்றூழ்விலா
மதனனுனும்வடிவுகொண்டான்றனக்
கெதிரிலானெனன்றியம்பினனோவெனும். 81

விரியுநான்மறைவேதியன்சொல்லினுற்
கரியமாயனென்கண்ணிணைகாணவே
வருவனோவெனக்கூடல்வளைக்குங்கண்
ணருவியாலதழிந்திடமாழ்குமால். 82

சுழிக்குங்கூடறனியுறக்கண்ணினீ
ரழிக்குமூர்ச்சிக்குமேங்குமரற்றுமா
லுழைக்குமாயவவந்துதவாயென
வழைக்குமேற்றிசைபார்த்தயரன்னமே. 83

கொடியவஞ்சகமுன்னவன் கூறிய
விடமெனும்முரையுள்ளுவள்மெய்யெலா
நடுநடுங்கியநன்னுதல்கண்ணினாற்
படியினின்குடக்கின்றிசைபார்க்குமால். 84

காதலோகொடிதென்றுமக்கண்ணன்பாற்
றூதுபோனவன்வந்திலன்றன்மதித்
தீதணுகியசேதிபனெய்துமுன்
சாதலேநலனென்றுரைசாற்றுமால். 85

எங்குமோயுமிருக்குமெழுமனை
நீங்கிமேற்றிசைபார்த்தொல்கிநிற்குமால்
பாங்கிமாரிருபக்கமுஞ்சூழ்வுற
வீங்குமாதுவருந்திவிளம்புவாள். 86

வேறு.

அரிகரியமேனியன்முகுந்தனருளாளன்
வரவிலையெனப்பருவரற்கடலின்மாழ்குந்
தெரிவையுடல்கொண்டெழல்கிலேன்மயர்வுதீர
வெரியினினிறந்திடுவனென்றுரைசெய்வேலை. 87

உம்பர்கள்விரும்புதுவரைப்பதியையுற்றே
யெம்பரமனச்சுதனிதத்துடனளித்த
வம்பவிழுமாலைகொடுவேதியனும்வானின்
வெம்பரிகள்பூணிரதமேல்விரைவின்வந்தான். 88

கரிந்தெழுமனத்தினனிராவணிகனன்றே
சொரிந்தபிரமன்படைதுளக்கவயர்வெய்தும்
பொருந்தகைவிராமனிளையோனிடர்கள்போக
மருந்துகொடுவந்துதவுமாருதியையொத்தான். 89

மின்னுமணிசேரிரதமீதுவருநூலோன்
முன்னின்வருமுன்னர்முகில்மேனியரிமுந்தி
யென்னைமணமேவவருமோவலனெனாமுன்
உன்னுமுனமின்னினருகெய்தினனுவந்தே. 90

மாதுமுனர்வந்துமலர்தூவிமறையாலே
யோதுமுயராசிகளுரைத்தனனுவந்தே
யாதரவினொடியெழுமந்தணனையன்ன
சீதரன்வருஞ்செயல்கள்செப்பெனவுரைப்பாள். 91

வந்தன னருட்கடல்முராரியரிமாயோன்
வந்தன னுனக்குநலனீயுமணவாளன்
வந்தன னரன்கைவரிவில்லிறவளைத்தோன்
வந்தனன்மலர்த்திருமனத்திடைவருந்தல். 92

நீயெனவிடுப்பநெறியேகிநெறிசூழுந்
தூயதுவராபதிதுலங்கநெடுவானிற்
போயவிர்கொள்கோபுரமிலங்குமெயில்பொன்னால்
மேயுமணிமாடமொளிர்வீதிதனில்மேவி. 93

அண்டர்முனிவோரரசரந்தணர்நடந்தே
மிண்டியுறும்வாயிறனைமேவிமணிமின்னும்
மண்டபமதிற்கரியமேனியனைமாலைக்
கண்டனன்மகிழ்ந்தெனதுகண்ணிணைகளிப்ப. 94

வின்மருவுகையனெழில்வேய்மருவுவாயன்
நன்மையுறுசொல்லன்மறைநாலுமுணர்சோதி
மின்முகிலுநீலமவிர்வெற்புநவையில்லா
வன்மதனுநாணுமவனுண்வடிவில்மானே. 95

தூயதுவராபதியடைந்தொளிகொள்சோதி
தீயகிருதாதிபரைவென்றுதிறல்மிக்க
மாயன்வடிவின்னலமகிழ்ந்தினிதுநோக்க
வாயிஸ்ழயுனக்குவிழியாயிரமும்வேண்டும். 96

அன்னவனைநின்னுளமமர்ந்தவனையாழி
தன்னுளமர்பொற்புடையநற்றுவரைசாரு
மன்னவனைமாதவனைமாயவனைவானோர்க்
கின்னமிழ்தமானவனையெங்ஙனமுரைக்கேன். 97

மாதவன்முராரியரிமாமுகில்வணற்குன்
காதலளவில்லதுணையுங்கழறியப்பாற்
றீதுமுயல்வோர்கள்செயலுந்தெரியவோநா
னோதினனதன்றியுமுனோலையுமளித்தேன். 98

ஓதலுருவாசகமுவந்தருளியுன்பா
லாதரவினலலைகொளாழியமரையன்
மாதினைமணம்புணரவேமகிழ்வினோடும்
போதுவன்விதர்ப்பநகரென்றிவைபுகன்றான். 99

மன்னவர்கடேவர்திரள்மாதிரமடைந்தோர்
தன்னியமர்செய்விலுமுடித்தலைதுணித்தே
யொன்னலர்களோடவொரிமைப்பின்முனமுற்று
மின்னினைமணம்புணர்வனென்றுரைவிரித்தான். 100

வேலையினினீளரவமெல்லணையமர்ந்தோன்
சூலிகையுறுங்கடிகைநூறியருடேயோ
நீலமுகில்மேனியனணிந்தலர்நிறைந்த
மாலையிதுகொள்கெனவளித்தனன்மகிழ்ந்தே. 101

அந்தணனுரைக்குமமிழ்தஞ்செவியினூரச்
சிந்தைமகிழ்வெய்தியவுருக்குமணிதேனூர்
கந்தமலர்மாலைகையின்வாங்கினள்களித்தாள்
வெந்தவுடல்வந்துயிரைமேவினர்கள்போல. 102

கரத்தினமர்மாலையிருகண்களினுமொற்றிச்
சிரத்தின்மிசைசூடமெய்சிறந்தகரிதன்னை
யுரித்தவனைவிட்டவுணர்மாளவுயர்மாயோ
னரித்தருளஞாலமனரன்றெழுவபோல. 103

தேறினள்முனீள்பருவரற்பரவைதீர
வாறினள்முராரியெனைவந்தணையுமென்றே
யூறினள்மகிழ்ச்சியுயர்வேதியனுவப்பக்
கூறினள்விதர்ப்பனருள்கோகனகமாதே. 104

வீரியமுராரிதிருமார்புறவிளங்கும்
வேரியுறுமாலைகொடுநீவிரைவின்வந்தென்
னாருயிர்கொடுத்தெனதுகற்புமகலாத
சீரினையளித்தனைசிறக்குமறையோனே. 105

கங்குலிலிலங்கைநகர்சென்றுகடிகாவிற்
றங்கியுயர்சானகியுயத்தயரதன்சே
யங்குலினாழியருளையனெனநீநான்
மங்குவதன்முன்றளவமாலைகொடுவந்தாய். 106

ஆயனருணற்றளவமாலைகொடெனாவி
யோயுமுனம்வந்துதவுநன்றியையுரைக்கிற்
போயுயருமண்டமுதலீயிலதுபோதா
தூயமறையோயெனவுரைத்தருள்சுரந்தே. 107

ஆய்ந்துநலனாகமணியாரமுடனம்பொன்
வாய்ந்தகவினாபரணமானவகையெல்லா
மீய்ந்தருளவந்தணனுமாசிகளியம்பிப்
போந்தனனிலங்கியதன்மாளிகைபொலிந்தே. 108

அந்தணனையேகவிடைநல்கியருளாலே
சிந்தைமகிழ்வெய்திநிறைசேடியர்கள்சூழ
வெந்துயர்கள்வீழவிழைபின்பமெழமேவி
நந்தன்மகன்வந்தணைவனென்றுநலமுற்றாள். 109

கொங்கையிணைவிம்மியெழவுண்மகிழ்வுகூறத்
திங்களையடர்த்தவதனத்தெழில்சிறப்பச்
சங்குதருவெண்டரளவெண்ணகைதழைப்பப்
பங்கயமலர்க்குள்வருபாவைமகிழ்வுற்றாள். 110

சந்துபனிநீர்புழுகுநானமலர்சாதி
சிந்தினர்கள்மெல்லணையின்மீதெழில்சிறப்ப
நந்தணிகரத்தினர்கணற்கவரிவீசிச்
சுந்தரிமகிழ்ச்சியுறவேதுதிகள்செய்தார். 111

தோழியர்கள்சேடியர்கள்சூழ்ந்தனர்களிப்பா
லூழிமுதலாயுரகமெல்லணையிலுற்றே
யாழியிலிலங்குமருளாளன்மகிழ்தேவி
வாழியெனநன்மலர்கடூவினர்வணங்கி. 112

ஆதியையசஞ்சலனையச்சுதனையாழி
மீதரவின்மேவியருள்வித்தகனைவிண்ணோர்
நாதனைமனத்தினினினைத்துநளினத்தின்
மாதமிழ்தருந்துவதுபோலமகிழ்வுற்றார். 113

ஆதிதருமாலிகைகொடந்தணன்வரச்சீர்
மாதினிதிருந்தருளுநன்மொழிவகுத்தாம்
நீதியிலுருக்குமன்விடுப்பநெறிசெல்லுந்
தூதர்சிசுபாலனுடனோதியதுசொல்வாம். 114

அலங்கற்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-4015.

---

## 69-வது, சேதிபராசப் படலம்.

அருளாளன்முகுந்தனசஞ்சலனுங்
கருமாமுகிலாகியகண்ணபிரா
னொருமாமுதலுத்தமனூழியுளான்
றிருமாவிருசேவடியேதொழுவாம். 1

உருமேறெனநின்றவுருக்குமனச்
சுருளோலைகொடெய்தியதூதுவரும்
மருளோவெருஞ்சிசுபாலன்மகிழ்
திருநாகெள்சூழ்நகர்சென்றவர்தாம். 2

விரிமாமணிமண்டபமீதிலகு
மரியாசனமேறியவண்டர்பிரான்
சரியாயமர்சேதிபனைத்தரையிற்
பரிவோடுவணங்கியிடப்பகர்வான். 3

யாரேவிடவெய்தியதும்மரசன்
பேரேதுபெருந்தகைவைகியுறு
மூரேதுரைமின்னெனவோதினனற்
சிரேதுமிலாச்சிசுபாலனரோ. 4

கொடிவானுறுகுண்டினமாநகரான்
விடையோனெனமாதிரம்வீசியெழு
முடைவாளனருக்குமனேவிடவுன்
னிடமேவினமோலையிதென்றனரால். 5

தருமோலைமகிழ்ந்துதராபதியு
மருளாலிதுவோதுமினென்றறையப்
பொருளார்வுறவேயுயர்புந்தியினர்
மருளாதுமொழிந்தனர்வாசகமே. 6

உயர்வீரனருக்குமனோலையினை
யயிலோர்சிசுபாலனறிந்தருள்க
மயிலேநிகரெங்கையைநீமகிழ
வியல்பாகவழங்குவன்யானெனவும். 7

இருளார்செய்யினக்கரியெங்குமெழப்
பொருவீரர்கள்மாவணிபோதரவே
யுருடேர்மிசைநீயுதயத்துமுனர்
வருவாயெனவாசகமோதினரால். 8

உரைசெய்திடலும்மகிழ்வோடுயர்ந்
தரைசெய்தியசேதிபனானைகொடேர்
திரள்வெம்பரிவீரர்கள்சென்றிடவே
முரசம்மறைகென்றுமொழிந்தனனால். 9

அரிநேர்சிசுபாலனறைந்திடவே
புரிவாரயொலிமாமுரசம்பொலியக்
கரிதேர்பரிவீரர்கலந்தனரால்
விரிவாகியெழுந்தடர்வேலையென. 10

சராசந்தன்வருதினிதாரணியில்
விராய்வந்திடவீறிரதம்மிசைய
மரேசன்னெனவந்ததுகண்டனனற்
றராசன்செயிர்துன்னியசேதிபதி. 11

மருளார்தசனம்முறுவக்கிரனுந்
திரள்மாகரிதேர்நிரைவீரருடன்
வருமாரதுகண்மெகிழ்ந்தனனால்
அருணீதியிலாச்சிசுபாலனரோ. 12

திசைபார்கிறைமாகரிதேர்களெழக்
கசைகோல்கொடசோரதியேகடவ
விசையோடுறுதேரினன்மேவினனற்
சிசுபாலனெனத்தகுசேதிபதி. 13

காளங்கள்வலம்புரிகண்டையுடன்
ருவங்கடழங்கியமாமுரசும்
நீளுங்கடலோசைநிகர்த்தனவா
மூளுங்கனபேரிமுழங்கியதால். 14

கரிசென்றனகாரினமொத்திரதத்
திரள்சென்றனசேணின்விமானமெனப்
பரிசென்றனபாய்நதியாமெனவிற்
கரர்சென்றனர்சித்திரகாயமென. 15

மதியொன்றுமில்சேதிபன்வந்திடவா
னுதிரங்கள்சொரிந்தெனவேயுயரு
முதிர்வெங்கனலோடுமுன்வீழ்ந்தனனி
யதிர்கின்றனபாரரவம்புரள. 16

மேகங்களினீளிரதக்கொடிமேற்
காகங்கள்கலந்துமிடைந்தனவால்
வேகங்களொழிந்தனவிஞ்சுபரி
நாகங்கள்குறுக்குநடந்திடவே. 17

இவையாகியதுற்குறிதாமெழவே
யவையாவுமுணர்ந்திலனந்தமிலான்
புவிமேன்மலிபூகம்வளர்ந்துயர்நா
டவையாவுமகன்றினிதேகினனால். 18

மறைவிஞ்சியகுண்டினமானகரி
னுறைவன்கடிதென்றுயர்தேரின்மிசை
நிறையும்பரிவீரர்நெருங்கிடவே
மறமொன்றியசேதிபன்வந்தனனால். 19

வேறு.

தூதுவர்களோடியவைதன்னினர்கள்மன்னுஞ்
சேதிபதிவாசிகரிதேர்கள்வருசெய்கை
யோதுதலுநெஞ்சினிலுருக்குமனுவந்தே
யாதரவின்மாநகரலங்கரியுமென்றான். 20

ஓதுதலுமாமுரசறைந்தனருவந்தே
மாதர்திரடேர்நிரைகள்வாசிகரிமன்னர்
வீதிதொறுமேவினர்கள்மின்னுமணிதன்னிச்
சோதிபெழுமாளிகைகள்வீதிகலெங்க. 21

துன்னியவரம்பைகடலெங்கியுறுகன்னல்
மின்னுமணியாரமொடுவீதிகணிரைந்தே
பொன்னவிர்கொள்மாடநிவர்வேதிகைபொருந்தி
யுன்னவரிதாயவமராபதியையொத்த. 22

மாறிநிவர்பூகநிரைவீதிகளில்வைத்தார்
நாறுநனிகோதைகணலந்திகழுநானச்
சேறுசெய்தசந்துபனிநீரினொடுசேர
வாறெனவிறைத்தனர்களன்னநடைமின்னார். 23

கும்பமிசைபாலிகைகளிலங்கியனகோலச்
செம்பதுமமென்னவொளிர்தீபநிரைசேர
வும்பருலகாரவிலகுங்கொடியுலாவ
வம்பாவிதானம்விரான்றனவசைந்தே. 24

கோலமுறுமாளிகைகள்மீதுகொடிதுன்ன
ஞாலமிசைபூகநிரைநற்கதலிமான
வேலின்விழியார்களமுமூருவும்விளங்க
நீலமுகில்போற்குழனெருங்கிடமிடைந்தார். 25

துன்னியுறுயாணர்மணியெண்ணிலதுலங்கும்
பொன்னகருநாணியுறவேபொலிவுமன்னு
முன்னரியகுண்டினபுரத்தினொளிகாணு
மன்னவன்விதர்ப்பனருள்மைந்தன்மகிழ்வுற்றான். 26

உத்தியினைநேருமணிகத்தினுடனுற்றே
மதியில்சிசுபாலன்வரலும்மகிழ்வினோடு
மதிரதர்கள்சூழவணியாபரணமின்ன
வெதிர்கொளவெழுந்தனனுருக்குமனெனென்போன். 27

எழுந்திரதமேறியெதிர்செல்லுமவனின்பக்
கொழுந்தெழவுயர்ந்தசிசுபாலனொடுகூடி
யுழுந்துருளுமுன்னமவனைக்கடிதினுற்றே
யழுந்துறவணைக்கவவனும்முறவணைத்தான். 28

அணைத்தசிசுபாலனவனுக்கினியசொற்க
ளுணர்த்தினனுருக்குமனும்வந்தினியதேரிற்
பணைத்தமதமாநிரைகள்பாய்பரிகள்சூழக்
கணக்கில்வயமன்னர்கள்களிப்பவினிதேகி. 29

திண்டிறல்மிகுத்தசிசுபாலனொடுசேர
வெண்டிசைபரந்தெழுவரூதினியொடேகிக்
குண்டினபுரங்குறுகியேகொடிகள்மிக்க
மண்டபமடைந்தனர்மகிழ்ந்தினிதிருந்தார். 30

வே று.

தருக்குசிந்தையன் சராசந்தன் றந்தவக்கிரனு
மருக்கொளுந்தொடைச்சேதிபராசனுமகிழ்வோ
டிருக்குமிக்கவர்மண்டபமீதினிதிருந்தா
ருருக்குமன்னருக்கியங்களுமுதவிடவுவந்தே. 31

மற்றுமேபலவளாகத்துமன்னவர்பலருஞ்
சுற்றமோடெவந்தெய்தினர்சுடர்மணிதுலங்கக்
கொற்றமுற்றிசொலுவன்பவுண்டரக்கொடியோ
னெற்றுமாகயமிரதமாவுடனுமெய்தினரால். 32

அந்தணாளர்கடிரண்டெழுந்தாசிகள்கூறி
வந்துமாமணமின்றெனவுரைத்தனர்மகிழ்வாஞ்
சிந்தையாற்சிசுபாலனுஞ்சேதிபராசன்
முந்தியேகடிக்கொத்தனயாவையுமுடித்தான். 33

இணங்கியே துணங்கினையெறிந்தெழுந்துவேதாளக்
கணங்களாடவேதானுமோடிபெவன் கமலத்
தணங்கைமாதவன்றேவியென்றறிகிலனழிவான்
மணஞ்செய்கோலமேபுனைந்தனன் சேதிபமறவோன். 34

வே று.

வெண்டுகிலுடுத்தனன்விளங்குகித்தில
மண்டபமிரவிநேர்மனிகள்சேரிழை
மிண்டியமெய்யினன்கிரீடமேற்றிகழ்
கண்டனன்கொடியசேதிபவெங்கண்ணினான். 35

கண்ணுடெபுயமிடந்துடித்துக்காட்டவும்
விண்ணிடைக்குறைக்கொள்ளிபரந்துவீழவு
மெண்ணிலவுலகமீரேழுமீன்றிடும்
பெண்ணினைவிழைவுறம்பேயினனரோ. 36

இவ்வழியுறுமணக்கோலமெய்தினன்
வெவ்வுரைமலிசிசுபாலன்விஞ்சிய
வவ்வெழில்கண்டவனுருக்குமன்றன
செவ்வழியொருவுமவ்வியங்கொள்சிந்தையான். 37

வந்தபேருவகையானுருக்குமன்மருட்
சிந்தையானெழுந்துதாய்க்கினையசெப்புவான்
சுந்தரமாகியவதுவைதூய்தா
மிந்துநேர்முகத்தியையழையுமென்னவே. 38

புதல்வனுண்டுரைத்திடும்புன்மையானசொல்
விதமறவன்னைதானீன்றமின்னுறை
மதுகரந்துதையுமாமலர்கொள்சோலைவாய்க்
கதுமெனவெழுந்துபோயணுகுங்காலையில். 39

மாதுநற் றவரைவாழ்மன்னன்வந்துறுக்
காதலினுருகுவான்கடியனாகிய
சேதிபன்வந்தனனென்றதீச்சொலால்
வேதனைமிகுத்ததுவிடமுண்டாலென. 40

எரியுருமுடலெலாமிருகணீர்விழ
வெருவிமெல்லணையின்மேல்வீழுமேற்றிசை
வரவுளவோமதிட்வெரைமாகக
ரரியெனவெழுந்துபார்த்தரந்தையாகுவாள். 41

துஞ்சினனெனமனந்துளங்குஞ்சேதிப
வஞ்சகனடைந்தனன் றவரைமன்னவா
கஞ்சனைக்களையுநீகளைகணாகவந்
தஞ்சலென்றணைகுவாயென்னுமன்னனே. 42

சேதிபனடைந்தனன்செருக்கினாலெனை
யீதலும்விரும்பினனெனக்குமுன்னவ
னாதலினிலைசெயலனவில்வீழ்ந்தியான்
சாதனன்றெனுமொழியுரைக்குந்தையலே. 43

மறந்தருசேதிபன்வரவினால்மன
முறந்துனிதனிலெரியுற்றுமாண்டபி
னறந்தவிராதமாலிவனடைந்தபோ
திறந்தனையோவெனவிகழுமோவெனும். 44

மருவுமென்னுயிர்விடாதிருக்கில்வந்துறுந்
திருவிலிசேதிபன்றீயிலாழ்வனே
லருளரிமுனியுமென்றஞ்சுமென்னுள
மிருதலைக்கொள்ளியினெறும்பைபோலவே. 45

என்றுமெய்யுருகும்வீழ்ந்தெழுமியாதவர்
மன்னவமுகுந்தநீவருவையின்றெனச்
சொன்னசொலென்னதாந்தோன்றுவாயென
வன்னமுள்வெதும்பிடவெய்தினாளனே. 46

எய்தினள்மண்டபத்திருந்தமாமயில்
உய்திறமிலையெனவுடலுமோய்குவாள்
கைதனின்மகடனையணைத்துக்கண்ணினீர்
பெய்திடவைதனள்சுதனைப்பிழையால். 47

மோந்தனள்முகத்தினைமுளரிக்கையினாற்
சாந்தொடேந்தண்பனிநீருந்தையல்மெய்
தோய்ந்துறவிடுத்தனடோமுற்றேயுயிர்
மாய்ந்தெனவரந்தையால்வாமென்னமே. 48

அன்னையுமிருகணீரா றபோலெழ
மின்னிீனயனைத்தனள்விளம்புவாளுயர்
மன்னவன் றவரைவாழ்மாயனெய்தியே
யுன்னையின் றனைகுவனெற்கந்தீர்தியால். 49

கனவுகள்கண்டநற்குறிகள்காட்டியே
சொனநலப்பல்லியந்துயதாதலி
னூனவசுதேவன்றன்செம்மல்வந்துறம்
துனியொருவன்னமேயென் றசொல்லுவாள். 50

அந்தரியம்பிகைதுர்க்கையாமிவ
ளிந்தமாநகர்தனில்வரங்கள்யாவையுஞ்
சிந்தையினினைக்குமுன்னளிப்பள்சிரு று
மிந்திரைதத்துறலொழிதியென்றனள். 51

துன்பமீண்டொருவிடத்துற்கையாமிவட்
கின்பமாவதுவரவியற்றிவேண்டவுன்
னன்பனுயோதனத்துழவரஞ்சிடத்
தன்பெருந்தேரின்மெல்வருவன்றையலே. 52

அஞ்சனீயன்னமேகராவினலலை
குஞ்சரங்காத்தருள்குழகனெய்திநீ
விஞ்சிடவணைகுவன்விதியினுமெனச்
செஞ்சொலலவளுந்தான்றேற்றினளரோ. 53

தேற்றினுடிருமகள்சிந்தைவெந்துயர்
மாற்றினளினையசொல்வழங்கியீன்றவ
ளூற்றநீரெனவிரைகண்ணினிரொல்கிச்
சாற்றினுடனைத்தருமன்னை தன்னுடன். 54

திருக்கறப்பகவதிதனக்குச்சீர்மையா
லருக்கியமுதலியவளித்துப்பாலன
வருக்கமுமளித்தியாம்வரமும்வேண்டுவம்
பொருக்கெனச்சேறுமின்றெனப்புகன்றனள். 55

மின்னனளிவ்வுரைவிளம்பக்கேட்டெழுக்
தன்னைமாபகவதியமருங்கோயிலின்
மன்னிநாம்வேண்டுவம்வரமென்றேமக
டன்னைநீராடெனச்சாற்றினளரோ. 56

தளித்தெழுமமழையினைத்துயகண்களா
ளளித்தனளனவழுமடந்தையாரழல்
கொளுத்தியவயமயக்கூடித்தேர்ந்தபோற்
குளித்தனடன்பனிநீர்கொடுத்ததே. 57

புனைந்தனளவிருறம்பொன்னின்சம்பட
மனந்தனில்மாதவன்வருமென்றன்குவான்
றனந்தனிலணிந்தநற்றரளமாமணி
யினந்தழலெழத்தொடையெரிந்ததெங்குமே. 58

மதம்பொழிகரிமருப்புதவுமாமணி
விதம்பெறுமூடர்யாகவில்லுறஞ்
சதங்கைகடிகழ்வுறச்சரோருகங்களாம்
பதந்தனிற்பரிபுரம்பண்மிழற்றவே. 59

தோள்வளையெல்லிடத்தோமெவில்லிட
வேள்சிலையிரண்டெனநுதல்விளங்கிட
நாளலர்க்கமலமானனத்தைநாணிட
வாளினைப்பழித்தமான்விழிவயங்கவே. 60

செயிறறச்சூடுறுஞ்செம்பொன்னுலிழை
வயிரவான்கடகமார்மலர்க்கைகாந்தள்போ
லியல்புறக்கலாபமேல்மின்னுமிட்டிடை
துயல்வருங்கலிங்கநன்மணிதுலங்கவே. 61

மின்னெனத்திருவெனவிளங்கத்தோன்றிய
கன்னியைக்கண்களிற்களித்துநோக்கிய
வன்னையும்பகவதிதற்கையாமவள்
மன்னியகோயிலிற்போதுவம்மென. 62

இருந்தவளெழுந்தனளெழில்கொள்மாமணி
பொருந்தியசிவிகையிற்பொலியத்தோன்றினள்
வரும்பருவரல்கெடவரத்தைநச்சினு
ளருந்ததியனையதன்னன்னையோடுமே. 63

ஐயன்வண்டுவரைவாழம்லனச்சுதன்
துய்யவன்வருகிலனென்றுசோர்வுறுஞ்
செய்யவடமனியச்சிவிகைமீதினிற்
பொய்யுயிர்க்குரம்பைகொண்டரிதிற்போயினள். 64

கவிகைகள்கவரிகள்கரத்தினேந்தியே
நவையகல்மணித்திரளணிந்தநங்கைமார்
தவர்களும்விழைவுறவிலங்கிச்சார்ந்தனர்
புவிமிசைவனிதையைப்போற்றிவாழ்த்தியே. 65

அனமெனமயிலெனவஞ்சுகங்கடம்
மினமெனக்குயிலெனவெழுந்தமாதரார்
தனமலைமிகரெனநுசுப்புந்தள்ளுற
மனமுறுகளிப்பொடுவேந்துசூழ்ந்தனர். 66

காந்தளின்செங்கையார்கயலொண்கண்ணினர்
சாந்தணிகிலினர்தாமவேதியார்
பாந்தளினல்குலார்பவளவாயினர்
மாந்தளிர்மேனியார்வந்துசூழ்ந்தனர். 67

கரிபரியிரதமுங்காளைவீரரும்
மரசருங்குமரருமந்தணாளரும்
விரிவுறுஞ்சலதிபோல்விளங்கிச்சூழ்ந்தனர்
திருமணிச்சிவிகையிற்சிறந்துதோன்றவே. 68

பம்பைகள்சர்ச்சரிமுழவம்பாண்டிலு
மம்புதியலையெனவுரையும்பேரியுந்
தும்பியவிடக்கைகடழங்கத்தூயதாஞ்
கொம்புகளுடன்சின்னங்குறித்துக்காட்டவே. 69

வீணையாழொலிகளும்விஞ்சக்கின்னரர்
நாணவேயிசைத்தனர்நலங்கொள்மன்மதன்
பாணமேயனையகண்ணினைகொள்பாவைமார்
சேணினாரம்பையரென்னச்சேர்த்தனர். 70

தோழியர்சிலதியர்தூயதாயரா
மேழையர்களிப்பொடுங்கடிதினெய்தினர்
வாழிநின்கருத்துறுங்கருமம்வாய்த்திட
வாழியிலமருவானனுகவென்றனர். 71

அந்தணருமறைமுனிவராதியா
வந்தருளருக்குமற்கிளையகோமகச்
சிந்தையினினைவுவந்துறகவென்றசீர்
முந்தியநலனுரைமொழிந்துவாழ்த்தினர். 72

இதரவன்றேவதைதுற்கையென்பவட்
குதவிம்வரன்முறைக்குரியயாவையு
மதுகரமலிமலர்த்திரள்கள்வாரியிற்
சுதைநிகர்கனிகளுஞ்சுமந்துசென்றனர். 73

கன்னலுங்கதலியின்கனியுங்காருறுஞ்
சென்னலிற்றண்டுலந்தெங்கின்காய்களுந்
துன்னுநற்றிகள்பாறுப்புமாகிய
வின்னனவெவைகளுநிரப்பியெய்தினர். 74

துந்துமியிரட்டிடச்சுரர்கள்வான்மிசை
சிந்தியமலர்க்களுந்திரண்போர்விழக்
கொந்தளகத்தினர்குழாங்கள்சூழ்ந்திடச்
சுந்தரிபணிகலன்றலங்கவேகினள். 75

கருமுகில்காண்கினுங்கண்ணனுமென
வருகுமேற்றிசையினையுற்றுநோக்கியே
வெருவுமாலெய்திடவெதும்பும்வெய்துறும்
திருவனுடமணியச்சிவிகைமேலரோ. 76

புரமதுகடந்தனர்புரிசைபிற்படச்
சுரர்கடம்முலகுறநிவந்துதோன்றிய
விரிவுறத்தியாவனம்விளங்குமால்வரை
யருகுறப்பெருகுநன்னதியடைந்தனர். 77

இருகரைபுரண்டலையெழுந்தளப்பிலாக்
குருமணிமருமலர்கொழித்துவீசியே
வருபுனற்பகிரதிமல்லலொத்தெனப்
பெருகியநதியினின்பெருமைகண்டனர். 78

நன்னதிக்கரைமருங்கிலங்கநந்துமி
ழின்னலினித்திலமணியினீட்டங்க
ளென்னுபொற்கோயிலிற்றுலங்குந்துற்கையை
யன்னைமின்னெம்பணிந்தமரும்வேலையில். 79

சேதிபன்வருஞ்செயல்செப்பிப்பங்கய
மாதுநன்னதிக்கரைவந்தவாறெலா
மோதினமுலகமேழுண்டவாயனும்
யாதவனடைகுவதியம்புவாமரோ. 80

சேதிபராசப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 4095.

## 70-வது, நாச்சியார் தேரேறு படலம்.

ஆயிரமருக்கருதயமாயினொத்தாயிரமுடிகளும்பிறழ
வாயிரம்புயங்கலெங்கிடவாழிசங்குவாள்கதைவில்லுமமர
வாயிரம்பணத்தினரவணைமிசையினலர்மகள்புவிமகளனுக
வாயிரம்பெயராய்நிறைந்தருள்சோதியச்சுதனடியிணைதொழுவாம். 1

அருவமாயுருவாயாணுமாய்ப்பெண்ணொடலியுமாய்ப்புறமாகுங்
கருவுமாயதினீர்கால்கனல்வெளியாய்க்கதிருடுச்சசியதாய்க்கலந்தே
திருவுமார்புறையக்கவுத்துவமிலகத்திகிரியோடழகியசெங்கை
மருவநற்கமலன்பசுபதிவலாரிவிபுதருமாகியமாயோன். 2

புவிமகள்மகிழத்திருமகள்மருவப்புணரிமேற்றுயின்றருள்புனித
னவனியிலிழிந்தேயதுகுலத்தரசனறிவினுயர்வசுதேவன்
தவமுறுபலத்தாற்றேவகியருளுந்தனையனென்றெழுந்துதான்மேவித்
திவசமும்பொதுவர்நகர்தனிலசோதைசுதனெனவளர்ந்தருடிருமால். 3

செயிருறமலகையுயிரறமுலைப்பாலருந்தியேதனப்திசிறவ
ருபாருச்சுனமரம்பருவரலிருத்தவ்குரலினுப்புண்டுறிநிறையுந்
தயிரொடுநெய்பால்களவினிலருந்திப்பாறிடப்பிடித்திடுந்தாயார்
கயிறுகொண்டடிப்பக்கண்பிசைந்தழுவோன்கமலநன்னயகிகாந்தன். 4

கன்றினல்விளவைவெறிந்தருளில்லாக்காலியாசுரனையுங்கடிந்து [து
பொன்றவெஞ்சகடுமுதைத்தரவினின்மேனடித்துயர்புள்ளின்வாய்பிளந்
குன்றமோர்குடையாக்கவித்திடைமாதர் துகிலொடுங்குருந்தின்மேலே
யன்றுவேயூதியானிரைமேய்க்குமச்சுதானந்தகோவிந்தன். [றி

விஞ்சியவெயில்சூழ்மதுரையினுயர்ந்தவில்லினைமுறித்துமும்மதநீள்
குஞ்சரத்திலகக்குவலயாபீடம்படவதன்கோடுகொண்டறைந்தே
வஞ்சனைமல்லர்சிதைந்திடவதைத்துவலிமலிமாமனுய்சினக்குங்
கஞ்சனைக்களைந்துகடியனுங்காலயவன்படவுபாயமுங்கருதி. 6

வேதமும்விளங்கவியலுமார்கலிசூழ்துவரையிலிலங்குவித்தகனும்
மாதவன்முகுந்தன்வாமனன்முராரிமாயனுரணன்பரமேட்டி
சீதரன்புருடவுத்தமனனந்தன்றிருவினயகன்றிறனேமி
யாதவனிருடிகேசன்மால்வாசுதேவனுமெந்தையெம்பெருமான். 7

ஓவியமுயிர்பெற்றுயதோருருக்குமணியெனுமுத்தமமின்னு
ளாவியேயனையாள்விடுத்திடவந்தமறையறையந்தணன்மகிழக்
காவிநல்விழியாங்கமலநாயகிபாற்கடுகினுன்வருவனென்றவனை
யேவினபின்னரினிதிருந்துள்கும்யாதவர்குலத்துவாழீசன். 8

வாசமார்குழலாளவிர்தனிலிலங்குமலர்மகளாமெனமனத்தி
லாசைதான்மிகுந்துநாளையங்கடைந்தேயவளைநாமணைகுதுமென்னு
மீசனும்வாசுதேவனுரணன்மேலெழுமதிதென்றலுமெதிர்ந்து
வீசவேள்மலரின்கணைவிடவயர்ந்துதுயின்றனன்விபுதர்கள்பெருமான். 9

அயில்விழியுருக்குமணியயராமலின்றுபோயனுகுவாயெனவே
யியல்புடையலரியாயிரங்கரங்கொண்டெழுப்புவான்போற்கிரணத்தாற்
றுயில்கொளுமாதிவிழித்திடவிருண்டகங்குலைத்துறந்துதேரருணன்
கையினுறங்கோலிற்கடவியபரிகள்வயங்கிடக்கடலிடையெழுந்தான். 10

விண்ணவருவப்பவிருளெலாமொருவவேலைசூழெண்டிசைவிளங்க
மண்ணவர்துதிப்பமறைவலோர்குழுமிமகிழ்விளுலருக்கியம்வழங்க
நண்ணுறுசுரும்புகுடைந்திடவலர்ந்தநளினமாமலரொளிபரவ
வண்ணல்வண்டுவரையமலனுமனந்தநீர்ந்திடவாதவனுதித்தான். 11

செங்கதிரவன்றானுதித்திடக்காயாமலரெனத்திகழ்வடிவுடையோன்
சங்குசக்கரத்தோன்றுயிறரந்தருளிச்சந்தனமிறைந்ததண்பனிநீர்
குங்குமங்கலந்தமஞ்சனமாடியம்பொனின்கூறையுமணிந்தே
யங்கையின்புனல்கொண்டருக்கனுக்கன்பாலருக்கியமளித்தனனமலன்.

சிரியகமலத்திருப்பவன்முதலாமுனிவருந்தேவர்தம்மிறையு
மேரியல்பரமபதத்தினிலுறவேவிழைவுறுநாமத்தையியல்பா
லாரியன்கரியமுகிலினில்வயங்குமழகியபிறையெனவணிந்து
போரியற்கோலம்புனைந்தனனளினப்பூமகளுறைநகர்பொலிவான். 13

வேறு.

ஆவுடன்மருவியேயமுனையாற்றிரு
நாவுடைப்பஃறலைநவையினன்பொறி
வாவிடவரவின்மேனடித்தமாண்புறுஞ்
சேவடியணிமணிக்கழல்சிறக்கவே. 14

கரியவர்ன்முகிலிடைக்கலந்தசெக்கர்வான்
றெரிவபோற்கடிதடங்கச்சைசேரவே
யிருளெலாம்வெருவவானென்றின்றோற்றம்போ
லரியுலாவாடையுமமர்ந்துதோன்றின. 15

நன்மணிதுலங்கநாகீன்றவாரமுந்
துன்னிடநாணியல்மருங்கிற்றோன்றிய
பொன்வரைசூழ்ந்திடும்பதங்கன்போன்றெழில்
மின்னுடைவாளவிர்விளங்கிக்காட்டவே. 16

ஆரமாமணிவயிரங்கொளாடகஞ்
சேருமாபரணமுஞ்சிறந்துசிந்துவி
னீரெலாமிளவெயினிறைந்தமாட்சிபோ
லேருலாவியதிருமார்பிலங்கவே. 17

அந்தரமுறுகருமுகிலடைந்துய
ரிந்திரன்வில்லெனயாதவர்க்கிறை
மந்தரமெனவளர்குவவுத்தோளமர்
சுந்தரிகணவன்கைச்சார்ங்கந்தோன்றவே. 18

போதகம்புரண்டிடவதைத்துப்போர்புரி
சாதனைமல்லரைத்தடிந்துதன்னுடன்
காதியகஞ்சனைக்களைந்தகண்ணனுஞ்
சீதரன்கரங்களிற்கோதைசேரவே. 19

கலைகொடுகுருந்தின்மேலேறுங்கார்வணா
னலனுறப்புயலலர்நளினவாசப்பூ
மலர்தொறுமறுபதமமர்ந்தமாட்சிபோற்
சிலைகணைதொடுவிரற்புட்டில்சேர்த்தியே. 20

உம்பர்கள்வலாரியோடமரிலோடவே
பம்பியவவுணர்கள்படத்துறந்திடுந்
தும்பியமறையினின்சொல்லினுன்றெழு
மம்பறுவாவமும்வெரிநிலாரவே. 21

அலங்கல்சாலலங்கல்மார்பலைபவாடக
மிலங்கியகுண்டலங்காதிலெல்விடப்
பொலன்கொளும்பிறையெனப்பொலிந்தநெற்றியிற்
றலங்கியவீரப்பட்டிகையுந்தோன்றவே. 22

என்றவிர்நிகர்மணிவயிரம்வீறுற
வொன்றியதமனியமவுலியுற்றெழில்
மன்றலர்குஞ்சியில்வயங்கவேபுனை
வென்றியந்தும்பைமாமலர்விளங்கின. 23

ஆரியன்றவரைவாழமலனச்சுதன்
சீரியவிதர்ப்பர்கோனகரிற்சேர்வுறும்
பூரியர்வலிகெடப்பூசல்செய்யுமா
வீரியவுருக்கொடுவிளங்கிநிற்கவே. 24

அந்தரத்துயர்ந்தமாவிபுதராய்மலர்
சிந்தினர்தெரிவையர்தீபமேந்தியே
முந்தினர்மகிழ்ந்துசோபனமொழிந்தனர்
நந்தனந்தனனெனவயங்குநாதனை. 25

உம்பர்கள்வாசவனுமையினாயக
னம்புயமீதயனாதிகூறின
ரிம்பரின்மாதவனிலங்கித்தோன்றவே
தும்புருநாரதர்சுருதிபாடினார். 26

கண்ணன்மால்கருமுகில்கமலம்பூத்தெனும்
வண்ணன்மாதவன்மலர்மாதுநாயகன்
புண்ணியன்றலகேதனனைப்போற்றிசெய்
தண்ணலேகேளெனவருளினனரோ. 27

மன்னனும்விதர்ப்பர்கோன்மகள்வருந்துறு
முன்னம்யானெய்தியாகவத்தின்மூண்டெழு
மொன்னலர்யாவர்வந்துறினுமோடவே
சின்னபின்னங்களேசெய்வன்காண்டியால். 28

அராவிறப்புள்ளரசடர்த்தநீர்மைபோ
னராதிபர்மடிவுறநாகம்வாவுமாத்
தராதலத்துருளிரதங்கடார்மனர்
விராயவனெய்தின்வாவெனவிளம்பினான். 29

வேறு.

அந்தவேலையிற்சுரர்முனியனுகினனை
முந்தியேமணஞ்செய்குவான்சேதிபன்முனைந்தான்
கந்தமாமலர்த்திருவனாள்கடுந்துயரொருவ
வெந்தைநீசடிதேகெனவியம்பியேகினான். 30

வேறு.

நாரதனவ்வுரைநவின் றுசெல்வுழி
யாரியன் கமலமானிடாகற்றவா
னேர்மலியிரதனீகொணர்தியீண்டெனத்
தாருகன்றன்னொடுங்கடுகிச்சாற்றினன். 31

வினையுமுன்னெய்தவகிலத்தும்வானத்து
மனைவருமணுகினுமகன்றகாட்டவெ
புனைமணிதுலங்குவபுரவிபூண்குவ
கனைகடலொலியென முழங்கிக்காட்டவே. 32

வாயுவின்விசைகெடவானின்முந்துவ
வேயெனுமுன்னுலகேழுமெய்துவ
தூயநற்ககபதித்துவசந்தோன்றுவ
வாயபொன்னிரதம்வந்தணுகிநிற்கவே. 33

வீரியபேரிகைதழங்கவேதியர்
கூறினராசிகள்குழுமிக்கொற்றவ
ரூறியவார்வமோடுவந்துபோற்றவே
யேறினன்யாதவனிரதமீதரோ. 34

வாரிதியெழுங்கதிரவன்றன்மாமணித்
தேரெனவிலங்கியதிசைகள்யாவையு
மாரியன்வயங்கவேயமரரார்த்தெழத்
தாருகன்முடுகிநீடரையிலோட்டினன். 35

வேறு.

தடவரைபிதிர்படவுருளவெழுஞ்சடசடவெனுமொலிதகரவெழும்
வெடிபடவிடமுடையரவுலகம்வெளிபடலெனவிறுதியினுலகக்
கடலிடைநிறைபுனல்மொகுமொகெனக்கடவியபரிபதமிசையலைய
மிடலுறுகொடிககபதியொளிரவிரையொடுவெருவதுமிளிரிரதம். 36

மரமொடுநிலவரைபொடிபடவிண்மறைபடவெழுதுகள்மகரமுறும்
விரிவுறுகடறிடர்படவடையமிடலுறுகுரகதம்விசைகொளமுன்
னரவுமிழ்மணிதிகழ்தரளமுடனவிருமரகதவினமலைய
விரவியினொளியினுமிலகியுயரிமையவர்மகிழ்வுறவருமிரதம். 37

ஓடுநெல்லறிவிகள்பலநதிகளுவரியினலையெனவொலியுறவே
மாடுறுகதலிகள்வனகமுகுமாழைகடாழைகள்வகுளமுயர்
பாடலனனிகனிநிறைபனசம்பழனமொடொளிர்செந்நெல்பயிர்வளமா
நாடுகள்பலபல்பிறகிடமாநடைகொடுமுடுகினநலவிரதம். 38

தடவரைமிசையுறுபுனலருவிசலசலவெனுமொலிதரவிழவே
மிடலுறுமரிபுலிமயிடமொடுவிடைகரிகரடிகள்விரவியெழப்
படமுடைவிடவரவுமிழ்மணிகள்படிமிசைபரிதியினவிர்களுற
விடமுறுகடறுகள்பலசழியவிடிாளும்வெருவுறவருமிரதம். 39

61

விடமுடையரவுடல்சிதறவெழும்விரிவுகொள்சிறகறைககபதிநீள்
கொடியுடுவினமொடுமிடையமுகிற்குலகிரிதனிலிவர்குரகதமுங்
கடலிடைபிறழ்கதிரிரதம்வருங்கதியினுமுடுகியகடுவிசையாற்
படிமிசையுருள்வதுதுகடரவேபரமர்தம்மிருகழல்படியிரதம். 40

நீலமோடவிர்மணிநலவயிரம்நிலவினுமொளியுறுநிரைதரளங்
கோலியவெழிலுறுகனகநெடுங்குடையொடுகவரிகளிடைமிடைய
வாலிடையமர்பவனவனிலகவலவனுமுடுகிடவடலயமான்
மேலழவமரர்கள்பதியெனவேவிரைவொடுவருவதுமிளிரிரதம். 41

கொடியெனுமிடையினள்வடவரையின் குவடெனுமுலையினள்குயி
ல்மொழியின், வடவிலையகடெனவுயர்கமலமலர்மிசைவருமவள்வடிவுடை
யா, ளிடரறவுடையலரிடையவவளெழின்மணமடைகுவமெனநினையு, மு
டலிடையுயிர்தொறுமுறையொருவன் மனமுனமுடுகுவதருளிரதம். 42

சுதையெனுமொழியினடரளநகைத்துடியிடைமனதுறுதுனிபகல
வெதிர்பொருமரசர்கள்முரணழியவெதுகுலம்வருமிறையுடனெழுமா
லுததிகள்கிழிபடவரைகளுடனுறுமரமடிபடவுயர்திசையின்
மதமுறுகரியினமறுகிடவான்மழைமுகிவிரிதரவருமிரதம். 43

அண்டர்கடருவமர்மலர்சொரியவமரர்களிறைவனுமகமகிழ
முண்டகமலருறைமுதல்வனொடுமுனிவர்கள்சதுமறையொலிபொலியக்
கண்டகர்மடிவுறமுனியுமிறைகனைகடல்மலைகொடுகடைநெடுமால்
கொண்டலினுலவியகொடிமிடையுங்குண்டினபுரமதுகுருகினனால். 44

அதிர்வுறவகிலமொடுறுகடலுமலையுறவடதிசையமர்வரையும்
பிதிர்வுறவிறுதியினறைவளியின்பெருமையின்முடுகிடவுடுவினமு
முதிர்வுறவிபுதர்கண்மகிழ்வுறவேயொருநொடியிடுமுனமுருடருதே
ரெதிருறுமதிதவழெழில்வளைகுண்டினபுரமணுகியதெழில்பெறவே. 45

வேறு.

அண்டர்மூதுணர்வாளராமருந்தவரார்ப்ப
வெண்டிசாமுகத்தமர்ந்தவரினிதுவந்தேத்தப்
புண்டரீகனுந்துதித்திடத்துவரைவாழ்புனிதன்
குண்டினபுரமணித்தெனத்தேரினிற்குறுகி. 46

இந்நன்னகரிருந்தனள்கமலமானிறைவ
வந்தமின்றுயரகல்வாவெனவழைத்தசலை
முந்துகைகளாநீட்டியமுறைமைபோன்முகிலை
யுந்துவெண்கொடியும்பரினுலாவுதல்கண்டான். 47

மின்னுமாமணியவிருறமேருவைப்பொருவும்
பொன்னினுனிவர்கோபுரம்புதுமணிமாட
மின்னும்வீதிகளெயில்களும்விளங்குவகண்டா
னன்னமாயயற்கருமறையுதவியவமலன். 48

மகரதோரணம்விளங்கிடவாயில்கடோறு
நிகரிலாமணிக்கும்பமுந்தீபமுநிறையச்
சிகரமால்வரையெனத்திகழ்மண்டபஞ்சிறப்ப
வகிருமாவடுவனையகண்ணியர்வரக்கண்டான். 49

சந்தனங்களுஞ்சுண்ணமுந்தண்பனிநீரு
முந்துநன்மணவசந்தமுமுகந்துபாரிறைத்தே
வந்தமங்கையர்பிறங்குகொந்தளமலரலையக்
கந்துகங்கள்கொண்டறைந்தெழுங்கவினையுங்கண்டான். 50

வாசமாமலரலைந்திடமதிமுகம்வெயர்ப்பத்
தூசுமாடநற்சுரும்புகளூறங்குழறொடரக்
காசுலாவியமுலையுநற்கலவையுங்கமழ
ஊசலாடியவரிவையர்பொலிவுகண்டுவந்தான். 51

கீதவீணையாழ்கின்னரர்மயங்கிடக்கிளிபோ
லோதுமாதர்கண்டுவந்திடவுருப்பசியெனவே
வீதிதுன்னியவரங்கினில்விளங்கிடநடஞ்செய்
காதுசேர்விழிப்பாவையர்களிப்பினைக்கண்டான். 51

தந்தவக்கிரன்பவுண்டரன்மகதன்சாலுவனும்
வந்துமண்டபந்திகழ்வுறச்சேதிபமறவோன்
சிந்தையுக்களியெழமணக்கோலமுஞ்சிறப்பக்
கந்தநற்றொடையணிந்துறுங்கவினையுங்கண்டான். 53

தும்பிசூழ்ந்திடத்துரங்கமெண்ணிலாதனதுலங்க
விம்பரோங்கியவிரதமெண்டிசையினுமலங்க
வெம்புவாட்கரருலப்பிலாவிறலினர்விளங்க
வும்பர்வாழ்பதியெனவுறுமோளிகண்டுவந்தான். 54

கண்டயாதவரிறைகருணாகரன்கழறு
மண்டர்வாழமராபதியளகைநன்றெனவே
யெண்டபோதனரியம்புவதிம்பரிலெழில்சேர்
குண்டினாபுரங்கண்டிலார்கண்டபின்கூறார். 55

எனமொழிந்துளமகிழ்ந்தருள்யாதவர்க்கிறைவ
னனமயூரங்கோகிலங்கிளியடைந்தடர்பூக்கா-
வனமுமைவரையிழிபுனலாடியமாதர்
புனையுமம்பரமருங்கினிற்பொலிவவுங்கண்டான். 56

மின்னுநுண்ணிடைக்கோகிலமெழின்மிகுநளினத்
தன்னமம்பிகைகோயிலினணுகினளெனவே
பொன்னினன்மணிப்பரிபுரம்புலம்பிடப்பொலிந்து
துன்னிமங்கையர்வருஞ்செயல்சுந்தரன்கண்டான். 57

நாறுநன்மலர்பாளிதமான்மதநான
மாறிலம்பிகைபூசனைக்குதவிடவருந்திப்
பாறுமங்கையர்கொந்தளச்சும்மையைப்பரிக்கு
மாறிலார்கரந்தாங்கியேவருமெழில்கண்டான். 58

துற்கையம்பிகைகோயிலிற்சுடர்தருமணியின்
வற்கமோடணிகவினுறவிதர்ப்பர்கோன்மகடான்
அற்கியங்களையுவகையோடளித்திமெழுகைக்
கற்கியென்னவும்வருமவன்கண்டனன்களித்தே. 59

ஓவியம்முயிர்பெற்றதாமுருவுடையவளாந்
தேவியைக்கமலத்தினில்வயங்குசெந்திருவை
யாவிகண்டெனக்களித்தவளொருநொடியதனின்
மேவுவேனெனமுடுகினனிரதமேல்விளங்கி. 60

இன்னவாறரிகேசவனெய்திடும்வேலைச்
சொன்னகாலையும்வழுவிடச்சுந்தரன்வாரான்
என்னகாரணமோவெனவிடரினில்மயங்கு
மன்னமன்னவளம்பிகைக்கர்ச்சனையளிப்பாள். 61

துலங்குநீவிதன்மேனிமேற்றூயநீர்சொரிந்தே
கலன்களெல்லிடக்கலவைநானங்கடிமலர்கள்
புலன்களாலுறநிறைத்தனள்பூசனைக்குரித்தா
யிலங்குதூபதீபங்களுமளித்தனளியல்பால். 62

ஆனெய்பாலனந்ததியறுசுவையுடனடிசி
லீனமில்லமாழையைநிகர்பனசமீன்கனிக
டேனளாவிடக்கதலிசூதப்பலந்திகழ
மானினீள்விழிவனிதையர்வரையெனக்குவித்தார். 63

இன்னதாகியசுவைநிகர்யாவையுமீந்த
பின்னர்வாலடைக்காயமிர்தளித்தனள்பெரிய
கன்னியாயவம்பிகையினைப்பணிந்தனள்கமல
மின்னனாளொடுமென்னையானவள்வரம்வேண்டி. 64

குயிலைநல்லனமாகியகோமளக்கொழுந்தை
மயிலையொள்ளியவீழியின்கனியின்வாயமிழ்தை
யயிலெனும்விழியணங்கையீனன்னையுமனைத்துத்
துயரொழிந்திடுந்துற்கையைப்பணியெனச்சொல்வாள். 65

பின்னிறேவெந்தம்பிகையடியினில்வீழ்ந்தங்
கன்னையானவளரந்தையோடறைகுவாளெனது
பொன்னையேதுவராபதிமன்னவன்பொருந்து
மின்னதாகியநல்வரமருளெனவிசைத்தாள். 66

தாயுநல்வரம்விழைவுறத்தரைகணீர்நிறையத்
தீயின்மேலுறமெழுகெனவுருகிடுஞ்சிந்தை
யாயவாரிமின்னம்பிகையடியினிற்பணிந்தாண்
டோயவேயுடலுயிர்தமொறிடவுரைப்பாள். 67

தீயனாகியசேதிபன்மணிமுடிசிதையப்
பேயனாகியவென்முனோனினைவுறப்பிறிய
வோயுநானுயிர்விடுமுனமுலகளந்தருளு
மாயனாரெனைமணம்புணர்வரமருளென்றே. 68

இடருழந்திருகண்ணினீரிருநிலம்புரள
வுடல்கனன்றுறவுலைக்கனல்மெழுகெனவுருகப்
படியினிற்பணிந்தாளெழுந்திராதுதான்பல்காற்
குடதிசைக்கணினோக்கிமெய்குழைவுறும்வேலை. 69

வஞ்சினுண்ணிடைமலர்மகள்வரம்பெறவருந்தி
நெஞ்சினொந்தவணிற்புழிக்கண்டனனயத்திற்
குஞ்சரந்தனைநினைந்திடக்குறுகிமுன்னின்ற
வஞ்சனந்திகழ்மேனியனாயர்கள்பெருமான். 70

சாலமாலினாற்றளர்வுறுமின்னுயிர்தரிப்பப்
பாலின்வேலையிலனந்தன்மேற்பள்ளிகொள்பரமன்
கோலமாகியவிந்திரவில்லொடுகுறுகி
நீலமேகமுன்னிழிவபோனிலனுறவரவே. 71

மழைதடுத்தவனிரதமேல்வரமலர்க்கையாற்
குழலொதுக்கிவானோக்கினள்குவலயத்தரச
ரழலுறத்திடுமெழுகெனவுருகிமின்னழகா
லுழலையுற்றிரதங்கள்மாகரிகள்விட்டுருண்டார். 72

சோமனண்முகச்சுந்தரியருகுறச்சூழுந்
திமையோர்திருவடிவினாற்றிசைதொறுந்தியங்கச்
சாமரூபநற்சக்கரத்தங்கையார்க்குதவிக்
காமராசனுங்கலக்கினன்கருப்புவிற்கணையால். 73

அன்னமானமின்வனப்பினிலவனியிலரசர்
தன்னையோர்கிலர்மயிலினாற்றரணியில்விழுந்தார்
மின்னுநேமியனிரதம்விட்டிழிந்திடவிதர்ப்பன்
கன்னியானதேன்களிப்புறக்கண்களிற்கண்டாள். 74

அண்டர்நாயகனாகியவரியெழிலமையக்
கண்டமாதுமுன்கடலிடைவிளங்கியவமிர்தை
யுண்டதாமெனவுடறடித்துள்ளமுமகிழ்ந்தாள்
கொண்டனீரினால்வாடும்பைங்கூழ்குளிர்ந்தெனவே. 75

தன்பயோததியுற்றநற்பதிசராசரத்துக்
கன்பனாகியவச்சுதன்வருமுனமலைந்து
துன்பவாரியில்விழுந்தமிழ்ந்துழல்பவளிறைகண்
டின்பவாரியிலமிழ்ந்தனளிறைவனைநோக்கி. 76

குளிர்ந்தவம்பகங்கோகனகத்திருவதனந்
தெளிந்தநன்மதியங்குறச்சிறுநகைதெரிய
வளர்ந்தகுங்குமக்கொங்கைகள்மெய்ம்மயிர்பொடிப்பக்
கிளர்ந்தபொன்னொளிர்கற்பகங்கெழுமியபோல. 77

சேணுலாவியதேரினின்றிழிந்தசீதரனைக்
காணலாகியதவமுளதெனமகிழ்கருத்தாள்
பூணுலாவியமுலையிணைபுளகம்வந்தரும்ப
காணுலாவிடச்சிலதியர்பண்ணையினடந்தாள். 78

பரிவொரீஇத்தெளிபரிவுமல்கிடப்பரன்றனை
யிருகண்ணோக்கினுங்களிப்புடனோக்கிடேனெனது
திருமகட்கொத்தசெயலுறநாயகனிவனென்
றருள்மகிழ்ந்தனள்விதர்ப்பர்கோனன்புறமனைவி. 79

அனையதாகியமகிழ்வினாலருந்ததியனையா
ளினையவாசகமியம்புவாள்யாதவகுமரா
வுனையலாதுவேறென்மகளுள்ளத்திலொன்றும்
நினைவிலாளிவணாயகனீயெனநிகழ்த்தும். 80

பணமொராயிரப்பாந்தள்மேற்றுயில்கொளும்பரமற்
கிணையதாகியமனைவிசெந்திருவனையாணின்
குணமதாகியகோகனகக்குயிறனக்கு
மணவனாகியேயூழியும்வாழ்திநீயென்றாள். 81

சிறியனின்றனையல்லதுசீரிலாதொன்று
மறிகிலாளென்றனாருயிரனையவளுன்னைப்
பிறிகிலாதவள்குணவதிநின்பெருந்தேவி
வெறிகொள்பூந்துழாய்மார்பநீகாத்திடவேண்டும். 82

என்றுநல்லுரைபகர்ந்தவள்மகளெழில்மேனி
யொன்றமெய்தழீஇயொளிவளைக்கரம்பிடித்துவந்து
குன்றமன்றெடுத்தானிரைகாத்தருள்கோவே
யின்றுமென்றும்வாழ்தேவியோடெனக்கையிலீந்தான். 83

அன்னையானவடன்னைமால்கரத்தினிலளிப்ப
மின்னுநேமியையங்கையிற்றரித்தருள்வீரன்
பொன்னின்மாமலர்ச்சேவடிபணிந்தனள்பூங்கொம்
பென்னநின்றமேந்திழையிதையமுமகிழ. 84

பணிந்தமாதவப்பங்கயத்தமுதினைப்பணைத்தோ
ளணிந்தநானமெய்யையுறச்சேறுறத்தழுவித்
தணிந்தமானிலச்சிந்தையல்றேவியுந்தானு
மிணைந்ததேரின்மேலேறினனிமையவரார்த்தார். 85

எறினாரிரதத்தின்மேலிறைவியுந்தானுங்
கூறினார்பலசோபனங்கொடியிடைமடவார்
தேறினாடிருத்தேவியுஞ்சிந்தையுமகிழ்ந்தா
ளாறினாளுயர்விதர்ப்பர்கோன்மனைவியாமன்னம். 86

சுந்தரன்றிருவோடுமெந்தேரினிற்றுலங்க
முந்திவந்திரைத்தார்த்தனர்துந்துமிமுழங்கச்
சிந்தைவெஃகியவிபுதர்கள்மலர்மழைசிதற
விந்திரன்கமலாசனன்முனிவரேத்தினரால். 87

அரம்பைமேனகையுருப்பசிதிலோத்தமையனேக
வரம்பிலாமகிழ்வோடும்வந்தெய்தியமாதர்
நிரம்புபாடலோடாடினரந்தரம்நிறையச்
சுரும்பருமலர்த்தோகைமாதவனோடுந்துலங்க. 88

மாயன்மாதவன்வாமனன்மலர்மகள்மகிழ்நன்
வேயினூதியவித்தகன்வியாளமேனடித்தோன்
றூயமாமலர்ச்சுந்தரிதன்னோடுந்துலங்கிப்
பாயுமாவிரதத்தினில்வயங்கிடப்பயில்வார். 89

ஆதவன்கொலோவென்பர்களலைகடற்றுயிலுஞ்
ஸ்ரீதரன்கொலோவென்பர்கடேவியைக்கமல
மீதின்மின்கொலோவென்பர்கள்விண்ணவர்யாஞ்செய்
மாதவங்கொலோவிவர்நிலம்வந்தனரென்பார். 90

அன்னநல்லுருக்காண்பதற்காயிரநயன
மன்னவனுளனாகினன்றென்பர்கள்மாயோன்
மின்னுமஞ்சனமேனியைமெல்லியல்காண
வுன்னிலங்கிவட்கன்னகண்வேண்டுமென்றுரைப்பார். 91

இன்னவாறுரைவிளம்பியேமகிழ்வுருமிமையோர்
பொன்னின்மாமலர்பொழிந்தனர்புரந்தரனிலங்கு
மன்னனூர்தியோடனைவருமாசிகள்பகர்ந்தார்
பன்னுநான்மறைமொழிந்தனர்முனிவர்கள்பலரும். 92

பொன்னினன்குடையிலங்கிடச்சாமரைபுரள
வின்னலில்லுவணக்கொடியெழுந்துவானுலாவ
மின்னுமம்புயமடந்தையோடிரதமீதிருந்தான்
மன்னவன்மதுசூதனன்றுவரைவாழ்மாயோன். 93

கன்னதேன்சுவைமொழியினள்கமலமாமங்கை
மின்னினுஞ்சிலாரெயிலுடைத்துவரெயில்விளங்கு
மென்னையாளுடைநாயகனுடனிருந்ததனைச்
சொன்னநாமினியுருக்குமன்செயலினைத்தொடுப்பாம். 94

நாச்சியார்தேரேறுபடலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - 4188.

---

## 71 - வது, சேனைசூழ் படலம்.

மறனொழித்துமனத்துறுமைம்பொறித்
திறனடர்த்துத்தெளிந்தெழுஞ்சிந்தையா
லுறியுருட்டித்தயுண்ணுமுத்தம
விறையினைப்புகழ்வாரடியேத்துவாம். ௧

இந்திராதியரேத்திடயாதவன்
வந்துமாதினைப்பற்றிவன்றேரினை
யுந்தவேகிலனோடுதல்கண்டெஞ்
சிந்தையோடியதூதுவர்செப்புவார். 2

ஓடினார்களுருக்குமனெய்திடந்
தேடினார்கடெருத்தெருத்தோறுமே
வாடுருமலர்மங்கையைக்கோவலன்
கூடினன்கொடுபோயினன்கூடுவென்றூர். 3

வண்டுசாருங்கருங்குழல்மங்கையை
யண்டர்காணவடனெடுந்தேர்மிசைக்
கொண்டுபோயினன்யாதவன்கூடுவன
மிண்டியோடினர்வீதிகடோறுமே. 4

மண்டபத்தின்மதிக்குடைமீதுறத்
திண்டிறற்சிசுபாலன்செருக்கிடக்
கண்டிருக்குமுருக்குமன்காலில்வீழ்ந்
துண்டுரைப்பதுகேளெனவுற்றனர். 5

என்னபீதியினெய்திடுவீரென
மன்னகேள்மின்னைவண்டுவரைக்கிறை
யுன்னுபோதினிற்கொண்டகன்றானுள
னின்னநீணிலத்தேரினிலென்றனர். 6

என்றலோடுமெரியுறுகண்ணினன்
கன்றினன்வதனங்கதம்விஞ்சவாய்
மென்றுநீயின்விடமுமிழ்வானென
நின்றவீரனினையசிகழ்த்தினன். 7

மரபழித்தென் றங்கையையவன் பிற்றன்
னிரதமவைத் துறம்யாதவர்கோன் றனைப்
பொருதழித்துப்புடைத்தவன் றன்னிரு
கரமகப்படக்கட்டுவென்காண்டிரால். 8

தேவர்வந்துவிலக்கினுஞ்சிரிலா
மூவரெய்திமுடுக்கினுமூண்டம
ராவமுன்மலியாசுகமாரியே
தூவிவென்னையுண்சோரனைவெல்வனால். 9

எண்டிசாமுகமெங்குங்கண்ணன் சிலை
துண்டமாகத்துணித்துத்தரத்திவா
னண்டர்காணவடர்ந்தின்றென் றங்கையைக்
கொண்டுமீள்குவன்கொற்றவர்காண்டிரால். 10

யாதவன் றனையீடழித்தெங்கையா
மாதினைக்கொடுவேந்திலனாகில்யான்
கோதிலாமதிட்குண்டினமாநகர்
சார்தலில்லையெனுமொழிசாற்றினான். 11

கறங்கெனக்கடிதிற்சென் றுகார்வணன்
புறங்கொடுத்திலதாய்நகர்புக்கில்யா
னறங்கெடுத்தருள்கொன் றசடாகிய
மறங்கொளும்பொய்ச்சமாக்களுமாகயான். 12

வில்லினிற்பொருகண்ணனைவென் றியான்
வல்லியைக்கொணராதென் றனூர்வரி
லொல்லையிற்கெடவுற்றொருவன் னுடை
யில்லெடுப்பவன்வீழ்நரகெய்துவேன். 13

குன் றமேந்தியகோவலன் றன்னையே
வென் றுமாதினைமீட்டிடேனேக
ரொன் றிலேனெனிலுத்தமர்செய்தி
நன் றிபொய்க்குநவையுளனாகயான். 14

விரைவினிற்கண்ணன்வென்னிடவென் றிடு
மூரனிலாப்புயத்தோடிந்தவூர்வரின்
விரைவிற்பொய்க்கரிகூறியமாக்கள்வீ
ழெரிகிகோதத்திலெய்தியுழல்வன்யான். 15

கடுகியாகவம்வென் றுகலன்செறி
வடிவினாளைக்கொடுவந்திலேனெனி
லிடையனுயவிழ்குலத்தியாதவற்
கடியனாகுவன்யானென் றறைந்தனன். 16

என்றிவ்வெய்யவுரைகளியம்பியே
கன்றுசிந்தையுருக்குமன்காலன்போ
னின்றசெய்கையைநோக்கினனீதியிற்
குன்றமன்னசராசந்தன்கூறுவான். 17

எனக்குடைந்தவரையிலெரிந்திடு
மனற்கிடைந்தங்கலைகடலின்றிடர்
தனக்கிடம்மெனச்சாருந்தமியனை
மனைக்கடிந்திங்ஙன்வைப்பன்சிறையென்றான். 18

அந்தவெவ்வுரைகேட்டனலாமென
நந்தன்மைந்தனைநான்றனியாகியே
முந்திவெஞ்செருவெல்குவன்மூண்டெனத்
தந்தவக்கிரன்றானுரைத்தானரோ. 19

சேவினைப்பழித்தேயறத்தீட்டிய
வேலையொத்தகண்ணாளொடுமேவுகோ
பாலனைப்பற்றிக்கட்டுவன்பாரெனச்
சாலுவன்றானுரைத்தான்றழற்கண்ணினான். 20

ஏசிலாமரபின்மினைக்கொண்டெய்தும்
வாசுதேவன்வலிதொலைப்பேனெனு
வீசனீயவரியுருவெய்திநீள்
காசினிக்குட்டிரிமன்கழறினான். 21

யாதவன்றனையான்விடுவொளியாற்
பூதலந்தனிற்றேரும்பொடியுறக்
காதிநின்முனிற்கட்டுவெனென்றனன்
சேதிபன்செயிருற்றெழுஞ்சிந்தையான். 22

தந்தவக்கிரன்மாகதன்சாலுவன்
சிந்தைவெந்தபவுண்டரன்சேதிப
னிந்தவெம்மொழிகூறவெழுந்தனன்
வெந்திறற்படைவீரனுருக்குமன். 23

எழுந்துருக்குமன்சிறிடவெங்கணுந்
தொழும்படைத்தலைவீரர்கடெண்ணியே
யுழுந்துருட்பொழுதிற்கண்ணனுற்றபே
ரழிந்திடப்பொருவோமென்றடர்ந்தனர். 24

வீரரானவர்கூறிவெகுளலுஞ்
சீரிதானசொற்செப்பினராமெனச்
சூரனானவுருக்குமன்றாய்நெறி
ஈரமாறவன்கண்ணனியம்புவான். 25

இடையனே துமதியிலனெங்கையைக்
கடியதேர்மிசைக்கொண்டேகழியுமுன்
படையெலாங்கொண்டுபோர்திசையெங்கணுந்
தடுமின்யானையைத்தந்திடுமினென்றான். 26

சொன்னவீரியனுரையிற்றன்றொழு
தன்னதேமுயல்வோமெனவானைதேர்
துன்னுபாய்பரிவெள்ளமுஞ்சூழ்ந்திட
மின்னுவாளொடுமேவினர்வீரரே. 27

படைக்கலங்கொடுவீரர்பரந்தெழ
வுடற்கனன்றவுருக்குமன்றன்னொடு
மடற்குடன்றெழுசேதிபனுதியர்
விடைக்குலங்களெனவெகுண்டாரரோ. 28

இரதமேறினர்வெஞ்சிலையேந்தினர்
விருதுமாதங்கமீதுவிளங்கினர்
துரிதமாய்வருயாதவன்சோரவே
சரதமாயமர்செய்குவநாமென. 29

முரசறைந்துநற்பேரிமுழங்கலு
மரசெழுந்தமரெய்தினனுமென
வரிசையின்னுயர்மன்னர்வருதினி
யுரைசெய்முன்னமுடன்றுவந்தார்த்தனர். 30

உம்பரோங்குகதலிகையோடுதேர்
பம்புமானைதுரங்கம்பரந்திடச்
செம்பராகமுறத்திடராயின
விம்பர்வாரிமகரமிலங்கவே. 31

கரியினீட்டமுழங்கினகார்எனப்
பரியினீட்டம்பரந்தனவேலைபோ
லரியினீட்டமெனவெழுந்தார்த்தனர்
சுரிகையீட்டங்கொடுவருசூரரே. 32

தேர்மிடைந்தனமும்மதச்செம்முகக்
கார்மிடைந்தனகண்டையொலித்திடப்
பார்மிடைந்தனபல்பரிவானவ
ரூர்மிடைந்தவிலோதனமோங்கியே. 33

வாண்மிடைந்தனமாவயவீரர்க
டோண்மிடைந்தவலயந்துலங்கிடத்
தாண்மிடைந்திடத்தாங்கள்மடிந்திடு
நாண்மிடைந்திடவேநடந்தெய்தினர். 34

இறுதிகாலத்திரைத்தெழுவேலையு
ம்முறுவதாமெனவோங்கியவானமு
மறையுமாகரிதேருடன்வந்தனர்
நிறையநாலக்குரோணிசெம்படை. 35

ஆனைமேலணிதேரின்மேலடர்
வானின்மீனையுதிர்த்தெழும்வாளினர்
சோனைமேகமெனச்சொரிவார்கணைச்
சேனைகாவலரேசினந்தாரரோ. 36

வேறு.

படைத்தலைவர்மொய்ம்பொடுபரப்பினிலெழுந்தே
கடிக்கமலமின்னைநிறைகன்றுகளொடர்வு
மடக்குமிடையன்கொடுவெழிப்படுவமுன்னர்ச்
சடக்கெனவளைத்திடுமினென்றுரைகடந்தார். 37

மகரிகைமருப்பிலகமும்மதமுமண்ட
நிகரில்பிறழ்பன்மணிசறங்கியெழுநீலச்
சிகரநிரைமானவிழிசெங்கனல்பரப்பப்
புகரிபமளப்பில்கொடுபொங்கினர்கள்வீரர். 38

அம்புலிகிளர்ந்ததெனவேயனிசமெய்தக்
கும்பமதயானைகொடுவீரர்கள்குறிக்குங்
கம்பொலியொடேகடுவையூமைகள்கறங்குங்
கம்பலைபரந்தனகடற்றிரைகள்மான. 39

ஆழியுறுதேர்நிரைகளாசைதொறும்விஞ்சச்
சூழிமதயானைகடுறந்திடமுகிற்போற்
பாழியமைதோளினர்படைத்தலைவர்பொங்கு
மாழிகள்கிளர்ந்ததெனவெங்கணுமடர்ந்தார். 40

எள்ளுதலினற்கவினிலங்குமிஞெடேகுங்
கள்வலைவளைத்துநெறிகட்டுமெனவேதான்
றுள்ளுபுரவித்திரள்கடோலினிரைசூழத்
தெள்ளியபடைத்தலைவர்தேரின்மிசைசென்றார். 41

எண்டிசையுமோடினர்கணேடினர்கள்வேலை
மண்டியதுபோலநிலன்வந்தெதிரும்வீரர்
அண்டர்குலநாயகனையன்னமொடுதேரித்
கண்டனர்கள்காலனெனவேகதமுறத்தாம். 42

மதக்கரிகளைக்கொடுவளைத்தனர்கள்வேல்வாள்
விதித்தெழுகரத்தரிரதத்தின்வருவீர
ரொதுக்குலமுதித்தருளுமீசனையெதிர்த்தே
யதிர்த்தெழுமுடீரிஞெலியாகுமெனவார்த்தார். 43

பல்லியமுழங்கினபகற்கதிர்மறைப்ப
வெல்லையில்விலோதனம்விணெங்கணுமுயர்ந்த
வல்லியமுனிந்துவருமானெனவெகுண்டு
மல்லுயர்புயத்தரசர்தேர்கொடுவளைத்தார். 44

மூரிமதவும்பல்கள்முழங்குமுகிலஞ்சப்
பாரதிரவெண்டிசைபரந்தனநடந்து
தேரணியுடன்குரகதத்தணிசிறப்ப
வீரரயில்காலவரிவேல்மழுவெறிந்தார். 45

ததையுமதவெங்கரிகடாள்கடரையுற்றுப்
புதைவுறநடத்தியெதிர்பொங்குசினவீரர்
குதைசெவியுறக்குனிவில்கோலியரிதன்மே
லுதையும்வடிவாளிகள்பரந்தவுலகெல்லாம். 46

தோல்வளையவெங்குரகதத்தின்வருசூரர்
வேல்வளையும்விற்கொடுமிடைந்தனர்களெங்கும்
வால்வளைதழங்கிடவளைத்தனர்களூழிக்
கால்வளைவபோலிரதமீதுகடிதுற்றே. 47

விற்றொழிலர்நற்கரியின்மேலமரும்வீர
ருற்றனருருக்குமணிநாயகனையொன்னார்
சுற்றினர்தெழித்தனர்தொடர்ந்தகலுமுன்னம்
பற்றுமினியெற்றுமெனவெவ்வுரைபகர்ந்தே. 48

எறிந்தனர்கள்பல்படைகளெங்கள்குலமின்னென்
றறிந்துமிரதத்தினொடுமேதுமறிவில்லாய்
கறந்துநிறைபால்கவருகள்வகழியேலென்
றறைந்துகடுவூறுகணைதூவினரடைந்தே. 49

எங்கள்குலமன்னவனுருக்குமனெதிர்க்குஞ்
சிங்கமெனவந்தடருசெம்மல்சிலைவல்லான்
றங்கைதனைவிட்டகறியென்றுமுரைதந்தே
பொங்கினர்படைத்தலைவர்கோளரிகள்போல்வார். 50

சூலமழுநேமிவலயஞ்சுரிகைதூய
வேல்குலிசமுற்கரமுசுண்டிகதைவிட்டு
நீலமுகில்மேனியனைவந்துறநெருக்கி
யாலமெனவுந்தினரதிர்ந்தவுலகெல்லாம். 51

இந்திரனெழிற்கமலனீசனிமையோரும்
வந்தனரரம்பைமுதல்மங்கையர்களோடு
மந்தரநிறைந்தனர்களர்ழிகைவிளங்கு
மெந்தைசிலைவல்லதொழில்காணுதுமெனத்தாம். 52

ஆலமெனவேலைகள்பரந்தெழுவதான
காலமெனமாகரிகடேர்நிரைகலந்தே
வேலின்விழிவாணுதல்வெருக்கொளமிடைந்தார்
மாலுநகைகூரவெதிர்நின்றனன்மகிழ்ந்தே. 53

கஞ்சமலர்விஞ்சவருகன்னிகடிகாவிற்
கொஞ்சிகிளிபஞ்சியடிகோகிலமடந்தாய்
அஞ்சலெனவெஞ்சிலைகொடேயலைகொளாழி
நஞ்சமெனும்வஞ்சர்படநாணினையெறிந்தான். 54

கடங்கலுழ்கரித்திரள்கள்வாசிகதமூளு
மடங்கலெனவந்தெதிருமன்னர்வலியெல்லா
மடங்கியயர்வெய்தவுலகானவைகளெல்லா
நடுங்கினவயங்குசிலைநாணொலியினம்மா. 55

உலைந்தனர்கணுவிலுறுநீரறவுலைந்தே
யலைந்தனர்கள்வீரர்பரியானையணிதேர்கள்
குலைந்தனவயங்கியுயர்கோவலனொன்னார்மேல்
மலைந்தெழவெறிந்தசிறுநாணொளியின்மாதோ. 56

வேறு.

இலங்குதேர்கரிமாவினெழுந்தவர்
தலங்கியோடிடநீள்கனகக்கிரி
குலுங்கவேலைகள்யாவுங்கொதித்தெழ
வலங்கொள்மார்பன்வலம்புரிவாய்வைத்தான். 57

சங்கமூதினன்சார்ங்கம்வளைத்துவா
னெங்குமேகமெழுந்துபொழிந்தெனப்
பொங்குமாசுகம்வான்றிசைபோர்த்திடச்
சிங்கவேறெனுமாதவன்சிந்தினான். 58

தேரின்மேற்பெருங்கோடுடைச்செம்முகக்
காரின்மேற்பரிமேற்கழிவீரர்மேல்
மாரிபோலவும்வந்துபொழிந்தன
நேரிலாநெடுமால்விடுநீள்கணை. 59

ஐயன்வார்சிலையால்விடுமாசுக
மெய்யதாகியமொய்ம்புறுவீரர்க
ளெய்யும்வாளியெலாநெறியிற்றுசப்
பையராவெனப்பார்புகமாயுமால். 60

அதிர்ந்தபார்மதயானையின்கோடிற
வுதிர்ந்தவாரத்தின்குப்பைகளோங்கல்போற்
பிதிர்ந்ததேர்பரியின்னங்களாகவே
யெதிர்ந்தவீரர்குடர்களுமிற்றவால். 61

கொடிகளற்றகுடையுமுறிந்தன
விடியெனக்குமுறுங்கரியாவையும்
பொடிபடப்படியெண்டிசைபோர்த்தன
வடவனற்சுமோறெனவாளியே. 62

கவசமற்றகம்பரிதேரொடுந்
துவசமற்றனதோலுறும்வீரர்க
ளவசமுற்றனரந்தகன்றூதரத்
திவசமுற்றுநடந்துயிர்செற்றனர். 63

படிமிடைந்தனபல்பிணக்குப்பைகள்
கடல்மிடைந்தனகான்றுகுசெம்புனல்
சுடர்மிடைந்தெழுதூய்மகுடம்புனை
முடிமிடைந்தனவந்தரமுற்றுமே. 64

ஏகநாயகனேவியவாளியாற்
பாகர்பாறப்பரிநெடுந்தேர்பட
வாகைசூடியமன்னர்மடிந்திடக்
காகமெய்தியவர்கண்களைந்தன. 65

கோடிகோடேரொருகோடிநல்வீரர்கள்
நொடியின்முன்னரின்மாளநுழைந்திடும்
படியின்மேலிரத்தப்புனல்பாறிநற்
கடலில்வீழக்கவந்தமுமாடின. 66

தாண்டுவெம்பரித்தேரினிற்சாரதி
மாண்டுநாணறவஞ்சிகொடண்டினைப்
பூண்டுசெம்புனலாற்றுடன்போகுவார்
தூண்டில்கொண்டெழுவாரெனத்தோன்றினர். 67

தடப்பொருப்பெனச்சாருங்கைமாவினிற்
குடற்புறப்படக்கொம்பிரண்டற்றுயர்
சுடர்ப்படிந்துறுதூயமுத்தைக்குவி
தொடப்பமொத்துளதும்பியின்வாலரோ. 68

உம்பர்தம்பரன்றன்சிலையுந்திய
வம்பினங்கடிதின்னறுத்தோடநீள்
கொம்பிரண்டொடுகையுங்குறைந்தெழு
தும்பியின்னினஞ்சூகரம்போன்றன. 69

பழுதில்மாதவனேவியபல்லவக்
குழுவின்மாண்டவர்மெய்க்குருதிப்புனல்
முழுகியாடினகூளிகள்முந்தியே
கழுதுசூழக்கவந்தமுமாடின. 70

ஈறின்மாதவன்வெங்கணையேவிட
மாறில்வீரர்மடிந்தனர்செம்புன
லாறுபோலலைவீசிடவஞ்சினோர்
பாறவேயெதிர்ந்தார்படைநாயகர். 71

வேறு.

வீடியபிணக்குவைவிலங்கலெனவேயுயரவெஞ்சிலைகொடே
கூடினர்படைத்தலைவரானவர்கள்சீறிவருகோளரியென
வாடல்மதமாவிவுளிதேரில்வருசூரர்களடர்க்கவரியை
மூடினர்களும்பர்திரளஞ்சிடமுழங்கியதுபேரிமுரசம். 72

சூலமழுநேமிவலையஞ்சுரிகைதோமரமுலக்கைசுடர்வாள்
வேலெழுவயிற்குலிசம்விஞ்சுமுசலங்கைகொடுவீசியெதிர்வார்
கோலிவிழுதேர்நிரைதுரந்துசிலைநாண்வலிகொடோளிலுறவே
யாலமெனவெம்பகழிமாரிகள்பொழிந்தனரடர்த்தரிதனை. 73

தேர்கொடுபடைத்தலைவர்சீறிநெடுவொளிகடிரண்டுபொழிய
வாரியன்முனிந்துசிலைகோலியுயர்மாமழையிதாமெனவிட
வாரியையடர்க்கும்வடவாவனலெனக்கடியவாதமெனவே
சூரர்தலைதேர்கரிகொடாளொருகைவால்செவிதுணித்தவிசிகம். 74

கடிந்துதுவரைக்கிறைவன்விட்டகணையட்டதிசையுங்கனலவே
மடிந்தமதவேழநிரைமன்னர்மகுடத்தலைகள்மண்ணின்விழவாண்
டொடிந்தவிரதம்பரியுருண்டுவிழவோடியதுசெங்குருதிநீர்
படிந்ததுபிணக்குவைபரந்ததிசையுண்டபரவைக்குலமரோ. 75

மாறிலொளிசாரிரவிவாயுவருணன்கனல்வழங்குபடைவிட்
டேறிலுறுமீசனெனவேயுயர்படைத்தலைவரெங்குமடரக்
கூறுதுவரைக்குரிசில்கோரநெடுவொளிகள்விடுத்தவையெலா
நூறியனலம்புகள்பொழிந்தவர்கடேர்சிலைநுறுக்கினனரோ. 76

நாணியறவோடிமெய்நடுங்கினர்களுவலரவாளிநிரையுந்
தூணியறவோடினர்சடேயவிவுளித்திரடெலங்குமிரதத்
தாணியறவோடினர்களானைபடவோடினரளப்பிலரெழிற்
பூணியொடுகோனினிடையேகியபுராதனர்பொழிந்தகணையால். 77

தூற்றகணைதூணியுறநாணியிலைவிட்டிரதசூரர்களுட
னூற்றவர்மடிந்திடவிமைப்பின்முனமோடவரையுட்புகுதலாற்
சுற்றமனைநாரியையகன்றுமெதிர்சூழ்வினைதொடைத்துயரவா
வற்றுமுழையுட்புகுமருந்தவரையொத்ததரியாசுகமரோ. 78

ஓரொருவர்பின்னெதிர்மருங்குமுனணுகியொருதேரின்மிசையே
சாரிகைதிரிந்துவளையூதியரிதூவியதழற்கணையினாற்
றேரினமெரிந்தகரிமாவினமடிந்துதிறல்மன்னருருளப்
பாரிலுறவோடியதுசெங்குருதியாடினபரந்தலகையே. 79

வேறு.

கொண்டல்வானவிர்வில்லொடுங்கூடியே
மொண்டுமாரிபொழிந்தெனமூவல
குண்டவாயனெய்வாளியுலப்பில
மண்டலும்மண்டலீகர்மடிந்தனர். 80

ஒல்லையில்லுடைவோர்களைநோக்கிநம்
மில்லிஞயகியேந்திழைமென்முலை
புல்லுவீர்கொலென்றேநகைபோதமுன்
சொல்லுவார்களுந்தேரிழிந்தோடுவார். 81

நீளுமாயிருஞாலத்தினேர்மன்னர்
தாளுந்தோளுமறத்தலைகொண்டெழும்
வாளிமாமகுடத்தொடுவானக
மாளுமாறெனவண்டமுற்றுமோல். 82

கோட்டும்விற்றுவராபதிக்கொண்டலைத்
தீட்டும்வாளிகொண்டெய்யுமினென்றுதேர்
காட்டுவார்விரலுஞ்சிதையுங்கணை
பூட்டுவார்சரமுங்கொடுபோஞ்சரம். 83

தும்பிபோற்சுழல்தேர்கலெங்கவே
தும்பிமன்னர்கள்சூழ்ந்திடவாவியிற்
றும்பிமாய்வொழித்தோன்சுடர்போர்விலுந்
தும்பிறைக்கணைமாரிகடுன்னின. 84

நாகமேலணைவான்கணைநாலுகைங்
நாகவீரர்மடியநடந்துபொன்
னாகமீதுறுநாகரும்வான்மிசை
நாகமாமலர்தூவிநடித்தனர். 85

துவரைமன்னன்விடுங்கணையாற்றுணிந்
துவரையென்னவீழ்மன்னரைப்பேய்கள்சூழ்ந்
துவரைவில்களியோடயன்றொல்லையாய்ந்
துவரைமண்டைகடோன்றத்துகைத்தன. 86

மடங்கல்போனிலனெய்தியமன்னர்கள்
மடங்கவேமகுடச்சிரம்வானிற்போய்
மடங்கிவீழ்ந்திடவேபெய்யுமாரிமும்
மடங்குவாளிகளெய்தனன்மாதவன். 87

கவந்தனைக்களைந்தோனெழியாமற்காக்
கவந்தமன்னர்களாருயிர்காலனார்க்
கவந்தப்பாசங்கணக்கறப்பாடலக்
கவந்தமோடக்கவந்தநடித்தன. 88

அயங்கொணெஞ்சுடைமன்னர்களானைதே
ரயங்கடம்மொடுமெம்புலிகண்டுறு
மயங்கவென்னவிரிந்தஞ்சினார்கள்செம்
மயங்களந்தனிலாறெனவோடவே. 89

அரிவிற்றோய்வுறுமம்புகளாலத்தோ
லரிவிற்றேரறனுறிடவாடவர்
பரிவிற்றோடியபான்மைகண்டேசுரர்
பரிவிற்றாடினர்பன்மலர்தூவியே. 90

நாரிதோளுறநாற்றியமாலினு
நாரிகாதுறவாங்கநடுங்குமொன்
நாரினுவொடுபொறிடநாகமின்
நாரிதார்வல்லரென்றுநடித்தனர். 91

அனகன்வாளியறுத்திடவாடவர்
புனையுமாமகுடத்தலைபோயவர்
மனையின்வாய்விழமற்றவர்தேவியர்
தனையர்சூழத்தழீஇயுடல்சார்ந்தனர். 92

ஐயன்வாளிதுணித்திடவாடவர்
கையில்வாய்விழக்காதலிகண்டுதன்
றய்யவேல்விழிநீர்தொடைக்கப்படு
மையைநோக்கினளோய்ந்துயிர்மாய்ந்தனள். 93

சீரைச்செற்றுச்செங்கோலறச்செல்லுறு
வாரைச்செற்றுமண்ணாள்வுறுமன்னனுக்
கோரச்சொல்விகுலைகுலைந்தாலெனத்
தேரைச்செற்றுமுறியச்சிதைத்தனன். 94

நரகுதம்மிற்செய்தேசெய்தநன்றிகொன்
றருகுதன்னிலில்லான்கிளையோடும்பார்
பெருகுதலின்றிமான்பவன்பெற்றிபோற்
கரிகிமண்மிசைவீழ்ந்தகரிகளே. 95

கரவிலார்துயர்கூரக்கயவர்க்காய்
வரைவில்வாதுக்கவையையுமாற்றிப்பொய்க்
கரிசொல்வான்றன்கடியகுலமெனப்
பரியெலாமுயிர்போய்ப்படிவீழ்ந்தன. 96

எல்லிடங்கிடச்செல்லென்றிவனென
வல்லியங்கமலக்கண்ணனம்பினு
லொல்லையில்லுரவோர்மடியக்கண்டார்
வல்லியங்கண்டமானெனவோடினார். 97

சங்கமாகித்தளைப்பெய்தவீரர்மா
வெங்கண்வல்விலக்கும்மடிந்தேவிழப்
பொங்கிவீழ்செம்புன லுகும்வாரிமேல்
வங்கம்போனின் றமாதவன்றேரரோ. 98

உணங்குவாய்க்குணவாந்தசைமென் றுறு
கிணங்களாடையதாகவிவந்தபேய்க்
கணங்கள்மூளைக்களபமுமெய்க்கணிந்
திணங்கியேதுணங்கையெறிந்தாடின. 99

நந்தன் மைந்தன் விடுங்கணைநாலுகைத்
தந்திதம்முடன்வீரர்கடந்தலை
சிந்தியெங்கணுந்தேங்கிடப்பேய்கடாந்
தொந்தொந்தொந்தொமென் ருடித்துகைத்தன. 100

பவர்கொணீள்குடர்மாலையணிந்துபாய்
கவளமாச்செவியேகுடையாய்க்கவித்
திவுளிசாய்வுறவிற் றுயர்வாவெனுங்
கவரிவீசக்களிக்குமலகையே. 101

அற்றயானையின்காலுரலாகத்தாம்
பற்றிவீரர்கள்பற்பறித்துச்சொரிந்
திற்றகோடுகொண்டேயிசைபாடியே
குற் றுமாலலகைக்குலங்கூடியே. 102

சாயும்பல்பிணத்தின் றசையாவையு
மேயெனும்முனுண்டாடுமவ்வெல்லையில்
வாய்கொடேபறித்தும்வசைபேசியும்
பேய்களாகியுயிர்பிரிந்தாமொல். 103

கூளிகூத்தியர்போற்குஞ்சரமணித்
தானமார்த்திடச்சம்புகம்பாடவெங்
காளிகைகொட்டிக்கண்டுகளித்திட
ஞாளிசுற்றக்கவந்தநின் ருடின. 104

அருந்தவேழலைப்பாலுயிரோடளித்
திருந்ததாய்நன் றியெண்ணினன் ருன்கொலோ
பரிந்துபேய்த்திரளுக்குயர்பல்பிண
விருந்துமீய்ந்தனன்வேயிசைவாயினன். 105

கூடினார்படைவீரர்குழாங்கொடு
மூடினார்முகுந்தன் விடுவாளியால்
வீடினாரலைவேலையுடைந்தென
வோடினார்மற்றவருயிர்பேணியே. 106

இறுதிகாலத்தெழுந்துறங்கூதிரால்
மறுகியேகிளர்ந்தோடியவாரிபோற்
குறைவிலாதவைகுந்தன்கொடுங்கணை
யறைதலும்முறிந்தோடினராடவர். 107

சேனைசூழ்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-4296.

## 72-வது, பவுண்டரப் படலம்.

தத்துவங்களையைந்துணர்சாத்திகச்
சுத்தவித்தையாய்ச்சுடராழியேந்
தத்தனெட்டெழுத்தும்மறிவார்கடம்
பத்தர்மெய்யடியாரைப்பணிகுவாம். 1

உருக்குமன்படைநாயகரோடவே
செருக்களத்தினிற்சீறிப்பவுண்டரன்
பொருக்கெனக்கடுந்தேரிடைப்புக்கனன்
நெருக்குதார்ப்பரிமீன்கயஞ்சூழவே. 2

பேரிமாமுரசம்பம்பைகும்பிகை
வாரிபோலமுழங்கிடமாவய
வீரர்வாளினர்வில்லினர்தேர்வருஞ்
சூரர்மூன்றக்குரோணியர்சூழ்ந்தனர். 3

உருமினார்ப்புடன்மின்னுறமொண்கனல்
சொரிவபோன்றுசுடர்தருங்கோடுடைக்
கரியின்வீரர்கள்கண்டைகவித்திட
வரியைமூடக்கணைசொரிந்தார்த்தனர். 4

வேறு.

மதகரியின்மழைமுகில்வான்வருவனமுதிர்குரலினமா
வுததியினொலியெனவருடேருரனுறுதுரகதகிரையோ
டதிர்வுறமிடனுடைவிறலோரழலுறவிடுகணைவரைபார்
பிதிர்வுறவதிலெழுமரவேர்பிளவுறவுயர்வனபிறைபோல். 5

இமகிரியினமெனமதமாவெழுவனவடர்மதமுறவே
சமனிலையெனவருகளிமாச்சடசடவெனநடைதரவா
னமரர்கள்பதியெனவவிரோடணிதொறுமிரதமுமுறவே
திமிதிமிதிமிதிமியெனநீடிமிலையொருமிகடிரன. 6

கடதடவிகடிதமதமார்கறைபடிபுகர்மிகுகவிஞ
ரிடமுடைமிடனுடல்செவிவாலிலகியவொருகரமிருகோ
டைவடவரைமுடுகுவபோனுறனு றுமிபகிரையொடுதேர்
கொடிகுடைபிறழ்வுறமனநேர்குரகதகிரைகொடுமிடைவார். 7

பணபணியுமிழ்விடமெனவேபடைஞர்களடிமிசைவருவார்
பிணைவுறுகரடிகைபடகோடெறிமணிபிறழ்குறடெனே
யிணையறவரைதுடிகையினேடெழுகடலொலிகிகர்தரவே
கணகணகணகணவெனநீள்களிறணிமணியிசையெழவே. 8

சிவனயனெனவருதிறலோர்திரள்கரிபரிரதமுடனே
யவனியுமதிர்வுறவருவோரமிழ்தெழுமனமொடுபெயர்வா
னிவனிவனிவனிவனெனவேவெறிபவர்முடுகிடவிறைநீள்
பவனனில்விசையுறுகணையேழ்பரவைகள்மறைவுறவிடவே. 9

உருமெனமிடைவடவனலாமுருவெனவரவுமிழ்விடம்வான்
வருமெனவிரவினிலுறுதேய்மதியமர்சடையினன்விழியார்
பருமழலிதுவெனமலரான்பதிவிடுசரமுறநிலனுள்
பெருமையினுருமனர்தலைதான்பிறிவர்களுடல்புரள்வுறவே. 10

கோடுகள்கயகிறைமிமவான்கொடுமுடியெனவிழவுயர்வா
னேடடர்கொடியுடைரதமாவுருள்வனபடிபொடியுறவே
பீடுடையரசர்களுடல்பார்பெருவரையெனவிழவரிசேர்
காடுடையனவெனநெடுமொல்கடவியகணைமுடுகிடவே. 11

வாலறவிருசெவியறநீள்வயிரமுகமறவிசையார்
காலறவொருகையுமறவேகடுகிமுன்விழுவனகதமா
வேலறவிலறவுரவோர்விரலறவரிசிலையறவெங்
கோலறவெருவுவர்பொறிசேர்குரிசில்வில்விடுகணையுறவே. 12

உலகுணுமிறைபவர்விடநீளுதகியிலுயர்கதிரெனவா
னிலவியவிசிகமுமறவாலிபகிரைபரிமனரிறவே
சலசலசலவெனுமொலியேதரகிறைகுருதிகணிலவே
ழலையுறவெழவலகைகளோவனவிலநுகர்வனதசையே. 13

மாறிலையெனுமனர்செவியேர்மணிமுடிவிழிபுயமதமே
யேறினகரிகரயிருகோடிவுளிகடையடியிவையே
நூறினவுயர்கொடியுடனேநொடிமுனர்கலைமகளுறவே
வீறியகவிஞர்சொறொடைபோல்மேவியவரிசொரிசரமே. 14

வேறு.

கடலிடையரவணைதுயிலுமால்கரியவன்விடுகணைநொடியின்முன்
வடவனலிதுவெனமுடுகிடமதகரியுறுமனர்மடிவன
வடவிகள்வரையொடுமெரிசெயலமர்வுறவலையுயர்குருதிகள்
கொடிகுடைமிடைவனவிசைகொடுகுடரொடுகிணமவைகுவைசெய. 15

ஒருதிசைகரிவிழவரிசிலையொருதிசையுறவுரமொருதிசை
பரவிடவணிமணியொருதிசைபருதியினவிர்கொடுபடியவே
சிரமொருதிசைபடவொருதிசைசெவிதுடையிருதிசைசிதறவான்
கருமுகிலனையவன்விடுகணைகடுகினவுயிர்கொடுககனமேல். 16

பின்னையையணைபவன்விடுகணைபிளிறிடுகளிறுறுபெருநில
மன்னரையிரதமொடெதிர்வருவயவரைமணிமுடிகளைவுற
வென்னிடும்விருதர்களிவனொருவில்லொடுவிரல்செய்வதேதுவெனா
வுன்னினுமவர்சிறமறுமெனிலொன்னலரினியெங்ஙனுய்வகை. 17

பழுதகல்புகழ்புனைபரமன்வெம்பகைஞர்களெறிவுறவிடுகணை
விழிதனுளிலகியசெவிதனுள்யிடறிறவுடலறமிடையவங்
கிழிதருகுருதியொடெழுதசையினைநிணமுடையுறுகுடரொடுவெங்
கழுகுணுமுனமெழுமலகைகள்கடுகியபசியுடனுகருமால். 18

எழுமொலியுறுகடல்கடைபவனிடிகளும்வெருவுறவிடுகணை
முழுகுறவரசர்களுடலிடைமுடுகியகறைநதிபெருகவே
கழுகுதம்மிருகையிலுறுதசைகடுகியவிசைகொடுகவரவங்
கழுதிடுமெலகைகடொழுதனவவைதருமெனவுறுநகையினால். 19

கரிபரியிரதமுநிலமிசைகடவியகடுவிடமனையவர்
வரிசையின்முடிகவியரசர்கள்மடிவுறவடவரையதிர்வுற
வொருகணைமுடுகிடவுதவியவுலகுணுமிறைவிறலறிபவ
ரரியரியரியரியரியெனவமரர்களலர்மழைபொழியவே. 20

வாளினர்சிலையினர்சுரிகையர்மாவினர்தேரினர்வயமுறு
தோளினர்கரியினர்செறுனர்கடொடுகணையறவவருயிர்விடு
நாளுறவவர்சிரமறவுடனாலிருதிசையினுநணுகிட
வேளினையருளினன்விடுகணைமுடுகியககனமும்வெளியற. 21

சேடுடையரசர்கள்கறையடிதேரணிகுரகதநிரைகொடு
மூடினரரிகணைகடிதுறமூளைகள்விழமுடிசிதறவே
வீடினர்பலர்நிறைகுருதிகள்வேலையினயமொடுவிரவிட
வோடினர்சிலர்கரியனமுகினூர்பவர்மலர்மழையுதவவே. 22

வேறு.

ஆதியோனாகியவரிவிடுங்கணைகளே
மோதநீடிரதமாகரியின்மேல்முனைகுவார்
பீதியேயுறுதலாலெதிர்நிலார்பெரியதோ
ளுதையாலுவரியேகழிவபோலுடையவே. 23

கண்டனன்கண்ணுதற்கடவுளாலரியுருக்
கொண்டெழும்பெருமையான்கொடியவெஞ்சிலையினால்
விண்டலம்மறையவேவிசிகமாமழைபொழிந்
தண்டமும்விண்டதாமென்னவங்கார்த்தனன். 24

ஆர்த்துவந்தடர்பவுண்டரனெயுங்கணைகளைப்
பார்த்துவெண்வெரைவாழ்பரமன்வெண்ணகைசெய்தக்
கார்த்திரட்கணைகளாற்கடியவன்னுறமிசைப்
போர்த்தவெங்கவசமுஞ்சிலையிறுண்பொடிசெய்தான். 25

சிலையும்வெங்கவசமும்பொடிபடச்சீறியே
தொலைவில்முற்கரமழுச்சூலம்வேலெறியவே
யலைகடற்றுயிலுவோனவையறுத்தம்பினு
லிலகுபொற்றேரழித்திடலுமேயோடினன். 26

பவுண்டரப் படலம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம் - 4322.

---

## 73 - வது, சாலுவப் படலம்.

மாதவாகேசவாவாமனுவாசுதேவாமுகுந்தா
சீதராநாரணுதேவகீநந்தனுதேவதேவா
யாதவாவேறுவேறீசனுன்முகனுமாமிறைவவென்றே
யோதுவாரடியர்தம்மடியரேயெம்மையாளுடையராவார். 1

வேறு.

தேனுகாசுரனைவேவதைசெய்மாதிறலினு
லீனமேகிறைபவுண்டரனிடைக்தோடவே
யானைதேர்பரிகொடேயடலுறுஞ்சாலுவான்
சேனைநாலக்குரோணியுமுறச்சென்றனன். 2

துந்துமித்திரள்கணைப்பறைகளுந்துடிகைதேர்
வந்தெதிர்த்தசனியுமருளுமாவொலியெழச்
சிந்துரக்கரியினமிவுளிதேர்கிரையெலா
முந்துறப்பெருவிறலரசரேமுடுகினர். 3

சங்கமுங்கொம்புகாகளமுடன்றூரையு
மெங்குமேமிடையவார்கலியொலியென்னவே
மங்குநான்மக்கைபங்காளனுர்வருவபோற்
பொங்கினுரரசர்மாவாளியேபொழிகுவார். 4

பேரிமாமுரசுகும்பிபைகளும்பெரியதோ
ராரவாரஞ்செயவரசரேமுடுகினர்
தேரெலாங்கரியெலாம்பரியெலாந்திரளவே
காரெலாம்பொழிவபோற்கணைகளேசொரிகுவார். 5

ஒருதனித்தேரினன்சிலைகொடேயுலகெலாம்
வெருவுறக்கரிபரித்தேருளார்விறலெலா
மெரிவுறக்கணைவிடுத்தமர்செய்தானிவனையே
பொருதழித்திடுவெம்மெனுமுரைபுகலுவார். 6

கன்றினங்கொண்கொனேகுகன்வன்மத
மொன்றம்வெங்கரிபரித்தேருளாருருளவே
வென்றியுஞ்செய்திவன்மின்னொடேசெலுமெனில்
நன்றுநம்வீரனென்றுரைசெய்தேநகைசெய்வார். 7

குஞ்சரம்விஞ்சுநற்கொண்டல்போல்மிடையவே
வஞ்சகர்வெஞ்சிலையெய்யுமாமறிகடல்
நஞ்சுமஞ்சுங்கணைத்திரள்களேநலனுற
மஞ்சனக்கிரியனைனிரதமேலடரவே 8

மண்கிளைத்தெழுமனேரனைவரும்வளைவிற
லெண்களிற்பெரியமாகணைகளேயெய்தனர்
பெண்களிற்றிலதமாகியபெருந்திருவனுன்
கண்களிப்புறுநலக்கணவனுங்கடவுள்மேல். 9

நோய்மடுத்தனையவெஞ்சினமுடைநொய்யவர்
வாய்மடுத்திருகணுங்கனலவேவாளிகள்
தீமடுத்தெனவிலார்செலவிடுத்தார்கரி
யோய்மடுத்துறையில்வந்துதவுகாருருவன்மேல். 10

வேறு.

ஆசைதோறுமானைதேர்களாடல்மாவுமாளுடன்
வாசுதேவகாவெனுவளைந்துவாரிபோலவே
யீசனேமிவானமாழியீயும்வெம்படைக்கலம்
வீசினர்கடேவர்கூசமீளிபோனும்வீரரே. 11

ஆலகாலமாகவந்தடர்ந்துநின்றவாடவர்
வேலும்வாளும்வலையநேமிவிஞ்சுமாமழுக்கழுச்
சூலமாமுசுண்டிமுற்கரங்கள்சூழவீசியே
காலமாரிபோலவாளியெங்கணுங்கடாவினர். 12

எறிந்தவேல்கள்வாளியெய்தடர்த்தவீரரெங்கணு
முறிந்துபீதியோடுமோடமூரியானைமாவெலாந்
தறிந்துபார்மறிந்துதேர்தகர்ந்தொடிந்துசாயவே
பறிந்தபோதுவாளியெங்குமெய்தனன்பராபரன். 13

சுற்றம்வந்தடர்ந்துநெஞ்சழன்றசூழியானைகொண்
டெற்றமெற்றவீரர்தேர்களோடுசோருமிவுளிகள்
முற்றமுற்றறத்துவானின்முடுகுமாமுடித்தலை
பற்றியுற்றவாளியண்டம்விண்டுறப்பரந்ததே. 14

கரந்துணிந்தவாறுணிந்தகாறுணிந்தகுஞ்சரங்
குரந்துணிந்தவோடுமோவினங்கள்வீரர்கோலியே
சரந்துணிந்தமார்பினோடுதாடுணிந்தமாமுடிச்
சிரந்துணிந்தவாழிமீதிலுதிரவாரிசேரவே. 15

குஞ்சரங்கள்விஞ்சுதேர்கள்சூழவேகொதித்துநீள்
வெஞ்சரங்களெய்துவேலடர்த்தெதிர்ந்தவீராம்
வஞ்சரங்கமேபிளந்துபோகவாளியெய்தனன்
சஞ்சரங்கமங்கமார்பிலேமிதித்தசால்வனன். 16

ஏறுநூறுகோடியானைதேர்கொடேகிவீரமு
மேறவேறுனேறுபோலவேயெதிர்ந்தவீரர்வா
னேறவாறெனச்சிவந்தசோரிவேலையெய்திடப்
பாறினேகெளினாளியெங்கணும்பரந்தவே. 17

ஆடல்மாவுமோடுதேருமாடகக்கிரிக்குநே
ரோடையானைசூழவேயுருத்தெழுந்துமேவிய
கோடைமாரிபோலவாளிகோடிமேலுமெய்தவர்
வீடவெஞ்சரங்களெங்குமிடையமாயன்வீசினன். 18

ஆலநீளிலைக்கிடந்தவாதிவேவும்வாளியாற்
றேலனேகமிவுளிபன்னுசூரரெங்குமிடையவே
காலனேர்செய்சாலுவன்னடர்ந்துநெஞ்சுதகமுற
வேலையேழுமறையவாசுகங்கள்வில்லின்வீசினன். 19

சாலவேமுனிந்துசாலுவன்விடுத்தசரமெலா
மாலுமாறுவாளியால்விலக்கிமற்றவன்றன்மே
னாலுகோலழுத்தலோடினன்றுநன்றுநன்றெனச்
சூலமேதுரக்கமாயன்வாளியெய்துதுணிசெய்தான். 20

சீறிமேவுசாலுவன்சகத்துளோர்நடுங்கவே
பேறதேதரன்படைதொடுப்பவீசன்வாளியால்
றூறிறாறுவாளியால்வில்லிரதமுந்துறுக்கினன்
மாறில்மாயன்வென்றிகண்டமறவன்மண்ணிலோடினன். 21

சாலுவப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 4343.

## 74-வது, தந்தவக்கிரப் படலம்.

ஒருவைவேந்தர்க்குயர்பதமீந்தவன்
பொருதவீரப்புகழைச்செவியினற்
பருகுவாரடியாரடிபற்றுவார்
கருவிலேதிருவுற்றவர்காண்மினே. 1

நந்தனன்மகனாகியநாரணன்
சிந்துவெங்கணையாற்கரிதேரிற
நொந்துசாலுவன்வென்னிடநோக்கிய
தந்தவக்கிரன்வந்துதடுத்தனன். 2

ஒருவன்கைத்தமர்செய்திடவோடியே
வெருவியிம்பரில்வீழ்ந்துதியங்கினீர்
செருவின்வன்றிறல்கன்றெனத்தேரின்மே
லருளில்நெஞ்சினனேறியடர்ந்தன. 3

எரிந்தநாட்டனெழில்வடநாகம்போற்
றெரிந்தவாக்கையன்றேர்கரிசூழ்ந்திட
விரிந்தமன்னரைநோக்கியிகழ்பவன்
விரிந்தநீர்க்கடல்போலவெகுண்டுளான். 4

ஆகுமாறறியாதிங்ஙனைசையா
லோகையோடும்முருவொருதேரின்மேற்
பாகுலாமொழிப்பாவையைக்கொண்டுநீ
யேகலாதுநில்லென்றியம்பினான். 5

ஒல்லையிற்செல்கரியினமோங்குதேர்
சில்லுளைப்பரியின்றிரள்சென்றிடப்
பல்லியங்கரங்கப்படைமன்னர்கள்
வல்லியங்கொதித்தாலென்னவந்தனர். 6

பார்த்தபார்த்ததிசைதொறும்பாய்பரி
சேர்த்ததேரொடுவீரர்கள்செல்லவெங்
கார்த்தவேசையினார்கலிருண்டின
தூர்த்ததூளிவிசும்பினைச்சூழவே. 7

கரிகளும்மொருகோடிசதித்ததேர்
நிரைகளும்மொருகோடிநிறைந்தெழு
பரிகள்மும்மடிவீரர்பதின்மடங்
குறைசெயுந்தொகைமூன்றக்குரோணியே. 8

களிக்குமும்மதப்பூட்கைகள்காரின
மொளிக்கவிஞ்சுங்கொடியுடைத்தேர்களும்
வெளிக்கிடம்மிலதாயெங்குமேவவே
வளைத்தனன்றந்தவக்கிரமன்னவன். 9

வேறு.

கடவுதேர்பரிகள்கரிகள்வீரர்பலமிடைவகண்டுகருணாகரன்
இடிகளோடவுறுசிலையினாணொலியெழுப்பிவாள்வளைமுழக்கிமா
முடிகளோடுமுடிமிடயவான்முட்டிமுகிலினோடளவிநிலன்விழ
விடவராவெனநிமிர்ந்தவெங்கணைகள்வேலையுஞ்சுவறவீசினான். 10

அந்ததேர்கள்படிபொடியதாயுதிரவாளைவீரரணிமாவொடு
மிற்றுநின்றமலைபோல்விழுந்தருளவெண்டிசாமுகமுமெரியவே
பற்றலாரையுயிர்பருகிவானிடையொழிக்குமாவிசைகொள்பகழிசென்
றற்றபூவலமதிரவிழ்க்குருதியுவரிபோல்முடுகியோடவே. 11

எழுந்தமாகரிகளிரதமா துரகம்யாவுமோர்நொடியின் முன்னரின்
விழுந்துபாரிடைபுருண்டுவீரர்கிலைவாளியோமெறவீரமு
மழிந்துமாமுடியினங்கள்வானுறவடர்த்தனன்கரியவஞ்சனக் [தரோ
கொழுந்துபோலொளிருமாயன்வெஞ்சிலை கொடேகொடுங்கணைபொழி

குஞ்சரங்கள்பதினாயிரங்களுயர்கொண்டல்கீழ்விழுவகொள்கைபோல்
வெஞ்சரங்களின்மடிந்ததேர்களணியெண்ணிலாதகனல்மேவிடும்
பஞ்சுமங்கியதெனப்பொரிந்ததுபசுந்தசைக்குருதிபாறிட
வஞ்சியெங்கணுமிடைந்துபாரினர்களரசர்கூளிகளுமாடவே. 13

கன்றினால்விளவெறிந்தசோதிவிடுகணைகளாலிரதபரிகரி
பொன்றவீரர்கள்மடிந்தசெங்குருதிபுணரியிற்கடிதுபோய்விழ
வென்றவாதினிலைகண்டுகெண்கனலவில்லின்வல்லவிறல்வீரன்மு
னன்றிதாமெனமொழிந்தனன்றந்தவக்கிரனவைகொணெஞ்சினன். 14

சிறினனிருகணுஞ்சிவப்புறவெதிர்த்துவெஞ்சிலைகுனித்துநா
னூறுமாயிரமுமாகமாதிரமும்வானமும்மறையநொடியினி
லேறதேறுமரனஞ்சவெய்தசரம்யாவும்வீழவொருவாளியால்
வேறுருவகையறுத்தனன்கடலின்மேவுமாதுவரைவீரனே. 15

அழறுநெஞ்சினனடர்ந்துவந்தெதிருமாலமென்னவனவின்படை
சுழலுமெண்டிசைதுலங்கவேலையலைசுவறவில்விடைதுரந்திடக்
குழல்கொடுதுமிறைவருணன்வெங்கணை கொடேயறுத்தவிர்கொள்கொ
கழலவெங்கவசமார்பினூடுருவவேகவாளிகள்கடாவினான். [டிகொடேர்

விரியுமாலவரையினருவிவீழ்வதெனவெய்யவன்கனகமார்பினிற்
சொரியவெங்குருதிவிடவராவெனமுனிந்துதோமரமுலக்கைவா
ளெரியைநேரெனவெறிந்திடக்கருணையாலுயர்ந்தினையிலாதவா
ளரியும்வாளியொருநூறுகொண்டவையறுத்தனன்கொடியனஞ்சவே. 17

அல்லினைப்பொருவுநெஞ்சன்வெஞ்சரமனேகமெய்திடலுமற்றவன்
வில்லினைக்கணையிரண்டுகொண்டுபலகண்டமாகிவிழவேயறுத்
தொல்லையிற்பரிகளும்மடிந்தொளிகொடேரழித்திடலுமுன்பகர்
சொல்லிறக்கடிதுதரணிமேல்வெருவியோடினனமரர்துள்ளவே. 18

தந்தவக்கிரனுடைந்துவாய்குருதிவிழநீடலரயிலோடவே
யுந்துமுக்கிரநெடுங்கணைப்படவுருண்டமாகரிகளுலவுதேர்
வெந்திறற்பரிகளும்படக்கரியவேலைபோல்விரியும்வீரர்தா
முந்திமைக்கிரிகள்போலவெண்டிசைபரந்துபாறினர்கள்முடுகியே. 19

தந்தவக்கிரப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - 4362.

---

# 75-வது, மகதராசப் படலம்.

நாராயணனான்முகனைத்தருவோன்
பாரோரடியுள்ளுறநீள்பரமன்
பேராயிரமெய்தியபீடுடையோன்
ஆராவமுதன்னடியேதொழுவாம். 1

கரிதேர்பரிவீரர்கள்காளிலுறு
மரிநேர்படுகுஞ்சரமாவெனவே
யரிவோர்களையஞ்சன்மினஞ்சன்மினென்
றுரையாவுறுமேறெனவந்துறுவான். 2

அதிரும்முரிடேரினடர்ந்தெழுவான்
கதிரின்சுடரானகலனாற
வெதிருங்கரிபோலெழுவானுவெ
முதிரும்மெனவாய்விடுமோசையினால். 3

அலையேறுகருங்கடலாமெனநீள்
மலையேநிகரானைகளும்வளையச்
சிலையேறுகையானவைசேரவுறும்
புலையேநிலையாகியபுந்தியினான். 4

கராநொந்திடவேகரியுய்ந்திடமுன்
விராதன்படவென்றருள்வீரியனை
யராவின்சினமென்னவடர்ந்தனனாற்
சராசந்தனெனும்பெயர்தானடைவான். 5

முரசம்முகிலென்னமுழங்கியிடச்
சுரர்தம்பதிவெண்கொடிதுன்னியுற
விரையுங்கடல்போல்வளையோசையெழ
வரசன்மகதன்கடிதின்னடைவான். 6

மன்னன்மகதன்வரமாகரியுந்
துன்றும்பரிதேர்நிரைசூழவர
மின்றும்படைவீரர்களித்தெழநற்
சின்னம்பலவோசைசிறந்தனவால். 7

கரிகோடிகவித்திடுதேரினிரை
யிருகோடியவற்றினிரட்டியமா
வுரைநேர்தொகையொன்பதக்குரோணியுடன்
செருநேர்மகதன்னெதிர்சென்றனனால். 8

நில்லெங்கினியேகுதிநீயிடையா
மல்லின்றிரடோளன்விதர்ப்பன்மக

ளல்லென்குழலாடனைவிட்டகலென்
வில்லின்கணைநின்னுடல்மேவுமுனே. 9

இடைந்தேவரையுட்புகயானிடுநீப்
படர்ந்தேயெரியுற்றிடநீபரவை
யடைந்தேயுயிருப்பந்திமோன்மையிலாய்
கடந்தேகலைநில்லெனவேகழறி. 10

சிலைநாணொலியேழுலகுஞ்செலவே
கொலைவாளிகள்கொண்டுறுகோளரிபோ
லலைசூழ்புவியஞ்சிடவந்தனனால்
மலைபோலெழுமாகதமன்னவனே. 11

படைவீரர்கடேர்கரிபாய்பரிமா
கடலாமெனவேவளையக்கடிய
வடல்மாகதன்வந்ததுகண்டனனூர்
குடமாடியுவந்தருள்கோவலனே. 12

சிலைகால்வளையச்சிறுநாணொளிதா
னுலகேழினுமெய்திடவோதியர்தம்
கலைவாரியகைகொடுகார்முகில்போற்
கொலைவாளிகளெண்ணிருகோடியெய்தான். 13

விடமாமெனவேவருவெங்கணையாத்
கடமாகரிபாய்பரிகால்களற
வுடல்சோரவுருண்டுவிழுந்தனரா
லடர்வீரர்கடேர்சிலையற்றிடவே. 14

கரியற்றனதேர்நிறையற்றகடும்
பரியற்றனபல்படைவீரர்கடம்
சிரமற்றனமுந்தியசெம்புனலூர்
தரையுற்றதரங்கமெழுந்துறவே. 15

காலற்றனவீரர்கரங்களற
வேலற்றனவில்லினமற்றனநீள்
வாலற்றனமாகரியற்றனவா
லாலிற்றுயில்வான்விடுமம்பதனால். 16

நூறாயிரமாகரிதேர்கொடியி
னீறாயிடவேநிமிர்வெங்கணையாற்
சேறாயுறுசெம்பிசிதக்குருதி
யாறாயலைவேலையடைந்தனவால். 17

எரிந்தோடினவாளியிகற்பரியை
யரிந்தோடினவாடவரஞ்சநிலத்
திரிந்தோடினவெங்கரகோடிறவே
விரிந்தோடினதூய்மைகொள்வெண்டரளம். 18

ஒருதேரினனுமெனவேயுளமுங்
கருகாவெதிரிற்பொருகாவலர்தா
மருளாரரவிந்தவிலோசனன்விற்
சரமாரியினாலுருள்வார்தரைமேல். 19

ஐயன்கணைபொன்றினிலானைகளம்
பெய்யுஞ்சிலைவீரர்களெண்ணிலர்தங்
கையும்முடலுங்கொடிறுங்கழல்வ
ருய்யுந்திறமெங்ஙனமொன்னலரே. 20

வடவைக்கனலாமெனும்வாளிகள்மே
லடையப்பரிதேர்கரியாடவருங்
கடையப்பவோரிகலங்கியபோ
லடையக்கனல்மாகதனுற்றனனே. 21

வேறு.

வென்றிகண்டசிலைவல்லவீரமதுநன்றுநன்றெனவிளம்பியே
குன்றநின்றெனவுயர்ந்தகோளரியெழுந்துமேல்வருவகொள்கைபோற்
கன்றநெஞ்சனிறுநயனமுங்கனல்கொளுந்திடக்ககனமறுகுற
வென்றின்மேல்வருமராவெனக்கடிதெதிர்ந்தனன்மகதனென்பவன். 22

எதிர்ந்துவெஞ்சிலைகொடெய்யும்வாழியெழுநூறுமாயிரமுமேவிவா
னதிர்ந்துபெய்யுமுகிலாமெனக்குவலயங்களாசையொடுமறையவே
முதிர்ந்தெழுந்தவடவன்னிமூவுலகுமூடுமோறெனமுடுக்கியே
யுதிர்ந்துவிண்ணுடுவும்வீழுமென்னவொளிர்சங்கமுந்திகழவூதினான். 23

சங்கமூதியடர்மாகதன்விடுசரங்களானவைதுணிந்திட
வெங்கணானையிருகோடிறத்தருளும்வீரியக்குரிசில்தேவகீ
சிங்கம்வாளிமழையேவவேயெரிபரந்தவானினொடுதிசையெலாம்
பொங்குவேலையலைநீர்வறந்துதிடரானபல்விவுளிபுரளவே. 24

கூற்றினுருவிருண்வாளிபோலெரிபரந்துதேர்குரகதங்களுந்
தூற்றுதூளியெனவேமடிந்தசெயல்கண்டுமாமகதனுந்தொடர்
காற்றினீள்படைதொடுத்தனன்வடிவினாலுயர்ந்தகருணாகரன்
மாற்றினானவையிமைப்பின்வானினுறவாயுவின்படைவழங்கியே. 25

சூரியன்படைதொடுத்தனன்மகதராசனென்றுமமர்சோர்விலா
வாரியன்சிலைகுனித்துவன்னியுறுமம்பினாலவையறுத்தன
னீரமில்லவனும்வெஞ்சினத்தினொடுதண்டுகொண்டுகையெறிந்தனன்
வீரனங்கதையுதிர்ந்துபோகவொருவாளியேகொடுவில்க்கினான். 26

ஆலமாமெனவழன்றுமாமகதராசனார்கலிகலங்கிடச்
சூலமேல்விடுதலோடுமெங்கதுசுழன்றமூவுலகுமதிரவெங்
காலனாகிவருதன்மைகண்டெதிரேலவெந்துமொருகணையினாற்
பாலனாகிமுனமாலின்மேலமருமாயனுண்பொடிபடுத்தினான். 27

நெஞ்சழன்றுமுனிவோடெரின்றுநெறியில்லவன்விழிநெருப்பெழ
நஞ்சமென்னவெழுவாளிமாமழைதுரந்தனன்கதிர்நடுங்கவே
விஞ்சமுன்னம்வருபகழிமாரியறவெய்யசாயகம்விடுத்தரி
வஞ்சன்வெஞ்சிலையறுத்துமார்பினிடைநூறுபல்லமுமடுத்தனன். 28

மார்பினேவுகணைகலசமூடுருவிவானினெய்தமழையேலவே
பாரினோடவுறுகுருதிவாயுமிழுமகதனேறியபதாகைசேர்
தேரினோடுருளையறவுயர்ந்தகொடிகடலில்வீழவுயர்திசைகளி
னாருமாவலவன்மடிவுறக்கணைகளேவினானுலகுணேமியான். 29

தேரிழந்துசிலைதானிழந்துதிரவாரிவாயுமிழுநீயவன்
பாரிழந்தவிர்கொள்சேடகங்கடுபற்றிநின்றொளிகொள்பங்கய
னாரழிந்ததெனவாயினோசையுறவுற்றெதிர்ந்தரியைவாளியாற்
போரழிந்திருகைபடைகளுந்துணியவோடினான்மகதபூபனே. 30

ஓடினான்மகதராஜன்மாவினணியோடுதேரிலுறவீரர்தாம்
வீடவீழ்குருதியோடிநீடுகொடிமிடையவேலையிடையடையவே
சாடினானுரலுமுருளவேதவழுமாதிவில்லுமிழ்சரங்களா
லாடினார்கள்மறைமொழியும்வானவர்களந்தரத்தின்மலர்தூவியே. 31

மகதராசப் படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - 4393.

---

## 76-வது, சிசுபாலப்படலம்.

சீதரன்புருடவுத்தமன்றிகிரிகோடுகொண்டுதிகழ்செங்கையான்
மாதவனிருடிகேசன்மாயவன்முராரிபற்குனன்மகிழ்ந்திடக்
கீதையன்றுரைசெய்சூதன்மாமழைதடுக்கவேகிரிகொள்கேசவன்
யாதவன்புகழறைந்துவாழுமடியார்களெங்களிறைகாணுமே. 1

தெண்டிரைக்கடலுடைந்ததாகுமெனவேயுயர்ந்தகரிதேர்பரி
யெண்டிசைக்கணிடையோடவீரர்களிறந்துநொந்தலறியேகுவ
கண்டனற்கொளுவுகண்ணன்வன்றிறல்பிறங்குகம்பமதயானைமேல்
மண்டலத்திலுறுமன்னர்சூழமணிமன்னுமாவிரதமேறினான். 2

சூலமுற்கரமுசுண்டிநேமிபரிகங்கடோமரமுலக்கைவாள்
வேலெழுக்கணையமங்குசங்குலிசயிக்கபாசம்வலையங்கள்முட்
கோலடற்கதைமழுக்கள்குந்தமொளிர்பிண்டிபாலமயில்கொண்டெழுந்
தாலமென்னவருவீரரெண்ணிலர்களாசைதோறுநிலனடையவே. 3

முரசுபேரியொலிதிமிலைசச்சரிமுழங்குதக்கைகணெருங்கிட
வரிசையாலுயருமணிகொடேர்களொருகோடிமண்மிசைவயங்கிடப்
புரசையானையிருகோடிமற்றதனிரட்டியொல்லைவருபுரவிகள்
கரைசெயாதகடல்மணலின்மும்மடிகணக்கில்வீரர்கள்கலித்தெழ. 4

இன்னதாமிரதசாதரங்காலக்குரோணிதொகையெட்டுடன்
மின்னும்வாளினர்கள்சூழவாழிபெழும்வெய்யவன்னெனவிளங்கியே
மன்னர்கோனதிரதர்க்குள்முந்தியுறசேதிராசனெனும்வலியின
னுன்னுபோதின்முனுடைந்தசேனைகளையஞ்சலஞ்சலெனவுற்றனன். 5

விடையினண்ணிவருபுனிதனுகவுயர்விண்ணவர்க்கிறைவனுருக
வடல்முனைத்தொழில்கொள்சிலையினுந்திவிடுமெம்பின்மாரியெதிருற்றபே
ருடைவதல்லதொருநொடியுநிற்கிலர்களும்பர்தாமஃதுணர்ந்துளா
ரிடையனென்னெதிரினிற்கைநன்றெனநகைத்தனன்னெரிபிறக்கவே.

வில்லுநன்மழுவும்நேமியும்மிடையவிஞ்சுதேரின்மிசைவீரர்கள்
செல்லும்வெங்கரிகள்கொண்டுமென்னர்கடிரண்டுமெண்ணின்மிசைசீறியே
மல்லலம்புயனைவந்துசுற்றிடமடித்தவாயனல்பிறந்திட
நில்லுநில்லெனவடர்ந்தனன்கொடியனீசனானசிசுபாலனே. 7

வேறு.

சேதிராசன்கடகரிபரித்தேருடன்வீரர்சேரப்
போதன்வானுளியேறீசன்வானவர்களும்பொருமுநெஞ்ச
ரீதெனுவெனுமுனம்யாதவன்சிலையுறம்வாளியெய்தே
மோதினுனிரதமீதரசருந்துரகமும்முடியவேதான். 8

ஆளின்மேலிரதமேலானைமேல்மாவின்மேலரசர்மேலொண்
வாளின்மேல்வேலின்மேல்தேரின்மேல்வயவர்தம்மார்பின்மேலுந்
தோளின்மேல்வடணமேல்விரலின்மேலிலகியதுடையின்மேலுந்
தாளின்மேல்முடியின்மேலளவிலாதானசாயகம்விடுத்தான். 9

கொடியறக்கரியினங்கோடிறத்தேரறக்குரகதத்தின்
அடியறப்பாகர்தந்தலையறச்சுடர்விடுமணியினம்பொன்
முடியறத்தோளறக்குருதியும்மூளையுந்தசையுமென்பும்
படியுறக்காகமுங்கூளியும்ஞமலியும்பரவுமாதோ. 10

குண்டலக்காதொடுமுறமுடித்தலைகளுமெண்ணில்கோடி
மண்டலக்கதிரவன்வானிறைந்தென்னமாவிசையினேடும்
விண்டலத்தெழுவகீழ்விழுவமாவிசயமான்விசிகமாய
முண்டகக்கைகளிட்டாமெம்மானைபோல்முடுகுமம்மா. 11

மூளும்வெங்கரிகளும்பரிகளும்மரசரும்முடியாளுங்
கூளியுஞாளியுமிகலனுமெருமையுக்குடர்பிடுங்கி
மூளையுந்தசைகளும்நுகரவீழ்குருதியால்முடுகியோடக்
காளியுங்கையெடுத்தாடினுள்கண்ணனுர்புகழ்கள்பாடி. 12

கையறுங்கோடறுங்காலறுஞ்சிரமறுங்கரிகள்வீரர்
மெய்யறும்மார்பறும்வில்லறுங்கரமறுமிளிர்வகண்ணின்
மையறுங்காதறும்வயிறறுங்குருதியுமண்டுமண்மேற்
பொய்யறும்புனிதனுர்பல்லவமெங்கணும்பொழியுமாதோ. 13

நூறுநூறுயிரங்கரிபரித்தேர்களும்நொடியின்முன்னர்
நீறுநீறாய்விழும்நீமொலாழியோன்றேகமண்ணின்
மாறுமாறுமெனப்பரவையின்வீழும்வெங்குருதிவெள்ள
மீறுறுதிறைவனார்சரமுனேரடையலார்வீழ்ந்தமன்னர். 14

துணியுமோர்கையினுங்கொம்பினுங்குருதியுந்தூயபத்திர
மணியுமேபரவநீள்கரியவைமதிதிறக்கும்பியாரத்
தணியுமாதுகிர்களும்புனிதமார்மணிகளுஞ்சாரநீக்கும்
வணிகர்போலொத்தமால்வாளியாலரியுணுமதகயங்கள். 15

மூடினார்தேர்களுங்கரிகளும்பரிகளுமுடுகிமன்னர்
வீடினார்வேலைநுண்மணலினும்பலரதைக்காணும்வீரர்
ஓடினார்வாடிநாவுலரவீழ்குருதியைப்பருகியூர்போய்த்
தேடினார்தாமிருந்துறையுமாமனையினைத்தெரிகிலாதார். 16

திக்கெலாமோடுவார்சிதறியூர்தேடுவார்மனைபுகுந்து
மக்களோடறைகுவார்கண்ணனாராசுகம்வந்ததென்றே
கக்குவாருதிரநீர்மனைவியுமலறவெங்காலனாரும்
பக்கமாய்வந்துயிர்பருகிடத்தனுவுமப்படியின்வீழ்வார். 17

வேலையேழுக்கிழிந்தோடமொறெனவருதினிமெலிந்தே
யாலமேவிடுமொநாளமரர்போலாகுலித்தலறியோட
மாலினார்சிலையிலவ்வூழியினீர்த்தறைபெய்யவானம்
போலவேழ்கடல்வரைப்புவிதிசையெங்கணும்பொழியும்வாளி. 18

கண்டுகெண்கனலெழச்சேதிபன்கடுமையிற்கடவுதேரி
னண்டரும்வெருவுறச்சிலையினொலியுறவலைகொள்வேலை
மொண்டுமைம்முகில்சொரிந்தாலெனப்பகழிமேல்முடுகியேவி
விண்டலம்விண்டதாமென்னவாயூதினன்சங்கம்வீரன். 19

மாதிரமெவைகளுமறுகிடச்சேதிபன்வருதல்கண்டான்
சீதரன்சிகையெழுஞ்சுடர்சிலீமுகவிலிற்சிதறியெங்கும்
பாதகன்விடுசுடர்க்கணைகளற்றுவரியிற்படியவெய்தே
யூதினன்சங்கமெவ்வுலகினுந்திசையினுமொலிமலிப்ப. 20

நன்றுநீள்வில்லின்வல்லாண்மையென்றவனுமென்னகையுமெய்த
வென்றிசெய்குவனிவைகாணெனவெஞ்சினம்பெருகமேவுங்
கன்றுமேடவிசேர்கள்வகாவென்றுரைகழறியம்பொற்
குன்றுமண்குலைவுறக்கொடுமைசேர்நாகபாணங்கொடெய்தான். 21

அருளிலான்விடுமணிப்பஃறலைத்துத்திவாளரவம்வாயிற்
றிரளுமாவிடமுறச்செகதலங்குலைவுறச்சேர்தல்கண்டான்
மருளெலாமகலவாழ்த்தினர்மனத்துறையுமால்வயினதேவன்
பொருளுலாவும்படைச்செல்விடப்பனிபெலாம்பொடியதான. 22

விடவராமடிவுறச்சேதிராசன்சினம்விளையவில்லா
விடபமூரிறைவனற்படையெடுத்தானுறவெய்தலோடுங்
கடலெலாமலையவெண்டிசையெலாங்குலையவெங்கனலெழுந்து
மிடையமாபூசமுஞ்சூலமுமாவமும்வேலுமாகி. 23

இறுதியிற்சங்கரித்திடுமெரன்படைவரப்பொதுவரில்வி
னுறிதனிற்றயிரெடுத்துண்டவன்கண்டுமாபதியினம்பு
முறமையிற்கடவிடப்பரிதியின்சுடர்கெடக்கடிதின்முந்தி
யறனிலக்கொடுமையன்விடுபடைக்கலமறுத்தவனிபுக்க. 24

கண்டனன்பிஞ்ஞகன்கணையறச்சேதிபன்கனலுநெஞ்ச
னண்டமெண்வரைகடலகிலமோடுண்டருளாதிதன்மேற்
றண்டுகொண்டெறிதலும்கைசெய்தேசக்கரபாணிநீளு
முண்டகத்தெழுமுகைப்பல்லவமுடுகவக்கதைமுறிந்த. 25

கதையறக்கதமுறுஞ்சேதிபன்கனலவன்படையைவாங்கி
யிதுதடுத்திடுதியன்றெய்யமாலென்றின்மந்திரமியம்பிக்
கதிருறக்கடவுவெம்படைவருஞ்சாமறக்கயவன்மார்பிற்
புதைவுரக்கவசமும்பொடிபடக்கடலிடைப்புக்கதம்மா. 26

மார்பினிற்கவசம்நீறுகிடக்குருதிமால்வரையின்மீது
நீரெனப்பெருகவும்நேரிலானெய்திடநிறையும்வாளி
யோரிமைப்பதன்முனேமூலகெலாமூடமுன்கனலையுண்ட
வாரியக்குரிசிலோர்பகழியாலம்பொடுஞ்சிலையறுத்தான். 27

வில்லறக்கொடியவன்மழுவெழுத்தண்டுவாள்முசலம்வேலோ
டெல்லுறச்செல்லும்விட்டேருகுந்தங்கைகொண்டெரிதலோடு
மல்லிறக்கதிர்வருஞ்செயவெனக்கணைதொடுத்தவையறுத்தே
யொல்லையிற்கடியவன்மணியுறுமவுலிமுன்னுதிரவெய்தான். 28

மகுடமுன்பொடிபடக்கதமுறுஞ்சேதிபன்மணியுடைத்தேர்
சகடொடும்பரியறக்கொடியறப்பாகன்வன்றலைவிண்மீதின்
முகடொடுமௌவிலாமுகிலுடன்கெழுமிமண்முடுகிவீழப்
பகடொடுங்கஞ்சனைக்கொன்றமால்பகழிமாமாரியெய்தான். 29

மூளும்வெஞ்செருவினிலிரதமாவறவெய்யமுனிவினோடும்
வாளிலங்கிடவருஞ்சேதிபன்வெருவமால்வரிவில்வாங்கித்
தோளினுமார்பினுங்கையினுமெய்யினுந்தொடையின்மீதுந்
தாளினுமளவில்வெங்கணையெய்தானவனிலந்தன்னில்வீழ்ந்தான். 30

ஆறுபாய்வனவெனக்குருதிவாயொழுகுசேதிபனயர்ந்து
தேறினான்மனதினிற்பீதியுற்றிடவெதிர்சிறிதுநில்லாப்
யாறினான்கண்டகுண்டினபுரிப்பாவைபண்மொழியுடைத்தே
ளுறுபூங்குழலினாணினமானுவகையானகைசெய்தாளால். 31

அடலுறஞ்சேதிபனுடலெலாஞ்செம்புநீருவிவீழ
மிடலழிந்தோடலுங்கரிகள்மாதேருடன்வீரரெல்லாங்
குடரணித்தசையெலாங்குவைசெய்தேயோடுசெங்குருதியான
கடல்கடந்தோடினர்சிலரதின்மூழ்கினராவிகாணர். 32

சிசுபாலப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 4425.

## 77 - வது, உருக்குமன் அபசெயப் படலம்.

இரணியனுரம்வகிர்ந்துமற்றவனெழிற்சுதற்கரசளித்துமா
முரணிலங்கைமன்னுவிகொண்டெழில்கொள்வீடணற்குமுடிசூட்டியே
யரவுயர்த்ததுரியோதனனனுசர்கிளைஞருமமரின்வீயவே
தருமனுக்குநிலமருளுமாயனிருசரணமென்னவினைதகருமே. 1

தந்தவக்கிரமன்மகதன்வெங்கொடியசாலுவனுயர்பவுண்டரன்
சிந்தியெண்டிசையுமோடவோடிவருசேதிபன்செயல்கள்கண்டனன்
அந்தகற்கும்வலிமிக்கவாண்மையன்விதற்பராசன்மகளானதேன்
சுந்தரிக்குமுனம்வந்தமன்னவனுருக்குமன்னமர்தொடர்ந்துளான். 2

வீரரானவர்களமரினேடும்விஜைநன்றுநன்றெனவிளம்பியோர்
தேரினேறியெழில்கவசமார்பினிடைசேரநீடுசிலைவளைவுறக்
காரும்வானமுநடுங்கவேழ்கடல்கலங்கிடக்கனகசிகரமும்
பாரினோடலையவாணெறிந்தொலிபரந்திடப்பணிலமூதினன். 3

பேரிமாமுரசுபம்பைகும்பிகைகடிமிலைபீடுடையவுறுமியுந்
தாரைகாகளமிலங்குசின்னமலிசங்குகொம்பினுடனெறிமணி
வாரியாகுமெனவெண்டிசைக்கணுமுழக்கமாழையுறவையமேற்
காரினேடலைவிமணிகள்மின்னவொளிர்கனகநீடுகொடியிலகவே. 4

வீசுசாமரைகளுயரவெண்மதிநிகர்த்தவெண்குடைவிளங்கிட
மாசிலாதமணிவயிரமாரமுறவெழில்கொள்மாமகுடமொளிரவே
பூசுரேசருயராசிகூறவிருபுடையுமன்னர்கள்பொலிந்திட
வாசையோலெகுமஞ்சவிஞ்சியவனீகமாக்கடலடர்ந்தெழ. 5

சீறுமாகரிகணாறுகோடிவிடுதேர்களுமதனிரட்டியே
மாறில்மாவுமதின்மும்மடங்குவயவீரரென்னிலர்வயங்கிட
ஆறும்வாரிதியெனப்பரந்தபடையோன்பதாயவக்குரோணிகொண்
டேறதேறுமரனஞ்சவஞ்சகனெரிந்தகண்ணினனெதிர்ந்தனன். 6

கரிகள்காரெனநிறைந்தெழுந்தவுயர்கனகமன்னுமணியொளிகொடேர்
விரியும்வானமிசைதிகழ்விமானநிரையேயமர்நிலம்விளங்கிடப்
பரிகள்மேவுதிரையாறுபோலவருபடைஞரும்பரவையேலவே
தரணிமீதிலுறவெய்துவார்களரிதன்னைமின்னினொடுகண்டனர். 7

வேறு.

அரிதனொடுமுடுகியடலின்முனைபவர்க
ளிரதகசதுரகமிலகவெறிகடல்கள்
வருதகமையெனவுமரசர்வரிவில்கொடு
துரிதமனதினர்கள்கணைகள்சொரிபவரே. 8

புகையினகையினர்கள்பொறிகளுகும்விழியர்
ககனமதிரவொலிகரியின்மிசையிலகு
மிகலர்சுரிகைகளொடெழுவுமெறிமவர்
திகிரிதிகழ்கரனைமுடுகுதிறலினரே. 9

துடிகளுறுமிபறைமுரசுதொகையிலக
விடிகள்வெருவவடிபடுவதுவனியுறு
மிடையும்விறலினர்கள்வெடுவெடெனுமொழியர்
கொடியரிரதமிசைகுலவுகொடியினரே. 10

சூலம்வலையமழுவாள்கள்கதைசுரிகை
வேல்கள்குலிசமெழுநீடுகணையும்விடு
கோல்களுடனெறிவர்கோவுளமர்பவனை
காலமெனவடர்வர்தேரினதிரதரே. 11

வெய்யவயவர்சிலைகுனியவிசிகமழை
பெய்வருலகயனொடுதெவுபெரியவனை
வைவர்கினமலியவனசமலரினுறை
தையறனைவிடுதியென்றுதகைபவரே. 12

கொடிகளிடையுடையகமலம்வருகுயிலை
விடுதிவிடுதியெனவுரைசெய்விறலினர்கள்
கடியகடலைநுகர்கயிலையிறைபடைகொ
டிடையனிடையவெதிர்மலைவமெனுமவரே. 13

ஏகுநெறியடைமினேதமறவிலகு
தோகைமலரரிவைதூயவழகினுறு
மோகனிவனிரதநூறியெதிர்முடுகி
வாகைபுனைதுமெனவோதுமறவர்களே. 14

ஒருவனிவனிரதமழியினுறுவதிலை
பொருவசிலையுமிறுபிகரில்புரவலர்கள்
வெருவல்வெருவலெனவுரைசெய்விறலினர்க
ளுருளுமுலையவருகரியினுயர்பவரே. 15

பரியின்வருவர்சிலர்படைகள்பலவெறிவர்
கரியின்வருவர்சிலர்கணைகள்சொரியுமவ
ரரிகளெனவருவரரசர்வளையினொலி
திரளவகிலமொடுதிசைகள்செவிபட. 16

எதிருமதிரதர்களுடுவினின மூமினி
யுதிருமுதிருமெனவொளிகொள்சிலையினொலி
மூதிரவிடுகணைகள்வடவையென மூடுகை
வதிருமவனியுறமரவுமனலுமிழ. 17

வேறு.

நெஞ்சழன்றுபடைவீரரானவர்கணீதியானநெறியொன்றிலார்
குஞ்சரங்கள்பரிதேர்களானவைகள்கொண்டுகொண்டலைவளைந்தபோல்
விஞ்சவெஞ்சிலையின்வாளியோடுகதைவேல்மழுக்கணையும்வீசினு
ரஞ்சிவிண்ணவர்கள்போய்மறைந்தனர்களகிலமெங்கணுமதிர்ந்ததே. 18

ஆனைதேர்கள்பரியெண்ணிலாதவைகளடரவந்தெதிருமாடவர்
சோனைமாரியெனவாளிதூவியுயர்தோமரந்தொகையில்வேல்மழு
வானுமாதிரமுமரையவீசமலர்மீதுமாதுளம்வருந்திடத்
தேனுகாசுரனைமுனியுமாதவவில்வளையவெங்கணைதெரிந்தனன். 19

அன்னமானநடையாளையஞ்சலெனவோதியாழியுறமாழியான்
மின்னுமாமுகில்விளங்கிநின்றதெனமேவிவாளிமழைவீசவே
மன்னரானவர்களிரதமோடுதேரைமறியவெம்பரிகள்மதகரி
யுன்னுபோதின்முனுருண்டசெங்குருதியுவரியாகுமெனவோடவே. 20

சிலையினாணியொலியுலகமேழுமுறவேகவாளிகள்செலுத்துமா
மலைகள்போலவருகரிகடேர்கள்பரிவளையவந்தெதிருமறவர்தந்
தலைகள்வானமிசைநிறையநீடுமுடறரணிவீழவரைதானென
வலைகொள்வேலையிடையுதிரவாரிவிழவலகையுங்களுகுமாடின. 21

சுற்றமேவுபரிகொண்டேகுழுமவர்தூயவெங்கள்குலமானினைப்
பற்றியேகுமறிவற்றவாயர்குலம்வந்தவன்பயமுறக்கடி
தெற்றவீர்களெனவந்தெதிர்த்தவர்களென்றடர்த்தவனெய்வாளியா
லற்றசென்னிமாமகுடமின்னவுயரண்டமுற்றவையனந்தமால். 22

வேறு.

சிலையினுறுநாணிஞெசையேயொளிர்செகமுழுதும்வீடுகொலமாமெனு
மொலிகளெழநாடியோடுசாயகமுருளிரதமேவிநேருமாடவர்
தலைகளறனாலமீதின்மாவொடுசரியினலவேழம்வீழமாசற
விலகிநிறைவாரிதோறுமேகினவிடையர்குலநிபவீசனேவவே. 23

அதிரதர்கள்மாளநீளுமாகரியடையவுடலோடுகோடுதாளற
வுதிரிரதமூருமாவலோனுமெய்யொடியநிரைவாசிநாசமேயுற
வெதிரிலழல்வாளிவாளின்மாமுகிலிரியவுயராசைதோறுமேகின
சதுரன்வசுதேவன்வாழவேவருதனையன்விலின்மாரிபோலவீசவே. 24

மூரன்மூரியமோதுமாலினூர்களைமுடுகவுயர்போகுமாவோடானைகள்
வரைவிழுவபோலமீதின்வீழ்வுறமணிமுடிகள்சூடிவாழும்வீரர்கள்
சிரநெரியவாளமூளையேபடிதிரளவிழிவீழநாவும்வீழ்வுற
வுரநெரியநாசிவாயினூவுறவொடிவருடலோடுதோள்கடாள்களே. 25

கொடிகுடைகள்வீழவாசிமாகரிகுடர்புரளவீரர்தேர்கடாளற
முடிகளறமார்புமாரமோடறமுசலமறவேல்கள்வாள்கடானுதிர் [மு
பொடிகளுறவீழ்வதேர்கள்பாரிடைப்பொறிகளுறவாசைதோறும்வான
மிடியுடையனுடியோமொசுகமெறிகடலுள்வாழுமீசனேவவே. 26

அடியறவசேரிணுணிதானறவடிபடுவபேரிகாளமோடுறு
துடியறவவூறவாசிநாசிகடுடையறவவானின்மேகமேலமர்
கொடியறவமோடுநீடியேயொளிர்குடையறவகோலமானமாமணி
முடியறவவீரர்தோள்கடாளறமுடுகுகணைமாயனுயனேவவே. 27

சுதைதருவமாதுநாதனேவியதொலைவில்பலவாளிசோனையாமென
வுததிசனலாகமூளுமாகரியுருளிரதம்வாசிமாளவோடுவ
மதிதவழும்வேணியானொனுன்ஞர்புரமடியவெரியாகனூறும்வாரென
வதிதிமிலகோலகாலமானதவரசர்திரளாசைதோறுமோடவே. 28

தலையறுவர்மாவினேறுசூரர்கள்சரியிலுயர்தேரினேறுமாடவர்
சிலையறுவர்பாழிவாசிகாலொடுசிரமறுவமாறிலாதமாகரி
குலமறுவவீரரானபேரினர்குலைகுலைவர்பீதியோடுமோடுவ
ரலையுறுநல்வாரிமீதினுகணையமருமருளாளன்வாளியேவவே. 26

அவனிதனில்மேவுதேர்கொடானைகோடதிரவருசூரர்சூழவேயறை
பவனனிலும்வேகமானமாவோடுபடைஞர்திரள்கூடிமூடினார்தலை
குவைகள்முகிலோடுசேரமீதுறுகுருதிநனியாறுபோலவோடின
துவரைநகராளும்வீரனுமிறைதொலைவிலெயும்வாளிமாரிதூவவே. 30

வேறு.

ஆரியன்றனுவுக்துறமண்டினவாசையம்புவியண்டமுமிண்டிய
வாரியெங்குமலிந்தனவெங்கரிமாவினின்றுடர்வஞ்சர்மடிந்தனர்
பாரினெங்குநிறைந்தெழுசெம்புனல்பாரவங்கதுகண்டனர்விஞ்சிய
தேரர்வக்துநெருங்கியடர்ந்தவர்சீறிவெங்கணைசிந்தினர்முந்தியே. 31

சூரர்விஞ்சிநெருங்கினர்வெங்கணைதூவிவந்துதுடர்ந்திடமுந்திய
பேரிபம்பைகறங்கிடமங்குல்கள்பீதிகொண்டுபெயர்ந்தனசங்கொடு
தாரையெங்குமுழங்கினவண்டர்கடாமுமஞ்சினர்கண்டிழுதுண்டன
வீரனம்புபொழிந்தனன்வஞ்சகர்வீறழிந்துயர்விண்டலமண்டவே. 32

தாளுடன்றலையுந்தலைதும்பிகள்சாயவங்கம்நெரிந்தனவெம்பரி
தோள்சிரங்கரமுந்துடையுந்துணிசூரவன்பினரென்பிறுடன்றசை
மூளையுந்திபெரிந்தெழுசெம்புனல்மூரியம்பரமஞ்சமுழங்கின
வேளையன்பொடுதந்தவனின்றெதிர்வீசுவெஞ்சரம்நஞ்செனவிஞ்சவே. 33

வீறியெங்குமடர்ந்துமிடைந்தொளிர் வேல்முசுண்டிகைகொண்டயர்குண்
ணேரியஞ்சவெறிந்தவர்வன்றலையேகவம்பரமம்புவிசெம்புன [டயி
லூறிவந்தலைமுந்துகருங்கடலோடமண்டிடுகெண்டைகளுண்டிட
டேறவஞ்சமில்கஞ்சமின்விஞ்சியதேரினின்றரிசிந்தினன்வெங்கணை. 34

வாரணங்களின் விஞ்சியெழுந்தவர்வாசியுந்திரதங்களின்வந்தவர்
பாரணங்குமெலிந்திடவெம்பரிபாயமுந்திநெருங்கினர்வென்றிகொ
டாரணங்கியகுஞ்சியர்வன்றிறல்சாரவந்தவர்தந்தலையிந்திர
னாரிணங்கிடவெங்கணும்வெங்கணையோடவுந்தினனும்பர்கடம்பரன். 35

வேறு.

விண்டாரகையண்டிப்படிவீழ்ந்தலைமிடைய
வுண்டாகியகரிதேர்பரியுடன்வீரர்களுருளப்
பண்டாலிலையமர்வோன்விடுபகழித்திரள்பரவக்
கண்டானுயர்விதற்பன்றிருமகனாகியகடியோன். 36

ஒருதேரினிலிவன்வெஞ்சிலையொன்றேகொடுபொழிவான்
பரிமாகரிபடைவீரர்கள்மடியக்கணைபரப்பிப்
பொருமாறதுநலனுமெனப்புகலாநகைபுகையா
வெரியாவுறவிரதந்தனைமுடுகின்றனனெதிரே. 37

மலைபோலுயர்கதிராமெனமகுடத்தொடும்வருமா
லலைவேலையின்விடமாமெனவிழியாலனல்சொரிவான்
சிலைனாணுறமொலியாலுலகுலையச்சிகியினைநேர்
கொலைவாளிகள்பலவுங்கொடுகொதியாவெதிர்வருவான். 38

படிவானகம்வெருவக்கடலிடையேபணியுமிழும்
விடமாமெனவிறுகாலையின்விடைமேல்வருமரனார்
வடிவாமெனரதமேல்வருமலைநேருருக்குமனவ்
கொடியான்ககபதியானுயர்கொடியானுடன்கூறும். 39

வெண்ணெய்க்கழுதடியுண்டுநெய்திருடித்திரிவிரகா
கண்ணிக்கயிறுடனேகழிகோலுங்கொடுகோனி
னண்ணித்தரையுழல்வாயெமதுயிராகியநலமாம்
பெண்ணைக்கொடுகளவிற்பெயரிடையாபிழைசெய்தாய். 40

விட்டேகுதிமடவாடனையல்லேலெனில்விடமாய்ச்
சுட்டேகுவகணையாற்சிலைதுணித்துன்னிருகரத்தைக்
கட்டேனெனினின்றொழுமடியார்கழலிணையிற்
பட்டேயுறுதுகளாகுவனெனவேசிலபகர்ந்தான். 41

எரியாயெழவிருகண்ணினுமிமையோர்களும்வெருவத்
தெரிவாளிகள்கொடுவந்துயர்சிலையான்சிலசபத
முரையாவதிருறுமேறெனவுருடேர்மிசையுயர்ந்தான்
னருளார்வசுதேவன்சுதனகையோடிவையறைவான். 42

வீரற்குறுநல்வாசகம்விரித்தாயறிவிலியுன்
றேரற்றுயர்கொடியெற்றெழிற்சிலையற்றிடச்செல்லுங்
காருற்றெழுசுடர்வாளிகள்கலவாமுனமினினீ
பாரிற்குதிகடிதோடெனப்பரமனுரைபகர்ந்தான். 43

அரியாகியமுதலோனிவையறையுமுனரழல்கண்
ணெரியாயுறமுனிவானுயர்சிலைநாணொலியெழவே
விரிவாகியகடல்மாநிரம்நிறையப்படிமிசையின்
சொரிமாரியினதிகத்துறுசுடராசுகஞ்சொரிந்தான். 44

வேறு.

அத்திக்கொம்பைக்கொண்டதமோதியநல்சால்பா
லத்திக்குளமின்னுக்கடல்செய்யச்சுதனிற்கு
மத்திக்குச்செல்வீரவிதற்பன்மகனாகத்
தத்திப்பூணாறும்மிறையேலவழல்கின்றான். 45

குஞ்சரம்விஞ்சுங்குண்டினமாபுரியாளுங்கோன்
வெஞ்சினநெஞ்சன்வில்கொலைவேலையிடையெய்தும்
நஞ்செனவெஞ்சிலைவெங்கணையெங்கும்விடநந்தன்
மஞ்சனுமஞ்சுவாளிகொடெய்தானவைமாற. 46

அஞ்சுமுகத்தானுமெனவெய்தியகல்வாளி
னஞ்சுமுகத்தானோடிடனுகக்கணையெய்தா
னஞ்சுமுகத்தான்ககபதிபடைகொண்டவைநூற
வஞ்சுமுகத்தானுயினன்வானத்தவராட. 47

புண்டரிகம்போல்வெம்பியபஞ்சானனமேபோற்
புண்டரிகம்போல்வந்தவிதற்பன்புதல்வன்சீர்ப்
புண்டரிகமின்னாயகன்வில்லார்ப்பொலியாற்றுன்
புண்டரிகத்துக்கொத்தசரந்தோன்புகநொந்தான். 48

கொடியாநெஞ்சன்வஞ்சங்கொண்டான்கூற்றென்ன
வடியாவேபார்வானுமடங்கவளவேகொண்
ணெடியோன்மார்பிற்புண்படவெங்கும்நிறைவாளி
கொடியோர்போதினெய்தனன்விண்ணோர்மனங்கோவ. 49

வேறு.

காற்செருப்பனவிடமொப்பனகனலொப்பனகடியுங்
கூற்றொப்பனவிடியொப்பனகொடியாமுமைகொழுநன்
சீற்றத்தினுமடர்வெங்கணைவிதற்பன்சுதன்சிதற
நீற்றுக்குவைபடவாழியினறுத்தானெறிவளர்த்தான். 50

பார்த்தான்விடுபடையாவையுமறியக்கமேபகழி
தூர்த்தானுயருலகியாவையுமிமையோர்களுந்துலங்க
வார்த்தானொளிர்வளையூதினனுமெய்த்துழவிடையா
சாத்தாயெனிலரசாகுதியெனவேகனற்கண்ணன். 51

தீயோன்விடுவெங்கணையாவையுமறவேசிலபகழி
மாயோன்விடுவதுகண்டெரிமறவன்சிலையதனாற்
றூயோன்மிசையீராயிரவரிவாளிகடொடர்ந்தான்
பேயாகியதாயாருயிர்துகர்ந்தானவைபிழைத்தான். 52

கொதித்தானுளங்கொடியோனனலுறுவெங்கணைகொடுதா
னெதிர்த்தேசிலைவிடுத்தானவைதுவராபதியிறையோன்
சிதைத்தேயவனகல்மார்பிடையுறவாளிகள்செலுத்தப்
பதைத்தானுடல்விதற்பன்றிருமகனாகியபதகன். 53

உருமேறெனமுனிவானுருக்குமன்பாருலகெவையுஞ்
சருகாயிடத்துரந்தான்கதிரவன்வெம்படைதனையே
கருமாமுகிலனையானுமப்படைகொண்டொருகணத்தி
னெறியாவுறவிடுத்தானவையறவார்த்தனரிமையோர். 54

துரந்தான்சிலசுடர்வெங்கணைதூயோனவைதுணிக்க
வெறிந்தான்மனமியமன்படையெடுத்தானுலகெவையு
மரிந்தேயுறுமிதற்காற்றலையெனவிட்டனனழிகார்
குருந்தேறியவிரையோனதுகுறைத்தான்கொடும்படையால். 55

விடமாமெனக்கதமல்கிடுவிதற்பன்றிருமகனுங்
கொடியானயனழிக்கும்படைசிலைநாணுறக்குனித்தே
யிடையாவிதுதவிர்ப்பாயெனவிடுத்தானுலகெறியக்
கடல்மீதினிலடைவானுமப்படைகொண்டவைக்களைந்தான்.; 56

களைந்தானிவன்மலரோன்படையெனவங்கதமுறுநெஞ்
சுளைந்தானுயருலகியாவையுமிருகாலையினொடுங்க
வளர்ந்தாரழல்விழியாவெரிமடுப்போன்படைவாங்கித்
தெளிந்தான்வரிசிலைநாணுறத்தொடுத்தான்செலவிடுத்தான். 57

காற்றுங்கொடுங்கனலுஞ்சுடர்க்கணையுங்கடுவிடமுங்
கூற்றும்பிறையெயிற்றேறெழுகூளிப்படைபலவுஞ்
சீற்றமுறுங்கரும்பூதமுமாவுஞ்சிதையாத
ஆற்றமுறவொளிர்சூலமெவ்வுலகெங்கணுநிறைய. 58

கடல்வற்றிடவரைமுற்றவுநெரியக்ககனம்பா
ரிடருற்றிடவுயிருட்கிடவருநாற்றிசைமதமா
மிடலற்றிடவெயில்மட்கிடவிபுதக்குலம்வெருவ
வுடுவுட்கிடநிலனுற்றிடுமுரகக்குலமுலைய. 59

விடையுற்றவர்படையெங்கணும்விரிவெங்கனல்பரவத்
துடியொத்தமெல்லிடைமாமடவனமுமனந்துலங்கக்
கடலுற்றமரரிதேவியைக்கலங்காதுமின்னென்றே
சுடருற்றெழுமரனற்படைவிடவங்கவைதுணித்த. 60

ஆர்த்தாருயரெழில்வானவரவர்மாமலரவனி
தூர்த்தார்க்கடற்றுயினீங்கியமுகுந்தாவெனத்துதித்தார்
பார்த்தானுருக்குமன்வெஞ்சினம்பெருகப்பலபகழி
சேர்த்தேசெலவிடுத்தான்றிருமாறோள்சிவப்புறவே. 61

விடும்பல்லவம்புயமீ துறவிதற்பன் றிருமகன் றன்
கொடுவெங்கணையமர் தூணிவில்லிரதங்குறகதமு
மடியும்படிகவசத்தொடுமெணிமார்பமுமுருவச்
சுடர்வெங்கடும்பகழித்திரள்மதுசூதனன் சொரிந்தான். 62

திருமாலிறையரிகேசவன் சிலையால்விடுபகழி
வருமாமலையெனத்தன் னுடல்நுழைந்தோடிடமாரன்
விரிவாயெழுங்குருதிப்புனல்நிலன்வீழ்ந்திடமெலிவோ
டுருளாரழிந்திடுதேர்மிசையயர்ந்தானுருக்குமமன். 63

அயர்வோடழிதேர்மேல்விழுமரசாமுருக்குமனுக்
குயிர்போகிலதுய்வானிவனுயர்மாமலர்த்திருவே
துயர்நீயினியொழிவாயெனமொழிந்தான்சுரர் துதிப்ப
வெயிலோனெனவொளிருமணியிரதந்தனைவிடுத்தான். 64

கடலிற்கடுங்காலிற்சுழியும்மாமரக்கலம்போற்
படியிற்றிகழ்வுறுதாருகன்பரிகோல்கொடுகொளுவு
முடுகக்கொடியுயரத்தனிமுதலோனவர்முன்பால்
வடிவத்தொளிர்பலபத்திரவரராமனும்வந்தான். 65

பரியேறெனவரவேயுயர்பகடெங்கணும்நிறையத்
திரளாயுருளிரதஞ்செகதலமீதினிற்றிகழ
வரியாமென்வருபால்வணனலைவேலையினமருங்
கருணாகரன் கமலாசினியுடன்போனதுகண்டான். 66

மின்னேயெர்தேர்மீதினில்விடையோனிடர்கடியும்
பின்னோன்வருமெழில்கண்டன னுவகைக்கடல்பெருகு
முன்னோன் றிகள்பலபத்திரராமன்முகிணகையான்
றன்னுவலினிரதத்திடையடைந்தானுயர்தவத்தோன். 67

பலபத்திரராமனெனுமுன்னோன்வரப்பரம
னலர்மத்தியகமலத்திணையடிவீழ்ந்திடவவனு
மலையொத்துயர்புயவீரனையணைத்தான்மலர்மகளாஞ்
சிலையொத்தமர்நுதலாடொழுமகிழ்ந்தான் றிருவுளத்தே. 68

தேருங்கரிநிரையுந்திரள்பரியுஞ்சிலைவீரர்
பாரும்வெளியிலதாயவர்ப்படைமன்னர்கடொழவே
காருந்தியகலுழக்கொடியெழமாழையின்கலசத்
தேர்கொண்பணைமுலையாளொடுமினிதேகிடுமெல்லை. 69

வேறு.

ஆறுபோல்வளைத்துறசெங்கரை
யூறமார்பனுருக்குமனோர்நொடி
மாறுபோதிற்றெழுந்துமடங்கல்போற்
சீறினன் றன்னன்சென்றனனுமென. 70

சுற்றம்பார்த்துச்சுசியுறகண்ணினான்
பெற்றமேய்த்தவன்பெய்வளைதன்னொடு
மற்றம்பார்த்தகன்றானவன்றன்னையா
னெற்றுவேனெனப்பின்றொடர்ந்தேகினான். 71

இரிந்தசேனையையஞ்சலீரென்றுரைத்
தெரிந்தநேத்திரன்றேரினினேறினான்
றெரிந்தவார்சிலையேந்தினன்றிக்கெலாம்
விரிந்தமாக்கடல்போலவெகுண்டெளான். 72

மின்னினோடுயெரியாதவன்விஞ்சுதேர்
தன்னிலேகுவமுன்னந்தடுப்பனென்
றன்னுபோதின்முன்னுற்றனவெம்படைச்
சின்னமூதிடச்சேனைகளார்க்கவே. 73

பிடித்தவெஞ்சிலையன்பிறழ்வன்னியன்
கடித்தபல்லினன்காய்கனற்கண்ணினன்
வெடித்தசொல்லினன்யாதவமீளெனத்
தடுத்தனன்கமலத்தடங்கண்ணவன். 74

இகல்புரிந்தங்குருக்குமனேகனு
மிகமுனிந்துயர்விற்கரத்தேந்தியே
மகதனுந்தவக்கிரமன்னனுந்
தகுதியிற்சிசுபாலனுந்தாக்கினார். 75

தோலினம்பரிதேர்நிரைசூழ்ந்திடச்
சாலுவனடர்த்தானழற்கண்ணுடைக்
காலனஞ்சிடவேகதமிக்கிடுஞ்
சீலமில்லப்பவுண்டரன்சென்றனன். 76

உருக்குமன்னமர்மீளவுடன்றன
னெருக்குதாற்பரிநீள்கயந்தேரிற
முருக்குவனெனமூவுலகங்களும்
வெருக்கொளும்படிமேயினன்பால்வணன். 77

அலாயுதத்தனடர்ந்தெழும்வேலையி
னிலாவுதிக்கும்நெடுங்கடலாமெனப்
புலாலரைத்தரையிற்பொடியாகவே
மெலாருமென்றுநற்றேர்கொடெதிர்த்தனர். 78

கோதில்யாதவர்கோனனிகம்நிறைக்
தோதவேலையொலியெனவார்த்தனர்
தீதினல்முயல்மன்னவன்சேனையு
மோதுமாபரித்தேருடன்மூண்டனன். 79

அதிர்ந்தபாரமிர்தாசனரஞ்சிட
வுதிர்ந்துவீழுமுடுக்களுமேற்றிடப்
பிதிர்ந்துமால்வரைவீழப்பெருங்கட
லெதிர்ந்தபோலனிகமெழுந்தார்த்தன. 80

கரிகளோடுகரிகளுங்காதின
பரிகளோடுபரிகளும்பாய்ந்தன
வுருளுதேரொடுதேரினமுற்றன
வரிகொள்வீரரும்வீரருமார்த்தனர். 81

எதிருமாரதரெண்ணிலரெங்கணுங்
கதிர்கொள்வேல்மழுக்கன்னகங்காலவே
லதிரவீசிமுடித்தலையற்றன
ருதிரமாரிதரையினிழேடவே. 82

கதையினாலடர்வாருறுகாலன்போ
லெதிருவாரொளிர்வாளினரெங்கணுங்
குதிகொள்வார்கரிகொன்றிடக்குன்றபோற்
சிதைகுவாருயிர்சாதகர்சேற்கவே. 83

சிலையறக்கொடிதானறத்தேரற
மலையெனக்கதிர்வானொடுமாசரி
தலையறத்துணிசெய்தெதிர்தாக்குவா
ரலையுறப்பொருமார்கலியென்னவே. 84

எரிவிளித்துருடேரினெதிர்ந்துளார்
பரிபடச்சிலைநாணறப்பாகர்தன்
சிரமறக்கணைமாரிகள்சிந்துவா
ரரியெனத்தரைமீதிழிந்தாற்பரால். 85

இருளுமாகரிவீரர்களெங்கணும்
வருவராவிடமும்வலமுமுறப்
பொருவர்வாளிபொழிந்துபுவியின்மே
லுருளுவார்படியின்றுதிர்முகம். 86

ஆடகங்கொள்வரைநெனவார்த்தெதிர்
கேடகங்கதிர்வாள்கிட்டவெட்டியே
வீடகங்கணமின்னவரம்பையர்
சூடகக்கலைகவலைத்தனர். 87

கற்றகற்றபடைகொடுகையினு
லெற்றியுற்றிருவோருமிறந்துற
வெற்றிமுற்றினரென்றுவிண்மாதரார்
பற்றிசுற்றியணைத்துப்பரிந்தனர். 88

உருண்டதேர்கள்பரியுமுருண்டன
வுருண்டமாகரிகோட்டுதிர்முத்தின
முருண்டவீரர்முடிகளுவரியி
னுருண்டுவீழ்ந்தனவோடினசெம்புனல். 89

தவந்தனுலுயர்வாளினர்தாக்கிமெய்
சிவந்தசோரிவிளவுயிர்சேரவிண்
ணுவந்தகாரியருற்றனேத்தார்படி
கவந்தமாடினகூளிகளிக்கவே. 90

மூவராகிமுளைத்தெழுமூர்த்தியோ
னேவலேவருவீரர்களியாவரும்
பாவகாரிவருதினிபாரிடத்
தேவர்தானவர்போரெனச்செய்தனர். 91

எறிந்துமெய்துமெழுமழுத்தண்டுகொண்
டறைந்துமெண்ணிலராடவரார்த்திடத்
தறிந்துவெங்கரிமாவுடன்சாய்த்திட
முறிந்துருக்குவன்முன்னருமோடினர். 92

குஞ்சரங்கள்மறிந்திடவேகுலைந்
தஞ்சிமன்னர்களோடியலைவுற
வஞ்சநெஞ்சனுருக்குமனுமனம்
வெஞ்சரங்கொடுவெந்துவிலக்கினன். 93

பேரிமாமுரசம்விண்பிளந்திடு
மாரவாரமடைந்தரவார்கலி
நீரெலாந்துகளாகநிலநெய்துந்
தேரின்மேல்வருஞ்சீயமும்போலுவான். 94

பூணிறைந்துபொலிந்திமொர்பினன்
சேணிறைந்துயர்தேவர்திடுக்கிட
வூணிறைந்தவுயிர்களுமுட்கிட
காணெறிந்துலகெங்குமநடுக்கினர். 95

யாதவப்பெருஞ்சேனைகளெங்கணும்
பீதியுற்றுநிலததிற்பெயர்ந்திட
வேதனுமனமுட்கிடவெண்சங்க
மூதினனுலகங்கலங்கவே. 96

தெரிந்தனன்சிலையிற்கணைதிக்கெலாஞ்
சொரிந்தனனிமையோர்கடுணுக்குற
வெரிந்திறந்தனயானைகடேர்பரி
முரிந்தமன்னர்களோடினர்முந்தியே. 97

துமிந்ததேர்கரிவீரர்கள்சேரவே
நிமிர்ந்தவாளியுதிர்த்தனிகத்துள
மமிழ்ந்துகூளிகடள்ளிதம்மார்பினிற்
திமிர்ந்தமூளைகளெங்குஞ்சிதறவே. 98

ஆனைபட்டனதேர்நிரையற்றன
வீனமிற்பரிவீரர்களியாவரு
மூனுமற்றெனரோடியசெம்புனல்
மீனுடைக்கடல்வீழ்ந்தலைவீசிய. 99

உருக்குமன்சிரமொன்றனலாமென
நெருக்கிவெம்பரித்தேர்நிரைநீள்கயம்
வருக்கமுமறவந்தெதிர்வீரர்கள்
செருக்கறச்சிரந்தானறத்தீய்க்குமால். 100

ஆலமாமெனவாரழலாமெனக்
காலனுமெனக்காந்துமுருக்குமன்
சூலிமார்புரஞ்சுட்டனசெய்கைபோற்
கோலயாதவன்சேனையைக்கொன்றனன். 101

குண்டினுபுரிக்கோன்செய்தவீரியங்
கண்டுசேதிபன்றன்னுடன்மாகதன்
மண்டலீகரெண்சாலுவமன்னவன்
கொண்டல்போற்கொலைவாளிகுனித்தனர். 102

வீரனுவிதற்பன்றிருமகன்
கோரமானகொடுங்கணையேவவே
சூரரானவர்துஞ்சினர்மற்றுளோர்
பாரினோடினர்பால்வண்ணன்காணவே. 103

உவப்பின்மொய்ம்படையாருயிரும்பரின்
றலைப்படைக்கணைசார்வுறக்கண்டன
னலைப்படுந்திருப்பாற்கடலாம்வண்ணன்
கலப்பைகொண்டெழுந்தான்கதிரஞ்சவே. 104

விதற்பராசன்படைத்தலைவீரர்கள்
பதைப்பநீடுபெகடிறத்தேவர்க
ளுதிப்பவாரிதுப்பாகச்செஞ்சோரிவீழ்ந்
தைப்பநீளலத்தின்னடித்தானரோ. 105

வேறு.

பிளந்தனதகர்ந்தனபெருங்கைமதவேழம்
உலைந்தவிவுளித்திரள்களென்புமொடியுற்றே
யலைந்தனர்கள்மன்னர்துடைகாலரைகளற்று
வளர்ந்தனபிணக்குவைகள்மால்வரைகள்மான. 106

முறிந்தன தகர்ந்தன முரண்டருமணித்தேர்
மறிந்தன புரண்டன மதக்கரிகள்கைகா
றறிந்தன ருருண்டனர்சகத்தலைவர்நீதி
யறிந்தவனலங்கையினெடுத்தறையவம்மா. 107

வில்லினர்கள்வாளினர்கள்வேலினர்கள்வீர
ரெல்லையிவர்தாள்கள்கரமென்புகளொடிந்தார்
பல்லொடியவாசிகள்பதைத்தபகடிற்ற
மல்லினுயர்தோளினன்வலங்கொடலமோத. 108

பரித்திரள்படைத்தலைவர்தேர்கள்பழுதற்ற
கரித்திரள்பதைத்திடவலங்கொடுகணத்தி
னெரித்தனனுடற்கருதிநீர்கள்வரவேகொண்
டரைத்தனனிலத்திடையுருக்குமனுமஞ்ச. 109

கோடொடியுமாகரிகள்வாசிகள்குலைந்தே
வீடவடிவேலினர்மடிந்திடவெகுண்டு
சாடினனலாயுதமெடுத்தரையவன்பா
ரோடியதுமானதியெனக்குருதியுற்றே. 110

பிடித்துகிலனெற்றுவமெனச்சிலபிதற்றி
யடர்த்தவர்வெருக்கொளவலங்கொடுசுழற்ற
புடைத்தனனெரித்தனனுடற்குருதிபொங்கப்
படுத்தனனெருக்கியபடைத்தலைவர்பம்ம. 111

பக்கமெதிர்மண்டியபடைத்தலைவர்பாரி
னுக்கிடவலாயுதனடித்தனனுருத்தே
மிக்கவர்களோடினர்கள்வாய்குருதிவீழக்
கக்குவர்கள்பாருழுகலப்பைநெறிகாணின்.. 112

மண்டனில்மடிந்துமதமாவினர்கள்வீழக்
கண்டுமகதன்கொடியகாலனும்நடுங்கக்
கொண்டல்கள்முழங்குவதெனக்குரல்வெடிப்பத்
தண்டுகொடடர்ப்பவெதிர்தாக்கினனலத்தான். 113

வாரியயமற்றிடவிளித்துமலைபோலே
பாரதிரவெண்டிசைசுமந்துபகடஞ்சச்
சாரிகைதிரிந்தனர்தடுத்தனரடித்தா
ராரிவரையொக்குமவரென்றமரராட. 114

உரனுடையபால்வணனுறுக்கிமகதன்றண்
டிருபிளவதாகவலமேகொடெதிர்மோதி
வரையினிடிவீழ்வதெனமார்பிடையடிப்பத்
தரையுறவிழுந்துபினரோடிமெய்தளர்ந்தான். 115

சேதிபனடர்ந்துவைசிலீமுகம்விடுத்தே
மாதிரமரைப்பமதிமன்னனுமலத்தா
லேதலர்நடுங்கவிரதந்துகளதாக
மோதுதலுமோடினன்முராரிநகையெய்த 116

விக்கிரமமிக்கவிடையோனெனவடர்ப்ப
வக்கிரன்மணிக்கதைகொடெற்றவமர்காஞ்சிற்
கைக்கயிலையொத்தகடவுட்கடுகெடுப்ப
வுக்கினபலப்பெயரொளிந்தவனிடைந்தான். 117

காலனெனவான்மறையவெங்கணைசொரிந்தே
சாலுவனடர்க்கவொளிர்சங்குநிறவண்ணன்
சிலமிலிதேரினையலங்கொடுசிதைப்ப
ஞாலமிசையோடினனகைத்தனர்கள்வானோர். 118

காலன்விழமார்பினுதைகாவலர்வரத்தால்
மாலுருவமாகியபவுண்டரன்மணித்தண்
டாலமர்துடங்கலுமலாயுதனடிப்பக்
கோலமுடிபாரின்விழவோடிமெய்குலைந்தான். 119

அடர்ந்தமகதன்முதலினோர்கள்மிகவஞ்சித்
துடர்ந்தெழுமலாயுதனடிக்கமெய்சுருண்டு
மடைந்தகடல்மீனெனவுழன்றனர்கலங்கி
யுடைந்தவர்களோடிடவுருக்குமனுருத்தான். 120

வெஞ்சிலையினாணொலிவிசும்பினுறவிண்ணோ
ரஞ்சவெதிர்முந்திவருமாலவிடமென்ன
விஞ்சுநெடுவாளிமழையெங்கணும்விடுத்தே
வஞ்சகனுமூதினன்வலம்புரியைமாதோ. 121

குண்டினபுரத்திறைவன்விட்டகொடுவாளி
யெண்டிசையுறக்கனல்மடுத்தெதிரவார்த்தான்
கண்டுயர்கலப்பைபகைசுழற்றிவருகாளை
யண்டர்கடுதித்திடமுறிந்தவவையெல்லாம். 122

விட்டகணையற்றிடவெகுண்டிடுவிதற்ப
னட்டதிசைமுற்றுலகியாவையுமடங்கச்
சுட்டனனெனக்கனலவன்படைதொடுத்தான்
சிட்டனுமலப்படையெடுத்தவைசிதைத்தான். 123

வெம்பினன்விதர்ப்பனருள்வீரனும்வெகுண்டே
யம்பரநிறைத்திடவையாசுகம்விடுத்தா
னம்பனிடரைக்கழியும்நாரணன்முன்னோனு
மும்பர்கள்மதித்திடுகலப்பைகொடுதிர்த்தான். 124

எழுந்தமுகில்போற்சரமிராமன்மெய்யழுந்தப்
பொழிந்தனனுருக்குமன்விழிக்கனல்கள்பொங்க
வுழுந்துருளுமுன்னிரதமாவினொடுபாக
னழிந்திடவலங்கொடுகடுந்துறவடித்தான். 125

அதிர்த்தெழுமலாயுதனடிக்கவழிதேரோன்
குதித்தனனிலத்தினிடைகுண்டினபுரிக்கோன்
பதைத்தெழுமனத்துயரின்பால்வணர்தம்மேலே
வெதிர்த்தனன்மணிக்கதையெடுத்தெரியுநெஞ்சன். 126

முட்டினன்விதற்பனருள்மைந்தன்முனிவெய்திக்
கிட்டினனவத்தொடுகிளர்த்தினனிராம
னட்டமொடுசெற்றினரடித்தனர்களார்த்தே
கட்டினரிடிப்படமுழங்கினர்கலங்கார். 127

உருமெனவடித்திடுவரோடிடுவர்விண்ணோர்
வெருவுறவதிர்த்தவனிமீதுபலசாரி
திருவருலகுட்கிடவிழித்திடுவர்செந்தீப்
பெருகிடவடர்ப்பருயர்பிஞ்ஞகனுமஞ்ச. 128

ஆர்த்தனர்கலப்பையுயர்தண்டுகொடறைந்தே
கார்த்தனருறுக்கினர்கள்கண்களெரிகாலப்
பார்த்தனர்நகைத்தனர்படிக்குளவரெல்லாம்
வேர்த்தனர்திசைக்கணுறுவேழமுமழிந்த. 129

அதிர்ந்துசெகமுற்றவுமலைந்திடவடர்ந்தங்
கெதிர்ந்துதுவரைக்கிறையலங்கொடிறவெற்றச்
சதைந்தொருநொடிக்குமுனமேதரணிதானுற்
றதிர்ந்தனவுருக்குமனடற்கதையொடிந்து. 130

திருக்கறுபனைக்கொடியர்சீரியுயர்தண்டை
முருக்கலுமுருத்தெதிர்முளைத்துகணெரிந்த
வுருக்குமனையுற்றிருகைபற்றியுயிரோய
நெருக்கினனுடற்குருதிவாயினைநிறைப்ப. 131

பிடித்திருகையைக்கொடுபெருத்தகலமார்பி
னடித்தனனழற்பொறிகள்சிந்திடவலத்தோன்
படித்தலமெதித்தொளிகள்பாதமுறவம்பொன்
முடித்தலைதனைத்திருகவேமுயலும்வேலை. 132

கண்டனளுருக்குமணிகண்கள்புனல்சோர
மண்டனிலுருக்குமன்மடிந்திடுமெனத்தா
னண்டர்கடுதிக்குமுயரச்சுதனடிக்கீழ்
குண்டினபுரிக்கொடிபணிந்துரைகூறும். 133

மன்னன்வசுதேவனருள்மைந்தவருளென்றன்
முன்னவன்மடிந்திடுதல்முன்னர்முடிகிப்போய்
மின்னியவலங்கொடுயர்வீரனைவிலங்கென்
றன்னமிகுதுன்பமொடலைந்திவையறைந்தான். 134

சஞ்சமலரிற்றிருவினாள்கயல்கொள்கண்ணி
இஞ்சுகவிதட்கிளரும்வாயின்மொழிகேளா
வஞ்சனனிறத்தரியலாயுதமெடுத்த
விஞ்சியவரைப்புயனைமேவியிவைசொல்வான். 135

மாலவனும்நான்முகனுவாசவனும்வேலை
ஆலநுகர்வானெனினும்நின்னோடமராற்றார்
சீலமெயிலாதவனையோமுனிதிதேவர்
தாலமுறுகேதனவெனாவுரைதடர்ந்தான். 136

சிக்கமிகலன்றனொடுசெறியிடலாமோ
பங்கமுறநின்னடிபடிந்துபழியெய்து
மிங்கிவனையுய்யவருளென்றனொடுமாயோன்
சங்குநிறவண்ணனடிதாழ்ந்திவையுரைத்தான். 137

வேலைதனில்மேவியமர்வித்தகன்விளம்பத்
தாலமுறுகேதனன்விடத்தரணிமீதின்
சீலமறியாதுமுயறீயவனுமோடச்
சாலநகையாவிபுதர்தண்மலர்சொரிந்தார். 138

வேறு.

படியிலேபலபத்திராராமன்கை
யடியிலேவிழுந்தோடியவாண்மையில்
கொடியன்மானமுறச்சினங்கொண்டன
னுடுவினீள்கொடித்தேர்தனிலுற்றனன். 139

ஏகலாதுநில்லென்றிரதத்தின்மேற்
பாகன்மேலிலங்கும்பரிதன்னின்மேல்
வேகவாளிநிறைந்திடவீசினா
னாசமேலமர்வானும்நகைத்தனன். 140

எய்தவக்கணையாவுமெரிந்திடக்
கொய்தருக்குமன்றன்கொடித்தேர்விழக்
கையினிற்சிலையுங்கண்டமாயுக
மையுறுமெய்யரிகணையேவினான். 141

புட்கொடித்திறலோன்கணைபொங்கமண்
ணுட்கிடப்பரித்தேர்வில்லுதிர்வுற
வெட்கமில்லவுருக்குமன்மீளவுங்
கட்கமுற்றகரத்தொடுசென்றனன். 142

தேரிழந்துசிலையுமிழந்தவன்
பாரிழந்தொளிர்காந்தகம்பற்றிவா
னூரழிந்ததெனுமொலியுற்றிட
நீரெழுந்தநெருப்பெனநின்றனன். 143

அதிரமான்றலைவேலையினுலம்போ
லெதிரும்வீரவுருக்குமன்கொண்டெழுங்
கதிர்கொள்வாள்கரமீதினிற்கண்டமுற்
றுதிரநீள்கணையேவினனுத்தமன். 144

ஒல்லையிற்கதிர்வாளறவூற்றமு
மெல்லையிற்கொடியோனிமைப்போதினின்
மல்லுறப்பொருவேனெனமாதவன்
செல்லுநற்கொடித்தேரினிற்பாய்ந்தனன். 145

தேரினின்றொளிர்சீதரன்மேனியை
யாரவாங்கிருகையினழுந்திட
வீரமில்மன்றழுவலுமியாதவ
வீரனன்றுகொலென்றுவிளம்பினன். 146

முட்டியாலமர்செய்துமுனிந்துதேர்த்
தட்டினேறிமெய்தன்னைத்தழுவிய
துட்டனனவுருக்குமன்சோர்வுறக்
கட்டினனிருகையினைக்கார்வணன். 147

தேரின்காலுறக்கையிரண்டுஞ்சிறு
வாரினல்விசித்தேவிதர்ப்பன்மகன்
சோரவீரமழித்துத்துளவணித்
தாரினனகைத்தான்றையல்காணவே. 148

இலகுவால்வளையாழிகொண்டேந்துவா
னலகுவாளிகொடேசிகையைந்தற
விலகுளோர்நகைசெய்யவுருக்குமன்
றலையையோர்நொடியிற்சிரைப்பித்தனன். 149

வில்வின்மல்லினின்வீசியவல்லனென்
றெல்லையில்மொழிகூறியெனைவென்று
மெல்லியாடனைமீட்குவனென்றுமுன்
சொல்லினின்றசொல்நின்றலைசூழ்ந்தவால். 150

இன்னவாசகமோதியயாதவன்
மின்னுவாள்விழியாய்விதர்ப்பனரு
ளன்னமேயுன்றன்முன்னவனாண்மையை
யுன்னுவாயென்றுரைத்துநகைத்தனன். 151

பங்கம்விஞ்சவுருக்குமன்பார்மிசை
தங்கைகாணத்தலைசிகையைந்துறச்
சங்கமார்வஞன் கண்டுதன் றம்பியாஞ்
செங்கண்மாலினைச்சேர்ந்திவைசெப்புவான். 152

பணங்கொள்மாசுணப்பாயலுளான் றனை
யணங்கினேபெராகவறநெறி
யிணங்கலாதநவையிளைத்தாயெனப்
பிணங்கினலணங்கைக்கொள்பெருமையான். 153

கயிறுகொண்டுகைகட்டியதன் றிக்கம்
மயிரெலாமறப்பல்சிகைவைத்துவின்
னுயிரநாள்முனுதித்தவனுமெனுஞ்
செயலெனுய்பிழைசெய்தனைநீயென் ருன். 154

துட்டனுகினுந்துன்மதியாகினுங்
கட்டனுகினுங்கற்புடைத்தேவியாம்
வட்டமாமதியானனமங்கைக்காய்
விட்டுமானகர்மேவுதல்நன்றென் ருர். 155

பாசந்தான றுத்தான் பலதேவனு
மீசநீதியையெண்ணியசிந்தையான்
வாசமாமலர்மங்கைமுன் ஞேன் றனை
யாசுளான்மதியென் றுமகற்றென் ருன். 156

தோகைசுந்தரிமுன்வருந்தோன் றலை
நாகமீதமர்வானகையோடிகழ்
வாகவேசிகையுஞ்சிகையைந்தொழித்
தேகமாஞ்சிகையாக்கியியம்புவான். 157

சங்குசக்கரன் தானுடையான்செய்த
பங்கமெண்ணலைபங்கயமங்கைநின்
றங்கைகொண்கன் றன்னென் றுந்தவிர்ந்திடா
துங்கமானகர்போயுறுவாயென்ருன். 158

நாணமேமிகுறநெஞ்சினனல்விரற்
கோணவேகுண்டினுபுரிசென் றிலன்
காணலான்பரிதேர்கரியாவையும்
பூணலான்கலன்பொன்முடிதாமென. 159

சக்கராதிபனென் றிடுந்தோறுந்தான்
கக்குவானுதிரந்தனைக்கண்டவர்
நக்குவாரெனநாணியக்கானிடை
புக்குளானுயர்போசகடன்னகர். 160

கானகந்தனிப்போசகடன்னக
சானவில்வினில்வீரமுமஃகியே
தானிகழ்ந்திக்கறையுஞ்சபதத்தி
னானிழந்தவுருக்குமனுற்றனன். 161

உருக்குமனுடைந்தோடியவாறெவாம்
பெருக்கவிக்குரைசெய்தனம்பேயுயிர்
நெருக்கவெம்முலைகீரோடயிலுவான்
றிருக்கொளும்புயன்செய்கையைச்செப்புவாம். 162

உருக்குமனபசெயப் படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - 4587.

## 78 - வது, துவாரகாவதிப் படலம்.

தீவினையகலவைம்புலன்கள்செற்றுமெய்
நாவினிலரிநமோநாரணவென்றே
யாவுயயவரையெடுத்தானுக்காட்செய்வார்
சேவடியிணையினைச்சென்னிசேர்த்துவாம். 1

வேறு.

உருக்குமனுடைந்தோடலுமும்பரோடயனும்
நெருக்கிவந்துயர்விசும்பிடைநிறைமலர்பொழிய
வரக்கர்தன்னவன்றிலக்கையாளறனிலான்
வரத்தின்செருக்கவிந்திடச்சிறினேன்றிருவொடுஞ்சென்றான். 2

அறைந்தபேரிகைமுரசுகவமலையார்கலிபோ
னிறைந்தமாபரித்தேர்களுங்கரிகளுநெருங்கி
யுறைந்தபாரினுண்கௌழவொலிகடறிடாரய்
மறைந்தமாதிரமாயவன்றேர்மிசைவந்தான். 3

வரைகள்சேர்ந்திசெவரர்தம்மகளிரைமருவு
மிரலைகீடங்கண்டிரவம்வல்லியமெண்கு
வருடையாவிதமயிடம்வெஞ்சினமுறம்யாளி
திரியுங்கானிடைச்சேர்ந்துமாதிருவுடன்மொழிவான். 4

வேறு.

விழுமியபணிகவின்றுதவவேஙிலன்
செழுமணியினங்களிறெளிகிளர்ந்திடத்
தழலெனவெருவிமண்டாடியேகுதித்
துழைபினமோடவோண்டியொண்டொடி. 5

குஞ்சுகளுடனுணராதகோதியே
யஞ்சுகமுக்கழலடைந்ததாமெனக்
கிஞ்சுகமலரனவென்றுகிட்டிலா
தஞ்சியபறவைகள்காண்டியன்னமே. 6

விதமுறுகூட்டினுள்மேவித்தானிடு
மிதமுறுமுட்டைகீழ்வீழ்ந்ததென்னநீள்
வெதிரினம்வெடித்திடவிளங்குமுத்தினைக்
கதுமெனக்கவ்வுபுள்ளினங்கள்காண்டியால். 7

பொடிச்சுடுகடத்தினிற்பொருந்திவள்ளியி
னடிச்சுவடுறக்கதமளப்பில்கல்லியக்
கெடுத்துயர்வரைமுழையிறலைநீக்கியே
கொடிச்சியர்பிரசம்வாய்கொளுவகாண்டிமின். 8

ஆழியினெழுந்துயருணன்கோல்கொள
வாழியொன்றுடையதேருக்கனஞ்சிட
வேழமன்றுரித்தருள்விமலன்மேனிபோல்
வேழமொன்றெரித்திடுங்கனலைக்காண்டிமின். 9

சினமுறுபணிபணாநிழலிற்சென்றிட
வினமுறுகருப்பைகளிரலையீட்டங்கள்
முனிவுறவல்லியநிழலில்முந்திடக்
கனலராசாளும்வெம்பாலைக்காண்டியால். 10

வேறு.

அருணமெய்யிடையமர்ந்தவெண்புள்ளிகணிலங்கு
மருணமைவரைமிசையினிற்றுள்ளியதவன்றே
ரருணன்முந்தியேவிடும்பரியுடனடரழகை
யருணிவந்தெழும்விழியுடையணங்குநீகாண்டி. 11

வேலையினயமுகந்துயர்விசும்பிடையெழுந்தே
சூலுறைந்துநீர்சொரிந்திடத்திசைதொறுந்தோன்றிப்
பாலைவெம்மையாற்பயமுறப்பயோதரம்வெளுத்துச்
சீலமில்லவன்கொடையெனத்தேய்ந்தனபாராய். 12

ஈனமல்கியவுலோபியர்விபவத்தையெண்ணி
மானிலந்தனில்வறியர்போய்ப்பெறுதலைவனபோற்
கானறண்புனலென்றுசேர்விலங்குநீர்காணா
ஆறுலர்ந்திடவுழல்வனவொண்கொடிபாராய். 13

இன்னவாறெலாந்திருவிறுக்கியம்பியேயிறைவன்
றன்னிவேயினமிடைந்திடவதின்வயிற்றோன்றும்
வன்னிவாருறக்கொழுந்துவிட்டெரியுமாவனத்தை
மின்னுநேமியனிரதமேல்விரைவினிற்கடந்தான். 14

கன்னலூழையாசினிதந்தாகநீள்கதலி
செந்நெல்சேர்வயற்சிறந்திநொடுகள்சேர்ந்தே
மின்னுநேமியன்மகிழ்வுடன்விதர்ப்பர்கோன்மகளாம்
அன்னமேயிவைகாண்குவாயெனமொழியறைவான். 15

ஆனிறைந்தெழச்சொரிந்தநற்பாலுடனளாவித்
தேனிறைந்தபோற்றித்திக்குமதரமெய்த்திருவே
பூனிறைந்துவான்புயல்களுந்தவழுறப்பொருந்துங்
கானிறைந்துநீள்கருங்கடல்பொருவினகாணாய். 16

அன்னமென்னடையடியினையரவிந்தமுகில்சேர்
மின்னெனுமிடைகவினுறவிளங்கியதிருநின்
முன்னவனமர்தொலைந்துதன்முடியிறக்கியபோற்
சென்னெறுன்னியகதிரினம்வளைந்திடுஞ்செயல்பார். 17

வேலுமிர்ந்தபூவாழுமார்கலியெழுவிடமுஞ்
சேலுநாணுநீலோற்பலஞ்சேர்விலோசனையே
கோலமாகியதாலங்கள்சனத்தையுட்கொண்ட
போலவேயுயர்வளையொளிர்பூவினம்பாராய். 18

மும்மதத்தெழுங்கரியினன்கோடெனமுளைத்து
விம்முநற்பயோதரங்கவினுறமிளிர்திருவே
வெம்மையுற்றவர்கருமம்போல்மதுகரம்விரியுஞ்
செம்மலர்ச்சுவையருந்தியோவினசெயல்பாராய். 19

கொங்கைபங்கயமுகையெனக்குவிந்தொளிகொள்ளுந்
திங்கள்வேழ்கிந்திருமுகமுடையசெந்திருவே
தங்கமாகியதமனியத்தகடிழைமணிபோ
லெங்குமாதனைக்கனிவிரிந்தெழுவனபாராய். 20

நத்திறாசங்கணிரையதாய்நற்பவளத்தின்
வைத்ததாமெனுந்தசனங்களிலங்கியமடந்தாய்
சுத்தசாத்திகசுருதிகளாவனபொருவ
மெத்தமாங்கனிநீர்கிளிவிரும்புதல்பாராய். 21

அலைகொள்வேலையினமருவானரக்கர்மேல்வளைக்குஞ்
சிலையிதாமெனப்பொலிந்தெழும்புருவநற்றிருவே
விலைகொள்மாதரார்செயலெனவிளங்கிமெலர்கள்
பலவின்மீமதுநுகர்ந்துபோமளிபதம்பாராய். 22

சேகிலாதசாகரந்தனின்முகந்துசேணிறையு
மேகமாமெனவளர்ந்தவைம்பாலொளிர்மின்னே
மாகமாளுவானயனம்போற்றோகைகள்வயங்க
நாகமீதினின்மயூரங்கள்நடிப்பனபாராய். 23

சந்துநந்துமந்தாரமுந்தானமுந்தஞ்ளித்
கந்தநன்மலரெறிந்துமந்தாகினிகடுப்ப
வந்துமுந்தியநதியினிமெழுசுழிமானுன்
னுந்திகண்டுநில்லாதொளிந்தோடுவபாராய். 24

தேய்விலாமதியெனத்திகழானனத்திருநின்
றூயதாகியகழுத்தினிற்ஞேற்றனமெனவே
யோய்விலாதுரித்திலமுதிர்த்தோடியேபயத்தின்
மேயும்நீள்வலம்புரியினம்வெளுத்தனபாராய். 25

வள்ளையாந்திருக்காதினிற்ருேடலேமானே
யொள்ளிதானநின்விழியெழிலொக்குமென்றுயர்ந்து
தள்ளியேசரிதூங்கலமென்றுதான்வேழ்கித்
தெள்ளிதானசேலயந்தனில்மூழ்கிடுஞ்செயல்பார். 26

வாருலாவியேசுதைகிறைமணிக்கலசம்போ
லாரமல்கியபயோதரமழகியதிருநல்
லூருவாமெழிலோக்கிலமென்றுகாய்த்துயர்ந்த
காருலாவியகதலிகள்கவிழ்வனகாணும். 27

வல்லநாவலர்மொழிந்திடமதியொன்றுமில்லாப்
புல்லியோர்வரமுன்புகலாதுபோற்பொலிவால்
அல்லிமாமலரிருந்துறையனமனுய்நின்வாய்ச்
சொல்லிணுணியக்கருங்குயிறுங்குவகாணும். 28

அந்தமாயெகேகயமெங்கணுமாடத்
கந்தநாண்மலர்க்கேசரங்கானங்கள்பாடச்
சந்துமாமரக்கோடரமொருவியேதாவு
மந்திமாங்கனிசிதறுவமடக்கொடிபாராய். 29

இன்னதாயவற்புதங்களையாதவர்பெருமான்
மின்னிடைனக்கன்பிணுல்விளம்பியேவிளங்குக்
கன்னலோங்கியநாடுகள்பற்பலகடந்து
மன்னினன்குடதிசையலேமலியும்வாரியினே. 30

சங்கம்நாணியகழுத்தினடாமரைமலர்மேல்
மங்கையாமவடன்ஞெமெண்மிசையிழிந்து
செங்கணுயகன்சேர்ந்தனனெனவின்பந்திரண்டு
பொங்கியேயுயர்ந்தாலெனவெதிர்ந்ததுபுணரி. 31

ஊழிகாலக்களென நிடையுரகன்மேற்றுயின்று
வாழுமாதவனிலமிசையிழிந்துமாமலரி
னேழையோடும்வந்தானெனவிருகரமெடுத்தே
யாழிதான்ரெழுதாலெனவிசைரமறைந்த 32

முளையதாகியேமூவுலகினுக்குமெய்ம்மூர்த்தி
விளையவாயர்தம்மனைதொறுங்கடைதயிர்வெண்ணெ
யளையுமாயனூர்தேவியோடடைந்தனன்கண்டு
வளைகள்வீசியேவணங்குவபோல்வரும்வாரி. 33

இன்னதாகியகருங்கடற்கோடமர்ந்திலங்கும்
புன்னைகண்டலினிழலிடைநுளைச்சியர்பொருனர்
தன்னைநாடிமுன்னவர்தருங்கலவிதன்மனத்தி
னுன்னினார்முலையணிகலனுருகிநீராக. 34

நரந்தைகைதைபுன்னாகந்தன்னிழலிடையிருந்து
வருந்தியெங்கணுநுளைச்சியர்கூடலைவளைத்தே
யரந்தையெய்திநீள்கடலினேகம்பியிற்கொழுநர்
பிரிந்திடுந்தினமெண்ணியங்கழுதுபெய்துற்றார். 35

கடலைப்பார்த்துயர்கணவனைக்காண்கிலர்காம
னடரக்காத்திடுவகைசிறிதறிகிலாதயர்வார்
படியைப்பார்த்திழைகூடலைப்பார்த்தபாவையர்க
ளிடரைப்பார்த்தவர்கொழுநரெய்திடவெதிர்ந்தணைத்தார். 36

இன்னதாகியநுளச்சியரிலங்குசிந்துவினை
யன்னமேயிவைகாணெனக்காட்டினனதனுட்
பொன்னினுஞ்சிலார்மதிலுயர்துவரையின்பொலிவை
மின்னினாவொடுங்கண்டனன்விபுதர்கள்பெருமான். 37

உருளையொன்றுறுந்தேரினன்சசியமனொதுக்கும்
பிரளயந்தனினவெயர்பெருவரைசிவணத்
திரளயங்கொளாதியற்றுவராபதிசிறப்பத்
தரளநன்மணிக்கோபுரமெழுந்தவான்றடவி. 38

அனந்தனூர்தியாம்பிரமனோடமரர்கள்பணியும்
மனந்தன்மாதவனரவிந்தமலர்மகளுடனே
யனந்தறீர்ந்துவந்தமர்ந்திடவாழியின்விளங்கும்
மனந்தனீள்மணிமகுடமொத்தமர்ந்தகோபுரமே. 39

தழைத்தெழுந்துயரிந்துவைத்தன்முகவெழிலாற்
பழித்தமின்னுடன்பரமனூர்வரப்பசும்பொன்னு
விழைத்தநன்மணித்தரளமோடிலங்குகோபுரங்கள்
விழித்துவெண்ணகைசெய்வனபோலவில்வீச. 40

தருணமுண்டகமலரின்மேனிறைந்தெழுந்தையல்
கருணையங்கடலெனவளரரியுடன்கலந்தே
யருணனுந்துதேரெனவருமிரதத்தினமர
வருணர்கையெடுத்தாடியதொத்தவான்கொடிகள். 41

மின்னனாளரிதன் னுடன்மேவின னெனவே
பன்னகாதிபனுடவினை வளைந்துதன் படம்வான்
மின்னவோங்கியேவீரையின் விளங்கியவேலும்
பொன்னின்மர்மதிட்கோபுரம்புகலுமாறெளிதோ. 42

விண்டலங்கலந்தெயிலுறமின்னு கோபுரங்கள்
மண்டபங்கள்சாமீகரம்வயங்குமாளிகைகள்
கொண்டல்மண்டியபொழில்நிறைக்கொற்றமானகரை
யண்டருந்துதிசெய்துதாம்விரும்பியேயடைவார். 43

முனிவர்வாசவன் முண்டகமலருறைமுதல்வ
னினியனுயரியிருந்தருள்பதியிதாமென்று
நினைவரோதியேசித்தருமமடைகுவரென்றூற்
றுனியிலாநலத் துவரையினெழில்சொலற்கரிதே. 44

இன்னதாகியவேம்பலிற்றிலங்கியநகரைக்
கன்னலுமென றுமொழியுடைக்கமலனுயகியா
மின்னனுய்துவராபதியிதுவெனவிளம்பி
மன்னினுன் திருவீதியின்மாதவர்பெருமான். 45

எசிலாதுயர்விதர்ப்பர்கோனருளுமிந்திரையாங்
காசுலாவியமூலையினளுடன்கருமுகிலாம்
வாசுதேவன்மாலிரதமேல்வந்தனன்காணு
மாசையாலெழுந்தனுகினரணிகருள்ளோர். 46

அந்தணாளர்களருந்தவமுனிவர்களரசர்
மைந்தர்வள்ளியோர்மதகரிதேர்கொவேளைய
கந்தமாமலராளகவாணுதலியர்கடிதின்
வந்துமாதிருவெழிலினைக்கண்டனர்மகிழ்ந்தார். 47

ஆடினர்கள்மாமுனிவர்களாசிகள்பகர்ந்தே
பாடினருழையுறமியாழ்த்தெரிவையர்பலரு
மூடினர்மறையறைபவர்முடுகியசகட்டைச்
சாடினனுயர்தேரின்மேற்றிருவொடெஞ்சார. 48

விடவராவணைத்துயில்கொள்வான்விதர்ப்பர்கோன்மகளோ
டடையவாசுகியமுழ்துறப்பிணித்தமந்தரத்தாற்
கடையவாரியினமிழ்தெனக்கண்டவானவர்போ
லுடலெலாங்களித்தேயெழுந்தாடினருவப்பால். 49

நீலமாமணிவித்துருமத்துடனிறைந்த
கோலமாமெனவிதர்ப்பர்கோன்குமரியோடிலங்கி
மாலினுரிரதத்தின்மேலருங்கவின்வகுக்க
நூலெலாந்தரும்பிரமனுற்கரிதெனநுவல்வார். 50

சித்தசன்விளையுறும்வடிவுடையசீதரனுக்
கொத்தசுந்தரியுருப்பிணியுவமைவேறில்லா
ளித்தலந்தனிலெய்திடயாமுனமிழைத்த
மெய்த்தவங்கடானேதெனமகிழ்ந்துரைவிரித்தார். 51

உருவினாலுயர்கமலமீதமர்ந்தவொண்கொடியாந்
திருவினாள்மகளாகவுந்தேவகிகுமரன்
மருகனாகவுஞ்சிறந்திடுமன்னர்கோன்விதர்ப்பன்
பெருகுமாதவமளவிலாதென்றனர்பெரியோர். 52

தவத்துளோர்விழைவுறமழைதடுத்துமால்வரையைக்
கவித்தகையர்பாற்றூதினைவிடுத்தறன்கடந்த
வவித்தசேதிபனமரிடையழிந்திடமகிழுஞ்
சிவத்தவாயினள்சம்த்தியென்றுரைத்தனர்செகத்தோர். 53

கனகமாமதிலிலங்கையர்கோன்சிரங்களைந்தே
சனகமாமகளுடன்றிருவயோத்தியிற்சாருந்
தினகரன்குலத்துதித்தவன்றிறலெனத்திருவோ
டனகனெய்தினன்றுவரைமானகரிலென்றுரைப்பார். 54

வேழமாகியகுவலயாபீடத்தைவீழ்த்துச்
சூழுமாரதர்விழக்கஞ்சனுடலினைத்துகைத்த
வாழியாயமிழ்தெய்தியவணங்கினோடமர்ந்தே
வாழிவாழியென்றுரைத்தெழுந்தாடினர்மறையோர். 55

ஆயுமாமலர்பொழிந்தமுதாசனராடப்
பாயுமாவிரதந்தனிவிழிந்துபார்கண்ணித்
தூயமாதவர்சுருதிகள்மொழிந்திடத்துலங்குங்
கோயில்மேவினன்குடமெடுத்தாடியகோமான். 56

எழுந்தமைம்முகிலாமெனவெய்தியேதருவின்
கொழுந்துபோன்றமின்னுடன்வசுதேவனைக்குருகித்
தழைந்தவன்பினால்வணங்கலுந்தனையனைத்தழுவி
வழிந்தகண்ணினீர்மஞ்சனமாட்டினன்மகிழ்வால். 57

தந்தைதன்றிருவடியினிலிறைஞ்சிச்சக்கரத்தோன்
விந்தைதன்னுடன்றேவகியடியினைவீழச்
சிந்தையிற்களிப்பெய்திடச்செம்மலைத்திருவை
வந்துமாமலர்க்கையினால்மார்புறவணைத்தாள். 58

அணைத்துமோந்தனளச்சுதனுச்சியையமிழ்தி
னிணைத்தபாவையைமகிழ்வினாலிருசரணால்நோக்கிப்
பணைத்தவார்வமோடுறவிளைத்தான்படிவிசும்பின்
குணத்தினாலுயர்மருகியாமென்றுளங்குளிர்ந்தே. 59

கொற்றமிஞ்சியபுனிதனிந்திரையுடன்கூடிச்
சுற்றமின்புறரோகணியடிமிசைத்தொழலும்
பற்றிமைந்தனைத்தழீயினன்பங்கயமலரி
னுற்றமின்னினையணைத்தனன்பெருங்களிப்புறவே. 60

இன்னதாகியமகிழ்வுறநங்கையோடிலங்கும்
மன்னைமார்களுமுழையுறுமரவிந்தமலரின்
மின்னோடேகிமால்மண்டபமதனில்வீற்றிருந்தான்
மன்னர்மாதவர்மறையவர்மகிழ்ந்தினிதிருப்பார். 61

அரசனுக்கிரசேனனக்குறூரன்மெய்யதனால்
வரிசைமிக்குயருத்தவன்மந்திரத்தலைவர்
திரைகொள்சிந்துவிற்றிகழுமாண்டரியுடன்றிருவைக்
கரைசெயற்கரிதாயதோர்களியுறக்கண்டார். 62

எசில்மாதரார்கருப்புரத்தீபங்களேந்த
வீசினார்மலரெங்கணும்விண்ணவர்மகிழ்வோ
டாசிகூறினாரந்தணரந்தவேலையின்வாய்
வாசுதேவனைத்தரும்வசுதேவனுமறைவான். 63

மாதவத்துயர்விதர்ப்பர்கோனருடிருமகளும்
யாதவக்குலக்குமரனுமெழில்மணமிசையத்
தீதகற்றிடுமுகூர்த்தம்நீவிரைவினிற்செப்பென்
றோதிடக்கற்கவுயர்தவமுனிவனங்குரைப்பான். 64

காளையாகியகருமுகிலனையகண்ணற்கு
வாழிநீள்விழிவனசமாமலர்தனின்வனிதை
கோளெலாஞ்சுபமாகவேகூடுவநன்னாள்
நாளையாமெனவுரைத்தனனவையறுதவத்தோன். 65

சுத்தரென்மறைகற்கமாமுனியிவைசொல்லச்
சித்தமார்வமுற்றிலங்கியதேவகிகணவ
னத்தினாபுரத்தருமற்குமவன்கிளையோர்க்கு
மெத்துமாமணவோலைகொடுதரைவிடுத்தான். 66

மைந்தனானசிதரனுக்கும்விதர்ப்பர்கோன்மகட்கும்
மந்தமாமணக்கோலமும்நாளையேயதனால்
முந்தியேகுமினென்றுதான்மொழிந்துதூதுவரை
நந்தகோபற்குமசோதைக்கும்நலமுறவிடுத்தான். 67

மற்றுமேபலவளாகத்துமன்னவர்தமக்குஞ்
சுற்றமாகியகிளைஞர்க்குந்தூயவேதியர்க்குங்
கொற்றமாதவன்கோகனகத்தவள்கரத்தைப்
பற்றுநாளையென்றோலைகள்விடுத்தனன்பரிவால். 68

ஓதமாமெனுமொழியொளிர்கெண்டையங்கண்ணித்
தீதிலாதசெம்மலர்த்திருச்சிதரன் றனக்கு
நீதியாமணங்கூடிடநீவரவென்றே
வேதமோதியவியாசற்காள்விடுத்திடும்வேலை. 69

வேறு.

அரியெனுமிறையினைப்பிரிந்தவனியினிணையில்
திருபநாகியேநிகரிலாவுருப்பிணிதன்னை
மருவினனெனுமொழியினைவயங்கும்பாற்கடலிற்
றிருவினுக்குரைசெய்வபோற்றினகரன்மறைந்தான். 70

அருக்கநற்குடவார்கலியமுந்திடவரசர்
நெருக்கமைக்கணின்மடந்தையர்மருங்கெலாம்நிறையச்
செருக்குமுக்கிரசேனனுஞ்சேனையுஞ்சூழப்
பொருக்கெனக்கரிவேரினின்மேற்பொன்மனைபுகுந்தான். 71

அந்தியாதலுமுனிவர்களரசர்வேதியர்கள்
சந்தியாவையுமுடித்துழிஇத்தழைத்தெழுமியாமம்
வந்துமுந்தியேவளைந்ததுவானமீன்மல்க
விந்துவாரியினிலவொளிபரந்திடவெழுந்தான். 72

திங்கள்சங்குலிற்சிறந்திடத்திமிரமோவிடமால்
பொங்கும்வெங்கணைச்சம்பரசூதனன்பொழிய
வங்கதச்சுடர்மணியொளிரங்கதப்புயமா
றுங்கநற்றிருவிவரலால்மற்றவர்துயின்றூர். 73

குண்டிறைபுரிமன்னருள்கோமளவல்லி
யண்டர்நாயகனுடன் றுவராபதியடைந்தும்
புண்டரீகநன்முகையெனும்பூண்முலையமுந்த
மண்டியேயணையாதமால்வளரவேயுரைப்பான். 74

வேறு.

மதனேகொடியாய்மலர்வாளியினு
லிதனேசுடுநீயெனவேபொழிவாய்
சுதைபோலெழுமாமதிதன்சுடரே
விதமாயழல்வாய்வினையேனுடல்மேல். 75

இருளோதவிராபகலோவெதிரா
மருளோவொளியாமனமேமறவா
பொருளார்மறையேபுகல்வாயமிழ்த
மருளார்துவராபதியேயடைவார். 76

விழியோதுயிலாவிடியாதிரவு
மொழியாகடலாரொலியொண்மதனூர்



பழியேமுயல்வார்கணையேபரவு
மழையோமுகில்போல்வருவார்மருவார். 77

உகமாயிரகோடியின்மேலுறவே
பகைபோலிருளேவளையாய்பகராய்
செகம்வாழுநர்வார்திருமாலுருகின்
னகமேபுகல்நீயகல்கின்றிலையோ. 78

மனநீள்மயலாரழலாய்வளையத்
தனியேயுழல்வேனுயிர்தானலையா
யெனனாயகனார்வரவேயினினீ
கனைவாருதிமேலெழுவாய்கதிரே. 79

வினையாமிருளேவெடியாயெனவே
யனமானடையாளமிழ்தேயனையா
ணினையாவுருகாநெடியோனெனவே
மனமோமயலாலயர்வேலையின்வாய். 80

உருவாயருவாயொளியாயெழுமா
லரிநாரணனாரமுதேயனையா
டிரிவோடனையாள்மயல்சேர்செயலால்
மருவார்மலர்மேல்லணைமேல்மருவார். 81

மலர்வாளியினால்மதனோபொழிவா
னலையோகடலோவமராதொலியுங்
கலையோமதியோகனலேதருமால்
சிலைநேர்நுதலாளணைசேர்கிலளால். 82

படிவானிறையப்படர்வாய்திமிரக்
கொடியாய்விடிவாய்கொடியாகியவேல்
லிடைமேகலையேல்லிடவெண்டரள
வடமேபுனைமாமுலையாள்வரவே. 83

புயலோகுழலாள்பொலிவாணுதலாள்
குயிலோமொழியாள்கொடியாமிடையா
ளயிலோவிழியாடனையானனுக்
கயலார்கடல்மேல்வருவாய்கதிரே. 84

குவிமாமுலையாய்மொழிகோகிலமே
துவர்வாயணமேதுடியாமிடையாய்
புவிநேரமிழ்தேபுணராயெனவே
யிவையேமொழிவானவருனெழவே. 85

கடவேழுடனீர்கனகக்கிரிசேர்
படிவான்முதலாயபராபரனுக்

துடிநேரிடையாகிய தூய்மொழியு
மிடராமயலெய்திடுமெல்லையின்வாய். 86

வேறு.

மலையினையேந்தியவாசுதேவனார்
சிலையுறுநுதலியைச்சேர்வதின்றனை
அலையுறுகடலெனப்பேரியார்த்திட
நலனுறவெழுந்தனர்நகருளாரரோ. 87

துவாரகாவதிப் படலம் முற்றிற்று.

ஆகூ படலம் 78-க்கு திருவிருத்தம் - 4664.

---

முதற்புத்தகம் - முற்றிற்று.

---

